# இந்தியாவின் சிறப்பு வரலாறு - II

ஆசிரியர்கள் :

R. C. மஜூம்தார்

H. C. ராய்சௌத்ரி

K. தத்தா

தமிழாக்கம் :

அ. உஸ்மான் ஷெரீப்



தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம்

த. பா. நி. (க.வெ.) வரிசை எண் — 82

# இந்தியாவின் சிறப்பு வரலாறு

(இரண்டாம் பகுதி)

(பட்டப் படிப்பிற்குரியது)

ஆசிரியர்கள்

**R. C. மஜூம்தார்**, எம்.ஏ., பிஎச்.டி.,
முன்னாள் துணைவேந்தர், டாக்காப் பல்கலைக்கழகம்.

**H. C. ராய்சௌத்ரி**, எம்.ஏ., பி.எச்.டி.,
கார்மைக்கேல் பேராசிரியர், இந்திய வரலாற்றுத் துறை,
கல்கத்தாப் பல்கலைக்கழகம்.

**K. தத்தா**, எம்.ஏ., பி.எச்.டி.,
வரலாற்றுப் பேராசிரியர், பாட்னுக் கல்லூரி, பாட்னு.

தமிழாக்கம்

**A. உஸ்மான் ஷெரீப்**, எம்.ஏ.,
முதல்வர்,
தனிப்பயிற்சி நிலையம் (பிற்பட்ட வகுப்பினர்), சென்னை.



தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம்

First Edition—October, 1965
Second Edition—August, 1971
Third Edition—March, 1976
Revised Reprint— May, 1978

Number of Copies—2000

T.N.T.B.S. (C.P.) No. 82



**AN ADVANCED HISTORY OF INDIA—II**

R. C. MAJUMDAR, H. C. RAYCHAUDHURI AND K. DATTA

Translation
A. OOSMAN SHERIFF

*Price Rs. 7-90*

This translation of 'An Advanced History of India, by R. C. Majumdar, H. C. Raychaudhuri and K. Datta, 1970 Reprint edition is published by arrangement with Messrs. Macmillan and Company Limited of St. Martin's Street, London, W. C. 2.

Published by the Tamilnadu Textbook Society under the Centrally Sponsored Scheme of production of books and literature in regional languages at the University level, of the Government of India in the Ministry of Education and Social Welfare (Department of Culture), New Delhi.

This book has been printed on concessional paper made available by the Government of India.

*Printed by*
Sri Kunrai Kumaran Printers,
30, Katchaleeswarar Agraharam,
MADRAS—600 001.

# அணிந்துரை

(திரு. செ. அரங்கநாயகம், தமிழகக் கல்வி அமைச்சர்)

தமிழைக் கல்லூரிக் கல்விமொழியாக ஆக்கிப் பதினெட்டாண்டுகள் ஆகிவிட்டன. குறிப்பிட்ட சில கல்லூரிகளில் பட்டப் படிப்பு வகுப்புவரை மாணவர்கள் தங்கள் பாடங்கள் அனைத்தையும் தமிழிலேயே கற்றுவருகின்றனர். நாடு முழுவதும் பரந்துள்ள மாணவர்களின் ஆர்வம், 'தமிழிலேயே கற்பிப்போம்' என முன் வந்துள்ள கல்லூரி ஆசிரியர்களின் ஊக்கம், பிறபல துறைகளிலும் தொண்டு செய்வோர் இதற்கெனத் தந்த உழைப்பு, தங்கள் சிறப்புத் துறைகளில் நூல்கள் எழுதித்தர முன்வந்துள்ள நூலாசிரியர்கள் தொண்டுணர்ச்சி இவற்றின் காரணமாக இத் திட்டம் நம்மிடையே மகிழ்ச்சியையும் மன நிறைவும் தரத்தக்க வகையில் நடைபெற்று வருகிறது.

வரலாற்றியல், அரசியல், உளவியல், பொருளியல், புவியியல், புவியமைப்பியல், மனையியல், மெய்ப்பொருளியல், கணிதவியல், இயற்பியல், வேதியியல், உயிரியல், வானியல், புள்ளியியல், விலங்கியல், தாவரவியல், பொறியியல், சட்டவியல் ஆகிய எல்லாத் துறைகளிலும் மூலநூல்கள், மொழிபெயர்ப்பு நூல்கள் என்று இருவகையிலும் தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம் நூல்களை வெளியிட்டு வருகிறது.

இவற்றுள் ஒன்றுன இந்தியாவின் சிறப்பு வரலாறு (இரண்டாம் பகுதி) என்னும் இந் நூல் தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனத்தின் சார்பில் வெளியான 82ஆவது வெளியீடாகும். தமிழ் மக்களின் பேராதரவினாலும் தமிழைப் பயிற்சி மொழியாகக் கொண்டவர்களின் நல்லூக்கத்தினாலும் இதன் முந்தைய பதிப்புப் படிகள் அனைத்தும் விற்பனையாகிவிட்டன. ஆதலின் இப்பொழுது இந் நூல் மீண்டும் வெளிவருகிறது. இந் நூல் மைய அரசு, கல்வி, சமூக நல அமைச்சகத்தின் 'மாநில மொழியில் பல்கலைக்கழக நூல்கள் வெளியிடும் திட்ட'த்தின்கீழ் வெளியிடப் படுகிறது.

தமிழில் பயிலும் மாணவர்கள் உலக மாணவர்களிடையே சிறந்த இடம்பெற வேண்டும் என்பதே நம் குறிக்கோளாகும். கல்லூரிகளிலும் பல்கலைக்கழகங்களிலும் கலையியற்பாடங்களையும், அறிவியற் பாடங்களையும், தொழில்நுட்ப அறிவுப் பாடங்களையும் பயிலுகின்ற மாணவர்கள் அவற்றைத் தமிழில் பயிலவேண்டும் என்பதை வலியுறுத்தி வருவதற்குக் காரணம், தமிழறிவு வளர வேண்டும் என்பதைவிடத் தமிழ் மக்களின் அறிவு ஆற்றல் எளிதாக, விரைவாக வளரவேண்டும் என்பதுதான். 'எதிலும் தமிழ்; எங்கும் தமிழ் என்னும் குறிக்கோளை நிறைவேற்ற வேண்டிய கடப்பாடு தமிழகத்து ஆசிரியப் பெருமக்களையும் மாணவர்களையும் சார்ந்ததாகும். தமிழ்நாட்டுப் பல்கலைக்கழகங்களின் பல்வகை உதவிகளுக்கும் ஒத்துழைப்புக்கும் நம் மனம்கலந்த நன்றி உரித்தாகுக.

செ. அரங்கநாயகம்

# முன்னுரை

முதன்முறையாக இந் நூல் வெளிவந்த பின் அதிசயிக்கத்தக்க அரசியல் மாறுதல்கள் பல இந் நாட்டில் தோன்றியுள்ளன. ஆங்கிலேயர் அரசியலாதிக்கத்தைத் துறந்து வெளியேறியதும் இந்தியா, பாகிஸ்தான் என்ற இரு புதிய 'டொமினியன்களை' ஏற்படுத்தியதும், நிகழ்ந்த அரசியல் மாறுதல்களில் குறிப்பிடத் தக்கவையாய் விளங்குகின்றன. 1947ஆம் ஆண்டு, ஆகஸ்டு 15ஆம் தேதி இந்தியருக்குச் சுதந்திரம் வழங்கப்பெற்றது. அன்று வரையுள்ள வரலாற்றுச் செய்திகள் நூலில் இடம்பெறுகின்றன. பொதுவில், ஆகஸ்டு 15ஆம் தேதிக்குப் பின்னுள்ள வரலாறு நூலில் இடம் பெறவில்லை. மகாத்மா காந்தியடிகளின் படுகொலை போன்ற முக்கிய நிகழ்ச்சிகள் நூலில் இடம் பெறவில்லையெனினும், யாவராலும் ஏற்றுப் போற்றப்படுகின்ற சில பிற்காலச் செய்திகளும் உரிய இடங்களில் பரவலாக எடுத்துரைக்கப்பெற்றுள்ளன.

1947ஆம் ஆண்டு ஆகஸ்டு 15ஆம் தேதிக்குப்பின் நடைபெற்ற சுதேச இராச்சிய இணைப்புத் திட்டத்தால் மாநில எல்லைகள் மாறுபட்டன. இந்திய வரலாற்று நூலொன்றை உருவாக்கும் போது கவனத்திற்குரிய இச் செய்தியைப் புறக்கணிப்பது முறையாகாதென்பதால், பிற்பகுதியில் இதற்கெனத் தனியிடம் ஒதுக்கியுள்ளோம். 1950ஆம் ஆண்டு ஜனவரி மாதம் 26ஆம் தேதியன்று அமலாக்கப்பெற்ற இந்திய அரசியலமைப்புத் திட்டத்தின் சுருக்கமொன்றும் உடன் சேர்க்கப்பட்டுள்ளது.

இந்தியச் சுதந்திரப் போராட்டத்தைப் புது அதிகாரமொன்றில் விரிவாகக் கூறியுள்ளோம். 1935ஆம் ஆண்டு அரசியலமைப்புத் திட்டம், சென்ற பதிப்பிலுள்ளதுபோலன்றிச் சற்றுச் சுருக்கமாக எடுத்துரைக்கப்பட்டுள்ளது. நூலை, மீண்டும் பரிசீலித்துப் பல குறைகளை நீக்கியுள்ளோம். நிகழ்கால ஆராய்ச்சியின் பயனாகக் கிடைத்துள்ள செய்திகளையும் இப் புதிய பதிப்பில் இணைத்துள்ளோம்.

பொதுமக்கள் ஆதரவும் விமர்சகரின் பாராட்டுதல்களும் நாங்கள் எதிர்நோக்கியதினும் பன்மடங்கு அதிகமாகக் கிடைத்துள்ளன. பல புதிய அம்சங்களுடன் மறுமுறை வெளியிடப்படும் இந் நூல், அதிகப் பயனுள்ளதாக விளங்கவேண்டுவதற்கான முயற்சிகள் யாவையும் மேற்கொண்டுள்ளோம்.

ஆர். சி. எம்.
எச். சி. ஆர். சி.
கே. கே. த.

# பொருளடக்கம்

# இந்தியாவின் சிறப்பு வரலாறு

(இரண்டாம் பகுதி)

## இடைக்கால இந்தியா

மடல் 1

முஸ்லிம்களின் ஆக்கிரமிப்பும்
டெல்லிச் சுல்தான்களும்

# 1. முஸ்லிம்களின் வருகை

## சிந்துவில் அரேபியர்கள்

அரேபியர்கள் புதியதொரு மதத்தை ஏற்றபின், வீறுபெற்று ஊக்கமெய்தினர். அதன் விளைவாக, எவ்வாறு சிந்துவைக் கைப்பற்றி அண்டை அயல் பிரதேசங்களில் இராணுவ நடவடிக்கைகளை மேற்கொண்டனர் என்பதை முன் ஓர் அத்தியாயத்தில் படித்தோம்.

இஸ்லாமிய உலகத்தின் பெருந்தலைவர்களும் ஆட்சியாளர்களுமான பாக்தாத்துக் காலிஃப்கள் அல்லது காலிபாக்கள் வலிவிழந்ததும் சிந்துநாட்டு முஸ்லிம் கவர்னர்கள் அனேகமாகச் சுய ஆதிக்கம் பெற்று விளங்கினர். கி.பி. 871-ல் காலிஃப் சிந்து மாகாணத்தைச் சப்ரெய்ட் தலைவர் யாகூப்பின் லெய்லெய்ஸ் வசம் அனேகமாக ஒப்படைத்துவிட்டார். இவருடைய மரணத்திற்குப்பின் சிந்துவில் இருந்த முஸ்லிம் பிரதேசங்கள் சுய ஆட்சி பெற்ற இரு தலைவர்களிடையே பிரிக்கப்பட்டன. அவர்களுள் ஒருவர் பகமன்பாத் அருகிலுள்ள மான்சுராவுக்கும், மற்றவர் மூல்தானுக்கும் தலைவராவர். அவர்களுள் ஒருவராவது அதிக வலிமை பெற்றவராக இல்லை. இருவருமே தங்கள் அண்டை இந்து மன்னர்களுக்கு அடிக்கடி அஞ்சிவந்தனர். குறிப்பாகக் கன்னோசியின் பிரதிகாரர்களுக்கு இவர்கள் அஞ்சி வந்தனர்.

சிந்து நாட்டை அரேபியர்கள் வெற்றிகொண்டது ஆழ்ந்த அரசியல் விளைவுகளை உடனே ஏற்படுத்தவில்லை. ஸ்டேன்லி லேன் பூல் இதை 'இந்திய வரலாற்றிலும் இஸ்லாமிய வரலாற்றிலும் ஏற்பட்ட ஒரு சிறு சம்பவம்' என்றும், 'விளைவுகள் ஏற்படுத்தாத வெற்றி' என்றும் குறிப்பிடுகிறார். ஆனால், கலைக்கண்கொண்டு நோக்கின் இதன் முக்கியத்துவம் புலப்படும். கருத்துகளைப் பரிமாறிக்கொள்ள உதவியதுடன் இந்தியப் பண்பாட்டின் வித்துகளை வெளிநாட்டில் பரவும்படி செய்யவும் இது உதவியது. இந்தியர்களிடமிருந்து அரேபியர்கள் இந் நாட்டின் மதம், தத்துவம், மருத்துவம், கணிதம், வானசாத்திரம், நாடோடிக் கதைகள் இவற்றை அறிந்து அக் கருத்துகளைத் தங்கள் நாட்டிற்கு எடுத்துச் சென்றதுமன்றி ஐரோப்பாவிற்கும் கொண்டுசென்றனர். மசூதி (Masudi),

ஐபன் ஹாகல் (Ibn-Hauqal) ஆகியோரின் குறிப்புகளிலிருந்து அரேபியக் குடியேற்றத்தினர் தங்கள் அண்டைவாசிகளான இந்துக்களுடன் பல ஆண்டுகளாக நேச மனப்பான்மையுடனும் சண்டையின்றியும் வாழ்ந்தனர் என்று நிச்சயமாகத் தெரிந்து கொள்கிறோம். அரேபிய வானசாத்திரி மசார் (Ma'sar) காசிக்கு வந்து பத்தாண்டுக் காலம் வானசாத்திரம் கற்றார் என்று அமீர் குஸ்ராவ் குறிப்பிடுகிறார்.

## கஸ்னிவிகள் : சுல்தான் மாமூது

நாம் முன்னரே கூறிய கஸ்னி சுல்தான்களின் பஞ்சாப் ஆக்கிரமிப்பை அரசியல் நோக்கோடு காணுங்கால், அரேபியர்கள் சிந்து நதியின் கீழ்ப்பகுதிகளில் சில சிறிய இராச்சியங்களை ஏற்படுத்தியதைவிட இச் சம்பவம் முக்கியமானது என்று தெரியவருகிறது.

தம் தகப்பன் சபக்டிஜனின் எண்ணங்களைச் செயற்படுத்திய சுல்தான் மாமூது இவ் வுலகம் கண்டுள்ள சிறந்த இராணுவத் தலைவர்களுள் ஒருவர் என்பதில் ஐயமில்லை. பதற்றமற்ற இவருடைய வீரம், சமயோசித அறிவு, விவேகம், இன்னும் பிற பண்புகள் இவரை ஆசியப் பெரு மக்களின் மனத்தைக் கவரும் ஒருவராகச் செய்கின்றன. இந்தியாவில் இவர் நிகழ்த்திய வெற்றிப் படையெடுப்புகளோடு, பகைமைகொண்ட துருக்கர்களுடன் இவர் நடாத்திய இரு போர்கள் என்றும் நினைவிலிருந்து நீங்காதவை. இப் போர்களில் இவர் இலக் கான் (Ilak Khan) படைகளையும் செல்ஜுக் படைகளையும் முறியடித்தார். பெரிய போர் வீரராகிய இந்தச் சுல்தான் கலைகளையும், கல்வியையும் ஆதரிப்பதில் சற்றும் பின்வாங்கவில்லை.

இவை இவ்வாறாயினும் இந்தியச் சரித்திர ஆசிரியர்களுக்கு இவர் ஒரு பேராசை பிடித்த படையெடுப்பாளராகவே தோன்றுகிறார். இவர் மதத்தைப் பரப்பும் மதபோதகருமில்லை; ஒரு பெரிய சாம்ராச்சியத்தை உருவாக்கும் நோக்கம்கொண்ட சிற்பியுமில்லை. இவருடைய கிழக்கிந்தியப் படையெடுப்புகளின் நோக்கமெல்லாம் இந்தியாவின் செல்வத்தைப் பெறுவதற்கும் அந் நாட்டைப் பாதுகாக்கும் மன்னர்களின் மன உறுதியைக் குலைப்பதற்கும் என்றே தோன்றுகின்றது. பஞ்சாபை இவர் சேர்த்துக் கொண்டது தம் விருப்பம் நிறைவேறவே என்பதைவிட அது மிக அவசியமான நடவடிக்கையாயிற்று எனல் நன்று. ஆயினும், இவருடைய படையெடுப்புகள் இந்திய அரசியலில் நிலையான விளைவுகளை ஏற்படுத்தவில்லை என்று கொள்வது தவறாகும். இந்திய நாட்டின் செல்வத்தை வற்றச்செய்து மிகு பயங்

கரமான அளவில் அந் நாட்டின் இராணுவ வலிமையை அழித்தார். கஸ்னிவிகள் பஞ்சாபைக் கைப்பற்றியது இந்திய நாட்டின் உட்பகுதிகளுக்குச் செல்லும் கோட்டை வாயிலின் பூட்டைத் திறக்கும் சாவியாயிற்று. இந்திய அரசியலில் பெரும் பிளவுகள் ஏற்பட்டன. அந்தப் பெரிய பழங்கால அமைப்பு வீழ்ச்சியுறுமா என்பது கேள்வியன்று; எப்பொழுது என்பதே கேள்வியாயிற்று. அரேபியர்கள் அல்லது கஸ்னிவிகள் வளரும் இஸ்லாமிய அரசுடன் இந்தியாவை இணைப்பதில் வெற்றி காணவில்லை. ஆனால், அவர்கள் கங்கைக்கரை இராச்சியங்களில் இரண்டு நூற்றுண்டுகளுக்குப்பின் ஏற்பட்ட இறுதிப் போராட்டத்திற்கான வழியைச் சமைத்தனர்.

## கோரி முகமது

சுல்தான் முகமதுவிற்குப்பின் ஆட்சியெய்தியவர்கள் காலத்தில் கஸ்னி சாம்ராச்சியம் துண்டுதுண்டாகச் சிதற ஆரம்பித்தது. வளர்ந்துவரும் கோரி மன்னர்களின் ஆதிக்கத்தை எதிர்த்துக் கஸ்னியிலும், வடமேற்கு இந்தியாவிலும் தங்கள் ஆட்சியை நிலைத்திருக்கச்செய்ய முடியாதபடி அவர்கள் வலுவற்றிருந்தனர். ஹீரட்டிற்குத் தென் கிழக்கில் ஆப்கானிஸ்தானத்தில் உள்ள ஒரு சிறிய பகுதியே கோரி எனப்படும். கிழக்குப் பாரசிகப் பிரிவினரான கோரித் தலைவர்கள் முதலில் கஸ்னியின் ஆதிக்கத்திலிருந்த சிற்றரசர்கள். ஆனால், கஸ்னி மன்னர்கள் திறமையின்மையைப் பயன்படுத்திக்கொண்டு கொஞ்சம் கொஞ்சமாக வலுப்பெற்றுக் கஸ்னிகளுடன் ஆதிக்கப் போட்டியிலும் ஈடுபடலாயினர். இப் போட்டியின்போது குத்புதீன் முகமது கோரியும், அவருடைய உடன்பிறந்தவரான சைபுதீனும் கஸ்னி பஹராம் ஷாவினல் கொடூரமாகக் கொல்லப்பட்டனர். இவ்வாறு இரையானவர்களின் உடன் பிறப்பாளரான அலாவுதீன் ஹூசேன் கஸ்னியின்மீது பயங்கரமாகப் பழிவாங்கி, ஏழு நாள்கள் இரவு பகலாக அவர்கள் நகரைத் தீக்கிரையாக்கினர். இச் செயலால் அலாவுதீன் ஜகன்னுஸ் (Jahanuz) அல்லது 'உலகை எரித்தவர்' என்ற பட்டப் பெயர் பெற்றார். பஹராம் மகன் குஸ்ராவ்ஷா மிகவும் திறமையற்றவர். அவரைத் தர்க்மானிய கஸ் (Ghuzz) கூட்டத்தினர் கஸ்னியிலிருந்து விரட்டிவிட்டனர். அவர் அங்கிருந்து தம் முன்னோர்களுக்கு ஒருகாலத்தில் சொந்தமாயிருந்த பஞ்சாபிற்கு ஓடினர். தர்க்மானிய கஸ் வசம் கஸ்னி பத்தாண்டுக் காலம் இருந்தது. இதன் பின்னர்க் கோர் வமிசத்து மன்னர்கள் கைக்கு அது மாறியது. 'உலகத்தை எரித்தவருடைய மகன் சைபுதீன் முகமது பின்னர்ப் பட்டமெய்தினர். ஆனால், தர்க்மானிய கஸ்களுடன் நேரிட்ட போரில் கொல்லப்பட்டார். அவருடைய

உறவினர் யாஸுத்தீன் பட்டத்திற்கு வந்து கி. பி. 1173-ல் தர்க் மானிய கஸ்களைக் கஸ்னியிலிருந்து விரட்டியடித்துத் தம்முடைய இளைய சகோதரர் முஸ்ஸுத்தீன் என்ற ஷாகிப்புதீனைப் பட்டத்தில் அமர்த்தினார். ஷாகிப்புதீனின் நன்கு தெரிந்த பெயர் முகமது கோரி. அவர் கோரியின் கவர்னர். இந்த இரண்டு சகோதரர் களுக்கிடையில் நல்லுறவு நீடித்தது. தம் சகோதரன் கீழ் ஆட்சி செய்த காலத்திலேயே முகமது கோரி தம் இந்தியப் படை யெடுப்புகளைத் தொடங்கினார்.

முகமது கோரியின் முதல் இந்தியப்படையெடுப்பு(கி.பி.1175) தமது மதத்தைச் சேர்ந்த மூல்தானின் இஸ்ஸாமிலான் மரபினர் மீதாகும். இதில் இவர் வெற்றிபெற்று மிகவும் தந்திரமாக அவர் களுடைய வலிமைமிக்க கோட்டையான உக்கைக் (Uch) கைப் பற்றினார். ஆனால், கி.பி.1178-ல் இவர் கூர்ச்சரத்தின்மீது நடத்திய படையெடுப்புத் தோல்வியில்முடிந்தது. கூர்ச்சர மன்னர் இவரை நன்கு முறியடித்தார். ஆயினும், மறு ஆண்டில் இவர் பெஷா வரைப் பிடித்துக்கொண்டு கி.பி. 1181-ல் சியால்கோட்டையில் ஒரு படைத்தளம் அமைத்தார். ஜம்மு மன்னர் விஜயதேவருடன் கூட்டுறவு சேர்ந்துகொண்டு லாகூரை மட்டும் உரிமையாகக் கொண்டிருந்தவரும், சபக்டிஜன், சுல்தான் முகமது இவர்களின் கடைசிப் பிரதிநிதியும், குஸ்ராவ் ஷாவின் மகனும் அவர்பின் அரசுரிமை பெற்றவருமான குஸ்ராவ்மாலிக் என்பவரை எதிர்த் துத் கஸ்னவி மன்னரைச் சிறைப்பிடித்து, கஸ்னிக்குக் கொண்டு சென்றார். இவ்வாறு பஞ்சாபில் கஸ்னவிகளின் ஆதிக்கம் முடி வுற்றது. முகமது கோரி இவ்வாறு பஞ்சாபை வசப்படுத்தியது அவரது இந்திய வெற்றிக்கான வாயிலைத் திறந்தது. பஞ்சாபைக் கைப்பற்றியதால் இராஜபுத்திரர்களுடன் போரிடவேண்டியது தவிர்க்க முடியாததாயிற்று. அதிலும் குறிப்பாக அவரது அயலாரான வலிமைவாய்ந்த சௌகன் மன்னரும் ஆஜ்மீர், டில்லி அதிபருமான பிருதிவிராஜனுடன் கைகலக்க வேண்டியதாயிற்று.

சுல்தான் முகமது காலத்திற்குப் பின்னர் வட இந்தியாவின் அரசியல்அமைப்பில் பெருத்த மாறுதல்கள் ஏற்பட்டன. பீஹாரின் ஒரு பகுதி புத்தமதப் பாலர்கள் வசமிருந்தபோதிலும் வங்காளம் இந்து மத மன்னர்களான சேனர்களின் ஆதிக்கத்துக்குள் வந்தது; சாந்தலர்களின் ஆட்சியின்கீழ்ப் பண்டல்கண்டு இருந்தது. ஆனால், கன்னோசிப் பிரதிகாரர்களைக் ககதவலர்கள் ஆட்சியினின்று அப்புறப்படுத்தியிருந்தனர். டில்லியும் ஆஜ்மீரும் சௌகன்களின் ஆதிக்கத்துள் இருந்தன. ஜெயசந்த அல்லது ஜெயச்சந்திரன் என அழைக்கப்பட்ட கன்னோசி மன்னர் அனேகமாகக் காசியில் தங்கி

வந்தார், இவரை முஸ்லிம் எழுத்தாளர்கள் அக் காலத்து இந்திய மன்னர்களுள் தலைசிறந்தவராக மதித்தனர். தாத் என்பவர் கூற்றை நம்புவோமாகில் ஜெயச்சந்திரன் பிருதிவி மன்னரின் மேம்பாட்டைக்கண்டு பொறாமை கொண்டிருந்தார் என்பது உண்மை எனக் கொள்ளவேண்டும். அவருடைய அழகிய மகளைச் சௌகன் வீரர் தூக்கிச் சென்றார். இச் சம்பவம் அக் கால நாடோடிப் பாடல்களின் கருத்தாக அமைந்தது. இச் சம்பவம் இம் மன்னர் இருவரிடை மனக் கசப்பை மேலும் அதிகரித்தது. முகமது கோரி படையெடுத்தபோது இதன் காரணமாக ஜெயச்சந்திரன் பிருதிவி மன்னர் பக்கம் சேரவில்லை. ஆனால், முகமது கோரியை இந்தியாவின்மீது படையெடுத்து வரும்படி ஜெயச்சந்திரன் அழைத்தார் என்று நம்புவதற்கு எவ்வித ஆதாரமும் இல்லை. முகமது கோரி பஞ்சாபில் கஸ்னவிகளின்மீது பெற்ற வெற்றியின் தவிர்க்க முடியாத பின்தொடர்ச்சியே அவரது இந்தியப் படையெடுப்பின் காரணமாகும்.

கி.பி. 1190–1191 குளிர்காலத்தில் முகமது கோரி பஞ்சாபைக் கடந்து படை நடத்திய போது இராஜபுத்திரர்களுள் அஞ்சாத தீரமிக்க வீரனாகிய பிருதிவிராஜன், படையெடுப்பாளர் வீரத்திற்குச் சற்றும் சளைக்காத வீரத்துடன் ஒரு பெரிய படையுடன் எதிர்க்க முற்பட்டார். பெரிஷ்ட்டாவின் கூற்றுப்படி அப் படையில் 200,000 குதிரைகளும் 3,000 யானைகளும் இருந்தன. பிருதிவிராஜனுக்குப் பக்க பலமாக அவருடைய இராசபுத்திர அரச நண்பர்கள் பலர் இருந்தனர். ஆனால், ஜெயச் சந்திரன் மட்டும் விலகி நின்றார். கோரி முகமது இரண்டு பக்கமும் படையின் இரு பிரிவுகள் அணி வகுத்துவரத் தாம் படையின் மத்தியில் நின்று இராசபுத்திரப் படையினரைத் தானேஸ்வரத்திற்கு அருகிலுள்ள தரேயின் என்னும் போர்க்களத்தில் 1191-ல் சந்தித்தார். தங்களுக்கே உரிய வீரத்துடன் இராசபுத்திரர்கள் முஸ்லிம் படையினரை அழிக்கத் தொடங்கினர். விரைவிலேயே அப் படைகள் தோற்கடிக்கப்பட்டன. அதன் தலைவர் காயமுற்றுக் கஸ்னிக்குத் திரும்பினார். முதற்கண் ஏற்பட்ட இத்தோல்வியினால் முகமது கோரி மனம் தளர்ந்து போய்விடவில்லை. தாம் பெற்ற தோல்விக்குப் பழிவாங்க வேண்டுமென்று மற்றொரு பெரிய படையை நன்கு ஆயத்தம் செய்து கொண்டும் வலுப்படுத்திக் கொண்டும் மறுபடியும் கி.பி. 1192-ல் இந்தியாவின் மீது படையெடுத்து இராசபுத்திர எதிரிகளை அதே போர்க்களத்தில் சந்தித்தார். மேலான யுத்த தந்திரத்தாலும் படைத்தலைமையாலும் ஆக்கிரமிப்புப் படையினர் இராசபுத்திரர்களை அடியோடு முறியடித்தனர். பிருதிவி மன்னர் பிடிக்கப்பட்டுக் கொல்லப்

பட்டார். அவருடைய சகோதரரும் கொலையுண்டார். முகமது வின் வெற்றி நிச்சயமானதாக இருந்தது. வட இந்தியாவில் முஸ்லிம் ஆதிக்கத்திற்கு அது அடிகோலியது. பிருதிவி மன்னரின் உறவினர் இழந்த ஆதிக்கத்தை திரும்பப்பெறச் செய்த முயற்சிகள் யாவும் பயனற்றுப் போயின. வட இந்தியாவின் பல்வேறு பகுதி களையும் சில ஆண்டுகளில் முகமது கோரியின் நம்பிக்கைக்குப் பாத்திரமான துருக்க அதிகாரி குத்புதீன் ஐபெக்கும் இக்தி யாருதீன் மகமதும் கைப்பற்றினர்.

குத்புதீன் ஐபெக் துருக்கிஸ்தானத்தைச் சேர்ந்த அடிமை யாக இருந்தவர். அவர் குழந்தையாக இருக்கும்போது நிஷாப் பூருக்கு ஒரு வணிகனால் கொண்டுவரப்பட்டார். அங்கு அந் நகர காஜி பக்ருதீன் அப்துல் அஸிஸ் குபி என்பவர் இவரை விலைக்கு வாங்கித் தம் மகனுடன் மதக் கல்வியும், போர்ப் பயிற்சியும் பெற ஏற்பாடு செய்தார். காஜி இறந்த பின் காஜியின் பிள்ளைகள் அவரை ஒரு வணிகனுக்கு விற்றுவிட்டனர், அவ் வணிகன் அவரைக் கஜினிக்குக் கொண்டுவந்தான். அங்கே கோரி முகமது வால் அவர் விலைக்கு வாங்கப்பட்டார். இவ்வாறு குத்புதீன் அடிமையாகத் தம் வாழ்க்கையைத் தொடங்கினார். இந்தியாவில் அவர் ஏற்படுத்திய வமிசத்திற்கு **அடிமை வமிசம்**[1] எனப்பெயர் ஏற்பட்டது. புறத்தோற்றத்தில் ஏதும்ஏற்றமின்றிக் காணப்பட்ட போதிலும் குத்புதீனிடம் புகழ்ச்சிக்குரிய பல நற்குணங்களும் நல்ல சிறப்புகளும் நிரம்பியிருந்தன. அவருடைய நற்பண்புகளே முகமது கோரியைக் கவர்ந்தன. விரைவிலேயே இவரை அமிர்-இ-அக்கர் (Amir-i-Akhur–குதிரை லாயத் தலைவன்) பதவிக்கு உயர்த்தினார் இந்தியப் படையெடுப்பின்போது தம் எஜமானருக்கு மிக்க உயர்ந்த சேவைகள் செய்தார். அவற்றிற்கு ஈடாக இரண்டாம் தரேயின் சண்டைக்குப் பின்னர் (கி. பி. 1192) இந்தியாவில் கிடைத்த பகுதிகளுக்குப் பொறுப்பாக இவர் நியமிக்கப்பட்டார். பிறகு எவ்விதக் கட்டுப்பாடுமின்றிப் புதிய பிராந்தியங்களில் ஆட்சி புரியவும், அவற்றை விஸ்தரிக்கும் விஷயத்திலும் அவ

[1] குத்புதீனின் வமிசம்பற்றிய இவ் விவரம் சரியானதன்று. இந்த வமிசத்து அரசர்களுள் மூவர் தவிர (குத்புதீன், இல்டுட்மிஷ், பால்பன்) வேறு எவரும் அடிமை யில்லை. இந்த மூவரும் கூடத் தங்கள் எஜமானர்களால் விடுதலை அளிக்கப்பட்டார் கள். குத்புதீன் தம் விடுதலைக்கான கடிதத்தையும் அரசாங்க விதானத்தையும் தம் எசமானர் மருமகனும் முகமது கோரியின் பின் பட்டம் எய்தியவருமான கியாஸ் உதீன் துக்ளக்கிடமிருந்து பெற்றார். இது அவர் டில்லி அரியணை பெறும் முன் அளிக்கப்பட்டது (ரேவர்டி, தபாகுவாட், இ-நசிரி, பக்கம் 524-5). இல்டுட்மிஷ் தம் எசமானரிடமிருந்து விடுதலை பெற்றார் (மேற்படி பக்கம் 605-6), இல்டுட்மிஷின் நாற்பது துருக்க அடிமைகளைச் சார்ந்த பால்பன் இவர்களுடன் தம் விடுதலையைப் பெற்றார். சியாபார்னி தா-ரிக்-இ பிரஸ்ஷாதி பதான் அல்லது ஆப்கன் என்று இவ் வமிசத்தைக் கூறுவதும் தவறாகும். ஏனெனில், இந்த வமிச மன்னர்கள் யாவரும் துருக்கியர்களே அன்றிப் பதான் அல்லது ஆப்கானியர் அல்லர்.

ருக்கு அதிகாரம் வழங்கப்பட்டது. தம்முடைய நிலைமையை வலுப் படுத்தும் பொருட்டுக் குத்புதீன் தமது வலிய எதிராளித் தலைவர்களுடன் திருமண உடன்பாடுகள் செய்துகொண்டார், தாஜ் உதீன் இல்டிஸ் மகளைத் தாம் மணந்து கொண்டார். இவர் சகோதரி நாசருதீன் குவபாக்காவிற்கு மணமுடிக்கப்பட்டாள். இவர் மகள் இல்டுட்மிஷுக்கு மணமுடிக்கப்பட்டாள். தம் எஜமானர் தம் மேல் வைத்திருந்த நம்பிக்கைக்கு மெய் யாகக் குத்புதீன் நடந்துகொண்டார். கி. பி. 1192-ல் அவர் ஹான்சி, மீரட், டில்லி, ராந்தாம்பூர் கோயில்களைக் கைப்பற்றி னார். கி.பி. 1194-ல் தம் எஜமானருக்குக் கன்னோசி, காசி ஆகிய வற்றின் அரசரான ஜெயச்சந்திரனை யமுனைக் கரையிலுள்ள இட்டாவ மாவட்டத்தில் தோற்கடிக்கவும் கொலை செய்யவும் உதவினார். கி.பி. 1197-ல் கூர்ச்சர மன்னன் இரண்டாம் பீமதேவன் ஏதோ தொல்லை விளைவித்ததற்காகத் தண்டித்து அவரது தலைநகரைக் கொள்ளையிட்டு ஹான்சி வழியாக டில்லி திரும்பினார். கி. பி. 1202-ல் பண்டல்கண்டிலுள்ள கலிஞ்சார்க் கோட்டையை முற்றுகையிட்டு அதைப் பாதுகாத்தவர்களை வென்று, அவர்களிடமிருந்து ஏராளமான கொள்ளைப் பொருள் களைக் கைப்பற்றினார். ஆண், பெண் அடங்கலாக ஐம்பதாயிரம் பேர் சிறைப்பிடிக்கப்பட்டனர். அடுத்தபடியாக மஹோபா நகர் மீது அவர் படையெடுத்து அதைக் கைப்பற்றியபின் இந்துஸ் தானத்தில் அதிகச் செல்வம் படைத்தவற்றுள் ஒன்றான பதான் (Badaun) வழியாக டில்லிக்கு மீண்டார். பதானையும் அவர் கைப் பற்றினார். இதற்கிடையில் பக்தியார் கில்ஜியின் மகனான இக்தியா ருதீன் மகமது என்பவரால் பீகாரும் மேற்கு வங்காளத்தின் சில பகுதிகளும் கோரி இராச்சியத்துடன் சேர்க்கப்பட்டன. இக்தியா ருதீன் நாடியாவிலிருந்து லக்ஷ்மணசேனனை டாக்காவுக்கு அருகில் கிழக்கு வங்காளத்[1]திற்கு விரட்டியிருக்கலாம். அங்குத் தற்கால மால்டா மாவட்டத்தில் கெவிர் அல்லது லக்னௌட்டியில் தங்கள் ஆட்சி பீடத்தை அமைத்துக்கொண்டு சேனர்கள் அரை நூற் றாண்டுக்கு மேலாக நிலைத்திருந்தனர். இவ்வாறு பதின்மூன்றும்

[1] நாடியாவை முஸ்லிம்கள் கைப்பற்றிய தேதியைக்குறித்துச் சரித்திர வல்லுநர்களுக்குள் கருத்து மாறுபாடுகள் உண்டு. ரேவர்டியின் கருத்துப்படி அது ஏ. எச். 590 ஆகவும் கி. பி. 1193 (op. cit., vol. I. p. 588 f. n). ஆனால், இது தவறென பலாக்மான் தக்கபடி விவாதித்துள்ளார். (ஜே. ஏ. எஸ். பி. பிரிவு. I பக்கம் 275-7). நாடியா ஏ. எச். 599-ல் அதாவது கி. பி. 1202-1203-ல் வீழ்ந்தது என்பது எட்வர்ட் தாமஸ் (டில்லி பதானியர் சரித்திரம், பக்கம் 110) கருத்தாகும். சார்லஸ் ஸ்டூவர்த் (வங்காள சரித்திரம், பக்கம் 47) கருத்துப் படி இது ஏ. எச். 600 அதாவது கி. பி. 1203—1204. இக் கருத்து அக் காலத்துச் சரித்திர ஆசிரியர்கள் கருத்துகளுக்கு முரணாக உள்ளது. தற்கால எழுத்தாளர் ஒருவர் பலாக்மான் கருத்துப்படி நாடியா ஏ.எச். 594—595-ல் கி.பி.1197—1198-ல் கைப்பற்றப்பட்டது பொருத்தமுடையது என்கிறார். (இண்டியன் ஹிஸ்டாரிகல் குவார்ட்டர்லி, மார்ச்சு, 1936 பக்கம் 148—51.)

நூற்றுண்டின் ஆரம்பத்தில் சிந்து நதியிலிருந்து கிழக்கில் கங்கை வரையில் இந்துஸ்தானத்தின் கணிசமான பகுதி முஸ்லிம் பகுதியினரால் ஆதீனப்படுத்தப்பட்டது. ஆனால், முஸ்லிம் ஆட்சியை ஒழுங்குபடுத்தி அமைக்க மேலும் பல ஆண்டுக் காலம் தேவைப் பட்டது.

கி. பி. 1203 பிப்ரவரியில் தம் மூத்த சகோதரரான கியாஸ் உதீன் மகமது இறந்ததும் மு-இஸ் உதீன் மகமது கஸ்னி, கோர், டில்லி இவற்றிற்கு மன்னரானார். ஆயினும், முன்பே இவற்றின் அரசராக உண்மையில் இவர் தாம் விளங்கியவர். ஆனால், விரைவில் பல பெரும் இன்னல்களால் இவர் பதவிக்கு ஆபத்து ஏற்பட்டது. கி.பி. 1205-ல் மத்திய ஆசியாவில் ஆங்வி (Andkhui) என்னுமிடத்திற்கு அருகில் குவாராஸ்ம் ஷாவான அலாவுதீன் மகமது என்பவரிடம் தோல்வியுற்ருர். இந்தத் தோல்வியின் காரணமாக இந்தியாவில் இம் மன்னருடைய இராணுவப் புகழுக்குப் பலத்த அதிர்ச்சி ஏற்பட்டு அங்கங்கே பல கலகங்களும் சதிகளும் தோன்றின. இவரைக் கஸ்னியில் நுழையவொட்டாமலும் தடுத்தனர். கஸ்னி அதிகாரி ஒருவரால் மூல்தான் கைப்பற்றப்பட்டது. இவருடைய பழைய விரோதிகளான கோகர்கள் பஞ்சாபில் இன்னல் விளைத்தனர். ஆனால், தளரா ஊக்கத்துடன் எவ்விதத் தயக்கமுமின்றி முயுஸ் உதீன் மகமது இந்தியாவில் நுழைந்து எல்லா இடங்களிலும் கலகங்களை ஒடுக்கிக் கி.பி. 1205 நவம்பரில் கோகர்களைப் படுதோல்வி அடையச்செய்தார். ஆயினும், அவர் வாழ்நாள் குறுகிவிட்டது. லாகூரிலிருந்து கஸ்னிக்குத் திரும்பும் வழியில் இன்னார் என்று நிச்சயமாக இனம்கண்டுபிடிக்க முடியாத சில கொலைகாரக் கூட்டத்தினரால் டாம்யாக் என்னுமிடத்தில் 1206 மார்ச்சு 15-ல் குத்திக் கொல்லப்பட்டார். இச்செயலைச் சமீபத்தில் நாடிழந்த கோகர் செய்திருக்கக்கூடுமெனச் சிலர் கருதுகின்றனர். வேறு சிலர் கருத்துக்கிணங்க இவர் இஸ்மாலிப் பிரிவைச் சேர்ந்த சில முஸ்லிம் அபிமானிகளால் கொல்லப்பட்டிருக்கலாம் என்று தோன்றுகிறது. இராசபுத்திர பழங்காலக் கதை யொன்று இவர் கொலை செய்யப்பட்டது பிருதிவியின் செயலால் என்று கூறுகிறது. அக் கதை பிருதிவி இரண்டாவது தரேயின் சண்டையில் கொல்லப்படவில்லை என்றும், ஆனல் குருடாக்கப்பட்டுச் சிறையிலிருந்தார் என்றும் கூறுகிறது. இக் கதையை முஸ்லிம்சரித்திர ஆசிரியர் ஒருவரும் குறிப்பிட்டுள்ளார். கொலை செய்யப்பட்ட சுல்தானின் சடலம் கஸ்னிக்கு எடுத்துச் செல்லப்பட்டு அங்கு அடக்கம் செய்யப்பட்டது.

# 2. அடிமை வமிசம் என வழங்கப்பட்ட வமிசமும் வட இந்தியாவில் முஸ்லிம் ஆட்சி வலுவடைதலும்

## 1. குத்புதீன் ஐபெக்கும் ஆராம் ஷாவும்

முகமது கோரி தமக்குப்பின் வாரிசாக ஆண் மக்களைப் பெற்றிருக்கவில்லை. அங்கங்கே இருந்த வைசிராய்கள் தங்கள் தங்கள் பிரதேசங்களில் சுய ஆட்சி பெற்றனர். கிர்மான் கவர்னராயிருந்த தாஜ்உதீன் இல்டிஸ் கஸ்னியின் அரியணை ஏறினர். குத்புதீன் ஐபெக் சுல்தான் என்ற பட்டம் சூட்டிக் கொண்டு இந்தியப் பிரதேசங்களுக்கு மன்னரானர். வங்காள இக்தியாருதீன் மூல்தான், உக் ஆகிய பகுதிகளின் கவர்னரான நாசருதீன், குபாக்சா போன்ற முஸ்லிம் உத்தியோகஸ்தர்கள் இச் செயலைஆதரித்தனர். குத்புதீன் ஐபெக்கின் எழுச்சி தாஜ்உதீன் இல்டிஸ் மனத்தில் பொறாமையைத் தூண்டியது. பஞ்சாபின் ஆதிக்கத்திற்காக அவர் ஐபெக்குடன் போரில் ஈடுபட்டார். குத்புதீன் இல்டிஸைத் தோற்கடித்து, அவரைக் கஸ்னியினின்றும் விரட்டி விட்டு, நாற்பது நாள்வரை அதைத் தம்கீழ் வைத்திருந்தார். கஸ்னி மக்கள் அவரது மிதமிஞ்சிய செயலால் வெறுப்புற்றுத் தங்கள் உதவிக்கு வருமாறு இல்டிஸை இரகசியமாக வேண்டினர். இந்தச் சந்தர்ப்பத்தை இல்டிஸ் தவறாமல் பயன்படுத்திக்கொண்டார். இவர் கஸ்னியில் சற்றும் எதிர்பாராத வகையில் திடீரென்று நுழைந்ததைக் கண்ட குத்புதீன் கலவரம் கொண்டு ஓடிவிட்டார். இதனால் ஆப்கானிஸ்தானத்திற்கும் இந்தியாவிற்கும் ஏற்பட விருந்த அரசியல் ஒற்றுமையின் வாய்ப்புக் குலைந்தது. இது பின்னர், பாபர் டில்லியைக் கைப்பற்றும் வரையில் ஏற்படவில்லை. குத்புதீன் முற்றிலும் இந்திய சுல்தானுகவே விளங்கினர். நான்கு ஆண்டுகளுக்குச் சிறிது கூடுதலான குறுகிய ஆட்சிக்குப் பிறகு கி. பி. 1210 நவம்பரில் போலோ விளையாட்டின்போது குதிரையினின்றும் கீழே விழுந்ததன் விளைவாக லாகூரில் இவர் இறந்தார்.

மின்ஹாஜ்-உஸ்-சிராஜ் என்பவர் குத்புதீனைப்பற்றி கூறுகையில், அவர் தளரா ஊக்கமுடைய திறந்த உள்ளம் படைத்த மன்னர் என்று வருணிக்கிறார். இராணுவ வலிமையும் சுறுசுறுப்பும் அமையப்பெற்ற இவர் எந்தப் போரிலும் தோல்வி கண்டதில்லை. தம்முடைய விரிந்த படையெடுப்பால் இந்துஸ்தானத்தின் பெரும் பகுதியை இஸ்லாம் கொடியின்கீழ்க் கொண்டுவந்தார். இவர் பெருங் கொடைவள்ளலாகத் திகழ்ந்தார். இவர் கொடை அளிப்பது நூறாயிரக் கணக்கில் பெருந்தொகைகளாக இருக்கும். இவரைச் சரித்திர ஆசிரியர் அனைவரும் 'லக்பக்க்ஷ' அல்லது லஷம் கொடையாளி என்று குறிப்பிட்டுள்ளனர். தாஜ்உல்மா அசிர் (Taj-ul-Ma aser) ஆசிரியரான ஹஜன்-உன்-நிஜாமி குத்புதீனை வானளாவப் புகழ்ந்துள்ளார். 'தாமே மக்களுக்கு நியாயம் வழங்கியும் தீர்ப்புகள் கூறியும் தம் இராச்சியத்தில் சமாதானமும், சுபிட்சமும் ஓங்கி வளர அரும்பாடுபட்டார்' என்று கூறுகிறார். ஆனால், ஆக்கிரப்பு விஷயத்திலும் ஆட்சி செலுத்தும் வகையிலும் தேவையானபோது கடும் நடவடிக்கைகள் மேற்கொள்ள இந்தச் சுல்தான் சற்றும் தயங்கியது இல்லை. இஸ்லாம் மதத்தில் இவர் கொண்டிருந்த நம்பிக்கை போற்றுதற்குரியது. ஹசன்-உன்-நிஜாமி பின்வருமாறு கூறுகிறார்: 'இவருடைய ஆணை பெற்ற இஸ்லாம் போதகர்கள் மேலும் மன எழுச்சி பெற்றனர். நேர்மைக் கதிரவன் தன் நிழலைச் சொர்க்கத்திலுள்ள ஆண்டவனின் துணையுடன் இந்திய நாடுகளின்மீது விழச்செய்தான்.' மதத்தில் தமக்கிருந்த ஊக்கத்திற்குச் சான்றாக டில்லியில் ஒரு மசூதியையும் ஆஜ்மீரில் ஒரு மசூதியையும் இவர் கட்டினார்.

லாகூரில் குத்புதீன் திடீர் மரணமடைந்தவுடன் லாகூரிலுள்ள அமீர்களும் மாலிக்குகளும் ஆராம் பாக்ஷாவைக் குத்புதீனின் வாரிசாக அரியணையிலமர்த்தி அவருக்குச் சுல்தான் ஆராம்ஷா என்னும் பட்டமும் வழங்கினர். 'கலகங்களைக் கட்டுப்படுத்தவும் பொது மக்களின் அமைதியை முன்னிட்டும், வீரர்களின் மனத்தில் திருப்தியை நிலைநாட்டவும்' அவர்கள் அவ்வாறு செய்தனர். ஆராமுக்கும் குத்புதீனுக்கும் உள்ள உறவு விவாதத்திற்குரியது. சிலருடைய கருத்துப்படி இவர் குத்புதீனின் மகன் எனப்படுகிறார். ஆனால், மின்ஹாஜ்-உஸ்-சிராஜ் குத்புதீனுக்கு மூன்று பெண்கள் மட்டுமே இருந்தனர் என்று மிகத் தெளிவாக எழுதியுள்ளார். அபுல் ஃபாசல் இவரைச் சுல்தானின் உடன்பிறந்தவர் என்ற வியத்தற்குரியதொரு கூற்றை வெளியிட்டுள்ளார். தற்கால எழுத்தாளர் ஒருவர் இவர் குத்புதீனுக்கு உறவினரே அல்லர் என்ற துணிச்சலான அபிப்பிராயத்தை வெளியிட்டுக் குத்புதீன் இவரை தமக்குப் பின் உரிமை ஏற்கும்படி கூறினார் என்றும், வேறு ஒருவரும்

கிடைக்காதபடியால்[1] அவ்வாறு செய்தார் என்றும் கூறுகிருர். உண்மையில் துருக்கி சமஸ்தானத்தில் பட்டத்திற்கு வருவது குறித்துத் திட்டவட்டமான சட்டங்கள் ஏதும் இல்லை. பெரும் பாலும் எழும் சந்தர்ப்பத்தை ஒட்டியும், தலைவர்களும் பிரபுக் களும் காட்டும் செல்வாக்கைப் பொறுத்தும் தீர்மானிக்கப்படும். நாட்டை ஆளுவதற்கு ஏற்ற தகுதி ஒன்றும் ஆராம் பெற்றிருக்க வில்லை. விரைவிலேயே டில்லிப் பிரமுகர்கள் இவருக்கு எதிராகச் சதிசெய்து பதான் கவர்னராயிருந்த மாலிக் ஷம்சுதீன் இல்டுட்மிஷ் என்பவரை ஆராமைப் பட்டத்திலிருந்து நீக்குமாறு அழைத்தனர். இல்டுட்மிஷ் அவர்களது அழைப்பிற்கு இணங்கித் தம் படை முழுவதுடன் முன்னேறி ஆராமை டில்லிக்கு அருகிலிலுள்ள ஜூட் (Jud) சமவெளியில் தோற்கடித்தார். ஆராமுக்கு என்ன நேர்ந்தது என்பது தெளிவாகத் தெரியவில்லை.

## 2. இல்டுட்மிஷ்

துருக்கிஸ்தானத்திலுள்ள இல்பாரி கூட்டத்தினரைச் சேர்ந்தவர் இல்டுட்மிஷ். வசீகரமான புறத்தோற்றமுடைய அவர் இளமையிலிருந்தே புத்தி கூர்மையும் செயல் திறனும் கொண்டு விளங்கினுர். இதனுல் அவர் சகோதரர்கள் பொருமை கொண்டு அவரை வீட்டினின்றும் வெளியேற்றிவிட்டனர். இடுக் கண்களால் அவர் நற்குணங்கள் குன்றவில்லை. தாமே ஒரு வழியைத் தேர்ந்தெடுத்தார். அவருடைய குணநலன்கள் குத்புதீனின் கவனத்தைக் கவர்ந்தன. பெரியதொரு விலை கொடுத்து அவரை விலைக்கு வாங்கினுர். தம் சுய திறமையால் படிப்படியாக உயர் பதவி அடைந்து பதானுக்குக் கவர்னராக நியமனம் பெற்றுப் பின்னர், குத்புதீன் மகள் ஒருத்தியை மணந்தார். சோதரர்களை எதிர்த்து மகமது கோரி நடத்திய படையெடுப்பின்போது அவர் செய்த அருஞ் சேவைகளைப் பாராட்டும் வகையில் சுல்தான் அவரை அமீர்-உல்-உமாரா என்னும் பதவிக்கு உயர்த்தினுர். இவ்வாறு டில்லிச் சுல்தான்கள் தகுந்த ஒருவரையே தேர்ந்தெடுத் தனர். ஆனுல், அவர் அரியணை ஏறியதும் கி. பி. 1210 அல்லது 1211-ல் தம் நிலைமைக்கு அல்லல் தரும் சூழ்நிலைகளால் பாதிக்கப் பட்டிருப்பதை உணர்ந்தார். நாசருதீன் கபாக்கா சிந்துவில் தம் சுய ஆட்சியை நிலைநாட்டிப் பஞ்சாபில் தம் ஆதிக்கத்தைப் பரப்ப ஆவல் கொண்டிருந்தார். தாஜ்உதீன் இல்டிஷ் கஸ்னியைப் பெற்ற துடன் மகமது இந்தியாவில் வெற்றி கொண்ட பகுதிகளுக்குத் தாமே உரிமையுடையவர் என்ற பழைய போலி உரிமையைப் பாராட்ட முற்பட்டார். அலிமர் தான் என்றதொரு கில்ஜி பிரபு

1 இண்டியன் ஹிஸ்டாரிகல் குவாட்டர்லி, மார்ச் 1937, பக்கம் 120.

குத்புதீனால் கி. பி. 1206–ல் இக்தியாருதீன் இறந்தபின் வங்காளக் கவர்னராக நியமனம் பெற்றிருந்தார். குத்புதீன் இறந்த பிறகு டில்லி அதிகாரத்தைப் புறக்கணித்துத் தம்மை சுல்தான் அலாவுதீன் என்று கூறிக்கொண்டார். மேலும், தங்களுடைய சுதந்திரம் பறிபோனதற்காக இந்து சிற்றரசர்கள் பலர் அதிருப்தி நிரம்பப் பெற்றிருந்தனர். ஆராம் ஷாவின் வலிமை அற்ற ஆட்சியின்போதே குவாலியர், ராம்தாம்பூர் ஆகியவை அவற்றின் மன்னர்களால் மீட்கப்பட்டுவிட்டன. இல்டுட்மிஷின் துன்பங்களை மேலும் அதிகரிக்கும் வகையில் டில்லி அமீர்கள் அவருடைய ஆட்சியில் வெறுப்புக் கொண்டனர்.

இந்த நிலைமைகளைப் புதிய சுல்தான் மிகு துணிவுடன் எதிர்த்தார். முதலில் அமீர்களின் கிளர்ச்சியை வெற்றிகரமாக அடக்கி டில்லிக்கு அருகிலுள்ள ஜுட் (Jud) சமவெளியில் இவர்களை வெற்றி கொண்டார். இதன் பின்னர்ப் பதான், அயோத்தி, காசி, சிவாலிக் ஆகிய டில்லியைச் சார்ந்த அரசுகளைத் தம் அடிப்படுத்தினார். இவருடைய பகைவர்களின் பெரிய திட்டங்களையும் இவர் தவிடுபொடியாக்கினார். கி. பி. 1214–ல் தாஜ்உதீன் இல்டிஸ் கஸ்னியிலிருந்து காவாரஸ்ம் (Khawarazm) ஷாவால் சுல்தான் மகமதினால் விரட்டப்பட்டு லாகூருக்கு ஓடினார். பிறகு தானேசுரம் வரையில் பஞ்சாபை வென்று, சுய ஆட்சி பெறவும் இல்டுட்மிஷ் ஆட்சியை மீறித் தம் ஆதிக்கத்தை ஏற்படுத்தவும் முயன்றார். இச் செயலை இல்டுட்மிஷ் பொறுத்துக்கொள்ள முடியவில்லை. தம் பகைவன்மீது அவர் உடனேயே படை கொண்டுசென்று கி. பி. 1216 ஜனவரியில் தரேயினுக்கு அருகில் நடந்த போரில் புறங்கண்டு அவரைச் சிறைப்பிடித்துப் பதானுக்கு அனுப்பினார். லாகூர் வரையில் இதற்குள்ளாக நாசருதீன் கபாக்கா முன்னேறினார். ஆனால், கி. பி. 1217-ல் இல்டுட்மிஷினால் அந் நகரினின்றும் வெளியேற்றப்பட்டார். கி.பி. 1228 பிப்பிரவரிக்குள்ளாக அவர் முற்றிலும் ஒடுக்கப்பட்டார். முடிவில் சிந்து நதியில் ஒரு விபத்தில் மூழ்கி மாண்டார். சிந்து டில்லியுடன் இணைக்கப்பட்டது. இதற்கு ஓராண்டிற்குப் பிறகு பாக்தாதில் ஆட்சி புரிந்த காலிஃப் அல்லது காலிபா அல் முஸ்டான்சிர் பில்லாவிடமிருந்து இல்டுட்மிஷ் ஒருவகை கௌரவ ஆடையையும், இல்டுட்மிஷ் வெற்றிகொண்ட 'கடல் நிலப்பரப்பு யாவற்றிற்கும்' அவரை அதிபராக்கிச் சுல்தான்-இ-அசாம் என்ற பட்டம் வழங்கப்பெற்ற ஓர் உத்தரவையும் பெற்றார். இது இல்டுட்மிஷ் அதிகாரத்தை மேலும் வலுப்படுத்திய ஒரு புதிய சக்தியாயிற்று. இதனால் முஸ்லிம்களிடையே இம் மன்னர் ஒரு கௌரவம் வகித்தார். டில்லிச் சுல்தான்களின்மேல் காலிஃபுகளுக்கு ஆதிக்கம் உண்டு என்ற

கொள்கையை இது வலுப்படுத்தியது. இந்தியாவின் பூகோள எல்லைக்கு அப்பாலிருந்தும் காலிஃபுகளுக்கே முடிவான அதிகாரம் இந்தியப் பகுதிகளில் உண்டென்பதைச் சட்டபூர்வமாக்கியது. முஸ்லிம் சகோதரத்துவம் காலிபாவின் ஆதிக்கத்தில் உட்பட்டது என்பதை உணரமுடிகிறது. தாம் வெளியிட்ட காசுகளில் தாம் காலிபாவின் பிரதிநிதி என்பதை வெளிப்படுத்தியுள்ளார். தோமஸ் என்றவர் கூறுகிறார்: 'இவருடைய காசுகள் டெல்லியில் பதானியர்களின் வெள்ளிக் காசுகள் வழங்கப்படுவதற்கு ஆரம்பமாக இருந்தன.'

கி.பி. 1226-ல் ராம்தாம்பூர் இல்டுட்மிஷினுல் மீட்கப்பட்டது. அதன் பின்னர், ஓராண்டுக் காலத்தில் சிவாலிக் குன்றுகளில் அமைந்த மாந்தவார் கைப்பற்றப்பட்டது. கி.பி 1230–31 மாரிக்காலத்தில் வங்காளக் கில்ஜி மாலிக்குகள் முற்றிலும் கீழ்ப்படுத்தப்பட்டனர். லக்நௌடியின் கவர்னராக அலாவுதீன் ஜானி நியமிக்கப்பட்டார். குத்புதீன் மரணத்திற்குப் பிறகு சுய ஆட்சி பெற்றிருந்த குவாலியர் கி.பி. 1232ஆம் ஆண்டின் முடிவில் சுல்தானுல் அதன் இந்து மன்னர் மங்களதேவனிடமிருந்து திரும்பப் பிடிக்கப்பட்டது. கி.பி. 1234-ல் மாளவ நாட்டின்மீது சுல்தான் படையெடுத்துப் பில்சாக் கோட்டையைக் கைப்பற்றினுர், இதன் பின்னர்ப் புகழ்பெற்ற உச்சயினி நகரத்தை நோக்கி, சுல்தான் படையெடுத்து அதைக் கைப்பற்றி அழித்தார். கீர்த்தி வாய்ந்த விக்கிரமாதித்தனின் சிலை ஒன்று டில்லிக்கு எடுத்துச் செல்லப்பட்டது. இல்டுட்மிஷின் கடைசிப் படையெடுப்பானது பானியனை[1] நோக்கி மேற்கொள்ளப்பட்டது. ஆனுல், வரும்வழியில் கொடிய நோயினுல் மிகவும் பீடிக்கப்பட்டபடியால் ஒரு பல்லக்கில் வைத்து டில்லிக்கு இவரைச் சுமந்து செல்லவேண்டியதாயிற்று. இந்த வியாதியே எமனுக ஆனது. கி.பி. 1236, ஏப்ரல் 29ஆம் நாள் இருபத்தாறு ஆண்டு கால ஆட்சிக்குப்பின் இவர் உயிர்நீத்தார்.

இல்டுட்மிஷ் ஆட்சிக்காலத்தில்தான் கி.பி. 1221-ல் முதல் தடவையாக மங்கோலியர்கள் சிந்து நதிக்கரையில் அவர்களது புகழ்பெற்ற செங்கிஸ் தலைமையில் தோன்றினர். செங்கிஸ் கி.பி. 1155-ல் பிறந்தார். அவரது முதற்பெயர் டெமுகின் (Temuchin) அவர் ஒரு வெற்றியாளர் மட்டுமல்லர். தம் இளமைப் பருவத்தில்

1 ரேவர்டியின் கருத்துப்படி (பக்கம் 623 அடிக்குறிப்பு) இது சிந்துசாகர் தோ ஆப் மலைப்பிரதேசத்தில் உள்ளது. அல்லது உப்பு மலைகளுக்கு மேற்கில் உள்ள நாட்டிலாகும். பதானியும் (ராங்கிங் வால்யூம் I, பக்கம் 95) பெரிஷ்டாவும் பிரிக்ஸ் வால்யூம் I, பக்கம் 211) நிசாமுதீன் கருத்துகளைக் கடன் வாங்கி அதை மூல்தான் என்கின்றனர். ஆனுல், அவர்கள் கூறுவது தவறு.

பல துன்பங்களையும் தாங்கும் பழக்கம் ஏற்பட்டதால் பொறுமை, உறுதி, தன்னம்பிக்கை போன்ற உயரிய குணங்கள் இவருக்கு வளர்ந்தன. இத்தகைய குண நலன்களே இவர் மத்திய ஆசியாவின் முரட்டுச் சாதியினரடங்கிய ஒரு பெரிய சாம்ராஜ்யத்தை ஏற் படுத்தவும், இவர் மரணத்திற்குப் பின்னும் பல காலம் நீடித்த சட்டங்களையும் ஆட்சி ஸ்தாபனங்களையும் ஏற்படுத்தவும் உதவின. மின்னல் வேகத்தில் மத்திய ஆசியா, மேற்கு ஆசியா ஆகிய நாடுகளின்மீது பாய்ந்து அவற்றைத் தம்மடிமைப்படுத்தி ஞர். கவாராஸ்ம் அல்லது கிவாவின் கடைசி ஷா ஜலாலுதீன் மங்க பார்னியைத் தாக்கியதும் அவர் பஞ்சாபிற்கு ஓடிவந்து இல்டுட் மிஷ் ஆட்சியில் தஞ்சம் புகுந்தார். வேண்டா விருந்தினராக வந்த இவருடைய வேண்டுகோளுக்கு இசைய இல்டுட்மிஷ் மறுத்துவிட்டார். மங்கபார்னி கோகர்களுடன் உடன்பாடு செய்துகொண்டு மூல்தான் மன்னர் நாசருதீன் கபாக்காவை வென்ற பின்னர்ச் சிந்துவையும் வட கூர்ச்சரத்தையும் கொள்ளை யிட்டுப் பாரசிகத்திற்குச் சென்ஞர். மங்கோலியர்களும் திரும்பிச் சென்றனர். இவ்விதமாகப் பயங்கரமானதொரு ஆபத்தினின்றும் இந்தியா தப்பியது. ஆனல், மங்கோலியப் படையெடுப்புகளின் தொந்தரவுகளால் டில்லிச் சுல்தான்கள் பிற்காலத்தில் பாதிக்கப் பட்டனர்.

டில்லியை ஆண்ட முந்திய துருக்கியச் சுல்தான்களுள் மிகச் சிறந்தவராக இல்டுட்மிஷ் கருதப்படுதல் நியாயமானதே. இவர் களது ஆட்சி கி.பி. 1290 வரை நீடித்தது. குழவிப் பருவத்தில் இருந்த முஸ்லிம்களின் இந்தியப் பகுதிகளை அழிவினின்றும் காப்பாற்றிய பெருமை இவரைச் சாரும்; குத்புதீன் ஐபெக் வென்ற பகுதிகளை ஒன்றுசேர்த்து வலிமைமிக்கதோர் ஆட்சியாக அமைத்தவர் இவரே. அந்த ஆட்சி சில வெளிப்புறப் பிரதேசங்கள் நீங்கலாக இந்துஸ்தான் முழுவதும் உள்ளடக்கியதாக இருந்தது. தளரா ஊக்கமுடைய வீரராகவும் பகைவர்களைக் கடுமையாகத் தண்டிப்பவராகவும் விளங்கிய இவர் தம் இறுதிவரை போர்ச் செயல்களில் சுறுசுறுப்பாக ஈடுபட்டிருந்தார். அதேசமயம் சிறப் பான மனித இயல்புகள் பெற்றிருந்த இவர் கலைகளையும் கல்வி யையும் ஆதரித்தார். கி.பி. 1231–1232-ல் டில்லியில் இந்த சுல்தான் பூர்த்தி செய்த புகழ்பெற்ற குதுப்மினர் கட்டடம் இவர் பெருமைக்கு அழியாச் சான்ருக நிற்கின்றது. சில சரித்திர ஆசிரியர்கள் தவருக எண்ணுவதுபோல் இந்தக் கட்டடம் முதல் துருக்க சுல்தானின் ஞாபகார்த்தமாகப் பெயரிடப்படவில்லை. ஆனல், பாக்தாத் அருகிலுள்ள உஷ் ஊராராகிய குவாஜா குத்புதீன் பெயரால் விளங்குகிறது. இவர் இந்துஸ்தானத்தில்

வாழ்வதற்காக வந்து சேர்ந்தார். இல்டுட்மிஷும் மற்றும் பலரும் இவரை மிக்க பக்தியோடும் மரியாதையோடும் போற்றினர். நன்றியின் காரணமாகவே இல்டுட்மிஷ் தம் ஆதரவாளர்களான சுல்தான் குத்புதீன், சுல்தான் முஇஸ் உதீன் இவர்கள் பெயர்களை இத் தூணில் பொறிக்கும்படி செய்தார். சுல்தானின் ஆணையின் பேரில் ஓர் உன்னதமான மசூதியும் கட்டப்பட்டது. இவர், மிகவும் மதப் பற்றுடையவர். தவருது பிரார்த்தனைகள் செய்வதில் கருத்தாக இருந்தார். இந்தச் சுல்தானைப்போல் வேறு எந்த அரசரும் இவ்வளவு நற்குணத்தவராகவும் இரக்க சித்தம் உடையவராகவும் கல்விமான்களிடமும் ஞானிகளிடமும் மரியாதை உள்ளவராகவும் டில்லி ஆட்சி பீடத்தில் அமர்ந்தது இல்லை என்று மின்ஹாஜ் - உஸ் - சிராஜ் எழுதுகின்ருர். அவர் காலத்திய சாசனங்கள் சிலவற்றில் 'கடவுளின் நிலப் பாதுகாவலர், கடவுளின் ஊழியர்களைப் பாதுகாப்பவர்' என்று இவ் விதமாகக் காணப்படுகின்றன.

## 3. ரசியா

வங்காளத்தைத் தம் தகப்பனின் பிரதிநிதியாக ஆட்சிபுரிகையிலேயே இல்டுட்மிஷ் மூத்த மகனுகிய நாசருதீன் மகமது கி.பி. 1229 ஏப்ரலில் மரித்தார். உயிருடன் இருந்த மற்றப் புதல்வர் ஆட்சிப் பொறுப்பை வகிக்கத் திறமையற்றவர்களாக இருந்தனர். ஆகையால், இல்டுட்மிஷ் மரணப் படுக்கையில் இருக்கையிலேயே தம் வாரிசாகத் தம் மகளை ஏற்படுத்தினுர். ஆனுல், அவர் அவையிலிருந்த பிரபுக்கள் ஒரு பெண்ணிற்குத் தலை வணங்கக் கூடாதென்ற அளவிற்கு ஆணவம் கொண்டிருந்தபடியால் மரித்துப்போன சுல்தானின் விருப்பத்தைப் புறக்கணித்து, சுல்தானின் உயிரோடிருந்த பிள்ளைகளுள் மூத்தோனுகிய ருகன் - உத் - தீன் ஃபெருஸ் (Rukn-ud-din Firuz) என்பவரை அரியணையில் அமர்த்தினர். இவர் பதான் ஆட்சியின் பொறுப்பை வகித்துவருகையில் சில ஆண்டுகளுக்குப்பின் தம் தந்தையின் ஆயுள் காலத்திலேயே லாகூரின் ஆட்சியையும் பெற்றவர். இவரைத் தேர்ந்தெடுத்தது துர்அதிர்ஷ்டமாகும். இவர் ஆட்சி புரியத் தகுதியற்றவர். கீழ்த்தர உணர்ச்சிகளில் இவர் ஈடுபட்டார்; அரசியல் அலுவல்களைப் புறக்கணித்து அதன் செல்வத்தை வீணுக விரயமாக்கினுர். ஏழைக் குடும்பத்தைச் சேர்ந்தவரும்[1] பேராசை மிக்கவருமான ஷா துர்க்கான் என்னும் இவர்

[1] அவர் இதற்குமுன் துருக்கிய தாதிப் பெண்ணுக இருந்தவர்.

தாயாரின் செயல்களால் நிலைமை மிகவும் மோசமாகியது. தம் மகன் சிற்றின்ப வாழ்க்கையில் மூழ்கிக் கிடக்கையில் இவர் ஆட்சியைக் கைப்பற்றிக்கொண்டார். இராச்சியம் குழப்பத்தில் மூழ்கியது. மத்திய அரசாங்கத்தின் ஆணை பதான், மூல்தான், ஹான்சி, லாகூர், அயோத்தி மற்றும் வங்காளம் இங்கெல்லாம் செல்லாதாயிற்று. தாய் இராணியின் செயல்களால் மன வெறுப்பு மேலிட்ட டில்லிப் பிரபுக்கள் அவரைச் சிறையிலடைத்து ரசியாவை டில்லி அரியணையிலமர்த்தினர். ருகன்-உத்-தீன் ஃபெருஸ் கிலோகரியில் தஞ்சம் புகுந்திருந்தார். ஆயினும், அவரும் சிறையிலடைக்கப்பட்டார். அங்கேயே கி.பி. 1236 நவம்பர் 9-ல் அவர் இறந்தார்.

இராணியை எதிர்நோக்கியுள்ள அலுவல் எளிதானதன்று. இராச்சியத்தின் முதலமைச்சரான மகமது ஜுனைதியும் மற்றும் சில பிரபுக்களும் ஒரு பெண்ணின் ஆட்சியுடன் இணைய முடியவில்லை. ஆகவே, அவருக்கு எதிராக ஓர் அமைப்பை உருவாக்கினர்; ஆனால், ஆட்சியாளருக்கு வேண்டிய தகுதிகள் ஒன்றும் ரசியாவிடம் குறைவில்லை. மேலான அரசியல் தந்திரத்தாலும் உறுதியான நடவடிக்கையாலும் விரைவிலேயே தம் எதிரிகளை அடக்கினர். இந்துஸ்தானத்திலும் பஞ்சாபிலும் அவர் ஆட்சி ஏற்பட்டது. வங்காளம், சிந்து ஆகிய தொலைவிலுள்ள மாகாணக் கவர்னர்களும் இவரது ஆதிக்கத்தை ஒப்புக்கொண்டனர். மின்ஹாஜ்-உஸ்-சிராஜ் இவ்வாறு கூறுகிறார். 'லக்னுட்டியிலிருந்து தேபால் தமரில்லா வரையிலும் எல்லா மாலிக்குகளும் அமீர்களும் தங்கள் பணிவையும், கீழ்ப்படிதலையும் வெளிக்காட்டினர்.' ரசியாவின் ஆட்சிக் காலத் தொடக்கத்தில் சிராமிட்டா, முலாகிதா மதப்பிரிவைச் சேர்ந்த சில வெறியாளர்கள் துன்பம் விளைவிக்கவென்றே திட்டமிட்ட முயற்சி செய்தனர். இவர்களுக்குத் தலைவன் நூர் உதீன் என்ற துருக்கர். அவர்களுள் ஓர் ஆயிரவர் கத்தி கேடயங்களுடன் ஒரு குறிப்பிட்ட நாளில் பெரிய மசூதியில் நுழைந்தனர். ஆனால், அரசாங்கத் துருப்புகள் அவர்களைக் கலைத்து விரட்டின. இந்த எழுச்சி ஒரு கேலிக்கூத்தாக முடிந்தது.

ஆயினும், அமைதியான ஆட்சியைக்கொண்டு மகிழ இராணிக்கு விதி இடமளிக்கவில்லை. அபிசீனிய அடிமை ஜலாலுதீன் யாகுட் என்பவருக்கு இவர் காட்டிய மிதமிஞ்சிய

தயவினால் துருக்கப் பிரபுக்கள்[1] மன வருத்தமுற்றனர். மேலும் இராணி அவரைச் சமீபத்தில் லாயங்களுக்குத் தலைவராக வேறு நியமித்தார். துருக்கப் பிரபுக்கள் தங்களுக்குள் மிகவும் நெருங்கி ஒன்றுபட்டனர். வெளிப்படையாக முதலில் புரட்சி செய்தவர் சார்ஹிந்த் கவர்னரான இக்தியாருதீன் அல்டூனியா. இவரைப் புரட்சியில் இறங்கும்படி அரண்மனையைச் சார்ந்த சில பிரபுக்கள் தூண்டிவிட்டனர். இக் கலகத்தை அடக்க வேண்டி இராணி ஒரு பெரும்படை கொண்டுசென்றார். ஆயினும், நேரிட்ட கைகலப்பில் புரட்சி செய்த பிரபுக்கள் யாகுட்டைக் கொன்று வீழ்த்தி அவரைச் சிறைப்பிடித்தனர். அவரை அல்டூனியாவின் பாது காவலில் வைத்துவிட்டு, அவருடைய சகோதரன் முயிசுதீன் பஹராம் டில்லிச் சுல்தானாகப் பிரகடனம் செய்யப்பட்டார். இந்த இக்கட்டான நிலையிலிருந்து தம்மை விடுவித்துக் கொள்ள வேண்டி அல்டூனியாவை மணம் செய்துகொள்ள ரசியா முயன்றாள். ஆனால், பயன் ஒன்றும் ஏற்படவில்லை. தம் கணவருடன் டில்லி நோக்கிப் படையெடுத்தார். ஆனால், கைத்தாலுக்கு அருகில் வரும்பொழுது அல்டூனியாவுடன் சேர்ந்தவர்கள் அவரை விட்டு நீங்கிவிட்டனர். இதனால், அவர் கி.பி. 1240-ல் அக்டோபர் 13ஆம் நாள் முயிசுதீன் பஹாராமினால் தோற்கடிக்கப்பட்டார். அவரும் அவர் கணவரும் மறுநாள் கொலை செய்யப்பட்டனர். மூன்றாண்டுக் கால ஆட்சிக்குப் பிறகு இராணி ரசியாவின் ஆயுள் பரிதாபகரமாக முடிவுற்றது.

பாராட்டத்தக்க பல திறமைகளை ரசியா பெற்றிருந்தார். 'குர் ஆனைத் தக்க உச்சரிப்புடன் இவர் படித்தார். தம் தகப்பனின் ஆயுள் காலத்திலேயே இவர் அரசாங்க அலுவல்களில் ஈடுபட்டார்' என்று பெரிஷ்டா கூறுகிறார். இராணியாக இருக்கையில் தம் நற்குணங்கள் செவ்வனே துலங்கும் வகையில்

[1] இபன் பதூதா, இவர் அந்த அபிசீனியன்பால் வைத்திருந்த அன்பு கொடுங் குற்றம் என்று தவறாகக் கூறுகிறார். அக்காலத்திய முஸ்லிம் சரித்திர ஆசிரியர் மின்ஹாச் அவ்வாறான குற்றச்சாட்டைக் கூறவே இல்லை. அவர் அந்த அபிசீனியன் சுல்தானின் தனி அன்பைப் பெற்றார் என்று மட்டுமே கூறுகிறார். (ரேவர்ட்டி வால்யூம் I. பக்கம் 642) பெரிஷ்டா குற்றம் சாட்டுவதெல்லாம் இராணிக்கும் அபிசீனியனுக்கும் இடையில் மிக நெருங்கிய பழக்கம் இருந்தது. என்றும் அவர் சவாரி செய்ய முற்படுகையில் இவர் அவரைத் தம் கையால் தூக்கிக் குதிரைமீது அமர்த்துவார் என்கிறார் (பிரிக்ஸ் வால்யூம் I, பக்கம்220) மேஜர் ரேவர்ட்டி கூறுவது போல் தோமஸ் இந்த ராணியின் நடத்தையில் வேண்டுமென்று குற்றம் கற்பித்துள்ளார். அவர் கூறுவது பின்வருமாறு: 'கன்னியான இராணி காதல் புரியக்கூடாது என்பது அன்று தமக்குப் பிடித்தமான கீழ்ப்படியக்கூடிய அரசகுமாரனுடன் உறவு கொள்ளலாம்: அன்றி அரண்மனையில் அந்தப்புரத்தில் கட்டுக்கடங்காமல் இன்பத்தில் திளைக்கலாம். ஆனால், நிலையற்ற அன்பு தவறான இடத்தில் செலுத்தப்பட்டது. அதனால் அவர் தம் சபையில் கீழ்த்தர உத்தியோகஸ்தனான அபிசீனியனை விரும்பும் படியாயிற்று. இதைத் துருக்கியப் பிரபுக்கள் ஒருமுகமாக வெறுத்தனர்'. (கிரானிகல் ஆப் பதான்கிங்ஸ், பக்கம் 106)

முயன்றார். இவர் காலத்திய வரலாற்று ஆசிரியர் மின்ஹாஜ்-உஸ் சிராஜ் கருத்துப்படி இவர் 'ஒரு பெரிய அரசி. அறிவாற்றலும், நேர்மையும், தயாளமும் நிரம்பியவர். கல்விமான்களை ஆதரித்தும், நீதி வழங்கியும், தம் குடிகளைப் பேணி ஆதரித்து வந்தார். போர்க்குணங்கள் நிரம்பியும் மற்றும் அரசர்க்குத் தேவையான எல்லாத் தகுதிகளுடன் புகழத்தக்க நற்பண்புகள் அமையப் பெற்றும் விளங்கினார். தம் பகைவர்மீது போருக்குச் செல்கையில் தாம் உடன் சென்றார். பெண் உடைகளையும் முக மூடிகளையும் நீக்கிப் போர் வீரனின் உடை பூண்டு ஆண் மகனின் தலையுடையுடன் விளங்குவார். தர்பாரில் அமர்ந்து அரசியல் அலுவல்களைத் தக்க திறமையுடன் கவனித்தார். எல்லா வகையாலும் தாம் ஓர் அரசன் என்று தோன்றும்படி முயன்றார். ஆனால், செருக்குமிக்க துருக்கியப் பிரபுக்கள் பெண் ஒருத்தியின் ஆட்சியில் மனமொப்பி அமைய விரும்பாமல் அவமான முறையில் அவர் ஆட்சியை முடித்தனர். ரசியாவின் பரிதாபகரமான முடிவு பொது மக்களின் தப்பு அபிப்பிராயத்தை வெல்வது எப்போதும் மிகவும் எளிதன்று என்பதைத் தெளிவாகக் காட்டுகின்றது.

ரசியாவின் மறைவிற்குப் பிறகு ஒழுங்கீனமும் குழப்பமுமான தொரு காலம் நீடித்தது. அவருக்குப் பின்னர் டில்லியில் அரசு செய்த முயுசுதீன் பஹராமும் அலாவுதீன் மசூதும் தகுதியும் மதிப்பும் அற்றவர்கள். ஆறாண்டுக் கால அவர்களது ஆட்சியில் நாடு சமாதானத்தையும் அமைதியையும் அறியவில்லை. வெளியார்களின் படையெடுப்பு இந்துஸ்தானத்தின் இன்னல்களை மேலும் அதிகமாக்கியது. கி.பி. 1241-ல் மங்கோலியர்கள் பஞ்சாபின் உள்பகுதியில் நுழைந்தனர். அழகிய லாகூர் நகரம் அவர்களின் இரக்கமற்ற பிடியில் சிக்கியது. கி. பி. 1245-ல் அவர்கள் உச் வரையில் முன்னேறினர். பெருத்த நஷ்டத்துடன் அவர்களைப் பின் தள்ள வேண்டியதாயிற்று. மசூதுஷாவின் ஆட்சி இறுதியில் வெறுப்பு அளவிலும் தீவிரத்திலும் அதிகமாயிற்று. கி. பி. 1246 ஜூன் பத்தாம் நாளில் அமீர்களும் மாலிக்குகளும் சேர்ந்து இல்டுட்மிஷ் இளையமகனான நாசருதீன் மகமது என்பவரை அரியணையில் அமர்த்தினர்.

## 4. நாசருதீன் மகமது

நாசருதீன் நல்லெண்ணமும் பக்தியுமுடையவர். தம்முடைய ஓய்வு நேரங்களைத் திருக்குரானைப் பிரதி செய்வதில் கழித்து வந்தார். அவரும் கல்வியாளர்களை ஆதரிப்பவராயிருந்தார். மின்ஹாஜ் உஸ் சிராஜ் சுல்தான்கீழ் ஓர் உயர் பதவி வகித்தார்.

சுல்தானிடம் பல விலை உயர்ந்த பரிசுகளைப் பெற்றார். தாம் எழுதிய தபாவொட்-இ-நசிரி (Tabaqat-i-Nasiri) என்னும் நூலை அரசனுக்கு அர்ப்பணித்தார்.

அவர் பட்டமெய்திய காலத்திலிருந்த சிக்கலான சூழ் நிலைக்கு ஈடு கொடுக்கும் வகையில் ஓர் அரசருக்குத் தேவைப்பட்ட திறமையை நாசருதீன் பெற்றிருக்கவில்லை. அவருடைய அமைச்ச ரும் பின்னர் அவரது உதவியாளருமான கியாஸ் உதீன் பால்பன் என்பவரே உண்மை அதிகாரத்தையெல்லாம் மறைவாக வகித் தவர். தம்மீது அரசர் வைத்திருந்த நம்பிக்கைக்குத் தகுந்தபடி பால்பன் நடந்துவந்தார். உள்நாட்டுக் கலகங்கள் வெளிநாட்டுப் படையெடுப்புகள் இவற்றினின்றும் நாட்டைப் பாதுகாக்கத் தம்மால் ஆனமட்டும் முயன்றார். மங்கோலியர்கள் விரட்டியடிக்கப் பட்டனர். தோ ஆப் மற்றும் அரசின் பல பகுதிகளிலும் கலகக்கார ராசாக்களையும் சமீந்தாரர்களையும் அச்சுறுத்தித் தண்டிக்கும் பொருட்டுப் பல படையெடுப்புகள் செய்யப்பட்டன. பால்ப னுக்குப் பகைவர்களான சில பிரபுக்கள் கி.பி. 1253-ல் பால்பனை நாடு கடத்தும்படி சுல்தானை தூண்டிவிட்டனர். ஆனால், அப் பகை வர்கள் இராச்சியத்தின் அலுவல்களைச் சீர்கேடாக நடத்தினர். எனவே, பால்பன் கி. பி. 1255-ல் திரும்ப அழைக்கபட்டு உன்னதப் பதவியில் மீண்டும் அமர்த்தப்பட்டார். நாசருதீன் மகமது கி. பி. 1266 பிப்ரவரி 18-ல் ஆண் வாரிசு ஒன்றுமின்றிக் காலமானார். இவ்வாறு இல்டுட் வமிசம் முடிவுற்றது. தமக்குப் பின் வாரிசு என்று சுல்தான் நியமித்ததாகக் கருதப்படும் பால்பன் அரியணை ஏறினர். பால்பனின் திறமை நன்கு தெரிந்திருந்தபடி யால் பிரபுக்களும் அதிகாரிகளும் அதற்கு மனம் ஒப்பினர்.

## 5. கியாஸ் உதீன் பால்பன்

டில்லி அரியணையில் வீற்றிருந்த தம்முன் ஆட்சி செய்தவர் களைப் போன்று பால்பனும் புகழ்மிக்க துருக்கி ஸ்தான இல்பாரி வமிசத்தின் வழியில் வந்தவர். சிறு வயதில் இவர் மங்கோலியர் களால் சிறைப் பிடிக்கப்பட்டு அடிமையாகப் பாக்தாத் நகருக்குக் கொண்டு செல்லப்பட்டார். பஸ்ஸரோ நகரைச் சேர்ந்த அறிவும் பக்தியும் நிரம்பப்பெற்ற குவாஜா ஜமால் உதீன் என்பவரால் அவர்களிடமிருந்து இவர் விலைக்கு வாங்கப்பட்டார். தம் மற்ற அடிமைகளுடன் இவரையும் கி. பி. 1232-ல் டில்லிக்கு காஜா ஜமால் உதீன் கொண்டு சென்றார். இவர்கள் எல்லாரையும் சுல்தான் இல்டுட்மிஷ் விலைக்கு வாங்கினர். இவ்வாறு பால்பன் சுல்தானின் புகழ்மிக்க நாற்பது துருக்கிய அடிமைக் குழுவில் ஒருவ

ரானுர். முதலில் இவர் இல்டுட்மிஷினுல் காஸ்டார் (Khasdar) பதவிக்கு (அரசனின் சொந்தக் காவலாளன்) அமர்த்தப்பட்டார். தம் திறமை, தகுதி காரணமாகப் படிப்படியாக உயர் பதவிகளையும் பட்டங்களையும் பெற்று முடிவில் நாசருதீன் மகமதுவின் உதவியாளராக நியமனம் பெற்ருர். தம் மகளையும் கி. பி. 1249-ல் சுல்தானுக்கு மணம் முடித்தார்.

முடிபுனைந்ததும் கடினமானதும் வெல்வதற்கரியது மான தொரு செயல் இவர் முன் நின்றது. இல்டுட்மிஷ் மரித்தபின் தொடர்ந்த முப்பது ஆண்டுக்காலத்தில் அவருக்குப்பின் ஆண்ட திறமையற்றவர்கள் செயலால் அரசியல் அலுவல்கள் யாவும் குழப்பத்தில் ஆழ்ந்தன. டில்லி சுல்தானின் கருவூலம் அநேகமாக வறண்டு போயிற்று. அதன் பெருமை மிகவும் குன்றியது. ஆனுல், துருக்கியப் பிரபுக்களின் பேராசையும் வீண் பெருமையும் மேலோங்கி நின்றன. சுருக்கமாகப் பார்னி எழுதியதுபோல, நல்ல அரசாங்கத்தின் ஆதாரமும் எந்த ஆட்சியின் பெருமைக்கும் புகழுக்கும் ஊற்ருன அரசியலிடம் பயம் என்பது மக்களின் மனத்தினின்று அறவே மறைந்துவிட்டது. நாடு மிக்க கேவல நிலையை அடைந்துவிட்டது.' உள்நாட்டில் ஏற்பட்ட பொக்கிஷ வறட்சியுடன் திரும்பத்திரும்ப ஏற்படும் மங்கோலிய படையெடுப்பின் இன்னல்களுக்கும் டில்லி அரசு உட்பட்டது. அந்த நேரத்திற்குத் திறமையான சர்வாதிகாரி தேவையாக இருந்தது.

பால்பன் ஒரு திறமை வாய்ந்த நிருவாகி. நீண்ட காலமாக இராச்சியம் அனுபவித்து வந்த இன்னல்களைக் களைவதில் பால்பன் ஆவலுடன் தம்மை நியமித்துக் கொண்டார். தம் அரசாங்கம் நிலைபெறுவதற்குத் திறமையும் வலுவுமிக்க இராணுவம் முதல் தேவை யென்பதைச் சரியாகப் பால்பன் உணர்ந்துகொண்டார். படையினரைச் சீர்திருத்தி அமைக்கும் வேலையில் ஈடுபட்டார். புதிய, பழைய குதிரைப் படையினரும் காலாள் படையினரும் திறமையும் நம்பிக்கையும் உடைய அதிகாரிகளின் பார்வையில்' (மாலிக்) விடப்பட்டனர். டில்லி, அதன் சுற்றுப்புறங்கள், தோஆப் ஆகிய பகுதிகளில் ஒழுங்கை நிலைநாட்டத் தம் கவனத்தை அடுத்தபடியாகத் திருப்பினுர். இப் பகுதிகள் கடந்த முப்பது ஆண்டுகளாகத் திறமையற்ற ஆட்சியின் விளைவாக, மீவாட் (ஆள்வாரைச் சூழ்ந்துள்ள மாவட்டங்கள்) இராசபுத்திரர்களின் அடாத படையெடுப்புகளுக்கும் பல கொள்ளைக் கூட்டத்தினர்களின் படையெடுப்புகளுக்கும் இலக்காகியிருந்தன. உயிர், உடைமை, வாணிகம் யாவும் பாதுகாப்பற்று இருந்தன. டில்லியின் சுற்றுப்புற வனங்களிலிருந்து மீவாட் இராசபுத்திரர்களை

சுல்தான் விரட்டியடித்தார். அவர்களுள் பலரை வாளுக் கிரையாக்கினார். பிற் காலத்தில் ஏற்படக்கூடிய தொல்லை களுக்கான பாதுகாப்பு நடவடிக்கையாகக் கோபால்கிர் என்னும் இடத்தில் ஒரு கோட்டையைக் கட்டி டில்லிக்கு அருகில் ஆஃப்கானிய உத்தியோகஸ்தர்கள் தலைமையில் பல காவல் நிலையங்களை ஏற்படுத்தினார். மறு ஆண்டில் (1267) தோ ஆப்பில் கொள்ளைக் கூட்டத்தினரை அடக்கினார். தாமே அவர் களுடைய பாதுகாப்பு இடங்களான காம்பி, பாட்டியாலி, போஜ்பூர் இடங்களுக்குக் குதிரையில் ஏறிச்சென்றார். அவ் விடங் களில் வலுவான அரண்களை அமைத்து ஜலாலிக் கோட்டை யையும் பழுது பார்த்தார். இவ்விதமாக ஒழுங்கும் பாதுகாப்பும் மீண்டும் ஏற்படுத்தப்பட்டன. அறுபது ஆண்டுகளுக்குப் பின் பார்னி இவ்வாறு கூறினார். 'இதன் பிறகு சாலைகள் திருடர் பயமற்று விளங்கின.' அதே ஆண்டில் கேத்சர் (Katehr) (இப்பொழுது ரோகில்கண்டிலுள்ள) என்னுமிடத்தில் கலகக் காரர்களைத் தண்டித்தார். சில நாள்களுக்குப் பிறகு ஜுட் மலை களுக்குச் சென்று அங்குள்ள மலைவாசிகளை ஒடுக்கினார்.

பிரபுக்களின் அதிகாரத்தை ஒடுக்கும் கொள்கையைப் பின் பற்றிப் பால்பன் தோவாப் பகுதியில் நில உடைமையைச் சீர்திருத்த முயன்றார். இங்குள்ள நிலங்கள் இல்டுட்மிஷ் காலத்தி லிருந்து இராணுவ சேவைக்கு ஈடாக 2000 ஷாம்சி (Shamsi) குதிரை வீரர்களால் அநுபவிக்கப்பட்டுவந்தன. பார்னியின் கூற்றிலிருந்து நாம் அறிவது யாதெனில் முதலில் மானியம்பெற்ற மானியதாரர்களில் பலர் இறந்துவிட்டனர். பலர் மூப்படைந்து விட்டனர். அவர்களுடைய சந்ததியார்கள் இந்த மானியங்களைத் தங்கள் பிதிரார்சித்தமாகக் கொண்டு தங்களுடைய பெயர் களை அரிஸ் என்னும் அதிகாரியின் பத்திரங்களில் பதிவு செய்யும் படியாகச் செய்தனர். ஆயினும், மானியத்திற்கீடான இராணுவ சேவை புரிவதைத் தவிர்க்கும் மனப்பான்மை மட்டும் இவர்களி டையே காணப்பட்டது. மிதமான சீர்த்திருத்தங்கள் மூலம் இந்தத் துஷ்பிரயோகத்தை நீக்கப் பால்பன் முற்பட்டார். பழைய மானியங்களை இவர் புதுப்பித்தார் ஆனால் பழையமானிய தாரர்களில் வயது அடைந்தவர்களுக்கு அவர்களின் வயதிற்கு ஏற்றபடி சிறு தொகைகள் வழங்கினார். இது மானியதாரர்களி டையே மனக்கசப்பை ஏற்படுத்தியது. அவர்கள் தங்களுடைய குறைகளை டில்லி கொத்தவால் பக்ருதீன் என்ற மூத்தவரிடம் தெரிவித்தனர். அவர் சுல்தானிடம் மனம் உருகப் பேசி நிலங்களை மீட்டுத்தர இணங்கும்படி செய்தார். இதனால், கருவூலத்தைக் காலிசெய்யப் பழையதொரு வழக்கம் நீடித்தது. விவேகத்தை உணர்ச்சி வென்றது.

உள்நாட்டில் தம் ஆட்சியை உறுதியாகவும் நிலையுள்ளதாகவும் செய்ய முயன்றுவந்த நேரத்தில் மங்கோலியபடையெடுப்பாளர்களிடமிருந்து இந்தியாவின் வடமேற்குப் பகுதிகளைக் காக்கவேண்டுமென்று பால்பன் எண்ணத் தவறவில்லை. மங்கோலியர்கள் கசினி, டிரான்சோக்சியானு ஆகிய இடங்களில் தங்கள் அதிகாரத்தை நிலை நிறுத்திக் காலிப் அல்முட்டாஸிம் என்பவரைக் கொன்று பாக்தாதைக் கைப்பற்றியபின், பஞ்சாப் சிந்துப் பகுதிகளில் முன்னேறலாயினர். கி. பி. 1271ஆம் ஆண்டில் சுல்தான் லாகூருக்குச் சென்று மங்கோலிய படையெடுப்புகளால் அழிந்து போன அதன் கோட்டையைத் திருத்தி அமைக்கப் பணித்தார். நீண்ட காலமாக சுல்தானின் உறவினரான ஷெர் கான் சுன்கார் மங்கோலியர் உள் நுழைவதற்குப் பெருந்தடையாக விளங்கினுர். இவர் அரசாங்கத்தின் தலைசிறந்த ஊழியர் பாட்டின்டா, பாட்னயர் சமானு, சுனும் பிரதேசங்களில் உரிமை கொண்டிருந்தார். ஆனுல், அவர் 'நாற்பதில்' ஒருவராக இருந்த படியாலும், தம் பட்டமேற்புக்குப் பின் இதுவரை அவர் டில்லிக்கு வருவதைத் தவிர்த்திருந்த படியாலும் சுல்தான் அவரிடம் ஐயம் கொண்டார். இது சமயம் அவர் மரித்துப் போனுர். 'சுல்தானே இவருக்கு நஞ்சூட்டும்படி செய்தார்' என்று பார்னி எழுதுகிறுர். பார்னியின் கூற்று உண்மையாக இருக்குமாயின் பால்பனின் செயல் நன்றன்று என்பதுடன் அரசியல் விவேகமற்றதுமாகும். எல்லைப்புறங்களை மெச்சும் வகையில் திறமையுடன் இவர் பாதுகாத்து வந்தார். மேலும், பல அடங்காப்பிடாரிகளான ஆதிவாசிகளையும் இவர் கட்டுப்படுத்தியிருந்தார். இவர் மரணம் மங்கோலியர்களுக்கு எல்லைப்புறத்தைத் தாக்கி அழிக்க ஊக்கியது. அவர்களுடைய அட்டூழியங்களைத் தடுத்து நிறுத்தும்படியாகச் சுல்தான் தம் மூத்த மகன் இளவரசர் மகமதுவை (கானிஷாகிட் என்று நன்கு தெரிந்த உயிர் நீத்த தியாகி) மூல்தான் கவர்னராக நியமித்தார். இளவரசான மகமது அடக்கமான குணம் உடையவர் இவரிடம் திறமையும் வீரமும் நிரம்பியிருந்தன. மேலும், இவர் கல்வியாளர்களை ஆதரிப்பவராகவும் இருந்தார். அதே சமயம் சுல்தான் தம் இரண்டாவது மகனுன பக்ராகானைச் சமானு, சுனும் பிரதேசங்களுக்கு அதிபதியாக்கி, மொகலாயர் படையெடுப்புகளைத் தடுத்து நிறுத்தும் வகையில் தம் இராணுவத்தை வலுப்படுத்தவும் இவரிடம் உத்தரவிட்டிருந்தார். கி.பி. 1279 வாக்கில் மங்கோலியக் கொள்ளைக்கூட்டத்தினர் தங்கள் படையெடுப்புகளை உண்மையாகவே தொடங்கி, சட்லெட்ஜ் நதியையும் கடந்துவிட்டனர். ஆனுல், மூல்தானிலிருந்து வந்த இளவரசர் மகமது சமானுவிலிருந்து வந்த மாலி முபராக் பெக்கு டார்ஸ் இவர்களுடைய கூட்டுப் படையால் மங்கோலியர் நன்கு

முறியடிக்கப்பட்டனர். இவ்வாறு மங்கோலிய படையெடுப்பின் இன்னல் தற்காலிகமாகத் தடுக்கப்பட்டது.

அதே ஆண்டில் வளமிக்க வங்காள மாகாணத்திலிருந்து மற்றோர் அபாயம் பால்பனை அச்சுறுத்திற்று. வங்காளக் கவர்னர்கள் டில்லி அதிகாரத்தை மீறுவதற்குத் தொலைவு ஒரு தூண்டுதலாக இருந்தது. குறிப்பாகத் திறமையற்ற மன்னர்களாட்சியில் இது அதிகம் நடைபெற்றது. சுல்தானின் உதவியாளராக வங்காளத்தில் ஆட்சி புரிந்த டக்ரில்கானின் கலகமே இப் புது அபாயம். டக்ரில்கான் திறமையும், ஊக்கமும், தயாளமும் உடைய துருக்கியர். வங்காளத்தில் அவருடைய ஆட்சி வெற்றியுடன் விளங்கியது. ஆயினும், பேராசை அவரை விரைவில் ஆட்கொண்டது. சுல்தானின் முதுமையும் வடமேற்கு எல்லையில் மீண்டும் மீண்டும் ஏற்பட்ட மங்கோலிய படையெடுப்பும் சில போதனையாளர்கள் தூண்டுதலும் சேர்ந்து இவரைக் கலகக் கொடியை உயர்த்தத் தூண்டின.

டக்ரில்கானின் கலகம் பால்பனைப் பெரிதும் கலக்கியது. விரைவிலேயே ஒரு பெரும் படையை அமீர்கான் என்று பட்டம் பெற்ற அல்ப்டிஜன் முயூ-இ-தராஸ் (Mu-i-daraz) (நீண்ட மயிருடைய) தலைமையில் வங்காளத்திற்குப் பால்பன் அனுப்பினார். ஆனால், கலகக்கார கவர்னரால் அமீர்கான் தோற்கடிக்கப் பட்டார். அவருடைய வீரர்களுக்குத் திரண்ட பணத்தைக் கொடுத்துப் பலரைத் தம்பக்கம் சேர்த்துக்கொண்டார். அமீர் கானுடைய தோல்வியால் கடுஞ் சினமுற்ற சுல்தான் அவரை டில்லிக்கோட்டை வாயிலில் தூக்கிலிடும்படி உத்தரவிட்டார். அடுத்த ஆண்டில் (1280) மாலிக் தக்ரியின்கீழ் வங்காளத்திற்கு மற்றொரு படை அனுப்பப்பட்டது. இந்தப் படையுங்கூட டக்ரில்கானால் விரட்டியடிக்கப்பட்டது. நிலைமை இவ்வாறு மாறுவதைக் கண்டு பெருவேதனை கொண்ட பால்பன், 'தம் கவனம் சக்தி முழுவதையும் டக்ரில்கானைத் தோற்கடிக்கும் முயற்சியில் செலுத்தினார்' தாமே மேற்கு வங்காளத் தலைநகரான லக்நாடிக்கு வலிமைமிக்க படையுடனும் தம் மகன் பக்ராகானுடனும் செல்லத் தீர்மானித்தார். இதற்குள்ளாகப் பெருஞ் சினத்துடன் சுல்தான் வருதலை அறிந்த டக்ரில்கான் லக்நாடியை நீங்கி ஜாஜ்நகர் காட்டிற்குள் ஓடிவிட்டார். ஓடிப்போன கலகக் காரரையும் அவர் கூட்டாளிகளையும் துரத்திக்கொண்டு சுல்தான் கிழக்கு வங்காளத்தில் நுழைந்தார். தற்செயலாகக் கலகக் காரர்களை சுல்தானின் உடன் வந்த ஷேர்ஆண்டஸ் கண்டு பிடித்தார். உடன் வந்தவர்களுள் ஒருவரான மாலிக் முகாஇர்

ஒரே அம்பினால் டக்ரீல்கானை வீழ்த்தினர். அவர் தலை துண்டிக்கப் பட்ட பிறகு, உடல் நதியில் வீசியெறியப்பட்டது. அவருடைய உறவினர்களும் படையினர் பலரும் கைது செய்யப்பட்டனர். லக்நாடிக்குத் திரும்பியதும் டக்ரில்கானின் உறவினர்களுக்கும் அவருடன் சேர்ந்தவர்களுக்கும் பிறர்க்கு எடுத்துக்காட்டாக விளங்கும்படியான தண்டனைகளை விதித்தார். வங்காளத்தை விட்டு நீங்குமுன் தம்முடைய இரண்டாவது மகன் பக்ராகானை அந்த இராச்சியத்தின் கவர்னராக நியமித்து இன்பங்களில் ஈடு படாமல் அரசாட்சி செய்வதில் அதிக கவனமாக இருக்கும்படி அறிவுறுத்தினர்.

விரைவிலேயே சுல்தானுக்குப் பெரிய கேடு விளைந்தது. கி.பி. 1285-ல் மங்கோலியர் தமார் என்ற தங்கள் தலைவர் தலைமையில் பஞ்சாபின்மீது படைகொண்டு சென்றனர். மூல்தானின் காவல ராக நியமிக்கப்பட்டிருந்த சுல்தானின் மூத்தமகன் மகமது லாசூரையும் திபால்பூரையும் நோக்கி விரைந்தார். மங்கோலியர் களுடன் விளைந்த சண்டையில் கி.பி. 1285 மார்ச்சு 4-ல் ஒரு மறைந் திருந்த தாக்குதலில் கொல்லப்பட்டார். இவ்வாறு தம் உயிரைத் தியாகம் செய்த அவருக்கு இறந்த பின்னர் ஷாகித் (உயிர்த் தியாகி) என்ற பட்டம் கிட்டியது. சிறந்த தம் மகனின் மரணம் எண்பது வயதான கிழட்டுச் சுல்தானுக்குப் பெரியதொரு அதிர்ச்சியைக் கொடுத்தது. மீளாத் துக்கத்தில் அது அவரை ஆழ்த்தி அவரது மரணத்தையும் விரைவுபடுத்தியது. முதலில் தமக்குப் பின்னர், ஆட்சியேற்க பக்ராகானை நியமிக்க எண்ணி னர். ஆனல், அம் மகன் அரசுரிமையின் பொறுப்புகளை ஏற்கத் தயங்கியதால் தம் பேரனை கைகுஸ்ராவ் என்பவரை நியமிக்கும் படி ஆயிற்று. கி. பி. 1287ஆம் ஆண்டு இறுதியில் பால்பன் இருபத்திரண்டாண்டு ஆட்சிக்குப் பின் உயிர் நீத்தார்.

முன்னரே குறிப்பிட்டபடி பால்பன் அரியணை ஏறிய காலத் தில் டில்லி அரசுக்குப் பல இடுக்கண்களும் அபாயங்களும் இருந்து வந்தன. இவற்றைக் கார்லைலின் கூற்றுப்படி மொழிவதாயின் ‘பன்னீர், தண்ணீர், ரணசிகிச்சையால்’ எளிதாக நீக்க முடியாது. ஆகவே, நாட்டின் விரோதிகள் எனக் கருதப்பட்டவர்களிடத்தில் சுல்தான் மிகு கடுமையும் உறுதியும் நிறைந்த நடவடிக்கைகளைக் கைக்கொண்டார். பேராசை கொண்ட பிரபுக்கள், கலகக்கார குடிமக்கள், ஒழுங்கற்ற கூட்டத்தினர் இவர்கள்மீது எடுத்த உறுதி யான நடவடிக்கைகளாலும், மங்கோலியர்களின்மீது நீங்காத விழிப்புடன் இருந்தமையாலுமே டில்லி அரசை அதை எதிர் நோக்கியிருந்த சிதைவினின்றும் காப்பாற்றி அதற்கு உறுதியும்

திறமையும் அளித்துக் காத்த பெருமை பால்பனையே சாரும் என்பதை ஒப்புக்கொண்டேயாக வேண்டும். ஆயினும், இரு செயல்களில் மட்டும், அதாவது ஷெர்கானையும் அமீர்கானையும் ஒழித்துக் கட்டுவதில் விவேகம், தீர்க்கதரிசனம் இவற்றைச் சினமும் ஐயமும் மேற்கொண்டன எனக் கூற வேண்டும். அமீர் கானின் இறப்பைப் பற்றிப் பார்னி பின்வருமாறு கூறுகிறார்: 'கொடிய இத் தண்டனை அக் கால அறிவாளிகளிடையே கடுமையான எதிர்ப்பு உணர்ச்சியைத் தூண்டியது. இது பால்பனின் ஆட்சி முடிவை நெருங்குகின்றது என்பதற்கான அறிகுறி என்று அவர்கள் கருதினர்,'

டில்லி ஆட்சியின் பெருமையையும் கம்பீரத்தையும் உயர்த்துவதில் பால்பன் தம்மால் இயன்றதை யெல்லாம் செய்தார். அவர் அரியணை ஏறியபின் கண்ணியமான வாழ்க்கை முறையை மேற்கொண்டார். பண்டைப் பாரசிக மன்னர்களின் அவைக்களம் போலவே தம் அரசியல் மண்டபத்தைத் திருத்தியமைத்தார். தம் அவையில் பாரசிக சம்பிரதாயங்களையும், ஆடம்பரங்களையும், ஒழுங்கையும் ஏற்படுத்தினார். அவரது ஆட்சியில் டில்லி அரசியல் மன்றம் பெருமிதம் பெற்று விளங்கியது. மத்திய ஆசியாவினின்றும் நாடு கடத்தப்பட்ட பல (பதினைந்திற்குக் குறைவில்லை) அரசர்களுக்குப் புகலிடமாக விளங்கியது. புகழ் பெற்று வரும் 'இந்தியக் கிளி' என அழைக்கப்பட்டவருமான கவி அமீர் குஸ்ராவ் பால்பன் காலத்தவர். அரச பதவியைப்பற்றி உன்னத நோக்கம் கொண்டவர் பால்பன் தம்முடைய அந்தரங்க ஊழியர்கள் முன்னிலையில்கூட அவர் பூரணமான அரசியல் உடையுடன் விளங்கினார். உயர்ந்த பதவிகளினின்று எளிய குடும்பத்தைச் சேர்ந்தவர்களைத் தவிர்த்தார்.

அரசரை ஆண்டவனின் பூவுலகப் பிரதிநிதியாகவே பால்பன் கருதினார். ஆனால், தமக்குரிய கடமைகளைச் சரிவர நிறைவேற்றினால்தான் அரசபதவியின் பெருமையை நிலை நாட்ட முடியும் என்று பால்பன் நம்பினார். மதத்தைப் பாதுகாப்பது, ஷாரியத்தில் கூறப்பட்ட விதிகளின் படி பாவமான ஒழுங்கீனச் செயல்களைத் தடுப்பது, உத்தியோகங்களில் கடவுள் நம்பிக்கையுள்ளவர்களை நியமிப்பது, எல்லாருக்கும் பொதுவாக நீதி வழங்குவது இவையே அவர் குறிக்கோள்களாகும். 'கொடியவர்களின் கொடுமைகளை நசுக்குவதும் சட்டத்தின் முன் யாவரும் சமம் என்பதுமே நான் செய்யக் கூடியது. என் குடிகளை இன்பமாகவும் வளமாகவும் செய்வதிலேயே அரசாட்சியின் பெருமை நிலைத்துள்ளது' என்று ஒரு சமயம் அவர் கூறினார். உறுதியான நியாய

உணர்வு உடையவரான இவர் பாரபட்சமின்றி நடுவு நிலைமையுடன் நீதி வழங்கினார். அடிக்கடி தம் ஆட்சியில் நடைபெறும் சம்பவங்களை உடனுக்குடன் தமக்குத் தெரிவிக்கும்படியாக நாடெங்கிலும் பல ஒற்றர்களை அவர் நியமித்திருந்தார்.




சுல்தான் பால்பனது வாழ்க்கை உள்நாட்டு இன்னல்களையும் வெளியிடத்து ஆபத்துக்களையும் எதிர்த்துப் போராடும்படியாக

ஏற்பட்டது. எனவே, நாட்டின் எல்லைகளைப் பெருக்க வேண்டிய போர்நடவடிக்கைகளை மேற்கொள்ளும் வாய்ப்பு அவருக்குஏற்படவில்லை. அவருடைய அவையினர் இதற்காக அவரைத் தூண்டினும் அவர் குழப்பங்களைச் சாந்தப்படுத்தல், அரசைநிலைப்படுத்திப் பாதுகாத்தல் இவற்றோடு அமைந்துவிட்டார். வாழ்க்கையில் பல துறைகளையும் உள்ளடக்கி விரிவான அரசியல்சீர்திருத்தங்களைச் செய்யவும் அவர் முற்படவில்லை. உண்மையில் அவர் ஒரு சர்வாதிகார ஆட்சியை நிலைநாட்டினார். அரசருடைய வலிமையைப் பொறுத்தேஅது நிலைபெற்று விளங்க வேண்டியதாயிற்று.

## 6. அடிமை வமிசம் எனப்பட்ட இவ்வமிசத்தின் முடிவு-கைகுபாத்

அரசியல் நிலைபெறுதலைப் பற்றி முன்னர்க் கூறியது எவ்வாறு உண்மையானதென்பது பால்பனின் அரசுரிமை பெற்ற பக்ரா கானின் மகன் கைகுபாதின் வலிமையற்ற ஆட்சியில் நன்கு விளங்கியது. பதினேழு அல்லது பதினெட்டு ஆண்டுகள் நிரம்பப் பெற்ற இவரை இறந்த சுல்தானின் நியமனத்திற்கு மாறாக அரசாங்கப் பிரமுகர்கள் டில்லி அரியணையில் அமர்த்தினர். அவரது இளமைப் பிராயத்தில் அவர் அவரது பாட்டனின் கண்டிப்பான கட்டுப்பாட்டில் வளர்க்கப்பட்டார். அவரது ஆசிரியர்கள் அவரை எச்சரிக்கையுடன் கண்காணித்தனர். ஆகவே, அப் பிராயத்தில் அவர் எந்தப் பெண்ணையும் ஏறெடுத்துப் பார்த்ததும் இல்லை. மதுக்கிண்ணத்தையும் சுவைத்தறியார். திடீரென்று ஆட்சியில் அமர்த்தப்பட்டதும் அவருடைய அறிவும் கட்டுப்பாடும் அகன்றன. இன்பச்சூழலில் அவர் முங்கி மூழ்கித் தம்முடைய ஆட்சியைப் பற்றி ஒரு சிறிதும் கவலை கொள்ளாதிருந்தார். டில்லியின் பழைய கொத்தவால் பக்ருதீனின் மாப்பிள்ளையான பேராசை மிக்க நிஜாமுதீன் அதிகாரம் முழுவதையும் தம் கைக்குள் திரட்டினார். அவருடைய செல்வாக்கினால் அரசாங்கத்துப் பழைய அலுவலர்கள் அவமானத்துக்கு உட்படுத்தப்பட்டனர். இராச்சியமெங்கிலும் ஒழுங்கீனமும் குழப்பமும் ஏற்பட்டன. அதிகார மேன்மைக்காகப் போட்டியிட்ட துருக்கியக் கூட்டத்தினர், கில்ஜிப் பிரிவினர் இவர்களின் செயல்களால் நேர்ந்த குழப்பநிலை மேலும் குழம்பியது. மாலிக் ஜலாலுதீன் பிரோஸ் என்பவர் தலைமையில் கில்ஜிகளின் கை மேலோங்கியது. அவர்கள் துருக்கியப் பிரிவைச் சேர்ந்தஅத்திமார் கச்சனையும் (Attimar Kachhan), அத்திமார் சுர்க்காவையும் கொலை செய்தனர். கைகுபாத் உத்தரவின் பேரில் கொலைத் தண்டனையடைந்த கில்ஜிப் பிரபு ஒருவனின் மகனால் கிலோக்ரி அரண்மனைக் கண்ணாடி மாளிகையில் கைகுபாத் கொலையுண்டார். ஏற்கெனவே அவர் கெட்ட

நடத்தைகளால் உடல் நலம் அழிவுற்று இருந்தார். கைகுபாதின் சடலம் யமுனை நதியில் வீசப்பட்டது. கி. பி. 1290 ஜூன் 13ஆம் நாள் பிரோஸ் கிலோரிக் அரண்மனையில் முடிசூடிக் கொண்டார். ஜலாலுதீன் பிரோஸ்ஷா என்ற பட்டமும் சூட்டிக்கொண்டார். கொலையுண்ட சுல்தானின் குழந்தையான கையுமார் என்பவரும் கொல்லப்பட்டார். பால்பனின் அருஞ்செயல்கள் முடிவுற்றன. அவரது வமிசமும் இழிவான நிலையில் முடிவெய்தியது.

## 7. இல்பாரி துருக்கியரது ஆட்சியின் தன்மை

இல்பாரி துருக்கியர்கள் இந்தியாவில் சுமார் எண்பது ஆண்டுக்காலம் ஆட்சி செய்தனர் (1206—1290). ஆனால், அவர்களது ஆட்சியில் டில்லியில் சர்வஜன அரசியல் ஒருமைப்பாடு நிலவவில்லை [1]. தற்காலத்திய ஆக்ரா, அயோத்தி, பீகார், குவாலியர் மற்றும் இராஜபுதனம், மத்திய இந்தியாவின் சில பகுதிகள் அடங்கியபிரதேசங்கள் ஆகியவற்றில்சுல்தானின் ஆட்சிசாதாரணமாக ஒப்புக் கொள்ளப்பட்டது. வங்காள கவர்னர்கள் டில்லி ஆட்சிக்குக் கீழ்ப்படியாமல் சுய ஆட்சி செய்யவே நோக்கங் கொண்டிருந்தனர். பஞ்சாபின்மீது டில்லியின் ஆதிக்கம் மங்கோலியர் படையெடுப்புகளால் அடிக்கடி பாதிக்கப்பட்டது. டில்லியைச் சுற்றியிருந்த பகுதிகளை ஆண்ட குறுந்தலைவர்கள் முஸ்லிம் ஆதிக்கத்தின் பகுதியாக விளங்கினர். ஆயினும் சில சுதந்திரத் தலைவர்களும் டில்லி ஆட்சியில் வெறுப்புக் கொண்ட குடிமக்களும் இருக்கத்தான் செய்தனர். இவர்கள் மத்திய ஆட்சியின் ஆதிக்கத்தை மீறுவதில் நாட்டம் கொண்டிருந்தனர். அடிமை வமிசத்து மன்னர்களின் செயல்கள் முன்னர் கூறப்பட்டது போல் புதிதாக ஆட்சிக்குட்படுத்தப்பட்ட பகுதிகளில் வன்மை வாய்ந்த ஆட்சியை நிலைநாட்டும் பொருட்டுக் கொடுஞ்செயல்கள் செய்வதில் தயங்கவில்லை. ஸ்மித் போன்ற சரித்திர ஆசிரியர்கள் இந்த சுல்தான்களின் குணநலன்களை மதிப்பிட்டதில் நியாயம் குறைவாகக் காணப்படுகிறது. பால்பன் உள்ளிட்ட பல வேந்தர்கள் உறுதியான குணநலன்களுக்குப் பேர்போனவர்கள். கீழ்ப்படிய மறுத்த தலைவர்களை அடக்குவதில் இவர்கள் முனைந்த போதிலும் அவர்களுக்குக் கீழ்ப்படிந்த பல சுதேசவாசிகளுக்கு உயர்ந்த சிவில் இராணுவ உத்தியோகங்களை வழங்கியுள்ளனர். ஸர் உல்ஸிலி ஹெய்க் என்பார் கூறுவதுபோல் 'அடிமைவமிசத்து மன்னர்களின் ஆட்சி இங்கிலாந்து நார்மானிய மன்னர்களது ஆட்சி போன்று நேர்மையும் தயாளமும் நிரம்பியதாகும். ஸ்பெயின் நெதர்லாந்து மன்னர் இரண்டாம் பிலிப்பின் ஆட்சியைக் காட்டிலும் அதிகச் சகிப்புத் தன்மை கொண்டதாக இருந்தது.

[1] கேம்பிரிட்ஜ் சரித்திரம். வால்யூம் III. பக்கம் 87

# 3. கில்ஜிகளும் சுல்தானிய ஆட்சி தெற்கில் பரவியதும்

## 1. ஜலால் உதீன் பிரோஸ்

புதிய கில்ஜி அரசரை டில்லி மக்கள் முதலில் அவர் ஆப்கானிய மரபினர் என்பதற்காக வரவேற்கவில்லை. ஆனால், காலஞ்சென்ற மேஜர் ராவர்ட்டி அவர்கள் கில்ஜிகளை ஆப்கானியர் அல்லது பதானியர் என்று பாகுபடுத்தக் கூடாது என்று நிரூபிக்க முயன்று அவர்களைத் துருக்கியத் தொடர்பு உடையவர்கள் என்று பிரிக்கிறார். ஆயினும், அவர் காலத்திய சரித்திர ஆசிரியர் சியாஉதீன் பார்னி என்பவர் ஜலால் உதீன் துருக்கிய வமிசத்தினின்றும் வேறுபட்டதொரு பிரிவினின்றும் வந்ததாகக் கூறுகிறார். மேலும், அவர் கூறுவதாவது : கைகுபாதின் மரணத்திற்குப்பின் துருக்கியர்கள் சாம்ராச்சியத்தை இழந்துவிட்டனர் என்கிறார். வேறு சில நவீன சரித்திர ஆசிரியர்கள் கில்ஜிகள் முதலில் துருக்கிய வமிசத்தைச் சேர்ந்தவர்கள் என்றும், நீண்ட காலம் அவர்கள் ஆப்கானிஸ்தானத்தில் தங்கிவிட்டபடியால் ஆப்கானியர்களின் குணங்களை மேற்கொண்டுள்ளனர் என்றும், ஆப்கானியர்களுக்கும் அவர்களுக்கும் என்றும் நட்புரிமை நிலவியதில்லை என்றும் கூறுகிறார். எது எவ்வாறு இருப்பினும் அக்காலத்து நிலவிய அரசியல் அமைதியின்மையைப் பயன்படுத்திக் கொண்டு அவர்கள் ஆதிக்கத்தை நிலைநாட்டினர்.

டில்லி மக்களாலும் பிரபுக்களாலும் முதலில் ஜலாலுதீன் அவ்வளவாக விரும்பப்படவில்லை. ஆகையினால் ஆட்சியின் தலைமைப்பீடமாகக் கிலோக்ரியைச் செய்யவேண்டியதாயிற்று. ஆயினும், பார்னி கூறுகிறபடி, 'இவருடைய மேன்மையான குண நலன்களும், நீதியும், தயாளமும், பக்தியும் படிப்படியாக மக்களின் வெறுப்பை நீக்கின. நிலமானியம் அளிக்கப்படும் என்ற நம்பிக்கை பிரபுக்களின் மனத்திலிருந்த வெறுப்பை நீக்கி அவர்களின் ஒத்துழைப்பைப் பெற முடிந்தது. எனினும், இது மனச் சம்மதமின்றியும் முணுமுணுப்புடனுமே விளைந்தது.

[1] ஜே. ஏ.எஸ். பி. 1875, பிரிவு I. பக்கம் 35-7.

புதிய சுல்தான் பட்டத்திற்கு நியமனமானபோது அவர் எழுபது வயது நிரம்பிய முதியவர். 'மறுஉலகத்திற்கான எத்தனங்களில் ஏற்கெனவே முற்பட்டிருந்த இவர்' கொந்தளிப்பு மிகுந்த அந்தக் காலத்தின் ஆட்சியை ஏற்கும்படி நிலையில் இல்லாமல் மிக்க சாந்தமும் கனிவும் கொண்டவராக இருந்தார். இரத்தம் சிந்தாமலும் கொடுமையின்றியும் ஆளவேண்டுமென்றமனப்பாங்கு கொண்ட இவர் கலகக்காரர்களாக மாட்டும் குற்றவாளிகளிடத்தும் மட்டற்ற கருணை காட்டினர். பால்பனின் உறவினரான மாலிக் கஜ்ஜு என்பவர் காராவின் தலைவராக இருந்தார். சுல்தானின் ஆட்சியில் இரண்டாம் ஆண்டில் இவர் சில பிரபுக்களின் துணை கொண்டு கலகம் விளைவித்தபோது தகாத முறையில் கழி விரக்கம் காட்டிக் கலகக்காரரை மன்னித்தார்.

சுல்தானின் இயற்கையான இரக்கம் சமாதான நோக்கம் இவற்றின் விளைவாகப் பிரபுக்கள் அடிக்கடி சதியில் இறங்கினர். டில்லியின் ஆதிக்கம் மதிக்கப்படுவது நின்றுவிட்டது. இதனால் கில்ஜி பிரபுக்களும் இவரிடம் வெறுப்புற்றனர். ஏனெனில், அவர்கள் தங்கள் தலைவர் ஒருவருடைய தயவால் பதவியும் ஆதிக்கமும் பெற ஆசை கொண்டிருந்தனர். அவர்களுள் மதச்சடங்குகளின் தலைவராக விளங்கிய மாலிக் அகமத் சாப் என்பவர் நேரிடையாகவே அரசரிடம், 'ஓர் அரசர் அரசாங்கச் சட்ட திட்டங்களை அநுசரித்து ஆட்சி புரிய வேண்டும் அல்லது அரியணையை விட்டுவிடுவதில் மன நிம்மதி அடைய வேண்டும்' என்று வெளிப்படையாகவே கூறினர். அரசர் தம் தயாளப் பாதையினின்று ஒரே தடவைதான் மாறினர். அற்ப சந்தேகத்தின் மீது சித்திமௌலா என்னும் முஸ்லிம் துறவியொருவர் துரோகக் குற்றம் சாட்டப்பட்டு அரசராணையால் கொலைசெய்யப்பட்டார்.

இத்தகைய அரசர் திடமான படையெடுப்புத் திட்டங்களைக் கைக்கொள்ள முடியவில்லை. ராந்தாம்பூர்மீது இவர் மேற்கொண்ட படையெடுப்பு இவ்வாறு தோல்வியாயிற்று. அநேக முஸ்லிம்களின் உயிர்களைப் பலியிடாமல் அக் கோட்டையைக் கைப்பற்ற முடியாது என்ற நம்பிக்கை கொண்ட அரசர் அதைக் கைப்பற்றாமலே திரும்பினர். ஆனால், 1292-ல் உலகு (Hulagu) வின் பேரன் தலைமையில் 1,50,000 பேரடங்கிய வலிமைகொண்ட படையுடன் வந்த மங்கோலியக் கூட்டத்தினரை எதிர்த்ததில் மட்டும் வெற்றி கண்டார். சுல்தானுடைய படைகளால் நன்கு முறியடிக்கப்பட்ட மங்கோலியர் சமாதானம் செய்துகொண்டனர். அவர்களுடைய படை இந்தியாவினின்றும் வெளியேற அனுமதிக்கப்பட்டது. ஆனால், செங்கிஸ்கான் மரபில் தோன்றிய

உலகு என்பவரும் மற்றும் பல படைப் பிரமுகர்களும் இஸ்லாம் மதத்தைத் தழுவி டில்லிக்கு அருகில் குடியேறினர். புதிய முஸல்மான்கள் என இவர்கள் வழங்கப்பட்டனர். இது தவருன சலுகை ஆயிற்று. வருங்காலத்தில் இதனுல் பல துன்பங்கள் விளைந் தன. புதிய முஸல்மான்கள் டில்லி ஆட்சிக்குக் கலகக்கார அண்மையினராயினர். இதனுல் டில்லிக்கு, ஆட்சிக்குப் பல நெருக்கடிகள் ஏற்பட்டன. சமாதானத்தை விரும்பிய இந்த மன்னரும் படுக்கையிலிருந்தபடி இயற்கையான மரணம் அடைய முடியவில்லை. கி. பி. 1296-ல் பேராசை கொண்ட இவரது மருமகனுல் விதியின் விசித்திரவிளையாட்டின் போக்கில் கொல்லப் பட்டார்.

## 2. அலாவுதீன் கில்ஜி

ஜலால் உதின் பிரோஸின் மருகனுன அலாவுதீன் தம் மாமனுல் மிக்க அன்புடனும் கவனத்துடனும் வளர்க்கப்பட்டார். தகப்பனற்ற இந்த மருகனிடம் கொண்ட மட்டற்ற பாசத்தால் இவரையே தம் மாப்பிள்ளையாகவும் ஜலால் உதீன் கொண்டார். தாம் டில்லி அரியணை ஏறியதும் ஜலால் உதீன் அலாவுதீனை அலகாபாத் மாவட்டத்திலுள்ள காராவின் மானியத்திற்கு அதிப ராக்கினுர். இங்குதான் அலாவுதீன் மனத்தில் பேராசையின் வித்துக்கள் ஊன்றப்பட்டன. 'காரா கலகக்காரர்களின் சாதுரிய மான துர்ப்போதனைகள் இவர் மனத்தில் நன்கு வேரூன்றின' என்று பார்னி கூறுகிருர். அந்தப் பிரதேச ஆட்சியை ஏற்றுக் கொண்ட அந்த ஆண்டிலிருந்தே தம் திட்டத்தைப் பின்பற்றினுர். எங்கேனும் தொலை தூரத்திற்குச் சென்று செல்வம் திரட்ட எண்ணினுர். தம் மாமியார் மாலிக் ஜஹான், தம் மனைவி இவர் களுடைய தந்திரச் செயல்களால் குடும்பம் இன்ப மற்றதால் டில்லி ஆட்சியின் பிடியினின்று நீங்கித் தனியாகப் பதவியும் செல்வாக்கும் பெறும்படியாக இவர் எண்ணியிருக்கக்கூடும். கி. பி. 1292-ல் மாளவ நாட்டின்மீது வெற்றியுடன் படையெடுத்துப் பில்ஸா நகரைக் கைப்பற்றியதற்குப் பரிசாகக் காராவுடன்கூட அயோத்தி மானியமும் இவருக்குக் கிடைத்தவுடன் இவர் பேராசை துளிர்விட்டது.

பில்ஸாவிலிருக்கும்பொழுது தேவகிரி இராச்சியத்தின் திரண்ட செல்வத்தைப்பற்றிய சில நிச்சயமற்ற வதந்திகளை அலாவுதீன் கேள்வியுற்றுர். தேவகிரி இராச்சியம் மேற்குத்

தக்காணம்வரை வியாபித்திருந்தது. யாதவ குலத்தைச்[1] சேர்ந்த இராமச்சந்திரன் என்பவர் அதை ஆண்டுவந்தார். அதைத் தம்மடிப்படுத்த அலாவுதீன் தீர்மானம் செய்தார். தம் மாமனிடமிருந்து தம் நோக்கங்களை மறைத்துக்கொண்டு விந்திய மலைப் பிரதேசங்கள் வழியாகவும் மத்திய இந்தியா மூலமாகவும் தக்காணத்தின்மீது ஓராயிரம் குதிரை வீரர்களடங்கிய ஒரு படையின் தலைமையில் படையெடுத்துத் தேவகிரியின் முன்பு தோன்றினார். இப் பகுதியில்இஸ்லாமியத் தொடர்பு ஆதியிலேயே ஏற்பட்டிருந்தது. குறைந்தது எட்டாம் நூற்றாண்டுக் காலத்தில் இருந்தே அத் தொடர்பு ஏற்பட்டிருக்கலாம். இத்தகையதொரு தாக்குதலுக்கு இராமச்சந்திர தேவன் எத்தனமாக இல்லை. அவருடைய மகன் சங்கரதேவன் படையின் பெரும் பகுதியுடன் தெற்கு நோக்கிச் சென்றிருந்தார். இதனால் இவர் திடீர்த் தாக்குதலால் தடுமாறினார் வீணானதொரு எதிர்ப்பிற்குப்பின் இவர் தோற்கடிக்கப்பட்டார். திரண்ட மீட்புத் தொகை அளிப்பதாக உறுதி கூறிச் சமாதானம் செய்துக்கொள்ளவேண்டிக் கட்டாயப்படுத்தப்பட்டார். அலாவுதீன் காராவை நோக்கித் திரும்பும் தருணத்தில் சங்கரதேவன் தேவகிரிக்கு விரைந்து வந்து தம் தகப்பனார் தடுத்தும் கேளாமல் படையெடுப்பாளர்களுடன் போர் தொடுத்தார். அவருடைய உற்சாகம் முதற்கண் வெற்றியை அளித்தபோதிலும் அவர் விரைவில் தோற்கடிக்கப் பட்டார். அவருடைய படையில் குழப்பம் விளைந்தது. மிகுந்த குழப்பத்துடன் அவருடைய உதவியாளர்கள் பல திசைகளிலும் ஓடிவிட்டனர். இந்தியத் தீபகற்பப் பகுதியிலுள்ள மற்ற மன்னர்களின் உதவியை இராமச்சந்திர தேவன் கோரினார் ஆனால் அது பயன் அற்றதாயிற்று. உணவுப் பண்டங்கள் பற்றாக்குறையாலும் அவருக்குப் பெரிய இடையூறு ஏற்பட்டது. சமாதானத்தைக் கோருவதைத் தவிர அவருக்கு வேறு வழியே இல்லை. முன்னையிலும் மிகு கடினமான நிபந்தனைகளோடு சமாதானம் ஏற்பட்டது. அலாவுதீன் ஏராளமான கொள்ளைப் பொருள்களான, பொன், வெள்ளி, பட்டு, முத்து, விலை உயர்ந்த கற்கள் இவற்றுடன் காராவிற்கு மீண்டார். கில்ஜியின் துணிகரமான இப்படையெடுப்பால் தக்காணத்தின் பொருள் வளம் வறண்டதோடு மட்டுமன்றி விந்தியமலைகளுக்கு அப்பாற்பட்ட பிரதேசங்களில் திடமான முஸ்லிம் ஆதிக்கம் ஏற்படுவதற்கான வழியையும் திறந்தது.

[1] ஜே. ஆர். ஏ. எஸ். வால்யூம் II, பக்கம் 398-ல் இந்த இராச்சியத்தைப் பற்றிய சுவையான குறிப்பு ஒன்று நமக்குக் கிடைத்துள்ளது. கிழக்குத் தக்காணம் அப்பொழுது ருத்திரம்மா தேவியால் ஆளப்பட்டது. இவர் காகத்திய வமிசத்து இராசா கணபதியின் மகள்.

தாம் பெற்ற செல்வத்தை டில்லிச் சுல்தானுடன் பங்கு கொள்ள அலாவுதீனுக்கு எண்ணமே இல்லை. இந் நிகழ்ச்சிக்கு டில்லி அரியணையே அவரது முடிவான இலக்கு என்ற ஆசையை மேலும் அதிகரிக்கச் செய்தது. உண்மை மிக்க தம் உத்தியோகஸ்தர்கள் என்ன எடுத்துக் கூறியும், அதிலும் குறிப்பாக மிகவும் வெளிப்படையாகப் பேசும் அகமத்சாப் வேண்டியுங்கூட முதிய சுல்தான் ஜலால் உதீன் பிரோஸ் ஒன்றையும் கவனியாமல் தம் மருமகன் அலாவுதீன்பால் கொண்டிருந்த பாசம் மறைக்கவும் அவர் விரித்த வலையில் விழுந்தார். தம் அவையிலிருந்த ஒரு துரோகி தூண்டவும் தற்காப்பிற்கான முன்னேற்பாடுகள் ஏதுமின்றித் தம் பிரியமுள்ள மருமகனைச் சந்திக்க வேண்டிக் காராவிற்கு ஒரு படகில் விரைந்து சென்றார். இத் தவற்றிற்கு விலையாக அவர் உயிரையே கொடுக்க வேண்டியதாயிற்று. கி.பி. 1296 ஜூலை 19ஆம் நாளன்று அலாவுதீனின் ஆதரவாளர்கள் அவருடைய முகாமில் அவரை சுல்தானாகப் பிரகடனம் செய்தனர். பார்னி கூற்றுப்படி 'அலாவுதீன் தம் அருமை ஆதரவாளர் இரத்தத்தைச் சிந்தியதற்கான தண்டனையினின்றும் தப்பவில்லை...அவரது பாதையில் விதி ஒரு துரோகியை வைத்தது (மாலிக் காபூர்). அவரால் அவரது குடும்பம் அழிவுற்றது... இவருக்கு ஏற்பட்ட தெய்வீகத் தண்டனைக்கு ஒப்பாக வேறு எந்த இஸ்லாமிய நாட்டிலும் எவருக்குமே ஏற்பட்டதில்லை.'

டில்லி அரியணையில் தம்மை நிலைப்படுத்திக்கொள்ள வேண்டியது அடுத்தபடியாக அலாவுதீனுக்கு அவசியமாயிற்று. டில்லியில் விதவை இராணி, மாலிக் ஜகானுடன் சேர்ந்து அவருடைய இளைய மகனை ருக்ன்-உதீன் இப்ராஹிம் என்ற பட்டத்துடன் அரியணையில் அமர்த்திவிட்டார். அவருடைய மூத்த மகன் அர்காலிகான் அவருடைய சில செயல்களால் மன வேற்றுமைப் பட்டு மூல்தானில் தங்கிவிட்டார். இந்த மன வேறுபாட்டைக் கேள்வியுற்றதும் அலாவுதீன் கொட்டும் மழையையும் பொருட்படுத்தாமல் விரைவாக டில்லிக்கு வந்தார். வலுவற்றதொரு எதிர்ப்பிற்குப் பிறகு தம் ஆதரவாளர்களால் துரோகமாகக் கைவிடப்பட்ட பின், தம் தாயாருடனும் விசுவாசமுள்ள அகமத் சாப்புடனும் மூல்தானுக்கு ஓடிவிட்டார். தக்காணத்திலிருந்து கொண்டுவந்த பொன்னைத் தாராளமாக வாரி வழங்கி, பிரபுக்கள், உத்தியோகஸ்தர்கள் மற்றும் டில்லிப் பிரமுகர்கள் இவர்களைத் தம் பக்கம் சேர்த்துக்கொண்டார். டில்லியில் நுழைந்ததும் பாஸ்பனுடைய சிவப்பு அரண்மனையில் கி.பி. 1296 அக்டோபர் 3ஆம் நாள் முடிசூட்டப்பட்டார். மூல்தானில் அடைக்கலம் புகுந்த காலஞ்சென்ற சுல்தானின் உறவினர்களும்

நண்பர்களும் அங்குத் தங்கும்படி விடப்படவில்லை. அவர்கள் அலாவுதீனின் சகோதரன் உல்க் கான் (Ulugh Khan), அவர் அமைச்சர் சபார் கான் இவர்களால் சிறைப்பிடிக்கப்பட்டனர். அர்காலிகான், இப்ரஹீம் மற்றும் அவர்களுடைய மைத்துனன் உல்க் கான் என்ற மங்கோலியன், அகமத்சாப் இவர்கள் டில்லிக்கு எடுத்துச் செல்லப்படுகையில் குருடாக்கப்பட்டனர். அர்காலியின் மக்கள் எல்லாரும் கொலை செய்யப்பட்டனர். அர்காலியும் அவர் சகோதரரும் ஹான்சி கோட்டையில் சிறை வைக்கப்பட்டனர். மாலிக் ஜஹானும் அகமத் சாப்பும் டில்லியில் கடுமையான காவலில் வைக்கப்பட்டனர்.

அலாவுதீன் கில்ஜியின் நிலைமை இன்னும் உறுதியற்றதாகவே இருந்தது. அவர் இன்னமும் பல பகைவர்களை அடக்க வேண்டிய தாக இருந்தது. துருக்கிய எதிர்ப்பாளர்கள், கீழ்ப்படிய மறுக்கும் இராசபுதன, மாளவ, கூர்ச்சர மன்னர்கள், சில பிரபுக்களின் சதிகள், மங்கோலியர் படையெடுப்புகள் இவை அவரை எதிர் நோக்கிய பிரச்சினைகள். ஆனால், தம் மாமனின் குணங்களினின் றும் முற்றிலும் வேறுபட்ட இவர் தம்மை நோக்கிய இடுக்கண் களைக் குன்றா ஊக்கத்துடன் எதிர்த்தார். அவருடைய முயற்சிகள் வெற்றி பெற்றன.

நீண்ட காலமாக மங்கோலியர்களின் படையெடுப்பு டில்லி ஆட்சிக்கு ஓயாத கவலையையும் அபாயத்தையும் விளைவித்தன. அலாவுதீன் பட்டமெய்திய சிறிது காலத்திற்குள்ளாகவே மங்கோலியப் பெருங் கூட்டத்தினர் படையெடுப்பு ஒன்று இந்தியாவின்மீது ஏற்பட்டது. ஆனால், சபார்கான் பெருமளவில் அவர்களைச் சலந்தருக்கருகில் சென்று விரட்டியடித்தார். சுல்தா னின் ஆட்சி இரண்டாம் ஆண்டில், சால்டி என்ற தலைவரின்கீழ் மங்கோலியர் மீண்டும் படையெடுத்தனர். இத் தடவைகூடச் சபார்கான் அவர்களைப் புறமுதுகு கண்டார். அவர்களின் தலைவர் உட்பட இரண்டாயிரம் படைவீரர்களை டில்லிக்குச் சிறைப்பிடித்து அனுப்பினார். ஆயினும், கி.பி. 1299ஆம் ஆண்டில் குட்லக் குவாஜா அநேக ஆயிரம் மங்கோலியர்களுடன் இந்தியா விற்குள் புகுந்தார். இந்தத் தடவை அவர்களது நோக்கம் கொள்ளையடிப்பதற்கன்று; நாடு பிடிக்கவேயாகும். ஆகவே, தாங்கள் 'படையெடுத்துவரும் வழியிலுள்ள எல்லைப் பகுதிகளைப் பாழாக்காமலும் கோட்டைகளைத் தாக்காமலும் முன்னேறினர்'; டில்லியைக் கைப்பற்றும் நோக்கத்துடன் அதன் அண்மையை அடைந்தனர். இதைக் கண்டு டில்லி நகரில் பெருத்த குழப்பம் ஏற் பட்டது. அக் கால ருஸ்தமாகத் திகழ்ந்த பெருவீரன் சபார்கான்

அவர்களை ஆவேசமாகத் தாக்கினர். சண்டையின் மத்தியில் அவர் கொல்லப்பட்டார். பொறுமை கொண்ட அவருடைய தலைவரான மன்னர் அவர் இவ்வாறு தமக்கு யாதொரு பழியுமின்றித் தொலைந்துபோனதில் திருப்தி அடைந்தார். சபார்கான் விளைத்த வீரத்தினால் அச்சமடைந்ததனாலோ என்னவோ மங்கோலியர் பின் வாங்கினர். கி.பி. 1304-ல் மறுபடியும் படையெடுத்து வந்து இந்தியாவில் புகுந்து அவர்கள் அம்ரோக வரையில் முன்னேறினர். அவர்களுக்கு அலிபெக் என்பவரும் குவாஜா டாஷ் என்பவரும் தலைமை பூண்டனர். பெருத்த நஷ்டப்பட்டு அவர்கள் பின்னடையும்படி செய்யப்பட்டனர். அவருடைய ஆட்சியில் கடைசி முறையாக மங்கோலியர் படையெடுப்பு கி. பி. 1307—1308-ல் நடைபெற்றது. இக்பால்மாண்ட் என்ற தலைவர் படையுடன் சிந்து நதியைத் தாண்டி வந்தார். ஆனால், தோற்கடிக்கப்பட்டுக் கொல்லப்பட்டார். அநேக மங்கோலியப் படைத் தளபதிகள் சிறைப் பிடிக்கப்பட்டுக் கொல்லப்பட்டனர். அடுத்தடுத்து ஏற்பட்ட தோல்விகளால் மனமழிந்த மங்கோலியர் டில்லிச் சுல்தானின் கடும் நடவடிக்கைகளால் மருண்டு போனார்கள். அவருடைய ஆட்சிக் காலத்தில் அவர்கள் படையெடுக்கவே இல்லை. டில்லி மக்களுக்கும் வடமேற்கு எல்லைப்புற வாசிகளுக்கும் இது பெருத்த ஆறுதல் அளித்தது.

மங்கோலியர்களைத் தண்டிப்பதோடுகூட பால்பனைப் போன்று தம் இராச்சியத்தின் வடமேற்கு எல்லையைத் திறமையுடன் பாதுகாக்கும் பொருட்டுச் சுல்தான் சில தற்காப்பு நடவடிக்கைகளை மேற்கொண்டார். மங்கோலியர் வரும் பாதையில் பழைய கோட்டைகளைப் புதுப்பிக்கவும் புதிய கோட்டைகள் சில அமைக்கவும் சுல்தான் பணித்தார். சாமானு, டிபால்பூர் ஆகிய இடங்களில் காவற்கூடங்கள் அமைக்கப்பட்டன. இவை போருக்கு எப்பொழுதும் ஆயத்தமாக இருக்கும்படி செய்யப்பட்டன. அரசருடைய படையும் வலுவுள்ளதாகச் செய்யப்பட்டது. கி. பி. 1305 முதல் பஞ்சாப் கவர்னராக இருந்த காஜிமாலிக் (பிற்காலத்தில் கியாஸ் உதீன் துக்ளக் என வழங்கப்பட்டவர்) எல்லைப்புறப் பாதுகாப்பின் தலைமைப் பதவியேற்றுச் சுமார் கால் நூற்றாண்டுக் காலம் திறமையுடன் மங்கோலியர்களைக் கட்டுப்பாட்டிற்குள் வைத்திருந்தார்.

டில்லிக்கு அருகே குடியேறியிருந்த 'புதிய முஸல்மான்களும் அலாவுதீன் கில்ஜியால் வன்மையாக நடத்தப்பட்டனர். தாங்கள் குடியேறிய நாட்டில் எதிர்பார்த்ததுபோல் பட்டமோ, உயர் பதவியோ, நிலமோ கிடைக்காமையால் அவர்கள் அமைதி

யிழந்து அதிருப்தியுடன் விளங்கினர். அலாவுதீனின் படைகள் கூர்ச்சரத்திலிருந்து திரும்பி வருகையில் இவர்கள் கலகம் செய்ய ஆரம்பித்தனர். புதிய முஸல்மான்கள் எல்லாரையும் சுல்தான் உத்தியோகத்திலிருந்து நீங்கியிருந்தார். இது மேலும் அவர்களுடைய வெறுப்பை அதிகரித்தது. சுல்தானைக் கொன்றுவிட அவர்கள் இரகசியமான சதி ஒன்றை உருவாக்கினர். விரைவிலேயே இச் சதி அம்பலமாயிற்று. அவர்கள் எல்லாரையும் ஒரேடியாகக் கொன்றுவிடும்படி உத்தரவிட்டுக் கொடிய முறையில் சுல்தான் பழி தீர்த்துக்கொண்டார். ஒரே நாளில் இவ் வுத்தரவிற்கிணங்க இருபதாயிரத்திலிருந்து முப்பதாயிரம் வரை புதிய முஸல்மான்கள் ஈவிரக்கமின்றிக் கொலை செய்யப்பட்டனர்.

ஆட்சியின் முற்பகுதியில் எல்லாத் துறையிலும் ஒன்றுபோல வெற்றி கண்ட சுல்தானின் தலை கருவத்தால் நிமிர்ந்தது. செயற்கரிய திட்டங்கள் பலவற்றை வகுக்க முற்பட்டார். இவர் மனத்தில் வீணை பேராசை கொழுந்துவிட்டு எரிந்தது. இவர் ஒரு புதிய மதத்தையும் இனத்தையும் நிறுவ எண்ணினார். அலெக்சாந்தரைப் பின்பற்றி உலகையே வெல்ல வேண்டுமென விழைந்தார். இந்தத் திட்டங்கள் யாவற்றிலும் குவாஸி-அலா-உல்முல்க் (சியாபார்னி என்ற சரித்திர ஆசிரியரின் மாமன்) என்பவரின் ஆலோசனையை நாடினார். இவர் ஏற்கெனவே காராவில் இவருடைய படைத்தலைவராகவும், பிறகு டில்லியின் கொத்துவாலாகவும் பதவி வகித்தவர். இவர் அரசனுடைய திட்டங்கள் பயனற்றவை என்பதைச் சுட்டிக் காட்டினார். அரசருடைய முதல் திட்டத்திற்கு அவர் கூறியதாவது, 'தீர்க்கதரிசியின் பதவியை அரசர் ஒருபோதும் வகித்ததில்லை. உலகம் உள்ளளவும் இனியும் முடியாது. ஆயினும், தீர்க்கதரிசிகளுள் சிலர் அரச பதவிக்குரிய பணிகளைச் செய்துள்ளனர்.' என்றார். இரண்டாம் திட்டத்தைப் பற்றி அவர் கூறுகையில் இந்துஸ்தானத்தின் பெரும்பகுதி இன்னமும் வெல்லப்படாமலிருப்பதையும், மங்கோலியர் படையெடுப்பிற்கு அவர் இராச்சியம் இலக்காக உள்ளதையும் எடுத்துக் காட்டினார். மேலும், சுல்தான் இல்லாத காலங்களில் அரச அலுவல்களைத் திறம்பட வகிக்க அரிஸ்டாட்டில் போன்ற அமைச்சரையும் அவர் பெற்றிருக்கவில்லையே என்றும் விளக்கினார். இவற்றால் சுல்தான் தம் சுய உணர்வைப் பெற்றார். தமது ஆகாசக்கோட்டைத் திட்டங்களைக் கைவிட்டார். ஆயினும், தாம் வழங்கிய காசுகளில் தம்மை 'இரண்டாம் அலெக்சாந்தர்' என்று குறித்துவந்தார்.[1]

[1] ரைட்-இந்தியக் கண்காட்சிச் சாலையில் உள்ள நாணயப் பட்டியல், வால்யூம் II, பக்கம் 8.

அலாவுதீனின் ஆட்சியில் முஸ்லிம் பேரரசு இந்தியாவின் பல பகுதிகளிலும் விரைவில் பரவியது. 'இவர் ஆட்சியே, டில்லிச் சுல்தானியப் பேரரசைத் துவக்கியது' என்று ஸர் உல்சிலி பெயிக் கூறியுள்ளார். இந்தப் பேரரசாட்சி சுமார் அரை நூற்றாண்டுக் காலம் வரை நீடித்தது. கி.பி. 1297-ல் அலாவுதீன் கில்ஜி வலிமை மிக்க படையொன்றைத் தம் சகோதரர் உலுக் கான் தலைமையிலும் தம் அமைச்சர் நுஸ்ரத் கான் தலைமையிலும் இந்து இராச்சியமான கூர்ச்சரத்தை வென்றடிப்படுத்த அனுப்பினர். கூர்ச்சரம் ஏற்கெனவே பல கொள்ளையடிப்புகளுக்கு உட்பட்டிருந்தது. ஆயினும், அது பணிய வைக்கப்படாமல் பகேல வமிசத்து இராசபுத்திர மன்னர் இரண்டாம் இராய் கர்ண தேவனின் ஆட்சியின்கீழ் இருந்துவந்தது. படையெடுப்பாளர்கள் நாட்டில் புகுந்து இரண்டாம் கர்ணதேவனின் அழகிய இராணியான கமலா தேவியைச் சிறைப்பிடித்தனர். அரசனும் அவர் மகள் தேவால தேவியும் தேவகிரி மன்னர் இராமச்சந்திர தேவனிடம் அடைக்கலம் புகுந்தனர். படையினர் கூர்ச்சரத்தின் செல்வமிக்க துறைகளைக் கொள்ளையிட்டு ஏராளமான கொள்ளைப் பொருள்களுடன் காபூர் என்ற இளவயது அலியையும் கைப்பற்றினர். திரண்ட செல்வத்துடனும் கமலாதேவி, காபூர் ஆகியவர்களுடனும் படையினர் டில்லி மீண்டனர். கமலாதேவி சிறிது காலத்திற்குப் பின் அலாவுதீனின் பிரிய மனைவியானுள். காபூர் இராச்சியத்திலேயே செல்வாக்கு மிக்க பிரபுவாகவும், பின்னர் அலாவுதீனின் மரணத்திற்குச் சிறிதுகாலம் முன்பும் பின்னரும் நாட்டின் உண்மை அதிகாரியாகவும் விளங்கினர்.

குத்புதீன், இட்டுட்மிஷ் இவர்களால் ராந்தாம்பூர் அடிமைப் படுத்தப்பட்டபோதிலும் இராசபுத்திரர்கள் அதனை மீட்டு விட்டனர். அப்போது ஹமீர்தேவன் என்ற வீர இராசபுத்திரத் தலைவர் ஆட்சியில் அது இருந்துவந்தது. மனக் கசப்புற்ற சில புதிய முசல்மான்களுக்கு இவர் தஞ்சமளித்திருந்தார். இதனால் அலாவுதீன் சினமுற்றார். கி.பி. 1299-ல் அதன் கோட்டையைப் பணிய வைப்பதற்காகத் தம் தம்பி உலுக் கான், நுஸ்ரத் கான் இவர்கள் தலைமையில் ஒரு படையை ஏவினர். அப்பொழுது உலுக்கான் பயான மானியதாரராகவும் நுஸ்ரத் கான் காராவின் மானியதாரராகவும் இருந்தனர். ஜாயினை (Jhain) அவர்கள் வென்று ராந்தாம்பூருக்கருகில் பாடி அமைத்தனர்; ஆனால், விரைவிலேயே இராசபுத்திரர்கள் அவர்களைத் தோற்கடித்து விரட்டி விட்டனர். கவணிலிருந்து விசையுடன் வந்த கல் ஒன்று நுஸ்ரத் கானின் உயிரைக் குடித்தது. கோட்டையின் முன் அமைக்கப்பட்ட ஒரு திடல் (Dashile) மேற்பார்வை இடுகையில் இது நேர்ந்தது.

தம் படையினர்க்கு நேர்ந்த இடையூறுகளைக் கேள்வியுற்றதும் அலாவுதீன் தாமே ராந்தாம்பூரை நோக்கி விரைந்தார். கோட்டைக்குச் செல்லும் வழியில் தில்பாத் (Tilpat) என்னும் இடத்தில் வேட்டையில் உல்லாசமாக ஈடுபட்டிருக்கும்போது புதிய முஸல்மான்கள் சிலருடன் கூட்டுச் சேர்ந்துகொண்ட அகாத் கான் என்னும் உறவினரால் பாதுகாப்பற்ற நிலையில் அலாவுதீன் திடீரென்று தாக்கப்பட்டுக் காயமுற்றார். விரைவிலேயே அந்தத் துரோகியும், அவர் கூட்டாளிகளும் பிடிக்கப்பட்டுக் கொலையுண்டனர். அலாவுதீனின் அரியணையைக் கைப்பற்ற நடைபெற்ற சில சதிகளும் ஒடுக்கப்பட்டன. கி.பி. 1301 ஜூலையில் ராந்தாம்பூர்க் கோட்டை வலியக் கைப்பற்றப்பட்டது. ஆயினும், ஓராண்டுக் காலக் கடுமையான முற்றுகைக்குப் பின்னரே இது இயன்றது. ஹமீர்தேவனும் அவருடன் கூடச் சேர்ந்தான். அடைக்கலம் புகுந்த புதிய முஸல்மான்கள் பலரும் கொல்லப்பட்டனர். இக் கோட்டை முற்றுகையைப் பற்றிச் சுவையாக விவரித்த அமர்குஸ்ராவ் பின் வருமாறு எழுதுகிறார்: 'ஓர் இரவில் இராய் ஒரு குன்றின்மீது நெருப்பை மூட்டி அதில் பெண்களையும் தம் குடும்பத்தினரையும் தள்ளினார். பின்னர்ப் பற்றுக் கொண்ட சிலருடன் பகைவர்மீது பாய்ந்து ஏமாற்றத்தில்[1] தங்கள் உயிரை பலியிட்டனர்.' தமது தலைவரைக் காட்டிக் கொடுத்த துரோகியும் ஹமீரின் அமைச்சருமான ரான்மால் தம் தோழர் பலருடன் பகைவர் பக்கம் சேர்ந்தார். ஆயினும், சுல்தானுடைய உத்தரவின்மீது இவர் கொலை செய்யப்பட்டுத் தங்கள் துரோகத்திற்கு ஏற்ற தண்டனையைப் பெற்றனர். ராந்தாம்பூரைப் பாதுகாக்கத் தம் தம்பி உலுக்கானை நியமித்துவிட்டு டில்லி திரும்பினார். சுல்தான் சென்ற ஐந்தாம் மாதத்திலேயே உலுக் கான் மரணமடைந்தார்.

தீரமிக்க குகில குல இராசபுத்திரர்களின் தாயகமான மேவார் நாட்டின்மீது அலாவுதீன் மற்றொரு படையெடுப்பை மேற்கொண்டார். இயற்கை அளித்திருந்த சிறந்த அரண்களோடு விளங்கிய அது நீண்ட காலமாக வெளிநாட்டுப் படையெடுப்புகளைத் தாங்கிவந்தது. ராந்தாம்பூர்ப் படையெடுப்பைப் போலவே இப் படையெடுப்பும் சுல்தானின் நாடு பிடிக்கும் ஆசையால் விளைந்தது என்று கூறலாகும். ஆனால், பழங்கதைகளை நம்புவதாயின் அப்படையெடுப்பின் உடனடியான காரணம்

[1] தா-ரிக்கி-அலாய், எலியட், வால்யூம் III, பக்கம் 75, ஹம்மீர் மகா காவியத்தின் ஆசிரியர் ஹமீரின் மரணம் பற்றி வேறுவிதமாகக் குறிப்பிட்டுள்ளார். அவர் கூற்றுப்படி ஹமீர் தோல்வியுற்றது அவரது இரு படைத்தலைவர்கள் ரதிபாலன் கிருஷ்ணபாலன் இவர்களது குறைபாடுகளின் காரணமாகும். பலத்த காயமுற்றுத் தாம் இறந்துவிடுவோமென்று உணர்ந்ததும் எதிரிகளிடம் சிக்காமல் தம் வாளால், தம் தலையைத் தாமே வெட்டிக் கொண்டார், ஈஸ்வரி பிரசாத், மத்திய கால இந்தியா பக்கம் 195, அடிக்குறிப்பு.

அலாவுதீன் ராணா ரத்தன் சிங்கின் இராணி பேரழகி பத்மினியின் மீது கொண்ட மோகமேயாகும். இது குறித்து அக் காலத்திய வரலாறு அல்லது சாசனங்களில் தெளிவாகக் கூறப்படவில்லை. இராணாவைச் சிறைப்பிடித்துச் சுல்தானின் முகாமிற்குக் கொண்டு சென்றனர். ஆனால், மிக்க தீரமான முறையில் இராசபுத்திரர்கள் அவரை விடுதலை செய்தனர். சித்தூர்க் கோட்டைவாயிலின் முன்பாகக் கோரா, பதால் என்ற இரு இராசபுத்திரத் தலைவர்கள் ஒரு சிறு படையுடன் ஆக்கிரமிப்பாளர்களை எதிர்த்து நின்றனர். ஆனால், டில்லிப் படையின் முன்பு நீண்டநேரம் அவர்கள் எதிர்த்து நிற்க முடியவில்லை. மேலும், அவர்களைத் தடுத்து நிறுத்துவது இயலாது என்று அறிந்தவுடன் அவமானத்தைக் காட்டிலும் வீர மரணத்தையே விரும்பி டாட் விவரித்தபடி ஜோஹர் என்ற பயங்கரமான சடங்கை நிறைவேற்றினர். இச் சடங்கு குறிப்பாகப் பெண்கள் சிறைப்பிடிக்கப்பட்டுக் கற்பழிக்கப்படுவதைத் தடை செய்யவே மேற்கொள்ளப்படும். 'பாதாளப் புகலிடத்தில் ஈமத் தீ மூட்டப்பட்டது. அங்குப் பகலவனின் ஒளி உட்புக முடியாது. கோட்டையைப் பாதுகாத்து வந்த வீரர்கள் தங்கள் இராணி யார்களும் மனைவி மக்களும் ஆயிரக்கணக்கில் ஊர்வலம் போல உள்நுழைவதைப் பார்த்துக்கொண்டிருந்தனர். அழகிய பத்மினி அக் கூட்டத்தின் நடுநாயகியாக விளங்கினாள். மெதுவாக அவர்கள் குகை வாயிலுக்கு அழைத்துசெல்லப்பட்டனர். அவர்கள் உள்ளே நுழைந்ததும் கதவு மூடியது. விழுங்கும் பெரு நெருப்பில் தங்கள் மானம் காக்கப்படும் பாதுகாப்பு இடத்தை அவர்கள் அடைந்தனர்.'

சித்தூர் முற்றுகையின்போது சுல்தான் படையுடன் கூடச் சென்றிருந்த அமீர் குஸ்ராவ் சித்தூர்க்கோட்டை கி. பி. 1303 ஆகஸ்டு 26-ல் அலாவுதீனால் கைப்பற்றப்பட்டதென்றும், பின்னர் அதைத் தம் மூத்த மகன் கிஸ்ர்கான் ஆளுகையின் கீழாக்கி டில்லி திரும்புமுன் சித்தூருக்குக் கிஸ்ராபாத் என்று மறு பெயரிட்டார் என்றும் எழுதுகிறார். இராசபுத்திரர்களின் கடும் எதிர்ப்புக் காரணமாக 1311-ல் சித்தூரை விட்டு வரவேண்டியதாயிற்று. அதன் பின்னர், சுல்தான் அதனை ஜாலர் தலைவன் மால்தேவ் வசம் ஒப்படைத்தார். பல ஆண்டுகளுக்குப் பின்னர் இராசபுத்தி ரர்கள் ஹமீர் அவர் மகன் தலைமையில் சித்தூரை மீட்டனர். மறு படியும் அது மேவாரின் தலைநகராயிற்று.

சித்தூரைப் பணிய வைத்த பின்னர் அலாவுதீன் மாளவ நாட்டிற்கு ஒரு படையை அனுப்பினார். மாளவ நாட்டு ராய் மாலக் தேவனும் அவனுடைய பிரதானி கோக்காவும் ஒரு பெரும்

படையுடன் அலாவுதீன் படையை எதிர்த்தனர். ஆனால் கி. பி. 1305 நவம்பர் அல்லது டிசம்பர் மாதத்தில் அவர்கள் தோற் கடிக்கப்பட்டுக் கொல்லப்பட்டனர். சுல்தானின் அந்தரங்க அரண்மனைக் காரியாதிகாரியான அயின்-உல்-முல்க் என்பவர் மாளவ நாட்டுக் கவர்னராக நியமனம் பெற்றார். இதன் பின்னர் முஸ்லிம்கள் உச்சயினி, மாண்டு, தார், சந்தேரி இவற்றைக் கைப்பற்றினர். இவ்வாறு கி. பி. 1305ஆம் ஆண்டு இறுதிக்குள் வட இந்தியா முழுவதும் கில்ஜியினர் ஆதிக்கத்துக்கு உட்பட்டது. இதன் பின்னர்த் தக்காணத்தில் தங்கள் ஆட்சியை விஸ்தரிக்கும் செயலில் இறங்கும்படியான துணிவு முஸ்லிம்களுக்கு ஏற்பட்டது.

ஏற்கெனவே வாணிகத்தின் மூலமாக இந்தியாவின் மேற்குக் கடற்கரையினர்க்கும் மகமதியர்களுக்கும் தொடர்பு இருந்த போதிலும் கில்ஜிகள் அலாவுதீனின் தலைமையில்தான் தக் காணத்தை முதன் முறையாக வென்றனர். அவர் தென்னாட்டுப் படையெடுப்புகள் அவரது இராச்சியப் பொருளாதாரத் தூண்டு தல்களால் விளைந்தன. வட இந்தியா முழுவதையும் வென்றடக்கிய பின் தென்னிந்தியாவில் தம் ஆதிக்கம் பெருகவேண்டுமென முயற்சி செய்வது இவரைப்போன்ற பேராவல் கொண்ட மன்னர் களுக்கு இயற்கையேயாகும். வெற்றியை நாடும் இவருக்குத் தக்காணத்துச் செல்வம் பெருந்தூண்டுதலாகவும் இருந்தது.

விந்திய மலைக்கு அப்பாற்பட்ட இந்தியப் பிரதேசத்தில் நிலவிய அரசியல் நிலைமை அலாவுதீனுக்கு அங்குப் படை யெடுத்துச் செல்ல ஏற்றதொரு வாய்ப்பை அளித்தது. நான்கு பெரும் அரசுகளாக அப் பிரதேசம் பிரிந்திருந்தது. முதல் இராச் சியம் தேவகிரியைத் தலைநகராகக் கொண்ட யாதவ இராச்சியம். அது அறிவும் ஆற்றலும் கொண்ட இராமச்சந்திர தேவனின் ஆட்சிக்குக் கீழே இருந்துவந்தது (1271—1309). கிழக்கில் தெலிங்கானா என வழங்கப்பட்ட பிரதேசம் வாரங்கலைத் (நைஜாம் இராச்சியத்தில் இருந்தது) தலைநகரமாகக் கொண்டி ருந்தது. காகதீய வமிசத்து முதலாம் பிரதாப ருத்திரதேவனின் ஆட்சியில் அது விளங்கியது. ஹொய்சளர்கள் மூன்றாம் வீர பல்லாலன் (1292—1342) தலைமையில் தற்போது மைசூர் இராச் சியத்தில் அடங்கியுள்ள ஒரு பகுதியைத் துவாரசமுத்திரத்தைத் தலைநகராகக் கொண்டு ஆண்டுவந்தனர். துவார சமுத்திரம் தற்காலத்தில் ஹளபீடு (Halebid) என வழங்கப்படுகிறது. ஹளபீடு அழகிய கோயில்கள் பல கொண்டு புகழ் பெற்றிருந்தது. தொலைத் தெற்கில் பாண்டியர்களின் நாடு இருந்தது. முஸ்லிம் எழுத்தாளர்களால் இது மா'பார் என அழைக்கப்பட்டது.

இப் பிரதேசம் தற்கால மதுரை, இராமநாதபுரம், திருநெல்வேலி மாவட்டங்கள் அடங்கியதாக இருந்தது. பாண்டியநாடு அது போது மாறவர்மன் குலசேகரன் என்னும் மன்னரால் ஆளப் பட்டு வந்தது. அம் மன்னர் வாணிகத்திற்கு ஆதரவு அளித்து நாட்டின் செழிப்பைப் பெருக்க உதவினர். இவர்களைத் தவிர பல குறுநில மன்னர்களும் இருந்தனர். அவர்களுள் தெலுங்கு-சோடத் தலைவன் மூன்றும் மான்ம சித்தன் நெல்லூர் மாவட்டத்தை ஆண்டுவந்தார். ஒரிஸ்ஸாவில் கலிங்க கங்க மன்னர் பானுதேவனும், கொல்லத்தில் (Quilon) கேரள மன்னர் இரவிவர்மனும், மங்களூரில் அலுபு தலைவர் பங்கிதேவ அலுபேந் திரனும் ஆண்டுவந்தனர். தென்னிந்திய இந்து அரசர்களிடையே ஒற்றுமை என்பது சிறிதும் இல்லை. கி.பி. 1194-ல் அலாவுதீன் தேவகிரிமீது படையெடுத்தபோது இராமச்சந்திர தேவன் இம் மன்னர்களிடமிருந்து எந்த விதமான உதவியும் பெறவில்லை. சில சமயங்களில் ஹொய்சள மன்னர்கள் தேவகிரி இராமச்சந்திர தேவனைத் தாக்கியுள்ளனர். தெற்கு இராச்சியங்களில் நிலவிய உள்நாட்டுப் பூசல் வட இந்தியப் படையெடுப்புகளை அழைத்தன.

கி.பி. 1307 மார்ச்சு மாதம் அலாவுதீன், கபூர் தலைமையில் ஒரு படையைத் தேவகிரி இராமச்சந்திர தேவனுக்கு எதிராக அனுப்பினர். கபூர் இது சமையம் நாட்டின் மாலிக் நாயக்காக (படைத்தலைவன்) விளங்கினர். இராமச்சந்திரதேவன் எலிச்சப்பூர் இராசதானிக்கான திறைப் பணத்தை மூன்றாண்டுக் காலமாகச் செலுத்தாமல் இருந்தார். மேலும், கூர்ச்சரத்திலிருந்து ஓடி வந்த இரண்டாம் இராய் கர்ணதேவன் என்னும் மன்னருக்குப் புகலிடம் அளித்திருந்தார். குவாஜா ஹாஜி உதவியாக வர, கபூர் மாளவம் வழியாகப் படையுடன் தேவகிரியை நெருங்கினர். நாட்டைப் படுநாசம் செய்து மிகுந்த பொருளைக் கொள்ளை கொண்டு இராமச்சந்திரதேவனைச் சமாதானத்திற்கு வேண்டும் படியாகவும் செய்தார். டில்லியிலிருந்த அலாவுதீனிடம் இராமச் சந்திரதேவன் அனுப்பப்பட்டார். சுல்தான் அவரை மரியாதை யுடன் ஆறுமாத காலம் டில்லியில் வைத்திருந்து மீண்டும் தேவகிரிக்கு அனுப்பினர். டில்லியின் சிற்றரசனாக இராமச்சந்திர தேவன் ஆட்சி செய்துவந்தார். தவறாமல் டில்லிக்குத் திறைப் பணம் அனுப்பிவந்தார். இராய் கர்ணனின் மகள் தேவால தேவி படையெடுப்பாளரால் கைது செய்யப்பட்டார். கூர்ச்சர கவர்னர் அலப்கான் அவரை டில்லிக்குக் கொண்டுபோனர். அவர் சுல்தானின் மூத்த மகன் கிஸ்ர்கானுக்கு மணமுடிக்கப்பட்டார்.

கி.பி. 1303-ல் காகதீய பிரதாப ருத்திர தேவன்மீது அலாவு தீன் நடத்தியதொரு படையெடுப்புத் தோல்வியில் முடிந்தது.

ஆனால், யாதவர்களை ஒடுக்கியதால் அடைந்த ஊக்கத்தால் கி.பி. 1309-ல் இரண்டாம் தடவையாகக் காகதீய மன்னரைத் தம் ஆட்சிக்கு உட்பட்டுப் பணியவைக்கவும், அவர் செல்வத்தை அபகரிக்கவும் மற்றொரு படையெடுப்பை அலாவுதீன் மேற்கொண்டார். வாரங்கல் நாட்டைத் தம் இராச்சியத்துடன் இணைக்கும் எண்ணம் அலாவுதீனுக்கு இல்லை. தொலைவிலுள்ள அதை நிருவாகம் செய்வது கடினமானதாகவும் பட்டது. அவருடைய உண்மையான நோக்கம் பிரதாபருத்திர தேவனைத் தம் ஆட்சியை ஒப்புக்கொள்ளும்படி செய்யவும், திரண்ட அவர் செல்வத்தைப் பெறுவதற்குமே யாகும். படையெடுத்துச் சென்ற கபூருக்கு இட்ட கட்டளையினின்றும் இது நன்கு தெரியவருகிறது. 'அரசன் தன் பொக்கிஷத்தையும் அணிகலன்களையும், யானைகள், குதிரைகள் இவற்றையும் தருவதுடன் மறு ஆண்டிலும் அதே போன்று யானைகளும் பொக்கிஷங்களும் தர ஒப்புக்கொண்டால் மாலிக் நயிப் கபூர் அந்த நிபந்தனையை ஏற்றுக்கொண்டு அரசனை மேலும் துன்புறுத்தக்கூடாது.' இதுவே அக் கட்டளை. டில்லிப் படையினர் தேவகிரியை அடைந்ததும் ஏற்கெனவே சரண் அடைந்துள்ள இராமசந்திர தேவனின் உதவி அவர்களுக்குக் கிட்டியது. தெலிங்கானவை நோக்கிச் செல்லுகையில் அவர் திறமையான போர் வீரர்களை அளித்தார். வாரங்கல் கோட்டைக்குள் புகுந்து கொண்டு படையெடுப்பாளர்களை எதிர்க்கப் பிரதாப ருத்திர தேவன் முயன்றார். ஆயினும், கோட்டையை அவர்கள் தாக்கிய வேகத்தில் அதைத் தவிடுபொடியாக்கியதோடு காகதீய மன்னர் சமாதானத்தைக் கோரும்படியாகவும் செய்தனர். கி.பி. 1310-ல் சமாதானம் ஏற்பட்டது. அதன்படி அவர் கபூருக்கு நூறு யானைகளையும், ஏழாயிரம் குதிரைகளையும், மற்றும் ஏராளமான அணிகள் நாணயங்கள் இவற்றையும் கொடுத்ததோடு டில்லிக்கு ஆண்டுதோறும் கப்பம் செலுத்துவதாகவும் ஒப்புக்கொண்டார். இதன் பின்னர்க் கபூர் டில்லிக்குத் தேவகிரி, தார், ஜாயின் வழியாக ஏராளமான கொள்ளைப் பொருள்களுடன் சென்றார். இதைப்பற்றி அமீர் குஸ்ராவ் இவ்வாறு எழுதுகிறார்: 'பொருள் சுமை தாளாமல் பெருமூச்சு விட்டுக்கொண்டு ஓராயிரம் ஒட்டகங்கள் சுமந்து வந்தன.'

இந்த வெற்றிகளுக்குப் பின்னர், தொலை தெற்கில் உள்ள நாடுகளைத் தம் அடிப்படுத்த அலாவுதீன் தீர்மானித்தார். இந்த நாடுகளில் செல்வம் நிறைந்த பல கோயில்கள் இருந்தன. கி. பி. 1310 நவம்பர் 18ஆம் நாளன்று மாலிக் நாயிப், குவாஜா ஹாஜ் இவர்கள் தலைமையில் டில்லியிலிருந்து ஒரு பெரும்படை புறப்பட்டுத் தேவகிரி, துவார சமுத்திரம் வழியாக ஹோய்சளர்

நாட்டை நோக்கிச் சென்றது. முதன் முறையாகத் தமது தலை நகர் தாக்கப்பட்டதைக் கண்டு ஹோய்சள மன்னர் மூன்றும் வீர பல்லாலன் பெரும் அதிர்ச்சியுற்றார். படையெடுத்து வந்தவர் களின் எண்ணிக்கை மிகுதியைக் கண்டு அவர்களுக்குக் கீழ்ப்படிந்து தம் உடைமையெல்லாவற்றையும் அவர்களுக்கு அளித்தார். இதைத் தவிர முஸ்லிம்கள் முப்பத்தாறு யானைகளைக் கைக் கொண்டு, ஏராளமான பொன், வெள்ளி, அணிகலன்கள், முத்துகள் இவற்றைக் கோவிலிலிருந்து கொள்ளை கொண்டனர். இவ்வாறு கைவசப்படுத்தப்பட்ட பொருள்களையும் ஒரு ஹோய் சள இளவரசரையும் மாலிக் நயிப் டில்லிக்கு அனுப்பி வைத்தார். கி.பி. 1313 மே மாதம் 6ஆம் நாள் ஹோய்சள இளவரசன் தம் மக்கள் பெரு மகிழ்ச்சி கொள்ளும் வண்ணம் துவாரசமுத்திரத் திற்குத் திரும்பினர். ஆயினும், ஹோய்சள மன்னர்கள் டில்லிக்கு உட்பட்ட சிற்றரசர்களாயினர்.

துவாரசமுத்திரத்தில் பன்னிரண்டு நாள்கள் தங்கியபின் மாலிக் நாயிப் மா'பாரை நோக்கித் தம் கவனத்தைத் திருப்பினர். அந் நாடு சோழமண்டலக்கரை முற்றிலும் வியாபித்திருந்தது. மேற்குக் கரையில் கொல்லம் முதல் கன்னியாகுமரிவரையும் வியா பித்திருந்தது. இப் பிரதேசத்தை அக் காலத்தில் பாண்டியர்கள் ஆண்டுவந்தனர். பாண்டிய மன்னர் குலசேகரனின் சொந்த மகனை சுந்தர பாண்டியனுக்கும், வீர பாண்டியன் என்ற முறை யற்ற ஆனால் மன்னனின் அபிமானத்திற்குரிய மற்றொரு மகனுக் கும் பட்டம் குறித்து நேர்ந்த சண்டையில் மத்தியஸ்தம் கூறும்படி யான வாய்ப்பு மாலிக் நாயிப்புக்கு ஏற்பட்டது. வீர பாண்டி யனிடம் ஒருதலைப் பக்கமாகத் தம் தந்தை அன்பு காட்டித் தம் வாரிசாக அவரை நியமித்ததற்காகச் சினமுற்ற சுந்தர பாண்டி யன் கி.பி. 1310 மே மாதக் கடைசியில் அரசனைக் கொன்று அரச பதவியைத் தாமே கைப்பற்றினர். ஆனால், தம் சகோதரனல் அதே ஆண்டு நவம்பரில் ஏற்பட்ட சண்டையில் தோற்கடிக்கப் பட்டார். இவ்வாறு இன்னலுக்குட்பட்ட அவர் முஸ்லிம்களின் உதவியை நாடினர். ஒரு பெரும்படையுடன் மாலிக் தக்காணத் தின்மீது படையெடுத்தார். கி.பி. 1311 ஏப்ரல் 14ஆம் நாள் அவர் மதுரையை அடைந்தார். பாண்டியர்களின் தலைநகரம் காலியாக இருப்பதைக் கண்டார். இவர் படையெடுத்து வருவதைக் கேள்வியுற்ற வீர பாண்டியன் தம் இராணிகளுடன் நகரத்தை விட்டு நீங்கிவிட்டார். ஆயினும், மாலிக் அந் நகரத்தைத் தாக்கி ஏராளமான பொருளைக் கொள்ளையிட்டார். அமீர் குஸ் ராவின் கணக்குப்படி அக் கொள்ளையில் ஐந்நூற்றுப் பன்னிரண்டு யானைகளும் ஐயாயிரம் குதிரைகளும், ஐந்நூறு மணங்கு பல

வகையான வைரம் முத்து, மரகதம், இரத்தினம் இவற்றால் ஆன அணிகலன்களும் அடங்கியிருந்தன. அமீர் குஸ்ராவை நாம் நம்புவதாயிருந்தால் அவர் கூற்றுப்படி மாலிக் இராமேசுவரம் வரையில் சென்றார் எனலாம். கி.பி. 1311-ல் அக்டோபர் 18-ல் அவர் அறுநூற்றுப் பன்னிரண்டு யானைகள், இருபதாயிரம் புரவிகள், தொண்ணூறாயிரம் மணங்கு பொன், சில பெட்டிகள் நிறைய நகைகளும் முத்துகளுமான இவை அடங்கியதொரு பெருங்கொள்ளைப் பொருள்களுடன் டில்லிக்குத் திரும்பினார். இவ்வாறு மா'பார் நாடு டில்லி சுல்தானியர் ஆதிக்கத்தின் கீழ் வந்து முகமது துக்ளக் ஆட்சியின்[1] ஆரம்ப காலம் வரை இருந்து வந்தது.[1] கி.பி. 1213-ல் இராமச்சந்திர தேவனின் மகன் சங்கர தேவன் தகப்பனார் டில்லி சுல்தானுக்கு வாக்களித்திருந்த கப்பப் பணத்தை நிறுத்திவிட்டு சுயஆட்சி பெற முயன்றார். இதைக் கண்ட மாலிக் நாயிப் மறுபடியும் டில்லியிருந்து படையுடன் வந்து சங்கர தேவனைத் தோற்கடித்துக் கொன்றார். இவ்வாறு தென்னிந்தியா முழுவதும் டில்லி சுல்தானின் ஆதிக்கத்தை ஒப்பு கொள்ளவேண்டியதாயிற்று.

ஆனால், நகரங்களைக் கொள்ளையிடுதல், மக்களைக் கொலை புரிதல், கோயில்களைக் கொள்ளையிடுதல் இவைபோன்ற செயல்கள் நிறைந்திருந்த மாலிக் நாயிப்பின் படையெடுப்புகள் தென்னிந்தியப் பழங்குடிகள் மனத்தை வெகுவாகப் பாதித்தன. தாற்காலிகமாகப் பெருவலி படைத்த படையெடுப்பாளர்களுக்குப் பணிவதைத் தவிர அவர்களுக்கு வேறு வழியில்லை[2] ஆயினும், தங்கள் மனத்தில் அவர்கள் ஆழ்ந்த வெறுப்புக் கொண்டிருக்கவேண்டும். இந்த வெறுப்பின் அரசியல் விளைவாக விளைந்த விளைவே விஜய நகரத்தின் எழுச்சியாகும்.

அரச பதவியைப் பற்றிய கொள்கையில் அலாவுதீன் தமக்கு முன் ஆட்சி செய்தவர்களின் கருத்துக்களுக்கு முற்றிலும் மாறுபட்ட கருத்துகளைக் கொண்டு நடந்தார். அரசியல் விவகாரங்களில் மதத் தலைமைப் பீடத்திற்கு இருந்த அதிகாரத்தை முதன் முறையாக எதிர்த்தார். உலேமாக்களின் (Ulemas) துணையின்றி அரசியலின் நலன்களைத் தம்மால் பாதுகாக்க முடியும் என்று வெளிப்படையாகக் கூறினார். மதத் தாபனத்தின் அதிகாரத்தை ஆதரித்தவரும் தம்முடைய சபைக்கு அடிக்கடி விஜயம் செய்தவருமான குவாஸி-முகிஸ்-உதீன் என்பவரிடம் அலாவுதீன் இவ்வாறு கூறுவதுண்டு: 'ஆயிரக்கணக்கான மக்கள் அழியக்கூடும்

[1] இது சில நாணயங்கள் இபின் பதூதாவிலிருந்தும் தெரிய வருகிறது J.R.A.S. 1909, பக்கம் 669-70.

[2] ஸீவெல் சரித்திரம், பக்கம் 177.

என்று தோன்றும் கலவரங்களை ஒடுக்க வேண்டி என் மனத்தில் இது நாட்டிற்கும் மக்களுக்கும் நன்மை பயக்கும் என்று தோன்றும் ஆணைகளை நான் பிறப்பிக்கிறேன். இதை அலட்சியம் செய்து என்னையும் மதியாமல் என் உத்தரவுகளை மீறுகின்றனர்; ஆகையால், நான் அவர்களைக் கீழ்ப்படியச் செய்யக் கடுமையுடன் நடந்து கொள்ளுவது கட்டாயமாகிவிடுகிறது. இது சட்டப்படியுள்ளதா அன்றிச் சட்டத்திற்குப் புறம்பானதா என்று எனக்குத் தெரியாது. எதெது நாட்டின் நலனுக்கு உகந்தது என்று படுகின்றதோ அல்லது நெருக்கடிக்கு ஏற்றது என்று தோன்றுகிறதோ அதை நான் ஆணையிடுகிறேன்.' அலாவுதீனின் இந்த நோக்கத்தைக் கொண்டு அவர் இஸ்லாமிய மதத்தைப் புறக்கணித்தார் என்ற முடிவிற்கு வருவது தவறாகும். இந்தியாவிற்கு வெளியில் இவர் 'இஸ்லாமைப் பாதுகாக்கும் பெரியார்' என்று அறியப்பட்டார். இந்தியாவில் இதுபற்றிக் கருத்து வேறுபாடு உண்டு. மதத் தாபனத்தை ஆதரிக்கும் பார்னியும் அவரை ஆதரிப்பவர்களும் 'அவர் மதத்திடம் காட்டிய அலட்சியத்தை மிகைப்படுத்தியுள் ளனர். உற்று அறிந்து உணரும் தன்மையும், மேலான பண்பாடும் கொண்ட அமீர் குஸ்ராவ் அவரை இஸ்லாம் மத ஆதரவாளராகக் கருதுகிறார். அலாவுதீனே குவாஜியிடம் கூறும்போது, 'நான் விஞ்ஞானம் அல்லது நூல்களைக் கற்றதில்லை. ஆயினும், முஸல்மான் கூட்டத்தில் நான் ஒரு முஸல்மான்' என்கிறார். அலாவுதீனின் நினைவுச் சின்னங்களின் மீது காணப்படும் சாசனங் களும், 'இவர் இஸ்லாம் மதத்தில் நம்பிக்கை இழக்கவில்லை' என்று கூறுகின்றன.

அலாவுதீன் தம் மனத்திற்கு எது சரி என்று பட்டதோ அதில் உறுதியுடன் நடந்துகொண்டார். மத்தியில் வலிமை வாய்ந்த ஓர் ஆட்சி ஏற்படுத்தும் வகையில் அவர் தீவிரமாக இருந்தார். அகமத் கானின் கலகம், சுல்தான் சகோதரியின் மகனது புரட்சி, உமார், மங்குகான் இவர்கள் பதான், அயோத்தி இங்குச் செய்த துரோகம், 'புதிய முஸல்மான்களின்' சதிகள் இவை எல்லாவற் றையும் திறமையுடன் அடக்கிப் பின் தம் ஆட்சியில் சில குறை பாடுகள் உள்ளன என்று நம்பினார். தமக்கு நெருங்கிய சிலர் புத்திமதிகளைக் கேட்டபின் நான்கு காரணங்களை அவர் இக் குறைபாட்டிற்குரியவை எனக் கண்டார். அவை:—(1) அரசியல் அலுவல்களைச் சுல்தான் புறக்கணிப்பது (2) மதுவின் உபயோகம் (3) பிரபுக்கள் ஒருவரோடொருவர் நெருங்கிப் பழகுவது அவர் களுக்குச் சதியை உருவாக்க உதவியது (4) பணப்பெருக்கமும் அதனால் விளையும் தீமைகளும் பூசல்களும் செருக்கையும் அரசரிடம் துரோகத்தையும் விளைத்தல்.

இந்தத் தீமைகளை அறவே ஒழிக்க வேண்டும் என்ற உறுதியுடனும் புரட்சிகளால் தாம் பாதிக்கப்படாமலிருப்பதற்காகவும் சுல்தான் சில அடக்குமுறைச் சட்டங்களை உருவாக்கினர். தனிச் சொத்துத் தாபனங்களை முதலில் அவர் தாக்கினர். பென்ஷன்களும் உதவி நிதிகளும் அரசாங்கத்துக்கு உரிமையாக்கப்பட்டன. இனும் முறை, முதலாளித்துவ முறை, உதவிநிதி முறைப்படியுள்ள எல்லாக் கிராமங்களும் பறிமுதல் செய்யப்பட்டன. மக்கள் நசுக்கி ஒடுக்கப்பட்டனர். பலவகையான முறையில் மக்களிடமிருந்து பணம் வற்புறுத்தி வசூலிக்கப்பட்டது. இதனுல் பலரிடம் பணம் என்பது இல்லாது போயிற்று. இவ்வாறு நிலைமை ஏற்பட்டு முடிவில் மாலிக்குகள், அமீர்கள் அரசாங்க உத்தியோகஸ்தர்கள், மூல்தானிகள், வங்கியர்கள் இவர்களைத் தவிர வேறு ஒருவரிடமும் அற்பக் காசுகூடக் கிடையாது என்ற நிலைமை ஏற்பட்டது' என்று பார்னி கூறுகிருர். இரண்டாவதாகச் சுல்தான் திறமையான ஒற்றர்படை ஒன்றை நிறுவினர். அவர்கள், சுல்தானிடம் எல்லாவற்றையும் பற்றிக் கூறவேண்டும் என்றும், சந்தையிடங்களில் நடைபெறும் மிகு சாதாரண உரையாடல்களையும் நடவடிக்கைகளையும் பற்றிக்கூடக் கூறவேண்டுமெனப் பணிக்கப்பட்டனர். 'இந்த முறை மிகு கடுமையாக வேலை செய்ய ஆரம்பித்தது. பிரபுக்கள் பெரிய இடங்களிலும் உரத்துப் பேச அஞ்சும்படியான அளவிற்கு இது அச்சம் விளைவித்தது. அவர்கள் தங்களுக்குள் ஏதாவது பேசிக்கொள்ள வேண்டியிருந்தால் சைகைகள் மூலமே அவ்வாறு செய்தனர்.' மூன்ருவதாகப் போதை தரும் பானங்கள், மருந்துகள் இவை அருந்துவதையும் கவருடுவதையும் தடை செய்தார். குடிக்கும் பழக்கத்தைத் தாமும் கைவிட்டுச் சுல்தான் ஓர் எடுத்துக்காட்டாக விளங்கினர். மது அருந்தும் அவருடைய கிண்ணங்கள் எல்லாம் பொடிப்பொடியாக்கப்பட்டன. நான்காவதாகப் பிரபுக்களின் சமூகக் கூட்டங்களையும் அவர் தடை செய்தார். அவர்கள் சந்திக்க வேண்டியிருந்தால் அதற்குச் சுல்தானின் உத்தரவு பெற வேண்டியிருந்தது. இந்த உத்தரவு மிகு கடுமையாக அமலாக்கப்பட்டதால், 'விருந்துகளும் இலவச உணவு அளிப்பதும்' அறவே ஒழிந்தன. ஒற்றர்களின் அச்சம் காரணமாகப் பிரபுக்கள் எங்கும் கூடாமல் அமைதியுற்றனர்; அவர்கள் விருந்துகள் நடத்துவதை விட்டுவிட்டனர். ஒருவரோடொருவர் செய்தி அனுப்பிக்கொள்வதையும் நிறுத்தி விட்டனர்.

சுல்தான் கடைப்பிடித்த மற்ற ஒழுங்கு முறைகளும் மிகு கடுமையானதாக இருந்தன. மக்களுள் பெரும்பாலோர் தங்கள் வருவாயில் பாதியை அரசாங்கத்திற்கு கொடுக்க வேண்டி

யிருந்தது. மேய்ச்சல் நிலங்களுக்குக் கொடுக்க வேண்டிய வரியும் மிக அதிகமானதாக இருந்தது. மக்கள் எந்த விதமான ஆயுதத்தையும் வாங்கி உபயோகிக்க முடியாதபடி அவர்களின் பொருளாதார நிலையை அவ்வளவு மோசமாக்க விரும்பினார். குதிரை வைத்துக்கொள்ளவும், நேர்த்தியான உடைகள் உடுக்கவும், வாழ்க்கையில் எந்த விதமான சுகபோகங்களையும் அவர்களால் துய்க்கவும் முடியாத வறுமை ஏற்பட்டது. உண்மையில் பொதுமக்களின் நிலை மிகவும் மோசமானதாயிற்று. ஒருவரும் தலை நிமிர்ந்து நிற்க முடியவில்லை. அவர்கள் வீட்டில் பொன், வெள்ளி, டாங்கா அல்லது ஜிட்டால் இருந்த அடையாளமே இல்லை. வளம் மறைந்தது. வறுமையால் பீடிக்கப்பட்ட குட், மக்காடம் (Khuts and Maqaddams) இவர்களின் மனைவிமார்கள் முஸல்மான்களின் வீட்டில் கூலி வேலை செய்துவந்தனர். நிலவரி வசூலிப்பது ஒரே சட்டத்தின் கீழ்க் கொண்டுவரப்பட்டது. பரம்பரைப் பாத்தியமாக நிலவரி வசூலித்து வந்தவர்களும் உத்தியோகஸ்தர்களும் இந்த உத்திரவுப்படியே நடக்கும்படி சுல்தானது நாயிப் வாசியரான ஷ்ராப்குவாயினால் மிகு கண்டிப்பாக வற்புறுத்தப்பட்டனர். இவரையும் இவரது உதவியாளர்களையும் கண்ட மக்கள் கொடிய நோய்க்கு அஞ்சுவதை விட அதிகமாகப் பயந்தனர். குமஸ்தா வேலை ஒரு பெருங் குற்றமாகக் கருதப்பட்டது. ஒரு குமாஸ்தாவிற்குப் பெண் கொடுக்க எந்த மனிதனும் விரும்பவில்லை.

அரசாங்கம் சரிவர நடைபெறவேண்டுமானால் வலியதொரு படை வேண்டுமென்பதைச் சுல்தான் சரியாக உணர்ந்திருந்தார். ஆகவே, பெரும்படை அமைப்பதில் அவர் முயற்சி செய்து வந்தார். அப் படையைத் திறமையாக நிருவாகம் செய்ய ஏராளமான பொருள் தேவையாக இருந்தது. தென்னாட்டிலிருந்து ஏராளமான செல்வம் டில்லியில் குவிந்தமையாலும் செல்வத்தின் மதிப்பு மிகு குறைவாக இருந்தபடியாலும் விலைவாசிகள் மிகவும் உயர்ந்துவிட்டன. படைவீரர் ஒருவருக்கு ஆண்டு ஒன்றிற்கு 234 டங்காக்கள்[1] என்று சுல்தான் நிர்ணயம் செய்திருந்தார். இரண்டு குதிரைகளைப் பராமரிக்கும் ஆளுக்கு 78 டங்கா என்று ஏற்படுத்தியிருந்தார். படையினரின் சம்பளத்தை அவர் அதிகரிக்க விரும்பவில்லை. ஏனெனில், அது அரசாங்க வருமானத்தைப் பெரிதும் பாதிக்கும் என்று எண்ணினார். அவரவர்களால் கொடுக்கக் கூடிய அதிக பட்ச அளவிற்கு வரியும் விதித்திருந்தார். படைவீரர்கள் குறைந்த ஊதியத்தில் வாழ்க்கை நடத்த அவர்களுக்குச் சாத்தியமாகும் பொருட்டு வாழ்க்கைக்கு மிகவும்

[1] ஒரு டங்காவின் மதிப்பு ஒரு ரூபாயின் மதிப்பைக் காட்டிலும் சற்றுக் கூடுதலாக இருந்தது.

தேவையான பண்டங்கள் முதல் அடிமைகள், குதிரைகள், படைக்கலங்கள், பட்டு, மற்றும் பல ஆடம்பரப் பண்டங்கள்[2] வரை தேவையையும் கிடைப்பதையும் கூடுமானவரையில் கணக்கிட்டு விலைவாசியைக் கட்டுப்படுத்திச் சில கட்டளைகள் பிறப்பித்திருந்தார். தலைநகரைச் சுற்றியுள்ள காஸ்ஸா கிராமங்களிலிருந்து கிடைக்கும் நிலவரியைத் தானியமாகப் பெற்று டில்லி நகரில் உள்ள அரசாங்கக் களஞ்சியங்களில் சேர்த்து வைக்கப்பட வேண்டுமென்றதனால் பற்றாக்குறை ஏற்படும் காலங்களில் சுல்தான் தம் சொந்தக் களஞ்சியங்களிலிருந்து சந்தைகளுக்குத் தானியம் அனுப்பச் சாத்தியமாக இருந்தது. தனியார்கள் தானியங்களைச் சேகரித்து வைப்பது அனுமதிக்கப்படவில்லை. திவானிரியசாட்ஷா ஹானா-இ-மண்டி என்ற அதிகாரிகளாலும், ஒற்றர் கூட்டத்தினாலும் சந்தைகள் கட்டுப்பாட்டுக்குள் வைக்கப்பட்டிருந்தன. அரசாங்க தப்தரில் வியாபாரிகள் தங்களைப் பதிவு செய்துகொண்டு தங்கள் பொருள்களையெல்லாம் விற்பனைக்காக ஸராய் அதில் (**Sarai Adl**) என்னும் பதான் வாயினுக்கருகிலுள்ள திறந்த வெளியிடத்திற்குக் கொணர்ந்துவர வேண்டும். தங்கள் நடத்தைக்காக அவர்கள் தகுந்த ஜாமீன் அளிக்க வேண்டியிருந்தது. சுல்தான் விதித்த ஒழுங்கு முறைகளை மீறுகின்றவர்களுக்குக் கடுமையான தண்டனைகள் அளிக்கப்பட்டன. வியாபாரிகள் குறைந்த எடைகளை உபயோகிக்காதபடியும், அவ்வாறு குறையும் எடைக்குச் சரியாக அவர்களது சதையை வெட்டியெடுக்கவும் உத்தரவு இடப்பட்டிருந்தது. சுல்தான் உயிருடன் இருக்கும் வரையில் இந்தச் சட்டதிட்டங்கள் சரிவர நடத்தப்பட்டன. இதனால் பெரியதொரு நிரந்தரப் படையைக் குறைந்த செலவில் சுல்தானால் நிருவகிக்க முடிந்தது. ‘சந்தைகளில் தானியத்தின் விலை என்றும் மாறாமல் நிலவிவந்தது. கால அதிசயங்களில்

[2] பண்டங்களின் விலைகள் பின்வருமாறு தீர்மானிக்கப்பட்டிருந்தன :

| | ஆளொன்றுக்கு ஜிட்டல்கள் | | ஒரு சேருக்கு ஜிட்டல். |
|---|---|---|---|
| கோதுமை | $7\frac{1}{2}$ | சர்க்கரை | $1\frac{1}{2}$ |
| பார்லி | 4 | பழுப்புச் சர்க்கரை | $\frac{1}{4}$ |

| | ஆளொன்றுக்கு ஜிட்டல்கள் | | ஒரு சேருக்கு ஜிட்டல் |
|---|---|---|---|
| உமியுடன் கூடிய அரிசி | 5 | வெண்ணெய் $2\frac{1}{2}$ சேர் | 1 |
| **Mase** | 5 | நல்லெண்ணெய் 3 சேர் | 1 |
| பயறு | 5 | உப்பு $2\frac{1}{2}$ மணங்கு | 5 |
| **Moth** | 3 | | |

தோமஸ், பதானிய மன்னர்களின் சரித்திரம் பக்கம் 160; எலியட் வால்யூம் III, பக்கம் 192. ஜிட்டல் (செம்பு நாணயம்) 175 கிரெய்ன் கொண்ட வெள்ளி டாங்காவில் பாதி மதிப்பு. $1\frac{1}{4}$ பார்த்திங் மதிப்புக்குச் சமமானது. 1 டில்லி மணங்கு 28. 8 பவுண்டுக்குச் சமம். அவாயர்டு பாஸாம் 40 சேரும் 1 மணங்கு. தோமஸ், கிரானிகல் etc. பக்கம் 160-2.

ஒன்று' என்று பார்னி குறிப்பிடுகின்றார். ஆனால், இவற்றால் நாட்டின் பொருளாதார நிலையில் பொதுவான விளைவுகள் எப்படியிருந்தன என்பதைப் பற்றித் தெளிவாக அவர் குறிப்பிடவில்லை.

கி. பி. 1312ஆம் ஆண்டு இறுதியில் அலாவுதீன் தம் வாழ்க்கையின் உச்ச நிலையை அடைந்தார். ஆனால், வாழ்க்கையின் சோக முடிவு அண்மையிலேயே இருந்தது. இதிலிருந்து அவர் கிரகம் ஒளி மங்கியது. அதன் மங்கிய ஒளியில் அவர் வாழ்க்கை தொடர்ந்தது. பார்னி கூற்றுப்படி 'வெற்றி இனிமேல் அவருடன் பொருந்தியிருக்கவில்லை. வழக்கம்போல் அதிர்ஷ்டம் மாறி மாறி நிலையற்றதாக இருந்தது. விதி அவரை அழிக்கத் தன் பாசக் கயிற்றை இறுக்கியது.' அளவுக்கு மீறிய அவர் செயல்கள் அவர் உடல் நலனை அழித்தன. அவர் அறிவு குன்றியது. அவர் தீர்ப்புகளில் குறைபாடுகள் ஏற்பட்டன. தமது பிரிய அடிமை காபூரின் ஆதிக்கத்தில் ஒரு கைப்பொம்மையானார். அவரைத் தம் முதல் அமைச்சராகவும் படைத்தலைவராகவும் நியமித்துத் திறமையும் வயதும் மிக்க அதிகாரிகளைப் பதவியிலிருந்து விலக்கியிருந்தார். பல இடங்களில் கலகங்கள் முளைத்தன. காபூரின் சூழ்ச்சியால் அரண்மனைச் சதிகளும் உருவாயின. காபூர் சுல்தானின் மனைவியையும் மகனையும் சுல்தானிடமிருந்து பிரித்து வைத்திருந்தார். கொஞ்ச காலமாகத் துன்புறுத்தி வந்த நோய் முற்றி எமனாக முடிந்தது. கி. பி. 1316 ஜனவரி இரண்டாம் நாள் சுல்தான் மரணமடைந்தார். அவர் மரணமடையும்போது பல தொல்லைகளில் சிக்கியிருந்தார். அவரது சடலம் ஜாமி மசூதிக்கு முன் ஒரு சமாதியில் அடக்கம் செய்யப்பட்டது. காபூர்கான் சுல்தானின் வியாதி முற்றி அவர் மரணமடையும்படி செய்தார் என்று சிலர் கருதுகின்றனர்.

அலாவுதீன் தம் போக்குப்படியே நடக்கும் அரசர். அவருடைய ஆசைக்கு அளவு இல்லை. ஆசைக்கு எவ் விதத் தடையுமில்லை, அவர் தம் ஆசைகள் நிறைவேறுவதற்கு எத்தகைய வழியைப் பின்பற்றவும் தயங்கியது இல்லை. 'அவர் சிந்திய இரத்தத்திற்கு அளவில்லை. எந்தப் பரோவும் (Pharaoh) இவரைப் போன்ற குற்றவாளியில்லை'[1] என்று பார்னி எழுதுகிறார். ஜலால் உதீனின் துன்பம் மிக்க முடிவு, இறந்துபோன சுல்தானின் உறவினர்களை இவர் நடத்திய முறை, புதிய முஸல்மான்களுக்கு எதிரான கடுமையான நடவடிக்கைகள், இதில் அவர் அவர்கள் பெண்களையும் குழந்தைகளையுங்கூடத் தண்டனையிலிருந்து

1 எலியட் வால்யூம் III, பக்கம் 156.

விலக்காமலிருந்தது இவை யாவும் சுல்தானின் கடிய மனப்பான்மைக்குத் தக்க சான்றுகளாகும். இவர் அதிக அளவில் பிறர்மேல் சந்தேகமும் பொறுமையும் கொண்டிருந்தார். அவை காரணமாக இவர் தமக்கு மிகவும் உபயோகமான தொண்டு செய்தவர்களிடமும் நன்றி உணர்ச்சியின்றி நடந்துகொண்டார். பலருடைய உதவி பெற்றே இவர் டில்லி அரியணையில் அமர்ந்தார். ஆயினும், அரியணை ஏறிய உடனேயே தமக்கு மிக உதவியாக இருந்த பல பிரபுக்களின் உடைமைகளையும் உத்தியோகங்களையும் பறிமுதல் செய்து அவர்களைச் சிறையிலடைத்தார். மேலும் பலரைக் குருடாக்கிக் கொலை செய்யவும் பணித்தார். சுல்தானின் சொந்தத் தளபதியான சபார்கானின் வீரச் செயல்களில் இவர் பொறாமையே கொண்டார். அவர் மங்கோலியர்களால் கொல்லப்பட்டவுடன் இவர் மிகவும் மனஅமைதி பெற்றார். 'எளியதொரு முறையில் தம் பெயருக்கு எவ் விதமான இழுக்கும் ஏற்படாத வகையில் அவர் தொலைந்தார்' என்று சுல்தான் நிம்மதியுடன் கூறினார். 'அலாவுதீனுக்குக் கல்வியறிவு இல்லை, என்று பார்னி எழுதுகிறார்.[1] ஆயினும், பெரிஷ்டா கூற்றுப்படி இவர் ஆட்சி பெற்ற பின் பாரசீக மொழியை வாசிக்க அறிந்து கொண்டார் என்று தெரிகிறது.

இந்தச் சுல்தானுடைய காலத்தில்தான் அமீர் குஸ்ராவ், ஹாஸன் போன்ற சிறந்த அறிஞர்கள் வாழ்ந்துவந்தனர். கட்டடக் கலையில் சுல்தான் மிகவும் பிரியம் கொண்டிருந்தார். இவருடைய ஆணையின்பேரில் பல கோட்டைகள் கட்டப்பட்டன. அவற்றுள் சிறந்தவை வட்ட வடிவான ஆலைக்கோட்டை (Alai Fort) அல்லது கோஷாக்-இ-சிரி (Koshak-i-Siri) என்ற கல்லாலும், செங்கல் சுண்ணும்பாலும் கட்டப்பட்ட சுவர்கள் ஆகும். அச் சுவர்களில் ஏழு வாயில்கள்[2] இருந்தன. ஏராளமான வெள்ளியை அள்ளி வீசிப் பாழ்பட்டுக் கிடந்த எல்லா மசூதிகளையும் புதுப்பித்தார்' என்று அமீர் குஸ்ராவ் எழுதுகிறார். கி. பி. 1311-ல் குதப் மசூதியின் முற்றத்தில் புதியதொரு ஸ்தூபி எழுப்பினார். இத் தூபி பழைய குதுப்மினாரைவிட இரு மடங்கு பெரியதாக இருந்தது. அவர் அந்திமக் காலத்தில் ஏற்பட்ட பல விதமான இன்னல்களால் அவரது வாழ்நாளிலேயே இந்தத் தூபி

[1] பார்னி, எலியட், வால்யூம் III, பக்கம் 183.

[2] இந்தக் கோட்டை கி. பி. 1303-ல் கட்டப்பட்டது. ஷெர்ஷா சிரிக் கோட்டையை இடித்துவிட்டுப் பழைய டில்லியின் அருகில் புதியதொரு நகரைக் கட்டினார். சிரிக் கோட்டை இருந்த இடத்தில் ஷஹாபாத் என்னும் சிற்றூர் இருக்கிறது. சர் சையத் அகமத்கான் இயற்றிய அஸர்-உஸ்-சனடிட் (Asar-us-sanadid).

கட்டிமுடிக்கப்பட இயலவில்லை. கி.பி. 1311-ல் இந்த மசூதிக்குச் சிவப்பு மணற்பாறையினுல் ஆகிய பெரியதொரு வாயிலையும் அவ் வாயிலின் நான்கு பக்கங்களில் சிறிய வாயில்களையும் கட்டும்படி பணித்தார்.

எல்லாவற்றிற்கும் மேலாகச் சரித்திரத்தில் அலாவுதீன் அவருடைய அரசியல் நடவடிக்கைகளால் நன்கு அறியப்படுகிருர். அவர் தீரமும் உறுதியும் கொண்ட வீரர். அவர் எடுத்த எல்லா இராணுவ நடவடிக்கைகளிலும் வெற்றியையே கண்டார். பால்பனின் இராணுவ நோக்கங்களைச் சீரிய முறையில் செயற்படுத்திஞர். ஓர் ஆட்சியாளராகவும் தம் வாழ்க்கையின் முற்பகுதியில் மெச்சத் தக்க ஊக்கம் காட்டிஞர். முதன்முறையாக மதப் பிரபுக்களின் துணையின்றித் தனியான முறையில் அரசியல் அலுவல்களை நிறைவேற்றிய பெருமை இவரையே சாரும். எப் பாடுபட்டாயினும் எவ்வகையிலாயினும் அரசாங்கத்தை வலுப்படுத்த அவர் உறுதி உடையவராக இருந்தார்.

இராணுவ அடிப்படையில் அவர் அமைக்க முயன்ற ஆட்சி மணலில் அமைக்கப்பட்டது. அவருடைய கடும் நடவடிக்கைகள் வெளிப்படையாக அவர் ஆட்சியை வலுப்படுத்த உதவியதாகத் தோன்றின. ஆனுல், ஒடுக்கப்பட்ட பிரபுக்களின் மனத்தில் அதிருப்தியையே அது வளர்த்தது. அவமானமுற்ற இத் தலைவர் கள் தாங்கள் இழந்த பதவியைப் பெறத் தக்கதொரு நேரத்தை எதிர் நோக்கிக்கொண்டிருந்தனர். அவருடைய முறையில் இருந்த பெரிய குற்றம் யாதெனில் ஆளப்பட்டவருடைய மனப் பூர்வமான நல்லெண்ணத்தை அது பெறவில்லை. அந்த நல்லெண்ணமே எந்த அரசாங்கமும் நிலைப்பதற்கு இன்றியமை யாதது. அவ்வாறு ஏற்படுத்தப்பட்ட அரசாங்கம் நிலைபெறு வதற்கு அதை ஏற்படுத்தியவரின் நேரான திறனே காரணமாக இருந்தது. உண்மையில் அதன் அழிவிற்கான சின்னங்கள் சுல்தானின் இறுதி நாளிலேயே தோன்றலாயின. அவர் மறைந்த சிறிது காலத்திலேயே பிளவுச் சக்திகள் நிலைபெற்று அவர் பெருமுயற்சி செய்து ஏற்படுத்திய அரசாட்சி குலைந்தது. அவர் தம் மாமனிடம் நன்றியற்ற முறையில் நடந்துகொண்டதற்கான தண்டனை அவருடைய குடும்பத்தினருக்கு ஏற்பட்டது. சுல்தான் யாரிடம் அசைக்கமுடியாத நம்பிக்கை கொண்டிருந்தாரோ, அவராலேயே அவருடைய பேரும் புகழும் அடியோடு நிலைகுலைந்து வீழ்ந்தன. அவர்தாம் சுல்தானின் பேரன்பிற்குரிய மாலிக் காபூர்.

## 3. காபூரின் மிதமிஞ்சிய செல்வாக்கு

தம் எஜமானனைப் போன்று தாட்சணியமற்ற முறையில் மேலான தம் செல்வாக்கை இராச்சியத்தில் நிலைநாட்டக் காபூர் முயன்றார். அலாவுதீன் இறந்த இரண்டாவது நாளிலேயே இறந்துபோன சுல்தானின் உயில் ஒன்றைக் காபூர் வெளியிட்டார். அந்த 'உயில்' மட்டும் உண்மையெனக் கொள்ளப்படுமாயின் அது சுல்தானை வேண்டாத அளவு நிர்ப்பந்தப்படுத்தி எழுதும்படி செய்யப்பட்டதாகும். அதன்படி சுல்தானின் மகன் கிஸ்ர்கானை விலக்கிவிட்டு அரியணையைச் சுல்தானின் ஐந்து அல்லது ஆறு வயது நிரம்பிய சிறு குழந்தையான ஷாஹிப் உதீன் உமாரா அடைய வேண்டுமென்று எழுதப்பட்டது. வயது நிரம்பாத அச் சிறுவன் அரியணை ஏற்றப்பட்டான். அவனது ஸ்தானிகராகக் காபூர் நியமிக்கப்பட்டார். ஆயினும், அவர் தாம் நாட்டின் உண்மையான சர்வாதிகாரியாக விளங்கினார். அரியணையைத் தாமே கைப்பற்ற வேண்டும் என்னும் பேராசையின் தூண்டுதலால் காபூர் பயங்கரமான பழிச் செயல்களைச் செய்தார். அலாவுதீனின் மற்ற மூத்த 'பிள்ளைகளான கிஸ்ர்கான், ஷாதிகான் இவர்களைக் குருடாக்கும்படி செய்தார். அவர்களின் தாயான இராணி பொருள்கள் யாவும் பறிக்கப்பட்டுச் சிறையில் அடைக்கப்பட்டார். அலாவுதீனின் மூன்றும் மகனாகிய முபாரக் என்பவரை ஹஸார் சுடனியில் (ஆயிரம் தூண்களுடைய அரண்மனை) சிறை வைத்தார். அவர் கண்களையும் பறிக்கவேண்டும் என்ற நோக்கமும் உடையவராக இருந்தார். ஆயினும், அந்த இளைஞர் எப்படியோ தப்பி ஓடிவிட்டார். கில்ஜிகளுக்கு உறுதுணையாக நின்ற மற்றப் பிரபுக்களையும் அடிமைகளையும் அகற்றவும் காபூர் முனைந்தார். அவருடைய கொடுஞ்செயல்களுக்குரிய கொடுமையை விரைவிலேயே அவர் பெற்றார். முப்பத்தைந்து நாள்கள் 'கொடியஆட்சி'க்குப் பின்னர்க் காலஞ்சென்ற சுல்தான் அலாவுதீனின் வேலையாள் ஒருவனால் காபூர் கொல்லப்பட்டார். இதன் பின்னர்ப் பிரபுக்கள் முபாரக்கைச் சிறையினின்றும் மீட்டுவந்து அவருடைய வயது நிரம்பாத தம்பியின் ஸ்தானிகராக நியமித்தனர். இவ்வாறு அறுபத்து நான்கு நாள்கள் ஸ்தானிகர் பதவி வகித்த முபாரக் கி.பி. 1316 ஏப்ரல் மாதத்தில் சிறுவனைக் குருடாக்கிவிட்டுக் குத்புதீன் முபாரக்ஷா என்ற பட்டம் பூண்டு அரியணை ஏறினார்.

## 4. குத்புதீன் முபாரக்-கில்ஜிகளின் வீழ்ச்சி

இப் புதிய அரசர் பட்டமெய்திய சில ஆண்டுகள் வரை எடுத்த காரியங்களில் வெற்றி கண்டுவந்தார். தம் தந்தையின்

கொடிய கட்டளைகளை இவர் ஒழித்தார். அரசியல் கைதிகள் விடுவிக்கப்பட்டனர். காலஞ்சென்ற சுல்தானால் பறிமுதல் செய்யப்பட்ட நிலங்களும் மானியங்களும் பாத்தியப்பட்ட பழைய உரிமையாளர்களுக்குத் திருப்பி அளிக்கப்பட்டன. கட்டாயச் சுங்கம் நீக்கப்பட்டது. இச் செயல்கள் மக்களுக்குச் சந்தேகமின்றித் திருப்தி அளித்தன. ஆனால், பார்னி கூறியபடி, 'அரசரிடம் மக்களுக்குள்ள அச்சமும் அரச கட்டளைக்கு அஞ்சுவதும் மறைந்தன.' மேலும், சுல்தான் இனிய வாழ்க்கையில் மூழ்கினார். இதனால், அரசாங்க நலன் பாதிக்கும்படியான செயலழிந்த தன்மை கொள்ளும்படியாக ஏற்பட்டது. அவருடைய உதாரணத்தைப் பின்பற்றிய மக்களும் துன்பமுற்றனர். பார்னி கூறியபடி அவரது நான்காண்டு ஆட்சிக் காலத்தில் குடிப்பது, இசை கேட்பது, இன்பம் துய்ப்பது, வெகுமதிகளை வேண்டியபடி அளித்துப் பொருள்களைக் கரைப்பது இவை தவிர அரசர் வேறொரு செயலும் செய்யவில்லை. கூர்ச்சரத்தினின்று வந்த மதம் மாறிய ஒரு கீழ்ப்பிறப்பாளனின் வசத்தில் முற்றிலும் இந்த சுல்தான் வீழ்ந்துவிட்டார். அவருக்கு மன்னர் குஸ்ருகான் என்ற பட்டம் வழங்கி நாட்டின் முதலமைச்சராகவும் நியமித்தார். இந்தப் பிரிய நண்பர் சுல்தானின் கீழ்த்தர இச்சைகளைப் பூர்த்தி செய்வதிலேயே ஈடுபட்டு முடிவில் அரியணையைத் தாம் கைப்பற்ற வேண்டும் என்ற அந்தரங்க எண்ணமுடையவராக இருந்தார்.

இந்துஸ்தானத்தின் நல்விதி காரணமாக மங்கோலியர்கள் எந்தப் படையெடுப்பையும் மேற்கொள்ளவில்லை. வேறு எங்கும் அவரது ஆட்சிக் காலத்தில் எவ்விதமான தொந்தரவுகளும் விளையவில்லை. இரண்டே இரண்டு கலகங்கள் மட்டும் தோன்றின. ஒன்று கூர்ச்சரத்திலும் மற்றொன்று தேவகிரியிலும் (தக்காணத்தில்) நடைபெற்றன. கூர்ச்சரத்தில் விளைந்த கலகம் சுல்தானின் மாமனாராகிய அயின்-உல்-முல்க் என்பவரால் திறமையாக ஒடுக்கப்பட்டது. சுல்தான் இவருக்கு சபார்கான் என்ற பட்டம் வழங்கி அங்குக் கவர்னராகவும் நியமித்திருந்தார். சுல்தானே ஒரு பெரும்படையுடன் தேவகிரிக்குச் சென்றார். சுல்தானின் வருகையைக் கண்டதும் தேவகிரியின் மன்னர் ஹரபாலதேவன் ஓடிவிட்டார். ஆனால், அவர் தொடரப்பட்டுச் சிறைப்பிடிக்கப்பட்டு உயிருடன் தோலுரிக்கப்பட்டார். இவ்வாறு யாதவர்களின் அரசு முஸ்லிம்களின் வசமாயிற்று. சுல்தான் மாலிக் யாக்லாக்கி என்பவரைத் தேவகிரியின் கவர்னராக நியமித்தார். மேலும், குஸ்ருகானைத் தெலிங்கானாவிற்குப் படை கொண்டு செல்லும்படியும் சுல்தான் பணித்தார். அதுவும் வெற்றியாக முடிந்தது.

தேவகிரியில் சுல்தான் ஓராண்டுக் காலம் தங்கி அங்கொரு மசூதியைக் கட்டி முடித்தபின் டில்லிக்குத் திரும்பினார்.

இவ் வெற்றிகள் சுல்தானை முன்னைவிட மோசமாக்கின. அரச வமிசத்தைச் சேர்ந்த பலர் கொல்லப்பட்டனர். டில்லியில் இவருக்குமுன் ஆட்சி செய்தவர்களின் வழக்கத்தினின்று மாறுபட்டு இவர் நடந்தார். காலிபாக்களுக்கு ஊழியம் என்ற முறையை உதறிவிட்டுத் தம்மையே 'இஸ்லாம் மதத் தலைவன்' என்றும், மேலுலகத்திற்கும் பூவுலகத்திற்கும் தாம் காலிபா என்றும் பிரகடனப்படுத்திக்கொண்டார். 'அல்-வாஸிக்-பில்லா' (al-wasiq-billah) [1] என்ற உன்னதப் பட்டத்தைச் சூட்டிக் கொண்டார்.

எனினும், இந்த சுல்தானின் ஆட்சி நீண்டகாலம் நீடிக்கவில்லை. குஸ்ரு அவரை ஆட்சியிலிருந்து தள்ளிவிடத் திட்டமிட்டார். சுல்தானுடைய நண்பர்கள் இது குறித்து எச்சரித்துங்கூடக் குஸ்ருவினிடம் கொண்டிருந்த அளவற்ற நம்பிக்கையால் அதைப் பொருட்படுத்தவில்லை. குஸ்ருவினுடைய சதிக்கு விரைவிலேயே இரையானார். குஸ்ருவினுடைய பர்வாரி கூட்டாளி ஒருவன் கி.பி. 1320 ஏப்ரல் மாதம் ஓர் இரவில் சுல்தானைக் குத்திக் கொன்றான். முப்பதாண்டுக் கால ஆட்சிக்குப் பின்னர்க், கில்ஜி வமிசத்தினர் இத்தகையதொரு முடிவை எய்தினர்.

## 5. குஸ்ரு ஆட்சியைக் கவர்தல்

இதன் பின்னர் நாசருதீன் குஸ்ருஷா என்ற பட்டத்துடன் குஸ்ரு டில்லி அரியணை ஏறினார். தம் திட்டம் நிறைவேற உதவிய தம் இனத்தவர்களுக்கும் உறவினர்களுக்கும் பட்டமும் பதவியும் வழங்கினார். நெறியற்ற முறையில் அரசுரிமை பெற்றதற்கு இணங்கிய பிரபுக்களைத் தம் வசமாக்கும் பொருட்டு நாட்டின் செல்வத்தை வீணாக்கினார். இதன் பின்னர் அருவருக்கத்தக்க பயங்கர ஆட்சியைத் தொடங்கினார். காலஞ்சென்ற சுல்தானின் நண்பர்களையும் மெய்க்காப்பாளர்களையும் படுகொலை புரிந்து சுல்தானின் குடும்பத்தினரை அவமானத்திற்கு உள்ளாக்கினார். பார்னி, யாஹியாபின், அஹமத் ஷா் ஹிந்தி, இபின் பதூதா இவர்கள் கூற்றுப்படி இவர் இந்துக்களை ஆதரித்தார். நான்கு மாதங்களும் சில நாள்களும் கொண்ட குறுகிய இவரது ஆட்சி

[1] அவருடைய காசுகளில் உள்ள வாசகங்களைப் பார்க்கவும், J.A.S.B. 1875 1880, 1886. தோமஸ் கிரானிகல் etc. பக்கம் 179 -81. ரைட் இந்திய மியூசியக் காசுகளின் அட்டவணை வால்யூம் II, பக்கம் 8-ம், பக்கம் 43-46-ம்.

இந்துக்களின் எழுச்சியைக் கொண்டிருந்தது. எது எவ் வாறு இருப்பினும் குஸ்ருவின் நடத்தை அலய் பிரபுக்களைப் புண் படுத்தப் போதுமானதாயிருந்தது. காஸிமாலிக் என்ற புதிய தலை வரை இவர்கள் தேர்ந்தெடுத்தனர். இவர் திபால்பூரிலிருந்து படையெடுத்து வருகையில் அயின்-உல்-முல்க் தவிர ஏனைய பிரபுக் கள் எல்லாரும் இவருக்கு உதவினர். அயின்-உல்-முல்க் மூல்தான் கவர்னராக இருந்தார். இவருக்கும் காஸிமாலிக்குக்கும் ஒருமனத் தாங்கல் இருந்தது. கி.பி. 1320 செப்டம்பர் மாதம் 5ஆம் நாள் காஸிமாலிக் குஸ்ருவை டில்லியில் தோற்கடித்தார். குஸ்ரு சிரம் அறுக்கப்பட்டார். அவருடைய கூட்டாளிகளுள் சிலர் கொல்லப் பட்டனர்; சிலர் முறியடிக்கப்பட்டனர். இவ்வாறு வெற்றி பெற்றபோதும் காஸிமாலிக் அரியணை ஏறவில்லை. மாறாக அவர் பதவி ஏற்பதில் தக்கதொரு தயக்கம் காட்டினர். ஆண் வாரிசு ஒருவரும் உயிருடன் இல்லாமையால் பிரபுக்கள் எல்லோருமாக வற்புறுத்தவே கி.பி. 1320 செப்டம்பர் மாதம் கியாஸ்-உதீன் துக்ளக் என்ற பட்டம் பூண்டு அரியணையில் அமர்ந்தார். முஸ்லிம் பிரபுக்கள் தங்களை ஒத்த அந்தஸ்து உடைய காஸி மாலிக்கிடம் பொறாமை ஏதும் இன்றி அவரை டில்லி அரியணையில் அமரும் படி வருந்தி அழைத்தது குறிப்பாக நோக்கத்தக்கதாகும்.

# 4. துக்ளக் வமிசத்தினர்-சிதைவின் ஆரம்பம்

## 1. கியாஸ்-உதீன் துக்ளக்

காஸிமாலிக்கினது வமிசம் சுதேசத்தைச் சார்ந்தது எனக் கருதலாகும். அவருடைய தந்தை பால்பன் காலத்தில் இந்தியாவிற்கு வந்து பஞ்சாபில் தங்கி ஜாட்குலப் பெண்ணை மணந்தார். தாழ்ந்த பதவியிலிருந்து மாலிக் படிப்படியாக அரசாங்கத்தில் மிக உயர்ந்த பதவிக்குத் தம் சொந்தத் திறமை கொண்டு உயர்ந்தார். இவர் எவ்வாறு திறமையுடன் எல்லைப்புறப் பிரதேசங்களை மங்கோலியர் படையெடுப்புகளினின்றும் பாதுகாத்து வந்தார் என்பது பற்றி நாம் ஏற்கெனவே குறித்துள்ளோம். அவ்வாறு இருந்த இவரை ஊழ்வலியானது முதிய வயதில் டில்லி அரியணையில் அமர்த்தியது.

பிரபுக்கள் காசிமாலிக்கை டில்லி அரசராகத் தேர்ந்தெடுத்தது மிகச் சரியானதென்று ஏற்பட்டது. அவர் பட்டமெய்திய காலத்துச் சூழ்நிலை இடுக்கண்கள் நிறைந்ததாக இருந்தது. டில்லியின் ஆட்சிக்கு அக் காலத்தில் யாரும் மதிப்பு அளிக்கவில்லை. அதன் எல்லைப்புறப் பிரதேசங்களில் அதன் ஆட்சி செல்லவில்லை. டில்லியின் அரசாங்க முறையும் அலாவுதீன் இறந்ததற்குப் பின் ஏற்பட்ட குழப்பத்தில் சிதைவுற்றது. ஆயினும், இத்தகைய நிலைகளுக்கு ஈடு கொடுக்கும் வகையில் மாலிக் விளங்கினார். தமக்கு முன் ஆட்சி செய்தவர் போலன்றி இவரிடம் வலிமையும் மேலான குணங்களும் பொருந்தியிருந்தன. வாழ்க்கையின் இளமைப் பிராயத்தில் ஏற்பட்ட பல துன்பங்கள் இவருக்கு நல்ல பயிற்சியை அளித்திருந்தன. ஆழ்ந்த கடவுள் பக்தி உடைய இவரிடம் சாந்தமும் தயாளமும் நிரம்பியிருந்தன. தம் அரசவையைப் 'பால்பன் ஆட்சியில் தவிர வேறு எப்போதும் கண்டிராத முறையில் நேர்மை நிறைந்ததாகச் செய்தார்'. அவர் எதிலும் நிதானத்துடனும் அறிவுடனும் நடந்துகொண்டார். அமீர் குஸ்ராவ் இவரைப் பற்றி இவ்வாறு புகழ்கிறார்;

'அறிவும், புத்திசாலித்தனமும் அற்ற எச் செயலேயும் அவர் ஒரு போதும் செய்ததில்லை.

தம்முடைய முடியின் கீழாக நூறு அறிவாளிகளின் மேலுடையைத் தரித்திருந்தார் என்று கூறலாகும்.'

தாம் பட்டமெய்திய உடனேயே தமக்கு முன் ஆண்டவர்களின் காலத்தில் ஆட்சி முறையில் ஏற்பட்டிருந்த குறைகளை நீக்கும் பணியில் கியாஸ்-உதீன்-துக்ளக் ஈடுபடலானார். முபாரக், குஸ்ரு இவர்களின் கண் மூடித்தனமான செலவுகளால் அரசாங்கத்தின் பொருள் நிலை வருந்தத்தக்க பரிதாப நிலையை அடைந்திருந்தது. ஆகவே, எல்லா உரிமைகள், ஜாகீர்கள் பற்றியும் கடுமையாகப் பரிசீலனை செய்யும்படி கியாஸ்-உதீன் உத்தரவிட்டார்.

சட்டப்படியல்லாத இனும்கள் அரசாங்கத்தால் பறிமுதல் செய்யப்பட்டன. இத்தகைய செயலினால் அவருக்கு ஏற்பட்ட அவப் பெயரைத் தம்முடைய விவேகமானதும் குடிகளுக்கு நன்மை பயக்கக்கூடியதுமான தாராளமான செயல்களால் விரைவிலேயே போக்கிக்கொண்டார். ஒவ்வொரு மாகாணத்திற்கும் நேர்மையுள்ள கவர்னர்களை நியமித்து வரிச் சுமையைக் கணிசமான அளவில் குறைத்தும், நிகரவருமானத்தில் பத்தில் ஒரு பங்கு அல்லது பதினொன்றில் ஒரு பங்காக அரசாங்கத்திற்கு உரிய வரியை நிர்ணயம் செய்தும் வீணாக அரசாங்கத்தினர் அதிக வரி வசூலிப்பதைத் தடை செய்தார். நமது நாட்டின் முக்கிய தொழிலான வவசாயத்திற்குத் தனிப்பட்ட ஊக்கம் காட்டினார். வயல்களின் நீர்ப்பாசனத்திற்கான வாய்க்கால்கள் வெட்டப்பட்டன. பல தோட்டங்கள் ஏற்படுத்தப்பட்டன. விவசாயிகளைக் கொள்ளைக் கூட்டத்தாரிடமிருந்து பாதுகாக்கும் பொருட்டுப் பல கோட்டைகள் கட்டப்பட்டன. இவ்வாறாயினுங்கூடச் சுல்தானின் சில ஒழுங்கு முறைகள் மக்களின் நன்மையைக் கருதியனவாக இல்லை. பார்னி கூற்றிலிருந்து, 'மக்களுள் ஒருசிலர் செல்வத்தால் கருவம் ஏற்படாதபடியும், அதனால் அவர்கள் ஆட்சியிடம் வெறுப்புற்றுக் கலகம் விளைவிக்காதபடியும் வரி விதிக்கப்பட்டனர். வரியினால் வறுமையுற்று விவசாயத்தைத் துறந்து விடாத நிலையில் அவர்கள் இருக்கும் பொருட்டும் வரி விதிக்கப்பட்டனர்,' என அறிகிறோம்.

நீதித்துறை, போலீஸ் முதலிய மற்ற அரசாங்கத்துறைகளிலும் சீர்த்திருத்தங்கள் புகுத்தப்பட்டன. இதனால், நாட்டில் ஒழுங்கும் அமைதியும் நிலவின. ஏழை மக்கள் நிவாரணம், மத

ஸ்தாபனங்களுக்கு ஆதரவு, அறிஞர்களைப் பேணல், இவற்றிற்கான திட்டமொன்றையும் அரசர் கொண்டுவந்தார். அவர் அரசவைப் பெரும் புலவரான அமீர் குஸ்ராவ் மாதம் ஒன்றுக்கு ஆயிரம் டாங்கா அரசாங்க உதவித் தொகையாகப் பெற்றார். செய்திப் போக்குவரத்திற்கு உபயோகமாகும்படி நாட்டின் அஞ்சல் முறை சீர்திருத்தி அமைக்கப்பட்டது. இராணுவத்துறை திறமையாகவும் ஒழுங்காகவும் விளங்கும்படி செய்யப்பட்டது.

நாட்டின் பல்வேறு மாகாணங்களிலும் சுல்தானின் ஆதிக்கம் செலுத்தப்பட வேண்டும் என்பதைக் கவனிக்காமலிருக்கவில்லை. கில்ஜிகளின் இராணுவ ஆதிக்கம், அரசியல் ஆதிக்கம் சம்பந்தமான கொள்கைகளை இவர் பின்பற்றினார். இவருக்குப் பின் வந்த மகமது துக்ளக் ஆட்சியில் இவற்றின் தோல்வி அரசரின் பலவீனத்தால் ஏற்பட்டது. வங்காளத்திலும் தக்காணத்திலும் அவரது செயல் இதை நன்கு வெளிப்படுத்தியது.

அலாவுதீன் இறந்தபின் ஏற்பட்ட ஒழுங்கீனமான காலத்தைப் பயன்படுத்திக்கொண்டு வாரங்கல் நாட்டுக் காகதீய மன்னர் இரண்டாம் பிரதாப ருத்திரதேவன் தம் வலிமையை அதிகரிக்கச் செய்து டில்லிக்குக் கொடுக்கும்படி விதிக்கப்பட்டிருந்த கப்பப் பணத்தைக் கொடுக்க மறுத்தார். ஆகையால், தம் ஆட்சி இரண்டாம் ஆண்டில் கியாஸ்-உதீன்-துக்ளக் தம் மூத்த மகன் பட்டத்து இளவரசன் பக்ருதீன் மகமது ஜானுஷா தலைமையில் வாரங்கல் நாட்டின்மீது ஒரு படையெடுப்பை அனுப்பினார். அப் படை வாரங்கலின் மண்கோட்டையை முற்றுகையிட்டது. ஆனால், இந்துக்கள் அதை உறுதியுடனும் வலிமையுடனும் பாதுகாத்தனர். படையில் ஏற்பட்ட சதித்திட்டங்களாலும்,[1] கொள்ளை நோயினாலும் யாதொன்றும் செய்யமுடியாதபடி ஜானுகான் டில்லி திரும்ப வேண்டியதாயிற்று. ஜானு டில்லி திரும்பிய நான்கு மாதங்களுக்குப் பிறகு வாரங்கலின்மீது இரண்டாம் முறை அதே அரசகுமாரன் தலைமையில் வெற்றி கண்டது. மிகு தீரமாகப் போர் புரிந்த பின் காகதீய மன்னர் தம் குடும்பத்தார்களுடனும் பிரபுக்களுடனும் பகைவனிடம் சரணமடைந்தார். ஜானு அம்

[1] பார்னி, யாஹியாபின் அஹமது, மற்றும் பின்னால் தோன்றிய முஸ்லிம் எழுத்தாளர்கள் நைஜாமுதீன் அகமது, பதானி, பெரிஷ்டா இவர்கள் கருத்துப்படி படையில் இருந்த சில துரோகிகளின் செயலால் இந்தச் சதிகள் ஏற்பட்டன. ஆனால், அவர் பட்டத்து இளவரசன் அரியணையைக் கைப்பற்ற வேண்டுமென்று எண்ணியதால் அவரே இச் சதிகளுக்குப் பொறுப்பாளி என்று பதூதா (வால்யூம் III பக்கம், 208-210) எழுதுகிறார். தோமஸ் (கிரானிகல் முதலியன பக்கம் 108) மற்றும் ஸர் வெல்ஸிலி ஹெய்க் (ஜெ. ஆர். ஏ. எஸ்., 1922 பக்கம். 231-7) இபின் பதூதாவின் அபிப்பிராயத்தை ஒப்புக்கொள்கிறார். ஆனால், டாக்டர் ஈஸ்வரி பிரசாத் (குரானு துருக்கர்கள் சரித்திரம், பக்கம் 30-2-ல்) இந்தக் கருத்துத் தவறு என்று எடுத்துக் காட்டியுள்ளார்.

மன்னனை டில்லிக்கு அனுப்பிவிட்டுக் காகதீய நாட்டைத் தம் அடிப்படுத்தினுர். வாரங்கலுக்குச் சுல்தான்பூர் என்று மறு பெயர் இடப்பட்டது. காகதீய நாடு டில்லியுடன் முறைப்படி இணைக்கப் படாவிட்டாலும் விரைவிலேயே அது தனது பெருமையையும் அதிகாரத்தையும் இழந்தது.

கி.பி. 1318-ல் வங்காளத்தில் ஷம்சுதீன் ஃபெருஸ் இறந்தபின் அவருடைய மக்களுக்குள் ஏற்பட்ட உள்நாட்டுப் போரினுல் கியாஸ்-உதீன்-துக்ளக் அந்தப் பிரதேசத்தின் விவகாரத்தில் தலையிட வேண்டியதாயிற்று. ஷம்சுதீனின் ஐந்து பிள்ளைகளுள் கி.பி. 1310 முதல் சொனுர்கானைத் தலைநகராகக் கொண்டு கிழக்கு வங்காளத்தில் தனி அரசு செய்துவந்த கியாஸ் உதீன் பகதூர், தம் தந்தைக்குப் பின் வங்காளத்தின் அரசுரிமை பெற்று லக்நாடியைத் தலைநகராகக் கொண்ட ஷகபுதீன் பக்ராஷா, நாசருதீன் இவர்கள் வங்காளத்தில் ஆதிக்கம் பெறப் போட்டி யிட்டனர். கி.பி. 1319-ல் கியாஸ் உதீன் பகதூர், ஷகபுதீன் பக்ராஷாவைத் தோற்கடித்து வங்காளத்து அரியணையைக் கைப்பற்றினுர். நாசருதீனும் இதைப் பெற விரும்பியதால் உதவி கோரி டில்லிச் சுல்தானிடமும் முறையிட்டார். தொலைவி லுள்ள வங்காளத்தைத் தம் திடமான ஆட்சியின் கீழ்க் கொண்டு வர இந்தச் சந்தர்ப்பத்தைப் பயன்படுத்திக்கொண்டார். ஏனெனில், வங்காளத்தின்மீது டில்லியின் ஆதிக்கம் எப்பொழுதும் உறுதியற்றதாக இருந்தது. கி.பி. 1324-ல் லக்நாடியை நோக்கிச் சுல்தான் ஒரு படையுடன் சென்று கியாஸ் உதீன் பகதூரைச் சிறைப்பிடித்து அவரைக் கைதியாக டில்லிக்கு அனுப்பிவிட்டு, நாசருதீனை டில்லி சுல்தானின் சிற்றரசராக மேற்கு வங்காளத்தின் அரியணையில் அமர்த்தினுர். கிழக்கு வங்காளமும் டில்லி ஆட்சிக்கு உட்பட்ட பிரதேசமாகச் செய்யப்பட்டது.

கியாஸ் உதீனின் நாள்கள் குறுகிவிட்டன. வங்காளத்தி லிருந்து திரும்பியதும் கி.பி. 1325 பிப்ரவரி–மார்ச்சு மாதத்தில் சுல்தான் இறந்தார். தம் மகன் ஜானு கட்டிவைத்த ஒரு மரக் கட்டடம் இவர்மீது விழுந்ததால் இவர் இறந்துவிட்டார். இந்த மரக்கட்டடம் டில்லிக்குஅருகில் கியாஸ் உதீன் கட்டிய கோட்டை நகரம் துக்ளகாபாத் என்னும் நகரத்துக்கு ஐந்து அல்லது ஆறு மைல் தொலைவிலுள்ள ஆஃப்கன்பூரில் கட்டப்பட்டது. துக்ளகா பாதில் தாமே கட்டி வைத்திருந்த சமாதியில் சுல்தான் அடக்கம் செய்யப்பட்டார். சுல்தானின் மரணம் பற்றி இரண்டு விவரங்கள் உள்ளன. அந்த மரக் கட்டடம் மின்னலால் தாக்குண்டதால் விழுந்துவிட்டது என்று பார்னி கூறுகிறுர். யாஹியாபின்

அஹமத் ஷர்ஹிந்தி என்பவர் 'அக் கட்டடம் கடவுள் முன் விதித்த விதியின்படி வீழ்ந்தது.' என்கிறார். ஆனால், இபின் பதூதா கருதுவது யாதெனில், சுல்தானின் மரணம் அவர் மகனின் முன்னேற்பாடான சதியின் விளைவு என்பதாகும். அயாஸ் என்பவனின் மகனை அஹமத் என்னும் அரசாங்க சிற்பியைக் கொண்டுதான் சுல்தானின் மகன் அந்த மண்டபத்தை அவ்வாறு கட்டச் செய்தார். யானைகள் தொட்டவுடன் அம் மண்டபம் விழும்படியாகக் கட்டப்பட்டது என்று பதூதா எழுதுகிறார். அபுல்பாசல் நிஜாமுதீன், அஹமத் பதௌனி போன்ற பிற்கால எழுத்தாளர்கள் அது போன்ற சதியைச் சந்தேகிக்கின்றனர். தற்கால எழுத்தாளர்களுள் பெரும்பான்மையோர் பதூதாவின் கூற்று முடிவானதென்று எண்ணுகின்றனர். ஏனெனில், அவருக்குச் செய்தி அளிப்பவரான ஷெயிக்ருக் உதீன், சுல்தானின் துக்ககர முடிவின்போது அந்த மண்டபத்தில் இருந்தவராவர். பார்னியின் கூற்று ஒரு சிறிது ஒருதலைப் பட்சமானது. அவருடைய அத் தவறு ஜானாவிடம் பெருமதிப்புக் கொண்டிருந்த ஃபிரோஸ் துக்ளக்குக்கு எவ்வித மனத்தாங்கலும் ஏற்படக் கூடாது என்ற அவாவினாலாகும். ஃபிரோஸ் துக்ளக் காலத்தில் தான் பார்னி தம் நூலை எழுதினார்.

## 2. மகமது பின் துக்ளக்

கி.பி. 1325 பிப்ரவரி–மார்ச்சு மாதம் தம் தந்தை இறந்து மூன்று நாள்கள் சென்றபின் இளவரசர் ஜானா தம்மைச் சுல்தானாகப் பிரகடனப்படுத்திக்கொண்டார். மகமதுபின் துக்ளக் என்ற பட்டத்தையும் சூட்டிக்கொண்டார். நாற்பது நாள்களுக்குப் பின் டில்லி சென்று எவ்வித எதிர்ப்புமின்றி மிக்க ஆடம்பரத்துடன் அரியணை ஏறினார். அலாவுதீனைப் போன்று இவரும் டில்லி மக்களுக்குப் பொன், வெள்ளி நாணயங்களை வாரி வழங்கினார்; பிரபுக்களுக்குப் பட்டங்களும் வழங்கினார்.

மகமது பின் துக்ளக்கின் ஆட்சியைப் பற்றி நன்கு அறிந்து கொள்ள அவர் காலத்திய உத்தியோகஸ்தராகிய ஸியா உதீன் பார்னி எழுதிய சரித்திர நூல் நன்கு உதவுகிறது. இவர் சுல்தானுக்குப் பின் பட்டமெய்திய ஃபிரோஸ்ஷா காலத்தில் தம்முடைய நூலை எழுதினார். ஏறக்குறைய அவர் காலத்திலே வாழ்ந்த சில பாரசீக எழுத்தாளர்களின் நூல்களும் நமக்குக் கிடைத்துள்ளன. தாரிக்கி–பிரஸ் ஷாகி என்னும் நூல் ஷம்சி சிராஜ் என்பவரால் எழுதப்பட்டது. பட்டு ஹாத்-இ-பிரஸ் ஷாகி என்னும் நூல் ஃபிரோஸ் ஷா சுல்தானின் சுயசரிதைக் குறிப்பு. இதை எழுதியவர்

அஃபிஃப் (Afif). அயின் உல் முல்தானி என்பவர் எழுதிய நூல் முன்ஷாத்-இ-மாஹ்ரு என்பது. அமீர் குஸ்ராவ் எழுதியது துக்ளக் நாமா என்னும் நூல். யாஹியாபின் அஹமது ஸர்ஹிந்தி என்பவர் இயற்றிய நூல் தா-ரிக்-இ-முபாரக் ஷாகி என்பது. இந் நூல் முந்திய நூல்களுக்குச் சற்றுப் பிற்பட்ட காலத்தில் எழுதப்பட்டது. இதிலும் நமக்குத் தேவையான பல சரித்திரச் செய்திகள் கிடைக்கின்றன. இந்தக் காலத்துச் சரித்திரத்தை நன்கு அறிந்துகொள்ளப் பயன்படும் மற்றொரு நூல் ஆஃபிரிக்கப் பிரயாணி இபின் பதூதா என்பவர் எழுதியதாகும். கி. பி. 1333 செப்டம்பர் மாதம் அவர் இந்தியா விற்கு வந்தார். சுல்தான் அவரை அன்புடன் வரவேற்றார். டில்லியின் பிரதான காஜியாகவும் நியமித்தார். அவர் கி.பி. 1342-ல் சீனாவிற்குத் தூதராக சுல்தானால் அனுப்பப்படும் வரையில் அப் பதவியில் நீடித்திருந்தார். அவருடைய நூல் முழுவதும் ஒருதலைப் பட்சமற்ற செய்திகளே உள்ளன. சம்பவங்கள் தெளி வாகவும் திறமையாகவும் விவரிக்கப்பட்டுள்ளன. மகமது பின் துக்ளக் வெளியிட்ட காசுகளும் நமக்குப் பல செய்திகளை அறிய உதவியாக உள்ளன.

மகமது பின் துக்ளக் தனிப்பட்ட சிறந்த குணங்கள் பொருந் தியவர். சரித்திரத்தில் எத்தகைய சிறப்பு வகித்தார் என்பது பற்றிக் கூறுவது கடினமாகும். அவர் ஒரு மேதையா? பைத்தியமா? உண்மை வாதியா? கனவு காண்பவரா? இரத்த வெறி கொண்ட கொடியவரா? இரக்கச் சித்தம் கொண்ட அரசரா? மதப்பற்று அற்றவரா? உண்மையான முஸ்லிமா? அக் காலத்து வாழ்ந்த அறிவாளிகளுள் மிகவும் தலைசிறந்தவர் என்பதில் சிறிதும் ஐய மில்லை. அவருடைய அறிவின் மேன்மையைப் பார்னியும் மற்றவர் களும் நன்கு பாராட்டியுள்ளனர். சிறந்த புத்திக் கூர்மையும் சிறந்த ஞாபக சக்தியும் கொண்டிருந்ததுடன் அவர் அறிவைப் பல துறைகளிலும் பெருக்கிக்கொள்ளும் ஆற்றலும் உடையவராக இருந்தார். தருக்கம், வேதாந்தம், கணிதம், வான நூல், பௌதிக விஞ்ஞானம் ஆகிய இத் துறைகளில் மிகச் சிறந்து விளங்கினார். அவர் சிறந்த நடையில் எழுதும் ஆற்றல் பெற்றவர். கவிகள் இயற்றுவதிலும், சித்திர எழுத்துகள் எழுதுவதிலும் மிகத் தேர்ந்தவர். பாரசீகக் கவிகள் பல அவர் அறிந்திருந்தார். தம்முடைய கடிதங்களில் பாரசீகச் செய்யுள் பலவற்றை மேற்கோள்களாக அவர் எடுத்தாண்டுள்ளார். மருந்துகள் பற்றிய விஞ்ஞானத் துறையும் அவர் அறியாததன்று. அவர் பல மொழிகளிலும் அறிவு பெற்றிருந்தபடியால் அவரிடம் அவருக்குத் தெரிந்ததைப்பற்றிப் பேசும்போது அறிஞர்கள் ஆலோசித்தே

நன்கு உரையாடுவர். அவர் மிக்க அநுபவம் படைத்த படைத் தலைவர். அவர் வென்ற போர்களோ பல; தோற்றவை மிகச் சில.

சுல்தானின் அந்தரங்க வாழ்க்கையும் நேர்மை நிறைந்ததாக உள்ளது. அக் காலத்து மன்னர்களிடம் காணப்பட்ட கெட்ட பழக்கங்கள் ஏதுமின்றி மிகு எளிமையானதாக அவரது நடத்தை இருந்தது. மெச்சத் தக்க எளிமையும் தயாளமும் கொண்ட அவர் சிறந்த கொடையாளியாக விளங்கினர். வெகுமதிகளையும் வரை யாது வழங்கினர். 'மக்களுள் மிக்க எளிய குணம் உடையவர்' என்றும், 'எது நீதியோ, எது நேர்மையோ அதை நாடியே செயலாற்றுபவராகவும் அவர் விளங்கினர்' என்றும் இபின் பதூதா கூறுகிறர். மேலும், 'அவருடைய குணங்களிலேயே சிறந்தது அவரது தயாளமே' என்று எழுதுகிறர். பார்னி, யாஹியாபின் அஹமது, ஸர்ஹிந்தி என்பவர்களும் இவர்களது கூற்றை ஆதாரமாகக்கொண்டு பதானி, நிஸாம்-உதீன் அஹமது, பெரிஷ்டா இவர்களும் சுல்தானைத் தவருகக் குற்றம் சாட்டி யுள்ளனர். அவர் மத விரோதி என்றும், அறிஞர்களையும் நல்லோர்களையும், எழுத்தாளர்களையும், படை வீரர்களையும் கொலை புரிந்தார் என்றும் கூறுகின்றனர். இபின் பதூதா இவ்வாறு எழுதுகிறர்: 'இவர் மதக் கொள்கைகளை மெய் யன்புடன் பின்பற்றுகின்றர்; தாமே பிரார்த்தனை செய்கிறர்; இவற்றைச் செய்யத் தவறுகின்றவர்களைத் தண்டிக்கின்றர்.' ஷாகிபுதீன் அஹமது, பத்ரிசா என்று அக் காலத்திய ஆசிரியர் இருவர் இக் கருத்தை ஒட்டிக் கூறியுள்ளனர். பெரிஷ்டாவும் இக் கருத்தை ஒப்புக்கொள்ள வேண்டியதாயிருக்கிறது. மகமது பின் துக்ளக் செய்த முக்கிய தவறு யாதெனில் கில்ஜிகளின் நிலையான கொள்கைகளைப் புறக்கணித்துவிட்டு அரசியல் அலுவல்களைத் தம் மனத்திற்குத் தம் அனுபவத்தால் தோன்றிய வழிகளின்படி செய்ததாகும்.

சுல்தானுக்குச் செயல்முறை அறிவும் உலகியல் அறிவும் இல்லை. நிறைவேற்ற முடியாத கற்பனைக் கொள்கைகளை நிறைவேற்ற முயன்றர். கொள்கை அளவில் அவருடைய திட்டங்கள் சரி யானவை. அவை அரசியல் தீர்க்கதரிசனம் உடையவை. ஆனல், செயல் முறையில் அவை நிறைவேற்ற முடியாதவை. அவற்றை நிறைவேற்ற முயன்றதில் முடிவாக நாட்டிற்குத் தீமையே ஏற் பட்டது. அரசருடைய குணங்களில் காணப்பட்ட சில குறைகளே இவற்றிற்குக் காரணம். மிக்க அவசரமும் முன்கோபமும் உடைய இவருக்குத் தாம் நினைத்தபடியே மற்றவரும் நடக்கவேண்டும்

என்ற வீண் எண்ணம் உண்டு. எதிர்ப்பை இவரால் பொறுத்துக் கொள்ள முடியவில்லை. தம்முடைய திட்டங்கள் தவறிவிடுகின்றன என்பதை உணரும்போது அரசர் அதற்காக மக்களைக் குற்றம் சாட்டி மிகவும் வன்மையாக நடந்தார். தோல்வி மேல் தோல்வி ஏற்படவே சுல்தான் நிதானம் இழந்தார். 'துன்பங்களுக்கு மேல் துன்பங்கள் தொடரவும் குழப்பங்கள் மேலும் குழம்பின.' பார்னியுடன் மன்னர் பேசும்போதும், 'நான் மக்களை எப்பொழுதும் சந்தேகக் கண் கொண்டுதான் பார்க்கிறேன். அவர்கள் துரோகமும் புரட்சியும் கொண்ட சிந்தையர் என்ற எண்ணமே என்னிடம் நிலைக்கின்றது. ஆகவே, மிக அற்பமான பிழைக்குங்கூட நான் அவர்களுக்கு மரண தண்டனை விதிக்கிறேன். நான் சாகும் வரையில் இவ்வாறுதான் செய்வேன்; அல்லது மக்கள் நேர் வழியைப் பின்பற்றிப் புரட்சியையும் சதியையும் கைவிட வேண்டும் நான் இரத்தம் சிந்தக் கூடாது என்பதற்காகச் சட்டங்கள் இயற்றித் தர எனக்கு நல்ல அமைச்சனும் இல்லை: நான் மக்களைத் தண்டித்திருக்கிறேன். ஏனெனில், அவர்கள் எல்லாரும் ஒரு சேர என் எதிரியாகிவிட்டனர். நான் அவர்களுக்குப் பெருஞ் செல்வம் வழங்கியிருக்கிறேன். அவர்களோ நேசமும் விசுவாசமும் கொண்டவர்களாக இல்லை,' என்று கூறியுள்ளார்.

சுல்தானின் இத்தகைய செயல்களையும் அவருடைய சிறந்த குணங்களையும் ஒப்பிட்டுப் பார்த்த சில பிற்கால அறிஞர்கள் இவரைப் பல 'எதிர்கொள்கைகளின் கலப்பு' என்கின்றனர். ஆனால், மற்றும் பலர் 'இவர் அத்தகைய வியப்பூட்டும் மாறுபட்டங்களின் கலவை அல்லர்,' என்கின்றனர். அவர்மீது சுமத்தப்பட்ட 'இரத்த வெறியன்,' 'பைத்தியக்காரன்' என்பன எல்லாம் வீண் பழிகள் என்றும், இவை எப்பொழுதும் இவருடைய செயல்களைக் கவிழ்க்க வேண்டுமென்ற நோக்கம்கொண்ட சில கீழ்த்தர அலுவலர்களின் வீணான குற்றச் சாட்டுகளே என்றும் கூறுகின்றனர். சுல்தானின் குறைபாடுகள் மிகைப்படுத்திக் கூறப் பட்டிருக்கலாம். ஆயினும், ஓர் அரசியல்வாதிக்கு வேண்டிய நுண்ணறிவு இவரிடம் இல்லை என்பதையும், மக்களின் விருப்பு வெறுப்புகளுக்கேற்றபடி தம் கொள்கைகளை மாற்றிக்கொள்ளும் விவேகம் இல்லை என்பதையும் மறுப்பதற்கில்லை. துணிகரமான இவருடைய முற்போக்குத் திட்டங்கள் வரவேற்கப்படவில்லை; ஏனெனில், இவற்றால் பெருந்துன்பங்கள் விளைந்தன. சுருங்கக் கூறுமிடத்து இவருக்கு மனித மனத் தன்மையை அறியும் ஆற்றல் மிகவும் குறைவு. தம் திட்டங்கள் எவ்வளவு சிறந்தவையாயினும் மக்கள் சம்மதமின்றி அவற்றை இவர்கள்மேல் திணிக்கமுடியாது என்பதையும், மக்களின் நலன்களைப் பாதிக்கும் அடக்குமுறைகள்

மக்கள் மனத்தில் அதிருப்தியையே விளைவிக்கும் என்பதையும் இவர் உணரத் தவறிவிட்டார். இவரைப்பற்றிச் சரித்திர ஆசிரியர் ஸ்டான்லி லேன்பூர் இவ்வாறு கூறுகிருர்; 'எவ்வளவு நல்ல நோக்கங்கள் நிரம்பியவராக இருந்தாலும், எவ்வளவு மேலான கருத்துகள் கொண்டவராக இருந்தபோதிலும், பொறுமை, நிதானம், பலன்களை உணரும் ஆற்றல் இவை இல்லாதபடியால் மகமது பின் துக்ளக் ஆட்சி தோல்வியாகவே முடிந்தது.

ஸ்பெயின் நாட்டு மன்னர் இரண்டாம் பிலிப்பு போன்று மகமது பின் துக்ளக் தம் ஆட்சியின் ஆரம்பத்திலிருந்தே அரசியல் அலுவல்களைக் கவனமாகப் பரிசீலிக்க ஆரம்பித்தார். நிலவரி சம்பந்தமாகப் புதிய தஸ்தாவேஜு ஒன்றைப் பழைய முறையைப் பின்பற்றிப் பூர்த்தி செய்யும்படி கட்டளையிட்டார். இதனால் ரெவினியூ ஆட்சி சரிவர நடைபெற்றது. ஆனால் கங்கைக்கும் யமுனைக்கும் இடைப்பட்ட தோஆப் என்ற செழிப்பான பகுதியில் துர்ப்போதனையின்பேரில் புதியதொரு பணக் கொள்கையைக் கடைப்பிடித்தார். ஏற்கெனவே இருந்த நில வரியை அங்கு அவர் அதிகமாக்கியதோடு பல புதிய வரிகளையும் விதித்தார். எவ்வளவு கூடுதலான வரி விதித்தார் என்று தீர்மானிப்பது முடியாது. இது குறித்துப் பிற்கால முஸ்லிம் எழுத்தாளர்கள்[1] கூறும் விவரங்கள் தெளிவாக இல்லை. பல மாறுபாடுகளும் காணப்படுகின்றன. சில நவீன ஆசிரியர்கள் வரி கூடுதலாக விதிக்கப்படவில்லை என்றும், அலாவுதீன் காலத்தில் 50 சதவீதம் உயர்ந்தது போன்று அவ்வளவு அதிகமாக அது உயரவில்லை என்றும் கூறுகின்றனர். சுல்தான் அதிக வரிகளை விதித்தது தோஆப் மக்களின்மீது தண்டனையாக விதிக்கப்பட்டதில்லை (எதிர்ப்பு மனப்பான்மையுடைய தோஆப் மக்களுக்கு எதிராக) என்றும், அல்லது கஜானாவை நிரப்பவேண்டும் என்பதற்காகவும் அல்ல என்றும் அந்த எழுத்தாளர்கள் கருதுகின்றனர். பதானியும் தற்காலத்தில் ஸர் உல்ஸிலி ஹெய்க் என்பவரும் இது குறித்துக் கூறுகையில், அவ் வரியைக் கொண்டு அரசர் தம் படைபலத்தைப் பெருக்கவும் அரசாங்க முறையைச் செப்பனிட்டு அமைக்கவும் முற்பட்டார் என்று கூறுகின்றனர். எது எவ்வாறு இருப்பினும்

[1] பார்னி (தாரிக்-இ- பிரஸ் ஷாகி பிப்லோஸித் இன்டியன் பக்கம், 473) இது பத்து அல்லது இருபது பங்கு அதிகம் என்று கூறுகிருர். இதை எலியட் தவருக மொழி பெயர்த்துள்ளார். (வால்யூம் III, பக்கம், 182-3) அவர் இதை 10 அல்லது 5 சதவீதம் என்கிருர். தாரிகி-இ-முபாரக் ஷாகி (பக்கம், 103) படி இந்த உயர்வு இருபது மடங்காகும். இதோடு காரி (வீட்டு வரி)யும், சராசரி (மேய்ச்சல் வரி)யும் கூடப் போடப்பட்டது. பதானி (ராவ்சிங் வால்யூம் I, பக்கம், 305) எழுதுவதாவது: 'வரிகள் இரட்டிக்கப்பட்டன' என்பதாம்.

புதிய வரி குறித்த அந்த நடவடிக்கை தோ ஆப் மக்களுக்குத் தாங்கொணுத் துன்பம் விளைவித்தது என்பதில் ஐயம் சிறிதும் இல்லை. ஏற்கெனவே அம் மக்கள் கில்ஜிகள் காலத்திலிருந்தே அதிக வரிப் பளுவால் அவதியுற்று வந்துள்ளனர். அதோடு ஒரு கொடிய பஞ்சம் அப் பிரதேசத்தில் ஏற்பட்ட காலத்தில் இப் புதிய வரிகள் போடப்பட்டன. பஞ்சம் காரணமாக அரசாங்கம் வரிக் கொள்கையைத் தளர்த்தவில்லை. அதற்கு மாருக கடுமையான நடவடிக்கைகள் மூலம் அரசியல் அலுவலர்கள் வரிப்பணத்தை வசூலித்தனர். வருத்தப்பட்டு உழைக்கும் விவசாயிகளின் துன்பங்களை நீக்குவதற்கான உடனடி நடவடிக்கைகளையும் அரசினர் மேற்கொண்டனர். விவசாயிகளுக்கு முன்பணம் கடனுகக் கொடுத்தல், கிணறுகள் தோண்டுதல், பயிர் செய்யப் படாத நிலங்களை அரசாங்க மேற்பார்வையில் பயிர்செய்தல் போன்ற நிவாரண நடவடிக்கைகளை சுல்தான் மேற்கொண்டார். ஆயினும், அவை காலம் கடந்தவையாயின. பயிர்த்தொழில் மிகவும் பாதிக்கப்பட்டது. வறுமையால் பீடிக்கப்பட்ட தோ ஆப் விவசாயிகள் தங்கள் உடைமைகளை விட்டுவிட்டு வேறிடங்களுக்குச் சென்றனர். அவ்வாறு சென்ற குடியானவர்களை மீண்டும் தங்கள் நிலங்களுக்கு வரும்படி செய்ய சுல்தான் கடுமையான தண்டனை முறைகளைக் கடுஞ்சினத்துடன் நிறைவேற்றினுர். இதனுல் துக்ளக் வமிசத்திற்குப் பெருங்கேடான விளைவுகள் ஏற்பட்டன.

கி.பி. 1327-ல்[1] டில்லியிலிருந்து தேவகிரிக்குத் தலைநகரை மாற்றவேண்டுமென்று சுல்தான் செய்த தீர்மானம் மற்றுமொரு தவறுன செயலாகும். இதனுல் மக்களுக்கு விளைந்த துன்பத்திற்கு அளவேயில்லை. சில தற்கால ஆசிரியர் கருதுவதுபோன்று டில்லி மக்களைத் தண்டிக்க வேண்டுமென்று சுல்தான் செய்த ஒரு பரிசோதனை இது என்று கூறமுடியாது. ஆனுல், இதன் உள் நோக்கம் மிகவும் சீரியதாகும். புதிய தலைநகரம் நாட்டின் மத்தியிலுள்ள ஒரு கேந்திர ஸ்தானம். அக் காலத்தில் மகமது பின் துக்ளக் இராச்சியம் தன் பரப்பில் தோஆப், வடக்கில் சிந்து நதி தீரமுதல் கூர்ச்சரக்கரை வரையுள்ள பிரதேசங்கள் அடங்கிய பஞ்சாப், லாகூர் சமவெளிகள், கிழக்கில் வங்காள மாகாணம் முழுவதும், மாளவம், மகோபா, உச்சயினி, தார், புதிதாகச் சேர்க்கப்பட்ட தக்காணம் இவற்றைக் கொண்டிருந்தது. இவ்வளவு பெரிய சாம்ராச்சியத்தைச் சுல்தான் கவனமாகப் பாது காக்க வேண்டியிருந்தது. 'இந்த நகரம் மையநிலையில் இருந்தது,'

1 டாக்டர் ஈஸ்வரி பிரசாத் இந்தத் தேதியை (குரான துருக்கியர் சரித்திரம் பக்கம், 82-3) அக் காலத்துக் கணக்குகளையும் நாணயங்களையும் ஒப்பிட்டு ஊர்ஜிதம் செய்துள்ளார்.

என்று பார்னி எழுதுகிறார். 'டில்லி, கூர்ச்சரம், லக்நாடி, சாட்கோன், சொனுர்கான், டெலாங், மாபார், துவாரசமுத்திரம், காம்பிலம் இவை ஒவ்வொன்றும் தேவகிரியினின்று சம தூரத்தில் இருந்தன. இவை ஒவ்வொன்றுக்கிடையே உள்ள தூரத்தில் அதிக வித்தியாசமில்லை' என்றும் கூறுகிறார்.

மேலும், புதிய தலைநகரம் மங்கோலியர் படையெடுப்பிலிருந்து தப்பக்கூடியதாகவும் இருந்தது. ஆனால், பழைய தலைநகரம் மங்கோலியர் படையெடுப்பினால் அடிக்கடி அச்சுறுத்தப்பட்டு வந்தது. புதிய தலைநகரத்தைத் தம் உத்தியோகஸ்தர்களுக்கும் மக்களுக்கும் வசிப்பதற்கு ஏற்றதாகவும் செய்திருந்தார். வனப்பு மிக்க அழகிய கட்டடங்கள் நிறைந்ததாக அந் நகரை மன்னர் கட்டியிருந்தார். இபின் பதூதா, ஷாஜஹான் அவையில் சரித்திர ஆசிரியராக இருந்த அப்துல் ஹமீது லகோரி இவர்களும் மற்றும் பதினேழாம் நூற்றாண்டில் வந்த ஐரோப்பியப் பிரயாணிகளும் அந் நகரின் வனப்பைப் பாராட்டியுள்ளனர். அங்கு வந்து குடியேறுபவர்களுக்குத் தேவையான எல்லா வசதிகளும் செய்யப்பட்டிருந்தன. அவர்களுடைய வசதிக்காக விசாலமான சாலை ஒன்றும் அமைக்கப்பட்டது. அதன் இரு மருங்கிலும் நிழல் தரும் மரங்கள் பயிராக்கப்பட்டன. டில்லிக்கும் தௌலதாபாதுக்கும் இடையில் ஒழுங்கான அஞ்சல் முறையும் ஏற்படுத்தப்பட்டது. 'அங்கு வந்து குடியேற வேண்டியவர்களுக்கு அவர்கள் பிரயாணத்தின் போதும், வந்து சேர்ந்த பின்னரும் வேண்டிய எல்லா வசதிகளையும் மிகு தாராளமாகச் சுல்தான் ஏற்பாடு செய்திருந்தார்,' என்று பார்னிகூட எழுதியுள்ளார். இவற்றில் எல்லாம் சுல்தான் நியாயமாகவே நடந்துள்ளார்.

ஆனால், டில்லி மக்கள் பழைய நம்பிக்கை காரணமாகத் தங்கள் சொந்த வீடுகளைவிட்டுப் போக முணுமுணுத்தனர். சென்ற கால நினைவுகளுடன் சம்பந்தப்பட்ட அவர்களுடைய பழைய இருப்பிடத்தை விட்டு நீங்க அவர்களுக்கு மனமில்லை. இதனால் மிகவும் சினமடைந்த சுல்தான் தம் நற்குணங்களையெல்லாம் மறந்தார். உடனே, டில்லி மக்கள் யாவரும் ஒரே கூட்டமாகத் தங்கள் உடைமைகளுடன் 'தௌலதாபாதுக்குச் செல்லும்படி கட்டளையிட்டார். குருடனை ஒருவன் டில்லியிலிருந்து தேவகிரிக்கு இழுத்துச் செல்லப்பட்டான் என்றும், படுக்கையோடு படுக்கையாக இருந்த முடவன் ஒரு பல்லக்கில் வைத்து எடுத்துச் செல்லப்பட்டான் என்றும் இபின் பதூதா கூறுவதை நாம் நம்ப வேண்டியதில்லை. மற்றும், வஞ்சப் புகழ்ச்சியாகப் பார்னி கூறும் பின்வரும் கூற்றையும் அப்படியே எடுத்துக் கொள்ள வேண்டாம்.

அவர் கூறுகிறார், 'டில்லிக் கட்டடங்கள்,' அரண்மனைகள் தவிர நகர்ப்புறங்களில் ஒரு பூனையோ நாயோகூட விட்டு வைக்கப் படவில்லை'. இந்தியாவின் மத்தியகால சரித்திர ஆசிரியர்கள் இம் மாதிரியாகக் கூறுவது மிகவும் சாதாரணமானது. நகரத்தை முற்றிலும் காலி செய்தல் அல்லது அழித்தல் என்பது எண்ணிப் பார்க்கவும் கூடாததாக உள்ளது. ஆனால், டில்லி மக்கள் பட்ட துன்பம் என்னவோ, நினைப்பதற்கும் அரியதாக இருந்தது. அவர்கள் 700 மைல் தொலைவைக் கடந்துசென்றனர். களைப்பினால் பாதிக்கப்பட்டுப் பலர் வழியிலேயே மாண்டனர். தௌலதாபாது வந்து சேர்ந்தவர்களோ புதிய நாட்டில் இடம் பெயர்ந்த அகதிகளைப் போன்று ஏமாற்றத்தாலும் உடல்வலியாலும் மாண்டனர். சுல்தானின் தவறான திட்டத்தின் நாச விளைவுகள் இவ்வாறு இருந்தன. ஸ்டான்லி லேன்பூல் கூறுவதாவது, 'தவறான பாதையில் செலுத்தப்பட்ட சக்திக்கு ஏற்ற ஞாபகச் சின்னம் தௌலதாபாத்'.

ஒருவாறு கடைசியில் தம் தவற்றை உணர்ந்துகொண்ட சுல்தான் மறுபடியும் தம் அரசாங்க அலுவலகத்தை டில்லிக்கு மாற்றி மக்களை மீண்டும் டில்லிக்குச் செல்லுமாறு உத்தர விட்டார். டில்லிக்குச் செல்வதற்கு உயிருடன் இருந்தவரோ ஒரு சிலர். டில்லி தன் பண்டைய செழிப்பையும் பெருமிதத்தையும் இழந்து தவித்தது. இழந்த அதன் செழிப்பை நீண்ட காலமாகப் பெற முடியவில்லை. தம் ஆட்சிக்கு உட்பட்ட வெவ்வேறு பிரதேசங்களிலிருந்து அறிவாளிகளையும், பிரபுக்களையும், வியாபாரிகள், நிலக்கிழவர்கள் ஆகியவர்களையும் டில்லிக்கு வருமாறு செய்து அவர்களை அங்கு வாழும்படி செய்தார். இபின் பதூதா கி.பி. 1334-ல் டில்லி பாழாக இருந்ததையும், மற்றும் சில பகுதிகளில் அழிவுச் சின்னங்கள் விளங்கியதையும் கண்டார்.

பணவிஷயமாகவும் மகமது பின்துக்ளக் சில புதிய பரிசோதனைகளை நடத்தினார். எட்வர்ட் தாமஸ் இவரைப் 'பணச் சீர் திருத்த அரசன்' என்று கூறுகிறார். அவர் மேலும் எழுதுகிறார்: அவருடைய ஆட்சியில் அவர் செய்த செயல்களுள் முதன்மையானது காசு முறையைத் திருத்தி அமைத்ததாகும். உலோக விலை உயர்விற்கு ஏற்பச் சிறிய காசுகளைத் திருத்தியமைத்தார். சில்லறை நாணயப் புழக்கத்திற்காகத் தக்க மதிப்பு கொண்ட புதிய சில்லறைக் காசுகளை வெளியிட்டார். 'தினார்' என்று இபின் பதூதாவினால் குறிக்கப்பட்ட 200 கிரெய்ன் எடையுள்ள புதிய பொற்காசு ஒன்றைச் சுல்தான் வெளியிட்டார். 175 கிரெய்ன் எடையுள்ள பழைய வெள்ளி, தங்கக் காசுகளுக்குப் பதிலாக

140 கிரெய்ன் எடையுள்ள அடாலி என்ற புதிய வெள்ளிக்காசு ஒன்றையும் அவர் வெளியிட்டார். வெள்ளியின் மதிப்போடு ஒப்பிடுகையில் தங்கத்தின் மதிப்புக் குறைவானது காரணமாக இந்த மாற்றத்தை அரசர் செய்தார். தக்காணப் படையெடுப்புகள் காரணமாக ஏராளமான அளவில் அவருடைய கஜானாவில் தங்கம் குவிக்கப்பட்டது.

கி. பி. 1329-க்கும் 1330-க்கும் இடையில் அடையாளச் செம்பு நாணயங்களை வெளியிட்டது துக்ளக்கின் பரிசோதனைகள் யாவற்றிலும் மிக்க துணிச்சலானதாகும். இம்மாதிரி அடையாள நாணயங்களை இவருக்கு முன்னால் சீனாவும் பாரசீகமும் வெளியிட்டிருந்தன. பதின்மூன்றும் நூற்றாண்டின் முடிவில் சீனாவின் மங்கோலியச் சக்கரவர்த்தியான குப்ளாய்கான் காகித நாணயங்களைச் சீனாவில் வெளியிட்டார். கி.பி. 1294-ல் இதே முறையைப் பாரசீக மன்னர் கெய்காட்டு என்பவரும் கையாண்டார். நாணயப் பரிவர்த்தனை எல்லாவற்றிலும் செம்பு அடையாள நாணயங்கள் பொன், வெள்ளி நாணயங்களின் மதிப்பில் உபயோகிக்கப்படவேண்டும் என்ற ஓர் உத்தரவைத் துக்ளக் வெளியிட்டார். இந்த உத்தரவு இடுவதற்குச் சுல்தானின் நோக்கம் யாதெனில், ஏற்கெனவே வறண்டுபோன தமது கஜானாவை நிரப்புவதற்கும், தம் படையெடுப்புகள் அரசியல் நிருவாகம் இவற்றிற்கான பொருள் வருவாயை அதிகரிக்கவுமேயாகும். ஆகவே, அவர் மக்களை ஏமாற்ற இத்தகைய திட்டம் அல்லது தந்திரம் கொண்டிருந்தார் என்று அவரைக் குற்றம் சாட்ட முடியாது.

மிகவும் கவனமாகத் திட்டமிடப்பட்டுச் செய்த இந்த நடவடிக்கை இருவித காரணங்களால் தோற்றுப் போயிற்று. முதலாவதாக அடையாள நாணயம் என்பது காலத்திற்கு முந்திய ஒரு செயல். அதன் தன்மைகளை மக்களால் புரிந்துகொள்ள முடியவில்லை. இரண்டாவதாகச் செப்பு நாணயங்கள் வெளியிடுவதை அரசாங்கத்தின் ஏகபோக உரிமையாக சுல்தான் செய்யவில்லை. கள்ள நாணயம் வெளியிடுவோர்மீது நடவடிக்கை எடுக்கவும் அவர் தவறிவிட்டார். தாமஸ் கூறுகின்றபடி 'அரசாங்க நாணயச் சாலையில் உருவாக்கப்படும் நாணயங்களைச் சுமாரான கைத்திறன் உடைய தொழிலாளிகள் தயாரிக்கும் நாணயங்களினின்று வேறுபடுத்தி அறிய ஏற்றபடி அரசாங்க நாணயங்களைத் தனித் தன்மையுடன் தயாரிக்கும் எந்திரமும் இல்லை.' காகித நாணயங்களைப் பிறர் அச்சிடமுடியாதபடி சீனாவில் முன் ஏற்பாட்டு முறைகள் செய்யப்பட்டன. ஆனால், இங்கு உண்மைச் செம்பு நாணயங்களுக்கும் போலி நாணயங்

களுக்கும் வேறுபாடு கண்டறிய வகையில்லாதபடியால் கள்ள நாணய உற்பத்தி கட்டுக்கடங்காமல் போயிற்று. இதனுல் போலி நாணயங்களின் புழக்கம் அதிக அளவில் ஏற்பட்டது. 'இந்தப் புதிய நாணயமுறை உத்தரவு பிறப்பிக்கப்பட்டவுடன் இந்துக் களின் வீடுகள் ஒவ்வொன்றும் நாணயச் சாலைகளாக மாறின. வெவ்வேறு மகாணங்களில் உள்ள இந்துக்கள் இலட்சக்கணக்காக வும் கோடிக்கணக்காகவும் செப்பு நாணயங்களை அச்சிட்டனர். இந்த நாணயங்களைக் கொண்டு தங்கள் கப்பப் பணத்தைக் கட்டினர். இவற்றைக் கொண்டே அவர்கள் குதிரைகளும் ஆயுதங் களும் மற்றும் பல நேர்த்தியான பண்டங்களும் வாங்கினர். கிராமத் தலைவர்கள், நிலச் சொந்தக்காரர்கள் ஆகியோர் இந்தச் செப்பு நாணயங்களைப் பயன்படுத்திப் பணக்காரர் ஆயினர். ஆனுல், அரசாங்கம் வறுமையுற்றது. இராச்சியத்தின் எப் பகுதி யில் சுல்தானின் உத்தரவு பயத்துடன் பின்பற்றப்பட்டதோ, அங்கெல்லாம் தங்க 'டங்கா' நாணயங்களின் மதிப்பு நூறு (செப்பு) டங்கா நாணயங்களாக உயர்ந்தது. ஒவ்வொரு பொற்கொல்லரும் தம் பட்டறையில் செப்பு நாணயங்களை அச் சடித்ததால் அரசாங்க கஜானு விரைவில் இச் செப்பு நாணயங் களால் நிரம்பியது. செப்பு நாணயங்களின் மதிப்பு மிகவும் குறைந்து போய் அவைகள் கூழாங்கற்களுக்குச் சமமாகக் கருதப் பட்டன. பழைய நாணயம் கிடைப்பது அரிதாயிற்று. ஆகையால், அது நான்கு மடங்கு அல்லது ஐந்து மடங்காக மதிப்பில் உயர்ந்தது என்று பார்னி கூறுகிருர். இவற்ருல் வாணிகமும் கைத்தொழிலும் மிகவும் பாதிக்கப்பட்டன. எங்கும் குழப்பம் மண்டிற்று. புதிய நாணய முறையைப் புகுத்தி நான்கு ஆண்டு காலமாவதற்குள்ளாகச் சுல்தான் தமது தவற்றை உணர்ந்து தமது உத்தரவை ரத்து செய்தார். தம் கஜானுவிற்குக் கொண்டுவரப் பட்ட ஒவ்வொரு செப்பு நாணயத்திற்கும் அதன் முக மதிப் பிற்குச் சமமான பொன், வெள்ளிக் காசுகளைக் கொடுத்தார். இவ்வாறு நாட்டின் பொதுப் பணம் அரசாங்கத்தின் எந்த நன்மைக்கும் பயன்படாமல் வீணுக அழிந்தது. டில்லிக்குக் கொண்டுவரப்பட்ட செப்பு நாணயங்களுக்கு அளவே இல்லை. துக்ளகாபாதில் எங்குப் பார்த்தாலும் இந் நாணயங்கள் குவியல் குவியல்களாகக் காணப்பட்டன. ஒரு நூற்ருண்டிற்குப் பின் இரண்டாம் முபாரக் ஷா ஆட்சியில்கூட இந்த நாணயக் குவியல்கள் காணப்பட்டன.

துக்ளக் ஆட்சிக் காலத்தில் வெளிநாட்டுப் படையெடுப்பு அபாயம் முற்றிலும் இல்லாதிருக்கவில்லை. கி.பி. 1328—1329-ல் டிரான் சாக்ஸோனியாவைச் சேர்ந்த சகாட்டைத் தலைவர்

தார்மஷ்ரின் கான் இந்தியாவின்மீது படையெடுத்தார். அவர் பஞ்சாப் சமவெளிகளைச் சூறையாடியபின் டில்லிக்கு அருகில் வந்தார். டில்லியிலிருந்து தலைநகர் மாற்றப்பட்டிருந்ததும், வடமேற்கு எல்லைப்பாதுகாப்பிற்கு டில்லி அரசர்கள் தக்க ஏற்பாடுகள் செய்யாதிருந்ததும் இவருக்கு இவர் பேராசைத் திட்டங்களை நிறைவேற்றிக் கொள்ள வாய்ப்பை அளித்தன. மகமதுபின் துக்ளக் இவரைத் தோற்கடித்து நாட்டை விட்டு விரட்டியடித்ததாக யாஹியாபின் அஹமது, பதானி இவர்கள் கூறுகின்றனர். ஆனால், பெரிஷ்டா வேறுவிதமாகக் கூறுகிறார். 'தம் நாட்டின் விலையாக ஏராளமான பொன்னையும் அணிகலன்களையும் காணிக்கையாகக் கொடுத்துப் படையெடுத்தவனைப் போகச் செய்தார்,' என்று கூறுகிறார். எது எப்படியிருப்பினும் அந்தப் படையெடுப்பு ஒரு கொள்ளையாகத்தான் முடிந்தது. எவ்வளவு விரைவாக வந்தாரோ அவ்வளவு விரைவாகவே தார்மஷ்ரின் திரும்பிச் சென்றார்.

அலாவுதீனைப் போன்று உலகத்தை எல்லாம் வெற்றி கொள்ள வேண்டுமென்ற பெரியதோர் எண்ணத்தை மகமது துக்ளக் கொண்டிருந்தார். சுல்தானின் தாரளமான மனப் போக்கில் ஆசைகொண்டும் தங்கள் சுயநல நோக்கத்துடனும் சில குராசனி (Khurasani) பிரமுகர்கள் இவரிடம் பணிபுரியும்படி டில்லி வந்திருந்தனர். இவர்கள் சுல்தான் ஆட்சி ஆரம்பத்திலேயே குராஸன், இராக் இவற்றை வெற்றிகாண வேண்டுமென்று ஒரு பேராசைத் திட்டத்தை வகுத்திருந்தனர். இதற்காக ஒரு பெரிய படை திரட்டப்பட்டது. 3,70,000 வீரர் இதற்காகத் திவானி-இ-ஆர்ஸ் என்னும் படைக் கணக்குப் பட்டியலில் சேர்க்கப்பட்டு ஓராண்டுக் காலமாக அரசாங்கத்தால் பணமும் கொடுக்கப்பட்டுவந்தனர் என்று பார்னி கூறுகிறார். குராஸன் குழப்பமான நிலையில் அப்பொழுதிருந்தது என்பது உண்மையே. அப்பொழுது அது அபுசேத் என்னும் மன்னரால் ஆளப்பட்டுவந்தது. அத்தகைய நிலையில் அதைக் கைப்பற்ற வேண்டுமென்று நினைப்பது எந்த வெளிநாட்டுப் படையினரும் எண்ணக் கூடியதே. ஆனால், டில்லி சுல்தான் அதை வெற்றி காண்பது என்பது சாத்தியமற்ற வேலையாகும். டில்லியின் ஆட்சி அதன் உள்நாட்டியிலேயே ஸ்திரமாக அமையவில்லை. தக்காணத்தில் அதன் ஆதிக்கம் ஏற்படவில்லை. பூகோள ரீதியில் நோக்கினாலும் போக்குவரவு வசதிக்குறைவு இருப்பதையும் அதைக் குறைவாக எண்ணவும் முடியாது என்பதும் விளங்கும். ஹிந்துகுஷ், அல்லது இமயமலைக் கணவாய்கள் மூலமாகப் பெரிய படையை நடத்திச் செல்வதும் தொலைதூரத்து நாட்டில் அதற்கான உணவு

மற்றும் பிற வசதிகளைத் தேடுவதும் பூதாகாரமான சாதனை களாகும். டில்லிப் போர் வீரர்கள் இதுகாறும் தங்களுக்குள் பிளவு பட்டு வலுவிழந்திருந்த இந்தியப் படையினரை வெற்றி கண்டனர். அவர்கள் மத்திய ஆசிய முரட்டுச் சாதியினரிடம் தங்கள் வலிமையை எந்த அளவில் காட்டக்கூடும் என்பது பற்றி யும் நன்கு சிந்திக்க வேண்டியிருந்தது. சகாட்டைத் தலைவன் தார்மஷ்ரின்கானும் எகிப்திய சுல்தானும் பிளவுபட்ட பாரசீகத் தின் கிழக்கு மேற்கு எல்லைப் பிரதேசங்களைக் கவருவதில் நாட்ட முடையவராயிருந்தனர். அவர்கள் டில்லி சுல்தானுடன் போலி நட்புக் கொண்டிருந்தனர். ஆகவே, அவர்கள் இந்த நீண்ட படையெடுப்பில் சுல்தானுக்கு உதவுவதைவிடத் தங்கள் சுய நலத்திற்கானவற்றைச் செய்யவே விரும்பினர். இக் காரணங் களால் டில்லிச் சுல்தானின் இப் படையெடுப்பு மிகவும் அரசியல் விவேகமற்ற செயல் என்பது எப்படிப் பார்த்தாலும் வெட்ட வெளிச்சமாகத் தோன்றியது. பணமுடை காரணமாக அது கைவிடப்படவேண்டியதாயிற்று. 'ஆசையுடன் அடைய விரும்பிய நாடுகளை அடையமுடியவில்லை ..ஆனால், ஆட்சியின் ஆணி வேரான பொருள் மட்டும் வீணாகச் செலவாயிற்று' என்று பார்னி எழுதுகிறார்.

திபேத்தையும் சீனாவையும் வெற்றிகாண வேண்டுமென்ற தொரு பேராசை நோக்கத்தைத் துக்ளக் என்றும் தம் மனத்தில் கொண்டதில்லை. ஆனால், அவர் காலத்து உத்தியோகஸ்தர் பார்னி, மற்றும் இபின்பதூதா இவர்கள் இருவரும் துக்ளக் 'காரஜால்' மலையைப் பிடிக்கத் திட்டம் போட்டிருந்தார் என்பது பற்றித் தெளிவாகக் குறிப்பிடுகின்றனர். இந்த மலை ஹிந்து (இந்தியா) சீன நாட்டுப் பிரதேசங்களுக்கு இடையில் அமைந் துள்ளது. நிச்சயமாக இப் படையெடுப்பு கௌமன் கார்வால் பிரதேசத்தில் இருந்த சில புரட்சிக்காரக் கூட்டத்தினருக்கு எதிராக மேற்கொள்ளப்பட்டது. அவர்களை வென்றடக்கி அவர் களின் பிரதேசத்தை டில்லி ஆதிக்கத்தின் கீழ் கொண்டுவர வேண்டுமென்ற நோக்கம் இருந்தது. கி.பி. 1337—1338-ல் தலைசிறந்த ஒரு தளபதியின் தலைமையில் டில்லியிலிருந்து பெரிய தொரு படை அனுப்பப்பட்டது.

முதலில் சில வெற்றிகள் ஏற்பட்டாலும் பூகோள சாதகமற்ற நிலை காரணமாக டில்லிப் படைகள் சொல்லொணாத் துன்ப முற்றன. அது சமையம் மழைக்காலமும் ஆரம்பித்தது. உணவுப் பற்றாக் குறையும் சேர்ந்துகொண்டது. இப் படையினரில் ஒரு சிலரே (பார்னி கணக்குப்படி பத்துப் பேர், இபின் பதூதா

கணக்குப்படி மூவர்) தப்பி வந்து அந்தப் படையெடுப்பின் துக்க முடிவைப்பற்றிக் கூறினர். ஆனல். படையெடுப்பின் உடனடி நோக்கம் நிறைவேறியது. அந்த மலைச்சாதியினர் டில்லி அரசுடன் ஓர் உடன்பாட்டிற்கு வந்து கப்பம் கட்ட ஒப்புக் கொண்டனர்.

மகமது பின் துக்ளக்கின் பேராசை பிடித்த திட்டங்களின் கூட்டு விளைவு அவருக்கு மிகு கெடுதலாக முடிந்தது. அவருடைய நாட்டு மக்களுக்கு அவை மிக்க துன்பத்தை விளைத்தன. அதோடு கூட அம் மக்கள் கொடிய பஞ்சத்தாலும் பீடிக்கப்பட்டனர். இவற்றல் மக்கள் தங்கள் பொறுமையை இழக்கும்படி நேரிட்டது. மக்களிடை தோன்றிய அதிருப்தி சுல்தானின் ஆட்சிக்கெதிரான பல கலகங்களாக முளைத்தன. ஆட்சிக்காலம் முழுவதும் எங்குப் பார்த்தாலும் கலகங்கள் தோன்றின. அவை கொடுமையிலும் தீவிரத்திலும் அதிகரித்தன. இக் கலகங்கள் சுல்தானின் கௌர வத்தையும் அதிகாரத்தையும் ஆட்டம் காணுமாறு செய்து அவரது பெரிய சாம்ராச்சியம் சிதறுண்டு போவதைத் துரிதப் படுத்தின.

முதலில் எழுந்த இரு கலகங்கள் மிக எளிதாக அடக்கப் பட்டன. கலகக்காரர்களுக்குப் படிப்பினையான தண்டனைகள் வழங்கப்பட்டன. கியாஸ் உதீன் சகோதரியின் மகனை பகா-உதீன் குர்ஷாஸ்ப் என்பவர் சாகரின் (Sagar) மானியதாராக இருந் தார். அது தக்காணத்தில் ஷோலாப்பூருக்குப் பத்து மைல் வடக்கில் உள்ளது. அவர் சுல்தானின் ஆட்சிக்குக் கீழ்ப்படிய மறுத்துக் கி.பி. 1326—1327-ல் அவருக்கு எதிராகக் கலகம் செய் தார். அவர் அரசரது படையினரால் சிறைப்பிடிக்கப்பெற்று டெல்லிக்கு அனுப்பப்பட்டார். அவரது தோல் உரிக்கப்பட்ட உடல் நகர் முழுவதும் ஊர்வலமாக எடுத்துச் செல்லப்பட்டது. அரசனுக்கு எதிராகச் சதி செய்வோர், இவ்வாறு உயிரிழக்க நேரும் என்னும் எச்சரிக்கையும் விடுக்கப்பட்டது. அடுத்த ஆண்டில் இதைவிடப் பெரியதொரு கிளர்ச்சி தோன்றியது. பஹ்ரம் அய்பா அல்லது கிஷ்லுகான் எனப்பெயர் பெற்ற உச், சிந்து, மூல்தான் ஆகிய பகுதிகளின் தலைவர், இக் கிளர்ச்சிக்கு முக்கிய காரணமாக விளங்கினர். அப்போது தேவகிரியிலிருந்த மகமது-பின்-துக்ளக், டெல்லி வழியாக மூல்தானை அடைந்து எதிரியை 'அபுஹார்'[1] என்னுமிடத்தில் முறியடித்தார். மூல்

[1] தற்போது தெற்குப் பஞ்சாப் இரயில் பாதையில் பிரோஸ்பூர் மாவட்டத் திலுள்ள பஸால்கா தஹ்சில் என்னுமிடத்திலுள்ளது. இவ் விடத்தைப் பற்றிய முழு விவரங்களுக்கு மேஜர் ரேவர்த்தியின் (Raverty) Mihran of Sind and its Triputaries என்னும் நூலைப் பார்க்கவும். (J.A.S.B. 1892 Vol. I)

தானிய மக்கள் யாவரையும் கொன்று குவிக்க எண்ணிய சுல்தானைச் சாதுருக்குன்தீன் அவ்வாறு செய்வதினின்றும் தடுத்தார். பஹ்ராம் கைது செய்யப்பட்டுக் கொலையுண்டார். பிற மக்களுக்குப் படிப்பினையாகப் பஹ்ராமின் தலை துண்டிக்கப்பட்டு மூல்தான் நகர்த் தலைவாயிலில் தொங்கவிடப்பட்டது.

இவ் விரு கலகங்களும் அடக்கப்பட்டனவெனினும், சுல்தானின் நிலையை அவை எவ்வகையிலும் வலுப்படுத்தவில்லை. உண்மையில் கி.பி. 1335ஆம் ஆண்டிலிருந்து சுல்தானின் மதிப்புக் குறைந்து இந்துத் தலைவர்களும், முஸ்லிம் பிரபுக்களும் வெளிப்படையாக அவரை அசட்டை செய்ததோடு, தங்கள் சுதந்திரத்தை நிலை நாட்டவும் உறுதி கொண்டனர். வட இந்தியப் பகுதியில் சுல்தானின் முழுக் கவனமுமிருந்ததைப் பயன்படுத்தி மாவாரின் கவர்னர் ஜலால் உதீன் ஹசன் ஷா கி.பி. 1335-ல் [1] தம்மைச் சுதந்திர அரசனாகப் பிரகடனம் செய்து கொண்டு, தம் பெயரால் நாணயங்களை அச்சிட்டு வெளியிடவும் துணிந்தார். இதையறிந்த சுல்தான் அவருக்கெதிராகப் படை நடத்திச் சென்று வாரங்கலை அடைந்தார். அங்குப் படையினர் சீதபேதியால் வருந்த நேர்ந்தது. எனவே, சுல்தான் தௌலதாபாத்திற்குத் திரும்ப வேண்டியதாயிற்று. இவ்வாறு, மதுரையில் முளைத்த சுதந்திர முஸ்லிம் அரசு கி.பி. 1377—1378 வரையிலும் நிலவி, விஜய நகரப் பேரரசின் வலிமைக்கு முன் ஆற்றாது அடிபணிய நேரிட்டது. கர்ண பரம்பரைச் செய்திக்கொப்பக் கி. பி. 1336ஆம் ஆண்டில் விஜயநகரம் உருப்பெற்றதெனலாம்.

வடதிக்கில் வங்காளக் கவர்னர் பக்கீர்-உதீன் முபாரக்-ஷா கி. பி. 1338ஆம் ஆண்டில் டெல்லி ஆட்சியை உதறியடித்துத் தம் பெயரால் நாணயங்களையும் வெளியிடத் தலைப்பட்டார். வங்காளம் என்றும் டெல்லி ஆட்சியை விரும்பி ஏற்றதில்லை. பல பிரச்சினைகளால் சூழப்பெற்ற சுல்தானுக்கு வங்காள கவர்னரைத் தண்டிக்கும் வாய்ப்பில்லாது போயிற்று. வங்காளமும் தனியுரிமை பெற்ற நாடாயிற்று. சாம்ராச்சியத்தின் பல பகுதிகளிலும் ஒன்றன் பின் ஒன்றாகப் பல கிளர்ச்சிகள் தோன்றலாயின. இவற்றுள் மிகவும் பயங்கரமான கிளர்ச்சியைக் கி.பி. 1340–41-ல் சவ்ராபாத் அயோத்தி மாகாணங்களின் கவர்னர் ஐன்-உல்-முல்க் தொடங்கினார். உண்மையில், இவை யாவும் கி.பி.1342ஆம் ஆண்டு இறுதியில் நசுக்கப்பட்டன. என்றாலும், நாட்டின் செல்வம் சீர்குலைந்ததோடு சுல்தானின் மனத் தளர்ச்சியையும் வளர்த்தன.

[1] டாக்டர் E. ஹல்ட்ச் (Hultzsch) என்பவர், நாணயச் சான்றுகளினடிப்படையில் இந் நாளைக் குறிப்பர். 'மதுரைச் சுல்தானின் நாணயங்கள்' என்னும் அவரது கட்டுரையைப் பார்க்க. (J.R.A.S. 1909)

சிறுகச் சிறுக வலிமை குன்றி வாழ்க்கை நடத்திய சுல்தான் இழந்த பெருமையை மீண்டும் பெறும் ஆசையுடன் எகிப்தின் காலிஃப் அப்பாசிட்டின் அரவணைப்பில் ஒதுங்க எண்ணங் கொண்டார். அவரது ஆசை நிறைவேறியது. காலிஃபின் நன் மதிப்பைப் பெற்றதும், நாணயங்களிலும், பிரார்த்தனைச் சுலோ கங்களிலும் தமது பெயருக்குப் பதிலாகக் காலிஃபின் பெயரையே உபயோகிக்கத் தொடங்கினர். சுல்தானிடம் நம்பிக்கையிழந்து நின்ற மக்களின் உள்ளத்தில் இம் மாற்று வித்தையால் எவ்விதப் புத்துணர்ச்சியும் ஏற்படாதொழிந்தது. சுல்தானின் அரசுரிமை யைக் குடிமகன் எவனும் எதிர்த்ததில்லை. அவரது ஆட்சி முறையையே மக்கள் வெறுத்தனர்.

பகுதி ஒவ்வொன்றிலும் அரசு நிலை ஆட்டம் கண்டுவந்தது. தெலிங்கானுவில் பரோலய நாயகனும், அவருக்குப்பின் அவர் மருமகன் காபய நாயகனும் இஸ்லாமிய ஆட்சிக்கெதிராக இந்துக் கிளர்ச்சி ஒன்றை ஊக்குவித்தனர். ஹொய்சள மன்னர் மூன்றும் வீர பல்லாளனும் இதற்கு உடந்தையாக இருந்தார். கிருஷ்ணு நதிக்கரையிலும் இதே போன்றதொரு கலகம் உண்டா யிற்று. விஜயநகரப் பேரரசின் எழுச்சியும், தக்காணத்தில் பல இந்து இராஜ்யங்களின் எழுச்சியும் இதன் இறுதி விளைவுகளாக் விளங்கின. 'முதியோரை' (அமிரான்-இ-ஸதா) சுல்தான் சிரச் சேதம் செய்ததால், பலர் அவரை வெறுக்கத் தொடங்கிக் கிளர்ச்சிமேல் கிளர்ச்சியாகத்' தொடர்ந்து நடைபெறலாயிற்று. அன்னிய அமீர்கள் தேவகிரியில் கலகம் செய்து பாமினி ராச்சி யத்தை ஏற்படுத்திக்கொண்டனர். 1347ஆம் ஆண்டு, ஆகஸ்டு மாதம் அலாவுதீன்-பாமன்-ஷா என்பவர் பாமினி நாட்டிற்கு வித்திட்டார். ஒரு பகுதியில் தொடங்கும் கலகத்தை அடக்க முற் படும்போது பிறிதொரு பகுதியில் கலகம் முளைத்து, நாளடைவில் அடக்கவொண்ணு நிலை ஏற்பட்டது. கலகக்காரரைத் துரத்திச் செல்லும்போது சிந்து மாகாணத்தில் தட்டா என்னுமிடத்தில் கி.பி. 1351ஆம் ஆண்டு மார்ச்சு மாதம் இருபதாம் தேதி சுல்தான் உயிரிழக்க நேரிட்டது. 'இவ்வாறு, மக்களிடமிருந்து மன்னனும், மன்னனிடமிருந்து மக்களும் முறையே விடுதலை பெற்றனர்' எனப் பதௌனி குறிப்பிடுகிறுர். நிலையற்ற எண்ணங்களைச் செயற்படுத்தும் வகையறியாத இச் சுல்தானின் அரசு பரிதாபமாக முடிவெய்தியது. இச் சோக முடிவின் விளை வாகச் சிதறிய பேரரசினின்றும் இருபத்து மூன்று சிறு பகுதிகள் தோன்றின. இச் சோக முடிவின் சிற்பி சுல்தானே என்பதில் ஐய மெதுவுமில்லை. சிறந்த அறிவும், தளரா உழைப்பும் பெற்றிருந்த போதும், நிருவாகத் திறமையற்றிருந்த சுல்தானின் அவிவேக

முறைகளும், தேவையற்ற கடுமையும், மக்கள் குரலை மதியாது செயலாற்றும் மனப்பாங்கும், பேரரசைப் படுகுழியில் வீழ்த்தின.

## 3. ஃபிரோஸ் - ஷா (ரஜாபின் மகன்)

தட்டாவிலேற்பட்ட மகமது-பின்-துக்ளக்கின் திடீர் மரணம் படையினருள் பெருங்குழப்பத்தை உண்டாக்கியது. படையினருடன் பெண்டிரும் குழந்தைகளுமிருந்தது முன்னரே குழப்பத்திற்குக் காரணமாயிருந்தது. மங்கோலியக் கூலிப்படையினரும், சிந்து நாட்டுச் சதிகாரரும் கொள்ளையும் கொலையும் புரிந்தனர். இக் குழப்பநிலை இரண்டு நாள்களுக்கு நீடித்தது. அந் நிலையால் பிரபுக்கள் கூடி ஆட்சியை ஏற்று நாட்டைக் காப்பாற்றுமாறு ஃபிரோஸ் என்பவரை வேண்டினர். அவர் உண்மையில் அரசில் விருப்பமுள்ளவராயினும் சற்றும் பற்றற்றவர் போல நடித்து, இறுதியில் நாற்பத்து ஆறுவது வயதில், 1351ஆம் ஆண்டு மார்ச்சு மாதம் 23ஆம் தேதியன்று அரசு கட்டிலேறினர். படையினரை அடக்கிக் குழப்பத்தை வேரறுத்து டெல்லியை நோக்கிப் புறப்பட்டார். சிந்துவை விட்டு வெளியேறியதும், இறந்துபட்ட சுல்தானின் திவான் குவாஜா-இ-ஜஹான் என்பவர் சிறுவனொருவனைப் பின் துக்ளக்கின் வாரிசெனப் பறைசாற்றி, அரசேறச் செய்த விவரமறிந்தார். ஃபிரோஸிற்கு இது ஒரு பெருஞ் சோதனைக் காலமாயிருந்தது. மூல்தானை அடைந்ததும் பிரபுக்களையும் இஸ்லாமிய சாத்திர வல்லுநர்களையும் அவர் கலந்தாலோசித்தார். மகமது-பின்-துக்ளக்கிற்கு வாரிசாக மக்களெவரும் இல்லை எனப் பிரபுக்கள் முடிவு கட்டினர். சிறுவனின் அரசுரிமை செல்லாதென நீதி வல்லுநரும் கூறினர். சட்டரீதியாக இவ் வரசேற்றம் ஆராயப்படவில்லை. இஸ்லாமிய சட்ட திட்டங்களுக்கேற்ப இறைமை வாரிசுரிமைக்கு ஏற்றதொரு பொருளன்று. எனவே, அரசேற்றத்துக்குரிய உரிமைப் பிரச்சினை எழுவதற்கு வழியேதுமில்லை. சிறுவனின் கட்சி பலவீனமடைந்தது. குவாஜா-இ-ஜஹான் பிரோஸிற்கு அடிபணிந்தார். அவரை மன்னித்து சாமாணு என்னும் பகுதியையும் அவருக்களித்து, இறுதி நாள்களை மன அமைதியோடு கழிப்பதற்கு ஃபிரோஸ் வகை செய்தார். ஆயினும் சமாணுவை அடைவதற்கு முன் குவாஜா கொலையுண்டார். சூணும் சமாணு ஆகிய பகுதிகளின் தலைவர் ஷேர்கான் என்பவரின் தூண்டுதலின் பேரில் பிரபுக்களும், படைத் தலைவரும் சதிசெய்து இக் கொலைக்கு ஏற்பாடு செய்தனர். இச் சம்பவம் ஃபிரோஸிற்கு வருத்தமளித்தது. குற்றமற்றதோர் அரசாங்க ஊழியன், பிரபுக்கள் படைத்தலைவர் ஆகியோரின் பொறாமைக்குப் பலியான செய்தி சுல்தானுக்கு மனக் கிலேசத்தையே உண்டு பண்ணிற்று.

ஃபிரோஸ் அரசேற்ற முறையைக் குறித்துப் பலத்த விவாதங்களும், கருத்து வேற்றுமைகளும் உண்டு. கியாஸ் உதீனின் உடன் பிறந்தோன் ரஜாப் என்பவருக்கும் அவர் மனைவி அபுஹார் அரசர் ராணுமாலின் மகள் ரஜபுத்திர பட்டி இளவரசிக்கும் பிறந்தவர். கியாஸ்-உதீன்-துக்ளக், மகமது பின் துக்ளக் ஆகியோரிடம் ஃபிரோஸ் அரசியல் பயிற்சி பெற்றார். மகமது பின் துக்ளக் ஃபிரோஸைத் தம் வாரிசாக வரித்து எழுதிவைத்துச் சென்றார் எனப் பார்னி என்னும் ஆசிரியர் உரைப்பர். சர் உல்சிலி ஹெய்க் என்பார் இக் கருத்தை மறுப்பர். குவாஜா-இ-ஜஹான் அரசேற்றிய இளவல் உண்மையில் மகமது பின் துக்ளக்கின் மகன் என்பது ஹெய்கின் திட்டமான கருத்தென விளங்கும். உல்சிலி ஹெய்கின் இக் கருத்தை அறிஞர் பலர் ஏற்பதில்லை. இது எவ்வாறாக இருப்பினும், பிரபுக்களும், மௌல்விகளும், தேவையைப் பொறுத்துப் ஃபிரோஸைத் தேர்ந்தனர் எனக் கொள்வது மிகவும் பொருந்தும். பிறப்புரிமை பெற்ற மகனிருந்தும், சின்னாள்களாக வழக்கொழிந்து மறைந்திருந்த தேர்வு முறைக்கு ஏற்றம் கிடைத்ததை விளக்குவதாக இச் சம்பவத்தை ஆராய்ச்சியாளர் சிலர் கொள்ளுவர். உறவைக் காட்டிலும் தகுதியே அரச பதவிக்குத் தேவையாக இருந்தது.

சிக்கலான பிரச்சினைகள் ஃபிரோஸை எதிர் நோக்கியிருந்தன. வலிவிழந்தும், கௌரவமற்றுமிருந்த டில்லி அரசைச் சீர்திருத்துவதும், முன்னோர் ஆட்சியில் சிறுகச் சிறுக இழந்துவிட்ட மதிப்பை மீண்டும் பெறுவதும் தலையாய பிரச்சினைகளாக விளங்கின. இவற்றைச் செய்து முடிக்கும் ஆற்றல் ஃபிரோஸிற்கில்லை. தலைவனுக்குரிய குணாதிசயங்கள் எதையும் பெறாத அவர் வலிமையற்றவராகவும், முயற்சிகளில் ஊக்கமற்றவராகவும் விளங்கி வந்தார். பேரரசின் இழந்த பகுதிகளைப் பெறுவதற்கு அவர் முயலவில்லை. அவரது இராணுவப் படையெடுப்புகள் யாவும் வீண் முயற்சிகளாயின. போரில் வெற்றி காணும் வாய்ப்புகள் கிட்டும்போதும் இனத்தாரைக் கொன்று குவிப்பதில் விருப்பமில்லாது, முயற்சியைக் கைவிடும் பழக்கம் அவரிடமுண்டு. தாமஸ் என்பவர் கூறுவது போல, 'வங்காளத்தில் அவர் மேற்கொண்ட இரு முற்றுகைகளிலும், பின் தட்டாவை வெற்றி கண்டதிலும், சுல்தானின் திறமையின்மை வெளிப்பட்டது. கட்ச் பாலைவனத்தில் அவரடைந்த ஏமாற்றமும், ஜாஜ் நகரில் அவருக்குக் கிடைத்த அனுபவமும் சுல்தானின் மடமையை வெளிப்படுத்தும் தக்க சான்றுகளாக விளங்குகின்றன.

வங்காளச் சுதந்திர மன்னன் ஹாஜி இலயஸ், ஷம்ஸ்-உதீன்-இயலஸ் ஷா என்னும் விருது சூடித் தமது பேரரசு எல்லையை விஸ்த

ரித்து, டில்லி சாம்ராச்சியத்தின் பகுதிகளின்மீது படையெடுத்தார். 70,000 குதிரை வீரருடன் கி.பி. 1353 நவம்பர் மாதம் ஃபிரோஸ் டெல்லியிலிருந்து புறப்பட்டார். இதைக் கேள்வியுற்ற இலயஸ், இக்தாலா கோட்டைக்குள் சென்று மறைந்தார். பாண்டுவா [1] என்னுமிடத்திற்கு இக்தாலா பத்து மைல்களுக்கு அருகிலுள்ளது. டில்லிப் படையினர் கோட்டையை முற்றுகையிட்டு ஷம்ஸ்-உதீனை முறியடித்தனர். மிக்க பிரயாசையுடன் கிடைத்த இவ் வெற்றியை ஃபிரோஸ் முழுவதும் பயன்படுத்திக் கொள்ளவில்லை. டார்டார்கான் என்னும் படைத்தலைவர் வங்காளத்தைப் பேரரசுடன் இணைக்குமாறு ஃபிரோஸிற்கு அறிவுரை வழங்கினர். அதை அசட்டை செய்து 1354ஆம் ஆண்டு செப்டம்பர் முதல் தேதியன்று சுல்தான் டெல்லி திரும்பினர். சுல்தானின் வெற்றிகரமான பின்வாங்குதலைக் குறித்த கருத்துகள் இரண்டு உள்ளன. முற்றுகையிடப்பட்ட கோட்டையிலிருந்து பெண்டிர் எழுப்பிய அபயக் குரலைக் கேட்ட சுல்தான் மனமிளகித் திரும்பினர் என ஃபிரோஸின் அரசாங்க வரலாற்று ஆசிரியர் ஷாய்ஸ்-இ- சிராஜ் குறித்துள்ளார். மாரிக்காலத் தொடக்கமாயிருந்ததால் தொடர்ந்து முற்றுகையை நடத்துவதிலுண்டான சிரமங்களைக் கண்டு அஞ்சி முற்றுகையை, ஃபிரோஸ் கைவிட்டார் எனப் பிற்கால வரலாற்று ஆசிரியர்கள் கூறுகின்றனர். பின்வாங்குவதற்குரிய காரணம் யாதாயினும் 'சுல்தானின் திறனின்மையை முற்றுகை வெளிப்படுத்தியது' என்னும் கருத்து தாமஸ் என்னும் வரலாற்றாசிரியரால் வெளியிடப்படுகிறது. இக்கருத்தை அசட்டை செய்வது இயலாத காரியமாக உள்ளது.

சில ஆண்டுகளுக்குப் பின் வங்காளத்தை அடிபணிய வைக்கும் முயற்சியில் ஃபிரோஸ் மீண்டும் ஈடுபட்டார். கிழக்கு வங்காளத்துப் பக்கீர் உதீன்-முபாரக் ஷாவின் மருமகன் சாஃபர்கான் (zafar khan) சொனர்கானிலிருந்து கடல் மார்க்கமாகச் சுல்தானின் அவையை அடைந்து, வங்காள அரசனின் கொடுமையைக் குறித்துக் குற்ற ஏடு ஒன்றைச் சமர்ப்பித்தார். ஷம்ஸ்-உதீன் இலயசும் இடைக் காலத்தில் மரணமடைந்ததால் துணிவு பெற்ற ஃபிரோஸ் வங்காளத்தைப் படையெடுத்தார். ஒப்பந்தங்களையும், சினேகத் தளைகளையும் அறுத்தெறிந்துக் கி.பி. 1359-ல் ஷம்ஸ்-உதீனின் மகனும் வாரிசுமான சிக்கந்தர் ஷாவின்மீது படையெடுத்துச் சென்றார். செல்லும் வழியில் கும்டி ஆற்றின் கரையில் சாஃபர்பாத் (zafarabad) என்னுமிடத்தில் முகாமிட்டுத் தம்

[1] இக் கோட்டை இருக்குமிடம் உறுதியாகத் தெரியவில்லை. இதைப்பற்றிய முழு விவரங்கள் அறிய 1874ஆம் ஆண்டு 'Calcutta Review' (J.A.S.B.) வையும் தபகத்-இ-நசிரி Ibid. Ind. 591ஆம் பக்கத்திலுள்ள குறிப்பையும் காண்க.

ஒன்றுவிட்ட சகோதரன் பக்கீர்-உதீன்-ஜாவ்ஞ (மகமது-பின்-துக்ளக்) வின் நினைவுச் சின்னமாக, ஜான்பூர் என்னும் நகரை நிர்மாணித்தார். மாரிக்காலம் முடிந்ததும் வங்காளத்தை நோக்கிப் புறப்பட்டார். சிக்கந்தர் ஷாவின் சமாதான முயற்சிகள் யாவும் பயனற்றுப் போயின. தகப்பனைப் போலவே, இக்தாலாக் கோட்டையில் சென்று மறைந்துகொண்ட சிக்கந்தரை டில்லிப்படையினர் முற்றுகையிட்டனர். முற்றுகை மிகவும் கடின முயற்சியாகவே தோன்றியது. வங்காளப் படையினர் அச்சமின்றிப் போரிட்டுக் கோட்டையைக் காத்தனர். மாரிக்காலம் தொடங்கிப் பெருவெள்ளமும் அவர்களுக்கு உதவியாகச் சேர்ந்துகொண்டது. சிக்கந்தருக்குச் சாதகமான முறையில் உடன்படிக்கையொன்று கையெழுத்தாயிற்று. டில்லிச் சுல்தானின் இரண்டாவது வங்காள முற்றுகையும் பயனற்று முடிவெய்தியது. சுல்தானின் கோழை மனத்தையும், பலவீனத்தையும் முற்றுகை மீண்டும் விளம்பரப்படுத்தியது.

டில்லிக்குத் திரும்பும் வழியில் ஜான்பூரில் சின்னுள்கள் தங்கியிருந்து பின் ஜாஜ் நகரின்மீது (தற்கால ஒரிஸா) படையெடுத்தார். சுல்தானின் பெரும்படையைக் கண்டு ஜாஜ் நகர் மன்னர் அஞ்சி யோடினுர். தெலிங்கானுவைச் சென்றடைந்த அவர், சுல்தானுக்கு அடிபணிந்து சில போர் யானைகளை அளித்ததோடு ஆண்டுதோறும் சில யானைகளை டில்லி அவைக்கு அனுப்பி வைக்கவும் ஒப்புக்கொண்டார். இரண்டரை யாண்டுகளுக்குப் பின் பல இன்னல்களையும், மனத்தாங்கல்களையும் அனுபவித்து மீண்டும் ஃபிரோஸ் டில்லியை வந்தடைந்தார்.

கி. பி. 1337ஆம் ஆண்டிலேயே நாகர்கோட் என்னும் கோட்டை மகமது பின் துக்ளக்கினுல் முறியடிக்கப் பெற்றதெனினும், அவரது ஆட்சியின் இறுதியில் மீண்டும் வலுப்பெற்று தன்னுரிமை பெற்றது. டில்லியை வந்தடைந்த ஃபிரோஸின் கவனம் நாகர் கோட்டின்மீது திரும்பியது. ஆறு மாத கால முற்றுகைக்குப் பின் நாகர்கோட்டின் தலைவர் அடிபணிந்தார். ஜ்வாலாமுகி என்னும் கோயிலில் கிடைத்த முந்நூறு வடமொழி ஏட்டுத் தொகுதிகளைப் பாரசீக மொழியில் எழுதுமாறு ஃபிரோஸ் உத்தரவிட்ட செய்தி, நாகர்கோட் முற்றுகைக்குச் சிறிது முக்கியத்துவம் அளிப்பதாக உள்ளது. 'தலேல்-இ-ஃபிரோஸ் ஷாஹி (Dala'il-i-Firuz-shahi) என்னும் பெயர் கொண்ட இப் பாரசீக நூலுக்கு அவைப்புலவர் 'ஆசுதீன்-காலித்'கானி' (A'azz-ud-din Khalid Khani) என்பவரே ஆசிரியராக விளங்குகிறுர்.

1361–62 ஆம் ஆண்டில் சிந்துவைக் கைப்பற்றும் முயற்சியை ஃபிரோஸ் மேற்கொண்டார். பதினேராண்டுகளுக்கு முன் மகமது பின்-துக்ளக்கின் மரணத்திற்குப் பின் சிந்துவைப் பற்றிய நினைவெதுவும் டில்லி சுல்தான்களுக்கில்லை. 90,000 காலாள்படையினர் பல குதிரை வீரர், 480 யானைகள், 5,000 படகுகள் ஆகியவை அடங்கிய பெரும் படையுடன் சிந்து நாட்டு ஜாம்சியரின் தலைநகரான தட்டாவை நோக்கி ஃபிரோஸ் புறப்பட்டார். சிந்து மன்னர் ஜாம்பாபேனியன் 20,000 காலாள் படையினருடனும் 400,000 குதிரைப்படையினருடனும் சுல்தானை எதிர்த்துப் போராடுவதற்குச் சித்தமானர். டில்லிப் படையினருக்கு இன்னல்கள் பல விளைந்தன. பஞ்சக் கொடுமையாலும், தொற்று நோயாலும் பீடிக்கப்பட்டு டில்லிப்படையில் நான்கில் மூன்று பகுதி அழிந்தது. மீண்டும் படையை வலுப்படுத்தும் எண்ணங் கொண்ட சுல்தான் குஜராத்தை நோக்கி விரைந்தார். துரோகச் சிந்தனையுள்ள வழிகாட்டிகளின் கைகளில் சிக்குண்டு கட்ஜ் பகுதி எல்லையில் நடத்திச் செல்லப்பட்ட சுல்தானின் படையினர் பல இன்னல்களுக்குள்ளாயினர். எனினும், திறமைமிக்க டில்லி அமைச்சர் கானி-ஜஹான்–மக் புல் தக்க தருணத்தில் பெரும் படையொன்றை அனுப்பி வைத்தார். வலுப்பெற்ற ஃபிரோஸ் 1363-ல் மீண்டும் சிந்துவைத் தாக்கி, அம் மன்னரை அடிபணிய வைத்தார். சுல்தானின் தலைமையை ஏற்றதோடு ஆண்டுதோறும் இலட்சக்கணக்கான தங்க நாணயங்களைத் (Tankas) திறையாகச் செலுத்தவும் ஒப்புக்கொண்டார். சிந்துப் படையெடுப்பும் வங்காளப் படையெடுப்பைப் போலச் சுல்தானின் திறமையின்மையையும் இராணுவ நிருவாகக் குறைவையும் எடுத்துணர்த்துவதாக இருக்கிறது.

ஃபிரோஸின் ஆட்சியில் மங்கோலியரின், படையெடுப்புகள் எதுவுமில்லை. ‘எல்லைப் பகுதிகள் யாவும் படையினரால் நன்கு பாதுகாக்கப்பட்டும், பேரரசர்களின் நண்பர்களால் கண்காணிக்கப்பட்டும் வந்தன.’ என யாகியா (Yahiya) என்னும் நூலாசிரியர் குறிப்பிடுவர்.

தக்காணத்தை டில்லி சாம்ராஜ்யத்தின் ஆதிக்கத்திற்குக் கொண்டுவருவதற்கு ஃபிரோஸ் எவ்வித முயற்சியையும் மேற்கொள்ளவில்லை. சுல்தானின் அலுவலர் சிலர் தக்காணத்தின்மீது படையெடுக்குமாறு சுல்தானை வேண்டினர். அவ் வேண்டுகோள் சுல்தானை வேதனைக்குள்ளாக்கியது; வேண்டுகோளைச் செவிமடுத்துக் கண்களில் நீர்மல்க, தம் சோதரரின்மீது படையெடுத்துச் செல்வதற்குத் தாம் விரும்பவில்லை’ என்று சுல்தான் விடையளித்ததாக ஷாம்சி–சிராஜ்-அஃபீஃப் குறிப்பிடுகிருர்.

தீவிர சமயவாதியான ஃபிரோஸ் இந்துக்களைக் கொடுமைப் படுத்தினார். எகிப்து காலிஃபைத் தம் தலைவராக ஏற்று வணங்கினார், இந்திய இஸ்லாமியரின் வரலாற்றில் 'முதன்முறையாகத் தன்னைக் காலிபின் கையாள் எனப் பிரகடனப்படுத்திக் கொண்டார். ஃபிரோஸ் ஆட்சி தொடங்கிய ஆறு ஆண்டுகளில், தமது ஆசியோடு ஆடை அணிகளையும் இரு முறைகள் அனுப்பி வைத்து, எகிப்து காலிஃ, ஃபிரோஸைக் கௌரவித்தார். ஃபிரோஸ் வெளியிட்ட நாணயங்களில் எகிப்து காலிஃபின் உருவமும் பொறிக்கப்பெற்றது. ஃபிரோஸ் இஸ்லாமியச் சமயக் கொள்கைகளின் அடிப்படையில் தம் ஆட்சியை அமைத்தார். தம் குடிமக்களை இஸ்லாமியச் சமயத்தைத் தழுவுமாறு தூண்டுவதில் அவருக்கு மிகுந்த ஆத்ம திருப்தி ஏற்பட்டது. முன்னோர்கள் கடைபிடித்து வந்த சமயக் கொள்கைகளினின்றும் மாறுபட்ட பல விதிகளையும் அவர் அமைத்தார்.

பிரபுக்களையும், அரசாங்க அலுவலர்களையும் திருப்தி படுத்துவதின் பொருட்டு ஜாகீர் முறையை மீண்டும் கடைப்பிடிக்கத் தொடங்கினார். இம் முறை அலாவுதீன் கில்ஜியினால் நீக்கப்பட்டிருந்தது. நிலங்களைப் பகிர்ந்தளித்ததோடு, அலுவலருக்கு அதிக ஊதியமும், பிரபுக்களுக்கு அதிக மானியமும் வழங்குவதற்கு ஏற்பாடு செய்தார். இத்தகைய முறைகளால் தமது நிலையை மன்னர் தாற்காலிகமாக வலுப்படுத்திக் கொண்டார். எனினும் நாளடைவில் மிக்க வலுப்பெற்ற பிரபுக்களால் இறுதியில் மத்திய அரசின் செல்வாக்குச் சீர் குலைக்கப் பெற்றது.

மேலே நாம் குறித்த குறைகள் பலவற்றை யுடையவராயினும், அவருடைய ஆட்சியில் பல சிறந்த சீர்த்திருத்தங்களும் உண்டு. முப்பத்தேழு ஆண்டுகள் நீடித்த அவரது ஆட்சியில் மக்கள் களிப்புடனும், மன நிம்மதியுடனும் வாழ்ந்துவந்தனர். அநீதியான பல வரிகளை அவர் நீக்கினார். குரானின் கொள்கைகளுக்கிணங்க வரித்திட்டம் ஒன்றை வகுத்துக் கடைபிடித்தார். குரானின் விதிகளை அடிப்படையாகக்கொண்டு அவர் அனுமதித்த வரிகள் பின்வருமாறு: (1) காராஜ் (Kharaj) அல்லது விளைபொருளில் பத்தில் ஒரு பங்கு (2) 'சாகாட்' (Zakat) அல்லது மானியம் (3) ஜிசியா (Jizya) அல்லது இஸ்லாமியரல்லாதவர் செலுத்தும் வரி (4) 'காம்சு' (Khams) அல்லது சூறையாடுவதில் ஐந்தில் ஒரு பங்கும், சுரங்கங்களிலிருந்து கிடைக்கும் பொருள்களில் ஐந்தில் ஒரு பங்கும், நீதி சாத்திர வல்லுநரைக் கலந்தாலோசித்து ,ஷார்ப்' (Sharb) என்னும் நீர்ப்பாசன வரியையும் அவர் வசூலித்தார். நிலங்களிலிருந்து கிடைத்த விளைபொருள்

களில் பத்திலொரு சதவீதம் பாசன வரியாக வசூலிக்கப்பட்டது. குரானில் கண்டுள்ளபடி போரில் கிடைக்கும் பொருள்களைப் படையினரும் அரசினரும் பங்கிட்டுக் கொண்டனர். அரசினருக்கு ஐந்தில் ஒரு பங்கும், படையினருக்கு ஐந்தில் நான்கு பங்குகளும் வழங்கப்பட்டன. கொடுமையானவையும், நியாயமற்றவையு மான பல சுங்க வரிகளிலிருந்து வணிகர்களுக்கு விதி விலக்கு அளிக்கப்பட்டது. இவ் வரிகள் பண்டங்களின் தாராளப் பரிவர்த் தனைக்கு இடையூறாக இருந்தன. அரசாங்கத்தால் ஏற்படுத்தப் பட்ட வரிகளுக்குமேல் வசூலிக்கக் கூடாதென அலுவலர் களுக்குக் கண்டிப்பான உத்தரவிடப்பட்டது. இச் சீர்த்திருத்தங் களால் விவசாயம், தொழில் ஆகியவை விருத்தியடைந்தன. மன்னரின் அவைக் கவியான ஷம்ஸ்-இ- சிராஜ் அபீப், சுல்தானைக் குறித்த ஹாஸ்யக் கட்டுரைகள் எழுதுவதையே பழக்கமாகக் கொண்டிருந்தபோதும், சுல்தானின் புதிய முறைகளால் குடி யானவர் நிலை உயர்ந்தது என்று குறிப்பிடுவது முற்றிலும் உண்மை. 'அவர்களுடைய இல்லங்களில் பொன்னும், மணியும், குதிரைகளும், பிற உடைமைகளும் குவிந்தன. ஒவ்வொருவரிட மும் தங்கம் வெள்ளி மிகுந்திருந்தது. மாதர் விலையுயர்ந்த அணிகளை அணிந்திருந்தனர். பட்டுப் பஞ்சணையும், கட்டிலும் ஒவ் வொரு வீட்டிலும் இருந்தன. செல்வச் செழிப்பும், போக வாழ்வும் எங்கும் நிறைந்திருந்தன. அரசினருக்குத் தேவையான நிதி இருந்தது. பொருளாதாரச் சீர்குலைவு மருந்திற்கும் இல்லை; தங்கைச் சமவெளியிலிருந்து மட்டிலும் எட்டு லட்சம் தங்க நாணயங்கள் (தங்காஸ்-Tankas) கிடைத்துவந்தன. டில்லி மாவட்டங்களிலிருந்து ஆறு கோடியே எண்பத்தைந்து லட்சம் தங்க நாணயங்கள் கிடைத்தன. அன்றாடத் தேவைக்குரிய பொருள்களும் மக்களுக்கு எளிதில் கிடைத்து வந்தன.[1]

திட்டமிட்டுக் கட்டப்பெற்ற பல நீர்ப்பாசனக் கால்வாய் களின் உதவியால் விவசாயம் அபிவிருத்தியடைந்தது. ஃபிரோ ஸின் கட்டளையால் இரு கால்வாய்கள் வெட்டப்பெற்றதாக ஷம்ஸ்-சிராஜ் அபீப் குறிப்பிடுவர். இவற்றில் ஒன்று சட்லஜி லிருந்தும், மற்றொன்று யமுனையிலிருந்தும் தொடங்கின. சர்கிந்து வாசியான யாகியாவிற்குக் கால்வாய்களைப் பற்றிய விவரங்கள் நன்கு தெரிந்திருக்க வேண்டும். ஃபிரோஸின் ஆட்சியில் நான்கு கால்வாய்கள் வெட்டப்பெற்றதாக அவர் கூறுவர். அவை

[1] ஷம்ஸ்-இ-சிராஜ் அபீப் தரும் பட்டியல் வருமாறு :

| | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|
| கோதுமை......1 | மண......8 | ஜிட்டல்கள் | பருப்பு...... | 10 சேர்கள் | 1 | ஜிட்டல் |
| பார்லி...... | 1 ,, | 4 | ,, | நெய்...... | 1 சேர் | 2½ | ,, |
| தானியம்...... | 1 ,, | 4 | ,, | சர்க்கரை...... | ,, | 3½ | ,, |

6

முறையே (அ) சட்லஜிலிருந்து, காசஹாருக்கும் (ஆ) மண்டவி, சிர்முர் குன்றுகளுக்கருகில் வெட்டப்பட்ட ஏழு கிளைகளுடன் கூடி 'ஹன்சி, அரசனி' வரையிலும் சென்றன. அங்கு ஹிஸார்-ஃபிரோஸா என்னும் நகருக்கு அடிக்கல் நாட்டப்பட்டது. (இ) மற்றொன்று காக்ஹாரிலிருந்து 'சிர்சுதி' கோட்டை வழியாகப் பாய்ந்தோடி ஹிர்நாய்-கேரா என்னும் கிராமத்தை அடைந்தது. (ஈ) நான்காவது, யமுனையிலிருந்து வெட்டப்பெற்றுப் 'பிரோஸா-பாதை' அடைந்து, அதற்கப்பாலும் பாய்ந்தோடியது, கால்வாய்களை அமைப்பதற்கெனத் தேர்ந்த எஞ்சினியர்களை ஃபிரோஸ் அமர்த்தினார். குறிப்பாக மாரிக் காலங்களில் கால்வாய்களின் நிலைமைகளைக் கண்காணிப்பதற்குத் தேவையான அலுவலர்கள் அமர்த்தப்பெற்றனர். தரிசு நிலங்களை மீட்டுச் சாகுபடி செய்தது ஃபிரோஸின் மற்றுமொரு சிறந்த சாதனையாகும். இந் நிலங்களிலிருந்து கிடைத்த வருமானம் சமயத்தின் நலன் பெருக்குவதற்கும், கல்வி நிலையங்களை ஏற்படுத்துவதற்கும் பயன்பட்டது.

ஃபிரோஸின் கட்டடங்களும் தோட்டங்களும், மக்களுக்கு மறைமுகமாகப் பயன் அளித்தன. புதிய நகரங்களைக் கட்டுவதிலும், பழையவற்றிற்குப் புதிய பெயர்கள் சூட்டுவதிலும் அவருக்கு ஆசை அதிகமிருந்தது. ஃபிரோஸ் கூறியதாவது : 'ஆண்டவனின் மிகச் சிறு அடிமையான எனக்கு அவனருளிய கட்டடப்பித்து பிற வரங்கள் யாவற்றிலும் சிறந்தது. ஆகவே, மசூதிகளையும் கல்லூரிகளையும், மடாலயங்களையும் நான் கட்டியிருக்கிறேன். அறிஞரும், முதியோரும், பக்திமான்களும் பெரியோரும் இவற்றைப் பயன்படுத்தி, வழிபாடுகள் நடத்தித் தங்களுடைய பிரார்த்தனைகளால் ஆக்கியோனை ஊக்குவிக்க வேண்டுகிறேன்'. ஜான்பூர், வேதாபாத், ஹிஸார், பதௌனுக்கருகில் பிர்ஸ்போர், மற்றும் தலைநகருக்குப் பத்து மைல் தொலைவிலுள்ள ஃபிரோஸாபாத் ஆகிய நகரங்களை ஃபிரோஸ் கட்டி முடித்தார். வங்காளப் படையெடுப்பின்போது இக்தாலாவை 'ஆசாத்பூர்' என்றும், பாண்டுவாவை 'ஃபிரோஸாபாத்' என்றும் பெயரிட்டு அழைத்தார். மசூதிகள் பலவற்றைப் புதுப்பித்தும், மற்றும் சிலவற்றைப் புதிதாகவும் கட்டிமுடித்தார். அரண்மனைகள், பள்ளி வாயில்கள், நீர்த் தேக்கங்கள், மருத்துவ நிலையங்கள், கல்லறைகள், குளிப்பதற்கான துறைகள், கல்தூண்கள், பாலங்கள் ஆகியவற்றை ஃபிரோஸ் கட்டி முடித்தார். மாலிக்-காசி சகானு என்பவர் அரசாங்க எஞ்சினியர்களுள் முதல்வர். அப்துல் ஹக் என்பவர் அவருக்குத் துணைவராக இருந்தார். தோட்ட நிர்மாண வேலையில் மிக்க ஆர்வம் கொண்ட சுல்தான் டில்லியைச் சுற்றிலும் ஆயிரத்து இருநூறு தோட்டங்களை அமைத்தார். அத்துடன்

அலாவுதீனுல் அமைக்கப்பெற்ற முப்பது தோட்டங்களைப் புதுப் பித்தார். அசோகருடைய கல்வெட்டுத் தூண்களுள் இரண்டை டில்லிக்கு எடுத்துச் சென்ருர். இவற்றுளொன்று கிச்ராபாதிற்கு அருகில் உள்ள கிராமத்திலிருந்தும் மற்ருென்று மீரட்டிலிருந்தும் எடுத்துச் செல்லப்பட்டன.

நீதி வழங்குவதிலும் சுல்தானுக்குக் குரான் வழிகாட்டியாக இருந்தது. தண்டனைகளின் கடுமையை ஃபிரோஸ் குறைத்து, நீதி நிருவாகத்தைச் சீர் செய்தார். ஃபிரோஸின் கருத்துகள் வருமாறு : 'முன்னேரது ஆட்சியில் பலவகையான கொடுமைகள் நிறைந்திருந்தன. கை கால்கள், மூக்கு, செவி ஆகியவற்றைத் துண்டிப்பது, கண்களைப் பிடுங்குவது, உருக்கிய ஈயத்தைத் தொண்டைக் குழியில் ஊற்றுவது, சகடைகளால் கை கால் எலும்புகளை நொறுக்குவது, உடலைத் தீயில் பொசுக்குவது, கை, கால், வயிறு, கண்களில் ஊசி இறக்குவது, தசைகளை அறுத் தெடுப்பது, ரம்பத்தினுல் உடலை மெதுவாக அறுக்கச் செய்வது, இன்னும் இவைபோன்ற பல இரக்கமற்ற முறைகள் கையாளப் பட்டுவந்தன'. 'கருணை நிறைந்த ஆண்டவன் கடை ஊழியனுக என்னைப் படைத்துள்ளான். அவனது அருளை அல்லும் பகலும் முயன்று பெறுவதே என் இலட்சியம். இஸ்லாமியரைக் கொல்வ தையும், பிறரால் அவர்கள் துன்புறுத்தப்படுவதையும் தடுப்பது என் குறிக்கோள்களாகும்.' மக்களின் பொது நலத்திற்கான பல முயற்சிகளை ஃபிரோஸ் மேற்கொண்டார். மக்கள் அவரை நேசித்து வந்தமைக்கு அக் கால ஆசிரியர்கள் நற்சான்று பகரு கின்றனர். வேலை தேடித்தரும் ஸ்தாபனமொன்றைத் தொடங்கி வைத்தார். ஒவ்வொருவரின் திறமையையும், தேவையையும் கண்டறிந்து, உரிய வேலைகளை அவர்களுக்கு வழங்கி, வேலை யில்லாத் திண்டாட்டத்தை ஒழிக்க முற்பட்டார். நன்கொடை வழங்குவதற்கெனத் திவான்-இ-கைரத் என்னுமொரு நிறுவனத் தையும் ஏற்படுத்திஞர். ஏழை இஸ்லாமியப் பெண்களுக்கு மண முடிக்கவும், கைம்பெண்களுக்கும், அனுதைகளுக்கும் உதவியளிக்க வும், இந் நிறுவனம் மிகவும் உதவியாக இருந்தது. மருத்துவ நிலையம் (தார்-உல்-ஷவா) ஒன்றை ஏற்படுத்தி மக்களுக்கு உணவும், மருந்துகளும், தலைசிறந்த வைத்தியர்களின் உதவியும் அரசாங்கச் செலவில் கிடைப்பதற்கு ஏற்பாடு செய்தார்.

புதிய வகை நாணயங்களை ஃபிரோஸ் வெளியிடவில்லை. யகமது-பின்-துக்ளக் காலத்தில் வெளியிடப்பட்ட நாணயங்கள் இவரது ஆட்சியிலும் நிலவின. வெள்ளியும் தாமிரமும் கலந்த 'ஆதா', 'பிக்' என்னும் அரை, கால் ஜிட்டல் நாணயங்களை

வெளியிட்ட பெருமை இவரைச் சாரும். அபிப் குறிப்பிடும் 'ஷாஸ்கனி' துக்ளக்கின் 'காலத்திலேயே வழக்கிலிருந்ததென இபின் பதூதா கூறியுள்ளார். ஃபிரோஸ் வெளியிட்ட சிறு மதிப்புள்ள நாணயங்கள் சாதாரண மக்களுக்கு மிகவும் உதவியாக இருந்தன. நாணயப் பரிவர்த்தனையில், மக்களுக்கு நம்பிக்கை பிறந்தது. நாணயச் சாலையில் காணப்பட்ட சிறு குறைபாடுகளால் நாணய முறை சிறப்படைய வகையில்லாது போயிற்று.

நாட்டின் படைபலம் நிலமானிய முறையில் அமைக்கப் பெற்றிருந்தது. நிரந்தரப் படைவீரர் தேவையான ஊதியம் பெற்று வந்தனர். அவ்வப்போது சேர்த்துக் கொள்ளப்பட்ட படையினருக்கு (Ghairwagh), மாவட்ட, மத்தியக் கருவூலங்களின் மூலம் ஊதியம் அளிக்கப்பட்டுவந்தது. இவ்வாறு ஊதியம் பெறுதவர்களுக்கு அவர்கள் தேவை ஏற்படும்போது பெறுகின்ற வகையில் அனுமதிச் சீட்டுகள் வழங்கப்பெற்றன. இவற்றைப் பணமாக மாற்றுவது மிக எளிதாக இருந்தது. இம் முறையைப் பலர் துர்விநியோகப்படுத்தியதால் ஊழல்கள் நிறைந்தன. அனுமதிச் சீட்டுகளை அதன் மதிப்பில் அரைப்பங்கிற்கும் மூன்றில் ஒரு பகுதிக்கும் பலர் வாங்கினர். போர் வீரரின் உழைப்பில் தங்கள் நலனைப் பெருக்கிய, பல ஒட்டுண்ணிகள் முளைத்தனர். எண்ணுயிரம் அல்லது ஒன்பதாயிரம் காலாள் படையினரைக் கொண்ட சேனை அவ்வப்போது பிரபுக்களின் தனிப்படையினரையும் தன்னுடன் சேர்த்துக்கொண்டிருந்தது. ஆள் எண்ணிக்கை அதிகமிருப்பினும், ஆற்றல் மிகுந்திருந்ததெனக் கூற இயலாது. படைவீரரிடம் தேவைக்கு அதிகமான கருணை சுல்தானல் காட்டப் பெற்றதால், படையினரின் திறமை குறைந்து காணப்பட்டது. உதாரணமாகப் படைவீரர் முதுமைப் பருவமடைந்து போரிடச் சக்தியற்றவராகும்போது அவருடைய மகன், மருமகன், அல்லது அடிமைக்கு, அப் பதவி வழங்கப்பட வேண்டுமென்ற ஃபிரோஸின் சட்டம் படையின் ஆற்றலைச் சீர்குலைத்தது. வாரிசுரிமையை மட்டிலும் கொண்டு, படையினரைச் சேர்ப்பது பயனற்றதொரு முறை என்பது வெளியாயிற்று.

ஃபிரோஸின் ஆட்சியில், அடிமைகளின் எண்ணிக்கை மிக அதிகமாயிற்று. இவர்களுக்கெனத் தனித்துறை ஒன்றும் அரசினரால் ஏற்படுத்தப்பட்டது. நிலமானியப் பிரபுக்கள் பலர், அரசருக்கு அடிமைகளைப் பரிசாக வழங்கினர். இப் பரிசுகளை ஏற்ற சுல்தான் அவற்றிற்குப் பதிலாகப் பிரபுக்களுக்கு வரி செலுத்து

வதினின்றும் விதி விலக்களித்தார். அடிமைகளைப் பெருக்கியதால் அரசாங்கத்திற்கு மிகுந்த நஷ்டம் ஏற்பட்டது.[1]

பகட்டிலும், படாடோபத்திலும் விருப்பமற்றவராக இருந்த போதிலும், முன்னோர்களைப் போலவே அலங்காரமான அவை கூட்டினார். ஷம்ஸ்-இ-சிராஜின் குறிப்பிற்கிணங்க, 'இத், சபராத்' பண்டிகைகளின்போது மிக விமரிசையாக அவையை அலங்கரிக்கும் வழக்கமிருந்ததெனத் தெரியவரும். அரண்மனைத் தேவைகளைக் கவனிப்பதற்கென முப்பத்தாறு தனித் துறைகள் இருந்தன, துறை ஒவ்வொன்றிற்கும் தனி அலுவலர்கள் பலர் இருந்தனர். பகட்டான அவை நடத்துவதற்கும், அலுவலர் பலரைப் பராமரிப்பதற்கும் ஏராளமான பொருள் செலவிடப்பட்டிருக்கவேண்டும்.

ஃபிரோஸின் அமைச்சர் கானி-ஜஹான் மக்பல் என்பவருக்கு நிருவாகத்தில் நல்ல மதிப்பிருந்தது. இவர் தெலிங்கானாவைச் சேர்ந்த ஓர் இந்து. பிற்காலத்தில் இஸ்லாமிய சமயத்தைத் தழுவினார். ஃபிரோஸின் ஆட்சியில் பதவியொன்றைப் பெற்றுச் சின்னாள்களில் உயர்வுபெற்றுச் சிறந்து விளங்கினார். கி.பி. 1370-ல் இவர் மரணமடைந்ததும் இவர் மகன் ஜூனாஷா தந்தையின் பதவிக்கு அமர்த்தப்பட்டார். குஜராத்தின் கவர்னர் சாஃபர் கான் (Zafer Khan) இறந்ததும் அடுத்து அவருடைய மகன் தார்யாகான் பட்டமெய்தினார். 1374ஆம் ஆண்டு ஜூலை 23ஆம் தேதி ஃபிரோஸின் மூத்த மகன் ஃபாத்கான் (Fath Khan) மரணமடைந்தார். இதனால் சுல்தானுக்கு மிக்க அதிர்ச்சி ஏற்பட்டது. சுல்தானின் உடலும் உள்ளமும் பாதிக்கப்பட்டன.

டில்லி சுல்தான்கள் யாவரும் மன அமைதியின்றியே இறுதிக் காலத்தில் வாழ்ந்தனர். ஃபிரோஸ் இதற்கு விலக்கல்லர். முதுமைப் பருவத்தில் உள்ளம் தளர்ந்ததால் சுல்தானின் நிருவாகம் பலவீனமாயிற்று. உயிரோடிருந்தவர்களுள் மூத்த மகனான முகமதுகானுடன் சுல்தான் தமது அதிகாரத்தைப் பங்கிட்டுக்கொள்ள முயன்றார். முகமதுகான் தகுதியும் திறமையுமின்றிப் பொறுப்பற்றவராகவும் இருந்ததால், சுல்தானுக்குப் பல இன்னல்கள் தோன்றின. முகமதுகான் சிற்றின்பங்களில் நேரத்தைச் செலவிட்டு அரசியலைக் கைவிட்டார். உள்நாட்டுக் கலகமொன்று தொடங்கியது. முகமதுகான் நாட்டை விட்டு சிர்மூர் குன்றுகளுக்கு ஓடிச்சென்று ஒளிந்துகொண்டார். இவ்

1 ஷம்ஸ்-இ-சிராஜின் குறிப்புகளுக்கிணங்க, தலைநகரிலும், மாகாணங்களிலுமுள்ள அடிமைகளின் மொத்த எண்ணிக்கை 180,000 ஆக உயர்ந்தது. எலியட் வால்யூம் III, பக்கம்-341.

விடையூறுகள் யாவையும் ஃபிரோஸ் பொறுத்துக்கொள்ள வேண்டியதாயிற்று. வேறு வகையின்றிக் காலஞ்சென்ற ஃபாத்கானின் மகனும், தம் பெயரனுமான துக்ளக்கானுக்கு அரச பதவியளித்து, 1388ஆம் ஆண்டு செப்டம்பர் மாதம் 20ஆம் தேதி ஃபிரோஸ் மரணமடைந்தார்.

சமகால வரலாற்றாசிரியர்கள் ஃபிரோஸ்ஷாவின் குணாதிசயங்களை ஒரு மனதாகப் புகழ்ந்து பேசுகின்றனர். நாசர்-உதீன்-மகமது காலந்தொட்டு நேர்மையும், அன்பும், பண்பும், தெய்வ-நம்பிக்கையும், கட்டடக்கலையில் ஆர்வமும் உள்ள மற்றுமொரு மன்னரைக் காண்பதரிது என வரலாற்றாசிரியர்கள் வருணிக்கின்றனர். மற்றும் வள்ளண்மையும் அவரிடம் நிறைந்திருந்தது. அவரது ஆட்சியில் அமைதியும் செல்வச் செழிப்பும் மிகுந்திருந்தன. என்றாலும், ஃபிரோஸின் எல்லையற்ற கருணையும், அவரளித்த கணக்கற்ற சலுகைகளும் டில்லி சாம்ராச்சியத்தின் சீர்குலைவுக்குக் காரணங்களாயிருந்தன. ஜாகீர் முறையை மீண்டும் அவர் ஏற்படுத்தியதால் ஜாகீர்தாரர்கள் வலுப்பெற்றுப் பேரரசின் வீழ்ச்சிக்குக் காரணமாயினர்.

## 4. ரஜாபின் மகன், ஃபிரோஸின் சந்ததியார்கள்

ஃபிரோஸைத் தொடர்ந்து அவர் பேரன் துக்ளக்ஷா பட்டமெய்தினார். கியாஸ்-உதீன்-துக்ளக் ஷா II என்னும் விருதைச் சூடி அவர் ஆட்சி தொடங்கினார். சில அலுவலர்களும், பிரபுக்களும் கூடிச் சதிசெய்து கி.பி. 1389ஆம் ஆண்டு பிப்ரவரி மாதம் 19ஆம் தேதி அவரைக் கொன்றனர். அவரது ஒன்று விட்ட சகோதரன் அபுபெக்கர் என்பவரைச் சதிகாரர் யாவரும் கூடி அரச பதவியில் அமர்த்தினர். ஃபிரோஸின் மகன் நாசர்-உதீன்-மகமதைச் சார்ந்தவர்கள் அவரை அரசராகப் பிரகடனப்படுத்தி 1389ஆம் ஆண்டு ஏப்ரல் 24ஆம் தேதியன்று அரியாசனத்தில் அமர்த்தினர். அபுபெக்கர் தமது உரிமையைக் கைவிட்டுக் கி.பி. 1390 டிசம்பர் மாதத்தில் பதவியிழக்கவேண்டியதாயிற்று. பல சண்டைகளிலும், அரசியல் சிக்கல்களிலும் உழன்றதால் நாசர்-உதீன் கி. பி. 1394ஆம் ஆண்டு ஜனவரி மாதத்தில் உயிரிழக்க வேண்டியதாயிற்று. அவரையடுத்து அரசெய்திய அவருடைய மகன் ஹுமாயூன் மார்ச்சு மாதம் 8ஆம் தேதியன்று உயிரிழந்தார். முகமதின் இளைய மகன் நாசர்-உதீன்-மகமது துக்ளக் குலத்தின் இறுதி மன்னராக ஆட்சி செலுத்தினார். ஃபிரோஸின் மூத்த மகன் ஃபாத்கானின் (Fath-Khan) மகன் நச்ரத் ஷா முகமதிற்குப் போட்டியாக இருந்தார். பிரபுக்கள் சிலரின் துணை

கொண்டு அரசைக் கைப்பற்ற எண்ணிய இவரது முயற்சி பலன் அளிக்கவில்லை. நச்ரத் ஷா சிறைப்பிடிக்கப்பட்டு வஞ்சகமாகக் கொல்லப்பட்டார்.

ஃபிரோஸின் வழித்தோன்றல்கள் யாவரும் திறமையற்றிருந்ததால், டில்லி பேரரசைக் காப்பாற்றும் வல்லமை அவர்களுக்கில்லை. பேரரசின் வீழ்ச்சிக்கான அறிகுறிகள் தோன்றலாயின. நெறியற்ற பல பிரபுக்களின் கைப்பாவைகளாக இம் மன்னர்கள் விளங்கிவந்தனர். இப் பிரபுக்களின் சுயநலமிக்க நடவடிக்கைகளால் உள்நாட்டுப்போர் தொடங்கிற்று. நாட்டின் கௌரவத்தையும், பொருளாதாரத்தையும் இப் போர்கள் சீர்குலைத்தன. மாகாணக் கவர்னர்களும், இந்துத் தலைவர்களும் அரசரை அசட்டை செய்தனர். திறமையற்ற அலிபுருடன் 'மாலிக் சார்வார்' என்பவர் நாசர் உதீன் முகமதைத் தூண்டி, 'மாலிக்-உஷ்-ஷார்க்' அல்லது கீழைப் பகுதிகளின் தலைவன் என்னும் விருதைப் பெற்றார். அத்துடன் ஜான்பூர் அரசைத் துவக்கித் தம்மிச்சைப்படி ஆண்டுவரத் தொடங்கினார். வட திக்கிலுள்ள 'சோக்கர்கள்' புரட்சி செய்யத் தொடங்கினர். குஜராத், மாளவம், காந்தேஷ் ஆகிய பகுதிகள் சுயேச்சை பெற்றன. 'பியானு' 'கல்பி' ஆகிய இடங்களில் இஸ்லாமிய அரசுகளும், குவாலியரில் இந்து ஆட்சியும் தோன்றின. மேவாட்டின் அரசர் தம் இச்சைக்கேற்ற தலைவனைத் தேர்ந்தெடுத்துக்கொண்டார். கங்கை வெளியிலுள்ள மக்கள் கலகம் செய்வதையே தொழிலாகக் கொண்டிருந்தனர்.

## 5. தைமூரின் படையெடுப்பு

குழப்ப மிக்க இச் சூழ்நிலையில், 'அமீர் தைமூர்' என்பவர் இந்திய நாட்டின்மீது படையெடுத்தார். வரலாறு குறிக்கும் மாபெரும் இராணுவத் தலைவர்களுள் தைமூர் ஒருவர். துருக்கியருள் சூர்க்கப் பகுதியுள் பார்லஸ் இனத்தைச் சார்ந்த 'அமீர் தர்கே' (Amir Turghay) என்பவரின் மகனாக இவர் பிறந்தார். கி.பி. 1336-ல் 'டிரான்-சாக்ஸியானுவிலுள்ள' கேஷ் என்னுமிடத்தில் இவர் பிறந்தார். பாரசீகம், ஆப்கானிஸ்தானம், மெசபடோமியா ஆகிய பகுதிகளை உள்ளடக்கிய பேரரசிற்குத் தலைவராகச் சமார்கண்ட் அரியணையில் இவர் அமர்ந்தார். இந்திய நாட்டு வளம் இவரை மிகவும் தூண்டிற்று. தருணத்தை எதிர்நோக்கியிருந்த தைமூருக்கு டெல்லிப் பேரரசின் குழப்பநிலை நல்ல வாய்ப்பளித்தது. இஸ்லாமிய சமயத் தொண்டைப் பெயரளவில் குறிக்கோளாகக் கொண்டு தம் பிரபுக்கள், மற்றும் தம் படை

யினரின் பேராதரவைப் பெற்றுக்கொண்டார். தொலைதூரத் திலுள்ள நாட்டின்மீது படையெடுப்பதில் அவர்களுக்கு விருப்ப மில்லாதிருந்தது.

கி.பி. 1398ஆம் ஆண்டின் முற்பகுதியில், தைமூரின் பெயரன் பீர் மகமது என்பவர் மூல்தானை முற்றுகையிட்டு ஆறுமாத காலத் திற்குப் பின் கைப்பற்றினார். 1398ஆம் ஆண்டு ஏப்ரல் மாதத்தில் பெரும் படையுடன் சாமர்கண்டை விட்டுப் புறப்பட்டுச் செப்டம் பர் மாதத்தில் சிந்து, ஜீலம், ரவி ஆகிய ஆறுகளைக் கடந்து, மூல்தானுக்கு வடகிழக்கில் எழுபது மைல்களிலுள்ள 'தலம்பா' என்னுமிடத்தை அக்டோபர் 13ஆம் தேதியன்று தைமூர் அடைந் தார். தலம்பாவை வெற்றிகண்டும், குடிகளைக் கொன்று குவித்தும், மற்றும் சிலரை அடிமைகளாக்கியும் சிறைப்பிடித்தார். பல நகரங் களை வென்று, மக்களைக் கொன்று குவித்து, இறுதியில் டில்லியின் சுற்றுப்புறங்களை அடைந்தார். டிசம்பர் மாத இறுதியில் டில்லி யின் சுற்றுப்புறங்களை அடைந்தார். டிசம்பர் மாத இறுதியில் அங்குப் பொருது, சுமார் 100,000 ஆண் கைதிகளை ஈவிரக்க மின்றிக் கொலை செய்தார். 10,000 குதிரைப் படையினரையும், 40,000 காலாள் படையினரையும், 120 யானைகளையும், கவச மணிந்த போர் வீரரையும் கொண்ட படையுடன், டிசம்பர் 17ஆம் தேதியன்று சுல்தான் மகமதும், மல்லு இக்பாலும் தைமூரை எதிர்க்கத் துணிந்தனர். சின்னாபின்னம் அடைந்த இவர்கள் போர்க் களத்தை விட்டோட வேண்டியதாயிற்று. மல்லு பரானை நோக்கியும், மகமது குஜராத்தை நோக்கியும் ஓட்டமெடுத்தனர்.

மறுநாள் தைமூர் டில்லி நகருள் புகுந்தார். பல நாள் களாக டில்லி சூறையாடப்பெற்றது. துரதிர்ஷ்ட மிக்க இந் நகர மாந்தர் பலர் துருக்கியரால் இரக்கமின்றிக் கொல்லப்பட்டனர். சிலர் கைதிகளாகச் சிறைப்பிடிக்கப்பட்டனர். தேர்ச்சியும், அனுபவமும் மிக்க கலைஞர் சிலர் சாமர்கண்டுக்கு எடுத்துச் செல்லப்பட்டு அங்குத் தைமூரின் திட்டப்படி அழகிய மசூதி யொன்றை எழுப்பும் வேலையில் அமர்த்தப் பெற்றனர். இவ்வாறு டில்லி சுல்தானியரின் தலைநகருக்குத் துக்ககரமான முடிவு ஏற்பட்டது.

இந்திய நாட்டில் நிரந்தரமாகத் தங்கும் எண்ணம் தைமூருக்கு இல்லை. பதினைந்து நாள்கள் டில்லியில் தங்கிப் பிரோஸா பாத் வழியாக (ஜனவரி, 1399) ஊர் திரும்பினார். திரும்பும் வழியில் மீரட்டையும் (ஜனவரி 9) அதற்குச் சற்று வட திக்கி லுள்ள இரு இந்துப் படைகளையும் ஹரித்துவாருக்கு (Hardwar)

அருகிலும் வெற்றி கண்டார். சிவாலிக் குன்றுகள் வழியாகச் சென்று காங்ராவை வென்று (ஜனவரி 16) ஜம்முவைக் கைப் பற்றி அங்குள்ள மாந்தரை இரக்கமின்றிக் கொன்று குவித்தார். 'கிசர்கான் சையது' என்பவரை மூல்தான் லாகூர், திபால்பூர் ஆகிய பகுதிகளுக்கு கவர்னராக நியமித்து 'ஒரே படையெடுப் பில் இதற்குமுன் இந் நாட்டின்மீது படையெடுத்து வந்த தனிப் படைத் தலைவர் எவரும் இழைத்திராத கொடுமைகள் யாவையும் இழைத்து மக்களுக்குச் சொல்லவொண்ணுத் துன்பங்களை விடுத்து மார்ச்சு 19ஆம் தேதியன்று மீண்டும் சிந்து நதியைக் கடந்து தாய்நாட்டிற்கு ஏகினர்.

இரத்த வெறியுடன் கூடிய போர், மற்றும் பல நாசங் களுடன் இயற்கையும் டில்லி மக்களுக்குப் பெருஞ்சேதத்தை விளைத்தது. இதனுல், மக்களின் துன்பம் அதிகரித்தது. 'இச் சமையத்தில் கடும்பஞ்சமும், அத்துடன் நோயும் டில்லி மக்களைத் துன்புறுத்தின. நகரம் முழுவதும் பாழடைந்தது நகர மக்கள் பலர் மாண்டனர். இரண்டு மாத காலத்திற்கு டில்லி நகரில் காக்கை குருவிகளைக் கூடக் காண்பது அரிதாயிற்று' எனப் படௌனி வருணிக்கிறர். உள் நாட்டுக் குழப்பங்களால் சீர் குலைந்திருந்த துக்ளக் வமிசத்தினரின் வீழ்ச்சியைத் தைமூர் நிறை வேற்றி வைத்தார். வங்காளம் நெடு நாள்களாகவே தன்னுட்சி நடத்திவந்தது. கனோஜ், அயோத்தி, காரா, டால்மௌ, சாண்டிலா, பாஹ்ரெய்ச், பீஹார், ஜான்பூர் ஆகிய பகுதிகளைக் குவாஜா ஜஹான் ஆண்டுவந்தார். குஜராத்தில் முசாஃப்பர்ஷா சுயேச்சையாக ஆண்டுவந்தார். மாளவத்தில் திலாவர்கானும் பஞ்சாப், மேற்கு சிந்து மாகாணங்களில் தைமூர் வைசிராய் கிசர்கானும், சமானவில் கலீஃப்கானும், பயானவில் ஷம்ஸ்கான் அவ்ஹதியும், கல்பி மகோபா ஆகிய பகுதிகளில் மகமதுகானும் அரசு செலுத்திவந்தனர். டில்லியில் நிலவிய அரசியல் குழப்பம் நிலைமையை மேலும் சீர்குலைத்தது. நெஞ்சில் உரமும், நேர்மைத் திறனுமற்ற பல முஸ்லிம் பிரபுக்கள் சதித்திட்டங்கள் பலவற்றை உருவாக்கினர். சிலர் நச்ரத் ஷா என்பவரை அரசராக்க முயன் றனர். இதுவரையிலும் கங்கை வெளியில் ஒளிந்திருந்த இவர் 1399ஆம் ஆண்டில் டில்லியைக் கைப்பற்ற முயன்றர். மல்லு இக்பால் அவரை முறியடித்து விரட்டினர். 1401ஆம் ஆண்டில் தார் என்னுமிடத்தில் தலைமறைவாக இருந்த சுல்தான் மகமதுக்கு இக்பால் அழைப்பு விடுத்தார். குஜராத்தில் மிகவும் அவமானத்திற்கு உள்ளாகி, மகமது மிகவும் குன்றியிருந் தார். டில்லிக்குத் திரும்புமாறு அவருக்கு வேண்டுகோள் அனுப்பப்பட்டது; முகமது ஷாவைத் தமது கைப்பாவையாகக்

கொண்டு தம் ஆதிக்கத்தைப் பரப்புவதற்கு இக்பால் திட்டமிட்டார். டில்லிக்குத் திரும்பிய சுல்தான் மகமது நெடுநாள்களாக இக்பாலின் கைக்கருவியாக இருந்தார். மூல்தான், திபால்பூர், மேற்கு சிந்து ஆகியவற்றின் கவர்னர் கிசர்கானுடன் 1405ஆம் ஆண்டு நவம்பர் 12ஆம் தேதி நடைபெற்ற போரில் முகமது உயிர் துறந்தார். நெஞ்சு உரமற்றவராகையால் பதவியை மீண்டும் பெற்றும், அவரால் வாய்ப்பைப் பயன்படுத்திக்கொள்வதற்கு இயலாது போயிற்று. 1413ஆம் ஆண்டு பிப்ரவரி மாதத்தில் 'கெய்தால்' என்னுமிடத்தில் மகமது மரணமடைந்தார். இருபது ஆண்டுகள் பெயரளவில் டில்லிக்கு மன்னராக அவர் இருந்தார். கியாஸ்-உதீன்-துக்ளக்கினுல் துவக்கப்பெற்ற அரசகுலம் சுல்தான் மகமதுடன் சீர், சிறப்பு, செல்வம், புகழ் யாவற்றையும் இழந்து மண்ணோடு மண்ணாக வீழ்ந்தது.

# 5. டில்லிச் சுல்தானியத்தின் சீர்குலைவு

## 1. டில்லி : சய்யிதுகளும் லோடிகளும்

### அ. சய்யிதுகள் என்று அழைக்கப்படுவோர்

சுல்தான் மகமது (Mahmud) இறந்த பிறகு டில்லி பிரபுக்கள் தங்களுக்குள் மிகவும் சக்தி வாய்ந்தவரான தௌலத்கான் லோடியைத் (Daulat Khan Lodi) டில்லி அரசராக ஏற்றுக்கொண்டனர். ஆனால், அவருடைய விதி ஒரு சில மாதங்களே அவரை அதிகாரத்தில் இருக்கும்படி செய்தது. கி.பி. 1414 மார்ச்சு மாதத்தில் தைமூரின் பேரில் மூல்தான் நாட்டையும், அதனோடு இணைந்த பிரதேசங்களையும் ஆண்டுவந்த கிசர்கான் (Khizr khan) தௌலத்கான் லோடியை எதிர்த்துப் படையெடுத்து வந்த அந்த ஆண்டின் மே மாதம் இறுதியில் டில்லியைக் கைப்பற்றிக்கொண்டார். தௌலத்கான் கைதியாக்கி ஹிஸ்ஸார் ஃபிரோஸாவிடம் (Hissar Firuza) அனுப்பப்பட்டார். சில வரலாற்றாசிரியர்கள் கிசர்கான் தீர்க்கதரிசி முகமது நபியின் வழித்தோன்றல் என்றும், அதனால் அவரால் நிறுவப்பட்ட அரசமரபு சய்யிது அரச வமிசம் என்று வழங்கப்பட்டது என்றும் கருதுகின்றனர். கிசரின் மூதாதையர்கள் முதலில் அரேபியாவில் வாழ்ந்திருக்கக் கூடுமாயினும் கிசரின் சார்பாகக் கூறப்படும் இந்த வாதங்கள் ஐயத்திற்குரியனவாகக் காணப்படுகின்றன. கிசர் அரசாட்சிக்கு அடையாளமான மணி முடியை ஏற்றுக்கொள்ளாமல், தைமூரின் நான்காவது மகனும், தைமூருக்கு அடுத்தபடியாக அரசாட்சிக்கு உரியவருமான ஷா ருக்கின் (Shah Rukh) அரசப் பிரதிநிதியாக ஆள்வதாகக் கூறிக்கொண்டார். அவருக்குக் கப்பம் அனுப்பியதாகவும் தெரிவித்தார். அவருடைய ஏழாண்டு ஆட்சிக் காலத்தில் குறிப்பிடத்தக்க நிகழ்ச்சி ஒன்றும் நடைபெறவில்லை. அந்தச் சமயத்தில் பழைய டில்லி இராச்சியத்தின் பரப்பு ஒரு சிறிய பிரதேசமாகச் சுருங்கியிருந்தது. அதன் ஆட்சியாளரின் அதிகாரம் டில்லியைச் சுற்றியிருந்த சில மாவட்டங்களின் அளவுவரைதான் பரவியிருந்தது. அந்தப் பகுதிகளிலும் எடாவா, கடேர், கானோஜ், பாட்டியாலீ, கம்பிலா போன்ற பிரதேசங்களின் இந்து ஜமீன்தார்கள் அடிக்கடி அவருடைய அதிகாரத்துக்கு எதிராகக் கிளர்ச்சி

செய்துகொண்டிருந்தனர். கிசர் கானும் (Khizr khan) அவருடைய பற்றுறுதி மிக்க மந்திரியும் அவரைப் போலவே அஞ்சா நெஞ்சுடன் போரிடுபவருமான தாஜ்-உல்-முல்க்கும் (Taj-ul-Mulk) இந்த ஒழியாத அமைதிக் குலைவுகளை எதிர்த்து 1421 ஜனவரி 13-ல் பின்னவரும், 1421 மே 20-ல் முன்னவரும் இறக்கும் வரை போராடிக்கொண்டிருந்தனர். 'நேர்மையான, தாராள குணமுள்ள மக்களுக்கு நன்மை செய்ய விரும்புகிற இளவரசர்' என்று பெரிஷ்டா கிசர்கானைப் புகழ்ந்து உரைக்கிறார். ஆனால், அவர் வலிமை மிக்க ஆட்சியாளராயிருக்கவில்லை. கிசர்கான் செய்த முயற்சிகளினால் 'தகுதிக்கேற்ற சில சாதாரண சலுகைகள் இருந்தன...'. மேலான வலிமையுடைய படையின் முன்பு தாக்கப் பட்டவர்கள் சிறிது நேரம் அடிபணிந்து நின்றனர்; வற்புறுத் தலுக்குப் பணிந்து கப்பம் கட்டினர். அவர்கள் களங்களையும் கோட்டைகளையும் எளிதில் கைவிட்டுச் சென்றனர்; ஆனால், பொதுமக்களின் பாதுகாப்பிலும், மத்திய அரசாங்கத்து மேலாண்மையிலும் உண்மையான முன்னேற்றம் ஏற்படவில்லை என்பது தெளிவாகிறது.

கிசர்கான் தமது மரணப் படுக்கையில் தம்முடைய வாரிசாக நியமித்த அவருடைய மகன் முபாரக்ஷா கிசர்கான் இறந்த அன்றைக்கே டில்லிப் பிரபுக்களின் சம்மதத்துடன் டில்லிச் சிம்மா சனத்தில் ஏறினர். அவருடைய ஆட்சிக் காலத்தில்தான் யாஹியா பின் அஹமது சர்ஹிண்டி (Yahia bin Ahmed Sarhindi) அவருடைய நூலான தாரீக்கி-முபாரக் ஷாஹியை (Tarikh-i-Mubarak shahi) எழுதினர். அந் நூல் அந்தக் காலத்து வரலாற்றை அறிவதற்குச் சிறப்புமிக்க மூலநூலாய் உதவுகிறது. ஆனால், அவருடைய ஆட்சியில் குறிப்பிடத்தக்க நிகழ்ச்சி ஒன்றும்இல்லாததால் அவருடைய தந்தையின் ஆட்சியைப் போலவே சப்பென்றிருந் தது. குழப்பங்களை ஒடுக்குவதற்காகச் சில சிறு படையெடுப்பு களைச் செய்ததைத் தவிர இங்குக் குறிப்பிடத்தக்க முக்கியம் வாய்ந்த படையெடுப்புகள் ஒன்றும் நடைபெறவில்லை. அச் சிறு படையெடுப்புகள் சுல்தானைத் தம் படைகளுடன் புறப்பட்டு வரும்படி செய்தன. பாடிண்டா, தோஆப் ஆகிய இடங்களில எழுந்த கிளர்ச்சிகளை முபாரக்ஷா அடக்க முடிந்தது. மேலும், ஒரு சிறிய பிரதேசத்தில் செலுத்தப்படாமல் தங்கிவிட்ட தொகையை வசூலிக்கவும் அவரால் முடிந்தது. ஆனால், வீரம் மிக்க கோக்கர் கள் மேலும்மேலும் வலிமை உடையவர்களாயினர். பல முறை அவரைத் தொல்லைப்படுத்தினர். கோக்கர்களின் தலைவரான ஜஸ்ரத் டில்லி இராச்சியம் அழிவுற்றபின் கோக்கர்களுடைய மேலாண்மையை நிறுவிவிடலாம் என்று உறுதியாகப் பேரவாக்

கொண்டிருந்தார். இந்துப் பிரபுக்கள் டில்லி அரசவையிலேயே தங்கள் செல்வாக்கை உயர்த்திக்கொண்டனர். 1434 பிப்ரவரி 19ஆம் தேதி சுல்தான் புதிதாகத் திட்டமிட்டு யமுனை நதியின் கரைமீது முபாரகாபாத் என்ற நகர் நிர்மாணிக்கப்படுவதைப் பார்வையிட வரும்போது அதிருப்தியடைந்திருந்த வஸீரான சர்வர்-உல்-முல்க் (Sarvar-ul-Mulk) என்பவரின் தலைமையில் சில முஸ்லிம், இந்துப் பிரபுக்கள் சேர்ந்து செய்த சதிக்கு அவர் பலியானார்.

பிறகு டில்லிப் பிரபுக்கள் கிசர்கானின் பேரரும், கொல்லப் பட்டுக் காலஞ்சென்ற சுல்தானின் வாரிசாக இளவரசராயிருந்த வருமான மகம்மது என்பவரை டில்லிச் சிம்மாசனத்தில் ஏற்றினர். ஆனால், அவரும் 'சிறு பூசல்களுக்கும் சூழ்நிலைகளின் விளையாட்டுக்கும் பலியானார்'; முட்டாள்தனம் நிறைந்த வஸீரான சர்வர்-உல்-முல்க் இறந்த பிறகு தம்முடைய ஆளும் திறமையை வெளிப் படுத்த வாய்ப்புப் பெற்றபோது, அவர் தம்மை எதிரிகளிடமிருந்து காப்பாற்றியவர்களின் நம்பிக்கையும் இழக்குமளவுக்கு அந்த வாய்ப்பைப் புறக்கணித்தார். மாளவ நாட்டு மகமுத்ஷா கில்ஜி தலைநகர்வரை முன்னேறிச் சென்றபோது சுல்தானின் உதவிக்காக வந்த லாகூர் சிர்ஹிண்டு இவற்றின் கவர்னரான புகலூல்கான் லோடி விரைவில் டில்லியைக் கைப்பற்றவும் முயற்சி செய்தார். அம் முயற்சி அந்தச் சமயத்தில் தோல்வியுற்றபோதிலும் சய்யிது களின் நிலைமை வரவர மிக மோசமாகிக் கொண்டே வந்தது. நிஸாம்–உதீன் அகமது எழுதுவதுபோல 'அரசாங்கத்தின் செயல் கள் நாளுக்கு நாள் மிகவும் குழப்பம் நிறைந்ததாக ஆகிவந்தன. டில்லியிலிருந்து இருபது க்ரோக்கள் (Krohs) தூரத்திலிருந்த பிரபுக்கள் (சீரழிந்து கொண்டிருந்த பேரரசுக்கு) பற்றுறுதியுட னிருப்பதை உதறிவிட்டு அதை எதிர்ப்பதற்கான ஏற்பாடுகளைச் செய்வதில் ஈடுபட்டுக்கொண்டிருக்கவும் நேர்ந்தது.' மகமதுஷா கி.பி. 1445-ல் [1] இறந்தபிறகு சிதறிய இராச்சியத்தின் ஆட்சியாள ராகப் பிரபுக்கள் அவருடைய மகனை நியமித்தனர். அவர் அலாவு தீன் ஆலம் ஷா என்ற சிறப்புப் பெயரைப் பூண்டு அரசரானார். அப்போது அவருடைய இராச்சியம் டில்லி நகரையும் அருகிலுள்ள சில கிராமங்களையும் மட்டும் கொண்டதாகவே இருந்தது. புதிய ஆட்சியாளர் அவருடைய தந்தையைக் காட்டிலும் கோழையா யும், திறமையில்லாதவராயும் இருந்தார். அவர் 1451ல் டில்லிச் சிம்மாசனத்தைப் புகலூல் லோடிக்குக் கொடுத்துவிட்டுத் தமக்கு விருப்பமான இடமான பதாவூனுக்குக் கேவலமான முறையில்

1 இந்தத் தேதியைப் பற்றிக் கருத்து வேறுபாடுகள் உண்டு.

சென்று ஓய்வெடுத்துக் கொண்டார். அங்கே, அவர் இன்பங்களில் மூழ்கியவராய், இறக்கும்வரை சிம்மாசனத்தைக் கொடுத்துச் சரணடைந்தற்காக எவ்வித வருத்தமும் கொள்ளாமல் தம்முடைய வாழ்க்கையின் மீதிப் பகுதியைக் கழித்தார்.

## ஆ. லோடிகள்

புகலூல் கான் ஆப்கானியர்களுள் லோடி இனத்தைச் சேர்ந்தவர். அவர் மல்லூர் இக்பால் இறந்த பிறகு இஸ்லாம் கான் என்ற பட்டப் பெயருடன் சிர் இந்தின் கவர்னராக நியமிக்கப்பட்டிருந்த சுல்தான் ஷா லோடியின் மருமகனுவார். மாமன் இறந்த பிறகு புகலூல் லாகூர், சிர்இந்து இவற்றின் கவர்னரானுர். அலாவுதீன் ஆலம் ஷா தாமாகவே டில்லிச் சிம்மாசனத்தைத் துறந்தபோது அவர் 1451 ஏப்ரல் 19ஆம் நாள் ஹமீத்கான் என்ற அமைச்சரின் ஆதரவுடன் அதைக் கைப்பற்றினுர். இவ்வாறு இந்திய வரலாற்றில் முதன் முதலாக ஓர் ஆப்கானிய ஆட்சியாளர் டில்லிச் சிம்மாசனத்தில் அமர்ந்தார்.

டில்லி இராச்சியத்தின் மிகச் சிறுபகுதியை ஆள்வதற்காகவே புகலூல் அழைக்கப்பட்டிருந்தார். அச் சிறுபகுதியும் அப்போது மிகச் சீர்குலைந்த நிலையில் இருந்தது. ஆனுல், அவர் அவருக்கு முந்திய ஆட்சியாளர்களிடத்துக் காணப்பட்ட ஆற்றலைக் காட்டிலும் முற்றிலும் வேறுபட்ட ஆற்றலையும் ஆண்மையையும் பெற்றிருந்தார். போரிடும் இனத்தில் பிறந்திருந்த அவர் சுறுசுறுப்பு மிக்கவராயும், போர் விருப்புடையவராயும், ஆசை மிக்கவராயும் இருந்தார். சுல்தானியத்தின் பலத்தை மீண்டும் திரும்பப் பெற வேண்டும் என்று தீர்மானித்தார். அவர் தம்முடைய ஆப்கானிய ஆதரவாளர்களின் உதவியைக் கொண்டு பழைய மந்திரியான ஹமீத்கானைத் தந்திரமாகச் சிறையிலிட்டு அவருடைய செல்வாக்குக்கு முற்றுப்புள்ளி வைத்தார். ஜான்பூரில் ஆட்சியாளரான மஹ்முத் ஷா ஷர்க்கி டில்லியின் உரிமையைப் பெற முயன்றபோது அவருடைய முயற்சியைக்கூடத் தவிடு பொடி ஆக்கினுர். பல ஆண்டுகளாகச் சுதந்திரம் அனுபவித்துவந்த சில சிறு பிரதேசங்களுக்கு உரிமை பெற்றிருந்தவர்களையும், தலைவர்களையும் அடிபணிய வைத்தார். இவ்வாறு மேவாட்டின் அகமத்கான், சம்பலின் தரியாகான், கோயிலின் இஸாகான், சுகேதின் முபாரக்கான், போங்காவோன் மெய்ன்புரி இவற்றின் ராஜா பிரதாப்சிங்கு, ரேவாரியின் குத்ப் கான், எடாவா சந்த்வார் தோஆப்பின் மற்ற மாவட்டங்கள் ஆகியவற்றின் தலைவர்கள் ஆகியோர் சுல்தானின் அதிகாரத்தை

ஒப்புக்கொள்ளும்படி வற்புறுத்தப்பட்டனர். எனினும், சுல்தான் அவர்களைத் தம்முடைய ஆட்சிக்கு இணங்கிப் போகும்படி செய்ய முடியும் என்று கருதி அவர்களைத் தாராள மனப்பான்மையுடன் நடத்தினர். இன்னும் சிறப்பாகக் குறிப்பிடத்தக்க அவருடைய சாதனை அண்டை இராச்சியமான ஜான்பூருடன் போர்தொடுத்து வெற்றிபெற்றதேயாகும். ஜான்பூரின் சுதந்திரம் அழிக்கப்பட்டு விட்டது. அவர் உயிரோடிருந்த தம் மூத்த மகனை பார்பக்ஷாவை 1486-ல் ஜான்பூரின் அரசப் பிரதிநிதியாக அமர்த்தினர். குவாலியரின் அரசரான கிராத் சிங்கை அடக்கிவிட்டுத் திரும்பியபோது சுல்தான் நோய்வாய்ப்பட்டார். அவருடைய புதல்வர்களான பார்பக்ஷா, நிஜாம்ஷா இவர்களின் ஆதரவாளர்களுக்கும் பேரனை அஸம்-இ-ஹுமாரின் ஆதரவாளர்களுக்கும் இடையே சிம்மாசன உரிமை குறித்துச் சிக்கல்கள் ஏற்பட்டுக்கொண்டிருக்கும் சமயத்தில் அவர் ஜலாலி என்ற நகருக்கருகில் 1489ஆம் ஆண்டு ஜூலையின் நடுப்பகுதியில் தமது இறுதி மூச்சை விட்டார்.

துக்ளக் குடும்பத்தைச் சேர்ந்த ஃபிரோஸாவின் காலத்திலிருந்து புகலூலுக்கு முன்புவரை, டில்லிச் சிம்மாசனத்திலிருந்து ஆண்ட மற்ற எல்லாரினும் ஈடில்லாத அளவுக்குப் புகலூல் ஓர் ஆட்சியாளராக மேம்பட்டிருந்தார். துணிவு, சக்தி, தந்திரம் இவற்றைப் பெற்றிருந்த அவர், இந்துஸ்தானத்தில் முஸ்லிம் சக்தியின் மதிப்பை மீண்டும் நிலைநாட்டினர்; தம் இராச்சியத்தின் அரசாங்கத்தில் சிறிது விறுவிறுப்பை உட்புகுத்தினர். அரச படாடோபச் சிறப்புக்களைப் பகட்டுடன் வெளிக் காட்டுவதை வெறுத்த அவர் ஏழைகளிடம் அன்பாயிருந்தார். அவர் ஒரு படித்தவராக இல்லாதிருந்தும், கற்றறிந்தோரை ஆதரித்தார். அவர் தம்முடைய நெருங்கிய உறவினர்கள் இனத்தவர்கள் ஆகியவர்கள் தம்முடன், தம்முடைய அதிகாரத்தையும் செல்வச் செழிப்பையும் பகிர்ந்து கொள்ள அனுமதித்து அவர்களுடைய அன்பையும் நம்பிக்கையையும் பெற்றிருந்தார்.

புகலூல் இறந்த பிறகு அவருடைய இரண்டாவது மகனை நிசாம்கான், சுல்தான் சிக்கந்தர் ஷா என்ற பட்டப்பெயருடன் 1489 ஜூலை 17ஆம் நாள் ஜலாலியில் அரசராக அறிவிக்கப்பட்டார். பிரபுக்களில் சிலர் பார்பக்ஷாவின் பெயரைக் குறிப்பிட்டதால், அவருடைய சிம்மாசன உரிமை வாதத்துக்குரியதாயிற்று. ஆனல். அப்போது பார்பக் தூரமான ஓர் இடத்திலிருந்தமையால், அவர்களுடைய எண்ணம் ஒன்றும் பயனளிக்காமல் போயிற்று. பேரளவிற்குச் சக்தியும் விறுவிறுப்பும் உடையவராயிருந்த சிக்கந்தர் பிரபுக்களில் சிறுபான்மையினர் சேர்ந்து தேர்ந்

தெடுத்தமைக்கு ஏற்றவாறு திறமையுள்ளவராய் விளங்கினார். மாகாண கவர்னர்கள், குறுநிலத் தலைவர்கள், ஜமீன்தார்கள் ஆகியோரின் நெறி தவறிய பான்மையினால் பெரும்பாலும் சிக்கந்தருக்கு முற்பட்ட ஆட்சிக் காலங்களில் குழப்பமும், அமைதிக் குலைவுகளும் மலிந்திருந்த அந்த இராச்சியத்தை அவற்றையெல்லாம் அகற்றிவிட்டு இராச்சியத்தின் சக்தியைப் பெருக்குவதற்காகச் சிறந்த முயற்சிகளை மேற்கொண்டார். முன்னணியில் நின்ற ஆப்கானிய ஜாகீர்தாரர்களின் விருப்பத்துக்கு முற்றிலும் மாறாக அவர்களுடைய கணக்குகளை எல்லாம் சரிபார்க்க அக்கறை எடுத்துக்கொண்டார். திர்ஹுத், பீஹார் வரை சென்று அவர் வங்காளம்வரை தம்முடைய அதிகாரத்தை நிலைநாட்டினார். பீஹார் அரசாங்கத்துக்குத் தரியாகானை நியமித்தார்; திர்ஹுத் அரசரைத் தமக்குக் கப்பம் செலுத்தும்படி வற்புறுத்தினார். வங்காளத்து அலாவுதீன் ஹுஸேன் ஷாவுடன் ஓர் உடன்படிக்கை செய்து கொண்டார். அதன்படி இருவரும் மற்றவர் இராச்சியத்தின்மீது அனுமதியின்றி நுழையக்கூடாது என்பதை ஒப்புக்கொண்டனர். தோல்பூர், சந்தேரி, இன்னும் மற்ற இடங்களின் தலைவர்களும் இவருக்கு அடிபணிந்தனர். டொவா, பியானா, கோலீல், குவாலியர், போல்பூர் ஆகிய பகுதிகளின் தலைவர்களைச் சிறந்த முறையில் அடக்கி வைத்திருக்கும் நோக்கத்துடன் இப்போது ஆக்ரா நகரம் இருக்குமிடத்தில் 1504-ல் ஒரு புதிய நகரத்தை உண்டாக்கினார். கடைசிக்காலம் வரை பகைமை கொண்ட தலைவர்களை வற்புறுத்திக் கீழ்ப்படிய வைப்பதற்காகப் பெருமுயற்சி செய்துவந்த சுல்தான் கி.பி. 1517 நவம்பர் 21ஆம் தேதி ஆக்ராவில் உயிர் நீத்தார்.

சிக்கந்தர் ஐயத்திற்கிடமின்றி அவருடைய அரச மரபினரின் மூன்று ஆட்சியாளர்களுள் மிக திறமை வாய்ந்தவராவார். அவருடைய மூளை, இதயம் இவற்றின் சிறந்த குணங்களுக்காக அவர் காலத்திலும், பிற்பட்ட காலத்திலும் வாழ்ந்த வரலாற்று ஆசிரியர்கள் அவரை வானளாவப் புகழ்ந்துரைத்தனர். உறுதியான, விழிப்புள்ள, நேர்மையான ஆட்சியாளரான அவர் ஏழைகளுக்காகவும், குறை வேண்டியோர்க்காகவும் அன்புணர்ச்சிகளைத் தம் உள்ளத்தில் வைத்துக்கொண்டிருந்தார். கற்றறிந்தோரை ஆதரித்தார். தாமே சில பாரசீகச் செய்யுள்களை இயற்றினார். கண்டிப்பான பாரபட்சமின்மையுடன் அவர் நீதி வழங்கினார். தம்முடைய குடிமக்களுள் மிகவும் கடைப்பட்ட ஏழைகளின் குறைகளைத் தாமே நேரில் கேட்டார். அவருடைய அரசாங்கத்தின் சிறப்புத்திறமை முக்கியமாக அவருடைய இராச்சியத்தில் அமைதியும் செல்வச் செழிப்பும் நிலவும்படி செய்தது.

வாழ்க்கைக்கு இன்றியமையாது தேவைப்பட்ட பொருள்களின் விலை மிக மிகக் குறைவாக இருந்தது. எனினும், மதப் பொறுமை யின்மையிலிருந்து விடுதலை பெற்றிராதவராய் இருந்தமையால் சில அகௌரவமான செயல்களைச் செய்யவும் நேர்ந்தது.

சிக்கந்தரின் மரணத்திற்குப் பிறகு அவருடைய மூத்த மகனை இப்ராஹீம் 1517 நவம்பர் 21ஆம் நாள் சிம்மாசனத்திற்கு உயர்த்தப்பட்டார். ஆனால், பிரபுக்களின் ஒரு சிறு பிரிவினர் இராச்சியத்தைப் பிரிக்கவேண்டுமென்று வாதாடி, இப்ராஹீமின் தம்பியான ஜலால்கானை ஜான்பூர் சிம்மாசனத்தில் ஏற்றினர். ஆனால், இப்ராஹீம் அவர்களுடைய முயற்சியைத் தவிடு பொடி யாக்கினார். அதனால் ஜலால் ஜான்பூரிலிருந்து ஓட்டம்பிடித்தார். ஆனால், வழியில் பிடிக்கப்பட்டுச் சுல்தானின் துணையின்பேரில் கொலை செய்யப்பட்டார். புதிய சுல்தான் படைத்துறை ஆற்ற லைப் பெற்றிருந்தார். ஆனால், நல்லெண்ணமும், மித உணர்ச்சியும் இல்லாதவராயிருந்தார். இது கடைசியில் அவருக்கு அழிவைத் தேடித் தந்தது. பலமும், சிறப்புத் திறமையும் எய்தும் நோக்கத் துடன் அவர் அறிவின்றி, அரசாங்கத்தின் அதிகாரிகளின் மரபைச் சேர்ந்தவர்களும், பலம் வாய்ந்த பிரபுக்களுமான லோஹானி, பார்முலி, லோடி இன மக்களின் பிரபுக்களை ஒடுக்குவதற்கான திட்டத்தில் இறங்கியிருந்தார். கடுமையான நடவடிக்கைகள் மூலம் அவர் ஆப்கானியப் பிரபுக்களின் அனுதாபத்தை இழந்தார். அவர்களுடைய பற்றுறுதியையும் ஈடுபாட்டையும் இழந்தார். இது அவருடைய அதிகாரத்தை முழுமையாக அவர்கள் புறக்கணித்த திலிருந்து தெளிவாகப் புலனாகின்றது. இது மேலும்மேலும் சுல்தானின் மனக்கசப்பை மிகுதியாக்கியது. அவர் பிரபுக்களிடம் இன்னும் மிக கடுமையான நடவடிக்கைகள் எடுக்க முற்பட்டார். ஆனால், பிரபுக்கள் தங்கள் பொறுமையை இழந்தனர். பீஹார்ப் பிரபுக்கள் தரியாகான் லோஹானியின் தலைமையில் தங்கள் சுதந்திரத்தைப் பிரகடனம் செய்தனர். இப்ராஹீம், தௌலத் கான் லோடியின் மகனும், லாகூரின் ஆளவிற்கு உரிமை பெற்ற கவர்னருமான தில்லார்கானை அனுதாபமற்ற முறையில் நடத்தி யதால் பிரபுக்களின் அதிருப்தி ஒரு முடிவை அடைந்தது. தௌலத்கான் லோடியும். சுல்தான் இப்ராஹீமின் மாமானும், டில்லிச் சிம்மாசனம் தமக்குரிமையுடையது என்று கூறிக் கொண் டிருந்தவருமான ஆலம்கானும் காபூலின் தைமூரிய ஆட்சியாள ரான பாபரை இந்தியாவின்மீது படையெடுக்கும்படி தூண்டி னர். இவ்வாறு பழிக்குப் பழிவாங்கும் எண்ணமும், பேராசையும் தொல்லை உண்டாக்கியமையும், அன்பின்மையும், சீர் குலைந்து கொண்டிருந்த டில்லிச் சுல்தானியம் கடைசியாக அழியுமாறு

செய்தது. மேலும், இந்தியாவில் ஒரு புதிய துருக்கிய ஆட்சி ஏற்படும்படி செய்தன.

உண்மையில் மகமது பின் துக்ளக்கின் கடைசிக் காலத்தில் தோன்றிய நிலைமைகளில் டில்லிச் சுல்தானியத்தின் வீழ்ச்சி தவிர்க்க முடியாததாயிருந்தது. அந்தச் சுல்தானின் அறிவின்மை சீர்குலைவுக்கு ஒரு வழியை ஏற்படுத்திவிட்டது. அச் சீர்குலைவு அவருக்கு அடுத்துப் பட்டத்துக்கு வந்த ஃபிரோஸ் ஷா, ஜாகீர் முறையைப் புதுப்பித்தல், அடிமைத் தொழிலைப் பரப்புதல், முஸ்லிம் அல்லாதவர்களின் மேல் ஜெசியா வரியைச் சுமத்தல், மதத்தில் அவ நம்பிக்கை கொண்ட முஸ்லிம் மதப் பிரிவினரைத் தண்டித்தல் போன்ற அறிவில்லாத நடவடிக்கைகளை மேற்கொண்டதாலும், அவருடைய பலவீனத்தாலும் விரைவாகச் சென்றது. இதைப் பலவீனமான சய்யிதுகளும், நாட்டு நலனில் அக்கறையில்லாத லோடிகளும் தடுக்க முடியவில்லை. சில படைத்துறை வெற்றிகளைப் பெற்றிருந்தாலும், லோடிகள் ஆட்சி முறை அமைப்பில் நலம் மிகுந்த வலிமையான கூறு எதையும் புகுத்தத் தவறினர்; அடக்குமுறைக் கொள்கை ஒன்றினால் படையைச் சேர்ந்தவர்களும், அதிகாரிகளுமாயிருந்த பிரபுக்களை ஒடுக்க முயற்சி செய்து ஒரு மாபெருந் தவற்றைச் செய்தனர். டில்லிச் சுல்தானியத்தின் வளர்ந்துவரும் சீர்குலைவின் அடையாளமாகக் கருதப்படக்கூடிய வெளியில் நிகழும் பேராபத்து அச் சீர்குலைவின் முடிவை நோக்கி விரைந்து செலுத்தியது. உள்நாட்டுப் போர்கள் டில்லிச் சுல்தானியத்தின் வலிமையை அரித்துத் தின்றுகொண்டிருக்கத் தைமூரின் படையெடுப்பு அதன் ஒழுங்கு முறையை அழித்துப் பிரபுக்களின் தன்னலச் சிக்கல்களை மிகுதிப்படுத்தியது. அப் பிரபுக்கள் பிற்காலத்து இடைக்கால ஐரோப்பாவின் பிரபுக்களைப் போலவே இராச்சியம் முழுவதையும் அமைதிக் குலைவிலும், குழப்பத்திலும் ஆழ்த்தினர். அவற்றை அறிவு மிக்க நடவடிக்கைகள்முலம் அகற்றுவது என்பது டில்லியின் பலவீனமான அரசர்களின் சக்திக்கு அப்பாற்பட்டதாயிருந்தது. மேலும், துக்ளக்குகளும் அவருக்குப் பின்வந்த ஆட்சியாளர்களும், இந்தியா போன்ற ஒரு நாட்டில் ஒருமைப்பாட்டை வளர்ப்பதற்குரிய சீர்திருத்தங்களைப் புகுத்தச் சிறிதும் முற்படவில்லை, மத்திய காலத்தில் இந்தியாவில் சமுதாய ஒழுங்கு நிலை உணர்ச்சியும், பிரதேச அரசியல் ஒற்றுமையும் தோன்றவில்லை. இவ்வாறு துருக்கியர்கள், ஆப்கானியர்கள் ஆகியவர்களின் படைப்பல சர்வாதிகாரம் தன்னிடம் சக்தியுள்ளவரைதான் வெவ்வேறு மாகாணங்களில் இருந்த மக்களையும், கவர்னர்களையும் பலாத்காரத்தால் கீழ்ப்படிய வைக்க முடியும். மத்திய அதிகாரம் பலவீனமுற்றவுடனே

இந்தியாவில் சாதாரணமாகக் காணப்பட்ட பிரிந்து செல்லும் மனப்பான்மைகள் ஏற்றம் பெற்றன. டில்லிச் சுல்தானியத்தின் அழிவின்போது பல சுதந்திர இராச்சியங்கள் தோன்றின. அவற்றின் வரலாற்றை இங்கே நாம் சுருக்கமாகக் கவனிப்போம்.

## 2. வங்காளம்

டில்லிச் சுல்தானியத்திற்கு வங்காளத்தை அடக்கி வைப்பது எப்போதும் தனது ஆற்றலுக்கு அப்பாற்பட்ட அருஞ்செயலாகவே இருந்துவந்தது. வங்காளம் முதலில் தங்கள் சுதந்திரத்தை நிலை நிறுத்திய மாகாணங்களுள் ஒன்ருயிருந்தது. அது டில்லியிலிருந்து நெடுந்தூரத்தில் இருந்ததாலும், செல்வ வளம் மிகுதியாகப் பெற்றிருந்ததாலும் மத்திய அதிகாரத்தை எதிர்த்துக் கவர்னர்கள் அடிக்கடி கிளர்ச்சி செய்யும்படி தூண்டிவந்தது. நாம் ஏற்கெனவே பார்த்தபடி மத்திய அதிகாரம் இல்டுட்மிஷ், பால்பன் முதலியோருக்கு மிகுந்த தொல்லையைக் கொடுத்தது. பால்பனின் வழித் தோன்றல்களின்கீழ் வங்காளம் டில்லி அரசாங்கத்தின் பிடிப்பிலிருந்து விடுதலை பெற்றது. ஆனுல், டில்லி அரசாங்கத்தின் அதிகாரம் கியாஸ்-உதீன் துக்ளக் காலத்தில் மீண்டும் நிலை நாட்டப்பட்டது. கியாஸ்-உதீன் துக்ளக், கியாஸ்-உதீன்-பஹதூர் ஷாவைத் தோற்கடித்துவிட்டு அம் மாகாணத்தை மூன்று தனித் தனி ஆட்சிப் பிரிவுகளாகப் பிரித்து அவற்றிற்கு முறையே லக்னேதி, சாட்காவோன், சோனுர் காவோன் என்ற நகரங்களைத் தலைநகரங்களாக்கினுர். மகமதுபின் துக்ளக் பட்டத்துக்கு வந்தவுடன் லக்னேதி அரசாங்கத்துக்கு காதர்கானையும், சாட்காவோனுக்கு இஸ்ஸுத்ன் அஸம்-உல்- முல்க்கையும் நியமித்துவிட்டுச் சோனுர்காவோன் அரசாங்கத்திற்குக் கியாஸ்-உதீன் பஹதூர் ஷாவை நியமித்து அவரை மீண்டும் ஆட்சிக்குரியவராக்கினுர். ஆனுல், அவருடன் அவருடைய மாற்ருந்தாய் மகனுனவரும், பகராம்கான் என்ற பெயரால் நன்கு அறியப்பட்டவருமான தார்த்தார்கானையும் கூட்டாயிருக்கும்படி செய்தார். எனினும், வங்காளத்தின் இப் பிரிவினை, அம் மாகாணத்தில் தொடர்ந்து ஏற்பட்டுவந்த தொல்லைகளை அகற்றமுடியவில்லை. கியாஸ்–உதீன்-பகதூர் விரைவில் எதிர்த்தெழுந்துச் சோனுர்காவோனிலும் கியாஸ்பூரிலும் இருந்த நாணயச் சாலைகளிலிருந்து நாணயங்களை வெளியிட்டார். ஆனுல், அவர் விரைவில் தோற்கடிக்கப்பட்டுக் கொல்லப்பட்டார். பகராம் கான் சோனுர்காவோனின் தனிக் கவர்னர் ஆனுர். அவர் கி.பி. 1336-ல் இறந்தார். அதன்பின் அவருடைய கவசந் தாங்கியாக இருந்த பக்ர் உதீன் (Fakhr-ud-din) உடனே பக்ர்-உதீன் முபாரக் ஷா என்ற பட்டப் பெயருடன்

சோனர்காவோனின் ஆட்சியாளராக அறிவித்துக்கொண்டார். விரைவில் அலாவுதீன் ஆலிஷாவும் (கி.பி. 1339—1345) வட வங்காளத்தில் தம்மைச் சுதந்திரமாக்கிக்கொண்டு லக்னௌதியி லிருந்து பாண்டுவாவுக்குத் தலைநகரை மாற்றிக்கொண்டார். இடைவிடாமல் பத்தாண்டுக் காலம்[1] ஆட்சி செய்தபிறகு பக்ர் உதீன் முபாரக் ஷா இயற்கை மரணம் எய்தினார் என்றும், சோனர்காவோன் சிம்மாசனத்தில் அவருக்குப் பிறகு அவரு டைய மகனாகக் கருதக்கூடிய இக்தியார்-உதீன் காஜி ஷா அமர்ந் தார் என்றும் சில நாணயங்கள் தரும் சான்றின்மூலம் உறுதி யாகக் கூறப்படுகின்றன.

கடைசியில் ஏறக்குறைய கி.பி. 1345-ல் அலாவுதீன் ஆலி ஷாவின் மாற்றாந்தாய் மகனான ஹாஜீ இலியாஸ், ஷாம்ஸ் உதீன் இலியாஸ் ஷா (Shams-ud-din Iliyas Shah) என்ற பட்டப் பெயருடன் வங்காள மாகாணம் முழுமைக்கும் சுதந்திர ஆட்சி யாளராகத் தம்மை ஆக்கிக்கொண்டார். அவர் பட்டத்துக்கு வந்தவுடனே தம்முடைய அதிகாரத்தை வெவ்வேறு திசைகளில் பரப்பினார். கி.பி. 1352-ல் சோனர்காவோனின் கிழக்கு இராச்சி யத்தை இணைத்துக்கொண்ட பிறகு அவர் ஒரிஸ்ஸா திர்ஹூத் இராச்சியங்களில் கப்பம் வசூலித்தார் என்றும், வாரணாசி வரை சென்றார் என்றும் அறியப்படுகிறது. இவ்வாறு அவருடைய செயற்பாடுகளால் டில்லி இராச்சியத்துக்கு அதன் கிழக்கு எல்லை தொல்லை மிக்கதாக ஆகிவிட்டது. அவருடைய ஆட்சிக் காலத் தில்தான் துக்ளக் குடும்பத்தைச் சேர்ந்த ஃபிரோஸ் இழந்து விட்ட வங்காள மாகாணத்தைத் திரும்பப் பெற முயற்சி செய் தார். ஆனால், அவர் தோல்வியே கண்டார். இலியாஸ் கி.பி. 1357-ல் பாண்டுவாவில் இறந்தார். அவருடைய ஆட்சியில் அமைதியும் செல்வச் செழிப்பும் நிலவியிருந்தன. அவ்வுண்மை, 'தேசியத்துக்கு உரிய நாணயங்கள் புகுத்தப்பட்டதாலும், அமைதிக்காலக் கலைகளில், சிறப்பாகக் கட்டடக் கலையில், சுவையார்வம் வளர்ந்து வந்ததாலும் நன்கு அறியப்படுகிறது.'

இலியாஸுக்குப் பிறகு அவருடைய மகன் சிக்கந்தர் ஷா பட்டத்துக்கு வந்தார். அவருடைய ஆட்சியின் தொடக்கத்தில்

[1] பட்டசாலி (Bhattasali) வங்காளத்தின் சுதந்திர சுல்தான்கள் (Independent Sultans of Bengal பக்கம் 17.) முஸ்லிம் வரலாற்றுக் கோப் பாளர்கள் பக்ர் உதீனின் சாவைப்பற்றி வேறுவகையான தகவல்களைத் தருகின்றனர். ரியாஜ் என்ற நூலின் ஆசிரியர் அவர் அலாவுதீன் ஆலி ஷாவினால் கொல்லப்பட்டார் என்கிறார். மகமது பின் துக்ளக் சோனர்காவோன் சென்று பக்ர் உதீனைப் பிடித்துத் தில்லிக்கு இட்டுச் சென்று கொன்றார் என்று பதௌனி கூறுகிறார்: பக்ர் உதீன் ஹாஜீ இலியாஸினால் கொல்லப்பட்டார் என்று ஷம்ஸ் இ சிராஸ் அபீப் குறிப்பிடுகிறார்.

டில்லிச் சுல்தான் வங்காளத்தைத் திரும்பப் பெறுவதற்காக இரண்டாம் முறை முயற்சி செய்தார். ஆனால், அவர் ஏமாற்ற முற்றுத் திரும்ப நேரிட்டது. ஏறக்குறைய முப்பத்தாறு ஆண்டுகள் சிறப்பு மிக்க ஆட்சியைப் புரிந்த பிறகு சிக்கந்தர் தம்முடைய மகனுன கியாஸ்-உதீன் ஆஸமுடன் பாண்டு வாவுக்கு அருகில் கோவால்பாராவில் செய்த போரில் 1393 அக்டோபரில் உயிர் துறந்தார். அவருடைய ஆட்சி செல்வச் செழிப்புடன் இருந்தது என்பது ஆதினுலில் அவரால் கட்டப்பட்ட மிகு கம்பீரமான மசூதியாலும், எண்ணிக்கையும் வகைப்பாடும், மேல் வரைவுகளில் வளமும் மிகுந்த நாணயங்களாலும் அறியப் படுகின்றன. அவர் முஸ்லிம் மகான்களிடம் பெருமதிப்பு வைத்தி ருந்தார். அடுத்த ஆட்சியாளரான கியாஸ்-உதீன் ஆஸம் புகழ் பெற்ற கவிஞரான ஹாஃபிஸின் (Hafiz) செயலாளராவார். சட்டத்தின்மீதும், முஸ்லிம் மகான்களிடத்தும் ஆழ்ந்த மதிப்புக் கொண்டிருந்த அவர் தேர்ச்சி பெற்ற, திறமை வாய்ந்த இளவரச ராவார். மிங் வமிசத்தைச் சேர்ந்த சீனப் பேரரசர் யுங்க்-லோ விற்குச் (Yung-Lo) சில பரிசுகளுடன் 1405, 1408, 1409 ஆண்டு களில் தூதுக் குழுக்களை அவர் அனுப்பினர். அதற்குப் பதிலாகச் சீனப் பேரரசரும் சில பரிசுப் பொருள்களுடன் இவரிடம் தூதுக் குழுக்களை அனுப்பினர். ஏறக்குறைய இருபது ஆண்டுக் காலம் ஆட்சி செய்த பின்பு கியாஸ்-உதீன் ஆஸம் ஷா கி.பி. 1410-11-ல் இறந்தார். அவருக்குப் பின் சைப்-உதீன் ஹம்ஸா ஷா (Saif Uddin Hamza Shah) என்பவர் பட்டத்துக்கு வந்தார். ஆனல், அந்தச் சமயத்தில் தோல்விகரமான ஒரு நிலை இராணுவப் படையெடுப்புகளால் வளர்ந்து வந்த இலியாஸ் ஷாஹி வமிசத்து ஆட்சியின் பலவீனத்தைச் சாதகமாக்கிக் கொண்டு, வடக்கு வங்காளத்திலுள்ள பாதூரியாவின் இந்து ஜமீன்தாரரும், வங்கா ளத்து இலியாஸ் ஷாஹி அரசர்களிடம் செல்வாக்கு மிக்க அதிகாரியுமான இராஜா கணேஷ் (பாரசீகக் கையெழுத்துப் பிரதியில் கன்ஸ் என்று தவருக அழைக்கப்படும்[1]) அதிகாரத்துக்கு உயர்ந்தார். ஏறக்குறைய இரண்டிலிருந்து மூன்ருண்டுக் காலம் வரை ஆட்சி செய்த சைப்-உதீன் ஹம்ஸா, ஷாரசைப்-உதீன் ஹம்ஸா ஷாவின் தத்துப்பிள்ளை என்ருே, அடிமை என்ருே கருதப் படுபவரும் கி.பி. 1412-13ஆம் ஆண்டிலிருந்து கி.பி. 1414-15ஆம் ஆண்டு வரை ஆட்சி செய்தவருமான ஷியாப் உதீன் பாயஸீத் (Shahab-ud-din Bayazid Shah) ஆகிய பொம்மை அரசர்களின் ஆட்சிக் காலங்களில், தம்மை உண்மையிலேயே சர்வாதிகாரி

1 'கணேஷ்' பாதூரி பட்டத்தைக் கொண்டுள்ள பரேந்த்ரா (Barendra) பிராமணர் என்று சிலர் நம்புகின்றனர். ஆனல், இக் கருத்தை ஆதரிக்கும் வரலாற்றுச் சான்று எதுவுமில்லை.

யாக்கிக் கொண்டார்: பின்னவரின் மகனும் வாரிசுமான அலாவுதீன் ஃபிரோஸ் ஷா (Alaudin Firoz Shah) ஒரு சில மாதங்களே பெயரளவில் ஆட்சி செய்தார். அவர் இறந்த பின்னர் வங்காள அரசை இராஜா கணேஷ் கைப்பற்றிக் கொண்டார். கி.பி. 1415ஆம் ஆண்டின் தொடக்கத்தில் இவ் வதிகார அபகரிப்பு, இந்துக்களின் ஆட்சியை மீண்டும் ஏற்படுத்துதல் ஆகியவை வங்காளத்திலுள்ள முஸ்லிம்களுள் ஒரு பிரிவினரால் விரும்பப்படவில்லை. நூர் குதப் ஆலம் (Nur Kutab Alam) என்பவரின் தலைமையில் கீழிருந்த உள்ளூர் முஸ்லிம் வல்லு நர்களுடன் சேர்ந்து கொண்டு அவர்கள் அவரை எதிர்த்தனர். அவர் கணேஷரின் அதிகாரத்தை அழிப்பதற்கு, வங்காளத்தின் மீது படையெடுத்து வருமாறு ஜான்பூர் அரசரான இப்ராஹிம் ஷர்கிக்கு (Ibrahim Sharqhi) உணர்ச்சி மிக்க கடிதத்தை எழுதினர். வங்காளத்துக்கு வரும் வழியில் இப்ராஹிம் ஷர்கி, மிதிலையின் வழியாகச் சென்றார். அங்கே ஷிவ சின்ஹா (Siva Sinha) ஜான்பூர் அரசருக்கு மேலதிகாரத்தை உதறியெறிந்தும், அவருடைய தந்தையான தேவி சின்ஹாவைப் (Devi Sinha) பதவி யிலிருந்து நீக்கியும் தம்மைச் சுதந்திர அரசராக்கிக்கொண்டார். கணேஷின் நண்பரும் கூட்டாளியுமான ஷிவ சின்ஹா ஜான்பூர் படைகளை எதிர்த்தார். ஆனால், எண்ணிக்கையில் அதிகமான அப் படைகளால் வெற்றி கொள்ளப்பட்டார். ஜான்பூர் சுல்தானின் மேலாண்மையை ஏற்றுக்கொண்டவுடன் அவருடைய தந்தை மீண்டும் மிதிலையின் அரசராக்கப்பட்டார். வங்காளத்தில் மிகப் பெரிய ஜான்பூர் படையை எதிர்த்து இராஜா கணேஷினால் நீண்ட காலம் நிற்க முடியவில்லை. எனவே, அவர் பதவியைத் துறந்தார். பதவி வெறி பிடித்திருந்த அவருடைய மகன் ஜடுசென் (Jadusen) இஸ்லாம் மதத்தைத் தழுவினர். இப்ராஹிம் ஷர்கி கி.பி. 1415-ன் இறுதி வாக்கில் அவரை ஜலாலுதீன் என்ற பட்டத்துடன் வங்காளத்தின் சுல்தானாக்கினர். ஆனால், வங்கா ளத்திலிருந்து இப்ராஹிம் ஷர்கி திரும்பியவுடன் இராஜா கணேஷ் வங்காள அரசர் பதவியைத் திரும்பப் பெற்றார். தனுஜ மர்தன தேவா (Danuja, Mardana Deva சண்டி தேவதையின் பாதங் களில் அர்ப்பணித்தவர்) என்ற பட்டப்பெயரை மேற்கொண்டார். இராஜா கணேஷ் அப்போது அசைக்க முடியாத அதிகாரத்துடன் வங்காள முழுவதையும் உள்ளடக்கிய ஒரு பரந்த இராச்சியத்தை 1418ஆம் ஆண்டின் நடுப் பகுதி வரை ஆண்டார். புனிதப் படுத்தும் வழியின் மூலமாக இராஜா கணேஷ் தம்முடைய மகனை மீண்டும் இந்து மதத்திற்கு மாற்ற முயற்சி செய்தார். ஆனால், இந்த சுத்தி முறை (Suddhi) இந்து சமுதாயத்தினால் ஏற்றுக் கொள்ளப்படவில்லை எனத் தெரிகின்றது. ஜடுசென் தம்முடைய

வாழ்நாள்களைத் தம் தந்தையின் எஞ்சிய ஆட்சிக் காலத்தின் போது சாதியினின்றும் நீக்கப்பட்டவராகவே கழித்தார்.

கணேஷ் அறிவும் திறமையும் உடைய அரசர். 'வங்காள அரசர்களுள் கவர்ச்சி மிக்க அரசர் இராஜா கணேஷ் வங்காளத்தில் மிக உயர்ந்த அதிகாரத்தை அடைந்தவரும் சிறிது காலத்திற்கு இஸ்லாமின் பிணைப்புகளைத் தகர்த்தெறிந்தவருமான பிரபல மற்ற இந்த இந்து மிகு வலிமை வாய்ந்தவராகவும், திறமை வாய்ந்தவராகவும் இருந்திருக்க வேண்டும் என்று நாம் உணருகிறோம்' என்று ஃபெவரிட்ஜ் குறிப்பிடுகிறார். ஃபெரிஷ்டா போன்ற எழுத்தாளர்களும் மற்றும் சிலரும் இவருடைய அரசுக்குரிய குணங்களைப் புகழ்ந்துள்ளனர். அவருடைய இராச்சியத்தை 'மிகச் சிறந்த முறையில் ஆண்டார். அளவு மீறி வளர்ந்து விட்டதும் கீழ்ப்படியாததுமான முஸ்லிம் மத நிறுவனங்களை அடி பணிய வைக்க'[1] அவர் முயற்சி செய்தபோதிலும் முஸ்லிம் குடிமக்களைப் பொதுவாக அவர் உள்ளன்போடு நடத்தினார்.

கி.பி. 1418-ல் கணேஷ் அமைதியாக உயிர் நீத்தார். அதே ஆண்டில் 'சண்டி தேவதையின் பாதங்களில் அர்ப்பணித்துக் கொண்ட மகேந்திரதேவன்' என்ற பெயர் கொண்ட அரசரால் பாண்டுவா (Pandua) சிட்டகாங் என்ற இடங்களிலிருந்து வங்காள எழுத்துகள் கொண்ட நாணயங்கள் வெளியிடப் பட்டன. இஸ்லாமிய மதத்தை மீண்டும் தழுவிய பின்னர் ஜலாலுதீன் முகமது என்ற பட்டத்துடன் அதே ஆண்டில் ஜடுசென் பதவி ஏற்பதற்கு முன் கணேஷின் இளைய மகனாகக் கருதப்படும் அவர் அவருடைய ஆதரவாளர்களால் ஒரு சில மாதங்களுக்கு மட்டுமே பட்டத்திற்குக் கொண்டுவரப்பட்டார். இவரது ஆட்சிக் காலத்தில் ஜான்பூரைச் சேர்ந்த இப்ராஹிம் ஷர்கி வங்காளத்தின்மீது இரண்டாம் முறையாகக் கி.பி. 1420-ல் படையெடுத்தார்.

கணேஷின் அரச மரபின் ஆட்சி நீண்ட காலம் நீடிக்கவில்லை. ஜலால் உதீன் முகமது கி.பி. 1431-ல் இறந்தார். அவருக்குப் பின் பட்டத்துக்கு வந்த அவருடைய மகன் ஷம்ஸ்-உதீன் அகமத் கி.பி. 1442 வரை அரசாண்டார். இந்த முடிமன்னரின் கொடுங் கோன்மை அவரைக் குடிமக்கள் எல்லாரும் மிகுதியாக வெறுக்கும்படி செய்தது. அவரும் அவருடைய அரசாங்கத்து இரண்டு அதிகாரிகளான ஷாதீகான், நாஸிர்கான் ஆகிய இருவரும்

1 History of Bengal (Dacca University Publication of Vol. II pp.127.)

செய்த சதிக்கு இரையானார். நாஸிர்கான், ஷாதீகான் இருவரும் வங்காளச் சிம்மாசனத்துக்காகப் பேராசை கொண்டிருந்தமையின் விரைவில் அவ் விருவரும் தங்களுக்குள் ஒருவர்மீது ஒருவர் பொறாமை கொண்டனர். நாஸிர்கான் அவருடைய போட்டியாள ரான ஷாதீகானைக் கொன்றார். ஆனால், விதி ஒரு சில நாள்களே அவர் தம்முடைய அதிகாரத்தைச் செலுத்த அனுமதித்தது. ஏனெனில், ஷம்ஸ்-உதீன் அகமத்மீது பற்றுக்கொண்டிருந்த பிரபுக்கள் விரைவில் அவருடைய அதிகாரத்தை எதிர்த்தனர். அவரைக் கொன்று போட்டனர். பின்பு அவர்கள் ஷாஜீ இலியாஸின் பேரனான நாஸீர்-உதீனைச் சிம்மாசனத்தில் வைத் தனர். அவர் அவருடைய நாணயங்களில் காணப்படுவது போல, நாஸீர்-உதீன் அப்துல் முஸப்பர் மகமூத்ஷா என்ற பட்டப் பெயரைத் தரித்துக்கொண்டார். இவ்வாறு இலியாஸ் ஷாஹீயின் மரபினரின் ஆட்சி மீண்டும் நிலைபெறலாயிற்று.

சில நாணயங்களிலிருந்து அறியப்படுவது போல, நாஸீர்-உதீன் மகமூத் ஏறக்குறைய பதினேழு ஆண்டுகள் அமைதியாக நாட்டை ஆண்டார். கௌர் என்ற இடத்தில் சில கட்டடங்களை யும், சாட்காவோனில் ஒரு மசூதியையும் கட்டிய பெருமை அவரைச் சாரும். கி.பி. 1460-ல் அவர் இறந்ததும் அவருடைய மகன் ருக்னுதீன் பார்பக்ஷா வங்காளச் சிம்மாசனத்தில் ஏறினார். மிகுந்த எண்ணிக்கையுடைய அபிசீனிய அடிமைகளை முதலில் வைத்திருந்த இந்துஸ்தான் ஆட்சியாளர் அவரேயாவர். அந்த அடிமைகளுள் சிலர் உயர்ந்த பதவிகளுக்கு உயர்த்தப்பட்டனர். குலாம் ஹுசேன் சலீமின் கருத்துப்படி, பார்பக் 'புத்திக் கூர்மை வாய்ந்த சட்டத்தைக் கடைப்பிடிக்கக்கூடிய ஓர்அரசராவார்.' அவர் கி.பி. 1474-ல் இறந்தார். அவருக்குப் பின்பு அவருடைய மகன் ஷம்ஸ் உதீன் யூசுப் ஷா பட்டத்திற்கு வந்தார். அவர் கல் வெட்டுகளில் ஷம்ஸ்-உதீன் அபுல் முஸப்பர் யூசுப் ஷா என்று கூறப்படுகிறார். அவர் நற்குணம் நிறைந்தவராயும் கல்வியறிவும் பக்தியும் உள்ளவராயும் இருந்தார். கி.பி. 1481வரை அர சாட்சி செய்தார். அவருடைய ஆட்சிக் காலத்தில் சில்ஹெட்டை (Sylhet) முஸ்லிம்கள் வென்றனர் என்று கூறப்படுகிறது. அவருடைய மரணத்திற்குப் பின்பு, பிரபுக்கள் அவருடைய மகன் இரண்டாம் சிக்கந்தரைச் சிம்மாசனத்தில் வைத்தார். ஆனால், அவர் புத்திக் கோளாறு உள்ளவராகக் காணப்பட்டமையால் உடனே அவரை அகற்றிவிட்டு நாஸீர் உதீன் மகமூதுவின் மகனான ஜலால்-உதீன் பாத் ஷாவைச் சிம்மாசனத்தில் ஏற்றினர். பாத்ஷா வளர்ந்துவரும் அபிசீனியர்களினால் உண்டாகக்கூடிய கேடுகளை உணரும் அறிவுடையவராய் இருந்தார், ஆனால், அதைத் தடுக்க

அவர் செய்த முயற்சி அவருடைய உயிரையே குடித்து விட்டது. அதிருப்தியடைந்த அபிசீனியர் ஒரு பேடியின் தலைமை யின்கீழ் அவருக்கு எதிராகச் சதி செய்து கி.பி. 1486-ல் அவரைக் கொலை செய்தனர். அப் பேடி பார்பக் ஷா, சுல்தான் ஷாஜாதா என்ற பட்டப்பெயருடன் வங்காளச் சிம்மாசனத்தை வலிந்து கைப்பற்றிக்கொண்டார். ஆனால், சில மாதங்களுக்குள் பார்பக் இந்தில்கான் (Indil Khan) என்பவரால் கொலை செய்யப்பட்டார். இந்தில்கான் ஓர் அபிசீனியராயிருந்தாலும், திறமை மிக்க ஒரு படைத் தளபதியாக இருந்தார். பாத்ஷாவின் மனைவியாலும், கௌர்நாட்டு அரசவையினராலும் வற்புறுத்தபட்டதால், இந்தில் கான், சிறிது காலம் தயக்கத்தை வெளிப்படுத்திக் கொண்டிருந்த பிறகு, சைப் உதீன் ஃபிரோஸ் என்ற பட்டப்பெயருடன் வங்காளச் சிம்மாசனத்தில் ஏறினார். ரியாஜ் என்ற நூலின்ஆசிரியர் கூறுவதை நம்புவோமானால், திறமை வாய்ந்த ஆட்சியாளர் என்றும், தளபதி என்றும் மக்கள் கொண்டிருந்த நம்பிக்கைக்கு ஏற்றவாறு அவரு டைய நடவடிக்கைகள் இருந்தன என்றும் கொள்ள வேண்டும். ஆனால், அவர் வேறுபாடின்றி அளவுக்கு மீறிய கொடையுள்ளம் உடையவராயுமிருந்தார். அவர் கி.பி. 1489-ல் இறந்தார். அப்போது பிரபுக்கள் பாத்ஷாவின் உயிரோடிருக்கும் ஒரு மகனை இரண்டாம் நாஸிர்உதீன் மஹ்முத்ஷா என்ற பட்டப் பெயருடன் சிம்மாசனத்தில் ஏற்றினர். ஆனால், அவர் கி பி 1490-ல் பேராசைப் பிடித்த சிதிபத்ர் என்ற அபிசீனியரால் ஒழிக்கப்பட்டார். சிதிபத்ர் ஷாம்ஸ்-உதீன் அபுநஸர் முஸபர்ஷா என்ற பட்டப் பெயருடன் சிம்மாசனத்தைக் கைப்பற்றினார். இந்த அபிசீனியரின் ஆட்சி கொடுமை மிக்கதாயும், அமைதிக் குலைவுடையதாயும் மூன்று ஆண்டுகளுக்கு மேல் சில மாதங்கள் வரை நடைபெற்றது. அந்த ஆட்சி படை வீரர்களிடையேயும், அதிகாரிகளிடையேயும் பரந்த அதிருப்தியை உண்டாக்கிவிட்டது. பிறப்பால் அராபியரான அவருடைய அறிவு மிக்க அமைச்சரான அலாவுதீன் ஹுஸேனும் அதிருப்தி கொள்ளத் தொடங்கினார். அவர்கள் எல்லாரும் கௌரில் நான்கு மாதங்கள் அபிசீனிய அரசரை முற்றுகை யிட்டனர். அப்போது அவர் உயிர் நீத்தார். பிறகு வங்காளப் பிரபுக்கள் அலாவுதீன் ஹுஸேன் ஷாவை அவருடைய தகுதிக் காகவும் திறமைக்காகவும் (1493-ல்) சிம்மாசனத்தில் ஏற்றினர்.

அலாவுதீன் ஹுஸேன் ஷா பட்டத்துக்கு வந்தது ஒரு புதிய அரச மரபின் ஆட்சித் தொடக்கத்தைக் குறிக்கிறது. அந்த அரச மரபு ஏறக்குறைய அரை நூற்றாண்டு ஆட்சி செலுத்தியது. அந்த அரச மரபைச் சேர்ந்தவர்கள் பெருமைக்குரிய பல்வேறு பயனுள்ள நட வடிக்கைகளை மேற்கொண்டனர். ஹுஸேன் ஷாவின் கல்வெட்டு

கள் பல இருக்கின்றன. அவருடைய நாணயங்களும், அவருடைய மகனுன நுஸ்ரத் ஷாவின் நாணயங்களும் பலவகைப் பட்டவையாயும், எண்ணிக்கையில் மிகுதியாயும் கிடைத்துள்ளன. நல்லறிவும், அனுபவமும் மிக்கவராயிருந்த ஹுசேன்ஷா வங்காளச் சிம்மாசனத்தில் ஏறிய அரசர்களுள் பெரும் புகழ்பெற்ற ஒருவராவார். தம்முடைய இராச்சியத்தின் உள்நாட்டு ஆட்சி முறையில் ஒழுங்கை நிலைநிறுத்துவதற்காக அவர் அரண்மனைக் காவலர்களின் அதிகாரத்தை ஒடுக்கினுர். அவருக்கு முற்பட்ட ஆட்சிக் காலங்களில் அரண்மனைக் காவலர்கள் ரோமில் இருந்த பிரிடோரியன் காவல்காரர்களைப் (Praetorian Guards) போன்றதொரு நிலையில் இருந்தனர். அபிசீனியர்களின் மிகுதிப்பட்டுவந்த செல்வாக்கு ஆட்சிக்குப் பெருந்தொல்லையாக இருந்து வந்தமையின் அபிசீனியர்களைத் தம் இராச்சியத்தை விட்டே விரட்டினுர். கி.பி. 1494-ல் டில்லியின் சிக்கந்தர் லோடியால் இராச்சியத்தை விட்டு விரட்டப்பட்டு வங்காளத்தை நோக்கி ஓடிவந்த ஜான்பூர் நாட்டு ஹுஸேன் ஷா ஷர்க்கியை மரியாதையுடன் வரவேற்றுர். நாடோடியான அந்த அரசர் கி.பி. 1500-ல் இறக்கும்வரை பீஹாரில் பாகல்பூர்க்கு அருகில்[1] இருந்த கோல்காங் (Colgong) என்ற இடத்தில் தங்கி வாழுமாறு அனுமதிக்கப்பட்டார். தம்முடைய தலைநகருக்கருகே ஒழுங்கை நிலைநாட்டிய பிறகு ஹுசேன் ஷா வங்காளத்தின் இழந்த பிரதேசங்களை மீட்பதற்காக முயன்றுர். அவர் தம்முடைய இராச்சியத்தைத் தெற்கே ஒரிஸ்ஸாவின் எல்லைவரை பரவச் செய்தார்; ஜான்பூரின் ஷர்க்கிகளிடமிருந்து மகதத்தைத் திரும்பப் பெற்றுர். அஸ்ஸாம் பகுதியில் அஹோம் இராச்சியத்தின்மீது படையெடுத்தார். 1498-ல் கோச் பீஹாரில் (Koch Bihar) இருந்த காமடாபூரைக் கைப்பற்றினுர். அஸ்ஸாம் மீண்டும் அதனுடைய பழைய அரசரால் கைப்பற்றிக் கொள்ளப் பட்டது. பிறகு ஹுசேன் ஷா தம்முடைய இராச்சியத்தின் எல்லைகளைப் பாதுகாப்பதில் ஈடுபட்டார். இராச்சியத்தின் பல்வேறு பாகங்களிலும் மசூதிகளையும், அறக்கூழ்ச் சாலைகளையும் கட்டினுர். அவற்றை வைத்திருப்பதற்காகப் போதிய அறக்கட்டளைகளை ஏற்படுத்தினுர். அவர் 1518-ல் இறந்தார். அவருக்குப் பின் அவருடைய மூத்த மகன் நாஸிப்கான், நாஸிர் உதீன் நுஸ்ரத் ஷா என்ற பட்டப் பெயருடன் பட்டத்திற்கு வந்தார். இந்தியாவின் மற்றப் பல முஸ்லிம் அரசர்களைப்போல அன்றி, நுஸ்ரத் ஷா தம்முடைய சகோதரர்களிடம் மிகு தாராளமாயிருந்தார். அவர்களுடைய மரபுரிமைகளை இரட்டிப்பாக்கினுர். அவர் திர்ஹுத்தின் மீது (Tirhut) படையெடுத்துச் சென்று, அதன் அரசரைக்

[1] கோல்காங்கில் பல முஸ்லிம் கல்லறைகள் உள்ளன. அவற்றுள் ஒன்று ஹுஸேன்ஷா ஷர்க்கியினுடையது என்று கருதப்படுகிறது.

கொன்றார். அங்கே அதன் ஆட்சியைக் கவனித்துக் கொள்வதற்காக அவருடைய சொந்த மைத்துனர்களான அலாவுதீன், மக்தூமி, ஆலம் ஆகியோரை நியமித்தார். அவர் கலை, கட்டடக்கலை, இலக்கியம் இவற்றின் புரவலராக இருந்தார். அவர் கௌரில் 'பெரிய பொன் மசூதி' என்னும் பாரா சோனு மஸ்ஜித் (Bara Sona Masjid), கதம் ரசூல் (நபியின் பாதம்) என்ற புகழ்பெற்ற இரு மசூதிகளைக் கட்டுவித்தார். அவருடைய துணையின்கீழ் மகாபாரதத்தின் வங்காள மொழிபெயர்ப்புச் செய்யப்பட்டது. அவர் கடைசியில் 1533-ல் அரண்மனைப் பேடிகளால் கொலை செய்யப்பட்டார். அவருக்குப் பின்பு அவருடைய மகன் அலாவுதீன் ஃபிருஸ் ஷா பட்டத்திற்கு வந்தார். அவரும் மூன்று மாதங்கள் ஆட்சி செலுத்திய பிறகு அவருடைய மாமனை கியாஸ் உதீன் மஹ்மூத் ஷாவால் கொல்லப்பட்டார். ஷெர்கான் சூரினால் வங்காளத்திலிருந்து துரத்தப்பட்ட ஹூசேன் ஷாஹீ, அரசமரபில் கடைசி அரசர் கியாஸ் உதீன் மஹ்மூத் ஷாவேயாவார்.

## 3. வடக்கு மேற்கு இந்திய மாகாணங்களில் சுதந்திர சுல்தானியங்கள்

### அ. ஜான்பூர்

துக்ளக் குடும்பத்தைச் சேர்ந்த ஃபிருஸால், தம்முடைய ஒன்று விட்ட சகோதரரும், புரவலருமான முகமது ஜானுவின் நினைவை அழியாமல் செய்வதற்காகக் கட்டப்பட்டதே ஜான்பூர் நகரமாகும். தைமூரின் படையெடுப்பை அடுத்து ஏற்பட்ட குழப்பக் காலத்தின்போது, எப்படி காஜா ஜஹான் டில்லிச் சுல்தானியத்துக்கு அடங்கியிருப்பதை விடுத்துத் தம்முடைய பட்டப்பெயரான 'மலிக்-உஷ்-ஷர்க்' என்றபெயரை ஒட்டி ஷர்க்கி அரசமரபு என்று அழைக்கப்படுகிற சுதந்திர ஆட்சியாளரை உடைய அரசமரபை ஜான்பூரில் தோற்றுவித்தார் என்பதை நாம் முன்பே பார்த்திருக்கிறோம். அவர் 1399-ல் தம்முடைய தத்துப் பிள்ளையான மலிக்கரன்ஃபுல் என்பவருக்கு ஆட்சியுரிமையைவிட்டு விட்டு இறந்தார். மலிக்கரன்ஃபுல் (Malik Qaranful) முபாரக் ஷா ஷர்க்கி என்ற பட்டப்பெயரைப் புனைந்துகொண்டார். குறுகிய ஆட்சிக்குப் பிறகு முபாரக் ஷா 1402-ல் இறந்தார். அவருக்குப் பின்பு அவருடைய தம்பி இப்ராகீம் ஷா ஷர்க்கி ஆட்சிக்கு வந்தார். இப்ராகீம் சுமார் முப்பத்து நான்கு ஆண்டுகள் அரசாண்டார். ஷர்க்கி அரசமரபின் மிகச் சிறந்த திறமை படைத்த அரசராக இருந்தார். பண்பாடு உடைய மனிதரான அவர் கலையையும் இலக்கியத்தையும் ஆதரித்தார், அதன் பயனாக

ஜான்பூர் முஸ்லிம் கல்விக்கு ஒரு முக்கியமான இடமாக விளங்கலாயிற்று. அந் நகரம் அழகான கட்டடங்களினால் அலங் கரிக்கப்பட்டிருந்தது. அவற்றில் இந்துப் பாணி காணப்பட்டது. வழக்கமாகக் காணப்படும் சிறுகூடங்கள் (Minarets) இல்லாத மசூதிகளை உடைய கட்டடங்கள் அந் நகரில் இருந்தன. இப்போது ஜான்பூர்க் கட்டடக்கலையின் ஒளிமிக்க மாதிரியாகத் திகழ்ந்து கொண்டிருக்கும் புகழ்பெற்ற கடாலா மஸ்ஜித் கி.பி. 1408-ல் கட்டி முடிக்கப்பட்டது. இப்ராகிம் 1436-ல் இறந்தார். அவருக்குப் பின் அவருடைய மகன் மஹ்மூத் ஷா ஆட்சிக்கு வந்தார். புதிய அரசர் சுனர் மாவட்டத்தின் பெரும் பகுதியை இணைத்துக்கொண்டார். ஆனால், கால்பிக்கு (Kalpi) எதிராக அவர் செய்த படையெடுப்பு தோல்வியில் முடிந்தது. டில்லியைக் கைப்பற்றுவதற்காகச் செய்த முயற்சியில் அவர் புகலூல் லோடியால் தோற்கடிக்கப்பட்டு ஜான்பூருக்குத் திரும்பிச் செல்லுமாறு வற்புறுத்தப்பட்டார். மஹ்மூத் கி.பி. 1457-ல் இறந்தார். அப்போது அவருடைய மகன் பீக்கன் (Bhikhan) முகமது ஷா என்ற பட்டப் பெயருடன் சிம்மாசனம் ஏறினர். ஆனல், அந்த அரசரின் முட்டாள்தனமான நடத்தை பிரபுக் களுக்கும், அவருடைய சொந்த உறவினர்களுக்கும் பெருஞ் சினத்தை உண்டாக்கிவிட்டது. அதனல் அவர்கள் அவரைக் கொன்றுவிட்டு அவருடைய சகோதரரான ஹுஸேன் ஷாவைச் சிம்மாசனத்தில் ஏற்றினர். பட்டத்துக்கு வந்தவுடனேயே ஹுஷேன் ஷா 1458-ல் டில்லியின் புகலூல் லோடியுடன் நாலாண்டு உடன்படிக்கை ஒன்றைச் செய்துகொண்டார். இந்தக் காலத்தை அவர் திர்ஹுத்தின் சுதந்திர ஜமீன்தார்களை ஒடுக்குவதிலும், ஒரிஸ்ஸாவில் கொள்ளையடிக்கும் படையெடுப்பு ஒன்றை நடத்திச் செல்வதிலும் பயன்படுத்தினர். ஒரிஸ்ஸாவின் அரசர் ஒரு பெரும் நிதியத்தைக் கொடுத்துச் சமாதானத்தை விலைக்கு வாங்கினர். ஹுஸேன் ஷா 1466-ல் குவாலியர்க் கோட்டையைப் பிடிப்பதற்காகப் படையுடன் சென்றார். ஆனல், அதைத் தகர்க்க முடியாமல் திரும்பினர். அப்போது அதன் அரச ராகிய மான்சிங்கு பெரிய இழப்பீட்டை அவருக்குச் செலுத்தினர். இந்தத் தொடக்க வெற்றிகளுக்குப் பிறகு அதிர்ஷ்டம் அவருக்கு எதிராகத் திரும்பியது. அவர் புகலூல் லோடியிடம் மீண்டும் செய்த போரின்போது, புகலூல் லோடி அவரை பீஹாருக்குத் துரத்தியடித்து விட்டு, ஜான்பூர் இராச்சியத்தை டில்லியுடன் சேர்த்துக் கொண்டார். புகலூல் தம்முடைய மகனை பார்பக்கை ஜான்பூரின் கவர்னராக நியமித்து அரசப் பட்டப் பெயரைச் சூட்டிக்கொள்ளவும், நாணயங்கள் அச்சடித்துக்கொள்ளவும் அனுமதித்தார். இவ்வாறு ஜான்பூரின் சுதந்திரம் முடிவுற்றது.

ஜான்பூரில் எண்பத்தைந்து ஆண்டுகள் நீடித்திருந்த ஷர்க்கி ஆட்சியின் காலத்தில் செல்வச் செழிப்பு மிகுந்திருந்தது. கட்டடக்கலை வளர்ச்சியுற்றது. உயர்ந்த வகையான பண்பாடு உருவாயிற்று. அது இப்ராகீமின் ஆட்சிக் காலத்தில் 'இந்தியாவின் ஷிராஜ்' (Shiraz) என்ற பட்டத்தை அந்த நகருக்கு ஈட்டித் தந்தது,

## ஆ. மாளவம்

கி.பி. 1305-ல் அலாவுதீன் கில்ஜியினால் இணைத்துக்கொள்ளப் பட்ட மாளவம் சுதந்திரம் அடையும்வரை மற்ற மாகாணங் களைப் போலவே தைமூரின் படையெடுப்புக்குப் பின்பு நேர்ந்த குழப்பக் காலத்தில் டில்லியின் ஆணையின்கீழ் முஸ்லிம் தலைவர் களால் ஆளப்பட்டு வந்தது. துக்ளக்கின் குடும்பத்தைச் சேர்ந்த ஃபிருஸால் மாளவத்தின் கவர்னராக நியமிக்கப்பட்ட திலாவர் கான் கூரி (Dilawar Khan Ghuri) 1401-ல் எல்லாச் செயல்முறை களிலும் டில்லிச் சுல்தானியத்திலிருந்து விடுதலை பெற்றவராகத் தம்மை ஆக்கிக்கொண்டார். எனினும், அவர் முறையாகச் சுல் தானியத்திற்கு அடங்கியிருப்பதைத் துறக்கவோ, 'அரசரின் நடையைப்' புனைந்து கொள்ளவோ இல்லை. 1406-ல் அவருடைய பேராசை மிக்க மகன் அல்ப்கான், ஹூஷங்கு ஷா (Hushang Shah) என்ற பட்டப் பெயருடன் சிம்மாசனம் ஏறினார். புதிய அரசர் அமைதியும் ஓய்வும் கொள்ளாத உணர்ச்சியுடையவராயிருந்தார். துணிகரமான புதிய முயற்சிகளிலும், போர்களிலும் ஆனந்தம் அடைந்தார். தம்முடைய ஆட்சிக் காலம் முழுவதிலும் இடை விடாது அவற்றிலே ஈடுபட்டிருந்தார். 1422-ல் அவர் ஒரு வணி கரைப் போல வேடம் புனைந்துகொண்டு தம் தலைநகரை விட்டு ஒரிஸ்ஸாவுக்குச் சென்று அங்கே ஐயங்கொள்ளாத அந்த இராச்சி யத்து அரசரைத் திடீரென்று தாக்கினார். அந்த அரசர் அவரைத் திரும்பிப் போகச் சொல்லுவதற்காக எழுபத்தைந்து யானைகளை இலஞ்சமாகக் கொடுக்க நேரிட்டது. மாளவத்துக்குத் (Malwa) திரும்பும் வழியில் ஹூஷங்கு கேர்லாவைக் கைப்பற்றி, அதன் அரசரைச் சிறைப்படுத்திக் கொண்டுவந்தார். அவர் டில்லி, ஜான்பூர், குஜராத்து ஆகியவற்றின் சுல்தான்களுடன் போரிட வேண்டி நேர்ந்தது. பாமினி இராச்சியத்தின் சிற்றரசாக முன்பு இருந்த கேர்லாவைக் கைப்பற்றியதால் சினங்கொண்டிருந்த அகமது ஷா பாமினியுடன் அவர் ஒரு முறை போரிட்டுத் தம் பலத்தை அறிந்துகொள்ளவும் நேரிட்டது. ஆனால், அவர் செய்த போர்களில் பெரும்பாலனவை தோல்விகளிலும், அவருக்குப் பேரிழப்பிலும் முடிந்தன. 1435 ஜூலை ஆறும் நாள் அவர்

இறந்தார். அப்போது அவருடைய மூத்த மகனை கஜ்னி கான், முகமதுஷா என்ற பட்டப் பெயருடன் மாளவத்தின் அரசராக அறிவிக்கப்பட்டார். ஆனால், இந்தப் புதிய ஆட்சியாளர் அரசாங் கத்தின் விவகாரங்களில் சிறிதும் இலட்சியம் இல்லாதவராய் இருந்தார். அவருடைய மந்திரியான மஹ்மூத் கான் 1436 மே மாதத்தில் சிம்மாசனத்தை வலிந்து பற்றிக்கொண்டார். இவ்வாறு மாளவத்தில் கில்ஜி சுல்தான்களின் அரச மரபு நிறுவப் பட்டது. மாளவத்தின் முகமது ஷாவின் ஒரு மகனை மஸூத் கானுக்காகப் பரிந்து வாதாடிய குஜராத்தின் முதலாம் அகமது ஷாவின் எதிர்ப்பையும், பிரபுக்களின் சிறு எதிர்ப்பையும் மஹ்மூத் தகர்த்தெறிந்தார்.

மஹ்மூத் கல்ஜி ஒரு தீரம் மிக்க போர் வீரர் ஆவார். அவர் குஜராத்தின் முதலாம் அகமது ஷா, டில்லியின் முகமது ஷா, மூன்றும் முகமது ஷா, பாமினி, மேவாரின் ராணு கும்பா ஆகியோரை எதிர்த்துப் போரிட்டார். அவர் மேவார் ராணுவுடன் செய்த போரின் முடிவு தெளிவில்லாமல் இருந்தது. இரண்டு தரபி னரும் தங்களுக்கே வெற்றி என்று கூறிக்கொண்டது வியப்புக் குரியதாய் உள்ளது. மேவார் ராணு 'வெற்றிக்கோபுரம்' ஒன்றைச் சித்தூரில் கட்டியபோது, மாளவத்தின் சுல்தான் தம் வெற்றியைக் கொண்டாடுவதற்காக ஏழடுக்கு மாளிகை ஒன்றை மாண்டுவில் எழுப்பினார். மஹ்மூத் கல்ஜி மாளவத்தின் முஸ்லிம் அரசர்களுள் மிகு திறமை வாய்ந்தவர் என்பதில் ஐயமில்லை. அவர் தம்முடைய இராச்சியத்தின் எல்லைகளைத் தெற்கே சாத்பூரா மலைத்தொடர் வரையிலும், மேற்கே குஜராத்தின் எல்லை வரையிலும், கிழக்கே பந்தேல் கண்டு வரையிலும், வடக்கே மேவார், ஹரௌத்தி வரையிலும் பரப்பினார். அவருடைய புகழ் இந்தியாவுக்கு வெளி யிலும் பரவியது. எகிப்தின் காலிஃபா அவருடைய பதவியை ஏற்றுக்கொண்டார். அவர் சுல்தான் அபு-சயீதிடமிருந்து ஒரு தூதுக்குழு வந்ததை மகிழ்ச்சியுடன் வரவேற்றார். அவர் நேர் மையும் சுறுசுறுப்பும் மிக்க ஆட்சியாளராயிருந்தார். ஃபெரிஷ்டா (Ferishta) 'சுல்தான் மஹ்மூது மரியாதை மிக்கவராயும் வீரமிக்க வராயும் விளங்கினார். அவருடைய ஆட்சியில் இந்துக்களும் முகம் மதியர்களும் மகிழ்ச்சியாயிருந்தனர். அவர்கள் ஒருவருக்கொருவர் நட்புறவு வைத்துக்கொண்டிருந்தனர். போர்க்களத்திற்குப் போகாமல் ஓர் ஆண்டுக்கூடக் கழிந்ததில்லை. பாசறையே அவருடைய வீடாகவும், போர்க்களமே அவர் ஓய்வெடுத்துக் கொள்ளும் இடமாகவும் இருந்தன. அவருடைய ஓய்வு நேரம் உலகத்தின் வெவ்வேறு அரசர்களின் அரசவைகளில் நிகழ்ந்த நிகழ்ச்சிகளையும் வரலாறுகளையும் படிப்பதிலும் கேட்பதிலும்

செலவிடப்பட்டன.' ஏறக்குறைய முப்பத்து நான்கு ஆண்டுகள் ஆட்சிசெய்த பிறகு அவர் 1469 ஜூன் முதல் நாள் தம்முடைய அறுபத்தெட்டாம் வயதில் இறந்தார்.

மஹ்மூதுவின் மூத்த மகனுன கியாஸ் உதீன் தந்தை இறந்து இரண்டு நாள்களுக்குப் பிறகு மாளவத்தின் சிம்மாசனத்தில் ஏறினர். அவர் அமைதியின் காதலராயிருந்தார். தெய்வ பக்தியுள்ள முஸ்லிமாக, 'குறிப்பாக அவர் நாள்தோறும் செய்து வந்த தொழுகைகளில்' பக்தி மிகுந்தவராக இருந்தார். அவர் எல்லா வகையான மதுவகைகளையும் விலக்கப்பட்ட உணவுப்பொருள்களையும் விரும்பாதவராய் இருந்தார். ஆனல், அவருடைய இறுதிக் காலம் அவருடைய இரண்டு புதல்வர்களான அப்துல் காதீர் நாஸிர் உதீன், ஷுஜா அத் கான் அலாவுதீன் என்பவர்களுக்குள் ஏற்பட்ட போர்களினல் மகிழ்ச்சி இல்லாததாய் இருந்தது. இறுதியில், முன்னவர் கி.பி. 1500-ல் சிம்மாசனத்தைக் கைப்பற்றினர். நாஸிர் உதீன் கி.பி. 1510-ல் இறக்கும்வரை தம்முடைய அதிகாரத்தை மிகவும் தவமுன வகையில் பயன்படுத்தலானர்.

பிறகு அவருடைய இரண்டாவது மகன் இரண்டாம் மஹ்மூது என்ற பட்டப் பெயருடன் சிம்மாசனம் ஏறினர். முஸ்லிம் பிரபுக்களின் செல்வாக்கை ஒழிப்பதற்காக இரண்டாம் மஹ்மூது சந்தேரியின் வலிமைமிக்க இராசபுத்திரத் தலைவரான மேதினிராயை அமைச்சர் பதவியில் அமர்த்திக்கொண்டார். மேதினி ராய் விரைவில் அரசாங்கத்தில் பெருஞ் செல்வாக்கை அடைந்து, நம்பிக்கையும் பொறுப்பும் மிகுந்த பதவிகளில் இந்துக்களை நியமித்தார். இது மாளவத்தின் பிரபுக்களின் பொறுமையைக் கிளப்பி விட்டது. அதனல் அவர்கள் குஜராத்தின் சுல்தான் இரண்டாம் முஸப்பர் ஷாவின் உதவியைக் கொண்டு இராசபுத்திர அமைச்சரை அகற்றினர். மேதினி ராய் சித்தூரின் ராணு சங்காவின் உதவியைக் கொண்டு இரண்டாம் மஹ்மூதுவையே தோற்கடித்தார். வெற்றியுற்ற இராசபுத்திரர்களால் மாளவத்தின் சுல்தான் சிறைப்பிடிக்கப்பட்டார். எனினும், ராணு சங்கா இராசபுத்திர இனத்தின் சிறப்பியல்புக்கு ஏற்றவாறு அவரை மிகவும் பெருந்தன்மையுடன் நடத்தினர். தோற்கடிக்கப்பட்ட அந்த எதிரிக்கே மீண்டும் இராச்சியத்தைக் கொடுத்து விட்டார். ஆனல், இதற்குள், மாளவ இராச்சியத்தின் அதிகாரப் பரப்பு மிகவும் குறைந்துவிட்டது. சுதந்திரமாயிருக்கக் கூடுமான நாள்களும் ஒரு சிலவாகவே இருந்தன. ராணு சங்காவுக்குப் பின் பட்டத்துக்கு வந்த ராணு ரதன்சிங்கின் இராச்சியப் பகுதிகள் மீது திடீர்த்தாக்குதல் செய்து அவருடைய பகைக்கு ஆளானர்.

ராணு பழிக்குப் பழி வாங்க வேண்டும் என்பதற்காக மாளவத்தின்மீது படையெடுத்தார். குஜராத்தின் சுல்தான் பகதூர் ஷாவின் தம்பியும், குஜராத்தின் சிம்மாசனத்திற்குப் போட்டியிட்டுக்கொண்டிருந்தவருமான சூந்த் கானுக்குப் புகலிடம் கொடுத்து இரண்டாம் மஹமூது குஜராத் சுல்தானின் வெறுப்பைப் பெற்றார். அதனால் பகதூர் ஷா 1531 மார்ச்சு 17ஆம் தேதி மாண்டூவைக் கைப்பற்றினார். இவ்வாறு மாளவத்தின் சுதந்திரம் அடியோடு அழிந்தது. பிற்காலத்தில் சிறிது காலம் ஹுமாயூனின் வசத்திற்கு மாறும்வரை மாளவம் குஜராத்தின் பகதூர் ஷாவின் ஆட்சியின் கீழேயே இருந்துவந்தது. ஏறக்குறைய 1535-ல் மாளவத்தின் கில்ஜி சுல்தான்களின் முன்னாள் அதிகாரியான மல்லூகான், காதிர்ஷா என்ற பட்டப் பெயருடன் மாளவத்தில் ஒரு சுதந்திர அரசை நிறுவினார். ஆனால், 1542-ல் அவர் ஆப்கானிய அரசரான ஷெர்ஷாவால் துரத்தப்பட்டார். ஆப்கானிய அரசாங்கத்து அரசப் பிரதிநிதிகளால் ஆளப்பட்டு வந்த பிறகு கி.பி. 1561–62-ல் மாளவம் பாஸ் பகதூரிடமிருந்து முகலாயத் தளபதிகளால் வெல்லப்பட்டது.

### இ. குஜராத்து

வளமான துறைமுகங்களான காம்பே, சூரத், புரோச் ஆகியவற்றின்மூலம் நடந்த இடைவிடாத வாணிகத்தின்மூலம் சிறப்பாகப் பெருஞ் செல்வ வளம் பெற்ற குஜராத்து மாகாணம் அடிக்கடி அயலாரின் படையெடுப்புகளைத் தானே வரவழைத்துக் கொண்டது. கி.பி. 1297-ல் அலாவுதீன் கில்ஜியால் டில்லிச் சுல்தானியத்துடன் இணைத்துக்கொள்ளப்பட்ட குஜராத்து டில்லி சுல்தான்களால் நியமிக்கப்பட்ட முஸ்லிம் கவர்னர்களால் நெடுங்காலமாக ஆளப்பட்டுவந்தது. ஆனால், 1391-ல் துக்ளக் குடும்பத்தைச் சேர்ந்த ஃபிரூஸின் கடைசி மகனான முகம்மது ஷாவினால் அம் மாகாணக் கவர்னராக நியமிக்கப்பட்ட ஸபர்கான் (இராஜபுத்திரராயிருந்து மதம் மாறிய ஒருவரின் மகன்) 1401-ல் முறையே சுதந்திரமுடையவராகத் தம்மைச் செய்துகொண்டார். 1403-ல் ஸபர் கானின் மகனான தாத்தார் கான், அதிருப்தியடைந்திருந்த சில பிரபுக்களுடன் சேர்ந்து சதி செய்துகொண்டு, தந்தைக்கு எதிராகக் கிளர்ச்சி செய்தார். அசாவல் (Asawal) என்ற இடத்தில் அவர் தம் தந்தையைச் சிறைப்படுத்தி நாஸிர் உதீன் முகம்மது ஷா என்ற பட்டப்பெயருடன் தம்மை அரசராக அறிவித்துக் கொண்டார். அவர் தம்முடைய அதிகாரத்தைப் பரப்பும் நோக்கத்துடன் டில்லிக்குப் படையுடன் சென்றார். ஆனால், அங்கே அவருடைய மாமனும் அரசப் பிரதிநிதியுமாயிருந்த ஷம்ஸ் கானால் கொல்லப்பட்டார். இதனால், ஸபர்கான்

மீண்டும் தம்முடைய சிம்மாசனத்தைப் பெற்றுச் சுல்தான் முஸப்பர்ஷா என்ற பட்டப்பெயரைப் புனைந்துகொள்ளமுடிந்தது. முஸப்பர் ஷா, ஹுஷங்கு ஷாவை எதிர்த்து வெற்றிகரமாகப் போரிட்டுத் 'தார்' (Dhar) என்ற நகரைக் கைப்பற்றினர். 1411-ல் ஜூன் மாதத்தில் அவர் இறந்த பிறகு அவருடைய பேரரும் இளவரசுப் பட்டம் பெற்றிருந்தவருமான அஹமது ஷா சிம்மாசனம் ஏறினர். குஜராத் சுதந்திரத்தின் உண்மையான தந்தை என்று அவர் போற்றப்படுகிறர். பேரளவிற்குத் தீரமும் சக்தியும் பெற்றிருந்த அவர் தம்முடைய முப்பதாண்டு ஆட்சிக் காலம் முழுவதிலும் தம் இராச்சியத்தின் எல்லைகளை விரிவாக்கு வதிலேயே ஈடுபட்டிருந்தார். அவருடைய முன்னோர் இருவரின் ஆட்சிக் காலங்களில் அந்த இராச்சியம் அசாவலுக்கு அருகில் ஒரு சிறிய பிரதேசமாயிருந்தது. மாளவத்தின் சுல்தான், அசீர்கார்த் தலைவர்கள், ராஜபுதனம் மற்றும் அருகிலுள்ள பிரதேசங்களின் தலைவர்கள் இவர்களுடன் அவர் செய்த போர்களில் வெற்றி எப்போதும் அவர் பக்கமாகவே இருந்தது. தம் இராச்சியத்தின் உள் நாட்டு ஆட்சி முறையில் முன்னேற்றம் காண்பதிலும் அவர் தம் கவனத்தைச் செலுத்தினர். ஒருதலைச் சார்பின்றி நீதி வழங்கினர். தம்முடைய ஆட்சியின் முதலாண்டில் அவர் பழைய அசாவல் நகரம் இருந்த இடத்தில் அழகான நகரமாகிய அகமதாபாத்தைக் கட்டித் தம் தலைநகரை அப் புதிய நகருக்கு மாற்றிக்கொண்டார். இன்னும் அந் நகரம் அவருடைய சுவை உணர்வுக்கும், கொடை வண்மைக்கும் எடுத்துக் காட்டாய் விளங்குகிறது. அவரிடமிருந்த ஒரே ஒரு குறை பிற மதங்களைப் பொறுத்துக்கொள்ளாமையாகும். 1442 ஆகஸ்டு 16ஆம் நாள் அவர் இறந்தார். அவருக்குப் பின் பட்டத்துக்கு வந்த அவருடைய மூத்த மகன் முகம்மது ஷா கி.பி. 1451 பிப்ரவரி 10ஆம் தேதியில் இறக்கும்வரை நாட்டை ஆண்டார். பின்பு இரண்டு பலவீனமான அரசர்கள், முகம்மது ஷாவின் மகனை குத்ப்-உதீன் அஹமதும், முகம்மதுவின் சகோதரர் தாவூதும் அரசாண்டனர். தாவூது தம்முடைய தீய பழக்க வழக்கங் களால் பட்டத்துக்கு வந்த சில நாள்களிலேயே பிரபுக்களின் ஆதரவை இழந்தார். அவர்கள் அவரை அகற்றிவிட்டு அவருடைய மருமகனும், அஹமது ஷாவின் பேரனுமான அபுல் பத்கானைப் பேகர்ஹா (Begarha) என்று பொதுவாக அறியப் பட்ட மஹ்முது என்ற பட்டப் பெயருடன் சிம்மாசனத்தில் ஏற்றி வைத்தனர்.

மஹ்முது பேகர்ஹா இதுவரை அரசாண்ட அவரது மரபைச் சார்ந்த அரசர்களுள் மிகச் சிறந்த சுல்தானாக இருந்தார்.

அவருடைய நாட்டின் தலை சிறந்த வரலாற்றாசிரியர் ஒருவர் 'குஜராத் இராச்சியத்திற்குப் புகழும் ஒளியும் கொடுத்தார். அவருக்கு முற்பட்ட குஜராத்து அரசர்களிலும், பிற்பட்ட அரசர்களிலும் கூடத் தலைசிறந்தவராயிருந்தார். நீதியிலும் தாராள குணத்திலும்...இஸ்லாம் சட்டங்களையும், முஸ்லிம்களின் சட்டங்களையும் பரப்புவதிலும், இளமையிலும் நடுப்பருவத்திலும் முதுமையிலும் நீதி வழங்குவதில் ஒரே வகையான அறிவுடைமை படைத்த தீர்ப்பு முறையிலும், அதிகாரம், சக்தி, தீரம், வெற்றி இவற்றிலும் அவர் மிகச் சிறந்த ஒரு முன்மாதிரியாக விளங்கினர்' என்று மொழிந்துள்ளமை இங்குக் கருதத் தக்கது. இளமையிலேயே சிம்மாசனம் ஏறிய அவர், உடனே இராச்சியத்தின் விவகாரங்களைக் கவனிக்கும் பொறுப்பைத் தம் கையிலேயே எடுத்துக்கொண்டார். அவருடைய சகோதரரான ஹசன்கானைச் சிம்மாசனத்தில் ஏற்றுவதற்காகச் சதி செய்திருந்த பகைமை கொண்டிருந்த அரசவையினரை அடக்கி வைத்தார். சொந்த அமைச்சரின் செல்வாக்கினாலும், அந்தப்புரத்துச் செல்வாக்கினாலும் பாதிக்கப்படாமல் நாட்டை ஐம்பத்துமூன்று ஆண்டுகள் தீவிரத்துடன் ஆண்டார். தீரமிக்க போர் வீரராயிருந்த அவர் தம்முடைய எல்லாப் போர்களிலும் வெற்றியை அடைந்தார். மாளவத்தின் மஹ்மூது கில்ஜியால் அடக்குமுறைக்குள்ளாயிருந்த நிஸாம் ஷா பாமினியைக் காப்பாற்றினர். கட்ச் பிரதேசத்தின் சூம்ரா, சோதாத் தலைவர்களைத் தோற்கடித்தார். ஜகத்திலிருந்த (துவாரகா) கடற்கொள்ளைக்காரரை ஒடுக்கினர். வலிமைமிக்க ஜூனகர், சாம்பானீர்க் கோட்டை முகம்மதாபாத் என்று அவரால் பின்பு பெயரிடப்பட்டது. அவர் பெற்ற வெற்றிகளின் பயனாகக் குஜராத்தின் இராச்சியம் அதன் உயர்ந்து பரந்த எல்லைகளை அடைந்துவிட்டது. 'மாண்டூ எல்லைப்பகுதியிலிருந்து ஜூனகர் வழியாகச் சிந்துவின் எல்லைப் பகுதி வரைக்கும், ஜாலோர், நாகௌர் வழியாகச் சிவாலிக் பர்பத் வரைக்கும் பக்லானா வழியாக நாசிக் திரிம்பக் வரைக்கும், புர்ஹான்பூரிலிருந்து தக்காணத்திலிருந்த பீரார், மல்காப்பூர் வரைக்கும் புர்ஹான்பூர்ப் பக்கத்தில் கர்கூன், நருமதை நதி இவை வரைக்கும் கடலின் பக்கத்தில் சௌலின் எல்லைகள் வரைக்கும்' பரவியிருந்தது. தம்முடைய ஆட்சி முடிவின்போது எகிப்து சுல்தானை கன்சவுஹ்-அல்-கௌரியுடன் (Qansauh-al-Ghauri) கூட்டுறவு கொண்டு இந்தியக் கடல்களில் போர்ச்சுகீசியரிடமிருந்து வரும் அதிகாரத்தை அடக்க முயன்றார். 1498-ல் வாஸ்கோடகாமாவினால் நன்னம்பிக்கைமுனை வழி கண்டுபிடிக்கப்பட்டதிலிருந்து ஒரு பத்தாண்டுக்குள் போர்ச்சுகீசியர்கள் முஸ்லிம் வணிகர்களின் இலாபத்துக்கு எதிராகச் செங்கடல், எகிப்து

இவற்றிலிருந்து செய்யும் மிகுந்த இலாபம் தரும் வாசனைப் பொருள் வாணிகத்தைத் தங்களுடைய தனி உரிமையாக ஆக்கிக் கொண்டிருந்தனர். காம்பே, சௌல் போன்ற மேற்கு இந்தியாவின் முக்கியமான கடல் துறைகளிலும் தனி உரிமை கொண்டாடினர். ஜெட்டாவின் கவர்னரான அமீர் ஹுசேன் குர்த் என்பவரின் தலைமையில் வந்த எகிப்திய கப்பற்படையும் குஜராத் அரசவையில் பதவியினைப் பெற்ற துருக்கியரான மலிக் அயாஸ் என்பவரின் தலைமையில் திரண்டிருந்த இந்தியப் படையும் சேர்ந்து 1508-ல் பம்பாய்க்குத் தெற்கே சௌலுக்கு அருகில் போர்ச்சுகீசிய அரசப் பிரதிநிதியான பிரான்செஸ்கோடி அல்மெய்டாவின் மகனை டோம்லோரென்சோவின் தலைமையில் அணி வகுத்திருந்த போர்ச்சுகீசியப் படையைத் தோற்கடித்தன. ஆனால், 1509-ல் டையூவுக்கருகில் போர்ச்சுகீசியர்கள் கூட்டாகச் சேர்ந்திருந்த முஸ்லிம் கடற்படையை நன்றாக முறியடித்து விட்டனர். அதனால், கடற்கரையில் அவர்கள் இழந்திருந்த கப்பல் போக்குவரத்து உரிமையையும் திரும்பப் பெற்றனர். அவர்களுக்கு டையூவில் ஒரு தொழிற்சாலைக்காக மஹ்முது இடம் அளித்தார்.

1511 நவம்பர் 23ஆம் நாள் மஹ்முது பேகர்ஹா இறந்த பிறகு ஆட்சியுரிமை அவருடைய மகன் இரண்டாம் முஸப்பருக்குச் சென்றது. அவர் இராஜபுத்திரர்களுக்கு எதிராக வெற்றி மிக்க போர்களைச் செய்தார்; மாளவத்தின் மஹ்முத் கில்ஜியை மீண்டும் சிம்மாசனத்தில் ஏற்றினார். 1526 ஏப்ரல் ஏழாம் நாள் முஸப்பர் இறந்த பிறகு அவருடைய புதல்வர்களான சிக்கந்தரும், இரண்டாம் நாஸிர்கான் மஹ்முதும் அதே ஆண்டு ஜூலை மாதத்தில் அவருடைய துணிவு மிக்க மகனை பகதூர் சிம்மாசனத்தை உரிமையாகக் கைக்கொள்ளும் வரை சிறப்பில்லாத குறுகிய காலம் ஆட்சி புரிந்து வந்தனர்.

பாட்டனாரைப் போலத் தீரமும், போர்விருப்பும் உடையவராயிருந்த பகதூர் இடைக்கால இந்தியாவின் வரலாற்றில் புகழ் பெற்ற அரசராக விளங்கினார். அவர் மாளவத்தின் இரண்டாம் மஹ்முதைத் தோற்கடித்து அவருடைய இராச்சியத்தை 1531-ல் இணைத்துக்கொண்டதுடன் தம் குடும்பத்தின் பழைய எதிரியான மேவார் ராணாவின் இராச்சியப் பகுதிகளையும் கைப்பற்றிக் கி.பி. 1534-ல் சித்தூர்க் கோட்டையைத் தகர்த்தெறிந்தார். எனினும், அவர் ஹுமாயூனுடன் செய்த போர்களில் ஊழ்வினை அவருக்கு எதிராக இருந்தது. அப் போர்களில் அவர் புதிதாக வெல்லப்பட்ட மாளவ மாகாணத்தை இழந்ததுடன் தம்முடைய

இராச்சியத்தின் பெரும் பகுதியையும் இழக்க நேர்ந்தது. ஆனால், டில்லிப் படைகள் திரும்பிச் சென்றவுடனே பகதூர் தம்முடைய இராச்சியத்தைத் திரும்பக் கைப்பற்றினார். பிறகு, முகலாயர்களுக்கு எதிராகத் தமக்கு உதவிசெய்ய அழைத்தும் உதவி செய்ய முன்வராத போர்ச்சுகீசியர்களைத் துரத்துவதில் தம் கவனத்தைச் செலுத்தினார். போர்ச்சுகீசிய கவர்னராக நுன்ஹோட குன்ஹாவைத் தம்மிடம் வரும்படி வற்புறுத்தி அழைத்ததில் பயனில்லாமல் போகவே, பகதூர் தாமே அவரைப் போய்ப் பார்ப்பதற்காக 1537 பிப்ரவரியில் கப்பலுக்குச் சென்றார். ஆனால், அவர் போர்ச்சுகீசியர்களால் வஞ்சகமாகக் கடலில் மூழ்கடிக்கப்பட்டார். அவருடைய தோழர்களும் கொல்லப்பட்டனர். பகதூரின் இறப்பிற்குப் பின்பு அராஜகமும் குழப்பமும் குஜராத்தில் தலைவிரித்தாடின. அவருக்குப் பின் ஆட்சிக்கு வந்தவர்கள் பலவீனமானவர்களாயும், போட்டியாளரான பிரபுக்கள் கட்சிகளின் கைகளில் வெறும் பொம்மைகளாயும் இருந்தனர். அதனால் குஜராத்து கி. பி. 1572-ல் அக்பரால் எளிதாக முகலாயப் பேரரசுடன் இணைத்துக்கொள்ளப்பட்டுவிட்டது.

## ஈ. காஷ்மீர்

கி.பி. 1315-ல் ஸ்வாத் என்ற இடத்திலிருந்து வந்த முஸ்லிம் துணிகரச் செயல் வீரரான ஷா மீர்ஸா என்பவர் காஷ்மீரின் இந்து இளவரசரின் ஊழியத்தில் நுழைந்தார். அந்த அரசர் விரைவிலேயே இறந்துபோனார். ஷா மீர்ஸா கி.பி. 1339 அல்லது 1346-ல் ஷம்ஸ் உதீன் ஷா என்ற பட்டப்பெயருடன் காஷ்மீர் சிம்மாசனத்தைக் கைப்பற்றினார். தம்முடைய பெயரில் நாணயங்கள் அச்சடிக்கச் செய்தார். குத்பா படிக்கச் செய்தார். புதிதாகப் பெற்ற அதிகாரத்தை அவர் அறிவுடைமையுடன் பயன்படுத்தினார். 1349-ல்[1] இறந்தார். அவருக்குப் பிறகு ஏறக்குறைய அறுபத்து நான்கு ஆண்டுகள் அவருடைய புதல்வர்களான ஜம்ஷீத், அலாவுதீன், ஷிஹாப் உதீன், குத்ப்-உதீன் என்போர்கள் ஆண்டனர். கி.பி. 1394-ல் குத்ப்-உதீன் இறந்த பிறகு அவருடைய மகனை சிக்கந்தர் காஷ்மீரின் சிம்மாசனத்தில் ஏறினார்.

தைமூரின் இந்தியப் படையெடுப்பின்போது ஆட்சியிலிருந்த சிக்கந்தர் தூதுவர்களை அவருடன் பரிவர்த்தனை செய்து கொண்டார். எனினும், அவர் இருவரும் ஒருவரை ஒருவர்

[1] காஷ்மீரத்து முகம்மதிய சுல்தான்களின் வரலாற்று வரிசை குழப்பமிக்கதாய் உள்ளது. அதனால் அவர்களுடைய ஆட்சிக் காலங்கள் ஏறத்தாழச் சரியானவையாகவே கொள்ளப்பட வேண்டும்.

சந்தித்துக் கொள்ளவில்லை. அவர் தம்முடைய கொள்கையைக் கொண்டிருப்போரிடம் தாராள மனதுடையவராயிருந்தார். அதனால் பாரசீகம், அராபியா, மெசபடோமியா ஆகிய இடங்களிலிருந்து கற்றறிந்த பலமுஸ்லிம் அறிஞர்கள் அவருடைய அரசவையை நோக்கி ஓடிவந்தனர். ஆனால், பொதுவாக அவர் பரந்த நோக்கமும் அருட்பண்பும் படைத்தவரல்லர். இருபத்திரண்டு ஆண்டுகளுக்குமேல் ஒன்பது மாதங்கள் ஆட்சி செய்த பிறகு, அவர் கி.பி. 1416-ல் இறந்தார். பிறகு அவருடைய மூத்த மகனை ஆலிஷா சில ஆண்டுகள் ஆட்சி செய்தார். அதன்பின் அவர் தம்முடைய சகோதரரான ஷாஹீகானால் ஒடுக்கப்பட்டார். ஷாஹீகான் கி.பி. 1420 ஜூன் மாதத்தில் ஜெய்ன்-உல்-ஆபிதீன் (Zain-ul-Abidin) என்ற பட்டப் பெயருடன் சிம்மாசனம் ஏறினார்.

ஜெய்ன்-உல்-ஆபிதீன் இரக்கக் குணமுள்ளவராயும், தாராள மனமுடையவராயும், அறிவனுபவங்கள் உடைய ஆட்சியாளராயும் இருந்தார். உள்ளூரில் நிகழும் குற்றங்களுக்குக் கிராமத்தினரைப் பொறுப்புள்ளவராகச் செய்யும் கொள்கையை வலியுறுத்தியதன் மூலம் அவர் தம் இராச்சியத்தில் திருட்டு, வழிப்பறிக்கொள்ளை இவை குறையுமாறு செய்தார். அவர் பொருள்களின் விலைகளை ஒழுங்குபடுத்தினார். மக்களின்மேல் போடப்பட்டிருந்த வரிச் சுமையைக் குறைத்தார். நாணயச் செலாவணியின் மதிப்பை முன்பிருந்ததுபோல் ஆக்கினார். நாணயச் செலாவணி அவருக்கு முற்பட்டவரின் ஆட்சிகளில் பெரிதும் மதிப்பிழந்திருந்தது. அவருடைய பொதுநலப் பணிகள் அவருடைய குடிமக்களுக்குப் பெரும் நன்மைகளைச் செய்தன. அவர் பரந்த மனப்பான்மை உடையவராய் இருந்தார். மற்ற மதக் கொள்கைகளைப் பின்பற்றியோரிடம் போற்றத்தக்க பொறுமையைக் காட்டினார். அவருடைய தந்தையின் ஆட்சிக்காலத்தில் இராச்சியத்தை விட்டு வெளியேறிச் சென்ற பிராமணர்களை மீண்டும் அழைத்துக் கொண்டார். கற்றறிந்த இந்துக்களைத் தம்முடைய கூட்டுறவில் வைத்துக்கொண்டார். ஜெஸியா வரியை ஒழித்தார்; எல்லார்க்கும் முழுமதச் சுதந்திரம் அளித்தார். அவர் தம்முடைய தாய்மொழியைத் தவிர பாரசீகமொழி, இந்தியமொழி, திபேத்து மொழி முதலிய மொழிகளில் நல்ல அறிவு பெற்றிருந்தார். இலக்கியம், ஓவியம், இசை முதலியவற்றை அவர் ஆதரித்தார். அவருடைய தூண்டுதல் முயற்சியால் மகாபாரதமும் ராஜ தரங்கிணியும் வடமொழியிலிருந்து பாரசீக மொழியில் மொழி பெயர்க்கப்பட்டன. பல அராபிய, பாரசீக நூல்கள் இந்தியில் மொழிபெயர்க்கப்பட்டன. இந்தப் பண்புகள் அனைத்தும் அவரிடம் காணப்பட்டமையால், அவர் 'காஷ்மீரின் அக்பர்' என்று

பொருத்தமுற அழைக்கப்படுகிறார். எனினும், அவர் அக்பரோடு தனிக் குண இயல்பின் சில கூறுகளில் வேறுபட்டிருந்தார். அவர் 1470 நவம்பர் அல்லது டிசம்பரில் இறந்தார். அவருக்குப் பின் அவருடைய மகன் ஹைதர் ஷா ஆட்சிக்கு வந்தார்.

காஷ்மீரத்துப் பிற்காலத்துச் சுல்தான்களின் வரலாறு சுவையில்லாததும், முக்கியம் இல்லாததுமாகும். ஜெய்ன்-உல்-ஆபிதீன் இறப்பிற்குப் பிறகு 'நாட்டில் அராஜகம் தோன்றியது. அரசர்கள் பெயரளவிலேயே ஆட்சி செய்தனர். சுயநல முன்னேற்றத்திற்காகவும், கொள்ளையடிப்பதற்காகவும் மேன்மைச் சிறப்பைப் பெற விழைந்த வெவ்வேறு கட்சிகளை இயக்கும் ஓர் அடையாளச் சின்னமாகவே அந்த அரசர்கள் இருந்தனர்.' கி.பி. 1540ஆம் ஆண்டின் முடிவில் ஹுமாயூனின் உறவினரான மீர்ஜா ஹைதர் காஷ்மீரை வென்றார். அவர் கொள்கையளவில் ஹுமாயூனுக்காக அந் நாட்டை ஆண்டார். ஆனால், செயலளவில் 1551 வரை சுதந்திர ஆட்சியாளராகவே இருந்தார். 1551-ல் தங்கள் போர்களையும், சிக்கல்களையும் மீண்டும் மேற்கொண்ட காஷ்மீர் பிரபுக்களால் அவர் கவிழ்க்கப்பட்டார். ஏறத்தாழக் கி.பி. 1555-ல் சக்குகள் (Chakks) காஷ்மீரச் சிம்மாசனத்தைக் கைப்பற்றினர். ஆனால், அவர்கள் தொல்லைகளுக்குள்ளாகியிருந்த அந்த இராச்சியத்திற்கு நிவாரணமளிக்க முடியவில்லை. அது அக்பர் காலத்தில் முகலாயப் பேரரசுடன் இணைத்துக்கொள்ளப் பட்டது.

## 4. தென்னிந்தியச் சுதந்திரச் சுல்தானியங்கள்

### அ. காந்தேஷ்

காந்தேஷ் தாப்தி நதிச் சமவெளியில் மகமது பின் துக்ளக்கின் பேரரசின் ஒரு மாகாணமாக இருந்தது. ஃபிரூஸ் ஷா அதன் அரசாங்கத்துப் பொறுப்பை அவருடைய சொந்த விஷயங்களைக் கவனிப்பவருள் ஒருவரான மலிக் ராஜா பாரூக்கியிடம் ஒப்படைத்தார். ராஜா பாரூக்கியின் முன்னோர்கள் அலாவுதீன் கில்ஜி, மகமதுபின் துக்ளக்கின் ஆட்சிக் காலங்களில் டில்லி அரசவையின் மதிப்பு மிக்க பிரபுக்களாய் இருந்தனர். ஃபிரூஸ் ஷாவின் மரணத்தைத் தொடர்ந்து ஏற்பட்ட குழப்பக் காலத்தில் மலிக் ராஜா அவருடைய அண்டை நாட்டினரான மாளவத்தின் திலாவர்கானின் உதாரணத்தைப் பின்பற்றி, டில்லிச் சுல்தானியத்திலிருந்து விடுதலை பெற்றுவிட்டதாக அறிவித்தார். பல போர்களில் அவர் குஜராத்தின் முதலாம் முஸப்பர் ஷாவினால் தோற்கடிக்கப்பட்டார். சாந்த மனவியல்பைப் பெற்றிருந்தவரான அவர் அவருடைய குடிமக்களையும், முகம்மதியர்களையும் இந்துக்

களையும் அன்புடனும், கண்ணோட்டத்துடனும் நடத்தினார். அவர் 1399 ஏப்ரல் 29ஆம் நாள் இறந்தார். உடனே அவருடைய மகன் மலிக் நஸீர் தம்முடைய சகோதரரான ஹஸனை அடக்கி விட்டுக் காந்தேஷின் சர்வாதிகாரியாகத் தம்மை ஆக்கிக் கொண்டார். புதிய சுல்தான் இந்துத் தலைவரிடமிருந்து ஆசீர் கார்க் கோட்டையைப் பிடித்துக்கொண்டார். ஆனால், அவர் நந்துர்பாரைத் தாக்கியபோது குஜராத்தின் சுல்தானான அகமது ஷா அவரைத்தோற்கடித்துத் தம்மிடம் பற்றுடையவராகஇருப்ப தாகச் சத்தியம் செய்யும்படி வற்புறுத்தினார். மலிக் நஸிர் பாமினி அரச மரபைச் சேர்ந்த அலாவுதீன் அஹமது என்ற பெயருடைய தம்முடைய மருமகனை எதிர்த்துச் செய்த போர் அவருக்கே பெருங் கேடாய் முடிந்தது. அவர் 1437-38-ல் இறந்தார். பிறகு அவருடைய மகன் முதலாம் ஆதில் கானும் (1438-41) பேரன் முதலாம் முபாரக் கானும் (1441-1457) குறிப்பிடத் தக்க நிகழ்ச்சி ஒன்றும் இல்லாத ஆட்சிகளைச் செய்த பிறகு, காந்தேஷின் சிம்மாசனம் முபாரக் கானின் மகனான இரண்டாம் ஆதில்கானுக்கு உரிமையாயிற்று. அவர் திறமையும் தீவிரமும் உடைய ஆட்சி யாளராக இருந்தார். தம்முடைய இராச்சியத்தில் ஆட்சிமுறை ஒழுங்கை மீண்டும் நிலைநாட்டத் தீவிரமாக முயன்றார். தம் இராச்சியத்தின் அதிகாரத்தைக் கோந்த்வனா (Gondwana) வரை பரப்பினார். சந்தானமின்றி அவர் 1501-ல் இறந்த பிறகு, சிம்மாசனம் அவருடைய சகோதரர் தாவூதுக்கு உரியதாயிற்று. அவர் ஏழாண்டுகள் பெருமையில்லாத ஆட்சியை நடத்திய பிறகு, 1508-ல் இறந்தார்; பின்பு அவருடைய மகன் கஜ்னீ கான் பட்டத்துக்கு வந்தார். பட்டத்துக்கு வந்த பத்து நாள்களுக்குள் கஜ்னீ கான் விஷமிடப்பட்டார். அதன் சிம்மாசனத்துக்குப் போட்டியிட்ட இரண்டு உரிமையாளர்களை ஆதரித்த இரண்டு கட்சியினருக்குமிடையே ஏற்பட்ட போர்களால் காந்தேஷ் ஒரே கலவரத்தில் ஆழ்ந்திருந்தது. ஒரு கட்சி அகமத் நகரின் அகமத் நிஸாம் ஷாவினால் ஆதரிக்கப்பட்டது. மற்றது குஜ்ராத்தின் மஹமூத் பேகர்ஹாவினால் ஆதரிக்கப்பட்டது. கடைசியில் இரண்டாவது கட்சி தம்முடைய ஆளை மூன்றாம் ஆதில்கான் என்ற பட்டப் பெயருடன் சிம்மாசனத்தில் ஏற்றி வைத்தது. மூன்றாம் ஆதில்கானின் ஆட்சியிலும் முக்கியமான நிகழ்ச்சி எதுவும் நடை பெறவில்லை. அவர் 1520 ஆகஸ்டு 20 ஆம் நாள் இறந்தார். அவருக்குப் பின்வந்த பலவீனமான ஆட்சியாளர்கள் அதன் வெளி எதிரிகளின் தாக்குதல்களிலிருந்து இராச்சியத்தைக் காப்பாற்றும் திறமையும் துணிவும் இல்லாதவர்களாயிருந்தனர். குஜராத்தைப் போலவே காந்தேஷும் 1601-ல் அக்பரால் அவருடைய இராச்சி யத்துடன் இணைத்துக்கொள்ளப்பட்டுவிட்டது.

## ஆ. பாமினி அரசு

டில்லிச் சுல்தானியத்தின் அழிவில் எழுந்த பல சுதந்திர முஸ்லிம் இராச்சியங்களுள் மிகவும் பலம் வாய்ந்தது தக்காணத்துப் பாமினி இராச்சியமேயாகும். அது மகமது பின் துக்ளக்கின் காலத்தில் அவருடைய அதிகாரத்துக்குப் போட்டியாகத் தோன்றியது. டில்லிச் சுல்தானின் பைத்தியக்காரத்தனமான கொள்கையால் கலகம் செய்யத் தூண்டப்பட்ட தக்காணப் பிரபுக்கள் தௌலதாபாத் கோட்டையைக் கைப்பற்றித் தங்களுள் ஒருவரான இஸ்மாயில் முக் (Ismail Mukh) என்ற ஆப்கானியரை நாஸிர் உதீன் ஷா என்ற பட்டப் பெயருடன் தக்காண அரசராக்கினர். வயது முதிர்ந்தவராயும் வசதிகளை விரும்புபவராயுமிருந்த இஸ்மாயில் முக் அந்தப் பதவிக்குத் தகுதியில்லாதவரானார். விரைவில் அவர் தாமாகவே மிகவும் தகுதி வாய்ந்த ஹஸன் என்பவருக்கு இடம் தந்தார். ஸபர்கான் என்று அழைக்கப்பட்ட ஹஸன் அபுல் முஸப்பர், அலாவுதீன் பகமன் ஷா என்ற பட்டப் பெயருடன் 1347 ஆகஸ்டு 3ஆம் தேதி பிரபுக்களால் அரசராக்கப்பட்டார். மகமது பின் துக்ளக்கின் ஆதரவை டில்லியில் அனுபவித்த கங்கா என்ற பிராமண சோதிடரின் கீழ் ஒரு கீழ்மையான வேலையை முதலில் செய்துவந்தவர் ஹஸன் என்றும், பின்பு அவருடைய இந்துத் தலைவரின் ஆதரவினால் மேன்மையை அடைந்தார் என்றும் பெரிஷ்டா கூறும் கதை பிற்கால முஸ்லிம் வரலாற்றுக் கோப்பாளர்களின் வரலாற்றுச் செய்திகளால் உறுதிப்படவில்லை. நாணயங்களிலும், கல்வெட்டுகளிலும் அதற்கு ஆதரவான சான்றுகள் இல்லை. உண்மையில் ஹஸன் பாரசீகத்தில் இஸ்பந்தியார் என்பவரின் மகனும், புகழ் பெற்ற வீரருமாயிருந்த பகமன் என்பவரின் வழித்தோன்றலாகத் தம்மைக் கூறிக்கொண்டார். அதனால், அவரால் நிறுவப்பட்ட அரச மரபு பாமினி மரபு என்று அழைக்கப்படலாயிற்று.

பட்டத்துக்கு வந்தவுடனே அலாவுதீன் ஹஸன் குல்பர்காவைத் தம்முடைய தலைநகரமாகத் தேர்ந்தெடுத்துக் கொண்டு, ஆசனாபாத் என்று அதற்குப் புதுப்பெயர் சூட்டினார். ஆனால், அலாவுதீன் ஹஸன் எழுச்சியுற்ற காலத்தில் தக்காணத்தில் ஏற்பட்ட அரசியல் குழப்பங்களைச் சாதகமாகப் பயன்படுத்திக் கொள்ளத் தவறாத தக்காண இந்துத் தலைவர்கள் அவருடைய அதிகாரத்துக்குத் தலைவணங்கத் தயாராய் இல்லை. அதனால், அவர் படையெடுத்து வெல்லும் வாழ்க்கை முறையில் இறங்கினார், அதில் வெற்றியும் பெற்றார். 1358 பிப்ரவரி பதினோராம் நாள் அவர் இறந்தபோது அவருடைய இராச்சியம் வடக்கே வயின் கங்கா நதியிலிருந்து தெற்கே கிருஷ்ணா நதி வரையிலும், மேற்கே

தௌலதாபாத்திலிருந்து கிழக்கே இப்போது நிஸாமின் இராச்சியத்திலுள்ள (ஆந்திராவிலுள்ள) போங்கீர் வரையிலும் பரவியிருந்தது. ஆட்சி முறைக்காக அவர் தம்முடைய இராச்சியத்தை நான்கு தரப்கள் அல்லது மாகாணங்களாகப் பிரித்தார். அவை குல்பர்கா, தௌலதாபாத், பீரார், பீடார் என்பவையாகும். ஒவ்வொரு மாகாணமும் ஒவ்வொரு கவர்னரின் பொறுப்பில் இருந்தது. ஒவ்வொரு கவர்னரும் ஒவ்வொரு படையை வைத்திருந்தனர். தங்களுக்குக்கீழ் உள்ள உள்நாட்டுப் படைத்துறைப் பதவிகளுக்கு ஆள்களே நியமித்தனர். மாகாணங்களின் ஆட்சிமுறையின் சிறப்புத் திறமை கிளர்ச்சிகள் ஏற்படுவதைத் தடுத்தது. புர்ஹானி மஆசிர் என்ற நூலின் ஆசிரியர் இந்த சுல்தானேச் 'சுல்தான் முதலாம் அலாவுதீன் ஹஸன் ஷா ஒரு நேர்மையான அரசராயும், தம் குடிமக்களே ஆதரிப்போராயும், பக்தியுள்ளவராயும் இருந்தார். அவரது ஆட்சியில் குடிமக்களும் படையினரும் தங்கள் காலத்தை இன்பமாகவும் திருப்தியுடனும் கழித்து வந்தனர். உண்மையான நம்பிக்கையைப் பரப்பும் வகையில் அவர் பெரிதும் உழைத்தார்' என்று புகழ்ந்துரைக்கிருர்.

அடுத்த சுல்தான் ஹஸனின் மூத்தமகனை முதலாம் முகம்மது ஷா ஆவார். அவரை ஹஸன் தம் சாவுப்படுக்கையில் தம்முடைய வாரிசாக நியமித்திருந்தார். பட்டத்துக்கு வந்தவுடனே முகம்மது ஷா அமைச்சரவை, உள்நாட்டுத் துருப்புகள், மாகாண ஆட்சி போன்ற அரசாங்கத்தின் வெவ்வேறு துறைகளே ஒழுங்கு படுத்திஞர். ஆஞல், அவர் தம் ஆட்சிக்காலம் முழுவதிலும் வாரங்கல், விசயநகர் அரசர்களுக்கு எதிரான போர்களிலேயே முக்கியமாக ஈடுபட்டிருந்தார். அந்த அரசர்கள் விடாப்பிடியாக எதிர்த்துப் போரிட்டுக்கொண்டே இருந்தனர். ஆஞல், அவர்கள் இருவரும் இழப்புகளுக்குப் பின்பு அவர்கள் மானக்கேடு அளிக்கும் வகையில் சமாதானம் செய்துகொள்ள நேரிட்டது.

முகம்மது ஷாவின் வாழ்க்கை முறை கண்டிக்கத்தக்கதாகவே இருந்தது. புர்ஹானி மஆசிர் என்ற நூலின் ஆசிரியர் 'சுல்தான் சமய நெறிக்குப் புறம்பான வாழ்க்கை முறையின் அறிகுறிகளேப் பெற்றிருந்தார். அது அவரை ஆதரவற்றவராக்கிவிட்டது' என்று தெளிவாகக் கூறுகிருர். கி.பி. 1377-ல் முதலாம் முகம்மது ஷா இறந்த பிறகு, அவருடைய மகன் முஜாஹித் ஷா சிம்மாசனம் ஏறிஞர். விசயநகருக்கு எதிராகத் தாமே படையுடன் சென்ருர். ஆஞல், அவர் அந்த நகரைக் கைப்பற்ற முடியவில்லே. அதன் ராயரிடம் சமாதானம் செய்துகொண்டு தம்முடைய தலே நகருக்கே அவர் திரும்பிவிட வேண்டியதாயிற்று. அவருடைய

நெருங்கிய உறவினருள் ஒருவரான தாவூத்கான்[1] செய்த சதிக்குப் பலியானார். தாவூத் சிம்மாசனத்தைக் கைப்பற்றினார். ஆனால், முஜாஹித்தின் மாற்றாந்தாய் மகளான ரூஹ்பர்வர் ஆகா (Ruh Parwar Agha) என்பவளின் தூண்டுதலினால் அவர் ஒரு கொலையாளியால் 1378-ல் கொல்லப்பட்டுப் பழிக்குப் பழி வாங்கப் பட்டார். பிறகு பிரபுக்களும் படையதிகாரிகளும் அலாவுதீன் ஹஷன் பாமினியின் நான்காவது மகனான முகம்மது கான் என்பவரின் மகனான முகம்மது ஷாவைச் சிம்மாசனத்தில் ஏற்றினர்.

தமது முன்னோர்களைப் போலல்லாமல் இரண்டாம் முகம்மது ஷா அமைதியைக் காதலிப்பவராயும், கல்வியில் பெரும் ஈடுபாடு கொண்டவராயும் இருந்தார். அவருடைய ஆட்சியும் வெளியாரின் படையெடுப்புகளால் குழப்பமும் கொந்தளிப்பும் அடையவில்லை. அவர் மசூதிகளைக் கட்டினார். அநாதைகளுக்காக இலவசப் பள்ளிகளை நிறுவினார். கல்வி வல்லோரை வருக வருக என்று ஆசியாவின் எல்லாப் பாகங்களிலிருந்தும் தம் அரசவைக்கு அழைத்தார். ஆனால், அவருடைய இறுதிக்காலம் சிம்மாசனத்தைப் பெறுவதற்காக ஆர்வத்துடனிருந்த அவருடைய புதல்வர்களிடையே ஏற்பட்ட சிக்கல்களினால் அவருக்குப் பெருந் துன்பத்தைத் தந்தது. கி.பி. 1397-ல் அவர் இறந்த பிறகு அவருடைய இரு மக்களாகிய கியாஸ் உதீனும், ஷம்ஸ்-உதீன் தாவூதும் பெருமையில்லாத தொல்லைகள் நிறைந்த ஆட்சியைப் புரிந்தனர். 1397 நவம்பரில் அலாவுதீன் ஹஷன் பாமினியின் பேரனான ஃபிரோஸ் கும்பர்காச் சிம்மாசனத்தைக் கைப்பற்றும் வரை அவர்களுடைய ஆட்சி ஒரு சில மாதங்கள்தான் நீடித்திருந்தது. பிரோஸ் தாஜ்-உதீன் ஃபிரோஸ் ஷா என்ற பட்டப் பெயரைப் புனைந்துகொண்டார்.

புர்ஹானி மஆசிரின் ஆசிரியர் 'ஃபிரோஸ் ஷா தீவிரமுடையவராயும், சக்தி வாய்ந்த முடிமன்னராயுமிருந்தார். கொடுமையையும், பொய்மையையும் அழித்து ஒழிப்பதில் தம்முடைய எல்லாத் திறமையையும் சக்தியையும் செலவிட்டார். ஷேக்குகள் (Shekhs), கல்வி வல்லோர், முனிவர்கள் இவர்களுடைய கூட்டுறவில் அவர் மிகுந்த இன்பம் அடைந்தார்.' ஆனால், சில ஆண்டு ஆட்சிக்குப் பிறகு அவரும் அவர் காலத்திலிருந்த பொதுவான தீச்செயல்களில் ஈடுபட்டுப் பழகிக்கொண்டார். இதைப் பெரிஷ்டாகூடக் கவனித்துள்ளார். அவர் பல்வேறு மொழிகளில் நல்ல அறிவுடையவராய் இருந்தார். வெவ்வேறு

[1] பெரிஷ்டாவின் கருத்துப்படி தாவூத் முஜாஹித்தின் மாமன்; ஆனால் 'புர்ஹானி மஆசிர்' என்ற நூலின் ஆசிரியர் கருத்துப்படி அவர் முஜாஹித்தின் ஒன்று விட்ட சகோதரர்.

பிரதேசங்களைச் சேர்ந்த தம் மனைவியர்களுடன் அவர்களுடைய தாய்மொழியிலேயே தாராளமாய்ப் பேசும் திறமை பெற்றிருந்தார். விசய நகரத்து இராயர்களிடத்தும் வேறு பிற தக்காண அரசர்களிடத்தும் போரிடுவதில் அவர் தம்முடைய அரச மரபினரின் மரபுக் கொள்கையினையே பின்பற்றினார். 1398-லும், 1406-லும் அவர் விசயநகரத்தின்மீது படையெடுத்துச் சென்ற ஒவ்வொரு முறையும் வெற்றி பெற்றார். அதன் இராயரிடமிருந்து பெருநஷ்டஈட்டைப் பெற்றார். தம்முடைய அந்தப்புரத்துக்காக ஒரு விசயநகர இளவரசியைக் கொடுக்க வேண்டும் என்றும் வற்புறுத்திப் பெற்றார். ஆனால், 1420-ல் அவர் முயன்ற மூன்றாவது தாக்குதல் கிருஷ்ணாவின் வடக்கே இருந்த பாங்குல் என்ற இடத்தில் அவரைத் தோல்வியுறச் செய்தது. அவருடைய தலைமைத் தளபதியான மீர் பஜ்ல்-உல்லா இன்ஜூ கொல்லப் பட்டபிறகு, அவர் போர்க்களத்திலிருந்து பின்வாங்க நேரிட்டது. விசய நகரப் படைகள் விரைவில் பாமினி இராச்சியத்தின் தெற்கு, கிழக்கு மாவட்டங்களைக் கைப்பற்றிக் கொண்டன. இந்தத் தோல்வி சுல்தானின் மனத்திலும் உடலிலும் பெரும் புண்ணை ஏற்படுத்திவிட்டது. அதனால், அவர் ஆட்சியை அவருடையஅடிமைகளான ஹூஷியார் ஐன்உல் முல்க், நிஜாம் பீடார்-உல்-முல்க் என்ற இருவர் கையிலும் ஒப்படைத்தார். கடைசியில் அவர் அரசைத் துறந்து தம்முடைய சகோதரன் அகமது என்பவருக்குச் சிம்மாசனத்தை அளித்தார். புர்ஹானி மஆசிரின் ஆசிரியர் கருத்துப்படி அகமத், ஃபிரோஸ்ஷாவை 1422 செப்டம்பரில் கொன்றுவிட்டார். ஆனால், சில ஆசிரியர்கள் பெரிஷ்டாவின் கூற்றுகளை ஆதாரமாகக் கொண்டு ஃபிரோஸ்ஷா இயல்பாகவே இறந்தார் என்று நம்புகின்றனர்.

தம்முடைய சகோதரரின் ஆட்சியில் பாமினிப் படைகளால் அடைந்த பெருஞ்சேதத்திற்குப் பழிக்குப் பழிவாங்குவதற்காக அகமதுஷா விசயநகருக்கு எதிராக ஒரு கடும்போர் தொடுத்தார். பாமினிப் படைவீரர்கள் விசயநகர முற்றுகையால், விசயநகரம் பெருந்துன்பத்துக்குள்ளாகியது. அதனுடைய இராயர் பெரும் இழப்பீடு கொடுத்துச் சமாதான உடன்படிக்கை செய்துகொள்ளும் நெருக்கடிக்காளானார். இச் செய்தி யானைகள்மீது ஏறிச்சென்ற இராயரின் மகனால் அகமதுஷாவின் பாசறையில் அறிவிக்கப்பட்டது. அங்கே இராயரின் மகன் மரியாதைகளுடன் வரவேற்கப்பட்டார். பிறகு படையெடுப்பாளர்கள் தங்கள் நாட்டிற்குத் திரும்பிச் சென்றனர். 1424 அல்லது 1425-ல் அகமதுஷாவின் தளபதி கானிஆஸம் இந்து இராச்சியமான வாரங்கலைத் தாக்கினார். இராச்சியத்தின் அரசரைக் கொன்று பெருஞ்செல்வங்களுடன்

அதன் கோட்டையைப் பிடிப்பதில் வெற்றியுற்றார். இவ்வாறு வாரங்கலின் சுதந்திரம் அடியோடு அழிக்கப்பட்டது. அகமதுஷா மாளவத்தின்மீதும் போர் தொடுத்தார். மாளவத்தின் சுல்தானை ஹூஷங்கு ஷா பெரும் பொருள், ஆள் சேதங்களுடன் தோற்கடிக்கப்பட்டார். அகமது, குஜராத்துச் சுல்தானை முதலாம் அகமது ஷாவுடன் தொடுத்த போர் தோல்வியில் முடிந்தது. ஆனால், இரு பக்கங்களிலுமிருந்த கற்றறிந்தோர், சமய நெறியாளர் இவர்களின் தலையீட்டின் மூலம் இருவரிடையேயும் சமாதான உடன்பாடு ஏற்பட்டது. அவருடைய ஆட்சிக் காலத்தில் கொங்கணத்து இந்துத் தலைவர்கள்கூட பாமினிப் படைகளின் பேராற்றலை உணர்ந்தனர். ஆனால், அகமது 1435 பிப்ரவரியில் நோய் வாய்ப்பட்டு இறந்த பிறகு அந்தப் பெருஞ் சுமை நீங்கியது.

அகமதுஷா தம்முடைய இராச்சியத்தின் தலைநகரைக் குல்பர்காவிலிருந்து பீடாருக்கு மாற்றினார். அழகாக அமைந்திருந்த பீடார். நலமிக்க தட்பவெப்பநிலையைப் பெற்றிருந்தது. அதிகம் கல்வி கற்காதவராயிருப்பினும் சில முஸ்லிம் அறிஞர்களுக்கு அவர் மானியங்கள் அளித்தார். குரோசானிலிருந்த இஸ்பராயீன் என்ற இடத்தைச் சேர்ந்த கவிஞரான ஷேய்க்ஆஜரீ அவருடைய அரசவைக்கு வந்து, பீடாரிலுள்ள அவருடைய அரண்மனையைப் புகழ்ந்து இரண்டு செய்யுள்கள் இயற்றிப் பெரும்பொருளைப் பரிசாகப் பெற்றார். அந்த அரண்மனையின் கதவில் இரண்டு செய்யுள்களை அழகான கையெழுத்தில் வரைந்ததற்காக மௌலானா ஷர்ப்-உதீன் மீஜன் தாரனீகூட 12,000 தங்காக்கள் பரிசு கொடுக்கப்பெற்றார்.

இதற்கிடையே பதவிக்காகவும், செல்வாக்குக்காகவும் ஆசைப்பட்டுப் பிரபுக்கள் எழுப்பிய சிக்கல்கள் அடிக்கடி கடுமையான போர்களாலும் பெரும் ஆட்கொலைகளாலும் முடிவுற்றன. அவை பாமினி இராச்சியத்தின் ஒழுங்கு அமைதியைப் பாதிக்கத் தொடங்கின. தக்காணப் பிரபுக்களுக்கும் அயல்நாட்டுப் பிரபுக்களுக்கும் நிரந்தரமான சச்சரவுகள் இருந்துவந்தன. தக்காணப் பிரபுக்களுடன் ஆப்பிரிக்கப் பிரபுக்களும், முவாலாதுகளும் (ஆப்பிரிக்கத் தந்தையார்க்கும், இந்தியத் தாய்மார்கட்கும் பிறந்தவர்கள்) கூட்டாளிகளாய்ச் சேர்ந்திருந்தனர். அவர்களுக்கு எதிராகத் துருக்கியர், அராபியர், பாரசீகர், முகலாயர் ஆகியோர் அடங்கிய அயல்நாட்டுப் பிரபுக்கள் இருந்தனர். இவர்களுள் பலர் வலிமை மிக்கவராயும், சுறுசுறுப்பான பழக்கங்கள் உடையவராயும் இருந்தமையால், இந்திய நாட்டில் பிறந்தவரினும்

அவர்களே பெரிதும் விரும்பப்பட்டு அரசாங்கத்தின் உயர்ந்த உத்தியோகங்களில் அமர்த்தப்பட்டிருந்தனர். இந்தியப் பிரபுக்கள் அவர்கள்மேல் பொறாமை கொண்டிருந்தனர். இப் பொறாமை மத வேறுபாடுகளால் விரைந்து மிகுதியாகிக்கொண்டே வந்தது. ஏனெனில், தக்காணப் பிரபுக்களில் பெரும்பாலோர் ஸுன்னீ மதப் பிரிவைச் சேர்ந்தவர்கள். அவர்களுடைய எதிர்க் கட்சியில் இருந்த பிரபுக்கள் ஷியா மதப்பிரிவைச் சேர்ந்தவர்கள். இவ்வாறு பிற்காலப் பாமினிய அரசர்களின் வரலாறு சதிகளும் சண்டைகளும் மலிந்த விறுவிறுப்பற்ற கதையாகவே உள்ளது. சதிகளும் சண்டைகளும் இராச்சியத்தின் வலிமைச் சக்தியை உறிஞ்சிக் குடித்துக் கடைசியில் அது சீர்குலையும்படி செய்துவிட்டன.

அகமதுவுக்குப் பிறகு அவருடைய மூத்த மகன் அமைதியுடன் இரண்டாம் அலாவுதீன் என்ற பட்டப் பெயருடன் சிம்மாசனம் ஏறினார். பட்டத்திற்கு வந்தவுடனே அவர் அவருடைய சகோதரர் முஹம்மதுவின் தலைமையில் ஏற்பட்ட ஒரு கிளர்ச்சியை ஒடுக்கினார், எனினும், முகம்மது மன்னிக்கப்பட்டு ரெய்ச்சூர் தோஆப்பின் அரசாங்கம் கொடுக்கப்பட்டார். அங்கே அவர் தம் வாழ்நாளின் மீதிபாகத்தைப்பற்றுறுதியுடன்கழித்தார். அடுத்துக் கொங்கணத்திலிருந்த இந்துத் தலைவர்கள் அடிபணிய வைக்கப் பட்டனர். சங்கமேஷ்வரின் அரசர் தம்முடைய அழகான மகளைப் பாமினி சுல்தானுக்குத் திருமணம் செய்து கொடுத்தார். இது சுல்தானின் முஸ்லிம் மனைவியான மலிகா-கு- ஜாஹானுக்குப் பிடிக்கவில்லை. அவளுடைய வேண்டுகோளின்படி காந்தேஷை ஆண்டு வந்த அவளுடைய தந்தை நஸீர்கான் பீரார்மீது படையெடுத்தார். ஆனால், தௌலதாபாத்தின் கவர்னரும், அயல்நாட்டுப் பிரபுக்களின் தலைவருமான மலிக்-உல்-துஜ்ஜார் கலப் ஹஸன் என்பவர் அவரைத் தோற்கடித்தார். 1443-ல் அலாவுதீன் விசய நகரத்தின்மீது போர் தொடுத்தார். அதன் ராயர் எதிர் காலத்தில் ஒழுங்காகக் கப்பம் கட்டிவிடுவதாக வாக்களித்துச் சமாதான உடன்படிக்கை செய்துகொண்டார். அந்தச் சமயத்தில் விசயநகர இராயர் தம்முடைய படையில் முஸ்லிம் படை வீரர்களைச் சேர்த்துக்கொண்டார் என்றும், தம்முடைய அரசாங்க ஊழியத்தில் சில முஸ்லிம்களைச் சேர்த்துக்கொண்டார் என்றும், அவர்களுடைய தொழுகைக்காகத் தலைநகரில் ஒரு மசூதியை எழுப்பினார் என்றும் பெரிஷ்டா எழுதுகிறார், அந்த மரபின் மற்றச் சுல்தான்களைப் போலவே அலாவுதீன் இஸ்லாம்மீது அடங்காப் பேரார்வம் கொண்டிருந்தார். தம்முடைய கொள்கையைப் பின்பற்றுவோரிடம் மிகுந்த பரிவு காட்டினார். பெரிஷ்டா மூலமும், புர்ஹானி மஆசிரின் ஆசிரியர் மூலமும்

நமக்குக் கீழ்க்கண்ட செய்திகள் தெரியவருகின்றன. 'அவர் மசூதி களை நிறுவினார். பொதுப் பள்ளிகளையும், அற நிலையங்களையும் நிறுவினார். அவற்றுள் தூய்மையும் முழு அமைப்புச் சிறப்பும் உடைய மருத்துவச் சாலையும் ஒன்றாகும். அது அவருடைய தலைநகரான பீடாரில் அவரால் கட்டப்பட்டது. இரண்டு அழகான கிராமங்களை அறக் கட்டளையாகக் கொடுத்து அவற்றி னின்று கிடைக்கும் வருமானம் மருந்துகள், பானங்கள் இவை வாங்குவதற்காகவே பயன்படுத்தப்படவேண்டும் என்று அவர் விதித்தார் ...தெய்வீகச் சட்டத்தின் கட்டளைகளையும், தடை களையும் மிகவும் துல்லியமாகக் கடைப்பிடித்த அவர் தம்முடைய ஆட்சி எல்லையில் சாராயம் போன்ற எல்லா மயக்கந்தரும் மருந்துகளின் பெயர்கள்கூட இருக்கக் கூடாது என்று தடை விதித்தார்......'

அலாவுதீன் 1457 ஏப்ரலில் அமைதியாக உயிர் நீத்தார். அவருக்குப் பின் அவருடைய மூத்த மகன் ஹுமாயூன் பட்டத் துக்கு வந்தார். அவர் 'ஸாலிம்' அல்லது 'கொடுங்கோலன்' என்ற அடை மொழியைப் பெறும் அளவுக்குக் கொடுமை மிக்கவராய் இருந்தார். புர்ஹானி மஆசிரின் ஆசிரியரால் அவருடைய கொடுமைக்குப் பல எடுத்துக்காட்டுகள் கொடுக்கப்பட்டுள்ளன. அவர் 1461 அக்டோபரில் இயற்கை மரணம் அடைந்தார் என்று சில ஆசிரியர்கள் கருதுகின்றனர். ஆனால், இன்னும் அதிகமாக நம்பத்தக்க வரலாற்றாசிரியர்கள் அவர் குடிபோதையில் இருக்கும் போது அவருடைய வேலைக்காரருள் ஒருவனால் கொல்லப்பட்டார் என்று எழுதுகின்றனர். அவருடைய இறப்பு 'சித்திரவதை செய்யும் நகங்களின் பிடியிலிருந்து மக்களை விடுவித்தது. பொது மக்களின் நிம்மதி யுணர்ச்சி அக் காலக் கவிஞரான நஸீர் என்பவரால் இவ்வாறு தெரிவிக்கப்பட்டுள்ளது.

> 'ஹுமாயூன்ஷா இந்த உலகிலிருந்து மறைந்தார், கடவுளே! அவருடைய இறப்பு மக்களுக்கு எவ்வளவு பெரு நன்மையாக உள்ளது! அவர் இறந்த இந் நாளில் உலகமே பெரு மகிழ்ச்சி அடைந்தது. எனவே, உலகப் பெருமகிழ்ச்சியே' அவருடைய இறந்த நாளைக் கொடுத்தது.'

வரலாற்றுக் கோப்பாளர்களின் கருத்துப்படி, ஹுமாயூனின் இளமை மிக்க மகனை நிஜாம் ஷா அடுத்துச் சிம்மாசனம் ஏற்றப் பட்டார். அவருடைய அன்னை அரசியான மக்தூமா ஜஹான், காஜா ஜஹன், காஜா மகமூத் கவான் ஆகியோரின் உதவியுடன் நாட்டின் ஆட்சியைக் கவனித்துவர முற்பட்டாள். ஆனால், அந்தப் பையனுடைய ஆட்சிக் காலத்தில் அந்த இராச்சியத்தைத் தாக்கு

வதற்கான தைரியத்தை ஒரிஸ்ஸா, தெலிங்கானு, அரசர்கள் அடைந்தனர். அவர்கள் பெரும் இழப்புடன் துரத்தியடிக்கப் பட்டனர். ஆனல், விரைவில் இதைவிடப் பேரிடர்ப்பாடு மாளவத்தின் முதலாம் மகமூத் கில்ஜி பாமினியர்களுக்குரிய பகுதி களின்மீது படையெடுத்துப் பீடாரை முற்றுகையிட்டபோது ஏற்பட்டது. குஜராத்தின் சுல்தான் மகமூது பேகர்ஹா பாமினிய சுல்தான் உதவி கேட்டு விடுத்த வேண்டுகோளுக்கிணங்கியபோது தான் பீடார் காப்பாற்றப்பட முடிந்தது. 1463 ஜூலை 30ஆம் நாள் நிஜாம் ஷா மிகவும் திடீரென்று இறந்தார். உடனே அவருடைய ஒன்பது வயதே நிரம்பிய தம்பி மூன்றும் முகம்மது என்ற பட்டப் பெயருடன் சிம்மாசனம் ஏறினர்.

முகம்மது பட்டத்துக்கு வந்த பிறகு இராச்சியத்தில் தனி அதிகாரத்தில் குறிக்கொண்டிருந்த பழைய அமைச்சரான காஜா ஜஹான், அன்னை-அரசியின் செல்வாக்கின் மூலம் கொல்லப் பட்டார்; காலியான அந்தப் பதவிக்கு மகமூது கவான் நியமிக்கப் பட்டார்; அவர் காஜா ஹஹான் என்ற பட்டத்தைப் பெற்றார். அனுபவத் தெளிவு மிக்க திறமையால் அவர் பாமினி அரசாங்கத் திற்கு இடைவிடாத பற்றுறுதியுடன் தொண்டு புரிந்தார். திறமை மிக்க யுத்த தந்திரம், வெற்றிகரமான படைத்துறைப் படையெடுப்புகள் இவற்றின்மூலம் அவர் 'முந்திய அரசர்கள் சாதிக்க முடியாத அளவுக்குப்' பாமினி இராச்சியங்களைச் சிறப்புறச் செய்தார்.

1469-ல் மகமூத் கவான் கொங்கணத்து இந்து அரசரை அடக்குவதற்காகப் படையுடன் சென்றார். அவர் பல கோட்டைகளைப் பிடிப்பதில் வெற்றியுற்றதைக் கண்டு பயங் கொண்ட சங்கமேஸ்வரத்தின் அரசர் அவருடைய பிரதி நிதிகளிடம் கேல்னுக் கோட்டையை ஒப்படைத்தார். புர்ஹானி-இ-ம ஆசிரின் ஆசிரியர் இந்த இணையில்லாத அமைச்சர் பல கோட்டைகளையும், நகரங்களையும் கைப்பற்றினர். கொள்ளை அடித்த பொருள்களைப் பேரளவில் பெற்றார். குதிரைகள், யானைகள், கன்னியர், பெண் அடிமைகள் போன்ற விலை மதிப்பு மிக்க பொருள்களும், விலையுயர்ந்த நகைகளும், முத்துகளும் அந்த அமைச்சரின் கையில் வந்து விழுந்தன' என்று கூறுகிறார். விசயநகரப் பேரரசின் மிகச் சிறந்த துறைமுகங்களுள் ஒன்றான கோவாவையும் அவர் பிடித்தார். இதற்கிடையே பாமினி இராச்சியத்தின் ஒரு தளபதியான நிஸாம்-உல்-முல்க் பர்ஸி ராஜமந்திரி கோட்டைகளைப் பிடித்துவிட்டார். இரண்டு ஆண்டுகளாகத் தொடர்ந்து மழை பெய்யாமையால் 1474ஆம்

ஆண்டில் தக்காணத்தில் கடுமையான பயங்கரப் பஞ்சம் தலை விரித்தாடி நாட்டைப் பாழாக்கியது. அதனுடைய கொடுமை களுக்குப் பலர் பலியாயினர். கடைசியில் மூன்றாவது ஆண்டில் மழை பெய்யத் தொடங்கியபோது நிலத்தை உழுது பயிரிடும் உழவர் ஒருவரும் உயிரோடிருக்கவில்லை.

ஆனால், சுல்தானின் படைத்துறைப் புது முயற்சிகள் சிறிதும் தளராமல் நடைபெற்றுக்கொண்டிருந்தன. 1478 பிப்ரவரியில் முகமது ஒரிஸ்ஸாவின்மீது படையெடுத்து அந் நாட்டைப் பாழ் படுத்தினார். அந் நாட்டின் அரசர் அவருக்குச் சில யானைகளையும் வேறு சில விலைமதிப்புள்ள பொருள்களையும் பரிசாகக் கொடுத்து அவரைத் திரும்பிச் செல்லுமாறு வேண்டிக்கொண்டார்.

அவருடைய ஆட்சியின் பெரு வெற்றி மிக்க படையெடுப்பு காஞ்சிபுரப் படையெடுப்பாகும். அவர் விசயநகருடன் போரிட்டுக்கொண்டிருக்கும்போது (1481 மார்ச்சு 12ஆம் நாள் காஞ்சிபுரம் பக்கம் தம் கவனத்தைத் திருப்பினார். சில மிகப் பழைய கோயில்களைக் கொண்டிருந்தது காஞ்சி. அக் கோயில்கள் அக் காலத்தின் அதிசயமாக இருந்தன. எண்ணமுடியாத பொருள்களும் நகைகளும், விலை மதிப்புமிக்க முத்துகளும் அவற்றுள் மறைத்து வைக்கப்பட்டிருந்தன. மேலும், எண்ணி லாத அடிமைச் சிறுமிகளும் கோயிலுக்குள் ஒளித்து வைக்கப் பட்டிருந்தனர். முற்றுகையிடப்பட்ட படைவீரர்கள் மிகுந்த தீரத்துடன் சமாளித்து நின்றனர். ஆனால், கடைசியில் பாமினி அரசரின் படைகளால் தோற்கடிக்கப்பட்டனர். வெற்றியுற்ற படை வீரர் பெரும்பொருளைக் கொள்ளையடித்துத் தம்முடன் கொண்டு சென்றனர்.

மூன்றும் முகமது ஷாவின் ஆட்சியின் படைப் பதிவேட்டில் உண்மையில் பெரு வெற்றியே காணப்படுகிறது. ஆனால், அவரிடம் காணப்பட்ட காமவெறியும், அவருடைய அரசவையிலிருந்த பிரபுக்களின் சுயநலச் சிக்கல்களும் மற்ற விதங்களில் அவர் முன்னேறுவதற்குத் தடையாயிருந்தன. அவை கடைசியில் அவருடைய அழிவுக்கே காரணமாயின. மிகுதியான குடிப்பழக்க முடையவரான அவர் ஆண்டுகள் செல்லச் செல்ல மன ஒருநிலைப் பாட்டை இழந்துவந்தார். அவருடைய எதிரிகளான தக்காணப் பிரபுக்களின் தூண்டுதலினால் அவர் 1491 ஏப்ரல் 5ஆம் நாள் முகமது கவானைத் தாக்கித் தூக்கிடும்படி தற்கொலைக்குச்சமமான கட்டளையை விடுத்தார். தக்காணப் பிரபுக்கள் முகமது கவானின் அதிகாரத்தையும் வெற்றியையும் கண்டு பொறாமை கொண்டு, அந்த அமைச்சர் விசயநகர ராயருடன் வஞ்சகமான கடிதப்

போக்குவரத்தில் ஈடுபட்டிருந்தார் என்று சுல்தான் நம்பும்படி ஒரு பொய்க் கடிதத்தை அவரிடம் சேர்ப்பித்தனர். இவ்வாறு பாமினி இராச்சியத்தில் அமைச்சராக மூன்று அரசர்களின் ஆட்சிக் காலங்களில் தொடர்ந்து திறமையுடன் நேர்மையுடன் பணிபுரிந்த முகமது கவான் தம்முடைய தலைவரின் நன்றியைப் பெற உரிமையுடையவராய் இருந்தும், அரசாங்கத்தின் உண்மை யான நலன்களில் சிறிதும் அக்கறையில்லாத போட்டிப் பிரபுக்களின் குழுவினர் செய்த சதிக்குப் பலியானார். இந்தப் பழைய அமைச்சர் அநியாயமாகத் தூக்கிலிடப்பட்ட பிறகு, 'பாமினி இராச்சியத்தின் எல்லாப் பிணைப்பும், சக்தியும் போய்விட்டன' என்று மெடோ டெய்லர் (Meadow Taylor) பொருத்தமுறக் கூறியுள்ளார். பல விதங்களில் முகமது கவானின் குணவியல்பு அவருடைய காலத்தில் வாழ்ந்தவர்களின் குணவியல்பைக் காட்டிலும் மிக மேம்பட்டதாயிருந்தது. எளிய தூய வாழ்க்கையை நடத்திவந்த அவர் கல்வியிலும், கல்வி அறிஞர்களின் கூட்டுறவிலும் விருப்பம் உடையவராய் இருந்தார். அவ் விருப்பம் அவரைப் பீடாரில் ஒரு மிகச்சிறந்த கல்லூரியையும் ஒரு பெரிய நூலகத்தையும் வைத்து நடத்தச் செய்தது. ஒரு பொதுப்பணி அதிகாரியாக அவர் விருப்பு வெறுப்பற்றுச் செய்த தொண்டுகள், நம்முடைய புகழுக்கு அவரை உரியவராகச் செய்கின்றன. மூன்றும் முகமது தம்முடைய முட்டாள்தனத்தைச் சிறிது காலத்துக்குப் பிறகே உணர்ந்தார், துன்பமும் கழி விரக்கமும் கொண்ட அவர் ஓராண்டிற்குள் கி.பி. 1485 மார்ச்சு 25ஆம் நாள் உயிர் துறந்தார்.

அதன் பிறகு பாமினி இராச்சியம் ஆழ்ந்த குழப்பத்தில் மூழ்கியது. அக் குழப்பம் தவிர்க்கமுடியாத வகையில் அதனுடைய அழிவுக்குக் காரணமாகியது. மூன்றும் முகம்மதுவுக்குப் பின் வந்த அவருடைய இளைய மகனை முகமது ஷா அவருடைய இராச்சியத்தின் ஒழுங்கு நிலையைக் காப்பாற்றத் தம் தனித் திறமையின் ஆற்றலோ, திறமைமிக்க ஓர் அமைச்சரின் உதவியோ இன்றித் தவித்தார். தக்காணத்தவர்க்கும் அயல்நாட்டவர்க்கு மிடையே சிறிதும் குறையாத பெருஞ்சினம் வஞ்சம் இவற்றுடன் சச்சரவு தொடர்ந்து நடைபெற்றுக்கொண்டுவந்தது. நாட்டில் நிலவிக்கொண்டிருந்த குழப்பத்தைச் சாதகமாகப் பயன்படுத்திக் கொண்டு மாகாணக் கவர்னர்கள் தங்கள் விடுதலையை அவ்வப் போது அறிவித்துக்கொண்டனர். முகமதின் பெயரளவு அதிகாரம் தலைநகரைச் சுற்றியுள்ள ஒருசிறு பகுதிவரையில்தான் பரவி இருந்தது. அவரும் அவருக்குப் பின் வந்த நான்கு அரசர்களும், துருக்கியைச் சேர்ந்த தந்திரக்கார பிரபுவான காசிம் பரீத்-உல்-

மமாலிக் என்பவருடைய கையிலும் அவர் 1504-ல் இறந்த பிறகு அவருடைய மகனும் 'தக்காணத்துக் குள்ளநரி' என்றழைக்கப் பட்டவருமான அமீர் ஆலி பரீத் என்பவர் கையிலும் வெறும் பொம்மைகளாக இருந்தனர். கடைசி அரசரான கலீமுல்லா ஷா அவருடைய அரசமரபு இழந்த பொருள்களையெல்லாம் மீட்ப தற்காக மறைமுகமாகப் பாபரின் உதவியையும் பெற முயன்றார். ஆனால், அவர் ஏமாற்றமே அடைந்தார். ஏறக்குறைய நூற்றெண் பதாண்டுகளின் ஆட்சிக்குப் பிறகு பாமினி அரசமரபு 1527-ல் அவருடைய இறப்புடன் முடிவுற்றது.

தக்காணத்தில் ஆண்ட பாமினி அரச மரபின் வரலாறு படிப் பதற்கு இன்பம் தரவில்லை. அதன் பெரும்பாலான சுல்தான்கள் முக்கியமாகக் கடும் போர்களிலேயே ஈடுபட்டிருந்தனர். அரசவை யினரிடமிருந்த சிக்கல்களினாலும், உள்நாட்டுப் போர்களினாலும் அதனுடைய உள்நாட்டு அரசியல் மிகவும் சிதைவுற்றிருந்தது. அந்த அரச மரபைச் சேர்ந்த பதினெட்டு அரசர்களுள் ஐந்து பேர் கொலை செய்யப்பட்டனர். இருவர் மட்டுமீறிய வழக்கங்களினால் இறந்தனர். மூவர் சிம்மாசனத்திலிருந்து அகற்றப்பட்டனர். அம் மூவருள் இருவர் குருடராக்கப்பட்டனர். எனினும், பாமினி சுல்தான்கள் தங்கள் அறிவுக்கெட்டியவரை படிப்பையும் கல்வி யையும் ஆதரித்து வந்ததும், கோட்டைகளையும் கட்டடங்களையும் எழுப்பியதும், அரசாங்கத்துக்கு மிகுதியான வருவாய்களைத் தந்ததுடன் உழவர்களுக்கு நன்மையையும் விளைத்த கிழக்கு மாகாணங்களில் செய்யப்பட்ட நீர்ப்பாசன வேலைகளும் அவர் களுக்குப் பெருமை தரத்தக்கனவாயுள்ளன.

மூன்றும் முகம்மது ஷாவின் ஆட்சியில் 1470 முதல் 1474 வரையுள்ள ஆண்டுகளில் இந்த இராச்சியத்தில் சுற்றுப் பயணம் செய்த ரஷ்யப் பயணியான அல்தானசியஸ் நிகிதின் (Althanasius Nikitin) என்பவர் குறித்து வைத்துள்ள சில குறிப்புகளினின்றும் பாமினி இராச்சியத்தில் வாழ்ந்த பொதுமக்களின் நிலைமை எவ்வாறிருந்தது என்பதைப் பற்றி நாம் ஓரளவு அறிகிறோம். அவர் எழுதுகிறார்: 'சுல்தான் ஒரு சிறிய ஆள்; இருபது வயதினர். பிரபுக்களின் அதிகாரத்தில் இருப்பவர்......... சுல்தான் தம் படைவீரர்கள் 3,00,000 பேருடன்' வெளியே செல்கிறார். நாட்டில் மக்கள் நெருக்கம் மிகுதியாயுள்ளது. பிரபுக்கள் மிகுந்த செல்வர்களாயும், ஆடம்பரத்தில் இன்பம் காண்பவராயுமிருக்க, நாட்டு மக்களின் நிலைமை மிகவும் வருந்தத் தக்கதாயுள்ளது. தங்கச் சேணங்கள் பூட்டப்பட்ட 20 சிறந்த அலங்காரக் குதிரைகள் முன்னே செல்லப், பின்னால் 300 ஆள்கள் குதிரைமேல்

ஏறிக்கொண்டும், 500 பேர் நடந்தும், பத்துத் தீப்பந்தம் பிடிப் போரும், பத்து இசைவாணர்களும், கொம்பூதுவோரும் நடந்து வரப் பிரபுக்கள் வெள்ளி அமளிமீது சுமந்து செல்லப்படுகின்றனர்.

'சுல்தான் வேட்டையாடப் புறப்படும்போது, தன் அன்னை, மனைவி இவர்களுடனும், 10,000 குதிரை வீரர்கள், 50,000 காலாள்கள், முலாம் பூசிய கவசத்தால் அலங்கரிக்கப்பட்ட 200 யானைகள் முன்னே 100 குதிரை வீரர்கள், 100 கூத்தாடுவோர், தங்கச் சேணங்கள் பூட்டப்பட்ட 300 சாதாரணக் குதிரைகள், 100 குரங்குகள், எல்லா வெளிநாட்டைச் சேர்ந்த 100 வைப்பாட்டிமார்கள் இவர்களும் தொடர்ந்து வரச் செல்வார்.'

இவ்வாறு பிரபுக்களின் ஆடம்பரமிக்க வாழ்க்கைத் தரத்தோடு ஒப்பிடும்போது, பொதுமக்களின் நிலை மிகவும் துன்பமிக்கதாய் இருந்தது என்பதை அயல்நாட்டுப் பயணியின் சான்றுகொண்டு அறிகிறோம். ஆனால், பாமினி அரசர்களின் ஆட்சிக் காலம் முழுவதிலும் பொதுமக்களின் நிலை எவ்வாறிருந்தது என்பதைப் பற்றிய தெளிவான கருத்தை உருவாக்கிக்கொள்ள வேறெந்த நல்ல சான்றும் கிடைக்கவில்லை. முஸ்லிம் வரலாற்றுக் கோப் பாளர்களின் குறிப்புகள் எல்லாம் படைத்துறைப் போர்கள், புற மதத்தினருக்கு எதிராகச் செய்த போர்கள் முதலியவை பற்றிய செய்திகளால் நிரம்பியுள்ளனவே தவிரப் பொதுமக்களின் வரலாறு பற்றிய எந்தக் குறிப்பும் அவற்றில் காணப்படவில்லை.

### இ. தக்காணத்தின் ஐந்து சுல்தானியங்கள்

பாமினி அரசு சிதைவுற்ற பிறகு தக்காணத்தில் ஒன்றன் பின் ஒன்றாக ஐந்து தனித்தனி சுல்தானியங்கள் தோன்றின. இவை யெல்லாம் அவற்றை நிறுவியோரின் பட்டப் பெயர்களால் வழங்கப்பட்டன. பீராரின் இமாத் ஷாஹீ அரசமரபு, அகமத் நகரின் நிஸாம் ஷாஹீ அரசமரபு, பீஜப்பூரின் ஆதில் ஷாஹீ அரசமரபு, கோல்கொண்டாவின் குதுப் ஷாஹீ அரசமரபு, பீடாரின் பரீத் ஷாஹீ அரசமரபு என்று அவை வழங்கப்பட்டன. முதலில் பிரிந்தது பீரார்தான். அங்கே கி.பி. 1484-ல் இந்து வாயிருந்து மதம் மாறிய ஃபதுல்லா இமாத் ஷா (Fathullah Imad Shah) என்பவர் தம்முடைய சுதந்திரத்தை அறிவித்து இமாத் ஷாஹீ அரசமரபினை நிறுவினார். கி.பி. 1574-ல் பீரார் அகமத் நகருடன் ஒன்றாய் இணைக்கப்பட்டது.

கி.பி. 1489-90-ல் பீஜப்பூரின் கவர்னராயிருந்த யூசுப் ஆதில் கான் (Yusuf Adil Khan) தம்மை உரிமையுடைய ஆட்சியாளர் என்று அறிவித்தார். அவர் இளமைக் காலத்தில் மகமூத் கவானால்

விலைக்கு வாங்கப்பட்ட ஜியார்ஜியன்(Georgian) அடிமையாவார். பின்பு தம்முடைய தகுதியாலும் திறமையாலும் உயர்ந்தார். எனினும், சில தனிப்பட்ட செய்தியை நம்பிக்கொண்டுபெரிஷ்டா, அவர் கி.பி. 1451-ல் இறந்த துருக்கி அரசர் சுல்தான் இரண்டாம் முராதின் மகன் என்றும், தந்தைக்குப்பின் பட்டத்துக்கு வந்த அவருடைய மூத்த சகோதரர் இரண்டாம் முகம்மது தம்மைக் கொல்லக் கட்டளையிட்டதால் உயிருக்குப் பயந்து தமது பதினேழாம் வயதில் தம் நாட்டை விட்டு முதலில் பாரசீகத்துக்கும், பிறகு இந்தியாவுக்கும் ஓடி வந்தவர் என்றும், பிறகு பாமினிய சுல்தானின் அமைச்சரிடம் தம்மை அடிமையாக விற்றுக் கொண்டவர் என்றும் எழுதுகிறார். யூசுப் ஆதில் ஷா ஒரு மத வெறியரல்லர். அவருடைய அரசாங்கத்தில் அதிகாரியாக நியமிக்கப்படுவதற்கு மதம் தடையாக இருக்கவில்லை. பாரசீகத்தில் அவர் தங்கியிருந்ததனாலோ என்னவோ, அவர் ஷியா மதக்கொள்கைகளையே பெரிதும் விரும்பினார். தம்முடைய வாழ்க்கையில் தீய பண்பற்றவராக இருந்த அவர் தம்முடைய அரசாட்சிக் கடமைகளில் கவனமாயிருந்தார். பெரிஷ்டா கூறுகிறார்: 'யூசுப் ஆதில் ஷா இன்பத்தையும் கடமையையும் ஒன்றாய்க் கலந்திருக்கச் செய்தாராயினும், இன்பம் கடமையில் தலையிட என்றுமே அவர் அனுமதித்ததில்லை. எப்போதும், நாணயத்துடன் நடக்க வேண்டுமென்று அவர் தம்முடைய அமைச்சர்களை விடாது எச்சரித்துக்கொண்டிருந்தார். அந்த நற்குணங்களைத் தாமே பின்பற்றி அவர்களுக்கு ஒரு முன்மாதிரியாய் இருந்தார். அவர் பாரசீகம், துருக்கிஸ்தான், ரூம் (Rum) முதலிய இடங்களிலிருந்து கல்வியில் வல்ல அறிஞர் பலரையும், வீரம் மிக்க அதிகாரிகளையும், மிகச் சிறந்த கலைஞர்களையும் வரவழைத்தார். அவர்கள் அவருடைய வள்ளண்மை நிழலின்கீழ் இன்பமாக வாழ்ந்தனர். அவருடைய ஆட்சியில் பீஜப்பூரின் கோட்டை கல்லால் கட்டப்பட்டது. யூசுப் ஆதில் ஷாவுக்குப் பின்னர்ப் பட்டத்துக்கு வந்த யூசுப்பின் மகனான இஸ்மாயில் ஆதில் ஷா (1510—1534), இஸ்மாயிலின் மகனான மல்லூ (1534), மல்லூவின் சகோதரரான முதலாம் இப்ராஹிம் ஆதில் ஷா (1557—1579) இவர்களுடைய ஆட்சிக் காலங்கள் போரும் பூசலும் நிறைந்தனவாக இருந்தன. ஆனால், ஆலி ஆதில் ஷாவின் பின் வந்தவரும், அவருடைய மருகருமான இரண்டாம் இப்ராகீம் ஆதில் ஷா மூலம் அந்த அரச மரபும் மற்றொரு போற்றத்தக்க ஆட்சியாளரைத் தந்தது. அவர் இராச்சியத்தை அறிவுடைமையுடனும், மதப் பொறுமையுடனும் அரசாண்டு கி.பி. 1626-ல் இறந்தார். பீஜப்பூரையும், அதனுடைய உள்நாட்டு மரபுகளையும் பற்றிய சில அனுபவங்களை எழுதிய மெடோஸ் டெய்லரின் கருத்துப்படி, 'அவர் ஆதில் ஷாஹீயின்

அரச மரபில் மற்ற எல்லாரையும்விட மிகப் பெருமையுடைய அரசராவார். அவ் அரசமரபை நிறுவியவரைத் தவிரப் பல விதங் களில் மிகச் சிறந்த திறமையுடையவராயும், 'புகழ்உடையவராயும் இவர் விளங்கினர்.' அவுரங்கஸீப்பினல் கி.பி. 1686-ல் இணைத்துக் கொள்ளப்படும்வரை பீஜப்பூர் இராச்சியம் நிலைத்திருந்தது.

அகமத் நகர் இராச்சியத்தினை நிறுவியவர் நிஸாம்-உல்-முல்க் பகரியின் மகனை மலிக் அகமத் ஆவர். நிஸாம்-உல்-முல்க் பகரி கோதாவரியின் வடக்கேயுள்ள பாத்ரீ (Pathri) என்ற இடத்தில் பரம்பரையாக வரிவசூல் செய்யும் இந்து அதிகாரிகள் குடும்பத்தில் பிறந்தார். மகமூத் கவானின் கொலைக்குக் காரணமான சதியில் முக்கிய பங்கு எடுத்துக்கொண்டார். அவருடைய கொலைக்குப் பின்னர் முதலமைச்சரானர். மலிக் அகமது ஜுனரின் கவர் னராக நியமிக்கப்பட்டிருந்தார். 1490-ல் அவர் தம்முடைய சுதந்திரத்தை அறிவித்தார். சிறிது காலத்துக்குப் பிறகு அவர் தம்முடைய தலைநகரைப் போரியல் சூழ்ச்சித்திறனில் சிறந்த ஓர் இடத்திற்கு மாற்றினர். இவ்வாறு அகமத் நகர் கட்டப்பட்டது.

பல ஆண்டுகள் முயற்சி செய்த பிறகு கி.பி. 1499-ல் அவர் தௌலதாபாத்தைக் கைப்பற்றினர். அது அவருடைய இராச்சி யத்தை ஒருநிலைப்படுத்த உதவியது. அவர் கி.பி. 1508-ல் இறந்தார். அவருக்குப் பின் அவர் மகன் புர்கான் நிஸாம் ஷா (Burhan Nizam Shah) பட்டத்துக்கு வந்தார். அவர் தம்முடைய நாற்பத்தைந்து ஆண்டு ஆட்சியில் அண்டை நாடுகளுடன் போர் தொடுத்தார். ஏறத்தாழக் கி.பி. 1550-ல் பீஜப்பூருக்கு எதிராக விசயநகர ராயருடன் தொடர்பு கொண்டார். அவருக்குப் பின் வந்த ஹுஸேன் நிஸாம் ஷா விசயநகருக்கு எதிராக 1565-ல் முஸ்லிம் கூட்டு நாட்டுடன் சேர்ந்தார். அந்த ஆண்டு அவர் இறந்த பிறகு அவருடைய மகன் முதலாம் முர்துஸா நிஸாம் ஷா (Murtuza Nizam Shah) பட்டத்துக்கு வந்தார். அவர் சிற்றின் பத்தில் மூழ்கித் திளைக்கும் காளையாக இருந்தார். அவருடைய எதிரிகளுடன் வெற்றிகரமாகப் போட்டியிடத் தகுதியற்றவராக இருந்தார். அக்பரின் மகனை இளவரசன் முராதினை 1576-ல் சாந்த் பீபி வரலாற்றுச் சிறப்பு மிக்க வகையில் எதிர்த்துப் போரிட்டமையும், மலிக் அம்பரின் (Malik Ambar) படைத்துறை, ஆட்சித்துறைத் திறமையையும் தவிர அகமத் நகரின் பிற்கால வரலாற்றில் இதைப்போன்ற முக்கியமானதும், சுவைமிக்கதுமான வேறொரு நிகழ்ச்சி நிகழவே இல்லை. 1600-ல் அந்த இராச்சியம் முகலாயர்களால் தாக்கப்பட்டது. ஆனல், ஷாஜஹானின் ஆட்சியின்போது 1633ஆம் ஆண்டில்தான் அது பேரரசுடன் குடைசியில் இணைக்கப்பட்டது.

பழைய இந்து அரசான வாரங்கலின் வீழ்ச்சியின்மீது கோல்கொண்டாவின் முஸ்லிம் இராச்சியம் வளர்ந்துவந்தது. கி.பி. 1424-ல் பாமினிகளால் வாரங்கல் இராச்சியம் வெல்லப் பட்டது. முகமது ஷா பாமினியின் காலத்தில் பாமினி இராச்சி யத்தில் துருக்கிய அதிகாரியாயிருந்த குலிஷாவினால் குதுப் ஷாஹி அரசமரபு நிறுவப்பட்டது. குலிஷா மஹ்மூத் கவானால் தெலிங் கானாவின் கவர்னராக நியமிக்கப்பட்டிருந்தார். கி.பி. 1512 அல்லது 1518 வரை தம்முடைய தலைவரிடத்துப் பற்றுறுதி உடையவராக இருந்தார். அந்த ஆண்டில் பரீத்துகளின் அதிகா ரத்தையும், கொடுமையையும் எதிர்த்துத் தம்முடைய சுதந் திரத்தை நிலைநாட்டினார். அவர் 1543-ல் தமது தொண்ணூறாவது வயதில் தம்முடைய மகன் ஜம்ஷீத்தினால் கொல்லப்படும் வரை நீண்ட காலம் செங்கோலாச்சிவந்தார். அவருக்குப் பின் ஜம்ஷீத் ஏழாண்டுகள் ஆண்டார். ஜம்ஷீத்துக்குப் பின்பு பட்டத்துக்கு வந்த அவருடைய சகோதரர் இப்ராஹீம் மற்ற முஸ்லிம் சுல்தானியங்களுடன் சேர்ந்துகொண்டு 1565-ல் விசயநகரை எதிர்த்துப் போரிட்டார். அவர் ஒரு நல்ல ஆட்சியாளர்; அரசாங்கத்தின் உயர்ந்த உத்தியோகங்களில் இந்துக்களைத் தாராளமாக அமர்த்திக்கொண்டார். 1611-ல் அவர் இறந்த பிறகு கோல்கொண்டாவின் வரலாறு பெரும்பாலும் முகலாயப் பேரரசின் வரலாற்றோடு இணைந்ததாகப் போயிற்று. இறுதியில் அது ஔரங்கஸீப்பினால் 1687-ல் அப் பேரரசுடன் இணைக்கப் பட்டது.

பாமினி இராச்சியத்தின் தூரத்து மாகாணங்கள் எல்லாம் தங்கள் சுதந்திரத்தை அடைந்துவிட்ட பிறகு மீதியிருந்த பகுதிகள் பரீத்துகளின் அரசேற்பு மூலம் பேருக்கு மட்டும் ஓர் இராச்சியமாக இருந்தன. 1526 அல்லது 1527-ல் அமீர் அலி பரீத் (Amir Ali Barid) முறையாகப் பொம்மைகளைப் போன்றிருந்த பாமினி சுல்தான்களின் ஆட்சியை ஒழித்துக் கட்டிவிட்டுப் பீடாரின் பாரீத் ஷாகி அரசமரபை நிறுவினார். அது அந்தப் பகுதி கி.பி. 1618–19-ல் பீஜப்பூரில் இணைக்கப்படும்வரை நிலை பெற்றிருந்தது.

பாமினி இராச்சியத்தின் ஐந்து கிளைகள் சில நல்ல ஆட்சி யாளரைப் பீஜப்பூர், கோல்கொண்டா இவற்றில் பெற்றிருந்தது. இந்தச் சுல்தான்களின் வரலாறு பெரும்பாலும் தங்களுக்குள்ளும் விசயநகருடனும் இடைவிடாது செய்து வந்த போர்களின் வரலா றாகவே இருந்தது. ஒவ்வொருவரும் தக்காணத்தில் தங்கள் மேலாண்மையைச் செலுத்தப் பெருமுயற்சி செய்துகொண்டிருந் தனர். அதனால், முற்காலத்தில் சாளுக்கியர்களுக்கும் பல்லவர்

களுக்குமிடையேயும், பதினெட்டாம் நூற்றுண்டில் மைசூர் மராத்தியர்களுக்கும் நிஜாமுக்குமிடையேயும் நடந்த போர் களைப் போன்று உள்நாட்டுப் போர்கள் நிறைந்த களமாகத் தக்காணம் காட்சி அளித்தது. பாமினி இராச்சியத்தின் சிதைவும் அதன் பிறகு எழுச்சியுற்ற ஐந்து சுல்தானியங்களுக்குள் நடந்து வந்த போர்களும் அரசியல் அடிப்படையிலும், மதத்தின் அடிப் படையிலும் தென்னகத்தே இஸ்லாமின் முன்னேற்றத்தைப் பெரி தும் பாதித்துவிட்டன. தென்னுட்டில் துக்ளக்குகளின் காலத்திற் குப் பிறகு தோன்றிய இந்துமத மறுமலர்ச்சியின் உணர்ச்சி விசய நகரப் பேரரசின் எழுச்சியிலும் வளர்ச்சியிலும் உச்சநிலை அடைந்தது.

## 5. இந்து இராச்சியங்கள்—விசயநகரப் பேரரசு

### அ. அரசியல் வரலாறு

விசயநகரின் தொடக்க வரலாறு இன்னும் இருளில் மூழ்கிக் கிடக்கிறது. இந்தப் பெரிய பேரரச நகரின் தொடக்கத்தைப் பற்றிய கர்ண பரம்பரைக் கதைகளைக் குறிப்பிட்டுவிட்டு சீவெல் (Sewell) என்பார், இந்தக் கதைகளின் பொதுப் பான்மையுடன் வரலாற்றுஉண்மைகளைஇணைத்துப் பார்த்தால் ஒருவேளை மிகவும் நியாயமான ஒரு விளக்கம் கிடைக்கக்கூடும் என்று கூறுகிருர். அவர் பொதுவாகக் கூறப்படும் மரபுரையை ஒப்புக்கொள்ளு கிருர். அதன்படி, துங்கபத்திராவின் வடகரையிலுள்ள ஆனெ குண்டீ என்ற கோட்டைக்கு எதிர்ப்புறத்தில் அந் நதியின் தென் கரையில், சங்கமரின் ஐந்து புதல்வர்கள் விசயநகரையும், விசய நகரப் பேரரசையும் நிறுவினர். அந்த ஐந்து புதல்வர்களுள் ஹரிகரர், புக்கர் என்போர் மிகச் சிறந்தவர்களாவர். அந்தக் காலத்தில் சிறப்புற்றிருந்த பிராமண முனிவரும் அறிஞருமான மாதவ வித்யாரணியரும், அவருடைய சகோதரரும், வேதத் திற்குப் புகழ் பெற்ற உரையெழுதியவருமான சாயனர் முதலிய வர்களின்மூலம் ஊக்க உணர்ச்சி பெற்று, அவர்கள் இந்தப் புதிய முயற்சியில் ஈடுபட்டனர். இந்த மரபுரை பிற்காலத்தில் கட்டிவிடப்பட்ட கதை என்றும், பதினும் நூற்றுண்டில்தான் அக் கதை வழக்கத்தில் வந்தது என்றும் சிலர் கருதுகின்றனர். திருத்தந்தை ஹீராஸ் பாதிரியாரின் (Rev. Father Heras) கருத்துப்படி, விசயநகரப் பேரரசினை வளர்த்த ஆனெகுண்டீ நகரத்திற்குக் கால்கோள் செய்தவர்கள் ஹொய்சள அரசரான மூன்றும் வீர பல்லாளரும், ஹொய்சள ஆளும் குடும்பத்தின் நெருங்கிய உறவினரும் அங்கே தம் இருப்பிடத்தைக் கொண்

டிருந்த எல்லைப்புற அதிகாரியுமான ஹரிகரருமாவர்; வேறோர் ஆசிரியரின் கருத்துப்படி, 'பிற்காலத்தில் விசயநகரம் என வழங்கப் பட்ட நகரைக் கட்டிப் பலப் படுத்தியது மாபெரும் ஹொய்சள அரசரான மூன்றும் வீரபல்லாளரின் தீரச் செய லாகவே கருதப்படவேண்டும். மகமது துக்ளக்கின் படையால் கம்பிலி அழிக்கப்பட்ட பிறகும் ஹொய்சளத் தலைநகரான துவாரசமுத்திரப் படையெடுப்பை அடுத்தும் அந் நகரம் நிறுவப் பட்டது. ஹொய்சள மூலத்தின் கொள்கை அண்மையில் ஓர் ஆசிரி யரால் மறுத்துரைக்கப்படுகிறது. அவர் இந்தப் பிரச்சினையைப் பல வழியாகவும் ஆராய்ந்து ஹரிகரர், புக்கர் ஆகிய இருவரும் அந் நகரைக் கட்டினர் என்று வாதம் செய்கிறார். அவர்கள் இரண் டாம் ஹரிகரரின் கல்வெட்டில் 'பேரொளியின் அவதாரம்' என்று குறிக்கப்படுகிற மாதவ வித்யாரணியர் என்பவரின் அறிவுரை யின்படி 'தங்கள் நடக்கை முறைகளை உருவாக்கிக் கொண்டனர்' என்று அந்த ஆசிரியர் கூறுகிறார். சில வரலாற்று நிபுணர்களின் கருத்துப்படி 1424-ல் முகம்மதியர்களால் பிடிக்கப்பட்டதும், வாரங்கலைத் தலைநகராகக் கொண்டதும், காகதீய இராச்சி யத்தை உள்ளடக்கியதுமான தெலுங்கு நாட்டிலிருந்து அவர்கள் வந்தனர். அந்த ஐந்து பேரும் நடோடிகளாகத் திரிந்து வந்தனர். இந்த முரண்பாடான கருத்துகளிடையே ஒன்று மட்டும் உறுதியாகக் கூறமுடியும். அதாவது ஹரிகரரும், புக்கரும் அவர்களுடைய மூன்று சகோதரர்களும் வடக்கிலிருந்து வந்த படையெடுப்பாளர்களின் முன்னேற்றத்தைத் தடை செய்ய வேண்டுமென்று எதிர்த்துப் போரிடப் பெரு முயற்சிகளை எடுத்துக்கொண்டனர் என்பது புலனாகிறது. இந்திய வரலாற்றில் விசயநகரப் பேரரசு மூன்று நூற்றாண்டுகளாக நாட்டின் பழைய மதத்தையும், பண்பாட்டையும் காப்பதற் காகவும், புதிய கருத்துகளும் சக்திகளும் வேகமாக உட்புகுந்து இவற்றை விழுங்கவிடாமல் பாதுகாப்பதற்காகவும் அதை அவர்கள் நிறுவினர் என்பது தெளிவாக விளங்குகின்றது. பாமினி இராச்சியமும், வடக்கிலுள்ள அதன் கிளைகளும் தங்கள் செல்வாக்கைப் பரப்புவதை அது மறைமுகமாகத் தடுத்து வந்தது. டில்லிச் சுல்தான்கள் அடிக்கடி தென்னகத்தில் போரில் ஈடுபட்டுக்கொண்டிருந்தமையால் வடக்கே பாமினி இராச்சி யத்தின் கிளைகளில் டில்லிச் சுல்தானியத்தின் அதிகாரம் ஏற்கெனவே கணிசமான அளவு குறைந்துபோயிருந்தது. சுருங்கக் கூறுமிடத்துத் துருக்கிய ஆப்கானிய சுல்தானியத்தின் சீர் குலைவையும், முக்கியமான தனிச் சுதந்திர அரசுகளின் எழுச்சியை யும் காட்டுகின்ற 'அந்தக் காலத்து அரசியல் நிலைமைக்குத் திறவுகோலைக் கொண்டிருந்தது விசய நகரமே எனலாம்.

விசயநகரின் முதல் அரசமரபு சங்கமரின் பெயரால் வழங்கப்படுகிறது. முதலாம் ஹரிகரர், முதலாம் புக்கர் ஆகியோர் காலத்தில் விசயநகர இராச்சியம் பல இராச்சியப் பகுதிகளையும் பிரிவுகளையும், சிலருடைய கருத்தின்படி ஹொய்சள இராச்சியப் பரப்பின் பெரும் பகுதியையும் தன்னுடைய செல்வாக்கின்கீழ்க் கொண்டுவந்தது. ஆனால், முதலாம் ஹரிகரரும் முதலாம் புக்கரும் அரசருக்குரிய முழுப் பட்டப் பெயர்களைப் புனைந்துக்கொள்ளவில்லை என்பது சில ஆசிரியர் களால் குறிக்கப்பட்டிருந்தது. 1374-ல் முதலாம் புக்கர் சீனாவுக்கு ஒரு தூதுக் குழுவை அனுப்பினார். அவர் கி.பி. 1378–79-ல் இறந்தார். அவருக்குப் பின் அவருடைய மகன் இரண்டாம் ஹரிகரர் பட்டத்துக்கு வந்தார். அவர் ஐயத்திற்கு இடமின்றி மகாராஜாதி ராஜா, ராஜபரமேஸ்வர் போன்ற பேரரசர்க்குரிய பட்டங்களைப் புனைந்துகொண்டார். சில முகமதிய வரலாற்று சிரியர்களின் சான்றுகளை ஒட்டி சீவெல் தம்முடைய முற்பட்ட நூலின்கண்[1] ஹரிகரரின் ஆட்சிக்காலம் 'அமைதி சிதையாத' காலமாயிருந்தது என்று கூறுகிறார். ஆனால்,அவருடைய ஆட்சியில் விசயநகரப் பேரரசுக்கும், முஸ்லிம்களுக்கும் சிக்கல்கள் இருந்தன என்பது சில கல்வெட்டுகளால் புலனாகிறது. உண்மையில், விசய நகரப் பேரரசின் வரலாறும், பாமினி இராச்சியத்தின் வரலாற்றைப் போலவே வெவ்வேறு அரசுகளுடன் இடைவிடாது இரத்தஞ் சிந்தும் போர்களின் வரலாறாகவே காணப்படுகிறது. விசயநகரப் பேரரசுக்கும் பாமினி இராச்சியத்துக்கும் இடையே உரிமைச் சிக்கலாயிருந்த துங்கபத்திரை, கிருஷ்ணா என்ற இரு ஆறுகளுக்கும் இடையே, அமைந்திருந்த இராய்ச்சூர் ஆற்றிடை வெளியைக் கைப்பற்றுவதற்காக இரண்டாம் ஹரிகரனின் மகனான இரண்டாம் புக்கர் தம்முடைய தந்தையின் அனுமதி யுடன் 1398ஆம் ஆண்டு குளிர்காலத்தில் பாமினிப் பிரதேசத்தை நோக்கி வடக்கே படையெடுத்துச் சென்றார்; அவர் ஃபிரூஸ்ஷா பாமினியால் எதிர்க்கப்பட்டுத் தோற்கடிக்கப்பட்டார். 1399ஆம் ஆண்டின் மத்தியில் இருவரிடையேயும் அமைதி உடன்பாடு ஏற்பட்டது. அதன்படி ஃபிரூஸுக்குப் பெரு நஷ்ட ஈடு தரப் பட்டது. ஆனால், பல கல்வெட்டுகள் காட்டுவதுபோல இரண்டாம் ஹரிகரரின் ஆட்சியில் விசயநகரின் அதிகாரம் மைசூர், கன்னட நாடு, செங்கல்பட்டு, திருச்சிராப்பள்ளி, காஞ்சீபுரம் (காஞ்சி) அடங்கலாகத் தென்னிந்தியா முழுவதிலும் பரவியிருந்தது. இரண்டாம் ஹரிஹரர் சிவனை விருபாக்ஷர் உருவில் வணங்குபவ ராவர்; ஆனால், அவர் மற்ற மதக்கொள்கைகளையும் பொறுத்துக்

1 A Forgotten Empire பக்கம் 51.

கொள்ளும் சமயப் பொறையுடைமை கொண்டவராக இருந்து வந்தார். அவர் 1406ஆம் ஆண்டு ஆகஸ்டில் இறந்த பிறகு சிறிது காலம்வரை சிம்மாசனத்துக்கு உரிமையுடையவர் யார் என்பது அவருடைய புதல்வர்களுக்குள்ளே ஒரு பெரும் பிரச்சினையாய் இருந்தது. எனினும், 1406ஆம் ஆண்டு நவம்பர் ஐந்தாம் நாள் முதலாம் தேவராயர் சிம்மாசனத்தைப் பற்றிக் கொண்டார். பாமினிச் சுல்தான்களுடன் செய்த போர்களில் அவர் சில முறை பின்வாங்க நேரிட்டது. அவர் கி.பி. 1422-ல் இறந்தார். அவருடைய மகன் விசய புக்கர் அல்லது வீர விசயர் ஒரு சில மாதங்களே அரசாண்டார். பிறகு விசய புக்கரின் மகனை இரண்டாம் தேவராயர் அரசு கட்டில் ஏறினர். அவர் பாமினியருடன் செய்த போர்கள் தோல்வியிலும் பேரிழப்பிலும் முடிந்தாலும் அவருடைய ஆட்சியில் ஆட்சிமுறை ஒழுங்கு படுத்தப்பட்டது. பாமினியர்களுடன் போட்டியிடுவதற்காகப் படையில் முகம்மதியர்களும் சேர்த்துக்கொள்ளப்பட்டனர். வாணிகத்தை ஒழுங்குபடுத்தவும் கட்டுப்படுத்தவும் அவர் தம் முடைய வலக்கையான லக்கண்ணு எனப்பட்ட லட்சுமணனைத் 'தென்கடல் தலைவராக' அவரது வெளிநாட்டு வாணிகத்தின் பொறுப்பாளராக நியமித்தார். இத்தாலியப் பயணியான நிக் கோலா கான்ட்டியும் (Nicolo Conti), பாரசீகத்திலிருந்து வந்த தூதரான அப்துர் ரஸ்ஸாக்கும் (Abdur Razzaq) முறையே 1420, 1443-ல் விசயநகரைப் பார்வையிட்டனர். அவர்கள் அந் நகரைப் பற்றியும், விசயநகரப் பேரரசு பற்றியும் வியக்கத்தக்க விளக்கங்களை எழுதி வைத்துவிட்டுச் சென்றிருக்கின்றனர். உண்மையில் அப் பேரரசு தென்னிந்தியா முழுவதும் பரந்து இலங்கைக் கடற்கரையைத் தொட்டுக்கொண்டிருந்தது. முதல் அரச மரபினரின் ஆட்சியில் அது சீரும் சிறப்பும் பெற்றுச் செழிப்பு மிக்க நாடாகப் பொலிவுற்று விளங்கியது.

கி.பி. 1446-ல் இரண்டாம் தேவராயர் இறந்தார். அவருக்குப் பின் உயிரோடிருந்த அவருடைய மூத்தமகன் மல்லிகார்ஜுனர் பட்டத்துக்கு வந்தார். அவர் பாமினி சுல்தானும், ஒரிஸ்ஸாவின் இந்து அரசரும் சேர்த்துக்கொண்டு வந்த கூட்டுப்படைகளை முறியடித்தார். தம்முடைய ஆட்சியில் இராச்சியத்தைச் சிறிதும் சிதறுவண்ணம் காத்துக்கொண்டார். அவருடைய ஆட்சி கி.பி. 1465 வரை பரவியிருந்தது. இந்த ஆட்சிக் காலத்தில்தான் முன்பு விசயநகர இராச்சியத்துக்கு அதன் சிற்றரசர்களைப் போல, உண்மையுடன் தொண்டு புரிந்தவர் களின் வழித்தோன்றலும் சாளுவத் தலைவருமான சந்திரகிரி நரசிம்மர் மேம்பாடு அடைந்து பாமினி இராச்சியம், ஒரிஸ்ஸா

அரசு ஆகியவற்றின் முற்றுகைகளை எதிர்த்தார். ஆனால் மல்லிகார்ஜுனருக்குப் பின்வந்த இரண்டாம் விருபாக்ஷர் தகுதியற்ற ஆட்சியாளராய் இருந்தார். குழப்பமும் கலவரமும் நாட்டில் இயல்பாகத் தோன்றின. அவற்றைச் சாதகமாக்கிக் கொண்டு சில மாகாணங்கள் கிளர்ச்சி செய்தன. பாமினி சுல்தான் கிருஷ்ணா, துங்கபத்திராவுக்கிடையேயிருந்த தோஆப்புக்குள் நுழைந்தார். ஒரிஸ்ஸா நாட்டு அரசர் புருஷோத்தம கஜபதி திருவண்ணாமலைவரை தெற்கே படையெடுத்துச் சென்றார்.

இவ் விடர்பாடுகளிலிருந்து இராச்சியத்தைக் காப்பாற்றுவதற்காக நரசிம்ம சாளுவர் தம்முடைய தலைவரை அகற்றி விட்டுக் கி.பி.1486-ல் சிம்மாசனத்தைக் கைப்பற்றிக்கொண்டார். இவ்வாறு 'முதல் பலாத்காரப் பற்றுதலினால்' சங்கம அரசமரபும் கவிழ்ந்தது. விசயநகர் சாளுவ அரச மரபின் ஆட்சியின்கீழ் வந்தது. நரசிம்ம சாளுவர் மக்களின் நம்பிக்கையைப் பெற்றிருந்தார். பேரரசின் நலன்களிலேயே கருத்துக் கொண்டவராய், அவர் தம்முடைய ஆறாண்டு ஆட்சிக் காலத்தில் கிளர்ச்சி செய்த மாகாணங்களில் பெரும்பாலானவற்றைத் திரும்பப் பெற்றார். எனினும், இராய்ச்சூர் தோஆப் பாமினியர்களின் அதிகாரத்தின் கீழும், உதயகிரி ஒரிஸ்ஸாவின் அரசரின் கீழும் இருந்துவந்தன.

நரசிம்ம சாளுவர் தமக்குப் பிறகு இராச்சியத்தின் ஆட்சி முறைப் பொறுப்பைத் தம்முடைய நம்பிக்கைக்கு உரிய தளபதியாகிய நரச நாயக்கரிடம் ஒப்படைத்தார். எனினும், அவர் தமக்குப் பின் தம்முடைய புதல்வர்களே பட்டத்திற்கு வரவேண்டுமென்று விரும்பினார். நரச நாயக்கர் முன்பு துளுவ நாட்டை ஆண்ட அரசமரபை சேர்ந்தவர் என்று தம்மைக் கூறிக் கொண்டார். நரச நாயக்கர் தம்முடைய தலைவரின் இரு புதல்வர்களையும் கொன்றுவிட்டுச் சிம்மாசனத்தைக் கைப்பற்றிக் கொண்டார் என்று நூனிஸ் (Nuniz) என்பவரும், முகம்மதிய வரலாற்றாசிரியர்களும் கூறுவதைக் கல்வெட்டுச் சான்று மறுத்துக் கூறுகிறது. உண்மையில் அவர் தம்முடைய தலைவரின் அரச மரபிடத்துப் பற்றுறுதியும் ஈடுபாடும் உடையவராயிருந்தார். மூத்த மகன் போரில் புண்பட்டு இறந்து போனமையால், தம் தலைவரின் இளைய மகனை இம்மடி நரசிம்மனைச் சிம்மாசனத்தில் வைத்தார். அரசாங்கத்தின் செயல்களை அதன் மறைமுக ஆட்சியாளராய் இருந்து கவனித்துக்கொண்டுவந்தார். கி.பி. 1505-ல் அவர் தாமே இறந்து போன பிறகுதான் அவருடைய மகன் வீர நரசிம்மன் கடைசி சாளுவ அரசரை அகற்றிவிட்டுச் சிம்மா

சனத்தைக் கைப்பற்றிக்கொண்டார். இந்த 'இரண்டாவதாக வன்முறையில் கைப்பற்றுதல்' விசயநகரப் பேரரசுமீது துளுவ அரசமரபின் ஆட்சி ஏற்படும்படி செய்தது. வீர நரசிம்மன் பக்தி மிக்க ஓர் அரசர் என்றும், புண்ணியத் தலங்களுக்குத் தானங்கள் வழங்கினுர் என்றும் சில செப்புப்பட்டயங்களாலும், நூனிஸின் குறிப்புகளாலும் தெரியவருகின்றன.

வீர நரசிம்மனுக்குப் பிறகு அவருடைய தம்பி கிருஷ்ண தேவராயர் ஆட்சிக்கு வந்தார். அவர் இதுவரை விசயநகரை ஆண்ட அரசர்களுள் மிகப் பெரிய அரசராயும், இந்திய வரலாற்றில் மிகச் சிறந்த புகழ்பெற்ற அரசர்களுள் ஒருவராயும் இருந்தார். வீரஞ்செறிந்த, சுறுசுறுப்பு மிக்க படைவீரரான அவர் தம் ஆட்சிக் காலம் முழுவதிலும் நடத்திய போர்களில் எப்பொழுதும் வெற்றியே கண்டுவந்தார். அவர் வடக்கே தம்முடைய பெரும் போட்டியாளர்களைச் சந்திக்க முயல்வதற்கு முன்பு, தம்முடைய பேரரசின் மத்தியப் பகுதியிலிருந்த ஜமீன்தாரர்களை ஒடுக்குவதில் முதலில் தம் கவனத்தைச் செலுத்தினுர். 1510ஆம் ஆண்டின் முடிவில் தம்முடைய இருப்பிடத்தை விட்டுத் தெற்கு மைசூரில் கட்டுக்கடங்காத உம்மாத்தூர்த் தலைவரை அடக்குவதற்காகப் படையுடன் சென்ருர். அத் தலைவர் தோற்கடிக்கப் பட்டார். சிவசமுத்திரக் கோட்டையும் பிடிக்கப்பட்டது (1511–12). அருகிலிருந்த மற்றத் தலைவர்களும் அடிபணிய வைக்கப்பட்டனர். 1512-ல் கிருஷ்ணதேவராயர் பீஜப்பூர் எல்லையை நோக்கிச் சென்று இராய்ச்சூரை உரிமையாகப் பெற்ருர். அவர் திறமையும் அனுபவமும் உடைய தம்முடைய அமைச்சரும் தளபதியுமான சாளுவ திம்மாவின் அறிவுரையின்படி முகமதியர்க்குரிய பிரதேசங்களை இப்போது படையெடுக்காமல் முதல் அரசமரபின் கடைசி ஆட்சியாளர்களின் காலத்தில் ஒரிஸ்ஸாவின் கஜபதி பிரதாபருத்திரனின் (Prataparudra) முந்தையோர்கள் விசயநகரப் பேரரசிடமிருந்து கைப்பற்றிய பகுதிகளை மீட்கும் நோக்கத்துடன் 1513-ல் பிரதாப ருத்திரனுக்கு எதிராகப் படையுடன் சென்ருர். 1514ஆம் ஆண்டின் தொடக்கத்தில் அவர் உதயகிரிக் கோட்டையைப் பிடித்தார். ஒரிஸ்ஸா அரசரின் ஒருமாமனையும், ஓர் அத்தையையும் சிறைப் பிடித்தார். எனினும், அவர்களை மரியாதையுடன் நடத்தினுர். ஒரிஸ்ஸாவின் அரசர் கோல்கொண்டா, பீடார் இவற்றின் சுல்தான்களிடமிருந்து உதவியைப் பெற்று வந்தவராயினும், கிருஷ்ணதேவராயர் அடுத்த ஆண்டின் முற்பகுதியில் கொண்டவீடு என்ற இடத்திலிருந்த வலிமை வாய்ந்த கோட்டையையும், அருகிலிருந்த குறைந்த முக்கியத்துவமுடைய கோட்டைகளையும் கைப்பற்றினுர். அவர்

குஜராத்தின் இளவரசரான வீரபத்திரனையும், சில ஒரிஸ்ஸாப் பிரபுக்களையும் சிறைப்பிடித்துச் சென்றார். அந்த குஜராத் இளவரசர் அவரால் ஒரு மாகாணத்தின் கவர்னராக நியமிக்கப் பட்டார். இது 'கிருஷ்ணதேவராயருடைய உயர்ந்த அரசியல் திறமைக்குச் சிறந்ததோர் எடுத்துக் காட்டு' என்று கிருஷ்ண சாஸ்திரி கூறுகிறார். ஒரிஸ்ஸா அரசரை எதிர்த்துச் செய்த மூன்றும் போரின்போது அவர் பெஜவாடாவில் பாசறை அமைத்துக்கொண்டு, கொண்டபள்ளியை முற்றுகையிட்டு அதைப் பிடித்தார். இந்தச் சமயத்திலும் ஒரிஸ்ஸா அரசரின் மனைவியும் (வீரபத்திர இளவரசனல்லாத வேறொருவர்) மகனும் சில ஒரிஸ்ஸாப் பிரபுக்களும் தளபதிகளும் அவர்கையில் சிக்கினர். பிறகு அவர் வடகிழக்கே விசாகப்பட்டினத்திலுள்ள சிம்மாசலம் வரை முன்னேறிச் சென்று ஒரிஸ்ஸா அரசரை உடன்படிக்கை செய்துகொள்ளுமாறு வற்புறுத்தினார். இஸ்மாயீல் ஆதில் ஷா இழந்துவிட்ட இராய்ச்சூர் தோஆப்பைத் திரும்பப் பெற முயன்ற போது அவரைக் கிருஷ்ணதேவராயர் 1520ஆம் ஆண்டு மார்ச்சு 19ஆம் தேதி இராய்ச்சூருக்கருகில் தோற்கடித்தார். இதுவே அவருடையகடைசிப் பெரிய படைத்துறைச் சாதனையாகும். அவர் பீஜப்பூர்ப் பிரதேசத்தின்மீது தாக்குதலைச் செய்து குல்பர்காக் கோட்டையைத் தரைமட்டமாக்கினார் என்று சொல்லப்படுகிறது. சுருங்கக் கூறுமிடத்து, கிஷ்ணதேவராயரின் படைத்துறை வெற்றிகள் அவருடைய வடக்கத்திய எதிரிகளின் கொட்டத்தை அடக்கிப் பேரரசின் எல்லைகளை மேற்கே தென் கொங்கணம் வரையிலும், கிழக்கே விசாகப்பட்டினம் வரையிலும். தெற்கே தீபகற்பத்தின் கோடி வரையிலும், விரிவாக்கியதுடன் இந்தியக் கடலிலிருந்த சில தீவுகளையும், அக் கடலின் கடற்கரையையும் பேரரசின் செல்வாக்குக்கு உட்பட்டிருக்கும்படியும் செய்தன. அவர் தம்முடைய வாழ்க்கையின் இறுதி ஆண்டுகளைப் பேரரசினைப் பல விதங்களில் ஒழுங்குபடுத்துவதிலும், அமைதியான ஆட்சி நடப்பதற்கேற்ற வேலைகளைச் செய்வதிலும் தம் கவனத்தைத் திருப்பினார்.

கிருஷ்ணதேவராயர் போர்ச்சுகீசியர்களுடன் நட்புறவு வைத்துக்கொண்டிருந்தார். அவர்களுக்குச் சில சலுகைகளை அளித்தார். ஏனெனில் 'குதிரைகள் போன்ற தேவை பொருள்களின் இறக்குமதியால் அவர் பெரிதும் நன்மையடைந்தார்' என்று சீவெல் எழுதுகிறார். 1510-ல் போர்ச்சுகீசிய கவர்னரான ஆல்புகர்க் (Albuquerque) பட்கல் என்ற இடத்தில் ஒரு கோட்டையைக் கட்டிக்கொள்ள அவருடைய அனுமதியைக் கேட்டார். போர்ச்சு கீசியர்கள் கோவாவை முஸ்லிம்களிடமிருந்து கைப்பற்றிய பிறகு

அதற்கு அனுமதி தரப்பட்டது. போர்ச்சுகீசியப் பயணியான பயெஸ் (Paes) என்பவர் அவரை விழுமிய மொழிகளால் புகழ்கிறார். 'அவர் மிகவும் கற்றறிந்த அரசராகவும், ஓர் அரசர் எவ்வளவு முழுமைப் பண்புகளுடையவராயிருக்க முடியுமோ அவ்வளவு பண்புகள் நிரம்பியவராயுமிருந்தார். எப்பொழுதும் மகிழ்ச்சியாயிருக்கும் இயல்புடையவராயிருந்தார். மிகவும் மகிழ்ச்சியாக இருந்தார். அயல் நாட்டவர்க்கு மதிப்புக் கொடுத்து அவர்களை அன்புடன் வரவேற்கும் பண்புடையவராய் இருந்தார். அவர்களுடைய நிலைமை எப்படிப்பட்டதாயினும் அவர்களுடைய விவகாரங்களையெல்லாம் விசாரிக்கும் இயல்பினராயிருந்தார். அவர் ஒரு பெரிய ஆட்சியாளர். மிகுந்த நீதி மனப்பான்மை உடையவராயிருந்தார். ஆனால், சில சமயங்களில் விரைவில் பெருங்கோபங் கொண்டுவிடுவார். படைகளிலும் பிரதேசங்களிலும் அவர் பெற்றிருந்தவற்றைப் பார்க்கும்போது அவர் செல்வத்திலும் செல்வாக்கிலும் எல்லாப் பிரபுக்களுக்கும் மேலானவராயிருந்தார். அவரைப் போன்று அவ்வளவு வீரஞ் செறிந்த, எல்லாவற்றிலும் முழுநிறைவு அடைந்தவருக்கு வேண்டிய எல்லாத் தகுதிகளும் அவரிடம் நிறைந்திருந்தன.'

கிருஷ்ணதேவராயரின் ஆட்சியில் விசயநகரப் பேரரசு நாட்டுப் பரப்பில் உச்சநிலை அடைந்தது மட்டுமன்றி, கலை, கல்வி முதலியவையும் போற்றி வளர்க்கப்பட்டுச் சிறப்புற்றமை குறிப்பிடத் தக்கதாகும். தாமே சிறந்த கல்விமானாக இருந்து இராயர் கல்வியைத் தாராளமாக ஆதரித்தார். அவரைப்பற்றிக் கிருஷ்ண சாஸ்திரி பின்வருமாறு எழுதுகிறார்: 'அவர் தம்முடைய மதப் பேரார்வத்திலும், பரந்த நோக்கத்திலும் குறைந்த புகழ் உடையவர் அல்லர். அவருடைய சொந்தப் பற்று வைஷ்ணவத்தின் பக்கம் சாய்ந்திருந்தாலும் அவர் இந்து மதத்தின் எல்லாப் பிரிவுகளையும் ஒரே மாதிரியாகவே மதித்தார். கிருஷ்ணதேவராயர் போர்க்களத்தில் வீழ்ந்த எதிரிக்குக் காட்டிய பரிவும், பிடிக்கப்பட்ட நகரங்களில் வாழ்ந்தோர்களுக்காக அவர் செய்த கருணைமிக்க அறச்செயல்களும், அவருடைய சிற்றரசர்களும், குடிகளும் ஒருங்கே அவரைப் புகழும்படியான அவருடைய பெரும் படைத்துறை வன்மையும், அயல்நாட்டுத் தூதுக் குழுக்களை எப்போதும் அன்புடன் அரசர்க்குரிய பெருஞ் சிறப்புகளுடன் வரவேற்றதும், அவருடைய கவர்ச்சிமிக்க உருவத் தோற்றமும், தூய்மையும் மதிப்பும் பொருந்திய வாழ்க்கையினராகத் தெளிவுபடுத்திக்காட்டும் அவருடைய கருணை நோக்கமும், மதிப்புமிக்க உரையாடலும், இலக்கியத்திலும் மதத்திலும் அவர் கொண்டிருந்த காதலும், மக்களின் நலனுக்காக உழைக்கும் ஆர்வமும்

எல்லாவற்றுக்கும் மேலாக அவர் கோயில்களுக்கும் பிராமணர் களுக்கும் கற்பனைக்குமெட்டாத அளவிலாப் பெருஞ் செல்வங்களை அறக்கட்டளைகளாக வாரிவழங்கியதும் போன்ற எல்லாம் வரலாற்றின் ஏடுகளில் ஒளி வீசுமாறு செய்த தென்னிந்தியப் பேரரசர்களுள் உண்மையில் மிகப்பெரிய அரசராக அவரைச் செய்தன.' உண்மையில் அவர் ஆட்சியில் விசயநகரப் பேரரசு அதனுடைய புகழிலும் செழிப்பிலும் உச்சநிலையை அடைந்தது. அப்போது பழைய துருக்கிய ஆப்கானிய சுல்தானியம் பெரிதும் சுருங்கி மெலிந்த ஒரு பிணமாக இருந்தது. விரைவில் புதிய துருக்கியப் படை எடுப்பினால் அடித்துக்கொள்ளப்பட்டுப் போக இருந்தது.

ஆனால், வடக்கே வலிமை வாய்ந்த அண்டை நாட்டரசர் களின் பேராசையிலும், விசயநகரப் பேரரசின் அரசப் பிரதிநிதி களின் போக்கிலும் அப் பேரரசுக்கு பேரிடுக்கண் மறைந்து கொண்டிருந்தது. அரசப் பிரதிநிதிகளுள் மதுரையின் அரசப் பிரதிநிதியும், இராச்சியத்தின் நடுப்பகுதியின் பொறுப்பை வகித் திருந்த அரசப் பிரதிநிதியும் கிருஷ்ணதேவராயரின் இறுதிக் காலத்தில் (1528 அல்லது 1529) கிளர்ச்சி செய்தனர். அவருடைய இறப்புக்கு முன்பே முன்னவர் அடக்கியொடுக்கப்பட்டார். ஆனால், மற்றவர் 'அடுத்துப் பட்டத்துக்கு வந்தவரின் ஆட்சித் தொடக்கத்தில்தான் கவனிக்கப்பட வேண்டியவராயிருந்தார்'.

கிருஷ்ணதேவராயர் கி.பி. 1529 அல்லது 1530-ல் இறந்தார். அவருக்குப்பின் அவருடைய மாற்றாந்தாய் மகனான அச்சுதராயர் ஆட்சிக்கு வந்தார். கல்வெட்டு இலக்கியச் சான்றுகளால் அவர் 'நூனிஸினால் காட்டப்படுவது போலக் கோழையானவர் அல்லர்' என்பது தெரியவருகிறது. அவர் கலகக்கார அரசப் பிரதிநிதியான மதுரை அரசப் பிரதிநிதியை அடக்கினார். அவருக்குப் பாதுகாப்பு அளித்த திருவாங்கூர் அரசரையும் தமக்குக் கீழ்ப்படியுமாறு செய்தார். ஆனால், விரைவில் அவர் ஆட்சியின்மீது வைத்திருந்த நேரடிப் பிடிப்பைத் தளர்த்திய பெருந்தவற்றைச் செய்தார். ஆட்சியின் பிடிப்பு அவருடைய இரண்டு மைத்துனர்களிடம் விழுந்தது. அவர்களிருவரும் திருமலை என்ற பெயரையே பெற் றிருந்தனர். இதனால், பிற அரசப் பிரதிநிதிகள் எரிச்சலை அடைந் தனர். அவர்கள் ராமா, திருமலை, வெங்கட்டா என்ற மூவரின் தலைமையிலும் கூடிப் போட்டிக் கட்சி ஒன்றை உருவாக்கினர். ஆரவீடு அரசமரபைச் சேர்ந்த வெங்கட்டா ஆட்சியிலிருந்த துளுவ வமிசத்துடன் திருமணத்தின்மூலம் தொடர்பு கொண்டி ருந்தார். இதனால், இராச்சியம் தொல்லைகளில் மூழ்கியது.

அத்தொல்லைகள் அப் பேரரசின் வரலாறு முடியும்வரை தொடர்ந்து ஏற்பட்டுக்கொண்டே வந்தன. பேரரசு முழுவதும் மறையும்வரை அவையும் மறையாமல் இருந்தன. கி.பி. 1541 அல்லது 1545-ல் அச்சுதராயர் இறந்த பிறகு அவருடைய மகன் வெங்கடாத்திரி அல்லது முதலாம் வெங்கட்டா சிம்மாசனம் ஏறினர். ஆனால், அவருடைய ஆட்சி ஆறு மாதங்களுக்குமேல் நீடிக்கவில்லை. பிறகு மணிமுடி அச்சுதரின் மருமகனை சதாசிவ ராயரிடம் சென்றது. சதாசிவ ராயர் அரசாங்கத்தின் மறைமுக ஆட்சியாளரும், ஆரவீடு மரபைச் சேர்ந்தவருமான அவருடைய அமைச்சர் இராம ராயரின கையில் வெறும் ஒருபொம்மையாகவே இருந்தார். இராம ராயர் திறமை படைத்தவராயிருந்தார். கிருஷ்ணதேவ ராயரின் மறைவுக்குப் பிறகு தாழ்மை நிலையுற்ற விசயநகரப் பேரரசின் அதிகாரத்தை மீண்டும் நிலைநாட்டத் தீர்மானித்தார். இராம ராயருடைய கொள்கையின் ஒருமுக்கியக் கூறு, அவர் தக்காணச் சுல்தான்களுக்கிடையே நடந்த போர்களில் தீவிரமாகத் தலையிட்டு மாறிமாறி இருவர் பக்கமும் சார்ந்து கொண்டிருந்ததாகும். உண்மையில் அவருடைய புதிய முயற்சிகள் அந்தச் சமயத்திற்கு வெற்றிகரமாக இருந்தன. ஆனால், அவை அவர் அளவுக்குமீறித் தன்னம்பிக்கை கொள்ளும்படியும், செருக்கு உடையவராயிருக்கும்படியும் செய்தன. அக் குணங்கள் கடைசியில் பேரரசின் அழிவுக்குக் காரணமாய் அமைந்தன. 1543-ல் இராம ராயர் பீஜப்பூரைத் தாக்கும் நோக்குடன் அகமத் நகர் கோல்கொண்டா சுல்தான்களுடன் உறவு கொண்டார். ஆனால், பீஜப்பூர் அமைச்சரான அஸத்கானின் தந்திரத்தால் அவருடைய நோக்கம் பாழாக்கப்பட்டது. அஸத்கான் புர்ஹான் நிஸம் ஷாவுடனும், இராம ராயருடனும் தனித்தனியாக ஒப்பந்தம் செய்துகொண்டார். அதனால் அவர்களிடையே ஏற்பட்டிருந்த கூட்டுறவு முறிந்தது. 1558-ல் கூட்டுறவில் ஒரு மாற்றம் ஏற்பட்டது. அப்போது கோல்கொண்டா, பீஜப்பூர், விசயநகர் மூன்றும் அகமத் நகருக்கு எதிராக ஒன்று சேர்ந்து அதன்மீது படையெடுத்தன. அந்தச் சமயத்தில் விசயநகரத்துப் படை அகமத் நகர் மக்களின் நம்பிக்கையை ஏமாற்றியது.

விசயநகரப் படையின் செருக்குமிக்க நடத்தையால் விசய நகருக்கு எதிராகத் தக்காணச் சுல்தானியங்களின் நீண்டகால மாகப் புகைந்துகொண்டிருந்த பகைமை கிளறிவிடப்பட்டது. பீராரைத் தவிர மற்றச் சுல்தானியங்கள் விசயநகருக்கு எதிராகக் கூட்டுச் சேர்ந்தன. திருமண உறவுகளால் அக் கூட்டுறவு எளிதாக ஏற்பட்டது. தக்காணச் சுல்தானியங்களின் கூட்டுப்படை ராக்சாஸ் (Raksas), தக்டி (Tagdi) என்ற இரு கிராமங்கள் இப்போது

இருக்கும் இடத்தில் 1565 ஜனவரி 23ஆம் நாள் விசயநகருக்கு எதிராகப் போரிட்டது. இந்தப் போர் மாபெரும் இழப்புகளுடன் விசய நகரப் படையின் தோல்வியில் முடிந்தது. புர்ஹானி மஆசிரின் ஆசிரியர் கூறுகிறார்: 'படை முழுவதும் செல்வத்தைப் பெறுமாறு வெற்றியாளர்கள், நகைகள், தட்டுமுட்டுகள், ஒட்டகங்கள், கூடாரங்கள், கூடாரப் பொருள்கள், பறைகள், கொடிகள், பெண் பணியாளர்கள், ஆண் பணியாளர்கள், படைக்கலங்கள், எல்லா வகையான கவசங்கள் முதலியவற்றைப் பெருமளவில் கைப் பற்றினர்.' பெரிஷ்டா குறிப்பிடுகிறார்: 'வெற்றிப் படையிலிருந்த ஒவ்வொருவரும் தங்கம், நகைகள், கூடாரங்கள், படைக்கலங்கள் குதிரைகள், அடிமைகள் இவற்றைப் பெற்றுச் செல்வமிக்கவராகும் அளவுக்குக் கொள்ளை பெருங்கொள்ளையாய் இருந்தது. யானைகளை மட்டும் தங்களுடைய உபயோகத்துக்கு கொடுத்துவிடவேண்டும் என்றும், கைப்பற்றிய மற்றப் பொருள்களை எல்லாம் அவரவரே வைத்துக்கொள்ளலாம் என்றும் அரசர்கள் அனுமதித்துவிட்டனர்.' ஹுஸேன் நிஜாம்ஷா, இராம ராயரைத் தம் கையாலேயே கொன்றுவிட்டு, 'இப்போது உன்னைப் பழிக்குப்பழி வாங்கி விட்டேன்! எனக்குக் கடவுள் எதுவேண்டுமானாலும் செய்யட்டும்' என்று கூறினார். பொலிவு மிக்க நகரமான விசயநகரம் தகர்க்கப் பட்டது. சீவெல் பின்வருமாறு கூறுவதுபோலப் படையெடுத்து வந்த படை அந் நகரின் பேரழகை அழித்தது; 'மூன்றாவது நாள் அழிவின் தொடக்கம் ஏற்பட்டது. வெற்றியுற்ற முகம்மதியர்கள் போர்க்களத்தில் ஓய்வெடுத்துக்கொண்டு களைப்பாறினர். பின்பு தலைநகரை அடைந்தனர். அந்த நேரத்திலிருந்து ஐந்து மாதங்கள் விசயநகரம் அமைதியை அடையவில்லை. பகைவர்கள் அழிப்பதற்காக வந்துவிட்டனர்; அவர்கள் தங்களுடைய நோக்கத்தை இரக்கமின்றி நிறைவேற்றினர். அவர்களிடமிருந்து எதுவும் தப்பமுடியாதுபோல் காணப்பட்டது. அரசர்கள் விழாக்களை இருந்து பார்ப்பதற்காகக் கட்டப்பட்டிருந்த மேடைகளின் மேலிருந்த கூடாரத்தைக் குலைத்தனர்; எல்லாச் செதுக்கு வேலைப் பாடுகளையும் சிதைத்தனர். ஆற்றின் அருகே மிகு பேரழகுடன் அலங்கரிக்கப்பட்டிருந்த விட்டல சுவாமி கோயிலைச் சேர்ந்த கட்டடங்களுக்குத் தீ வைத்தனர். அக் கோயிலின் அதியற்புதமான கற்சிலைகளை உடைத்துத் தூள் தூளாக்கினர். தீ, வாள், கடப்பாரை, கோடாரிகள் முதலியவற்றைக் கொண்டு ஒவ்வொரு நாளும் அவர்கள் அழிவு வேலையைச் செய்தனர். உலகத்தின் வரலாற்றிலேயே அப்படிப்பட்ட அழிவு வேலை செய்யப் பட்டதில்லை. அவ்வளவு திடீரென்றும் செய்யப்பட்டதில்லை. அவ்வளவு அழகு நிறைந்த ஒரு நகரத்தின்மீதும் செய்யப் பட்டதில்லை.

ஒருநாள் செல்வச் செழிப்பின் உச்சியிலிருந்த செல்வவளமிக்க, ஊக்கமிக்க மக்கள்தொகை நிரம்பிய நகரம் மறுநாளே கைப்பற்றப்பட்டுக் கொள்ளையடிக்கப்பட்டுக் காட்டுமிராண்டித்தனமாக எல்லாரையுங் கொல்லும், விவரிக்க முடியாத கொடுமைக் காட்சிகளுடன் அழிக்கப்பட்டது.

தலைக்கோட்டைப் போர் என்று கூறப்படும் இப் போர் இந்திய வரலாற்றில் உண்மையில் இந்தியாவின் தலைவிதியைத் தீர்மானிக்கும் போர்களுள் ஒன்றாகவே இருந்தது. அது தெற்கே இந்து மேலாண்மை ஏற்படும் வாய்ப்பை அழித்தது. பதினேழாம் நூற்றாண்டில் மராத்திய அரசு ஏற்படும்வரை தென்னகம் புதிய துருக்கிய அரச மரபினரது ஆட்சியாளர்களின் படையெடுப்புக்கு ஆளாகிவந்தது. ஐயத்திற்கிடமின்றி அப் போர் விசயநகரப் பேரரசுக்குப் பேரழிவைக் கொடுத்தது. ஆனால், போரின் விளைவாக அப் பேரரசு முழுதும் அழிந்துவிடவில்லை என்று அண்மைக் கால ஆராய்ச்சிகள் கூறுகின்றன. 'தலைக்கோட்டைப் போர் விசய நகரப் பேரரசுக்கு ஒரு சோதனைக் காலமாய் இருந்தது; ஆனால், மிகு பெருஞ் சோதனைக் காலமாய் இருக்கவில்லை' என்று இக்கால ஆசிரியர் ஒருவர் பொருத்தமாகக் கூறியுள்ளார். உண்மையில் அப் பேரரசு 'ஆரவீடு மரபு வடக்கேயிருந்து அடிக்கடிவந்த படையெடுப்புகளினால் பலவீனப்பட்டும், நாட்டினுள்ளே அரசப் பிரதிநிதிகளின் அதிருப்தியாலும் கிளர்ச்சியாலும் சிதைவுற்றுப் போகுமுன்பு' அம் மரபைச் சேர்ந்த ஆட்சியாளர்களின் கீழ் அப் பேரரசு பதினேழாம் நூற்றாண்டின் முற்பகுதிவரை தொடர்ந்து இருந்துவந்தது.

இந்தப் போரின் விளைவாக வெற்றிபெற்ற சுல்தானியங்கள் இறுதியில் பெரும் பயன் அடையவில்லை. அவர்களுடைய கூட்டுறவு விரைவில் கலைந்தது. அவர்களுக்குள் மீண்டும் பொறாமைத்தீ கொழுந்துவிட்டு எரிந்தது. இது விசயநகரப் பேரரசு இராம ராயரின் சகோதரர் திருமலையின்கீழ்ப் புத்துயிர் பெற வாய்ப்பளித்தது. முஸ்லிம்கள் விசயநகரை விட்டுச் சென்ற பிறகு அவர் அந் நகருக்குச் சென்றார். ஆனால், சிறிது காலம் அங்கே தங்கிய பிறகு பெனுகொண்டாவிற்குச் சென்றார். அங்கே முஸ்லிம் இராச்சியங்களின் விவகாரங்களில் தலையிடும் அளவுக்குப் பேரரசின் மதிப்பையும் அதிகாரத்தையும் மீட்டார். தம்முடைய ஆட்சியின் முடிவில் ஏறக்குறைய, கி.பி. 1570-ல் பெயரளவில் அரசராயிருந்த சதாசிவ ராயரை ஒழித்துவிட்டுஅவர் சார்ந்திருந்த ஆரவீடு அரச மரபினருக்காகச் சிம்மாசனத்தைக் கைப்பற்றினார். அவருக்குப்பின் அரசுக்கு வந்த அவருடைய

மகனான இரண்டாம் ரங்கா பேரரசின் திறமையை விரிவாக்கும் அவருடையை கொள்கையையே தொடர்ந்து மேற்கொண்டார். ஏறக்குறைய, கி.பி. 1586-ல் இரண்டாம் ரங்காவுக்குப் பின் அவருடைய சகோதரர் இரண்டாம் வெங்கட்டா பட்டத்துக்கு வந்தார். அவர் சந்திரகிரியைத் தலைநகராகக் கொண்டு புகழுடன் ஆட்சி செய்து கி.பி. 1614-ல் இறந்தார். பேரரசைச் சிதறவிடாமல் காப்பாற்றிய விசயநகரப் பேரரசர்களில் அவரே கடைசி எனலாம். எனினும், சீரங்கப் பட்டணத்து அரசப் பிரதிநிதித்துவம் இல்லாமற் போனதனால், அவருடைய அனுமதியின் பேரில் கி.பி. 1612-ல் அரசர் உடையார் மைசூர் இராச்சியத்தை நிறுவினர். அவருடைய இறப்புப் பேரரசின் சிதைவுக்கு அடையாளமாயிருந்தது. அவருடைய இறப்பிற்குப் பின்னர் அரசுரிமைப் போரும் அதன் விளைவாகப் பிரிந்துபோகும் சக்திகளும் எழுந்தன. கடைசி முக்கியமான விசயநகர அரசரான மூன்றும் ரங்காவினால் இவற்றைத் தடுக்க முடியவில்லை. கிளர்ச்சி செய்துவந்த பேரரசின் குறுநில மன்னர்களின் தன்நல நோக்கத்தினாலும், பீஜப்பூர், கோல்கொண்டா ஆகிய முஸ்லிம் நாடுகளின் பேராசையாலும், ரங்காவின் சிறந்த முயற்சிகள் பயனின்றிப் போயின. இவ்வாறு கடைசியில் விசயநகரப் பேரரசின் இந்துச் சிற்றரசர்களே அதன் அழிவுக்குக் காரணமான எதிரிகளாய் இருந்தனர். அவர்களுடைய 'அறிவில்லா ஆணவமும் கண்மூடித்தனமான தன்நலமும், பற்றுறுதியில்லாப் பண்பும், அவர்களுக்கிடையே உண்டான போர்களும்' பீஜப்பூர், கோல்கொண்டா ஆகிய முஸ்லிம் நாடுகள் இந்துத் தக்காணத்தை வெல்லுவதைப் பெரிதும் எளிதாகச் செய்துவிட்டன. மேலும் சீரங்கப்பட்டணம், பெத்னூரு (கேலாடி, இக்கேரி) இவற்றின் தலைவர்கள் மதுரை, தஞ்சாவூர்களின் நாயக்கர்கள் போன்ற கீழதிகாரிகளான அரசப் பிரதிநிதிகள் தங்களுக்காகத் தனியுரிமை வாய்ந்த அரசுகளை நிறுவிக்கொண்டனர்.

## ஆ. மாண்புமிக்க விசயநகரின் செல்வச் சிறப்பு

பதினைந்து, பதினாறும் நூற்றாண்டுகளில் இந்தியாவில் பயணம் செய்த அயல் நாட்டுப்பயணிகள் அனைவரும் விசயநகரப் பேரரசைப்பற்றிப் புகழ்மிக்க கருத்துகளைக் கூறிச்சென்றிருக்கின்றனர். விசயநகரம் மாபெரும் கோட்டைக் கொத்தளங்களால் சூழப்பட்டிருந்தது; மிகு பேரளவினதாயுமிருந்தது. கி.பி. 1420-ல் அதைப் பார்வையிட்ட இத்தாலியப் பயணியான நிக்கோலா கோன்ட்டி, 'நகரின் சுற்றளவு அறுபது மைல்கள்; அதனுடைய சுவர்கள் மலைகள் வரை உயர்த்தப்பட்டுள்ளன; அச் சுவர்களின் கீழே சமவெளிகள்

உள்ளன; அச் சமவெளிகள் மூலம் நகரின் பரப்பு விரிவுபடுத்தப் பட முடியும். இந்த நகரில் படைக்கலம் தாங்கக்கூடியவர்கள் தொண்ணூறாயிரம் பேர் என்று மதிப்பிடப்பட்டிருக்கிறது...... அரசர் இந்தியாவின் மற்ற அரசர்களைக் காட்டிலும் மிகுந்த ஆற்றல் வாய்ந்தவராக உள்ளார்' என்று எழுதியுள்ளமை இங்குக் குறிப்பிடத்தக்கது. பாரசீகத்திலிருந்து இந்தியாவுக்கு வந்த அப்துர் ரஸ்ஸாக் விசயநகருக்குக் கி.பி. 1442-43-ல் சென்றார். அவர் கூறுகிறார் : 'நாடு மிகவும் நன்றாக மக்கள்தொகை நிரம்பி யிருக்கிறது. அதனால் ஒரு குறிப்பிட்ட அளவுள்ள இடத்தில் அந் நாட்டைப் பற்றிய கருத்தை விளக்கிவிட முடியாது. அரசரின் கருவூலத்தில் பல அறைகள் உள்ளன. அவை புதைக்கப்பட்டு உருக்கி வார்த்த தங்கத்தால் ஒன்றாய் மூடப்பட்டுள்ளன. நாட்டில் எல்லாரும், உயர்ந்தவர்களாயினும் தாழ்ந்தவர்களா யினும், வீதியிலிருக்கும் சாதாரண வேலைக்காரர்வரை நகைகள் அணிந்திருக்கின்றனர். காதுகளிலும், கழுத்தைச் சுற்றிலும், கைகளிலும், மணிக்கட்டிலும், விரல்களிலும் ஆபரணங்கள் அணிந் திருக்கின்றனர்.' விசயநகரைப்பற்றி விரிவான செய்திகளை வரைந் திருக்கும் போர்ச்சுகீசியரான பேயெஸ் எழுதுகிறார் : 'அதன் அரசர் பெருஞ்செல்வத்தையும் பல படை வீரர்களையும், பல யானை களையும் வைத்திருக்கிறார் ; இவை மிகுந்த எண்ணிக்கையுடை யனவாய் இந்த நாட்டில் இருக்கின்றன......இந்த நகரத்தில் ஒவ்வோரினத்தைச் சேர்ந்தவரும் இருக்கின்றனர். ஏனெனில், இந் நகரில் பெரிய வாணிகம் நடைபெறுகிறது. பல விலையுயர்ந்த மணிக் கற்கள், முக்கியமாக வைரங்கள் இருக்கின்றன...... உலகத்திலேயே எல்லாப் பொருள்களும் நிரம்பிய சிறந்த நகரம் இதுவே. இங்கே அரிசி, கோதுமை, தானியங்கள், கம்பு, சோளம், ஓரளவு பார்லி, அவரை, பயறுகள், கொள்ளு முதலியவையும், இன்னும் இந் நாட்டில் வளரும் பயிர்களும், மக்களுக்கு உணவாயிருக்கும் இவை போன்றனவும் மிகுஅதிகமாகச்சேர்த்துவைக்கப்பட்டிருக்கின்றன. அவை மிகுமலிவாக விற்கப்படுகின்றன...தெருக்களும் சந்தைகளும் எண்ணிலாத சுமைநிறைந்த எருதுகளால் நிரம்பியிருக்கின்றன...' கி.பி. 1516-ல் இந்தியாவில் இருந்த எடோர்டோ பார்போசா (Edoardo Barbosa)விசயநகரைப்பற்றி,'பெரும்பரப்பையுடையது; மிகு நெருக்கமான மக்கள் தொகை உடையது ; நாட்டிலேயே சுறுசுறுப்பான வாணிகக் களமாக உள்ளது; பெகுவிலிருந்து மாணிக்கங்களும், சீனாவிலும் அலெக்ஸாண்டரியாவிலுமிருந்து பட்டும், மலபாரிலிருந்து இலவங்கம், கற்பூரம், கஸ்தூரி, மிளகு, சந்தனம் இவையும் வந்திருக்கின்றன' என்று வருணித்துள்ளமை அந் நகரின் வாணிக வளத்தினைப் படம்பிடித்துக் காட்டுகிறது.

## இ. விசயநகரப் பேரரசின் பொருளாதார நிலைமை

விசயநகரப் பேரரசில் எல்லையில்லாத செல்வம் கொழித்துக் கிடந்தது என்பது வெளிநாட்டாரின் குறிப்புகளிலிருந்தும், வேறுபல ஆதாரங்களினாலும் தெளிவாக அறியப்படுகிறது. இராச்சியத்தின் வெவ்வேறு பாகங்களிலும் உழவுத்தொழில் நடைபெற்றுவந்தது. அரசாங்கமும் அறிவுடைமைமிக்க நீர்ப் பாசனக்கொள்கையை மேற்கொண்டிருந்தது. முதன்மையான தொழில்கள் நெசவு, சுரங்க வேலை, உலோக வேலை முதலியவை யாகும். சிறு தொழில்களுள் மிகு முக்கியமானது வாசனைப் பொருள் தயாரித்தலாகும். கைத்தொழில் வினைஞர்கள், வணிகர் கள்ஆகியவர்களுடைய சங்கங்கள் இராச்சியத்தின் பொருளாதார வாழ்க்கையில் முக்கியமான பாகத்தைப் பெற்றிருந்தன. அப்துர் ரஸ்ஸாக் எழுதுகிறார்: 'ஒவ்வொரு தனித்தனிச் சங்கம் அல்லது தொழிலின் வணிகர்கள் தங்கள் கடைகளை அடுத்தடுத்து வைத்துக் கொண்டிருந்தனர்.' பேயெஸ் கூட இவ்வாறு கூறுகிறார். 'ஒவ்வொரு தெருவிலும் கோயில்கள் இருந்தன. எல்லா வணிகர் களுக்கும் தொழிலாளிகட்கும் இவை மேல்நாட்டில் உள்ள சகோதர நட்புக் கழகங்களுக்குச் சமமானவையாய் இருந்ததோடு பெரும்பயன் தந்து உதவின.'

அந்த இராச்சியத்தின் பொருளாதார நிலையின் மிகவும் குறிப்பி டத்தக்க கூறு உள்நாட்டு வாணிகமும், கடல்கடந்த நாடுகளோடு செய்து வந்த வெளிநாட்டு வாணிகமுமாகும். மலபார்க் கடற் கரையில் மிகு முக்கியமான துறைமுகம் கள்ளிக்கோட்டையாகும். அப்துர் ரஸ்ஸாக்கின் கருத்துப்படி அப் பேரரசு '300 கடல் துறை முகங்களைப் பெற்றிருந்தது.' அது இந்தியக் கடலில் இருந்த தீவுகள் மலாயாத் தீவுக்குழு, பர்மா, சீனு, அராபியா, பாரசீகம், தென் ஆஃப்பிரிக்கா, அபிசீனியா, போர்ச்சுகல் ஆகிய நாடுகளுடன் வாணிகத் தொடர்பு கொண்டிருந்தது. முதன்மையான ஏற்றுமதிப் பொருள்கள் துணி, அரிசி, இரும்பு, வெடியுப்பு, சர்க்கரை, வாசனைத்திரவியங்கள் ஆகியவையாகும். இறக்குமதிப் பொருள்கள் துணி, குதிரைகள், யானைகள், முத்துகள், செப்பு, பவழம், பாதரசம், சீனப்பட்டு, வெல்வெட்டு ஆகியவையாகும். உள்நாட்டு வாணிகத்துக்கு மலிவான போக்குவரத்துச் சாதனங்கள், காவடிகள், தலைச்சுமை, சுமைக்குதிரைகள், சுமை எருதுகள், கட்டைவண்டிகள், கழுதைகள் முதலியவையாகும். கடற் கரைப்பிரதேச வாணிகத்திற்கும், வெளிநாட்டு வாணிகத்திற்கும் கப்பல்கள் பயன்பட்டன. பார்போசாவின் (Barbosa) கருத்துப் படி, தென்னிந்தியாவுக்கு வேண்டிய கப்பல்கள் மால் தீவுகளில் கட்டப்பட்டுவந்தன. விசயநகர அரசர்கள் கடற்படையையும்

வைத்திருந்தனர் என்பதையும், போர்ச்சுகீசியர்கள் வருவதற்கு முன்பே மக்கள் கப்பல் கட்டுங்கலையை அறிந்தவர்களாயிருந்தனர் என்பதையும் கல்வெட்டுச் சான்று நிரூபிக்கிறது. எனினும், விசயநகரப்பேரரசு எவ்வாறு 'கப்பல்போக்குவரத்தை நடத்தியது என்ற முக்கியமான பிரச்சினையைப்பற்றி' நமக்குத் தெளிவான விளக்கம் கிடைக்கவில்லை.

விசயநகரப் பேரரசின் நாணயங்கள் பல்வேறு வகையாக வழங்கப்பட்டு இருந்தன. அவை தங்கம், செப்பு ஆகிய உலோகங்களினால் செய்யப்பட்டிருந்தன. வெள்ளியால் செய்த நாணயம் ஒன்றின் மாதிரியும் கிடைத்திருக்கிறது. நாணயங்கள் ஆட்சியாளர்களின் மத நம்பிக்கைக்கு ஏற்றவாறுவெவ்வேறு கடவுள்கள், விலங்குகள் ஆகியவற்றின் அடையாளங்களைப் பெற்றிருந்தன. பொருள்களின் விலைகள் மிகக் குறைவாயிருந்தன. மக்களுள் உயர்ந்த சாதியினர் உயர்ந்த வாழ்க்கைத் தரத்தைப் பெற்றிருந்தனர் என்பதை வெளிநாட்டாரின் குறிப்புகள் கூறுகின்றன. ஆனால், பொதுமக்கள் பாரமான வரிச்சுமையைத் தாங்காது வருந்திக்கொண்டிருந்தனர் என்பதைக் கல்வெட்டுகளிலிருந்து நாம் அறிகிறோம். உள்நாட்டுக் கவர்னர்களால் வரி மிகுந்த கொடுமையுடன் வசூலிக்கப்பட்டது. எனினும், சில சமயங்களில் அவர்கள் மேலதிகாரிகளால் அடக்கப்பட்டனர்.

## ஈ. விசயநகரப் பேரரசில் சமுதாய வாழ்க்கை

வெளிநாட்டுப் பயணிகளின் குறிப்புகள், கல்வெட்டுகள், இலக்கியம் முதலியவை விசயநகரப் பேரரசில் இருந்த மக்களின் சமுதாய வாழ்க்கையின் வெவ்வேறு கூறுகளின் குறிப்புகளை ஏராளமாகப் பெற்றிருக்கின்றன. அவற்றுள் மிகவும் முக்கியமானவற்றை மட்டும் இங்கே பார்ப்போம். பெண்கள் பொதுவாகச் சமுதாயத்தில் ஓர் உயர்ந்த நிலையில் இருந்தனர். அவர்கள் நாட்டின் சமுதாய, அரசியல், இலக்கிய வாழ்க்கையில் பங்கெடுத்துக் கொண்டதைப்பற்றிய சான்றுகளும் உள்ளன. மற்போர், வாள், கேடயம் இவற்றைக் கையாளுதல், இசை, மற்ற நுண்கலைகள் முதலியவற்றில் பயிற்சி பெற்றிருந்ததுடன், அவர்களுள் சிலராவது ஓரளவு நல்ல இலக்கியக் கல்வியைப் பெற்றிருந்தனர். நூனிஸ் என்பவர், 'அவர் (விசயநகர அரசர்) மற்போர் செய்யக்கூடிய பெண்களையும் வைத்துள்ளார். சில பெண்கள் சோதிடர்களாயும், குறி சொல்லுவோராயும் உள்ளனர். வாயில்களுக்கு உள்ளாகச் செய்யப்படும் எல்லாச் செலவுகளைப்பற்றிய கணக்குகளையும் எழுதும் பெண்களும் அவரிடம் இருந்தனர். சில பெண்களுடைய கடமை இராச்சியத்தின் எல்லாவிவகாரங்களையும் எழுதி அவற்றை

இராச்சியத்துக்கு வெளியே இருப்பவர்கள் எழுதியவற்றுடன் ஒப்பிட்டுப்பார்ப்பதாக இருந்தது. அவரிடம் இசைக்காகச் சில பெண்கள் இருந்தனர். அவர்கள் இசைக்கருவிகளை மீட்டுபவர் களாயும் பாடுபவர்களாயும் இருந்தனர். அரசரின் மனைவியர்கள் கூட இசையில் தேர்ச்சிபெற்றவர்களாயிருந்தனர்...அவர் நீதிபதி களையும், இரவில் அரண்மனையைக் காவல் செய்யும் காவலாளி களையும் வைத்திருந்தார் என்றும், அவர்கள் பெண்களாயிருந் தனர் என்றும் சொல்லப்படுகின்றன' என்று குறிப்பிடுகிறார். பல பெண்களை மணந்துகொள்வது, குறிப்பாகச் செல்வமிக்க வகுப் பினரிடையே ஏற்றுக்கொள்ளப்பட்ட வழக்கமாக இருந்தது. பாலிய விவாகம் வழக்கமான பழக்கமாயிருந்தது. மிகு அநியாய மான வரதட்சணைகள் வாங்குவது வாழ்க்கையில் நல்ல இடத்தைப் பெற்றிருந்தவர்களிடையே மிகுதியாகக் காணப்பட்டது. அரசாங் கம் ஓரேவழி பல்வேறு சாதியினரிடையே எழும் பிணக்குகளைத் தீர்த்து வைப்பதற்காக அவர்களுடைய சமுதாய விவகாரங்களில் தலையிட்டது. சதி சடங்கு அதாவது இறந்த கணவர்களுடன் பெண்கள் தாங்களாகவே தீப்புகுதல் விசயநகரத்தில் மிகு சாதாரணமாகக் காணப்பட்டது.பிராமணர்கள் அவ் வழக்கத்தை மிகுதியாக அனுமதித்தனர். அரசர்களால் உயர்வாக மதிக்கப் பட்டிருந்தமையின், பிராமணர்கள் சமுதாயச் சமய விஷயங்களில் மட்டுமன்றி அரசாங்கத்தின் அரசியல் விஷயங்களிலும் மிகு அதிக மாகச் செல்வாக்கைப் பயன்படுத்தினர். அவர்களைப்பற்றி நூனிஸ் 'வாணிகத்தில் நேர்மையானவர்களாயுள்ளனர்; அதிகத் திறமை யுள்ளவர்கள் ; கணக்கில் மிகவும் திறமையானவர்கள் ; ஒல்லி யானவர்கள் ; நல்ல தோற்றத்தினர்; ஆனால், கடினவேலைக்குச் சிறிதும் தகுதியற்றவர்கள்,' என்று வருணித்துள்ளமை இங்குக் குறிப்பிடத்தக்கதாகும்.

உணவு விஷயத்தில் கண்டிப்பான தடைகள் எவையும் இல்லை. பழங்கள், காய்கறிகள், எண்ணெய்கள் இவற்றுடன் மக்கள் மிகுந்த மதிப்பு வைத்திருக்கும் பசுக்கள், எருதுகள் ஆகிய வற்றின் இறைச்சி தவிர மற்ற எல்லாவகையான இறைச்சிகளும் பொதுமக்களால் உணவாக உண்ணப்பட்டன. ஆனால், பிராமணர்கள் ஒருபோதும் 'உயிருள்ள பொருளைக்' கொன்றதோ அவற்றைத் தின்றதோ இல்லை. விசயநகர அரசர் களின் உணவுகளைப்பற்றி நூனிஸ் கீழ்க்காணும் விளக்கத்தைத் தருகிறார்.

'இந்தப் பிஸ்நாக அரசர்கள் எல்லாவகையான பொருள் களையும் உண்கின்றனர்; ஆனால் 'பசுக்கள், எருதுகள் ஆகிய

வற்றின் இறைச்சியைத் தின்பதில்லை. அவற்றை அவர்கள் வணங்குகிறார்கள். அவர்கள் இறைச்சி பன்றிக்கறி, மீன்கறி, கோழிக்கறி, முயல்கறியையும் புறாக்கள், குருவிகள் போன்ற எல்லாவகையான பறவைகளின் இறைச்சியையும் தின்கின்றனர். சிறு குருவிகள், எலிகள், பூனைகள், பல்லிகள் இவற்றின் இறைச்சிகள் பிஸ்நாக நகரின் சந்தையில் விற்கப்படுகின்றன.

ஒவ்வொன்றும் உயிருடன் விற்கப்பட வேண்டும். அப்போது தான் வாங்குகிறவர்கள் என்ன வாங்குகிறோம் என்று அறிந்து கொள்ள முடியும். இது பெரு விலங்குகளைப்பற்றிய வரைதான். ஆறுகளிலிருந்து பெரிய எண்ணிக்கைகளில் மீன்கள் கொண்டு வரப்படுகின்றன.'

பேயெஸ், நூனிஸ் முதலியவர்களுடைய கூற்றுகள் உண்மையாயின், 'இது அரசர்களுக்கும் மக்களுக்கும் ஒரு வியப்பான உணவு முறையே. ஏனெனில், கிருஷ்ண தேவராயர், அச்சுத ராயர் காலங்களில் அவர்கள் விஷ்ணுவின் சில உருவங்களில் தனிப்பக்தி கொண்டவராய் ஆர்வமிக்க இந்துக்களாய் இருந்தனர்' என்று டாக்டர் ஸ்மித் குறிப்பிடுகிறார். பெரும்பாலும் எலிகள், பூனைகள், பல்லிகள் இவை மக்களுள் தாழ்ந்த பிரிவினராலேயே உண்ணப்பட்டிருக்கும். விசயநகர ஜனத்தொகையில் அவர்கள் ஆரியரல்லாத இனத்தினராயிருந்தனர்.

இராச்சியத்தில் எண்ணில்லாத உயிர்ப் பலிகள் கொடுக்கப்பட்டதை வெளிநாட்டுப் பயணிகள் குறிப்பிடுகின்றனர். பேயெஸின் கூற்றுப்படி அரசர் 24 எருமைகள், 150 ஆடுகள் ஆகியவை பலியிடப்படுவதைப் பார்ப்பது வழக்கம். பெரிய அரிவாளால் ஒரே வெட்டில் அவற்றின் தலைகள் வெட்டப்பட்டன. புகழ்பெற்ற (நவராத்திரி) 'ஒன்பது நாள் விழாவின்' கடைசி நாளில் 250 எருமைகளும், 4,500 ஆடுகளும் கொல்லப்பட்டன.

### உ. கலையும் இலக்கியமும்

மிகச் சிறந்த பண்பாட்டு, கலைத் திறமைச் சாதனைகளைப் பெற்றிருந்த பெருமை விசயநகரப் பேரரசுக்குண்டு. பேரரசர்கள் வடமொழி, தெலுங்கு, தமிழ், கன்னடம் முதலிய மொழிகளை ஆதரித்தனர். அவர்களுடைய ஆதரவின்கீழ் மிகச் சிறந்த சில இலக்கியங்கள் இயற்றப்பட்டன. வேதங்களுக்குப் புகழ்பெற்ற உரை எழுதிய சாயனரும், அவருடைய சகோதரர் மாதவரும் விசயநகர ஆட்சியின் தொடக்கக் காலத்தில் வாழ்ந்தனர். அவர்கள் அரசாங்கத்துடன் நெருங்கிய தொடர்பு கொண்டிருந்

தனர். மற்ற எல்லாத் துறைகளிலும் போலவே இந்தத் துறையிலும் கிருஷ்ணதேவராயரின் ஆட்சி சிறப்பான முக்கியத் துவம் உடையதாய் உள்ளது. 'அவர் ஆட்சியில் தென் இந்தி யாவின் இலக்கிய வரலாற்றில் ஒரு புதிய சகாப்தம் தோன்றியது. தாமே ஒரு கற்றறிந்தவராயும், இசைவாணராயும், கவிஞராயு மிருந்த அவர், தம்மைச் சுற்றிக் கவிஞர்கள், தத்துவ வாதிகள், சமய குருமார்கள் முதலியோர் இருப்பதை மிக விரும்பினர். நிலமாகவும், பொருளாகவும் பெருங்கொடை கொடுத்து அவர் களைப் பெருமைப்படுத்தினர்.' அவர் தம்முடைய தலைசிறந்த பெருநூலான ஆமுக்த மால்யதாவைத் (Amukta Malyada)



விட்டல சுவாமி கோயில், விசயநகர்

தெலுங்கில் இயற்றினர். அதன் முன்னுரையில் அவர் தம்மால் வடமொழியில் எழுதப்பட்ட ஐந்து நாடகங்களைக் குறிப்பிடுகிறார். இந் நூல் சமய அறிவுக்கு மட்டும் முக்கியத்துவம் உடையதாக அன்றிக் கிருஷ்ணதேவராயரின் ஆட்சியின் வரலாற்றறிவுக்கும் மிகப் பெரிய முக்கியத்துவம் வாய்ந்ததாக உள்ளது. அவருடைய அரசவையில் 'அஷ்டதிக் கஜங்கள் (எட்டு யானைகள்) எனப்புகழ் பெற்ற கவிஞர்கள் (தெலுங்கு) இலக்கிய உலகத்தைத் தாங்குப வர்கள்—இருந்தனர்'. அவருடைய அரசவைக் கவிஞரான பெத்தண்ணு பெரும் புகழை அடைந்திருந்தார்; தெலுங்கு ஆசிரியர்களுள் உயர்ந்த நிலையை எய்தியிருந்தார். ஆரவீடு அரச

மரபு ஆட்சியாளர்கள்கூடக் கவிஞர்களையும், சமய ஆசிரியர்களை யும் ஆதரித்தனர். 'புதுப்பிக்கப்பட்ட பேராற்றலுடன்' தெலுங்கு இலக்கியம் அவருடைய ஆதரவினுல் பெருகியது. பேரரசர்களின் உறவினர்களிலும், சிறு சிற்றரசர்களிலும் நூலாசிரியர்கள் இருந் தனர். இசை, நடனம், நாடகம், இலக்கணம், தருக்கம், தத்துவம் முதலியவற்றைப்பற்றிய நூல்கள் பேரரசர்களாலும், அவர்களுடைய அமைச்சர்களாலும் வரவேற்கப்பட்டு ஊக்கு விக்கப்பட்டன. சுருங்கக்கூறின், விசயநகரப் பேரரசு 'தென்னிந் தியப் பண்பாட்டின் தொகுப்பாய்' இருந்தது.

பண்பாட்டு வளர்ச்சியுடன், கலையும் கட்டடக் கலையும் போற்றத்தக்க அளவுக்கு வளர்ந்தன. பேரரசின் பழைய தலைநகரின் பாழடைந்த பகுதிகள் அதன் புகழ் உச்சநிலையில் இருந்த காலத்தில் உள்நாட்டுக் கலைஞர்களால் கட்டடக்கலை, சிற்பக்கலை, ஓவியக்கலை இவற்றில் தனிப்பட்ட ஒரு பாணி உருவாகியிருந்தது என்பதை உலகுக்குப் பறைசாற்றுகின்றன.

கிருஷ்ணதேவராயரின் ஆட்சிக்காலத்தில் கட்டப்பட்ட புகழ் பெற்ற ஹயாராக் கோயில் 'இந்துக் கட்டடக்கலையில் மிகு பூரணத் துவம் வாய்ந்த ஒரு மாதிரி' யாகும் என்று லாங்கர்ஸ்டு(Longhurst) கூறுகிறார். விட்டல சுவாமி கோயிலும் விசயநகரப் பாணிக்கு ஒரு சிறந்த எடுத்துக்காட்டாகும். ஃபெர்கூசனின் (Ferguszn) கருத்துப்படி, அது 'கட்டடக்கலைப் பாணி மிகு பேரழகுடன் முன்னேறியிருந்த தன் கடைசி எல்லையைக் காட்டுகிறது'. ஓவியக் கலையும் உயர்ந்த அளவு சிறப்பை எய்தியிருந்தது. இசைக்கலை மிகு விரைவாக வளர்ந்தது. இசையைப் பற்றிச் சிறு புது நூல்கள் இயற்றப்பட்டன. கிருஷ்ணதேவராயரும் அவருடைய பிரதிநிதி இராமராயரும் இசையில் வல்லவர்களாயிருந்தனர். இராச்சியத்தின் மக்களுக்கு இன்பப் பொழுதுபோக்குவதற்கு நாடகக் கொட்டகைகள் பயன்பட்டன.

### ஊ. விசயநகரப் பேரரசின் ஆட்சிமுறை

விசயநகரப் பேரரசு படிப்படியாக ஒரு மத்திய ஆட்சியாக மலர்ந்தது. அதனுடைய எல்லாக் கிளைகளும் கவனமாக ஒழுங்கு படுத்தப்பட்டன. ஐயமின்றித் தாங்கள் எடுத்துக்கொண்ட குறிக்கோள்களுக்காக அரசர்கள் வலிமை வாய்ந்த படை ஒன்றை வைத்திருப்பதும், படையெடுப்புகளைச் செய்வதும் இன்றியமை யாதவையாய் இருந்தன. ஆனுல், அந்த அரசாங்கம் சிறப்பாகப் படையின் ஆட்சியைப் பெற்றதென்றும், படைபலத்தின் அடிப் படையில் அமைந்தது என்றும் கூறுவதும், அந்த ஆட்சியலமைப்பு

'வளர்ச்சிக்கேற்ற கொள்கை எதுவுமே பெற்றிருக்கவில்லை;...... மனித முன்னேற்றக் குறிக்கோளைக் கொண்டிருக்கவில்லை; அதனால் நீண்டகாலம் நீடிக்க முடியாது' என்று தற்கால ஆசிரியர் ஒருவர் கூறியதைப்போலக் குறை கூறுவதும் சரியன்று. உண்மையில் பேரரசு விரிவடையும்போதெல்லாம் அதனுடைய அரசர்கள் ஆட்சி முறையை மிகவும் திறம்படக் கவனித்துக்கொண்டனர். அதனால், போர்க்காலங்களில் நிலவிய அமைதிக்குலைவுகள் நீக்கப்பட்டன. வெவ்வேறு துறைகளில் அமைதியான செயற்பாடுகளைச் செய்யும் வாய்ப்பு ஏற்பட்டது.

இடைக்காலத்து விளங்கிய பிற அரசுகளைப்போல விசயநகர அரசிலும் அரசரே எல்லா அதிகாரத்திற்கும் தலையூற்றாக இருந்தார். அவரே உள்நாட்டு, படைத்துறை, நீதித்துறை விவகாரங்களில் தலைமையான அதிகாரியாவார். அவர் சமுதாயச் சிக்கல்களைத் தீர்ப்பதற்காக மக்கள் விவகாரங்களிலும் தலையிட்டார். ஆனால், அவர் இராச்சியத்தின் நலங்களைப் புறக்கணித்தும், மக்களின் உரிமைகளையும் விருப்பங்களையும் புறந்தள்ளியும் பொறுப்புணர்ச்சியின்றித் தம் விருப்பப்படி ஆட்சி செய்பவராயிருக்கவில்லை. விசயநகர அரசர்கள் மக்களின் நல்லெண்ணத்தைப் பெறுவது எப்படி என்று அறிந்திருந்தார்கள். அவர்கள் தங்களுடைய அரசியல் கொள்கைமூலம் 'இராச்சியத்தில் அமைதியும் செழிப்பும் கொண்டுவர முயன்றனர்'. 'முடிதரித்த ஓர் அரசர் தருமத்தின்மேல் ஒரு கண் வைத்துக் கொண்டே அரசாளவேண்டும்' என்று கிருஷ்ணதேவராயர் தமது ஆமுக்த மால்யதாவில் எழுதியுள்ளார். மேலும், அவர் 'அரசர் தம்மைச் சுற்றிலும் அரசியல் கலையில் திறமை பெற்றவர்கள் சூழ்ந்திருக்க ஆட்சிபுரியவேண்டும்; இராச்சியத்தில் விலைமதிப்புயர்ந்த உலோகங்களைக் கொடுக்கும் சுரங்கங்களைத் தேடி வெட்ட வேண்டும்; உலோகங்களை எடுக்க வேண்டும்; மக்களிடமிருந்து மிதமான வரியையே வசூலிக்கவேண்டும்; படைபலத்துடன் எதிரிகளை முறியடித்துத் தாக்க வேண்டும்; நட்பு மனப்பான்மையுடையவராயிருக்க வேண்டும்; குடிமக்களுள் எல்லாரையும் பாதுகாக்க வேண்டும்; அவர்களுக்குள் சாதிகள் கலப்பதைத் தடுக்க வேண்டும்; பிராமணர்களின் தகுதியை உயர்த்திக் கூற எப்போதும் முயலவேண்டும்; கோட்டையை வலிமைப்படுத்தி வேண்டாத பொருள்கள் அதிகமாகச் சேர்த்துவிடாமல் அவற்றைக் குறைக்க முற்படவேண்டும்; நகரங்களின் தூய்மையைப் பற்றி எப்போதும் விழிப்பாயிருக்க வேண்டும்......' என்று குறிப்பிட்டுள்ளார்.

அரசர்களால் நியமிக்கப்பட்ட அமைச்சர்களின் அவை ஆட்சிமுறை வேலையில் அவருக்கு உதவியாய் இருந்தது. பிராமணர்கள் ஆட்சியில் உயர்ந்த பதவிகளை வகித்துக்கொண்டு பேரளவிற்குச் செல்வாக்குடையவர்களாய் இருந்தபோதிலும், மந்திரிகள் அவர்களிடமிருந்தும், க்ஷத்திரிய வைசியர்களிடமிருந்தும் தேர்ந்தெடுக்கப்பட்டனர். மந்திரியின் பதவி 'சில சமயங்களில் பரம்பரையாய் வருவதாகவும், சில சமயங்களில் தேர்ந்தெடுக்கப் படுவதாயும் இருந்தது'. அப்துர் ரஸ்ஸாக்கும், நூனிஸூம் ஒரு வகையான அரசாங்கச் செயல் அலுவலகம் இருந்ததாகக் குறிப் பிடுகின்றனர். அமைச்சர்களைத் தவிர அரசாங்கத்தின் மற்ற அதிகாரிகள் தலைமைக் கஜானாத் தலைவர், நகைகளின் பொறுப் பாளர், அரசாங்கத்தின் வாணிக நலன்களைக் கவனித்துக் கொள்பவர், காவல்துறை அதிகாரிகள் (அவர்கள் நகரில் குற்றத்தைத் தடுப்பதும், ஒழுங்கை நிலை நாட்டுவதும் கடமை களாகக் கொண்டிருந்தனர்) குதிரையின் தலைமைத் தலைவர் என்பவராவர். அரசர்களின் புகழைப் பாடும் பாத்கள் (bhats), வெற்றிலை மடித்துக் கொடுப்போர், அல்லது அரசின் சொந்த வேலைகளைக் கவனித்துக்கொள்பவர், நாட்குறிப்புத் தயாரிப் பவர், எழுத்துச் செதுக்குவோர், கல்வெட்டுகளைப் பொறிப்பதற் குரிய பாடல்களை இயற்றுவோர் கீழ் அதிகாரிகளாவர்.

தலைநகரில் மிகு பெருஞ் செலவில் விசயநகர மன்னர்களால் ஒரு சிறப்புமிக்க அரசவை பேணப்பட்டுவந்தது. அந்த அவைக்குப் பிரபுக்கள், புரோகிதர்கள், இலக்கிய ஆசிரியர்கள், சோதிடர்கள், இசைவாணர்கள் முதலியோர் சென்றனர். திருவிழாக்கள் பெரும் ஆடம்பரத்துடனும் பெருஞ் சிறப்புடனும் கொண்டாடப்பட்டன.

பேரரசு ஆட்சிமுறை வசதிக்காகப் பல மாகாணங்களாகவும் (இராஜ்யம், மண்டலம், சாவடி,) அவை மேலும் கருநாடகத்தில் வெண்டே[1], நாடு[2], சீமா, கிராமம், ஸ்தல[3] என்றும், தமிழ்நாட்டுப் பகுதியில் கோட்டம்[4], பற்று, நாடு, கிராமம் என்றும் பிரிக்கப் பட்டிருந்தன. பேரரசில் எத்தனை மாகாணங்கள் இருந்தன என்று தெளிவாய்ச் சொல்வது கடினம். சில ஆசிரியர்கள் பேயெஸ் கூறுவதை நம்பி, பேரரசு 200 மாகாணங்களாகப் பிரிக்கப்

1 நாடு என்பதினும் பெரிய நாட்டுப் பிரிவு.

2 கிராமத்தினும் பெரிய நாட்டுப் பிரிவு.

3 பல வயல்களைக் கொண்ட நிலத்தின் ஒரு பகுதி.

4 பற்று என்பதைக்காட்டிலும் பெரிய நாட்டுப் பிரிவு. பற்று. நாடு என்பதினும் பெரியது.

பட்டிருந்தது என்று கூறுகின்றனர். ஆனால், அந்த வெளிநாட்டுப் பயணி 'மாகாண அரசப் பிரதிநிதிகளுக்கும் கப்பங்கட்டும் சிற்றரசர்களுக்கும், வெறும் அரசாங்க அதிகாரிகளாயிருந்த சிறு பிரபுக்களுக்கும் வேறுபாடு தெரியாமலிருந்தார்' என்பது தெளிவு. கிருஷ்ணசாஸ்திரி என்பவரின் கருத்துப்படி பேரரசு ஆறு முக்கிய மாகாணங்களாகப் பிரிக்கப்பட்டிருந்தது. ஒவ்வொரு மாகாணமும் அரசப் பிரதிநிதி, நாயகர் அல்லது நாயிக்[1] என்பவரின்கீழ் இருந்தது. அவர்கள் அரச குடும்பத்தைச் சேர்ந்தவராகவோ, அரசாங்கத்தில் செல்வாக்குள்ள பிரபுவாகவோ பழைய அரச குடும்பங்களின் வழித்தோன்றலாகவோ இருப்பர். ஒவ்வொரு அரசப் பிரதிநிதியும் தம்முடைய ஆட்சி எல்லையில் உள் நாட்டு, படைத்துறை, நீதி அதிகாரங்களைச் செலுத்தினர். ஆனால், அவர்கள் தங்களுடைய பொறுப்பிலிருந்த மாகாணத்தின் வரவு, செலவுக் கணக்குகளை ஒழுங்காக மத்திய அரசாங்கத்துக்கு அனுப்பிவைக்கவும், தேவைப்பட்ட காலங்களில் படைஉதவி செய்ய வேண்டியவர்களாகவும் இருந்தனர். மேலும், அவர்கள் துரோகம் செய்பவர்களாகவோ, குடிமக்களைத் துன்புறுத்துபவர்களாகவோ மெய்ப்பிக்கப்பட்டால் அவர்கள் அரசரால் கடுமையான தண்டனைக்கு உள்ளாக்கப்படுவார்கள். தங்கள் மாகாணத்தின் வருமானத்தில் மூன்றில் ஒரு பங்கு அரசாங்கத்திற்கு அனுப்பத்தவறினால் அவர்களுடைய சொத்து பறிமுதல் செய்யப்பட்டு, அரசாங்கத்துடன் சேர்த்துக்கொள்ளப்படும். பொதுவாக நாயிக்குகள் பொதுமக்களிடமிருந்து வரி வசூல் செய்வதில் கடுமைமிக்கவர்களாயிருந்தாலும், அவர்கள் உழவுத்தொழிலுக்கு ஊக்கம் கொடுத்தல், புதிய கிராமங்களைத் தோற்றுவித்தல், மதத்தைக் காப்பாற்றுதல், கோயில்களையும் மற்றக் கட்டங்களையுங் கட்டுதல் முதலிய பயனுள்ள வேலைகளில் கவனமில்லாதவர்களாயிருக்கவில்லை. ஆனால், விசயநகர அதிகாரம் ஒரேயடியாக மறைந்தபோது, தென்னிந்தியாவில் பதினேழு, பதினெட்டாம் நூற்றாண்டுகளில் நிலவிய குழப்பங்களுக்குப் பெரிதும் அவர்களே காரணமாயிருந்தனர்.

கிராமத்தை மிகச் சிறு பகுதியாகக் கொண்டு விசயநகர அரசர்கள் வளமான, தீவிரமான உள்நாட்டு ஆட்சிமுறையைப் பரம்பரையாகப் பெற்றுத் தொடர்ந்து மேற்கொண்டு வந்தனர். ஒவ்வொரு கிராமமும் தன் தேவையை நிறைவேற்றிக்கொள்ளும் பகுதியாக இருந்தது. வட இந்தியாவில் இருந்த பஞ்சாயத்தைப் போல, கிராமச் சபைகள் தலைமுறை தலைமுறையாக

[1] நாயிக் என்ற சிறப்புப்பெயர் சுங்கம் வசூலிப்போர்க்கும், படைத்தளபதிகளுக்குங்கூடக் கொடுக்கப்பட்டது.

வந்த கிராம அதிகாரிகள் மூலம் நிருவாகம், நீதி, காவல் முதலிய விஷயங்களில் தங்கள் பொறுப்பிலுள்ள பகுதியில் அதிகாரம் செலுத்திவந்தன. அக் கிராம அதிகாரிகளுள் சேனத்தேயோவா (Senateova) என்பவர் கிராமக் கணக்கர். தலாரா (Talara) என்பவர் கிராமக் காவலாளி அல்லது அதிகாரி. பேகாரா (Begara) என்பவர் கட்டாயப்படுத்தி வேலை வாங்கும் கண்காணியாவர். மேலும், சில அதிகாரிகளும் இருந்தனர். அவர்களுக்கு நிலக்கொடைகள்மூலம் அல்லது விளைச்சலின் ஒரு பகுதியைக் கொடுப்பதன்மூலம் ஊதியமளிக்கப்பட்டது. வாணிகக் குழுக்கள் அல்லது நிறுவனங்கள் தலைவர்கள் 'கிராமச் சபைகளின் உறுப்பினர்களாகவே இருந்தனர்' என்று தெரிகிறது. கிராம ஆட்சியைப் பொதுவாகக் கண்காணித்து வந்த மகாநாயகாசாரிய என்ற தம்முடைய அதிகாரிமூலம் அரசர் கிராம ஆட்சியுடன் தொடர்பு கொண்டிருந்தார்.

சிஸ்ட் (Sist) என்று அழைக்கப்பட்ட நிலவருமானம் விசயநகர அரசாங்கத்தின் முக்கியமான வருவாய் மூலமாகும். அதவானே (Athavane) என்ற இலாக்காவின்கீழ் அந்த அரசாங்கம் மிக திறமை வாய்ந்த நிலவருமான முறையைப் பெற்றிருந்தது. நிலங்கள் வரி விதிப்பிற்காக நீர்ப்பாய்ச்சல் நிலம், புன்செய், காடுகள் என்று மூன்று பிரிவாகப் பிரிக்கப்பட்டிருந்தன. குடிவாரத்தினர் கொடுக்க வேண்டிய வரி இவ்வளவு என்று தெளிவாகக் கூறப்பட்டது. அரசாங்கத்தின் பெருஞ் சுமைகளைப் போக்குவதற்காகவும், தம்முடைய எதிரிகளை எதிர்ப்பதற்காக வேண்டிய பணமும், ஆள்களும் பெறும் சிக்கலைத் தீர்ப்பதற்காகவும், விசயநகரப் பேரரசர்கள் பரம்பரையாக விளைச்சலில் ஆறிலொரு கடமை வாங்குவதை விட்டு வரியைச் சிறிதளவு உயர்த்தினர். 'உழவர்கள் தங்கள் விளைச்சலில் பத்திலொரு பங்கைக் கொடுக்க நேர்ந்தது' என்று நூனிஸ் கூறும் கூற்று ஏற்றுக்கொள்ளக்கூடியன்று. விசயநகர அரசர்கள் 'தரவேறுபாட்டுக் கொள்கையை, அதாவது நிலங்களின் வளத்துக்கேற்ப வரி வசூலிக்கும் கொள்கையை மேற்கொண்டிருந்தனர். நில வரியைத் தவிர, இரயத்துக்கள் மேய்ச்சல் வரி, திருமண வரி முதலிய மற்ற வகையான வரிகளையும் செலுத்த வேண்டியிருந்தது. சுங்க வரிகளிலிருந்து கிடைக்கும் வருமானமும், பாதைகளின்மேல் இடப்பட்ட வரியும், தோட்டங்கள் தோட்டக்கால்கள் இவற்றினின்று வரும் வருமானமும், பொதுவாக எல்லாராலும் பயன்படுத்தப்படுகிற பொருள்களை விற்போர், உற்பத்தி செய்வோர், தொழிலாளிகள், குயவர்கள், வண்ணார்கள், செருப்புச் செய்வோர்கள், நாவிதர்கள், சன்னியாசிகள், கோயில்

கள் பொதுமகளிர் இவர்களிடமிருந்து வசூலிக்கும் வரிகள் முதலியனவும் அரசாங்கத்திற்குரிய வேறு வருவாய்களாக இருந்தன. சோழர்கள் காலத்தைப்போலவே வரிகள் பணமாகவும் தானியமாகவும் செலுத்தப்பட்டன.

விதிக்கப்பட்ட வரி சுமைமிக்கது என்பதிலும், மாகாணக் கவர்னர்களும், வருமான அதிகாரிகளும் அடிக்கடி மக்களை நசுக்கிவந்தனர் என்பதிலும் ஐயமில்லை. ஆனால், அதேசமயத்தில் அரசாங்கத்திடம் குறைகள் முறையிடப்பட்டபோது அரசாங்கம் மக்களின் துன்பங்களைக் குறைத்தது. சில சமயம் வரிகள் குறைக்கப்பட்டன அல்லது வரிவிலக்குச் செய்யப்பட்டன என்பதற்கும், தேவையானபோது பொது மக்கள் நேரடியாக அரசரிடம் சென்று முறையிட்டனர் என்பதற்கும் சான்றுகள் உள்ளன. வற்புறுத்தி வரி வசூலித்தல், அடக்குமுறை செய்தல் இவற்றை முறையாக மேற்கொண்டிருந்ததால் பேரரசு சுமார் மூன்று நூற்றாண்டுகளுக்குமேல் நிலைத்திருக்க முடியாதுபோயிற்று.

அரசர்தாம் எல்லாருக்கும் மேற்பட்ட நீதிபதி. எனினும், நீதி வழங்குவதற்காக ஒழுங்கான நீதிமன்றங்களும், சிறப்பான நீதித்துறை அதிகாரிகளும் இருந்தனர். சில சமயங்களில், நாட்டாண்மை நிலையங்களின் ஒத்துழைப்புடன் அரசாங்க அதிகாரிகள் வழக்குகளைத் தீர்த்தனர். நாட்டின் ஒரே சட்டம் 'பிராமணர்கள் அல்லது புரோகிதர்களின் சட்டமாயிருந்தது' என்று நூனிஸ் கூறுவதை நாம் நம்பமுடியாது. ஆனால், நாட்டின் சட்டம் பரம்பரை ஒழுங்குமுறைகள், வழக்கங்கள் ஆகியஇவற்றின் அடிப்படையில் அமைந்திருந்தது; நாட்டின் நடைமுறை பழக்கத்தினால் வலிமையுற்றிருந்தது. அச் சட்டத்திற்குக் கட்டாயமாகக் கீழ்ப்படியும்படி அரசாங்கம் வற்புறுத்தியது. குற்றம் செய்தவர்களுக்குக் கடுமையான தண்டனை வழங்கப்பட்டது. இத் தண்டனை முக்கியமாக நான்கு வகைப்படும். தண்டம் விதித்தல், சொத்து பறிமுதல் செய்தல், சித்திரவதை செய்தல், கொலை செய்தல் என்பவையாகும். திருட்டு, சோரம், துரோகம் இக் குற்றங்களுக்குக் கொலை அல்லது உறுப்புக் குறை தண்டனை வழங்கப்பட்டதாகத் தெரிகிறது. சில சமயங்களில் குற்றவாளிகள் 'யானையின் கால்களின் முன்பு எறியப்படுவர். யானை அவர்களைத் தன் முழங்கால், தும்பிக்கை, கொம்புகள் இவற்றால் மிதித்தும் அடித்தும் கொன்றுவிடும்'. நீதித்துறையில் அதிகாரிகளின் அடக்குமுறை காணப்படாமல் இல்லை. ஆனால், அரசாங்கம் சில சமயங்களில் அவற்றிற்குப் பரிகாரம் அளித்தது.

அந்த அடக்குமுறை 'சில சமயங்களில் நாட்டாண்மை நிலையங்களின் கூட்டு எதிர்ப்பால் வெற்றிகரமாகத் தடுக்கப்பட்டது.

ஹொய்சளர்களைப் போலவே விசயநகர அரசர்களும் நன்கு ஒழுங்குபடுத்தி வைக்கப்பட்ட படைத்துறையை அமைத்திருந்தனர். கண்டாசாரா(Kandachara) என்றழைக்கப்பட்ட அந்தத் துறை தண்டநாயகர் அல்லது தன்னுயகர் (படைத் தளபதி) என்பவரின் கீழ் இருந்தது. சிறு அதிகாரிகளின் குழு அவருக்கு உதவியாக இருந்தது. அரசாங்கம் பெரிய, திறமைமிக்க ஒரு படை வைத்திருந்தது. எனினும், அப் படையின் எண்ணிக்கை எப்பொழுதும் ஒரே மாதிரியாக இல்லை. அரசரின் ஒழுங்கான படைவீரர்களுடன், நெருக்கடிகாலத்தில் சிற்றரசர்கள், பிரபுக்கள் முதலியவர்களுடைய துணைப்படைகள் வந்து சேரும். காலாள், குதிரைப்படை, யானைகள், ஒட்டகங்கள், பீரங்கிப்படை என்பவை படையின் பல்வேறு பிரிவுகளாகும். காலாள் படைக்குப் பொது மக்களில் வெவ்வேறு வகுப்பு, கொள்கை உடையவர்களிலிருந்து. சில சமயங்களில் முஸ்லிம்களிலிருந்துங்கூட ஆள்கள் பொறுக்கி எடுத்துக்கொள்ளப்பட்டனர். பேரரசில் குதிரைகளுக்குப் பஞ்சம் ஏற்பட்டிருந்தமையின், ஆர்மூஸிலிருந்து (Ormuz)நல்ல குதிரைகள் போர்ச்சுகீசியர்கள் மூலம் பொறுக்கியெடுக்கப்பட்டுப் படையுடன் சேர்த்துக்கொள்ளப்பட்டன. கி.பி. 1368லேயே இந்துக்கள் பீரங்கியைப் பயன்படுத்தத் தொடங்கினர்என்பதற்குக் கல்வெட்டுகளும், வெளிநாட்டாரின் குறிப்புகளும் சான்றுகள் தருகின்றன. விசயநகரப் படையின் போரிடும் வன்மையும், ஒழுங்கும் தக்காணத்து முஸ்லிம் இராச்சியங்களின் படைகளில் காணப்பட்டவற்றைக் காட்டிலும் குறைவாகவே இருந்தன.

மேலே கூறப்பட்ட சிறப்புகளைப் பெற்றிருந்தாலும், விசயநகரப் பேரரசு சில குறைபாடுகளை உடையதாகத் துன்புற்றது. முதலாவதாக, மாகாண கவர்னர்களுக்கு நிறைய உரிமை இருந்தது. அதனுல், மத்திய அதிகாரம் பலவீனமடைவதற்கும், கடைசியில் பேரரசு அழிவதற்கும் அது பெருங் காரணமாக முடிந்தது. இரண்டாவதாக, பல்வேறு வசதிகள் இருந்தபோதிலும் பேரரசு தொடர்ந்து வாணிகச் செயல்களில் ஈடுபடத் தவறிவிட்டது. 'இந்தத் தவறுதல் விசயநகரின் பேரரசு வாழ்க்கையில் ஒரு பெருந் தவருயிற்று. இதனுல், நிலையான இந்துப் பேரரசு நிலைபெற்று விளங்க முடியாதுபோயிற்று' என்று டாக்டர் ஐயங்கார் பொருத்தமுறக் கூறுகிருர். மூன்ருவதாக, தாற்காலிகமாகப் பெற்ற நன்மைகளைக் கருதிப் பேரரசர்கள் மேற்குக் கடற்கரையில் போர்ச்சுகீசியர்கள் குடியேற அனுமதித்துவிட்டனர். இவ்வாறு

'ஆதாயக் கொள்கை' தங்களுடைய 'பேரரசு நிலைபேறடைவது என்ற முக்கிய பிரச்சினையைத் தாழ்த்திவிட்டது.

## ஒரிஸ்ஸா இராச்சியம்

அனந்தவர்மன் சோட கங்கனால், அவருடைய நீண்ட எழுப தாண்டு ஆட்சிக்காலத்தில் (சுமார் 1076—1148) ஒரிஸ்ஸா ஓர் ஆற்றல் மிக்க அரசாக ஒருநிலைப்படுத்தப்பட்டது. அந்த இராச்சியம் கங்கையின் வாயிலிலிருந்து தெற்கே கோதாவரியின் வாய்வரை பரந்திருந்தது என்பது பல கல்வெட்டுகளிலிருந்து தெரிகிறது. அமைதியை நிலைநாட்டுவதற்குச் சோடகங்கன் செய்த முயற்சிகள் குறிப்பிடத்தக்கவையாகும். அவர் மதத்தையும், வடமொழி, தெலுங்கு இலக்கியங்களையும் ஆதரித்தார். 'அவருடைய ஆட்சிக்காலத்திலிருந்த ஒரிஸ்ஸாவின் செழிப்புக்கும் கலைத்திறமைக்கும் ஒரு பேரொளிமிக்க நினைவுச் சின்னமாகப் பூரியிலுள்ள ஜகந்நாதரின் பெருங்கோயில் விளங்குகிறது. சோட கங்கனுக்குப்பின் வந்தவர்கள் வெற்றிகரமாக முஸ்லிம் படையெடுப்புகளைத் தடுத்துநிறுத்தித் தங்கள் இராச்சியத்தில் செல்வச் செழிப்பு நிலவுமாறு செய்தனர். அவர்களுள் மிகச் சிறந்தவரும்



கருங்கோயில், நிருத்த மண்டபம், கோனாரக்

புகழ் பெற்றவரும் முதலாம் நரசிம்மன் (1238–1264), வங்காள முஸ்லிம்களுக்கு எதிராகப் போரிட்டுப் போற்றத்தக்க வெற்றி அடைந்ததுடன், பூரியிலிருந்த ஜகந்நாதர் கோயிலைக் கட்டி முடித்தார் என்றும் சொல்லப்படுகிறது. பூரி மாவட்டத்தில்

கோஞரக் என்ற இடத்தில் அவர் சூரியக் கடவுளுக்குப் பெருங் கோயில் ஒன்றைக் கட்டினர். நரசிம்மனுக்குப் பிறகு அவருடைய மரபின் செல்வ வளங்கள் சீர்குலையத் தொடங்கின. கி. பி. 1434-35-ல் அது சூரிய மரபு ஒன்றால் கவிழ்க்கப்பட்டது. அச் சூரிய மரபு ஒரு நூற்றாண்டுக்குமேல் ஒரிஸ்ஸாவை ஆண்டது.

புதிய அரச மரபினை நிறுவிய கபிலேந்திரன் போதுமான சக்தியும், ஊக்கமும், பெருந்திறனும் உடையவராயிருந்தார். பிற்காலக் கங்கர்களின் ஆட்சிக்காலத்தில் தாழ்வடைந்த ஒரிஸ்ஸாவின் மதிப்பை மீண்டும் நிலைநாட்டினர். அவர் தம் நாட்டில் எழுந்த வலிமை வாய்ந்த கிளர்ச்சிக்காரர்களை ஒடுக்கினர். பீடாரின்



தேர்ச்சக்கரம், கோஞரக்

பாமினிச் சுல்தான்களுடனும், விசயநகர அரசர்களுடனும் வெற்றிகரமான போர்களைச் செய்தார்; கங்கையிலிருந்து காவேரிவரை தம் இராச்சியத்தை விரிவாக்குவதில் வெற்றியடைந்தார்; பாமினி அரசின் இதய பாகத்தில் பீடாருக்கருகே வெற்றிப்படையுடன் நுழைந்தார். அவர் விசயநகர அரசப் பிரதிநிதியின் இருப்பிடமாயிருந்த உதயகிரியையும், காஞ்சீபுரத்தையும் உரிமையாகப் பெற்ருர் என்று கோபிநாத்பூர்க் கல்வெட்டில் கூறப்பட்டிருக்கிறது. அடுத்த அரசரான புருஷோத்தமரின் (கி.பி. 1470—1497) ஆட்சிக் காலத் தொடக்கத்தில் சில குழப்பங்கள் எழுந்தன. அச்

சமயத்தில் ஒரிஸ்ஸா இராச்சியம் கோதாவரியிலிருந்து தெற்கிலிருந்த பகுதிகளாகிய தன் ஒரு பாதியை இழந்தது. கிருஷ்ணாவுக்குத் தெற்கிலிருந்த நாட்டை சாளுவ நரசிம்மன் கைப்பற்றினார்; பாமினியர் கோதாவரி, கிருஷ்ணா தோஆப்பைக் கைப்பற்றினர். ஆனால், தம் ஆட்சியின் இறுதிப் பகுதியில், புருஷோத்தமர் தோஆப்பையும், இக் காலக் குண்டூர் மாவட்டம்வரையிலுள்ள ஆந்திர நாட்டின் ஒரு பகுதியையும் திரும்பப் பெற்றார். கபிலேந்திரரின் பேரரசிலிருந்த தமிழ் மாவட்டங்களில் எதையும் அவர் திரும்பப் பெற்றாரா என்பது உறுதியாகச் சொல்லமுடியாது.

புருஷோத்தமரின் மகனும், அவருக்குப் பின்பு பட்டத்துக்கு வந்தவரும், சைதன்யரின் காலத்தில் வாழ்ந்தவரும், அவருடைய சீடருமான பிரதாபருத்திரன் (1497—1540) வங்காளத்தின் ஹூக்ளி, மிட்நாபூர் மாவட்டங்களிலிருந்து, தெலிங்கானா மேட்டுப் பிரதேசத்தின் ஒரு பகுதியை உள்ளடக்கிக் கொண்டு குண்டூர் மாவட்டம் வரையிலுள்ள இராச்சியத்தை உரிமையாகப் பெற்றிருந்தார். ஆனால், விசயநகரத்துக் கிருஷ்ணதேவராயரின் ஆக்கிரமிப்புகளினாலும், கிழக்குக் கரையில் வளர்ந்து வந்த கோல்கொண்டா இராச்சியத்தின் குத்ப்ஷாகியின் ஆக்கிரமிப்புகளினாலும், அந்த அரசின் பரப்பு அப்படியே நீண்டகாலம் நீடிக்கவில்லை. மூன்று போர்களின் விளைவாகப் பிரதாபருத்திரன் தம் காலத்தில் வாழ்ந்த விசயநகர அரசருக்குக் கோதாவரிக்குத் தெற்கேயிருந்த தம் இராச்சியத்தின் பகுதியைக் கொடுத்துவிட நேரிட்டது. 1522-ல் கோல்கொண்டாவின் சுல்தான் குலி குதுப் ஷா ஒரிஸ்ஸா இராச்சியத்தின்மீது படையெடுத்தார்.

சைதன்யர் உபதேசித்த வைணவ சமயத்தின் விளைவாக மக்களும் ஒரிஸ்ஸாவின் அரசர்களும் போர் உணர்ச்சி இழக்கப் பெற்றதனால்தான் ஒரிஸ்ஸா அரசியல் வீழ்ச்சியுறத் தொடங்கியது என்று சிலர் நம்புகின்றனர். அது எப்படியிருந்தபோதிலும் பதினாறும் நூற்றாண்டிலிருந்து ஒரிஸ்ஸா தன் பழைய அதிகாரத்தை இழந்துவிட்டது என்பது உண்மையே. ஏறத்தாழக் கி.பி. 1541-42-ல் கபிலேந்திர அரச மரபு போயி (Bhoi) அரசமரபினரால் கவிழ்க்கப்பட்டது. போயி மரபினை நிறுவியவர் முன்னாள் பிரதாபருத்திரனின் அமைச்சராயிருந்தார். அவர் போயி அல்லது கணக்கு எழுதுவோர் சாதியைச் சார்ந்தவரானதால் அவ் வரச மரபிற்குப் போயி மரபு என்ற பெயர் ஏற்பட்டது. அவருடைய மகனான கோவிந்தனும், இரண்டு பேரர்களும் சுமார் பதினெட்டு ஆண்டுகள் ஆண்டனர். சுமார், கி.பி. 1559-ல் அந்த அரசமரபு முகுந்த ஹரிச்சந்தனால் அகற்றப்பட்டது. அவர்

கி.பி. 1568-ல் இருக்கும்பொழுதும், ஒரிஸ்ஸா இராச்சியத்தை முஸ்லிம் படையெடுப்புகளிலிருந்து காப்பாற்றத் தம்மாலான எல்லா முயற்சிகளையும் செய்தார். இரண்டு பக்கங்களிலிருந்தும் வங்காளத்து ஆப்கானியர்களைத் தாக்குவது என்ற கொள்கையைக் கொண்டிருந்த அக்பர் அவருடைய கூட்டுறவை நாடினர். வங்காளத்துக் காரானீ சுல்தான்கள் ஒரிஸ்ஸாவைக் கி.பி. 1568-ல் இணைத்துக் கொண்டனர். இந்துத் துரோகியான காலாபாஹார் சுலைமான் காரானீயின் மகனுன பாயஸித்துடன் சேர்ந்து கொண்டு ஒரிஸ்ஸாவுக்குச் சென்று ஜகந்நாதர் கோயிலைக் கேவலப் படுத்தினர் என்றும், மரத்தால் செய்யப்பட்ட சிலைகளை அழிக்கவும் முற்பட்டார் என்றும் கூறப்படுகின்றன. பிறகு ஒரிஸ்ஸாவைப் பெறுவதற்காக முகலாய ஆப்கானியப் போட்டி ஏற்பட்டது.

## மேவார்

துருக்கிய ஆப்கானியப் பேரரசு சிதைவுற்றபோது, சில இராசபுத்திர நாடுகள் புத்துயிர்ப் புணர்ச்சியைப் பெற்றுக் கிளர்ந்தெழுந்தன. அவற்றுள் மிகு முதன்மையானது மேவாரின் குகிலாப் பிரதேசமாகும். அங்கே இராசபுத்திர மேதைமை மிக்க பேரொளியுடன் வெளிப்பட்டது. அதனுல், பல தலைமுறைகளில் பல வீரமிக்க தளபதிகள், வீரத்தலைவர்கள், அறிவுமிக்க அரசர்கள் சில ஒளிபடைத்த கவிஞர்கள் தொடர்ந்து தோன்றிவந்தனர். கி.பி. ஏழாம் நூற்றுண்டிலேயே வீரமும் தீரமும் மிக்க குகிலா இனத்தைச் சேர்ந்த இராசபுத்திரர்கள் இந்தப் பிரதேசத்தில் தங்கள் அதிகாரத்தை நிலைநிறுத்தியிருந்தனர். மேவாரின் தலைநகரான சித்தூரை அலாவுதீன்கில்ஜி எப்படி முற்றுகையிட்டுக் கைப்பற்றினர் என்பதையும், ஹமீர் அல்லது அவருடைய மகன் எவ்வாறு முஸ்லிம்களிடமிருந்து அதைத் திரும்பப் பெற்றுத் தம் இனத்தின் மதிப்பை நிலைநாட்டினர் என்பதையும் நாம் ஏற்கெனவே விவரித்திருக்கிறோம். ஹமீர் 'மேவாரின் பேரறிவு வாய்ந்த, மிகுந்த வீரம் பொருந்திய இளவரசர்களுள் ஒருவராக இன்றும் போற்றப்படுமளவு தம் புகழை நிலைநாட்டிவிட்டு, மிக நன்ருக நிறுவப்பட்ட பரந்த அதிகாரமுடைய இராச்சியத்தைத், தம்முடைய மகன் க்ஷேத்திர சிம்மனுக்குக் கொடுத்துவிட்டு முதிர்ந்த வயதில் கி.பி. 1364-ல் இறந்தார். கி.பி. 1382-ல் க்ஷேத்திர சிம்மன் ஒரு குடும்பப் போரில் கொல்லப்பட்டார். அவருக்குப்பின் அவருடைய மகன் லாக்கா பட்டம் எய்தினர். கி.பி. 1418-க்குப் பிறகு லாக்கா இறந்த பிறகு அவருடைய மகன் மொகலா (Mokala) மேவாரின் சிம்மாசனம் ஏறினர்; ஆனுல், அவருடைய மாமன்களுள் இருவரால் கி.பி. 1431-ல் கொலை

செய்யப்பட்டார். அடுத்த மேவார் ராணாவான கும்பா இந்திய வரலாற்றில் மிகச் சிறந்த புகழ் பெற்றவர்களுள் ஒருவராவார். அவருடைய நாட்டின் வரலாற்று ஏடுகளில் அவருடைய ஆட்சிக் காலம் மிகு முக்கியமான காலமாய் இருந்தது. டாட் (Tod) என்பார் அவருடைய சாதனைகளை, 'காக்கசஸிலும், ஆக்சஸ் கரைகளிலும் வந்து சேர்ந்துகொண்டு அவருடைய பேரனை சங்காவின் தலையில் விடிவதற்கிருந்த புயல்களைச் சமாளிப்பதற்காக மேவாரின் வளங்களை உயர்த்தவேண்டி எல்லா முயற்சிகளையும் கும்பா செய்தார். அவர் ஹமீரிடமிருந்த சக்தியும், லாக்காவிடமிருந்த கலைச்சுவையும், அதிர்ஷ்டமளிக்கத்தக்க பரந்த மேதைமையும் ஒருங்கே உடையவராய், மேற்கொண்ட எல்லாச் செயல்களிலும் வெற்றியுற்றார். மீண்டும் மேவாரின் 'சிவப்பு நிறக்



சித்தூர்கார்

(வலது மேல் மூலையில் கிரீஸ்தம்பத்தின் காட்சியைத் தருவது)

கொடியை' ச் சமர்சி தோல்வியுற்ற சக்கர் (Chaggar) நதிக்கரையின் மீது உயர்த்தினர். கும்பா, மாளவம், குஜராத் இவற்றின் முஸ்லிம் அரசர்களை எதிர்த்துப் போரிட்டார். அவருடைய எல்லாப் புது முயற்சிகளிலும் அவர் வெற்றி அடையாத போதிலும், அவர் பேராசை பிடித்த அண்டை நாட்டினரிடமிருந்து தம் சொந்த நிலையைக் காப்பாற்றிக் கொள்ள முடிந்தது. அவர் மாபெருங் கட்டடம் கட்டுவதில் விருப்பினராயிருந்தார். மேவார் தன் மிகச் சிறந்த சில நினைவுச் சின்னங்களுக்கு

அவருக்குக் கடமைப்பட்டிருக்கிறது. மேவாரின் தற்பாதுகாப்புக் காகக் கட்டப்பட்ட எண்பத்து நான்கு கோட்டைகளுள் முப்பத் திரண்டு கும்பாவினுல் கட்டப்பட்டவை. அவருடைய படைத் துறை, புதிது ஆக்கும் மேதைமைக்குப் பேரொளி மிகுந்த நினைவுச் சின்னமாயிருப்பது கும்பல்கார்க் கோட்டையாகும்.' வரலாற்றுப் புகழ் அல்லது யுத்த தந்திர நெறிக்கு முக்கியத்துவம் இவற்றில் ஈடிணையில்லாததாய்' இருந்தது அது. கும்பாவின் ஜயஸ்தம்பம் அல்லது கீர்த்திஸ்தம்பம் (புகழ்க் கோபுரம்) அவருடைய மேதை மைக்கு மற்ருெரு நினைவுச் சின்னமாகும். மேலும், ராணு ஒரு கவிஞராயும், இலக்கிய ஆசிரியராயும், தேர்ச்சி பெற்ற இசைவாணராயுமிருந்தார்' என்று புகழ்ந்து போற்றியுள்ளார். அவர் பெரிதும் கி.பி. 1469-ல் அவருடைய மகன் உதயகரனுல் கொலை செய்யப்பட்டார். உதயகரனின் இக் கொடுமையால் பிரபுக்கள் பேரதிர்ச்சியும் அச்சமும் அடைந்தனர். அவர்கள் அவருடைய தம்பியான ராயமல்லனை ராணுவாக ஏற்றனர். இராயமல்லனின் புதல்வர்கள் சிம்மாசனத்திற்காகத் தங்களுக் குள் சண்டையிட்டுக்கொண்டனர். கடைசியில் சங்கா என்று எல்லாராலும் வழங்கப்பட்ட அவர்களுள் ஒருவரான சங்கராமா கி.பி. 1509-ல் மேவார்ச் சிம்மாசனம் ஏறினுர். சங்கா போற்றத் தக்க படைத்துறை வன்மை பெற்றிருந்தார். நூறு போர்க் களங்களைக் கண்ட வீரரான அவர் தம் உடம்பில் எண்பது காயத் தழும்புகளைப் பெற்றிருந்தார். மேலும், ஒரு கண்ணைக் குருடாக்கிக் கொண்டும், ஒரு காலை முடமாக்கிக் கொண்டும் இருந்தார். அவர் மாளவம், டில்லி, குஜராத் இவற்றை எதிர்த்து வெற்றிகரமாகப் போரிட்டார்; டில்லிச்சுல்தானியத்தின் முறிவின்போது மேவாரின் மேலாண்மையை நிலை நாட்டுவதற் காக அதன் பொருளாதார வளங்கள், போர்ப்படைகள் இவற்றை ஒழுங்குபடுத்தினுர். இதனுல் அவருக்கும், வட இந்தியாவில் மேலாண்மையை நிலை நாட்ட முற்பட்ட எந்த வேறு அரசுக்கு மிடையே போட்டி ஏற்படுவது தவிர்க்கமுடியாததாய் இருந்தது. அடுத்து வரும் அதிகாரம் ஒன்றில் விளக்கிக் கூறப்படவிருக்கும் கானுவாப் போர் இவ் வுண்மையின் நேரடியான விளைவேயாகும்.

## காமரூபமும் அஸ்ஸாமும்

பதின்மூன்றும் நூற்ருண்டின் தொடக்கத்தில் வங்காளத்தில் முஸ்லிம்கள் முன்னேறிக்கொண்டிருக்கும்போது பிரம்மபுத்திராச் சமவெளி, ஒன்றுக்கொன்று போரிட்டுக்கொண்டிருக்கும் கணக் கற்ற பல சிறு சுதந்திரப் பகுதிகளாகப் பிரிந்திருந்தது. சுபன்சிரி, திசாங்கு இவற்றின் கிழக்குப் பகுதியைச் சூதியா மரபு அரசர்கள்

(போடோ-ஷான் இனத்தைச் சார்ந்த மலைநாட்டு மக்கள்) ஆண்டனர். ஆனால், தெற்கிலும் தென்மேற்கிலும் இருந்த ஒரு சிறு பகுதி சில போடோ மலைநாட்டு இனத்தவரின் ஆட்சியின்கீழ் இருந்தது. இன்னும் மேற்கே ஒரு கச்சாரி இராச்சியம் இருந்தது. அது பிரம்மபுத்திராவுக்குத் தெற்கேயிருந்து நவ்காங் (Nowgong) மாவட்டத்தின் குறுக்கே அரைப்பகுதிவரை பரந்திருந்தது. சூதியாக்களுக்கு மேற்கே வடகரையிலும், கச்சாரிகளுக்கு மேற்கே தென்கரையிலும் பூயியாக்கள் (Bhuiyas) என்று வழங்கப்பட்ட சிறு குறுநில மன்னர்களின் இராச்சியங்கள் இருந்தன. மேற்குக் கோடியில் காமரூப இராச்சியம் இருந்தது. அதன் மேற்கு எல்லையில் கரடோயா நதி இருந்தது, அதன் கிழக்கு எல்லை அதனிடம் பகைமைகொண்ட அண்டை நாட்டு அரசர்களைப் பொறுத்து இடம் மாறிக்கொண்டிருந்தது. அது காமடாவின் இராச்சியம் என்று வழங்கப்பட்டது. பதின்மூன்றும் நூற்றாண்டின் தொடக்கத்தில் மாபெரும் ஷான் மலையினத்தின் ஒரு பிரிவினரான ஆஹோம்கள் பிரம்மபுத்திராவின் வரலாற்றில் ஒரு புதிய கூறுக முளைத்தனர். அவர்கள் காமடா இராச்சியத்தின் கிழக்குப்பக்க விரிவினைத் தடுத்தனர். அதன் மேற்கில் அண்டை நாட்டினராயிருந்த வங்காளத்து முஸ்லிம் சுல்தான்கள் அதன் இராச்சியப் பகுதிகளில் பல படையெடுப்புகளைச் செய்தனர். அதனால் வெவ்வேறு விளைவுகள் ஏற்பட்டன.

பதினைந்தாம் நூற்றாண்டின் தொடக்கத்தில் காமடாவில் ஒரு வலிமை வாய்ந்த பேரரசு கேன்களால் (Khens) நிறுவப்பட்டது. அவர்களுடைய தலைநகரம் கூச் பீஹாருக்குச் சில மைல்கள் தெற்கேயிருந்த காமடாப்பூராகும். கேன்கள் காமடாவைச் சுமார் எழுபத்தைந்து ஆண்டுகள் ஆண்டனர். அவர்களுடைய கடைசி அரசர் நிலாம்பர் கி.பி. 1498-ல் அலாவுதீன் ஹுஸேன்ஷாவினால் கவிழ்க்கப்பட்டார். சிறிது காலக் குழப்பத்திற்குப் பிறகு மங்கோலிய மூலத்தையுடைய கொச்மலையினத்தைச் சேர்ந்த பீஸ்வா சிம்ஹா இக் காலத்துக் கூச் பிஹார் என்றழைக்கப்படும் கொச் பீஹாரைத் தலைநகராகக் கொண்டு, கி.பி. 1515-ல் ஒரு வலிமை வாய்ந்த இராச்சியத்தை நிறுவினர். இந்த அரசமரபின் மிகப்பெரிய அரசர் பீஸ்வா சிம்ஹாவின் மகனும், அவருக்குப்பின் ஆட்சிக்கு வந்தவருமான நர நாராயன் ஆவர். அவருடைய ஆட்சியில் காமடா இராச்சியம் செழிப்பில் பெருகி அதன் அதிகார உச்சியை அடைந்தது. ஆனால், அவர் 1581-ல் சங்கோஷ் நதிக்குத் தெற்கிலுள்ள பகுதியைத் தம்முடைய மருமகனான ரகு தேவுக்குப் பிரித்துக் கொடுக்கும் நிர்ப்பந்தத்துக்கு உள்ளானார். இவ்வாறு கொச்

இராச்சியம் கொச் பீஹார் என்றும் முஸ்லிம்களால் கொச் ஹாஜோ என்றும் வழங்கப்பட்ட இரண்டு போட்டிப் பிரதேசங்களாகப் பிரிக்கப்பட்டுவிட்டது. அவர்களுடைய போர்களில் ஆஹோம்களும், முஸ்லிம்களும் தலையிட்டனர். 1639-ல் மேற்கு, கிழக்கு நாடுகள் முறையே முஸ்லிம்கள், ஆஹோம்களின் மேலாண்மையின் கீழ் வந்துசேர்ந்தன.

சுமார் கி.பி, 1215-ல் அஸ்ஸாமில் தோன்றிய ஷான் மலை இனத்தின் ஒருபிரிவினரான ஆஹோம்கள் படிப்படியாகத் தங்கள் நிலையை ஒருநிலைப்படுத்தினர்; ஆறு நூற்றாண்டுகள் நிலைபெற்ற ஒரு வலிமையான முடியாட்சியை நிறுவினர்; இப்பொழுது நாம் பேசிவரும் காலத்தில் அவர்கள், காமரூபத்தில் அரசர்கள், வங்காளத்துச் சுல்தான்கள் இவர்களுடைய கிழக்குப்பக்க விரிவைத் தடுத்து நிறுத்தினர். முஸ்லிம்கள் காமரூபத்தை அடிமைப்படுத்தியபிறகே, அவர்களுடைய தாக்குதலை ஆஹோம்களின் இராச்சியம் எதிர்த்துச் சமாளிக்க முடியாததாயிற்று. இதனால், அஸ்ஸாமைச் சுஹன்பா (Suhenpha) ஆண்டுவந்தபோது அதன்மீது வங்காளத்து அலாவுதீன் ஹுஸேன் ஷா படையெடுத்துச் சென்றார். முஸ்லிம் படைகளை எதிர்த்து அவர் தொடக்கத்தில் சில வெற்றிகளை எய்தியபோதிலும், இந்தப் படையெடுப்பு இவருக்குப் பேராபத்தில் முடிந்தது. முப்பதாண்டுகளுக்கு மேலாக ஆஹோம்-முஸ்லிம் சிக்கல் ஒன்றும் ஏற்படவில்லை. அதன் இரண்டாவது கட்டம் வங்காளத்து முகம்மதியக் குறுநில மன்னர்கள் சிலர் அஸ்ஸாமின்மீது படையெடுத்துச் சென்றபோது தோன்றியது. ஆனால், அவர்களுடைய முயற்சிகள் எல்லாம் 1533 செப்டம்பருக்குள் தோல்வியுற்றன. இவ்வாறு பதினாறும் நூற்றாண்டின் மூன்றாவது பத்தாண்டுகளில் அஸ்ஸாமை வெல்லுவதற்காக வங்காளத்து முஸ்லிம்கள் செய்த முயற்சி தோல்வியில் முடிந்தது. இதற்குப் பிறகு அஸ்ஸாமின் வரலாறு எப்படியிருந்தது என்பது தக்க இடத்தில் கூறப்படும்.

## நேபாளம்

கி.பி. 879ஆம் ஆண்டுவாக்கில் நேபாளம் திபேத்தியப் பிடியிலிருந்து விலகித் தனக்கே உரிய சுதந்திர வரலாற்றைப் பெற்றது. இதற்குப் பிறகு இரண்டு நூற்றாண்டுகள்வரை நேபாளத்தை ஆண்டு வந்த அரசர்களைப்பற்றி நமக்கு அதிகமாக ஒன்றும் தெரியவில்லை. ஆனால், பதினோராம் நூற்றாண்டிலிருந்து நேபாளம் தாக்கூரிகளின் கீழ் சிறப்புற்றது. இரண்டு நூற்றாண்டுகள் வரை (1097—1326) மிதிலையின் கருநாடக அரசரான நான்ய

தேவனும், அவருடைய சந்ததியினரும் தங்களுடைய தலைநகரான சிம்ராவோனிலிருந்துகொண்டே நேபாளத்து உள்நாட்டு இளவரசர்களின்மீது அவ்வளவு உறுதியில்லாத ஒரு மேலாண்மையைக் கொண்டிருக்கும் உரிமை தங்களுக்குண்டு என்று கூறி வந்தனர். கி.பி. 1324-ல் நான்ய தேவனின் வழித்தோன்றலான திர்ஹத்தின் ஹரிசிம்ஹா நேபாளத்தின்மீது படையெடுத்தார். அப்போது நேபாளத்தை ஆண்டுவந்த ஜயருத்திரமல்லன் அவருக்கு அடிபணிந்தார். பட்காவோனில் தம் இருப்பிடத்தை வைத்துக்கொண்டு ஹரிசிம்ஹா படிப்படியாக அந்தச் சமவெளி முழுவதிலும் தம்முடைய அதிகாரத்தைப் பரப்பினர். அவருடைய இராச்சியம் பதினன்காம் நூற்றாண்டில் சீனவுடன் அரசியல் உறவு கொண்டது. ஆனல், அதே சமயத்தில் ஹரிசிம்ஹாவும் அவருடைய வழித்தோன்றல்களும் 'தங்களுடைய அரசாண்மையை ஒப்புக்கொண்ட உள்நாட்டுக் குறுநில மன்னர்கள் இரண்டு மற்றத் தலைநகரங்களான படன், காத்மண்டு ஆகியவற்றை உரிமையாகப் பெற்றிருப்பதைப்பற்றிக் கவலைப்படாதிருந்தனர்.' 1376-ல் மல்ல அரசரான ஜயருத்திரனின் (1320–26) மருமகனின் மகனும், ஜயருத்திரனின் மகளான நாயக தேவியை மணம் புரிந்துகொண்ட ஹரிசிம்ஹா என்ற கருநாடக அரசரின் மரபைச் சேர்ந்த இளவரசரான ஜகத்சிம்ஹாவின் மருமகனுமான ஜயஸ்திதிமல்லன் (Jaya-Sthiti malla) மல்லர்களின் சிம்மாசனத்தைக் கைப்பற்றிக்கொண்டு செயல் முறையில் நேபாளம் முழுவதிலும் தம்முடைய அதிகாரத்தை நிலைநாட்டினர். அதன் பிறகு நேபாளம் அவருடைய சந்ததியினரால் 'ஒழுங்கான தொடர்ச்சியாக ஆளப்பட்டுவந்தது. அவருக்குத் தர்ம மல்லன் ஜயோதிர் மல்லன், கீர்த்தி மல்லன் என்ற மூன்று புதல்வர்கள் இருந்தனர். கி.பி. 1418ஆம் ஆண்டளவில் ஹரிசிம்ஹாவின் வழித்தோன்றல்கள் நேபாளத்தின்மீதிருந்த தங்கள் அதிகாரத்தை இழந்தனர். ஜயோதிர் மல்லன் பேரரச அதிகாரத்தைச் செய்ய முற்பட்டார். சுமார் கி.பி. 1426-ல் ஜயோதிர் மல்லனை அடுத்து அவருடைய மூத்தமகன் இயக்க மல்லன் பட்டத்துக்கு வந்து ஏறக்குறைய அரை நூற்றாண்டுக் காலம் நாட்டை ஆண்டார். நேபாளத்து மல்லர் அரசர்களுள் அவரே மிகப்பெரிய அரசர், ஆனல், கி.பி. 1474-க்கும் 1476-க்கும் இடையில் அவர் இறக்கு முன்பு தம்முடைய புதல்வர்களுக்கும் புதல்விகளுக்கும் நாட்டைப் பிரித்துக் கொடுத்துவிட்ட பெருந்தவற்றைச் செய்துவிட்டார். இதனல் போட்டிப் பிரதேசங்களான காத்மண்டுவும், பட்காவோனும் எழுச்சியுறத் தொடங்கின. அவர்களுக்கிடையே ஏற்பட்ட போர்களும் இறுதியில் கி.பி. 1768-ல் நேபாளத்தைக் கூர்க்காக்கள் கைப்பற்றியதில் போய் முடிந்தன.

# 6. இந்தியாவில் துருக்கிய-ஆப்கானியரின் அரசு, அவர்கள் ஆட்சிக் காலத்தில் நாட்டில் நிலவிய ஒழுங்குக் கட்டுப்பாடு பொருளாதார நிலைமை

## 1. துருக்கிய—ஆப்கானியரின் அரசாங்கம்

### அ. மத்திய அரசாங்கம்

இந்தியாவில் முஸ்லிம்களின் ஆட்சி கடவுள் சார்புடையதாய் இருந்தது. கொள்கையளவில் அப்படிப்பட்ட ஆட்சி நிலைபெற்றிருப்பதற்கு மதம் துணை புரிந்தது. சீசரும் போப்பும் (Pope) ஒன்றாய் உருவெடுத்தவரைப் போலவே, சுல்தான் கருதி மதிக்கப்பட்டார். உண்மையில், கொள்கையளவில் மதச் சம்பந்தமான செய்திகளில் திருக்குரானின் தெய்வீகக் கட்டளைக்குட்பட்டே அவருடைய அதிகாரம் இருந்தது. அலாவுதீனைத் தவிர மற்ற எந்தச் சுல்தானும் மதத்தையும் அரசியலையும் தனித்தனியே பிரித்து வைத்திருக்க முடியவில்லை. ஆனால், செயல் முறையில் இந்தியாவின் முஸ்லிம் சுல்தான் ஒரு முழுச் சுயேச்சாதிகாரியாகவே இருந்தார். அவருடைய அதிகாரத்திற்கு எவ்விதமான தடையும் ஏற்படவில்லை. அவர் சொன்னதெல்லாம் சட்டமாகவே இருந்தது. இஸ்லாமியரின் அரசாட்சிக் கொள்கை குடியாட்சி முறையோடு ஒற்றுமையுடையதாயும் அரசியல் சட்ட சபைகளின் முடிவுகளுக்கு ஏற்ப நடைபெறுவதாயும் காணப்பட்டாலும், சுல்தான்கள் சில சமயங்களில்மட்டும் பாக்தாதிலும், எகிப்திலுமுள்ள காலிஃபாக்களுக்கு அடங்கியிருப்பதாகக் காட்டும் சடங்குகளைச் செய்தனர். ஆனால், தங்கள் ஆட்சி வன்மை காலிஃபாக்களினாலேயே நிலை பெற்றுள்ளது என்றோ, பொதுமக்களின் விருப்பத்தைப் பொறுத்தது என்றோ அவர்கள் நினைக்கவில்லை. உண்மையில் எப்படிப் பார்த்தாலும் இந்தியாவின் சுல்தானின் ஆட்சி முழுச் சுதந்திரத்துடன் சுல்தானுடைய விருப்பப்படியே அமைந்திருந்தது. ஆட்சியின் எல்லாத் துறையிலும் சுல்தானே தலைவராக வீற்றிருந்தார்.

சுல்தானின் அதிகாரத்துக்கு உண்மையான அடிப்படையா யிருந்தது படைபலமே. இதை மக்கள் புரிந்துகொண்டு எதிர்ப்புத் தெரிவிக்காமல் ஆட்சி முறையை ஏற்றுக்கொண்டனர். சிந்தனை வன்மை இல்லாத பொதுமக்கள் மட்டுமன்றிப் போர்வீரர்களும் கவிஞர்களும் (உதாரணம் அமீர் குஸ்ராவ்-Amir Khusrav) அக் காலத்து உலேமாக்களுங்கூட அடங்கிப் பணிந்தனர். நிருவா கத்தின் உயர் தலைவரான சுல்தான் நிருவாகத்தைச் சரிவரக் கவனித்துக் கொள்ளும் அதிகாரிகளையும், அமைச்சர்களையும் தம் விருப்பப்படியே நியமித்து, தம் விருப்பப்படியே நிருவாகம் செய் யும்படி ஏற்பாடுகளைச் செய்தார். நாட்டின் ஆட்சி முக்கியமாகப் படைப்பலத்தையே அடிப்படையாகக் கொண்டிருந்தமையின் படைகளின் உயர் தலைவராக சுல்தானே இருந்தார். சுல்தானே எல்லாச் சட்டங்களையும் இயற்றுபவராயும், எல்லா முறையீடு களுக்கும் முடிவான தீர்ப்பு வழங்குபவராயும் இருந்தார்.

அக் காலச் சூழ்நிலைகளின் விளைவாக இந்தியாவில் முஸ்லிம் சுல்தான்களின் ஆட்சி தன்னுரிமை ஆட்சியாகவே இருக்கும் நிலைமை ஏற்பட்டது. அவர்கள் இந்து நாடுகளின் பகைமையி லிருந்தும் போர் தொடுத்துக்கொண்டிருக்கும் இந்துச் சாதியினரிட மிருந்தும், மங்கோலியப் படையெடுப்பாளரிடமிருந்தும் வந்து கொண்டிருந்த எதிர்ப்புகளைச் சமாளித்துத் தங்களைக் காத்துக் கொள்வதற்கு எப்போதும் விழிப்பாய் இருக்கவேண்டிய நிலைமை இருந்துவந்தது. இதற்குப் பலம் வாய்ந்த ஒரு மத்திய அரசு இன்றியமையாததாய் இருந்தது. நாளடைவில் அம் மத்திய அரசு முழு வல்லமை உடையதாய் மாறிவிட்டது. மேலும், முஸ்லிம் களில் ஆட்சி புரியும் அரசருக்கு அறிவுரை வழங்குவோராக இருக்கும் பிரபுக்களின் பரம்பரை என்று ஒன்றும் இருக்கவில்லை. தங்களுக்கெனத் தனி உரிமைகளும் செல்வாக்கும் படைத்திருப்ப வராகவும், அரசனின் சர்வாதிகாரத்தால் அவை பறிபோகாமல் காத்துக்கொள்ளும் ஆர்வமுள்ளவராகவும் இருக்கவேண்டிய பரம்பரைப் பிரபுக்கள் அக் காலத்தில் இல்லை. சில சமயங்களில் மட்டும் சில பிரபுக்கள் அரசர்களிடம் செல்வாக்குடையவரா யிருந்திருக்கின்றனர். அரசியலமைப்புச் சுதந்திரத்தைக் காப்பதில் ஆர்வம் படைத்த பொதுச் சட்டசபைகள் அக் காலத்தில் இல்லை. அரசனின் எதேச்சாதிகாரத்தை எதிர்க்கும் அளவுக்கு வன்மை படைத்த மக்களின் அமைப்பு ஒன்றும் இல்லை. நாட்டில் பெரும் செல்வாக்குப் படைத்திருந்த உலேமாக்கள்கூட சுல்தான்களை வெளிப்படையாக எதிர்க்கும் துணிவு பெற்றிருக்கவில்லை. நான்காம் ஹென்றியை (Henry IV) அரசாட்சியிலிருந்து ஓட்டிய ஹில்டி பிராண்டைப் (Hilde brand) போல விரும்பத் தகாத

ஆட்சியாளரை அகற்றும் வல்லமையும் பெற்றிருக்கவில்லை. டில்லியில் சுல்தானாக அரசாட்சியை ஏற்கும் உரிமை பலராலும் ஏற்றுக்கொள்ளப்பட்ட எந்தச் சட்டத்தினாலும் வரையறுக்கப் படவில்லை. அரசாட்சி உரிமையை நிர்ணயிக்க வேறு எந்த நிலைத்த கொள்கைப்பாடும் இல்லை. 'பொதுவாக நோக்குமிடத்து, அடுத்த சுல்தானாக வரும் வாய்ப்பு இறந்துபோன சுல்தானின் குடும் பத்தில் இருப்பவர்களுக்கே ஏற்படுவது வழக்கமாக இருந்தது. பிறப்பினால் கிடைக்கும் முதன்மை, நிருவாகத் திறமை, இறந்த அரசனின் நியமனம்—இவையெல்லாம் அடுத்து வரும் சுல்தானுக் குரிய தகுதிகளாகச் சில சமயங்களில் கருதப்பட்டன. ஆனால், முடிவாகத் தீர்மானம் செய்வது பிரபுக்களின் கையிலிருந்தது. அவர்கள் பொதுவாக நாட்டின் நன்மைகளைக் காட்டிலும் சொந்த நலன்களையே பெரிதும் கருதிச் சுல்தானைத் தேர்ந்தெடுப்பர்.'

முழுத் தன்னிச்சையாக ஆட்சி செய்யும் அதிகாரம் படைத் தவர்கூட ஆட்சியின் எல்லாப் பொறுப்பையும் தனியொருவராகக் கவனித்துக்கொள்ள முடியாது. இதனால் டில்லிச் சுல்தான்கள் தங்கள் ஆட்சிக் காலத்தின் தொடக்கத்திலிருந்தே தங்கள் அதிகாரங்களுக்குச் சிறிதும் எதிர்ப்புக் கூறாதவராயும், அவரவர் கடமைகளைத் தங்கள் ஆணைப்படியே செய்துவருபவராயும் உள்ள கீழதிகாரிகளைப் படிப்படியே அதிகார முடையவர்களாக நியமித்து ஆட்சி இயந்திரம் ஒழுங்குற நடைபெறும்படி ஏற்பாடுகளைச் செய்துவந்தனர். சுல்தான், தங்கள் நண்பர்கள் அடங்கிய சபை ஒன்றையும், மஜ்லிஸ்-இ-கல்வாத் (Majlis-i-Khalwat) என்று வழங்கப்பட்ட நம்பிக்கை வாய்ந்த அதிகாரிகளையும் கலந்து ஆலோசித்தனர். அவர்களுடைய அறிவுரைகளும், கருத்துகளும், அரசாட்சியில் சில சமயம் ஏற்றுக்கொள்ளக்கூடியனவாயிருக்கும். ஆனால், அவை சுல்தான்களை எவ்விதத்திலும் கட்டுப்படுத்த முடியாது.

கான்கள், மாலிக்குகள், அமீர்கள் முதலிய எல்லாரையும் பாரிகாஸ் (Bar-i-Khas) என்ற நீதி மன்றத்திற்கு சுல்தான் வரவழைத்தார். பாரிஆம் (Bar-i-Am) என்ற இடத்தில் தலைமை நீதிபதியாக அமர்ந்துகொண்டு மக்களின் குறைகளையும், முறை யீடுகளையும் கேட்டு விசாரணைகள் நடத்துவார். மத்திய அரசாங் கத்தில் மிக உயர்ந்த அதிகாரியாய் இருந்தவர் வஸீர் (Wazir) என்பவர். அவர் நாட்டின் பல துறைகளையும் தம் அதிகாரத் திற்குட்படுத்தியிருந்தார். திவானிரிசாலத் (Diwan-i-Risalat) அல்லது மேல்முறையீட்டுத் துறை, திவானி அர்ஸ் (Diwan-i-Arz) அல்லது படைத்துறை, திவானி-இன்ஷா (Diwan-i-Insha) அல்லது

தபால் துறை, திவானி-பந்தகான் (Diwan-i-Banda-gan) அல்லது அடிமைத் துறை, திவானி கஸாயி மமாலிக் (Diwan-i-Quza-i-Mamalik) அல்லது நீதி, ஒற்று, தபால் துறை (Department of Justice intelligence & Post), திவானி அமீர் கோஹி (Diwan-i-Amir Kohi) அல்லது விவசாயத்துறை (மகமது பின் துக்ளக்கால் படைக்கப்பட்ட துறை), திவானி முஸ்தக்ராஜ்(Diwan-i-Mustakh raj) அல்லது கலெக்டர்கள் (தண்டலாளர்) முகவர்கள் முதலியோரிடமிருந்து வந்து சேர வேண்டிய நிலுவைத் தொகைகளை வசூலிக்கும் துறை (Department to look after and realise arrears from Collectors or agents-அலாவுதீன் கில்ஜியால் படைக்கப்பட்ட துறை), திவானி கைராத் (Diwan-i-Khairat) அல்லது அறத்துறை (ஃபிரோஸ் ஷாவின் ஆட்சியில்), திவானி இஸ்திகாக் (Diwan-i-Isti-hqaq) அல்லது ஒய்வூதியத்துறை, மேலும், நாணய துறை, அறநிலையப் பாதுகாப்பு நிறுவனங்கள், கார்கானுக்கள் (Karkhanas) முதலிய துறைகளை அவர் மேற்பார்வை செய்து கண்காணித்துவந்தார்.

வெவ்வேறு துறைகளின் பொறுப்பாளர்களாயிருந்த உயர் அதிகாரிகளேயன்றி, நாட்டின் செலவினங்களைக் கண்காணிக்கும் தணிக்கைத்துறைத் தலைவர் அல்லது முஸ்தாபி-இ-மமாலிக் (Mustaufi-i-Mamalik) என்பவர் போன்ற கீழதிகாரிகளும் இருந்தனர். முஷ்ரிஃப்-இ-மாலிக் (Mushrif-i-Mamalik) என்பவர் வரவினக் கணக்குகளுக்குப் பொறுப்பாளராயிருந்தனர். மஜூம்தார் (Majumdar) என்பவர் அரசாங்கம் கொடுத்த கடன்களைப் பற்றிய கணக்குகளை வைத்திருந்தார். அமீர்-இ-பெஹர் (Amir-i Behr) படகுகளின் கட்டுப்பாட்டு அதிகாரியாகவும், காஸிம (Kahzim) என்பவர் பொருளாளராகவும், பக்ஷி-இ-ஃபௌஜ் (Bakhshi-i-Fauj) என்பவர் படைகளுக்கு ஊதியம் வழங்குபவராயும் இருந்தனர். இவர்களைப்போன்று வேறு பல கீழதிகாரிகளும் இருந்தனர். நாயப்-இ-வஸீரி மமாலிக் (Naib-i-Wazir-i-Mamalik) அல்லது துணைவஸீர் என்பவருக்கு உயர்ந்த அந்தஸ்து கிடையாது. துக்ளக்கின் காலம்தான் முஸ்லிம் இந்தியாவில் வஸீர்களின் நற்காலமாக இருந்தது. பிற்காலத் துக்ளக்குகளின் காலத்திலிருந்துவஸீர்களின் அதிகாரங்கள் மிகவும் பெரிதாயின. ஆனால், இவை சய்யிதுகளின் காலத்தில் தாழ்நிலையுற்றன. ஆப்கானியர்கள்காலத்தில் , வஸீர் பதவி விளக்கமின்றி மறைந்திருந்தது.

பொதுவாகக் காஸீ-உல்-கஸாத் (Quiz-ul-Qazat) அல்லது தலைமை நீதிபதி அவர்களால் நீதி வழங்கப்பட்டுவந்தது. அவருக்கு உதவியாகச் சட்டங்களுக்கு விளக்கம் தர முஃப்திகள்

(Muftis) இருந்தன. சட்டங்கள் யாவும் குர்ரானின் கட்டளை களின் சார்பாக அமைந்திருந்தன. ஆனால், அலாவுதீனும். மகமதுபின் துக்ளக்கும் சட்டங்களைப்பற்றி அவ்வளவாகப் பொருட்படுத்தாது தம் அரசியல்கொள்கைகளைக் கடைப்பிடித்து வந்தனர். குற்றச்சட்டம் மிக கடுமையாக இருந்தது. குற்ற வாளிகளுக்குச் சாதாரணமாக உறுப்புக்குறை அல்லது தூக்குத் தண்டனை கொடுக்கப்பட்டுவந்தது. குற்றத்தை ஒப்புக்கொள்ளச் செய்வதற்காகப் பலாத்காரமும், சித்திரவதையும் கையாளப் பட்டன. நீதி வழங்கும் முறை மிகவும் ஒழுங்காக இருந்தது என்று சொல்ல முடியாது. போதிய விசாரணைகள் இன்றியே வழக்குகள் தொடங்கப்பட்டன. பெரும்பாலான சமயங்களில் குறுகிய விசாரணையுடன் வழக்கு முடிவுற்றுவிடும். மார்க்கோ போலோ (Markopolo) எழுதிவைத்திருப்பதினின்று நாம் அறிந்து கொள்வதுபோல அக் காலத்தின் கடன் சட்டம் மிகு கடுமை யாகவே இருந்தது. கடன் கொடுத்தவர்கள் தங்கள் கடன் காரர்களிடமிருந்து கடன் தொகையை வசூல் செய்வதற்கு அடிக்கடி அரசனின் உதவியை நாடவேண்டியிருந்தது. 'கொத்தவால்' (Kotwal) என்பவர் நாட்டில் அமைதியையும், ஒழுங்கையும் நிலைநாட்டுபவர். மற்றொரு முனிசிபல் காவலதி காரியாய் (போலீஸ் அதிகாரி) இருந்தவர் முஹ்தஸிப்(Muhtasib) என்பவர். பொதுமக்களின் நடவடிக்கைகளில் மிக்க கண்காணிப்பு செய்வதுடன் சந்தைகளைக் கண்காணிப்பதும், எடைகளையும் அளவுகளையும் ஒழுங்குபடுத்துவதும் அவருடைய முக்கிய வேலை களாக இருந்தன. மக்களின் நடவடிக்கைகளை அறியச் சுல்தான் தாமே பல ஒற்றர்களை வைத்து உளவறியச் செய்து அவ்வப் போது நாட்டுச் செய்திகளை அறிந்துவந்தார். பழைய கோட்டைகளும், அரண்மனைகளும், சிறைச்சாலைகளுக்குப் பயன் படுத்தப்பட்டன. 'சிறை விதிகள் கடுமையில்லாதனவாயிருந் தன; அதிகாரிகளிடம் கையூட்டு முதலிய ஊழல்கள் இருந்தன'.

இந்தியாவில் துருக்கியச் சுல்தான்கள் அரசாங்கக் கருவூலத் தைப்பற்றி மேற்கொண்டிருந்த கொள்கையானது முஸ்லிம் ஜூரி களுள் 'ஹனபி' என்ற பிரிவினர் கொண்டிருந்த பொருளாதாரக் கொள்கையின் மாதிரியாக அமைந்திருந்தது. அவர்கள் அக் கொள்கையைத் தங்களால் அடிமைப்படுத்தப்பட்டுவெல்லப்பட்ட கஜ்ஞு வித்துகளிடமிருந்து பெற்றனர். டில்லிச் சுல்தான்களுக்குப் பொருள்வருவாயின் முக்கிய மூலமாய் இருந்தவை இந்து குறுநில மன்னர்களிடமிருந்தும் ஜமீன்தார்களிடமிருந்தும் கிடைக்கும் காராஜ் (Kharaj) அல்லது நிலவரி, அரசர்க்கு உரிமையான நிலங்களிலிருந்து கிடைக்கும் கால்சா (Khalsa) அல்லது நில

வருவாய், முக்தா (Muqta) எனப்படும் அதிகாரிகளுக்கு (பெரும்பாலும் படைத்துறையினர்) சில ஆண்டுகளுக்கோ, ஆயுள் முழுவதிற்குமோ கொடுக்கப்படும் நிலங்களிலிருந்தும், பிற வகையான நிலங்களிலிருந்தும் கிடைக்கும் வருவாய், போரினுல் கிடைக்கும் வருவாயில் ஐந்தில் ஒரு பங்காகிய கம்ஸ் (Khams) மத வரி முதலியனவாகும். மேலும், அப்வாப்ஸ் (Abwabs) எனப்படும் பிற வரிகள் அதாவது வீட்டு வரி, மேய்ச்சல் வரி, தண்ணீர் வரி முதலியன மக்களிடமிருந்து வசூலிக்கப்பட்டன. வாணிகச் சுங்கத்திலிருந்து சிறிது வருமானம் கிடைத்தது. ஜெசியா (Jizya) எனப்படும் வரி முதலில் முஸ்லிம் அல்லாதவர்களிடமிருந்து 'அவர்களுடைய உயிரையும் பொருளையும் காப்பாற்றுவதற்காகவும், படைத்துறைப் பணியிலிருந்து விலக்கு அளிக்கப்பட்டதற்காகவும், ஈடாகத் தரப்படவேண்டிய வரியாக வசூலிக்கப்பட்டுவந்தது. ஆனுல், நாளடைவில் அதற்கு மத சம்பந்தமான தொடர்பு கற்பிக்கப்பட்டுவிட்டது. இந்தியாவில் இந்துக்கள் முஸ்லிம் அரசர்களுக்கு அதிகமாகத் தரவேண்டிய வரி அது ஒன்றே. பணமாகவும், தானியங்களாகவும் வரிகள் கொடுக்கப்பட்டன. கில்ஜிகளும், துக்ளக்குகளும் செய்த பொருள் வருவாய்ச் சீர்திருத்தங்களைப்பற்றிய முக்கியமான கருத்துகளை முன்பே பார்த்திருக்கிறோம். ஆனுல், பொருள் வருவாய்க் கொள்கையானது அரசாங்கக் கருவூலத்திற்குப் போதுமான வருவாயைத் தருவதாக இருந்தாலும், இல்லாவிட்டாலும் ஆட்சி செய்வோரின் ஆண்மையைப் பொறுத்திருந்து மாறுபட்டுக்கொண்டிருந்தது. இல்டுட்மிஷ் (Iltutmish) என்பவர் பொருள் வருவாய்த் துறையாட்சியில் எந்தவிதமான குறிப்பிடத்தக்க மாறுதல்களும் செய்யவில்லை. பால்பன் (Balban) என்பவர் அத் துறையில் ஒழுங்கு முறை நிலவுவதற்காகச் சில முயற்சிகள் செய்தார். ஆனுல், அலாவுதீனின் பொருள் வருவாய்க் கொள்கையோ மிகு விரிவானதாயும், எல்லா வகையான நிலங்களையும் பாதிப்பதாகவும் இருந்தது. மகமது பின் துக்ளக்கின் கடுமையான பொருத்தமில்லாத வருவாய்க் கொள்கை நாட்டின் பொருளாதார நிலையைப் பெரிதும் உயர்த்தியது. தீர்வையின் விகிதமும் அரசர்க்கு அரசர் மாறுபட்டுக்கொண்டிருந்தது. அலாவுதீன் நிலத்தின் மொத்த விளைவின் சரிபாதியை வரியாகக் கொடுத்துவிடவேண்டுமென்று கட்டளையிட்டார். அவர் காலத்தில் நிலவரி மிகவும் அதிகமாகவே இருந்துவந்தது. பொதுவாக, கியாஸ்-உதீன் துக்ளக் தாராள மனப்பான்மை படைத்தவராயினும் அலாவுதீனுல் நிர்ணயிக்கப்பட்ட வரி விகிதத்தைக் குறைத்ததாகத் தெரியவில்லை. மகமது பின் துக்ளக்கின் காலத்தில் வரி விகிதம் இன்னும் உயர்ந்திருந்ததாகத் தெரியா

விட்டாலும், குறைந்திருந்ததாகச் சொல்ல முடியாது. பண்ணை முறை பரவியிருந்தது. ஃபிரோஸ் ஷாவின் காலத்தில் அம் முறை மிகுதியாக விரிவுபடுத்தப்பட்டதால் நாட்டின் சிறப்புப்பெயர் குன்றுதற்கும் வாய்ப்பு ஏற்பட்டது.

சுல்தான்களின் நிலப்படையில் அரசரின் மெய்க்காவலர்படையும், தலைநகர்ப் படைகளும் இருந்தன. மாகாணப் பிரதிநிதிகள், முக்தர்கள், இந்துக்களின் நிலையில்லாப் படைகள் முதலியோரிடமிருந்து வரும் தீர்வைகளின் மூலம் தலைநகர்ப்படை மேலும் வலிவுள்ளதாக ஆக்கப்பட்டுவந்தது. துருக்கியர், காதையர்கள் (Khataians) பாரசீகர்கள், இந்தியர்கள் முதலிய பல்வேறு நாட்டினரும் படையில் சேர்த்துக்கொள்ளப்பட்டனர். படைப் பிரிவுகளுள் முக்கியமானது காலாள்படையே. அதில் எண்ணில்லாத விற்பயிற்சியுடையோர் இருந்தனர். குதிரைப் படையும் யானைகளும்கூட இருந்தன. படைக்கலப்பயிற்சிப் படை என்று ஒன்றும் முன்பு இருக்கவில்லை. பிற்காலத்தேதான் அப் படைப் பிரிவு சிறந்த இடத்தைப் பெற்றது. ஆனால், இல்டுட்மிஷின் ஆட்சிக் காலத்திலிருந்தே ராக்கெட்டுகள், நாப்தாக் குண்டுகள் வெடி வைப்பதன் மூலம் குண்டுகளை வெளிப்படுத்தும் எந்திரம் முதலியவை மிகச் சிறப்பாகக் கையாளப்படாவிட்டாலும் உபயோகத்தில் இருந்துவந்தன. மேலும், தானே இயங்குவதும் பல வகையான மட்ட எந்திரங்களுடையதுமான ஒருவகைக் குண்டு எறி எந்திரங்கள் (பீரங்கிகள்) மத்தியகால இந்தியாவில் கோட்டைகளை முற்றுகையிடும்போது பயன்படுத்தப்பட்டன. மஞ்சனிக்குகள், மங்கோனல்கள், மங்கோன்கள் (Manjaniqs, mangonels, mangons) போன்ற பெயர்களால் அவ் எந்திரங்கள் வழங்கப்பட்டன. அவை தீக்குண்டுகள், தீயம்புகள், பெருங் கற்கள், பாறைத்துண்டுகள், மண் அல்லது இரும்பினுலான குண்டுகள், இரச கற்பூரம் அடங்கிய புட்டிகள், தேள்கள், பாம்புகள் முதலியவற்றைப் பகைவர்மீது எறிவதற்குப் பயன் படுத்தப்பட்டன.

டில்லியில் துருக்கியச் சுல்தான்கள் அரசவை ஒன்றை வைத்துக் கொண்டிருந்தனர். அது முகலாயப் பேரரசர்கள் காலத்திலிருந்தது போல் சிறப்பு மிக்கதாய் இருக்கவில்லை எனினும், அதன் மூலம் சுல்தான்கள் தங்கள் கருத்துகளை வெளியிட்டுவந்தனர். அரசர்க்குரிய அரண்மனையில் அந்தப்புரம் இருந்தது. அதில் சுல்தான்களின் மனைவிமார்களும், வைப்பாட்டிகளும், அரசிளங் குமரிகளும் நிறைந்திருந்தனர். இப்படிப்பட்ட அரசவைகளில் குறுகிய அளவில் கலைப் பண்பாடு போற்றப்பட்டு வந்தது.

எனினும், அந்தச் சுவைகளை வைத்திருப்பதனால் நாட்டின் பொருளாதார நலம் மிகவும் வளங்குன்றும் நிலை ஏற்பட்டிருக்க வேண்டும்.

### ஆ. மாகாண ஆட்சி முறை

சுல்தானின் நேரடியான அதிகாரம் அவருடைய கோட்டைகளையும் அவற்றைச் சுற்றியுள்ள சில ஊர்களையும் உள்ளடக்கிய எல்லை வரையிலுமே பரவியிருந்தது. தூரத்திலுள்ள மாகாணங்கள் நாயிப் சுல்தான்கள் என வழங்கப்பட்ட அரச பிரதிநிதிகளின் ஆட்சி பொறுப்பில் இருந்தன. அம் மாகாணங்களின் எண்ணிக்கை இருபதிலிருந்து இருபத்தைந்துவரை இருந்தது. மாகாணங்கள் சிறுசிறு பகுதிகளாகப் பிரிக்கப்பட்டு அவற்றிற்கு முக்தாக்கள் (Muqtas) அல்லது ஆமில்கள் (Amils) என்போர் தலைவர்களாக நியமிக்கப்பட்டனர். அவை இன்னும் சிறு பகுதிகளாகப் பிரிக்கப்பட்டு ஷிக்தார் (Shiqdar) என்போரின் மேற்பார்வையில் இருந்தன. அச் சிறு பகுதிகள் ஒரு சில கல் எல்லை வரையிலுமே பரந்திருந்தன. ஒவ்வொரு மாகாணமும் 'பேரரசின் மாதிரி'யாகவே அமைந்திருந்தது. மத்திய அரசுக்கு மட்டும் கட்டுப்பட்டவராய் நாயிப் சுல்தான் தமது மாகாணத்தில் நிருவாகம், நீதி, படைத்துறைச் செயல்களைத் தம்மிச்சைப்படியே செய்துவந்தார். அவர் மத்திய அரசுக்குக் கட்டுப்படுவது அவ்வப்போது சுல்தானாயிருப்பவரின் ஆற்றலையோ, ஆற்றல் இன்மையையோ பொறுத்து மாறுபடும். மகமது-பின்-துக்ளக் மாகாணங்களைக் கட்டுப்படுத்தத் தவறியதால்தான், அவருடைய அரசப் பிரதிநிதிகள் சுதந்திர ஆட்சியாளர்களாகத் தங்களை அறிவித்துக்கொள்ள நேர்ந்தது. மாகாண வருவாயிலிருந்து அரசப் பிரதிநிதிக்குப் பணம் கொடுக்கப்பட்டுவந்தது. ஆட்சிச் செலவுகளுக்குச் செலவானது போக மீதியுள்ள பணமெல்லாம் மத்திய அரசுக் கருவூலத்திற்கு அனுப்பப்பட வேண்டும். அரசப் பிரதிநிதி தமக்கென ஒரு தனிப்படையை வைத்துக்கொண்டிருந்தார். வேண்டும்போது சுல்தானுக்குப் படையுதவி செய்யவும் கடமைப்பட்டிருந்தார். எனவே, அவருடைய நிலைமை மத்திய கால ஐரோப்பாவில் இருந்த சிற்றரசர்களின் நிலைமையை ஒத்திருந்தது எனலாம். பிரபுக்களின் எடுப்பு, சிக்கல்கள், அதிகாரிகளிடையே ஒற்றுமையின்மை முதலியன பொதுவாக மாகாண அரசாங்க ஆட்சி ஒழுங்காக நடைபெறுவதற்கு முட்டுக்கட்டைகளாக இருந்துவந்தன. அதன் விளைவாக மாகாணத்தில் அமைதியும், ஒழுங்கும் சிறப்பாக நிலவவில்லை. அரசப் பிரதிநிதிகளின் ஆட்சியிலுள்ள மாகாணங்களைத் தவிர, பெரு மாநிலங்கள் இந்துக்களின் ஆட்சிக்கு ஒப்படைக்கப்பட்டிருந்தன. அவர்கள்

டில்லிக்குக் கப்பமும் நன்கொடைகளும் அனுப்பிவந்துகொண்டிருந்தமையின் அவர்கள் ஆட்சியில் மற்றவர்கள் தலையிட முடியாது. நாட்டில் புதிய அரசு தோன்றினாலும் கிராமத்து மக்கள் அதனால் பாதிக்கப்படவே இல்லை.

## இ. முஸ்லிம் பிரபுக்கள்

பிரபுக்கள் நாட்டில் மிகுந்த செல்வாக்கு உடையவர்களாய் விளங்கினர். தளபதிகளாகவும், ஆட்சியாளர்களாகவும் உயர் பதவிகள் வகித்தனர். சில சமயங்களில் அரசனைத் தேர்ந்தெடுத்து ஆளவைக்கும் வாய்ப்பும் அவர்களுக்கு இருந்தது. ஆனால், பிரான்ஸிலோ, இங்கிலாந்திலோ இருந்த பிரபுக்களைப் போல இப் பிரபுக்கள் பரம்பரையாக வந்தவர்களோ, ஓரினத்தைச் சேர்ந்தவர்களோ, ஒழுங்கான ஓர் அமைப்பைக் கொண்டிருந்தவர்களோ அல்லர். இப் பிரபுக்களுள் துருக்கியரே பெரும்பான்மையினராக இருந்தபோதிலும், அராபியர்களும், ஆப்கானியர்களும், அபிசீனியர்களும், எகிப்தியர்களும், ஜாவாமக்களும், இந்தியர்களுங்கூட பிரபுக்களாக இருந்தனர். இவ்வாறு பல்வேறு இனங்களைச் சேர்ந்தவர்களாயிருந்த அப் பிரபுக்கள் ஒரு பொதுக் குறிக்கோளோ, கொள்கையோ பெற்றிருக்க முடியாது. ஆனால், அரசனின் சர்வாதிகாரத்திற்குப் போதிய எதிர்ப்பும் எழுப்பியிருக்க முடியாது. இயல்பாகவே பிரபுக்கள் தங்களுக்குள் உயர்நிலைக்காகப் பூசலிடுவதிலும் நாட்டின் நலனில் அக்கறை கொள்ளாது தந்நலத் தேவைகளைப் பூர்த்தி செய்துகொள்வதிலுமே ஈடுபட்டிருந்தனர். 'பிரிந்து செல்லும் அணுக்கள் ஒன்று கூடியிருப்பதைப் போலவே அப் பிரபுக்கள் இருந்தனர்' என்று இக் கால எழுத்தாளர் ஒருவர் கூறுகிறார். பிரபுக்களினால் நாட்டுக்குச் சில நன்மைகள் ஏற்பட்டிருக்கலாம். ஆனால், அப் பிரபுக்கள் மேற்கொண்ட ஜமீன்தாரிமுறை நாட்டின் சிதைவுக்கே காரணமாய் இருந்தது.

மேலே சுருக்கமாகக் கூறப்பட்டுள்ள துருக்கிய ஆப்கானிய அரசாட்சி முறையில் பரம்பரையாக வரும் வழக்கங்களின் வளமையோ, உறுதிப்பாடோ இருக்கவில்லை. ஓர் அரசாங்கத்தின் நீடித்த ஆட்சிக்கும், பாதுகாப்புக்கும் இவையிரண்டும் இன்றியமையாதவை. அவ் வாட்சியில் காணப்பட்ட படை அமைப்பு முறையும், ஜமீன்தாரி முறையும் அக் காலச் சூழ்நிலைகளில் தவிர்க்க முடியாதவைகளாய் இருந்தபோதிலும் நாட்டின் பழைய ஆட்சி மரபுக்கு மாறானவையாய் இருந்தன. மத்திய கால இராசபுத்திர நாடுகளில்தான் அப்படிப்பட்ட நிலைமை இருந்தது. அம் முறைகளின் வளர்ச்சி மக்களின் நல்லெண்ணத்தையோ, ஒத்துழைப்பையோ பெறவில்லை. உண்மையில் ஆட்சி செய்பவர்க்கும் பொது

மக்களுக்கும் இடையே நல்லுறவு ஏற்படவில்லை. நாடு படை பலத்தால் வளர்ந்தது. நாட்டையாண்டோரும் பெரும்பாலும் தங்கள் அதிகாரத்தைப் பலப்படுத்தும் முறைகளையே மேற் கொண்டுவந்தனர். பிரபுக்களும் தமக்குள் நிலையான எக் கொள்கையுமின்றிச் சுயநலத் தேவைகளைப் பெறுவதில் ஈடு பட்டனர். எனவே, சுல்தான்கள் போதிய பலத்துடன் அதிகாரம் செய்ய முடியாதபோது நாட்டில் பிளவுகள் ஏற்பட்டன. பிரபுக் களும் பேராசை மிக்கவர்களாய்க் கலகம் விளைவிக்கத் தொடங்கினர்.

## 2. பொருளாதாரச் சமுதாய நிலைகள்

### அ. பொருளாதாரம்

துருக்கிய ஆப்கானிய ஆட்சியின் மூன்று நூற்றுண்டுக் காலத்தில் மிகுந்த எண்ணிக்கையுடைய மக்கள் வாழ்ந்த இந்தியாவின்பொருளாதார நிலையைத்தெளிவாக வரையறுத்துக் கூறுவது எளிதன்று. எனினும், அண்மைக் காலத்திய வரலாற்று நிகழ்ச்சிகளின் ஏடுகளிலிருந்தும், அமீர் குஸ்ராவின் நூல்களி லிருந்தும், நாட்டு மக்களிடையே வழங்கும் கதைகளிலிருந்தும், கவிதை பாட்டுகள் முதலியவற்றிலிருந்தும், இந்து முஸ்லிம் மதங்களில் தெய்வசக்தி படைத்தவர்கள் எழுதிய நூல்களி லிருந்தும், செயல்முறைக் கலைகள் சட்டம் நீதி முதலியவை பற்றி எழுதப்பட்ட நூல்களிலிருந்தும், வெளிநாட்டுப் பயணிகள் விடுத்துச் சென்ற குறிப்புகளிலிருந்தும், அதிகாரிகள் தனி மனிதர்கள் எழுதியுள்ள கடிதங்களிலிருந்தும் அக் காலப் பொருளாதார நிலையை விளக்கும் சில முயற்சிகள் மேற்கொள்ளப் பட்டிருக்கின்றனவென்று தெரிகின்றது. நாடு அக் காலத்தில் அளவிலாப் பொருட்செல்வ வளத்தால் புகழ் பெற்றிருந்தது. கஜினி முகமது எப்படிப் பெரும் பொருளைக் கொள்ளையடித்துச் சென்றூர் என்பதைப் பெரிஷ்டா எழுதிவைத்துள்ளதிலிருந்து அறிந்துகொள்கிறோம். மகமது-பின்-துக்ளக்கு முன் யோசனை இன்றிச் செய்த பயனில்லாச் செயல்களுக்குப் பிறகும் பிற் காலத்திலும், அடிக்கடி ஒழுங்குக் குலைவும் அமைதியின்மையும் ஏற்பட்டிருந்தும், டில்லியில் தைமூர் பெருங்கொள்ளையடித்தது நமக்கு வியப்பாகவேயிருக்கிறது. ஆனுல், மக்களின் நிலையை உயர்த்துவதற்கென நாடு எவ்விதப் பொருளாதாரக் கொள்கை யையும் பின்பற்றவில்லை. கில்ஜிகளும், துக்ளக்குகளும் செய்த சில முதல் முயற்சிகளும் நீடித்த பலன் விளைவிக்காமற் போய் விட்டன. 'மொத்தத்தில் விளைச்சல் முறையில் எந்தப் பெரிய முன்னேற்றமும் பொருளாதாரச் செல்வத்தைப் பொருந்திய

முறையில் பகிர்வு செய்தலும், பல்வேறு வகையான சமுதாய வகுப்புகளின் பொருளாதார நிலையைச் சிறந்த முறையில் சரிப் படுத்துவதும் நாட்டின் ஆட்சிக் கொள்கையில் காணப்பட வில்லை' என்று இக் காலத்து ஒரு முஸ்லிம் ஆசிரியர் கூறி இருக்கிறார்.

ஆட்சியின் ஆதரவும், வழிகாட்டலும் இல்லாது போயினும், நகரத்திலும் கிராமத்திலும் இருந்த மக்களின் தொழிற்சாலை களும், தொழிற் களங்களும் தொழிற்சாலை அமைப்பினைத் தலைமுறை தலைமுறையாக நீடித்திருக்குமாறு செய்தன. உள்ளூர் வாணிகமும், வெளியூர் வாணிகமும் அரசியல் புரட்சிகளால் அழிந்துபோகாமல் தொழில் வளர்ச்சிக்குத் துணைபுரிந்துவந்தன. டில்லிச் சுல்தான்களும், பிற்காலத்தில்சிறிய மாகாண ஆட்சியாளர் களும் தங்கள் சொந்த அரசியல் அல்லது ஆட்சித் தேவைகளுக் கேற்றவாறு கைத்தொழில்களுக்கும், வாணிகத்துக்கும் ஊக்கமும் ஆக்கமும் அளித்துவந்தனர். சில சமயங்களில் அரசு தொழிற்சாலை கள் அல்லது டில்லியிலிருந்த உற்பத்திச் சாலைகளில் நாலாயிரம் பட்டுநெசவாளர்களையும், வேறு பொருள்கள் உற்பத்தி செய்பவர் களையும் அரசுத் தேவைகளை நிறைவேற்றுவதற்காக அமர்த்தியிருந் தனர். இக் காலத்தில் இருப்பதுபோல அக் காலத்தில் தொழிற் சாலைகளோ, பெரிய அளவில் அமைந்த தொழில் நிறுவனங்களோ இல்லை. பெரும்பாலும் உற்பத்தியாளர்கள் வாணிகர்களோடு நேரடித் தொடர்பு கொண்டிருந்தனர். சில சமயங்களில் சந்தை களில் தங்கள் பொருள்களை விற்றுவந்தனர். மற்றும் சில சமயங் களில் அவ் வுற்பத்தியாளர்கள் பெருவணிகர்களின் மேற்பார்வை யில் அவர்களுக்கு வேண்டிய பொருள்களை உற்பத்தி செய்து தந்த னர். உழவே பெரும்பாலான மக்களின் தொழிலாக அமைந்திருந்த போதிலும், நாட்டுப்புறங்களிலும் நகர்ப்புறங்களிலும் சிலமுக்கிய மான தொழிற்சாலைகள் இருந்தன. துணி உற்பத்தித் தொழிற் சாலை, பஞ்சிலுல் துணிஉற்பத்தி செய்யும்தொழிற்சாலை, கம்பளித் துணி, பட்டுத்துணி முதலியன உற்பத்தி செய்யும் தொழிற்சாலை, சாயத் தொழிற்சாலை, காலிகோ வர்ணத் தொழிற்சாலை, சர்க் கரைத் தொழிற்சாலை, உலோகக்கல், செங்கல், காகிதத்தொழிற் சாலை முதலியன அவற்றுள் குறிப்பிடத்தக்கவை. கிண்ணம் செய் தல், செருப்புச் செய்தல், ஆயுதஞ் செய்தல், வில், அம்புகள் செய் தல், வாசனைப் பொருள்கள் தயாரித்தல், சாராயம் காய்ச்சுதல் முதலியன சிறு தொழில்களாக இருந்தன. வங்காளமும் குஜராத் தும் சிறப்பாகத் துணிகளை உற்பத்தி செய்து ஏற்றுமதி செய்வதில் புகழ் பெற்றிருந்தன. அமீர் குஸ்ராவ் வங்காளப் பொருள்களை மிகவும் சிறப்பித்துக் கூறியிருக்கிறார். 1406ஆம் ஆண்டில் வங்கா

ளத்தைச் சுற்றிப்பார்த்த மௌஹன் (Mauhan) போன்ற பிற நாட்டுப் பயணிகள், 16ஆம் நூற்றாண்டின் தொடக்கத்தில் *(1503—1508)* இந்தியாவிற்கு வந்த பார்த்தேமா (Barthema), *1518*-ல் வந்த பார்போசா (Barposa) முதலியவர்களும் வங்கத்துப் பொருள்களைப் போற்றிப் புகழ்ந்துரைத்திருக்கின்றனர்.

'ஆட்சியின் தனிச்சிறப்பு உரிமையாலோ கடுமையான ஆட்சிமுறைக் கட்டுப்பாட்டினாலோ, தடைகள் நேர்ந்தபொழுதன்றி மற்றக் காலங்களில்' இந்தியாவின் உள்நாட்டு வாணிகம் மிகப்பெரிய அளவில்தான் நடைபெற்றுவந்தது. வெளிநாடுகளில் இந்தியா கொண்டிருந்த வாணிகத் தொடர்புகளும் குறிப்பிடத்தக்கவை. இந்தியக்கடல்வழியாக ஐரோப்பாவின் தொலைவிலுள்ள நாடுகளுடனும், மலாய்த் தீவுகளுடனும், பசிபிக்கடலின் கரையிலுள்ள பிறநாடுகளுடனும் வாணிகத் தொடர்புகொண்டிருந்தது. தரை வழியாக மத்திய ஆசியா, ஆப்கானிஸ்தான், பாரசீகம், திபேத்து, பூடான் முதலிய நாடுகளோடு தொடர்பு கொண்டிருந்தது. 'மசோலிக்-உல்-அப்சார்' என்ற நூலின் ஆசிரியர் பின்வருமாறு எழுதியிருக்கிறார். 'பிறநாட்டு வணிகர்கள் எல்லாம் இந்தியாவுக்குச் சுத்தத் தங்கம் கொண்டுவருவதை எப்போதும் நிறுத்தியதில்லை. தங்கத்திற்குப் பதிலாக அவர்கள் இந்தியாவிலிருந்து மூலிகைகளும், பிசின்களும் எடுத்துச் சென்றனர்.' செல்வத்திற் சிறந்த வகுப்பினருக்காக ஆடம்பரப் பொருள்களும், குதிரைகளும், கோவேறு கழுதைகளும் முக்கியமான ஏற்றுமதிப் பொருள்களாகவிருந்தன. பலவகையான விவசாயப் பொருள்களும், பலவகைத் துணிகளும், ஏற்றுமதிப் பொருள்களுள் முதன்மையாயிருந்தன. அவற்றிற்கு அடுத்தபடியாகத் துத்தநாகம், அபினி, அவுரிக் கேக்குகள் முதலியனவும் ஏற்றுமதி செய்யப்பட்டன. பாரசீக வளைகுடாவைச் சுற்றியுள்ள சில நாடுகள் உணவுக்காக இந்தியாவையே முழுதும் நம்பியிருந்தன. இந்தியாவின் ஏற்றுமதி வாணிகத்திற்கு வங்காளத்திலும், குஜராத்திலுமுள்ள துறைமுகங்கள் முக்கியமாகப் பயன்படுத்தப்பட்டன. 'வங்காளம்தான் உலகத்திலேயே பருத்தி, இஞ்சி, சர்க்கரை, தானியம், எல்லாவகையான இறைச்சிகள் இவற்றின் வளம்மிகுந்த நாடு' என்று பார்த்தேமா என்ற ஆசிரியர் கருதினர்.

எல்லாக் காலத்திலும் பொருள்களின் விலை ஒரேமாதிரியாய் இருக்கவில்லை. பஞ்சக்காலத்திலும் பற்றுக்குறை ஏற்பட்ட காலத்திலும் பொருள்களின் விலை மிகு உயர்வாயும், அதிக விளைவு ஏற்பட்டகாலத்தில் மிகு குறைவாகவும் இருந்தது. மகமது பின் துக்ளக்கின் ஆட்சிக் காலத்தில் ஏற்பட்ட கடும்பஞ்சத்தினல் ஒரு

சேர் தானியம் விலை 16 அல்லது 17 ஜிடால்களா (Jidals)யிருந்தது. அதனால் பலர் பட்டினியால் மடிந்தனர். ஃபிரோஸ்ஷா இரண்டாம் முறையாகச் சிந்துவின்மீது படையெடுத்த பிறகு அங்குப் பற்றாக் குறை ஏற்பட்டது. அப்போது உணவுத்தானியத்தின் விலை 5 சேர் 8 முதல் 10 ஜிடால்களாகவும், பயறுகளின் விலை மணங்குக்கு 4 அல்லது 5 தங்கா (Tanka) அல்லது சேர் ஒன்றுக்கு 6·4-லிருந்து 8 ஜிடால்களாகவும் உயர்ந்தது. இப்ராஹிம்லோடியின் ஆட்சியில் பொருள்களின் விலை மிகு குறைவாக இருந்தது. அக் காலத்தில் ஒருவர் ஒரு புஹலூலி (Buhluli) அதாவது 1.6 ஜிடாலுக்குப் 10 மணங்கு தானியம், 5 சேர் எண்ணெய், 10 கஜம் காடாத்துணி வாங்க முடிந்தது. அலாவுதீன் ஆட்சிக்காலத்தில் விலை சாதாரண மாகவே இருந்தது. அவர் காலத்தில் ஒரு மணங்கு கோதுமை 7½ ஜிடால்கள், பார்லி 4 ஜிடால்கள், நெல் அல்லது அரிசி 5 ஜிடால்கள், பயறுகள் 5ஜிடால்கள், மத்தியத்தரைக் கடல்பயறுகள் (lentils) 3 ஜிடால்கள், வெள்ளைச் சர்க்கரை 100 ஜிடால்கள், மெல்லிய சர்க்கரை 60 ஜிடால்கள், இறைச்சி 10 ஜிடால்கள், நெய் 16 ஜிடால்கள் விலைக்குக் கிடைத்தன. டில்லி மஸ்லின் துணி ஒன்று 17 தங்காவிற்கும்[1] அலிகார்((Aligarh) மஸ்லின் 6 தங்கர்விற்கும் கிடைத்தன. முரட்டுக் கம்பளம் ஒன்று 6 ஜிடாலுக்கும் உயர்ந்த ரகக் கம்பளம் ஒன்று 36 ஜிடாலுக்கும்[2] கிடைத்தன.

[1] ஒரு தங்கா என்பது இக் காலத்தில் 12 ரூபாய்க்குச் சமமாகும்.

[2] அலாவுதீன், மகமது பின் துக்ளக், ஃபிரோஸ் ஷா காலங்களில் பொருள் களின் விலைபற்றிய ஒப்புமைப் பட்டியல்.
(விலைகள் ஒரு மணங்கிற்கு ஜிடால்கள் வீதம்.)

| பொருள்கள் | அலாவுத்தீன் | முகம்மது-பின் துக்ளக் | பிரோஸ் ஷா |
|---|---|---|---|
| கோதுமை | 7½ | 12 | 8 |
| பார்லீ | 4 | 8 | 4 |
| நெல் | 5 | 14 | x |
| பயறுகள் | 5 | x | — |
| மத்தியத்தரைக் கடல் பயறுகள் | 3 | 4 | 4 |
| சர்க்கரை (வெள்ளை) | 100 | 80 | x |
| ,, (மெல்லிய) | 60 | 64 | 120. 140 |
| இறைச்சி | 10 | 64 | x |
| நெய் | 16 | x | 100 |

(J. A. S, B. 1935, Vol. 1, Letters No. 2, p. 235.)

அலாவுதீன், மகமது பின் துக்ளக், ஃபிரோஸ் ஷா இவர்களின் ஆட்சிக்காலத்தில் விற்கப்பட்ட பொருள்களின் விலைகளை ஒப்பிட்டுப் பார்க்கும்போது பொதுவாக அவை இரண்டாவது சுல்தான் காலத்தில் உயர்ந்தும், ஃபிரோஸ் ஷாவின் ஆட்சிக் காலத்தில் அலாவுதீனின் ஆட்சிக் காலத்திலிருந்த விலைகளுக்கே பழையபடி குறைந்தும் போயிருப்பதை அறிகிறோம். மொத் தத்தில் உணவுப் பொருள்களும் பிற பொருள்களும் தோஆப் (Doab) எல்லையிலும் மாகாணங்களிலும் குறைந்த விலைக்குக் கிடைத்தன. வங்காளத்தைத் தவிர 'வேறு எந்த நாட்டிலும் பொருள்கள் குறைவாக விற்பதாகத் தெரியவில்லை,' என்று இபின் பதூதா (Ibn Batutha) குறிப்பிடுகிறார். மூன்று பேர்கள் அடங்கிய குடும்பத்திற்கு ஓர் ஆண்டிற்கு எட்டு திர்ஹாம்(Dirham) போதும் என்ற நிலை வங்காளத்தில் இருந்தது. ஆனால், அக் காலத்து இந்தியரின் சராசரி வருமானத்தையோ சராசரி வாழ்க்கைச் செலவையோ மதிப்பிடுவதற்கு இப்போது முடிய வில்லை. எனினும், நாட்டில், குறிப்பாக வங்காளத்தில் பணப் பற்றுக்குறை மிகுதியாக இருந்தது என்பதை நாம் மறந்து விடக் கூடாது. எனவே, பொருள்களின் குறைந்த விலையால் பொது மக்கள் எவ்வளவு தூரம் நன்மைகள் அடைந்தனர் என்பதைத் தீர்மானிப்பது கடினமாக இருக்கிறது.

சமுதாயத்தின் வெவ்வேறு வகுப்பு மக்களின் வாழ்க்கைத் தரத்தைப் பொறுத்தவரை, செல்வமிக்க வகுப்பினருக்கும், குடியானவர்களுக்குமுள்ள வேறுபாடு 'வடதுருவம், தென்துருவம் போலவே' இருந்தது. ஆட்சியில் இருந்தோரும், அதிகாரிகளாய் இருந்தோரும் செல்வத்திலும் ஆடம்பரத்திலும் திளைத்துக் கொண்டிருக்கையில் உழவர்களெல்லாம் எளிய வாழ்க்கையையே வாழவேண்டியிருந்தது. பஞ்சக் காலத்தில் அவர்களுக்கு வேண்டிய நிவாரண உதவி போதிய அளவு கிடைக்க முடியாதிருந்ததால் அவர்கள் நிலை அப்போது இன்னும் பரிதாபத்துக்குரியதாய் இருந்தது. 'கண்ணீர் நிறைந்த ஏழை உழவர்களின் கண்களி லிருந்த இரத்தத் துளிகளே படிகங்களாகி அரசனின் மணி மகுடத்தில் முத்துகளாய் இருந்தன' என்று அமீர் குஸ்ராவ் குறிப்பிடுவது அறியத்தக்கது. இந்தியக் கிராம மக்களின் நிறை வேற்றப்படாத தேவைகளைக் கண்ணுற்ற பாபர் (Babur) என்பவர், 'பல்லாண்டுகளாக நிலைத்து ஓரிடத்தில் வாழ்ந்த மக்கள் ஒன்றிரண்டு நாள்களில் திடீரென்று அவ் விடத்தை விட்டு மறைந்துவிடுகின்றனர்' என்று கூறியிருக்கிறார். இவ்வாறு மத்தியக் காலத்து இந்திய உழவர்கள் அவர்களுடைய பிற்காலச் சந்ததியினரைப் போலவே செல்வ நல்வாழ்க்கையைப் பெற்

றிருக்கவில்லை என்பது நன்கு அறியப்படுகிறது; ஆனால், இக் கால வாழ்க்கைத் தரங்களோடு ஒப்பிட்டுப் பார்க்கும்போது அக் கால உழவர்களுக்குத் தேவைகள் மிகு குறைவாகவே இருந்தன. கிராமங்கள் பொருளாதாரத் துறையில் தம் தேவைகளைப் பூர்த்தி செய்துகொண்டன. கிராமங்களுக்குரிய எளிய தேவைகளும் அவ் ஊரிலேயே அவர்கள் மன நிறைவு அடையும்படி பூர்த்தி செய்யப்பட்டன. மேலும், தலைநகரில் அரசியல் புரட்சிகளும் குழப்பங்களும் ஏற்பட்டுக்கொண்டுவந்தாலும், கிராம மக்கள் அவற்றைப் பற்றிய கவலை ஒன்றுமின்றித் தங்கள் சாதாரண வாழ்க்கைத் தொழில்களை மேற்கொண்டு வாழ்ந்துவந்தனர். அரண்மனையில் நிலவிய அரசியல் மாறுபாடுகள் கிராம வாழ்க்கையின் போக்கைச் சிறிதும் மாற்றமுடியவில்லை.

## ஆ. சமுதாய வாழ்க்கை

சுல்தான்களும் பிரபுக்களும் ஆண், பெண் இரு பாலாரிலும் அடிமைகளை வைத்துக்கொண்டிருப்பது வழக்கம். அரசரின் அடிமைகளான பந்தகானி-காஸ் (Bandagana-i-khas) எண்ணிக்கையில் பொதுவாக மிகுதியாய் இருந்தனர். அலாவுதீன் ஐம்பதாயிரம் அடிமைகளை வைத்திருந்தார். ஃபிரோஸ்ஷா காலத்தில் அடிமைகளின் எண்ணிக்கை 200,000 ஆக உயர்ந்தது. அவர்கள் பயன் மிக்க தொழில்களைச் செய்துவந்ததாலும், அவர்களால் சிலசமயம் பொருள் வருவாயும் மிகுதிப்பட்டதாலும், அவர்களுடைய தலைவர்கள் அவர்களை நன்றாகக் கவனித்துவந்தனர். பொதுவாகச் சுல்தான் அடிமைகளைச் சில காலத்திற்குப் பிறகு விடுதலை செய்து விடுவார். அவர்களுள் சிலர் தங்கள் திறமையாலும், சிறப்பியல்புகளாலும் சமுதாயத்தில் உயர்ந்த நிலையை எய்துவதும் உண்டு. மிகுந்த எண்ணிக்கையுள்ள இந்திய அடிமைகளும் இருந்தனர். அவர்களுள் நல்ல உடற்கட்டுடையவர்களாய் இருந்தமையின், அஸ்ஸாம் அடிமைகள் மிகவும் விரும்பப்பட்டனர். இவர்களேயன்றிச் சீனு, துருக்கிஸ்தானம், பாரசீகம் முதலிய நாடுகளிலிருந்தும் அடிமைகள் ஆண்களும் பெண்களுமாக வரவழைக்கப்பட்டனர். போர் அல்லது பஞ்சக்காலத்தின் நிலைமைக்கேற்ப அடிமைகளின் விலை மாறுபட்டுக்கொண்டிருந்தது. ஆட்சி செய்வோருக்கும் பிரபுக்களுக்கும் அடிமைகளால் சில நன்மைகள் ஏற்பட்டிருக்கக்கூடும். ஆனால், அதே சமயத்தில் அடிமைத்தனம் சமுதாயத்தில் ஒரு சாபக்கேடான தொழிலாகவே கருதப்பட்டது. ஆனால், சமூகத்தில் சில தீங்குகளும் விளையாமற் போகவில்லை. உண்மையில் அது 'முன்னேற்றம் இன்மைக்கு முத்திரையாகவும், சமுதாய வாழ்க்கைக்குப் பழிவுண்டாக்கும் செயலாகவும் இருந்தது.

இந்துக்களிலும் சரி, முஸ்லிம்களிலும் சரி பெண்கள் தங்கள் கணவர்களையோ, பிற ஆண் உறவினர்களையோ சார்ந்து வாழ வேண்டிய நிலை இருந்தது. அது சமுதாய வாழ்க்கையின் ஒரு குறிப்பிடத்தக்க கூறாகும். ஆனால், அவர்கள் நன்கு மதிக்கப்படும் நல்ல நிலையில் வைக்கப்பட்டிருந்தனர். இல்லற வாழ்க்கையில் அவர்கள் கற்புநிலை வழாதிருக்கவேண்டும் என்பது எதிர்பார்க்கப் பட்டது. அவர்கள் தங்கள் வீடுகளில் பொதுவாகத் தனித்தே வாழ்ந்துவந்தனர், பெண்கள் முகத்திரை (Purdha) போட்டுக் கொள்ளும் வழக்கம் இந்துக்களிலும், முஸ்லிம்களிலும் பெருவாரி யாக மேற்கொள்ளப்பட்டது. பிற நாட்டுப் படையெடுப்பாளர்' குறிப்பாக மங்கோலியரின் திடீர் நுழைவுகளால் ஏற்படக்கூடிய அபாயத்தைக் கருதி குஜராத்தின் கடற்கரைப் பகுதியிலுள்ள சில நகரங்களில் முகத்திரை போட்டுக்கொள்ளும் வழக்கம் குறைவாக இருந்தது. பெண்கள் மேற்கொண்ட பண்பாடுகள் அவர்கள் சேர்ந்த சாதியைப் பொறுத்து மாறுபட்டிருந்தன, சாதாரண கிராமத்துப் பெண்கள் வீட்டு வேலைகளைச் செய்வதி லேயே காலத்தைக் கழித்தனர். சில உயர்வகுப்புகளைச் சார்ந்த பெண்கள் கலைகளையும், அறிவியல் அறிவையும் வளர்ப்பதில் ஈடுபட்டனர். ரூபமதியும்(Rupamati), பத்மாவதியும்(Padmavati) கற்றறிந்த பெண்களுக்கு எடுத்துக்காட்டுகளாவர். இளைஞர்களும் மங்கையர்களும் மிகு இளவயதிலேயே திருமணம் செய்துவைக்கப் பெற்றனர். சதி அல்லது உடன்கட்டையேறும் வழக்கம், அதாவது இறந்துபோன கணவனுடன் சேர்ந்து சிதையின் தீயில் விழுந்து மனைவியும் மாடிந்துபோகும் வழக்கம், சில சாதியினரிடையே மிகுதியாகப் பரவியிருந்தது. இபின்பதூதாவின் கூற்றுப்படி விதவையைத் தீயிலிடுமுன்பு டில்லி சுல்தானிடமிருந்து அனுமதி பெறவேண்டும். தானமும் பிற அறச் செயல்களும் நிறைந்து சமுதாய வாழ்க்கையின் தரம் பொதுவாக உயர்ந்து காணப்பட் டாலும், மது மங்கையர்மீது வெறி கொண்டு வாழ்ந்தவர்களும் அக் காலத்தில் இருந்தனர்.

## 3. இலக்கியம், கலை, கட்டடக்கலை

### அ. இந்திய இஸ்லாமிய நாகரிகங்களின் கூட்டுறவால் விளைந்த நன்மைகள்

பழைய இந்திய நாகரிகத்தில் வந்தவரையெல்லாம் ஏற்றுக் கொள்ளும் பண்பு மிகவும் பெரியதாயிருந்தது. முதன் முதலில் படையெடுத்த கிரேக்கர்கள், சாகர்கள் (Sakas), ஹூணர்கள் (Huns) முதலியோர் இந்திய மக்களிடையே வேறுபாடின்றிக்

கலந்து தங்கள் தனியடையாளத்தை இழந்துவிட்டனர். ஆனால், இந்தியாவில் துருக்கிய-ஆப்கானியப் படையெடுப்பாளர்களைப் பொறுத்தவரை அப்படி நிகழவில்லை. முஸ்லிம்களின் படையெடுப் பின்போது இந்துஸ்தானத்தின் சமுதாயக் கொள்கைகளோடு அடிப்படையிலே மாறுபட்ட தனிப்பட்ட கொள்கைகளையு டையவரான முஸ்லிம்கள் இந்தியாவில் நுழைந்தமையால் இந்துஸ்தான மக்களால் படையெடுப்பாளரைத் தங்கள் மயமாக் கிக்கொள்ள முடியவில்லை. இந்துஸ்தானத்திலேயே பிறந்து வாழ்ந் தவர்களுக்கும், புதியவர்களுக்கும் அடிக்கடி அரசியல் உறவுகளில் கடுமையான பிணக்குகள் ஏற்பட்டன. ஆனால், பல நூற்றாண்டு களாக இருவகைப்பட்ட நாகரிகங்களும் ஒன்றாக இணைந்திருக்க நேர்ந்தபோது, இரண்டும் ஒன்றையொன்று தழுவிக்கொள்ள முற்பட்டன. இவ்வாறு நீண்டகாலத் தொடர்பினால் இந்து முஸ்லிம் மதம் மாறியவர்களின் தொகை வளர்ந்துவந்தது. இந்தியாவில் ஏற்பட்ட சில பொது இயக்கங்களாலும் இந்து-முஸ்லிம் இனத்தார் ஒருவர்க்கொருவர் மற்றவர்களுடைய பழக் கங்களையும் கொள்கைகளையும் பரிமாறிக்கொள்ள நேர்ந்தது. மேம்போக்கில் வேறுபாடும் வெறுப்பும் காணப்பட்டாலும், அவற்றுக்குள்ளே பொறுத்துக்கொள்ளும் பண்பும், இணங்கும் பண்பும் வெவ்வேறு வாழ்க்கை நிலைகளிலும் கலந்தே காணப் பட்டன. உண்மையில் இந்தியாவில் இஸ்லாம் புகத் தொடங்கிய காலத்திலிருந்தே இந்துக்களும் முஸ்லிம்களும் ஒருவர்க்கொருவர் மற்றவருடைய பண்பாட்டை வியந்து போற்ற முற்பட்டனர். முஸ்லிம் தெய்வ நெறியின் மூலங்களுள் இந்தியாவும் ஒன்றாயி ருந்தது. மத்திய காலத்தில் புகழ்பெற்ற முஸ்லிம் அறிஞர்களும் முனிவர்களும் இந்தியாவுக்கு வந்து இந்திய மக்களிடையே வாழ்ந்துவந்தனர். அவர்கள் இஸ்லாமியத் தத்துவத்தையும், அனுபூதி நெறியையும் (Mysticism) இந்தியாவில் பரப்பினர். இந்துக்கள் முஸ்லிம் முனிவர்களைக் குறிப்பாக அனுபூதி நெறியைச் சார்ந்தவர்களை மதித்துப் போற்றத் தொடங்கியதனால் இரு இனத்தார்க்குமிடையே வேறுபாடுகளைப் பொறுத்துக்கொள்ளும் பண்பு கனிந்துவந்தது. இந்து முனிவர்களை முஸ்லிம்களும் போற்றிவந்தனர். முடிவில் இரு இனத்தாரும் சேர்ந்து பொதுவில் சத்யபீர் (Satyapir) அல்லது உண்மை முனிவரைத் தொழும் வழக்கம் ஏற்பட்டது. இப்படிப்பட்ட நட்புணர்ச்சி பெருகி யிருந்தமையால்தான் முஸ்லிம்கள் இந்துமதத்தைத் தழுவுதலும், முஸ்லிம்களாக மாறிய இந்து மக்கள் மீண்டும் தங்கள் மதத்திற்கே செல்லுதலும் அந்தக் காலத்திலும், அதற்குப் பிறகும் நிகழ்ந்து வந்தன. ஒருவரை ஒருவர் புரிந்துகொள்ளவேண்டும் என்று ஏற்பட்ட அவாவினால்தான், இந்து (சமஸ்கிருத) சமய இலக்கிய

யங்கள் முஸ்லிம் அரசவைகளில் பயிலப்பட்டும், மொழிபெயர்க்கப் பட்டும் அல்லது சுருக்கிப் பெயர்க்கப்பட்டும் வந்தன. காஷ்மீரில் ஜெய்ன்-உல்--ஆப்தீன்(Zain-ul-Abidin), வங்காளத்தில் ஹுஸேன் ஷா போன்ருேர் இவ் வகைப் பணிகளைச் செய்துவந்தனர். மேலும், முஸ்லிம் அரசவையினரும், முஸ்லிம் பிரச்சாரகர்களும், முனிவர்களும் இந்துத் தத்துவத்தில் உள்ள யோகம், வேதாந்தம் இவற்றையும், மருத்துவம், சோதிடம் என்ற அறிவியல்களையும் கற்பதில் பெரு விருப்புக் கொண்டனர். அதைப்போலவே வானியல் நூலாரும் முஸ்லிம் கலைச்சொற்களை ஏற்றுக் கொண்டனர். மேலும், அட்சரேகை, தீர்க்க ரேகைகளைப்பற்றி முஸ்லிம்கள் கொண்டிருந்த கணக்கு முறைகளையும், பஞ்சாங்க (zich) முறையில் சில கருத்துகளையும், தாஜிக்(Tajik) என்றழைக்கப் பட்ட ஜாதகக் கலையையும், மருத்துவ இயலில் உலோகக் காடிகளைப் பற்றியும், அயாட்ரோ-வேதியியலில் (Iatro-chemistry) சில முறைகளைப் பற்றியும் முஸ்லிம்களிடமிருந்தே கற்றுக்கொண் டனர். உருது என்னும் மொழி 'பாரசீக, அராபிய, துருக்கிய மொழிகளின் சொற்களும் கருத்துகளும் சமஸ்கிருத மூலமுடைய மொழிகளோடும் அவற்றின் கருத்துகளோடும் கலந்து, புது மொழியாக வளர்ந்தது. இந்துக்கள் முஸ்லிம்களின் மொழி ஒருமைப்பாட்டிற்கு இது ஒரு சிறந்த எடுத்துக்காட்டாக இருக் கிறது.' மாலிக் முகம்மது ஜயசீ (Malik Muhammad Jayasi) என்பார் பத்மினியைப்பற்றி எழுதியதுபோலச் சில முஸ்லிம்கள் இந்து வாழ்க்கையையும், மரபுகளையும் பற்றிப் பிரதேச மொழி களில் எழுதினர். ராய் பாணமல் (Rai Bhana Mal) தம் வரலாற்றுத் தொடர் நிகழ்ச்சி நூலில் செய்ததுபோலச் சில இந்து நூலாசிரியர்கள் பாரசீக மொழியில் முஸ்லிம் இலக்கிய மரபுகளைப் பற்றி எழுதிவந்தனர். எண்ணில்லாத முஸ்லிம் கவிஞர்கள் இந்தியிலும் இந்துக் கவிஞர்கள் உருதுவிலும் எழுதிவந்தனர். அமீர் குஸ்ராவும் சில நூல்களை இந்தியில் எழுதியிருக்கிருர். இவ்வாறு இரண்டு வகையான பண்பாடுகளும் ஒன்றுபட்டு இணைந் ததால் கலைகளிலும், கட்டடக்கலையிலும், புதிய வளர்ச்சிகள் தோன்றலாயின. 'அவற்றில் அடிப்படைக்கூறு பழைய இந்து மரபாயிருந்தாலும் வெளித்தோற்றமும் புது மெருகீடும் பாரசீக மரபை ஒட்டியிருந்தன. முஸ்லிம் அரண்மனையின் தேவைகளுக்கு ஏற்ப அவை பயன்படுத்தப்பட்டன.' இந்து உயர் வகுப்பில் பிறந்து முஸ்லிமாக மாறியவர்களும், இந்துக்களின் சூழ்நிலையில் வாழ்ந்தவர்களும் சதி ஜௌஹார் (Jauhar) போன்ற இந்துப் பழக்கங்களை மேற்கொண்டனர். ஆட்சியதிகாரத்திலிருந்த இந்துக் கள் முஸ்லிம்களுக்கிடையே உறவு மிகுதிப்பட்டன. இனக் கலப் புறவின் மிகுதியினுல் சில கலப்புத் திருமணங்கள் ஏற்பட்டன

என்றும் கூறலாம். வெற்றிக்கு ஒரு நிபந்தனையாகக் கட்டாயத்தின்பேரில் இப்படிப்பட்ட இனக் கலப்புத் திருமணங்கள் சில சமயங்களில் நடைபெற்றாலும் அவை இவ் விரு இனத்தாருக்குமிடையே இருந்த 'வெறுப்பினால் விளைந்த வேறுபாடுகளைக் குறைக்க' உதவின; ஓர் இனத்தாரின் பழக்க வழக்கங்களை மற்ற இனத்தார் மேற்கொள்ளச் செய்யவும் துணைபுரிந்தன.

அரசியல் அரங்கில்கூட இணக்கப்பாடும், கூட்டுறவும் இல்லாமற் போகவில்லை. சிற்றூர் ஆட்சி முறையில் இந்து கிராமத் தலைவர்களையும், கணக்குப் பிள்ளைகளையும் வைத்துக்கொள்ள வேண்டிய தேவை இருந்தது. முஸ்லிம் அரசு மேலும், மிகுந்த எண்ணிக்கையுள்ள இந்துக்களை வேலையில் அமர்த்திக்கொண்டது. அவர்களின் ஆட்சியின் வெவ்வேறு துறைகளில் புகழத் தக்கவாறு பணியாற்றிவந்தார்கள். இவ்வாறு மாளவத்தில் சந்தேரியைச் சேர்ந்த மேதினி ராய் (Medini Rai) என்பவரும் அவருடைய நண்பர்களும் உயர்ந்த பதவிகளை வகித்தனர். வங்காளத்தில் ஹூஸேன்ஷா என்பவர் பல இந்து அதிகாரிகளை நியமித்தார். அவர்களுள் புரந்தர்கான் (Purandar Khan), ரூப் (Rup), சனாதன் (Sanatan) முதலியோர் மிகவும் பிரசித்தி பெற்றிருந்தனர். கோல்கொண்டா சுல்தான் சில இந்துக்களைத் தங்கள் அமைச்சர்களாக அமர்த்திக்கொண்டிருந்தார். பீஜப்பூர் ஆட்சியாளராயிருந்த யூசுஃப் ஆதில் ஷா (Yusuf Adil Shah) என்பவர் பொறுப்புவாய்ந்த பல உத்தியோகங்களை இந்துக்களுக்குக் கொடுத்தார். அவருடைய மாநிலத்தின் கணக்குகளும் ஏடுகளும் சாதாரணமாக மராத்தியிலேயே எழுதிவைக்கப்பட்டுவந்தன. காஷ்மீரத்துச் சுல்தான் ஸெல்நூல்-ஆபிதீன் அக்பருக்கு முன்னோடியாக இந்து ஆதரவாளராய் இரு இனத்தாருக்கும் ஏற்ற கொள்கைகளை மேற்கொண்டார். இந்துக்களை தம் மாநிலத்தில் போற்றி ஆதரித்ததால் பீஜப்பூரை ஆண்ட இப்ராகிம் ஆதில் ஷாவை முஸ்லிம் குடிமக்கள் 'ஜகத்குரு' (Jagadguru) என்று அழைத்தனர். இராசபுத்திர வீரர்கள் முஸ்லிம் மக்களைக் காப்பதிலும் தங்கள் வீரத்தைப் பயன்படுத்தினர். ராணா சங்கா (Rana sanga) என்ற இராசபுத்திர வீரர் தலைமறைவாகிவிட்ட தம் பகைவரான மாள்வா அரசர் இரண்டாம் மகமூதை மதித்து அவருக்குச் சுதந்திரம் வழங்கும் அளவுக்கு ஆண்மையாளராய் விளங்கினார். சுல்தான் நாஸிருதீனால் (Nasir-ud-din) தோற்கடிக்கப்பட்டபின் குத்லுக்கான் (Qutlugh Khan) சாந்தூர் அரசன் ராணா பன் பால் (Rana Ban Pal) என்பவரைப் புகலிடமாகக் கொண்டார். சுல்தான் அலாவுதீன் கில்ஜியின் கோபத்துக்கு ஆளாக நேரிடுவதைப் பற்றியும் கவலைப்படாது அவருக்கு அடங்காமல் கலகம் செய்து

வந்த ஒரு கலகத் தலைவருக்கு ராந்தாம்போரை (Ranthambhor) ஆண்டுவந்த ஹமீர்தேவர் எவ்வாறு புகலிடம் அளித்தார் என்பது பலரும் அறிந்த செய்தியாகும். இரண்டாம் தேவராயருக்குப் பின் வந்த விசயநகர அரசர்கள்கூடத் தங்கள் படைத்துறையில் முஸ்லிம்களை அமர்த்திக்கொண்டனர். இவ்வாறு அவர்கள் 'தங்கள் பெரிய தலைநகருக்கு உள்ளேயும், வெளியேயும் இஸ்லாம் மதத்திற்குச் சிறப்பளித்து அதைப் போற்றினர். புகழ்பெற்ற முஸ்லிம் தளபதியான பீஜப்பூர் ஆசாத்கான் என்பவர் ஒருமுறை மகாநவமித் திருவிழாவைக் காண்பதற்காக விசயநகரத்திற்கு அழைக்கப்பட்டார். ராணாசங்கா பாபருடன் செய்த போரின் போது தமக்குக்கீழ் ஒரு சிறு முஸ்லிம் படையையும் வைத்திருந்தார். ஓர் இந்து பெனியாவான ஹீமு என்பவர் ஆதில் ஷா சுர் (Adil Shah Sur) என்பவரின் பிரதம மந்திரியாகப் பணியாற்றும் உயர்நிலையை அடைந்தார். அவர் 1556-ல் ஆப்கானியர் முகலாயர்களுடன் நடத்திய கடைசி முக்கியமான போரில் ஆப்கானியரின் தளபதியாய் இருந்தார். இப்படிப்பட்ட அரசாங்க உத்தியோகங்கள் எல்லாம் நல்லெண்ணத்தின் பயனாலன்றி அரசியல் தேவையின் காரணமாகவே பெரும்பாலும் அளிக்கப்பட்டன. எனினும், அவை இந்துக்கள் முஸ்லிம்களுக்கிடையே நல்லுறவை வளர்ப்பதற்குத் துணைபுரிந்தன என்பதில் ஐயமில்லை. உண்மையில் வாழ்க்கையின் பல்வேறு துறைகளிலும் கலைகள், கைத்தொழில்கள், இசை, ஓவியம், கட்டடம் கட்டும் முறைகள், ஆடையணியும் முறைகள், விளையாட்டுகள் முதலியவற்றில் இரு இனத்தினருக்குமிடையே ஒட்டுறவு மிகவும் பெரியதாய் வளர்ந்திருந்தது. இதனால், பாபர் இந்தியாவுக்கு வந்தபோது அவர்களிடத்தே காணப்பட்ட ஒரு வகையான 'இந்துஸ்தானி முறை'யைக் கண்டு வியப்புற்றார். இதுகுறித்துச் சர்ஜான் மார்ஷல் கூறியிருப்பவை மிகவும் பொருத்தமானவையாகும். 'அடிப்படையிலேயே முற்றிலும் வேறுபட்டவையும், தனித்தனியே மிகு விரிவாகவும் வன்மையாகவும் வளர்ச்சியுற்றனவுமாகிய இஸ்லாம், இந்து என்ற இருநாகரிகங்கள் ஒன்றாய்க் கலந்து இணைந்து நிற்கும் இக் காட்சி மனித வரலாற்றிலேயே இதுவரை நாம் கண்டதில்லை. அவ் விரு பண்பாடுகளுக்கும் சமயங்களுக்கும் இடையே பெருத்த வேறுபாடுகளும் இருந்தன. அவற்றிற்கிடையே உண்டான தாக்குதல்களின் வரலாறு சிறப்பு மிக்க கருத்துகளை அறிவுறுத்துகின்றது.'

இந்துமதம் இஸ்லாம் மதத்தைத் தன்னோடு முழுமையாகக் கலக்கும்படி செய்துவிட முடியவில்லை. ஆனால், இரண்டு வழிகளில் அதனிடமிருந்து நன்மைகளைப் பெற்றுக்கொண்டது. முதலாவ

தாக இஸ்லாமியரின் மதம் மாற்றும் பேரார்வத்தைக் கண்டு இந்துக்களுள் வைதிகப் பற்றுக் கொண்டிருந்தோர் தங்கள் மதத்தில் ஆழ்ந்த பற்றுக் கொள்ளத் தொடங்கினர். இஸ்லாமியக் கொள்கை பரவாதிருப்பதற்காகத் தங்கள் நிலைமைக்கு அரண் கட்டுப்பாடுகளை மேலும் கடுமையாக்கினர். ஸ்மிருதிகளில் (Smriti) பல வகையான நீதிச் சட்டங்களை இயற்றினர். இப்படி இயற்றியவர்களுள் மிகவும் புகழ்பெற்றவர்கள் கி.பி.1335—1360-ல் காலநிர்ணயம் என்ற பராசர ஸ்மிருதிக்கு(Parasara Smriti) விளக்கவுரை எழுதிய விசயநகரத்து மாத்வாக்கள்(Madhavas), மதனபாலன்(Madanapala, கி.பி. 1360—1370) என்ற அரசனுக்காக மதனபாரிஜாதம்(Madanaparjata) என்ற ஸ்மிருதி நூலை இயற்றிய விஸ்வேஸ்வரர் (Visvesvarar), மனுவின் நூலுக்குச் சிறப்புமிக்க விளக்க உரைகள் எழுதிய குல்லுகா(Kulluka), ரகு நந்தனர் (Raghunandan) என்போர் ஆவர். குல்லுகா வங்காளமொழியாசிரியராயினும், வாரணாசியில் வந்து குடியேறி வாழ்ந்தார். ரகுநந்தனரும் வங்காளத்தைச் சேர்ந்தவரே. சைதன்னியரின்(Chaitanya) சமகாலத்தவர். மாறாக, இஸ்லாமின் ஜனநாயகக் கொள்கைகளுள் சில இந்துக்களின் சமுதாய, மத அமைப்புகளுள் புகுந்துவிட்டன. முனிவர்களாயிருந்த சில சமயப் பிரசாரகர்கள் மூலம் சில பொதுநல இயக்கங்கள் தோன்றுவதற்கும் இஸ்லாமே காரணமாய் இருந்தது. விளக்கிக் கூறுவதில் சில வேறுபாடுகள் காணப்பட்டனவே தவிர உண்மையில் அந்தச் சீர்திருத்தக்காரர்கள் எல்லாம் பக்தி கொள்கையையே கல்வியறிவில்லாத மக்களிடம் எடுத்துச் சென்று விவரித்துக் கூறுபவர்களாய் இருந்தனர். எல்லா மதங்களும் சமமான 'பெருமையுடையனவே என்றும், கடவுள் ஒன்றே என்றும் அவர்கள் போதித்தனர். மனிதனுக்குப் பெருமை பிறப்பினால் ஏற்படுவதன்று என்றும், செய்யும் சிறந்த செயல்களால் ஏற்படுவதே என்றும் கூறினர். அளவுக்கு மீறிய சடங்குகளையும், சமயச் சடங்குகளையும், பழக்க வழக்கங்களையும் எதிர்த்தனர்; புரோகிதர்களின் அளவிலாச் செல்வாக்கைக் கண்டித்தனர்; எல்லோர்க்கும் முத்தி தருவன எளிய பக்தியும் நம்பிக்கையுமே என்றும் வற்புறுத்தினர்.

அவர்களுள் காலத்தால் முந்தியவராகக் குறிப்பிடத் தக்கவர் இராமானந்தரே(Ramananda) ஆவர். எனினும், அவருடைய பிறப்பு, இறந்தகாலம் இவற்றைப்பற்றிய கருத்து வேறுபாடுகள் இன்னும் இருக்கின்றன என்பதையும் நினைவில் கொள்ளவேண்டும். அலகாபாத்தில் கான்ய குப்ஜ(Kanya kubja) பிராமண குடும்பத்தில் பிறந்த இராமானந்தர் வடஇந்தியாவின் புனித தலங்களுக்கெல்லாம் யாத்திரை செய்தார். அவர் இராமனைக் கடவுளாகத்

தொழுதார். எல்லா வகுப்பினர்க்கும் ஆண் பெண் இருபாலர்க்கும் பக்திக் கொள்கையை இந்தி மொழியில் பரப்பினுர். அவருடைய முக்கியமான பன்னிரு சீடர்களுள்[1] ஒருவர் நாவிதர்; இன்னொருவர் சக்கிலி. மற்றொரு புகழ்பெற்ற வைணவ முனிவர் வல்லபாச்சாரி யார் என்பவர். அவர் கண்ணன் வழிபாட்டிற்கு விளக்க உரைகள் ஆற்றிவந்தார். அவர் கி.பி. 1479-ல் வாரணசியில் ஒரு தெலுங்கு பிராமண குடும்பத்தில் பிறந்தவர். அவருடைய இளமைப்பருவத் திலேயே மேதையாக விளங்குவதற்குரிய அறிகுறிகள் காணப் பட்டன. தம் கல்வி முடிந்ததும் அவர் விசயநகருக்குச் சென்று கிருஷ்ண தேவராயரின் அரசவையில் அமர்ந்தார். அங்கே அவர் பொது மேடையில் வாதஞ்செய்து சில சைவப் பண்டிதர்களைத் தோற்கடித்தார். அவர், உலகப்பற்றுகளைத் துறக்க வேண்டு மென்றும், ஆன்மாவும் உலகமும் எல்லாவற்றிற்கும் மேலான பேரான்மாவுடன் சிறிதும் வேறுபாடின்றிக் கருதப்படவேண்டும் என்றும் வற்புறுத்தினுர். அவருடைய ஏக ஆன்மக் கொள்கை **சுத்த-அத்வைதம்** (Suddha Advaitam) எனப்படும். அதாவது 'தூய இரண்டற்ற கொள்கை' என்று வழங்கப்பட்டது. ஆனுல், பிற்காலத்தில் வல்லபாச்சாரியாரின் கொள்கையையும் பின்பற்றி வந்தவர்கள் பழித்துரைக்கப்பட்டனர். இதுபற்றி மோனியர் வில்லியம்ஸ் (Monier Williams) 'வல்லபாச்சாரியின் கொள்கை தாழ்வுற்ற கீழ் நாட்டு எபிக்கூரியன் (Epicurean) கொள்கையாக ஆகிவிட்டது' என்று கூறியிருக்கிருர்.

வைணவ முனிவர்களுள் மிகு புகழ் பெற்றவரும் மிகு பெருமை யுடையவருமாகக் கருதப்படுபவரும் சைதன்னியரே (1485—1533). அவர் வங்காளத்தில் நதியா (Nadia) என்ற ஊரில் கல்வியறிவு மிக்க ஒரு பிராமண குடும்பத்தில் 1485ஆம் ஆண்டில் பிறந்தார். இளமைப் பருவத்திலேயே இலக்கியத்தில் நுண்மாண் நுழைபுலம் உடையவராகக் காணப்பட்டார். விரைவிலேயே அவருடைய ஆன்மா இவ் வுலகப் பற்றுகளினின்றும் விடுபட்டு உயர்ந்து செல்ல அவாவியது. தம் இருபத்து நான்காம் வயதில் இவ் வுலகப்பற்று களைத் துறந்தார். மீதியிருந்த வாழ்க்கையை, அன்பையும் பக்தி யையும் பரப்புவதிலேயே கழித்தார். ஒரிஸ்ஸாவில் பதினெட்டு ஆண்டுகளும், தக்காணம், பிருந்தாவனம் (Brindavan), கௌர் (Gaui) முதலிய பிற இடங்களில் ஆறு ஆண்டுகளையும் கழித்தார். அவரைப் பின்பற்றுவோர் அவரைத் திருமால் அவதாரமாகவே கருதுகின்றனர். சைதன்னிய சரிதாம்ருதம் (Chaitanyacharitamrita) என்று புகழ் பெற்ற சைதன்னியரின் வரலாற்றைக் கூறும்

[1] அனந்தானந்தா, கபீர், பீபா, பாவானந்தர், சுகர், சர்சுரா, பத்மாவதி, நரஹரி, ராயதாசர், தானு, செய்னு, சுர்சுராவின் மனைவி.

நூலில் கிருஷ்ணதாஸ் கவிராஜ் என்பவர் சைதன்னியர்கோட்பாட்டின் சாரத்தைக் கீழ்வருமாறு சுருங்கச் சொல்லியிருக்கிறார்: 'ஒரு மனிதன் கண்ணனை வழிபட்டுக்கொண்டு, தன் குருவுக்குத் தொண்டு செய்துகொண்டிருந்தால், அவன் மாயை என்னும் வலையிலிருந்து விடுபட்டுக் கண்ணனின் பாதார விந்தங்களை அடைவான். உலக ஆசாபாசங்களையும், சாதியின்பேரில் அமைந்த மதப் பிரிவுகளையும் விட்டுவிட்டு உண்மையான வைணவன் உலகில் வேறு ஆதரவின்றிக் கண்ணனையே சரண் அடைகின்றான்.' புரோகிதர்களால் செய்யப்பட்டுவந்த சடங்கு முறைகளை எதிர்த்து விஷ்ணுவையே முழு நம்பிக்கையுடன் தொழவேண்டும் என்று போதித்தார். அன்பு, பக்தி, இசை, நடனம் இவற்றின்மூலம் ஆனந்த பரவச நிலையை அடைய முடியும் என்றும் அந் நிலையில் கடவுளின் காட்சியைத்தானே உணரமுடியும் என்றும் நம்பினார். அவருடைய உபதேசம், சாதி, சமயம், கொள்கை வேறுபாடின்றி எல்லாருக்கும் உரியதாய் இருந்தது. அவருடைய சீடர்களுள் இந்து மதத்தில் கீழ்ப்பட்ட நிலையில் இருந்தவர்களும், முஸ்லிம்களுங்கூட இருந்தனர். சைதன்னியரின் உபதேசங்கள் மக்களிடையே மிகுதியாகப் பரவியதுடன் அவை மக்கள் மனத்திலே ஆழமாகவும் பதிந்தன.

மகாராஷ்டிர நாட்டில் பக்தி சமயம் நாமதேவர் என்பவரால் பரப்பப்பட்டது. அவருடைய அடியார்களுள் ஒரு சிலர் முஸ்லிம்களாயிருந்து இந்து மதம் மாறியவர்களாவர். தையற்கார அல்லது காலிக்கோ அச்சிடும் சாதியைச் சார்ந்த நாமதேவர் 15ஆம் நூற்றாண்டின் முற்பகுதியில் வாழ்ந்தார். [1]கடவுள் ஒன்று என்ற நம்பிக்கை உடையவராயிருந்த அவர் உருவ வழிபாட்டையும், மதத்தின் அடிப்படையில் செய்யும் வெளிச்சடங்குகளையும் அதிகமாகப் போற்றவில்லை. கடவுள்மேல் அன்பு கொள்வதன் மூலந்தான் முக்தியடைய முடியும் என்று நம்பினார். 'என் இதயத்தில் நிறைந்திருக்கும் அவன்மேல் உள்ள அன்பு என்றும் பிரிக்க முடியாதது; நாமதேவன் அழிவில்லாத பெயருடையவனுக்குத் தன் இதயத்தை அளித்துள்ளான். குழந்தைக்கும் அதன் தாய்க்கும் உள்ள அன்பைப் போல் என் ஆன்மா கடவுளோடு இணைக்கப் பட்டுள்ளது' என்று அவர் கூறியுள்ளார்.

[1] அவருடைய பிறப்பின் காலத்தைப் பற்றிக் கருத்து வேறுபாடுகள் உள்ளன. மகாலிஃப்பின்(Macauliffe) கருத்துப்படி (The Sikh Religon-Vol-VI. p.18). அவர் பிறந்த ஆண்டு கி.பி. 1270. டாக்டர் பண்டர்க்காரும் (Vishnavism and Saivaism p. 89), கார்ப்பெண்டரும் (Theism in Medieval India. p. 452) அவர் பதினைன்காம் நூற்றாண்டைச் சார்ந்தவர் என்று கூறுவர். டாக்டர் பர்க்குஹர் (Farquhar)' 1400-லிருந்து 1430 வரை வாழ்ந்தவர் என்று J. R. A. S. 1920, p. 186) குறிப்பிடுகிறார்.

இந்து மதத்திற்கும் இஸ்லாமுக்குமிடையே இணக்க உணர்ச்சியை விளைவிப்பதற்காகக் கபீர் மிகச் சிறந்த முயற்சிகளைச் செய்தார். அவருடைய வாழ்க்கை வரலாறு முழுதும் இருளில் புதையுண்டிருக்கிறது. அவர் பிறந்த காலமும் இறந்த காலமுங்கூட இன்னதெனத் தெரியவில்லை.[1] அவர் பதினான்காம் நூற்றாண்டின் முடிவில் அல்லது பதினைந்தாம் நூற்றாண்டின் முதல் கால்நூற்றாண்டில் வாழ்ந்தார் என்று கொள்ளலாம். அவர் ஒரு பிராமண விதவைக்குப் பிறந்தவர் என்றும், அவள் குழந்தையை வாரணாசியில் ஒரு குளத்தருகே போட்டுவிட்டுச் சென்றாள் என்றும், அக் குழந்தையை ஒரு முகம்மதிய நெசவாளியும், அவர் மனைவியும் எடுத்து வளர்த்தனர் என்றும் கர்ணபரம்பரைச் செய்தி கூறுகிறது. அவர் இராமானந்தரின் மாணவர் என்று பரம்பரையாகச் சொல்லப்படுகிறது. 'கபீரின் எண்ணங்களின் அடிப்படை முழுதும் இந்துச் சமயச் சார்புடையனவே' என்று டாக்டர் கார்ப்பெண்டர் கூறினாலும், 'கபீர் சூஃபி(Sufi) முனிவர்களிடமும் கவிஞர்களிடமும் தொடர்பு கொண்டிருந்தார் என்பதும், அவர்களிடமிருந்து பல கருத்துகளைப் பெற்றார் என்பதும் மறுக்க முடியாத உண்மையாகும். அவர் எல்லா வகையான வகுப்பினரிடத்தும், கொள்கையினரிடத்தும் ஒற்றுமையை வளர்க்கக்கூடிய அன்பு மதத்தைப் போதித்தார். அவரைப் பொறுத்தவரை 'இந்துவும், துருக்கியனும் ஒரே களிமண்ணால் செய்யப்பட்ட குடங்களே; அல்லாவும் இராமனும் ஒரே கடவுளின் வெவ்வேறு பெயர்களே,' அவர் கூறுகிறார் :

> 'ஒரு முனிவரைப் பார்த்து அவர் எந்த சாதியைச் சேர்ந்தவர் என்று கேட்பது தேவையற்றது.
>
> நாவிதனும், வண்ணானும், தச்சனும் கடவுளை நாடியிருக்கின்றனர். இராமதாஸ்கூடக் கடவுளைத் தேடிக்கொண்டிருப்பவரே. ரிஷி ஸ்வர்பாச்சா (Rishi Swapacha) சாதியில் தோல் பதனிடுபவரே. வேறுபாடற்ற ஒரே பரம்பொருளை இந்துக்களும் முஸ்லிம்களும் அடைந்துள்ளனர்.'

கபீர் இந்து அல்லது முஸ்லிம் மதச் சடங்குகளின் அல்லது வெளிச் சம்பிரதாயங்களின் சடங்குகளின் வன்மையில் நம்பிக்கை கொண்டவர் அல்லர். அவர் கொள்கைப்படி முக்திக்கு உண்மையான வழி பஜனை அல்லது பக்திவழிபாடும், ஆன்ம சங்கோசம்,

[1] கருத்து வேறுபாடுகளை அறியவேண்டுமாயின் தாராசந்த் எழுதிய **Influence of Islam on Indian Civilisation** p.146-147 பார்க்க. மகாலிப்பும், பண்டார்க்காரும் அவர் கி, பி. 1398-ல் பிறந்தார் என்றும், வெஸ்ட்காட், பர்குஹர், பர்ன்ஸ் முதலியோர், கி.பி. 1440 என்றும் கூறுகின்றனர்.

வாய்மையின்மை, கபடம், இரக்கமின்மை முதலிய குணங்களி லிருந்து விடுபட்டிருத்தலுமேயாம்.

> 'பட்டினி கிடப்பதாலோ, பிரார்த்தனைகளையும் சமயக் கொள்கைகளையும் திருப்பித்திருப்பிச் சொல்லிக்கொண்டிருப் பதாலோ ஒருவன் விண்ணுலகம் அடைவதில்லை. மெக்காக் கோயிலுக்கு உண்மையான அகத்திரை மனிதனின் இதயத் திலேயே இருக்கிறது. இவ் வுண்மை உணரப்படவேண்டும். உன் மனத்தைக் காபாவாகவும், உடலை அதைச்சுற்றியுள்ள கோயிலாகவும் ஆக்கிக்கொள். மனச்சாட்சியை உன் மனத் தின் முக்கிய ஆசிரியராக ஏற்றுக்கொள். கோபம், ஐயம், வெறுப்பு இவற்றை ஒழித்துவிடு. ஐந்து தடவை செய்யும் பிரார்த்தனைகளின் மந்திரமாகப் பொறுமை என்பதை உச்சரி. இந்துக்களுக்கும் முஸ்லிம்களுக்கும் ஒரே கடவுள்தான்.'

என்று அவர் மொழிந்துள்ளமை இங்குக் கருதத் தக்கதாகும்.

அக் காலத்தில் வாழ்ந்த மற்றொரு பெரிய போதகர் நானக் என்பவர். அவர் சீக்கியர் மதத்தை உண்டாக்கினர். உப நிஷத்துக்களின் கொள்கையாகிய ஒரு கடவுள் கொள்கையை உயிர்ப்பித்தார். லாகூரிலிருந்து தென்மேற்கே ஏறக்குறைய முப்பத்தைந்து மைல் தூரத்திலிருக்கும் தல்வாண்டி (Talwandi) (இக்காலத்தில் நங்கனம்) என்ற ஊரில் சத்திரிக் குடும்பத்தில் கி.பி. 1469-ல் அவர் பிறந்தார். வாழ்க்கை முழுதும் இந்து மதத்திலும், இஸ்லாமிலும் உள்ள சிறந்தவற்றையெல்லாம் எடுத்துக்கொண்டு அவற்றின் அடிப்படையில் சமயப் பொறு மையைக் கடைப்பிடிக்கும்படி போதித்துக்கொண்டிருந்தார். உண்மையில் மதங்களுக்கிடையே ஏற்பட்டிருந்த பிணக்கு களுக்கு ஒரு முற்றுப்புள்ளி வைப்பதையே தம் குறிக்கோளாகக் கொண்டிருந்தார். கபீரைப்போலவே கடவுள் ஒன்றே என்று போதித்தார். இந்து, இஸ்லாம் சமயங்களிலிருந்த சம்பிர தாயங்களை மிகவும் கண்டித்தார். அவர் கூறியதாவது :

> 'வெறும் வார்த்தைகளில் மதம் அடங்கிவிடவில்லை. எல்லா மனிதரையும் சமமாகக் காண்பவனே சமயப் பற்றுள்ளவ னுவான். கல்லறைகளிருக்குமிடத்திற்கும், சுடுகாட்டிற்கும் ஓடி அலைந்துகொண்டிருப்பதோ மதம் அன்று. வெளிநாடு களுக்குச் செல்வதோ, புண்ணியத் தலங்களில் தீர்த்த மாடுவதோ மதம் அன்று. உலக ஆபாசங்களுக்கிடையே தூய்மையாக வாழ்; இதனுல் மதத்திற்கு வழி காண்பாய்.'

கடுந்துறவுக்கும், இன்ப சுகங்களை நாடும் எளிய வாழ்வுக்கும் இடைப்பட்ட வழியை மேற்கொள்ளும்படி கூறிய நானக் தம் வழியைப் பின்பற்றுவோரிடம் கபடம், வெளிவேஷம், தன்னலம், பொய்மை இவற்றைக் களையவேண்டும் என்று வற்புறுத்தினார்.

> 'தன்னடக்கத்தை உலைக்கூடமாகவும் துறவு மனப்பான்மையைப் பொன்செய் கொல்லனாகவும், அறிந்து கொள்ளுதலைப் பட்டறையாகவும், தெய்விக அறிவைக் கருவிகளாகவும், தவத்தைத் தீயாகவும், தெய்வ அன்பைப் பூசையாகவும் வைத்துக்கொண்டு அதில் கடவுளின் பெயரை உருக்கியூற்று. உண்மையான அந்த நாணயச் சாலையில் கடவுளின் சொல் நாணயங்களாக உருவாகும். கடவுளால் தயவுடன் நோக்கப்படுவோர் செய்யும் தொழில் இதுவே.'

என்பது அவருடைய உபதேசத்தின் சாரமாகும்.

நானக்கின் மதம், மதம்மாற்றும் மதமாக இருந்ததால் பல முஸ்லிம்கள் அம் மதத்திற்கு மாறினர். அவருக்குப்பின் வந்தவர்களின் காலத்தில் மதம் மாற்றும் பணி வேகமாக நடைபெற்றுவந்தது.

### ஆ. தேசிய இலக்கிய வளர்ச்சி

சீர்திருத்த இயக்கங்கள் நிலைபெறுகின்ற சமுதாய சமயங்களுக்கு நன்மை விளைவித்ததோடு இந்தியாவின் வெவ்வேறு பாகங்களிலும் இந்திய இலக்கியம் வளர்வதற்குப் பெரிய தூண்டுகோலாகவும் இருந்தன. பழமைப் பற்றுக் கொண்டு வைதிக அறிஞர்கள் வடமொழியிலேயே எழுதிக்கொண்டிருந்தனர். ஆனால், கல்வியறிவில்லாத மக்களிடமும் தம் கருத்துகளைப் பரப்பவேண்டும் என்ற எண்ணம் கொண்டிருந்த சமயச் சீர்திருத்தக்காரர்கள் மக்களுக்கு எளிதில் புரியும் மொழியிலேயே பேசியும் எழுதியும் வந்தனர். இவ்வாறு இராமானந்தரும், கபீரும் இந்தியில் போதித்து அதன் கவிதை வளத்தைப் பெருக்கினர். பக்திச்சுவை கனிந்தொழுகும் கபீரின் தோகைகளும் சகீகளும் (Sakhis)இந்தி இலக்கியத்தின்சிறந்த பகுதிகளாக விளங்குகின்றன. மராத்திய இலக்கியம் வளர்வதற்கு நாமதேவர் மிகப்பெரிதும் உதவினார். மீராபாயும்(Mirabai), மற்றும் சில கிருஷ்ண வழிபாட்டினரும் 'மக்கள் மொழியில்'(Brajabhasha) பாடினர். நானக்கும் அவருடையசீடர்களும்பஞ்சாபியையும்,குருமுகியையும் வளர்த்தனர். வங்காள இலக்கியம் தன் வளர்ச்சிக்கு வைணவ ஆசிரியர்களுக்குக் கடன்பட்டுள்ளது. வங்காளத்தில் பீர்பூம் (Birbhum) என்ற மாவட்டத்தில் நன்னூர் (Nannur) என்ற

கிராமத்தில் 14ஆம் நூற்றாண்டின் கடைசியில் பிறந்த புகழ்பெற்ற வைணவக் கவிஞர் சந்திதாஸ்(Chandidas) என்பவர் இன்னும் சிறப்பித்து மதிக்கப்படுகிறார். அவருடைய பாடல்களை வங்காளத்தின் சாதாரண மக்களும் அறிந்திருக்கின்றனர். அவருடைய சமகாலத்தவரான வித்யாபதி தாக்குர்(Vidyapati Thak'ur)என்பவர் மிதிலையில் பிறந்திருந்தாலும் வங்காளமக்கள் இன்னும்பக்தியுடன் போற்றி வருகின்றனர். இளவரசர்களின் அவைகளும் இலக்கியத்தைப் போற்ற முற்பட்டதால் இலக்கியம் வளர்ந்தது. சிவ சிம்மன் (Siva Simha) என்ற இந்து ஆட்சித் தலைவரின் அரசவைப் புலவராக வித்யாபதி வீற்றிருந்தார். வங்காளத்து முஸ்லிம் ஆட்சியாளர்கள் இராமாயணத்தையும் மகாபாரதத்தையும் வடமொழியிலிருந்து தாங்கள் புரிந்துகொள்ளும் வங்காளத்தில் மொழிபெயர்க்கும் பணிக்காக அறிஞர்களை அமர்த்தினர். இவ்வாறு கௌர் சுல்தான் நுஸ்ரத் ஷாஎன்பவர் மகாபாரதத்தை வங்காளத்தில் மொழிபெயர்ப்பித்தார். வித்யாபதி இந்தச் சுல்தானையும் சுல்தான் கியாஸ் உதீனையும் புகழ்ந்து பேசியிருக்கிறார். வங்காளத்தின் பைபிளாகச் சிலரால் கொண்டாடப்பெறும் கிரித்திவாஸ் என்பவர் இயற்றிய இராமாயணம் கௌர் அரசர் ஒருவரின் ஆதரவுபெற்று எழுதப்பட்டது. சுல்தான் ஹுஸேன் ஷாவின் தளபதி பராகல்கான்(Paragal khan) என்பவர் கவீந்திரா (Kavindra) என்று அழைக்கப்பட்ட பரமேஸ்வரன் என்பவரைக் கொண்டு மகாபாரதத்தின் மற்றொரு மொழிபெயர்ப்பைச் செய்வித்தார். சிட்டகாங்கின் கவர்னரும், பராகல் கானின் மகனுமான சூதிகான்(Chuti khan) மகாபாரதத்தின் அசுவமேத பர்வத்தை வங்காளத்தில் மொழிபெயர்க்கும்படி சிரிகர நந்தியை(Srikara Nandi) அமர்த்தினார். விசயநகர அரசர்களால் தெலுங்கு இலக்கியத்திற்கு எப்படிப்பட்ட பெரிய ஊக்கமும் ஆக்கமும் கிடைத்தன என்பதை ஏற்கெனவே நாம் பார்த்திருக்கிறோம்.

### இ. வடமொழியில் இலக்கியப் பணி

சமயச் சார்புடையனவும் இல்லாதனவுமான முக்கியமான செய்யுட் கோவைகள் வடமொழியிலும் இக் காலத்தில் எழுதப்படாமல் போகவில்லை. அதனால்கடந்த இரண்டு மூன்று நூற்றாண்டுகளுக்கு முன்பிருந்த நிலையை ஒப்பிட்டுப் பார்க்கும்போது இக்காலத்தில் வடமொழி இலக்கிய வளர்ச்சி குன்றியதென்றே கூற வேண்டும். ஏறக்குறையக் கி.பி. 1300-ல் பார்த்தசாரதி மிஸ்ரா (Parthasarathi Misra) என்பவர் கர்ம மீமாம்சையைப் (Karma Mimamsa) பற்றிப் பல நூல்கள் எழுதினார். அவற்றுள் சாஸ்திர தீபிகை (Sastra Dipika) மிகவும் அதிகமாகப் பயிலப்பட்டுவந்தது. தத்துவத்தில்,யோகம், வைசேஷிகம் நியாயப் பிரிவுகளின் கொள்

கைகளை விளக்கும் சில நூல்களும் இக் காலத்தில் எழுதப்பட்டன. இக் காலத்தில் இயற்றப்பட்ட முக்கிய நாடகங்கள்: ஜய சிங் சூரி(JaySingh Suri, கி. பி. 1219—1229) இயற்றிய ஹம்மீர் மத மர்தனம், கேரள அரசன் இரவிவர்மன் எழுதிய பிரத்யும்ன அப்யுதயம் (Pradyumna abhyudaya), வித்தியநாதர் (Vidyanath கி.பி. 1300)எழுதியபிரதாப்ருத்ரகல்யாண்(Partap Rudra Kalyan), வாமனபட்ட பாணர் (Vamana Bhatta Bana கி.பி. 1400) எழுதிய பார்வதி பரிணயம் (Parvathi Parinayam), கங்காதரரால் எழுதப் பெற்றதும் சாம்பானீர் அரசனுக்கும் குஜராத்தின் அரசன் இரண் டாம்முகம்மதுவுக்கும் நடந்தபோரைச்சிறப்பித்துக் கூறுவதுமான கங்காதாச பிரதாப விலாசம், வங்காளத்து ஹுஸேன் ஷாவின் மந்திரியும் வடமொழியில் இருபத்தைந்துக்குக் குறையாத நூல்கள் எழுதியவருமான ரூபகோஸ்வாமி என்பவரால் கி.பி. 1532-ல் எழுதப்பட்ட விதக்த மாதவம், லலிதா மாதவம் (Vidagdha Madhava, Lalita Madhava) என்பவையாகும். இந்தச் சமயத்தில் மிதிலையிலும் வங்காளத்திலும் ஸ்மிருதியும் இலக்கண நூல்களும் பெருகின. பத்மநாப தத்தா(Padmanabha Datta), வித்தியாபதி உபாத்தியாயா(Vidyapati Upadhyaya), மிதிலையைச் சேர்ந்த வாசஸ்பதி (Vachaspati), வங்காளத்தைச் சேர்ந்த ரகுநந்தனர் முதலியோர் அவற்றை இயற்றியோருள் மிகு புகழ் பெற்றவர் களாவர். சமயச் சார்புடையவும் இல்லாதனவுமான சமண இலக் கியங்களும் மிகுதியாகப் பெருகியன. விசயநகர அரசர்கள் சாயனர், அவருடைய சகோதரர், மாதவ வித்யாரண்யர் (Madhava Vidyaranya) போன்ற பல அறிஞர்களுக்கு ஆதரவளித் துப் போற்றிவந்தமையின் வடமொழிப் பண்பாடு வளர்ந்து ஓங்கி வந்தது. வடமொழியறிவு பெற்ற முஸ்லிம் அறிஞர்களும் வாழ்ந்து வந்தனர்.

## ஈ. பாரசீக இலக்கியமும் முஸ்லிம் கல்வியும்

டில்லிச் சுல்தான்களும் அமீர்களும் மாகாணங்களை ஆண்ட முஸ்லிம் ஆட்சியாளர்களும் பிரபுக்களும் தாங்கள் சுவைத்து உணரக்கூடிய பாரசீக மொழி இலக்கியங்கள் வளர ஆதரவு தந்தமை இயல்பாகும். மத்திய ஆசியாவில் புகழ்பெற்ற பல்கலைக் கழக நகரமான புக்காராவுடன்(Bukhara)அறிவுச் சூழலில் டில்லி போட்டியிடுமளவுக்கு வளர்ந்திருக்கிறது என்று பெருமையுடன் அமீர் குஸ்ராவ் கூறினார். மங்கோலியரின் இடையீடுகளினின்று விடுதலை பெற எண்ணிய ஆசியாவின் மற்றப் பகுதியிலுள்ள பாரசீக அறிஞர்கள் இந்திய அரசவைகளுக்கு வந்துசேர்ந்தனர். அவர்களை அக் கால முஸ்லிம் அரசர்கள் மிகவும் ஆதரித்துப் போற்றினர். டில்லி, ஜலந்தர், பிரோஸாபாத் போன்ற பல

இடங்களில் முஸ்லிம்களின் கல்விக்காகக் கல்வி நிலையங்கள் நிறுவினர்: பல நூலகங்களையும் நிறுவினர். அவற்றுள் மிகவும் முக்கியமானது டில்லியில் நிறுவப்பட்ட இம்பீரியல் நூலகமாகும். ஜலால்-உதீன்-கில்ஜி (Jalal-ud-din-Kualji) அந் நூலகத்தின் தலைவராக அமீர் குஸ்ராவை அமர்த்தினார். முஸ்லிம் அரசர்கள் முஸ்லிம் இலக்கியக் கழகங்கள் வளர்வதற்கும் உதவி புரிந்தனர். அந்தக் காலத்தில் பாரசீக மொழியில் எழுதிய இந்திய அறிஞர்களுள் மிகவும் புகழ் பெற்றவர் அமீர் குஸ்ராவேயாவர். அவர் விரைவாக எழுதிக் குவிக்கும் வளமை பெற்றிருந்தார். கவிதை, உரை நடை, இசை முதலிய பல துறைகளிலும் அவருடைய மேதைமை பாய்ந்தோடியது. அவருக்கு நீண்ட ஆயுள் காலத்தையும் ஆண்டவன் அருளியிருந்தான். முதலில் அவர் பால்பனின் ஆட்சிக் காலத்தில் புகழேணியில் ஏறி வந்தார். சுல்தானின் மூத்த மகன் இளவரசன் முகமதுவுக்கு ஆசிரியராய் அமர்ந்தார். பிறகு அலாவுதீன் கில்ஜியின் அரசவைப் புலவரானார். கியாஸ் உதீன் துக்ளக்கின் ஆதரவையும் பெற்று இன்புற்றார். கி.பி. 1324-25-ல் இறந்தார். அந்தக்,காலத்தில் ஹசன்-இ-திஹல்வி என்ற பெயரில் புகழ் பெற்றிருந்த ஷேக் நஜம் உத்-தீன் ஹஸன் (Shaik Najm-ud-din Hasan) என்ற மற்றொரு கவிஞரும் இருந்தார். அவருடைய புகழ் இந்தியாவிற்கு அப்பாலும் பரவியிருந்தது. முதல் கில்ஜி அரசர் கல்விக்கு ஆக்கம் கொடுக்க மறக்கவில்லை. அவருக்குப் பின் வந்த அலாவுதீனும் ஆர்வத்துடன் கல்விக்கு ஆக்கங் கொடுத்துவந்தார். பார்னி(Barni) என்பவர் 'அலாவுதீன் ஆட்சிக் காலத்தில் மிகவும் வியப்பான செய்தி, எல்லா நாடுகளில் இருந்தும் பெரிய அறிஞர்களும், எல்லாக் கலைகளிலும் விஞ்ஞானத்திலும் வல்ல பேராசிரியர்களும் மிகுந்த எண்ணிக்கையாகக் குழுமியிருந்ததேயாகும். இணையில்லாப் பேராற்றல் வாய்ந்த இப்பேரறிஞர்களால் தலைநகரான டில்லி கெய்ரோவுடன் அறிவுத் துறையில் போட்டியிட்ட பாக்தாத்தின் பொறாமைக்காளாகிக் கான்ஸ்டான்டிநோபிலுக்கு (Constantinople) இணையான பெருமை பெற்றுத் திகழ்ந்தது' என்று கூறியுள்ளார். பக்தியும் கல்வியறிவும் மிக்க நிஸாம்-உதீன் ஔலியா (Nizam-ud-din-Auliya) போன்ற பல அறிஞர்கள் இந்த ஆட்சிக் காலத்தில் சிறந்து விளங்கினர். கியாஸ் உதீன் துக்ளக்கூடக் கற்றறிந்தோரை ஏத்தினார். கல்வித் தகுதிகள் மிகப் படைத்திருந்த மகமது-பின் துக்ளக் வேடிக்கையான மனோபாவத்துடன் சில திட்டங்களைச் செய்திருப்பதுடன் கவிஞர்களையும், தருக்கம் வல்லாரையும், தத்துவ அறிஞர்களையும், மருத்துவர்களையும் ஆதரித்தார். அவர்களுடன் அரசவையில் பல பொருள்களைப்பற்றி ஆராய்ச்சிகள் நடத்தினார். அவர் காலத்தில் விளங்கிய மிகவும் குறிப்பிடத்தக்க

கல்வியறிஞர் மௌலானா மொய்நுத்தீன் உம்ரானி (Maulana Muaiyyan-ud-din-Umrani) என்பவராவார். அவர் ஹுசைனி, (Husaini), தல்கிஸ்(Talkhis), மிப்தா(Miftah) முதலியவற்றிற்கு விளக்கவுரைகள் எழுதினர். ஃபதுஹாத்-இ-ஃபிரோஸ் ஷாஹி (Fatuhat-i-Firuz-shahi) என்ற நூலின் ஆசிரியரான ஃபிரோஸ் ஷா கல்வியின் வளர்ச்சியில் பெருத்த ஆர்வம் காட்டினர். மசூதிகளுடன் இணைந்த பல கல்லூரிகளைத் தோற்றுவித்தார். அவர் காலத்துப் பல கல்வியறிவாளர்களுள் மிகவும் சிறப்பு வாய்ந்தவர்கள் காஸி அப்துல் முக்ததிர் ஷானிஹி (Qazi Abdul Matadir) Shanihi). மௌலானா காஜகி (Maulana Khwajagi), அகமது தானேஸ்வரி(Ahmad Thanesvari) என்போராவர். லோடி அரசர்களுள் சுல்தான் சிகந்தர் ஒரு கவிஞராக விளங்கினர். அவர் கல்வி வளர்ச்சிக்குப் போதிய ஊக்கத்தைக் கொடுத்தார். பாமினி இராச்சியத்தின் அரசர்களுள் பெரும்பாலோரும் மற்றச் சுதந்திர முஸ்லிம் அரச மரபினரும், பீஜப்பூர், அகமத்நகர், கோல்கொண்டா, மாளவம், ஜான்பூர், வங்காளம், மூல்தான் முதலிய நாடுகளின் ஆட்சியாளர்களும் இலக்கியத்தை வளர்த்தனர். இந்துக்களால் பெரும்பாலும் கவனிக்கப்படாதிருந்த கல்வித் துறையில் முஸ்லிம் நூலாசிரியர்கள் தங்கள் திறமையைக் காட்டினர். அவர்களுக்குரிய உரைநடையில் முதல் தரமான வரலாற்று நூல்களை எழுதினர். இவ்வாறு இஸ்லாமிய உலகின் பொதுவரலாற்றைக் கூறும் தபகாத்-இ-நாசிரீ (Tabagat-i-Nasiri) என்ற நூலை மின்ஹாஜ் உதீன் எழுதினர். அந் நூல் ஆசிரியரை ஆதரித்த சுல்தான் நாசர் உதீன் மகமதீன் பெயரில் வழங்கப்பட்டு வந்தது. அமீர் குஸ்ராவின் வரலாற்று மெஸ்னவிஸ் (Mesnevis) மிகச்சிறந்த வரலாற்றுச் செய்திகள் அடங்கியது. அவருடைய நூலான 'தாரீக்கி அலாயி' (Tarikh-i-Alai) என்பது சிறப்பாக 'அலாவுதீன் கில்ஜியின் முதல் சில ஆண்டுகளின் ஆட்சிக் காலத்தைச் சுவைபட விளக்கும் செய்திகளைக் கொண்டுள்ளது.' இக் காலத்து மிகப் புகழ்பெற்ற வரலாற்றறிஞர் மகமது-பின் துக்ளக், ஃபிரோஸ்ஷா இவர்களின் சமகாலத்தவரான ஸியாவுதீன் பார்னி (Zia-ud-din-Barni) என்பவர். ஃபிரோஸ் ஷாவின் ஆட்சிக் காலத்தில் ஷம்ஸ்-இ-ஸிராஜ்-அஃபீஃப் (Shams-i-Siraj-Afif) என்பவர் எழுதிய தாரிக்-இ-ஃபிரோஸ் ஷாஹியும் (Tarikh-i-Firuz Shahi), மகமது-பின்-துக்ளக் இறந்து ஐம்பது ஆண்டுகளுக்குப் பின் யாஹியாபின் அகமத் ஸர்ஹிந்தி (Yahiya bin Ahmad Sarhindi) என்பவரால் எழுதப்பட்டுப் பிற்கால எழுத்தாளர்களால் பெரிதும் பயன்படுத்தப்பட்ட தாரீக்-இ-முபாரக் ஷாஹியும் (Tarikh-i-Mubarak Sahi) இக் காலத்து மிகு புகழ் பெற்ற இரண்டு வரலாற்று நூல்களுமாகும்.

உ. கலையும் கட்டடக் கலையும்

ஃபெர்கூசன்(Fergusson) போன்ற சில அறிஞர்கள் கருதுவது போல அந்தக் காலத்துக் கட்டடக்கலை 'இந்தோ-சாரசெனிக்' (Indo-Saracenic) அல்லது 'பதான்'(Pathan) கலை என்று கூறுவது பொருத்தமில்லாதது. அதன் 'உயிரும் உடம்பும்' முழுதும் இந்தியக் கலையே என்று ஹாவல்(Havell) என்பவர் நம்மை நம்பச் செய்யுமாறு கூறுவதும் ஒப்புக்கொள்ளத் தக்கதன்று. உண்மையில் அக் காலத்துப் பண்பாட்டின் சில கூறுகள் காணப் பட்டது போலவே, கட்டடக் கலையும் இந்தியப் பாணியும் இஸ்லாமியப் பாணியும் சேர்ந்த கலவையாகவே இருந்தது எனலாம். 'இந்திய இஸ்லாமியக் கலை என்பது இடத்திற்கேற்ற சில மாறுதல்களைக்கொண்ட இஸ்லாமியக் கலையே' என்றும், அது வெறும் 'இந்துக் கலையின் திருந்திய வடிவம்' அல்ல என்றும் சர் ஜான் மார்ஷல் (Sir John Marshall) கூறியுள்ளார். 'பொது வான நோக்கில் இந்திய-இஸ்லாமியக் கட்டடக் கலை இருவகை யான மூலங்களையும் பெற்றிருக்கிறது. எனினும், இரண்டும் எப் போதும் சமஅளவில் கலந்திருந்தன என்று கூறமுடியாது' என்றும் அவர் கூறியுள்ளார். கி.பி. ஏழாம் நூற்றாண்டின் நடுப்பகுதியி லிருந்து இந் நாட்டில் மெதுவாக இஸ்லாமியச் செல்வாக்கு ஏற்பட்டு வந்ததெனினும் அதற்கு முன்பு பிராமணிய, பௌத்த, சமணக் கலைமுறைகள் இருந்தன என்பதில் ஐயமில்லை. அதே சமயத்தில் இஸ்லாமியர் கலை என்று பொதுவாகக் கூறப்படுவது உண்மையில் ஒரு தனிப்பட்ட ஓரினக் கலை என்று கருதப்பட முடியாது என்பதை நாம் மறக்கக் கூடாது. இஸ்லாம் மதத்தைப் பின்பற்றியவர்கள் அராபியர், பாரசீகர், துருக்கியரைப் போலவே தங்கள் சமயத்தில் மேற்கு மத்திய ஆசியாவின் வெவ்வேறு பகுதிகள், வடஆஃபிரிக்கா, தென்மேற்கு ஐரோப்பா முதலிய இடங்களில் விளங்கிய கலைகளைக்கொண்டு வந்தனர். இந்தக் காலத்தில் இந்தக் கலைகளும் இந்தியர்க்கேயுரிய பழைய கலைமுறை களும் மதத்திற்கும் தனி நபர்களின் விருப்பத்திற்கும் ஏற்ப ஒன்றாய்க் கலந்தன. இதனால் புதிய இந்தியக் கட்டட முறைகள் வளர்ந்தன. அவை ஜான்பூர், வங்காளம், பீஜப்பூர், குஜராத் முதலிய வெவ்வேறு மாநிலங்களில் வெவ்வேறாய்க் காணப்பட்டன. டில்லியில் முஸ்லிம்களின் எண்ணிக்கை மிகுதியாயிருந்ததால் டில்லிக் கட்டடக் கலையில் இஸ்லாமியச் செல்வாக்கு மிகுதியா யிருந்தது. 'மாறாக ஜான்பூரிலும், தக்காணத்திலும் அந் நாட்டுக் குரிய முறைகள் பெரும்பான்மையாகக் கையாளப்பட்டன. வங்காளத்தில் வெற்றியுற்ற அரசர்கள் செங்கல்லினால் கட்டும் முறையை மேற்கொண்டதோடு இந்து முறைகளை அப்படியே ஏற்றுக்கொண்டு கட்டட அமைப்புகளைச் செதுக்கியும், பல்வேறு

வடிவில் அமைத்தும் அவற்றை அலங்கரித்தனர். அதுபோலவே மத்தியக்கால இந்தியாவில் மிகு மிகு அழகான கட்டடங்களைத் தந்த அழகிய குஜராத்தி முறையை மேற்கு இந்தியாவில் அப்படியே பெரும்பாலும் ஏற்றுக்கொண்டு அமைத்தனர். இமாலயப்



குதுப்மினர், டில்லி

பகுதியைச் சேர்ந்த காஷ்மீரில் மிகு நெடுங்காலமாகவே வழங்கி வந்திருக்கும் மனங்கவரத் தக்க மரத்தாலான கட்டடக்கலையை யும் அவர்கள் அப்படியே ஏற்றுக்கொண்டனர்.

ஒரு சில காரணங்களால் இவ்வாறு அன்னிய நாட்டுக் கட்டடக் கலைமுறைகளும், உள்நாட்டுக் கட்டடக்கலைமுறைகளும் ஒன்றுய்க் கலக்க முடிந்தன. முஸ்லிம்கள் கைவினைஞர்களையும் சிற்பிகளையுமே அமர்த்திக்கொள்ள வேண்டிய கட்டாயத் தேவை இருந்தது. அவ்



டில்லியில் குப்வதுல் இஸ்லாம் மசூதியின் மேல் குதுப்-உத்தீன் ஐபக்கின் வளைவுத்திரை

விந்தியர்கள் தங்கள் நாட்டில் அக் காலத்தில் வழங்கிவந்த கலை மரபுகளை ஒட்டியே தங்கள் கலைப்பணியைச் செய்தனர். மேலும் முஸ்லிம் படையெடுப்புகளின் முதற்பகுதிக் காலத்தில் இந்து, சமணக் கோயில்களின் பொருள்களைக் கொண்டே மசூதிகள் கட்டப் பட்டுவந்தன. சில சமயங்களில் அக் கோயில்களே வெற்றி பெற் றோரின் விருப்பத்திற்கேற்ப ஓரளவு மாற்றியமைக்கப்பட்டன, மேலும், இந்திய இஸ்லாமிய முறைகளில் மிகப் பெரிய வேறு பாடுகள் காணப்பட்டாலும் இரண்டு விஷயங்களில் அவற்றுக் கிடையே ஒற்றுமை காணப்பட்டதுடன், அவை ஒன்றுய் இணையும் வாய்ப்பும் காணப்பட்டது. பல இந்துக் கோயில்களுக்கும் முஸ்லிம் மசூதிகளுக்குமிடையேயுள்ள ஒரு பொதுப் பண்பு 'அவற்றிற்கு முன்பு மண்டபங்கள் அல்லது மண்டபத் தூண்கள் சூழ்ந்த திறந்த வெளி இருப்பதே'. இந்த முறையில் கட்டப்பட்ட கோயில்கள் மசூதிகளாக மாற்றுவதற்கு எளிதாக இடம் தந்தன. வெற்றி யாளர்கள் மசூதிகளாக மாற்றுவதற்கு முதலில் இடங் கொடுத் தவை அவ் வகைக் கோயில்களேயாகும். அடுத்ததாக இஸ்லாமிய இந்துக்கலைகள் இரண்டும் இயல்பாகவே அலங்கரிப்பில் சிறந்திருப்

பதும் அடிப்படைப் பண்பாகும். இரண்டுவகைக் கலைகளிலும் அலங்கரிப்பு மிக இன்றியமையாததாயிருந்தது. இரண்டு கலைகளின் சிறப்பும் அவ் வலங்கரிப்பைப் பொறுத்தே அமைந்திருந்தது.'



குப்வதுல் இஸ்லாம் மசூதி, டில்லி
(திரைப்பரப்பில் காணப்படும் சிற்ப வேலைப்பாடுகள்)

டில்லிப் பாணிக்குச் சிறந்த எடுத்துக்காட்டுகளாயிருப்பவை குதுப் மசூதிகளே. அவற்றுள் மிகப்புகழ் பெற்றது குதுப்மினார். அது தனிநிலைக் கோபுரங்களும், அழகிய கல்வெட்டு எழுத்துகளும், தூபிகளைத் தாங்கும் தூண்களும் கொண்டு விளங்குகிறது. நிஸாம்-உதீன் ஔலியாவின் தர்க்காவிடத்தில் இருக்கும் ஜமாத்கானா மசூதி (Jamaat Khana Masjid) குதுப்மினாரிடத்தில் இருக்கும் அலாய் தர்வாஜா (Alai Darwaza) என்ற இரு முக்கியமான கட்டடங்களும் இக் காலத்து இரண்டு முக்கியமான கட்டடங்கள். அவை இந்து கட்டடக்கலையிலும் முஸ்லிம் கலைமுறைகள் ஆதிக்கம் பெற்று வளர்ந்து வந்ததைக் காட்டுகின்றன. அடிமை

அரசர், கில்ஜி ஆட்சிக் காலங்களின் சிறப்புக் கூறுகளாக விளங்கிய கலை மாண்பும், வளமும், வகைப்பாடும், துக்ளக் காலத்துக் கட்டடக்கலையில் காணப்படவில்லை. துக்ளக் காலத்தில் கட்டடங்கள் எளிமையாயும், கற்பனை வளமின்றியும், சாதாரணமாயும் இருந்



நிஸாம் உதீன் ஔலியாவின் தர்க்கா மசூதி

தன. இதற்குக் காரணம் துக்ளக்குகளின் மதக் கொள்கைகளும், அவர்கள் காலத்தில் நாட்டில் பொருள்வளம் இன்மையுமேயாகும். சய்யிதுகள், லோடிகள் காலத்தில் கில்ஜிக் காலத்துக் கண்கவர் கட்டட முறையை மீண்டும் கொண்டுவர முயற்சிகள் நடைபெற்றன. ஆனால், இவை ஓரளவே வெற்றிபெற்றன. 'துக்ளக்குக் காலத்துச் சுவை இறந்த பான்மையை அக் காலக் கட்டடக்கலை அறவே விட்டுவிட முடியவில்லை.'

கி.பி. 1400-க்கும் 1478-க்கும் இடையில் இப்ராகீம் மகமூத் ஹுஸேன் ஹர்க்கி, இவர்களின் ஆட்சியில் ஜான்பூரில் கட்டடக் கலையில் ஒரு புது முறை தோன்றிற்று. அது இந்துக் கலையின் செல்வாக்கையே ஐயத்திற் கிடமின்றிக் காட்டுகிறது. மாபெரும் சரிவான சுவர்கள், சதுரத் தூண்கள், சிறிய உயர்மாடங்கள்,



டில்லியிலுள்ள குதுப்மினாரில் அலாயிதர்வாஜா



டில்லியில் ரஜாப்பின் மகன் ஃபெரோஸ் ஷாவின் கல்லறை

மாடத்தொகுதிகள் இவை இந்துக் கலையின் சிறப்புஅம்சங்களாகும். இவை இந்துக் கொத்தர்களால் அமைக்கப்பட்டவை. ஜான்



அடாலா தேவி மசூதி, ஜான்பூர்

பூரிலுள்ள மசூதிகளில் வழக்கமான கோபுரமாடங்கள் காணப்பட வில்லை. உண்மையில் ஜான்பூரிலுள்ள பல கட்டடங்கள் பழைய



சோட்டா சோனு மசூதி, கௌர்

கட்டடப் பொருள்களைக் கொண்டு புதிய ஒரு நோக்கத்தோடு கட்டப்பட்டவையேயாகும். கி.பி. 1377-ல் நிறுவப்பட்டுக் கி.பி. 1408-ல் முடிக்கப்பட்ட அடாலாதேவி மசூதி (Atala Devi Masjid) ஜான்பூர்ப் பாணிக்கு ஒரு மிகச் சிறந்த எடுத்துக் காட்டாய் விளங்குகிறது.



பரா சோனு மசூதி, கௌர்

வங்காளத்திலும் கட்டடக்கலையில் கலப்பு முறை வளரத் தொடங்கியது. முக்கியமாகச் செங்கற்கள் பயன்படுத்தப் பட்டன. 'கற்கள் குறைந்த அளவே பயன்படுத்தப்பட்டன. குறுகிய தூண்களின்மேல் கூரிய வளைவுகள் அமைக்கப்பட்டன. மூங்கில் அமைப்புகளைப் பார்த்தும் இந்துக்கள் கட்டடச் சுவர்களின் மீது வழக்கமாக எழுப்பி வந்த வளைவுப் பகுதிகளைத் தழுவியும் முஸ்லிம்கள் தங்கள் கட்டடங்களில் அமைத்தனர். தாமரை போன்று அழகாகச் செதுக்கி அலங்கரித்து அமைக்கப்பட்ட தத்துவ அடையாளப்பொருள்களும் அதில் காணப்பட்டன.' கி.பி.1368-ல் சிகந்தரால் கட்டப்பட்டதும் 400 தூபிகளைக் கொண்டதுமான பாண்டுவாவிலுள்ள Pandua) ஆதினு மசூதி(Adina Masjid) அதன் அழகுக்கும் கம்பீரத்துக்கும் பேர்போனதாய் விளங்குகிறது. இம் மாகாணத்தின் மற்றப் புகழ்பெற்ற மசூதிகள் கி.பி. 1493—1519-க்குள் ஹுசேன் ஷாவின் ஆட்சிக் காலத்தில் வலி முகமது வினுல் கட்டப்பட்ட சோட்டா சோனு மசூதி (Chhota Sona Masjid; சிறிய தங்க மசூதி), 1526-ல் கௌர் என்ற நகரில்

நுஸ்ரத் ஷாவினால் கட்டி முடிக்கப்பட்ட பரா சோனா மசூதி (Bara Sona Masjid, பெரிய தங்க மசூதி), அதே சுல்தானால் கி.பி. 1530-ல் கட்டப்பட்ட கதம் ரசூல் (Qadam Rasul) என்பவை யாகும்.

குஜராத் மாகாணத்திலும் அழகிய கட்டடக் கலைமுறை வளர்ந்து வந்தது. முஸ்லிம்கள் வருவதற்கு முன்பே ஏற்கெனவே அற்புதமான கலைமுறை அந் நாட்டில் வளர்ந்திருந்தது. வெற்றி யுற்றோர் கட்டிய கட்டடங்கள் எல்லாம் அந்தக் கலைமுறையின் செல்வாக்கை ஐயத்திற்கிடமின்றிக் காட்டுகின்றன. சில சமயங் களில் மட்டும் அவர்கள் தத்துவ அடையாளங்களைக் காட்டும் வளைவுகளை அமைத்தனர். இவ்வாறு கி.பி. 1411—1441-ல் அகமது ஷா என்பவரால் பழைய பாழடைந்த கட்டடங்கள், கோயில்கள்



பாண்டுவாவில் உள்ள ஆதீனா மசூதி

முதலியவற்றின் பொருள்களைக் கொண்டு கட்டப்பட்டது. புதிய தலைநகரான அகமதாபாத்தின் கட்டடங்களில் கவின் மிக்க மரத்தில் செதுக்கிய சிற்ப வேலைப்பாடுகளையும், நுண்ணிய கல் பின்னல் வேலைகளையும், அலங்கரிப்புகளையும் நாம் காண்கிறோம். கி.பி. 1411-ல் தொடங்கப்பட்ட ஜாமி மசூதியில் 15 கல் தூபி

களும் அவற்றைத் தாங்கும் 260 தூண்களும் உள்ளன. அத் தூபிகள் இந்தியநாட்டுக்குரிய முறையில் கிடக்கையாக அமைக்கப் பட்டிருக்கின்றன. 'மேற்கு இந்தியாவின் தொல்பொருள் சர்வே என்ற தலைப்பில் ஐந்து தொகுதிகளில் பண்டை இந்தியாவின் இடைக்காலக் கட்டடக் கலையைப் பற்றி மிகு மிகு விரிவாக ஆராய்ந்து எழுதியுள்ள டாக்டர் பர்ஜெஸ் (Dr. Burges) அவர்கள் 'இந்தக் கலைமுறை உள்நாட்டுக் கலைக்குரிய எல்லா அழகும் கை வண்ணமும் நிறைந்திருப்பதுடன் உள்நாட்டினரிடம் காணப் படாத ஒருவகைக் கம்பீரமும் பொருந்தி உள்ளதாயிருக்கிறது' என்று பொருத்தமுறக் கூறியுள்ளார். அகமத்ஷா ஆட்சியாளர்கள் அரசாட்சிக்கு வந்ததிலிருந்து குஜராத்தில் கட்டப்பட்ட எண்ணில் லாத மசூதிகளும் கல்லறைகளும் பழைய இந்தியக் கலை மரபுப் பண்பு மிகுதியாக உடையன. சில சமயங்களில் மட்டும் அப் பண்பு இஸ்லாமைப் பின்பற்றுபவர்களின் விருப்பத்திற்கேற்பச் சில இடங்களில் திருத்தியமைக்கப்பட்டது.



ஹுஷாங் ஷாவின் கல்லறை

மாளவ இராச்சியத்தின் பழைய தலைநகரான தாரில் (Dhar) இரண்டு மசூதிகள் முழுதும் பழைய கட்டடங்களின் பாழடைந்த பொருள்களைக் கொண்டே கட்டப்பட்டன. இந்த மசூதிகளின் தூபிகளும் தூண்களும் இந்து வடிவிலேயே அமைக்கப்பட்டன;

ஆனால், விரைவில் மாற்றப்பட்ட தலைநகரான மாண்டுவில் (Mandu) அமைந்த கட்டடங்களில் டில்லியில் காணப்பட்டதைப் போல முஸ்லிம் கலை மரபுகளின் செல்வாக்கே மிகுதியாய் இருந்தது. உள்நாட்டு வடிவங்களைக் 'கடன் வாங்குதல் அல்லது பார்த்து அமைத்தல்' அறவே நீக்கப்பட்டன. கட்டடங்கள் கூரிய வளைவு முறையிலேயே விளக்கமாய் இருக்குமாறு கட்டப் பட்டன. நருமதைக்கு எதிர்ப்புறத்தில் உள்ள பரந்த மேட்டுப் பூமியில் அமைந்திருந்த மாண்டு என்ற கோட்டைகள் சூழ்ந்த நகரில் கட்டப்பட்ட பல அற்புதமான கட்டடக்கலையின் அழகு வாய்ந்த கட்டடங்களுள் கீழ்வருபவை குறிப்பிடத்தக்கவை. ஜாமி மசூதி: இது ஹூஷாங்கினால் திட்டம் தீட்டப்பட்டுத் தொடங்கப்பட்டது; மகமத் கல்ஜியால் கட்டி முடிக்கப்பட்டது. ஹிந்தோலா மஹால் (Hidola Mahal), ஜஹாஜ் மஹால் (Jahaj Mahal) ஹூஷாங்கின் கல்லறை, பஸ், பஹதூர், ரூபமதி இவர்களின் அரண்மனைகள் என்பனவாம். இவற்றிலுள்ள பல பெரிய கட்டடங்களில் சலவைக்கல்லும் மணற்கல்லும் பயன் படுத்தப்பட்டன.

காஷ்மீரத்து முஸ்லிம் சுல்தான்கள் கல்லினாலும் மரத்தினாலும் அமைக்கும் கட்டடக் கலையையே தொடர்ந்து மேற்கொண்டு



ஃபெரோஸ் ஷா பாவனியின் கல்லறை, குல்பர்கா

வந்தனர். ஆனால், அவற்றுடன் 'படிமுறையான வடிவங்களை'யும், இஸ்லாமுடன் தனிச் சிறப்பியல்புகள் கலந்துள்ள அலங்கார முறை

களையும் இணைத்தனர். இப்படியாக இங்கேயும் இந்து முஸ்லிம் கலைக்கருத்துகள் கலப்பதை நாம் காண்கிறோம்.

தென்னிந்தியாவில் பாமினிகள் (Bahmanis) கலை, இலக்கியம், அறிவியல் இவற்றின் ஆதரவாளர்களாக இருந்தனர். அவர்களுடைய கட்டடக் கலை இந்திய, துருக்கிய, எகிப்திய, பாரசீகக் கூறுகள் முதலியவை கலந்த கலவைக் கலையாக விளங்கியது. பாரசீகக் கலைக்கூறு குல்பர்காவில் உள்ள ஜாமி மசூதி, தௌலதாபாத்தில் (Daulatabad) உள்ள சாந்த் மினார் (Chand Minar, 1435), பீடாரில் (Bidar) உள்ள மஹமத் கவானின் கல்லூரி (1472) முதலிய சில கட்டடங்கள் பழைய கோயில்கள் இருந்த இடங்களில் கோயில்களின் பொருள்களைக் கொண்டே கட்டப்பட்டன. அதனால், இந்துக் கலைமுறையைத் தவிர்க்க முடியவில்லை. பாமினி இராச்சி



முகம்மது ஆதில் ஷாவின் கல்லறை, பீஜப்பூர்

யத்தில் உத்தியோகங்களைப் பெற்ற மேற்கு ஆசிய, ஆஃபிரிக்க வீரர்கள் மூலமாகத் துருக்கிய, எகிப்தியக் கூறுகள் நுழைந்தன. பதினைந்தாம் நூற்றாண்டின் பிற்பகுதியில் பாரசீகத்திலிருந்து திரள் திரளாகக் குடிபுகுந்த பாரசீகர்கள் மூலம் பாரசீகக் கூறும் வந்து சேர்ந்தது. எனினும், பதினைந்தாம் நூற்றாண்டின் முடிவிலிருந்து தக்காணத்தின் சொந்தக் கலை மீண்டும் வளரத் தலைப்பட்டது. அடுத்த நூற்றாண்டு பீஜப்பூரில் ஆதில் ஷாஹிகளால் கட்டப்பட்ட கட்டடங்களை இந்தியக்கலைஞர்களும் கைவினைஞர்களும் கட்டினர்.

அதனால், 'வெளிநாட்டுச் செல்வாக்கிலும் இந்தியக் கலைப்பண்புச் சிறப்பே மேலோங்கி, இக் கலைப் படைப்புகளில் மேலும் மேலும் ஆழமாக முத்திரையிட்டு விளங்கியது இயல்பே' என்று சர் ஜான் மார்ஷல் கூறுகிறார். விசயநகர இராச்சியத்தில் பேரொளியுடன் விளங்கிய கலை, கட்டடக் கலையைப்பற்றி நாம் ஏற்கெனவே விளக்கமாகப் பார்த்திருக்கிறோம்.

இவ்வாறு அரசியல் உறவுகளில் சிறிது கசப்பு இருந்தாலும், துருக்கிய-ஆப்கானியர் காலத்தில் சமுதாயம், பண்பாடு, கலை ஆகிய துறைகளில் இந்து, இஸ்லாமிய நாகரிகங்கள் ஒன்றுப்பட்டு இசைவுப்பாடும் (harmony) ஒருவருக்கொருவர் புரிந்துகொள்ளும் பான்மையும் ஏற்படுமாறு செய்தன என்பதைக் காண்கிறோம். இந்த இசைவுப்பாடு முகல் அரசர்களுள் மிகப் பெரிய அரசரான அக்பர் காலத்தில் முன்பு என்றுமில்லாத அளவுக்கு மிகுதியாக வளர்ந்தது. அது அக்பருக்குப் பின்வந்தோர் காலத்திலும், பிற்கால முகல் அரசர்கள் காலத்திலுங்கூட முற்றிலும் மறையவில்லை.

இடைக்காலத்துச் சுல்தான்கள் பிரிந்து வாழும் மனப்பான்மையில் தீவிரமாக இருந்தாலும் பிற்காலத்திய இருவகை நாகரிகங்களும் இணைந்து தற்கால நிலைக்கு முன்னோடியாகும் அறிகுறிகளைக் காட்டின. மக்களை முன்னேற்றுவிக்க வேண்டும் என்னும் உயர் குறிக்கோள் கொண்டு இந்திய ஆசாரியர்கள் தன்னலமின்றிப் போதித்து வந்ததாலும், சூபி முனிவர்களும் அறிஞர்களும் பொறுத்துக்கொள்ளும் மனப்பான்மையை வற்புறுத்தி வந்ததாலும், இருவகை நாகரிகப் பிணைப்பு எளிதில் ஏற்பட்டது எனலாம். இந்திய வரலாற்றில் பாபரின் படையெடுப்புக்குச் சிறிது முன்பு காணப்பட்ட ஒரு சிறப்பு என்னவெனில், வெளிநாட்டு ஆதிக்கத்தை எதிர்த்து விசயநகரம், ஒரிஸ்ஸா, மேவார் முதலிய புதிய இந்திய அரசுகள் தோன்றியமையேயாகும். இடைக்கால முஸ்லிம் அரசு வீழ்ச்சியுற்ற பிறகு தோன்றிய சுதந்திர முஸ்லிம் இராச்சியங்களை ஆண்டவர்கள் எல்லாம் வெளிநாட்டினர் என்று கூறிவிட முடியாது. அகமத்நகர், பீரார்நாட்டு ஆட்சியாளர்கள் எல்லாம் இந் நாட்டினரேயாவர். இந்தச் சமயத்தில் தோன்றிய இந்து அல்லதுமுஸ்லிம் அரசுகள் எல்லாம் 'தற் சிறப்பை' (Self-determination) நிலைநாட்டுதற்குத் தோன்றிய உள்நாட்டு இயக்கங்களையே காட்டுகின்றன. ஆனால், அவர்களுடைய வாய்ப்புகள் எல்லாம் பாபரைத் தலைவராகக் கொண்ட மற்றொரு துருக்கிய இடையீட்டால் தவிடுபொடியாயின. பாபரின் படையெடுப்பு இந்திய வரலாற்றில் ஒரு புதிய திருப்பத்தை ஏற்படுத்தியது எனலாம்.

# 1. இந்தியாவில் மேலாண்மை செலுத்த முகலாயருக்கும் ஆப்கானியருக்கும் இடையே நிகழ்ந்த போட்டி கி.பி. 1526-1556

## 1. பாபர் (Babur)

கி.பி. 1526 முதல் 1556 வரை இந் நாட்டில் மேலாண்மை செலுத்துவதற்காக முகலாயருக்கும் ஆப்கானியருக்கும் இடையே நடைபெற்ற போட்டியை இந்திய வரலாறு சிறப்பாக எடுத்துரைக்கிறது. முந்திய முகல் (மங்கோலிய) இடையீடுகளினல், இந்தியாவில் துருக்கிய-ஆப்கானிய சுல்தான்களுக்குச் சில சமயங்களில் தொல்லை கொடுத்து வந்து குடியேறியதைத் தவிர வேறு எந்த உருப்படியான பயனும் உண்டாகவில்லை. ஆனல், அந்தச் சுல்தான்களின் இராச்சியத்தின் ஒரு மாகாணமான பஞ்சாபைக் கைப்பற்றிக்கொண்ட தைமூரின் படையெடுப்பால் சுல்தானியர்களின் பலவீன ஆட்சி ஆட்டம் கொடுக்கத் தொடங்கியது. அவருடைய வழித்தோன்றலான பாபர் முறையாக வட இந்தியாவை வென்று, புதிய துருக்கியின் ஆட்சியை[1] நிலைநாட்டுவதற்கு முயன்ருர். ஆனல், அவருடைய முயற்சிகள் அவருக்குப் பின் வந்த அவருடைய மகன் ஹுமாயூன் காலத்தில் தோன்றிய ஆப்கானிய மறுமலர்ச்சியால் தோல்வியுற்றன. எனினும், 1556ஆம் ஆண்டில் துருக்கிய ஆட்சி மீண்டும் நிலைபெறத்தொடங்கியது. அது அக்பர் காலத்தில் படிப்படியாக வளர்ச்சியுற்று

[1] முகலாயர் எனப்படுபவர் உண்மையில் 'சகாதையின்' பேரால் வழங்கப்பட்ட துருக்கியப் பிரிவைச் சேர்ந்தவர்களாவர். துருக்கியரின் நாடான துருக்கிஸ்தானத்தையும், மத்திய ஆசியாவையும் கைப்பற்றுவதற்காக வந்த மங்கோலியத் தலைவரான புகழ்பெற்ற செங்கிஸ்கானின் இரண்டாவது மகன்தான் சகாதை-இந்தியாவில் 'முகலாய ஆட்சி நிறுவப்பட்டமை இஸ்லாமிய வரலாற்றிலும், உலக வரலாற்றிலும் முக்கிய நிகழ்ச்சி' என்று கூறத்தகும். ஏனெனில், இஸ்லாம் மதத்தைப் பின்பற்றியோர் உலகின் பிற பாகங்களில் வெற்றியுற்று வந்த அச் சமயத்தில் இந்தியாவில் அது பெற்ற முதல் வெற்றி சிறப்புடையதாகும். கி.பி. 1453-ல் துருக்கியர்கள் கான்ஸ்டாண்டிநோபிலைக் கைப்பற்றினர். மாபெரும் சுலைமான் (1520—1566) தென்கிழக்கு ஐரோப்பாவரை துருக்கிய இராச்சியத்தின் அதிகாரத்தைப் பரப்பினர். பாரசீகத்தில் இஸ்மாயின் சபவி (1500—1526) புகழ்பெற்ற சபவி இராச்சியத்தை நிலைநாட்டுவதற்குக் கால்கோள் விழா நடத்தினர்,

விரிந்தது. முகலாயர்கள் இந்தியரைக் கைப்பற்றியதில் உண்மையி லேயே சில நிலைகள் உள்ளன. முதல் நிலை (1526—1530) அவர்கள் ஆப்கானியரை அடக்கி ஒடுக்குவதில் ஈடுபட்ட முயற்சி யாகும். இரண்டாம் நிலை (1530—1540) ஹுமாயூன் ஆட்சியில் தொடங்கியது. அவர் மாளவம், குஜராத், வங்காள நாடுகளைக் கைப்பற்றச் செய்த முயற்சிகள் பயனற்றுப் போயின. மேலும், ஷெர் ஷா (Sher Shah) அவரை இந்தியாவிலிருந்தே விரட்டி யடித்தார். இதனால் ஆப்கானியரின் வலிமை புத்துயிர் பெற்றது. மூன்றும் நிலை (1545—1556) ஹுமாயூனால் மீண்டும் முகலாய ஆட்சி நிறுவப்பட்டதும் அக்பரால் ஒருநிலைப் படுத்தப்பட்டது.

சகாதைத் துருக்கியரான (Chaghatai Turk) பாபர் தந்தை வழியில் தைமூரின் வழிவந்தவர்; தாய் வழியில் செங்கிஸ்கா னுடன் (Chingiz Khan) தொடர்புடையவர். 1494-ல் அவர் தம் பதினொன்றும் வயதில் தந்தையிடமிருந்து, இப்போது சீனத் துருக்கிஸ்தானத்தின் ஒரு மாகாணமான ஃபர்கானா (Farghana) என்ற சிறு பிரதேசத்தை மரபுரிமையாகப் பெற்றிருந்தார். ஆனால், அவருடைய இளமைவாழ்க்கையில் பலவித இடையூறுகள் நேர்ந்தன. உண்மையில் அது அவருக்கு மறைமுகமான நன்மை யாகவே அமைந்தது. விதியின் மாறுதல்களை எதிர்த்துப் போரிடு வதற்குப் போதிய பயிற்சி அளித்தது. தைமூரின் சிம்மாசனத்தை மீண்டும் பெறவேண்டும் என்ற ஆசை அவரிடம் இருந்துவந்தது. ஆனால், அவருடைய உறவினர்களும், உற்றார்களும் அவ் வாசை நிறைவேற வொட்டாமல் இடையூறுகளை உண்டாக்கிவந்தனர். உஸ்பெக் (Usbeg) தலைவர் ஷெய்பானி கானுப் (Shaibani Khan) அந்தச் சிம்மாசனத்துக்குப் போட்டியிட்டுவந்தார். தம் உள்ளத்தில் போற்றிவந்த சாமர்கண்டு (Samarqand) என்ற நகரைப் பிடிப்பதற்காகப் பாபர் 1497-லும் 1503-லும் செய்த முயற்சிகள் இரண்டு தடவையிலும் தோல்வியில் முடிந்தன. அவருடைய துரதிர்ஷ்ட வசத்தால் அவருக்குரிமையான தந்தை வழிச் சொத்தான பர்கானாவும் பறிபோயிற்று. அதனால், அவர் ஓராண்டு வீடில்லாத நாடோடியாகக் காலத்தைக் கழித்தார். ஆனால், இப் பெருந் துன்பக் காலத்திலும் தம் பெருமையுடைய முந்தையரான தைமூரைப்போலவே ஹிந்துஸ்தானத்தை வெல்ல வேண்டுமென்ற தீரமான திட்டத்தைத் தீட்டி வைத்துக்கொண் டிருந்தார். தைமூரின் இந்தியப் படையெடுப்புகளின் வரலாறுகளை யெல்லாம் அவர் தாம் சில காலம் புகலிடமாகத் தங்கியிருந்த ஒரு கிராமத் தலைவரின் அன்னையான நூற்றுப்பதினொரு வயதுடைய கிழவியிடமிருந்து கேட்டுத் தெரிந்துகொண்டார். தைமூர் வழியினர் தங்களுக்குரிய பகுதிகளை ஆள முடியாமல் செய்துவந்த

உஸ்பெக்கினரின் இராச்சியத்தின் மற்றொரு பகுதியில் கலகம் விளைந்தபோது, அந்த வாய்ப்பைப் பயன்படுத்திக்கொண்ட பாபர் கி. பி. 1504-ல் காபூலைக் கைப்பற்றிக் கொண்டார். உஸ்பெக் தலைவர் ஷெய்பானிகானுக்கு எதிராக, பாரசீகத்தின் ஷா இஸ்மாயில் சாபவியின் உதவியை உறுதி செய்ய முயன்று வந்த பாபர் மீண்டும் அக்டோபர் 1511-ல் சாமர்கண்டைக் கைப்பற்ற முயன்றார். ஆனால், ஷெய்பானிக்குப் பின் வந்த அரசரின் தலைமையில் உஸ்பெக்கினர் கடைசியில் 1512-ல் பாபரைத் தோற்கடித்துவிட்டனர். வடமேற்கில் நாடுகளைக் கைப்பற்ற எண்ணிய ஆசைகள் எல்லாம் நிராசையாகப் போகவே பாபர் தென்கிழக்கே திரும்பித் தம் அதிர்ஷ்டத்தின் பலத்தைப்பார்க்கத் தொடங்கினர். அத் திசையில் பலமுறை படையெடுத்துச் சென்றார். பன்னிரண்டு ஆண்டுகளுக்குப் பிறகு அவர் இந்துஸ்தானத்தின் உள்ளே ஊடுருவிச் செல்லுதற்கு வாய்ப்பு ஏற்படும் வரை படையெடுக்கும் பயிற்சியில் வல்லவராகும் முறையில் அவர் தென்கிழக்குத் திசையில் படையெடுத்துக்கொண்டிருந்தார்.

தம்முள் பிணக்குக்கொண்ட ஒருகூட்டத்தினர் இந்தியாவுக்கு வரும்படி பாபரை அழைத்தபோது, அது அவருக்கு நல்லதொரு வாய்ப்பாக அமைந்தது. பிரபுக்களிடையே ஏற்பட்ட போட்டிகளாலும், அவர்களுடைய பேராசைகளாலும், அவர்களுக்கிடையே ஏற்பட்ட மனவேறுபாடுகள் முதலியவற்றாலும் இந்தியா எவ்வாறு சிதறுண்டு கிடந்தது என்பதை ஏற்கெனவே கண்டிருக்கிறோம். டில்லியில் சுல்தான்கள் பெயரளவிற்கு மட்டிலுமே இருந்தனர். டில்லியிலுள்ள சில பிரபுக்கள் தங்கள் பேராசையாலும், பழி வாங்கும் உணர்ச்சியாலும் சுல்தானியத்திற்குச் சமாதி வைக்கத் துணிந்துவிட்டனர். அவர்களுள் இருவர் பாபரை இந்தியாவின் மேல் படையெடுத்து வரும்படி அழைக்குமளவிற்குப் போய்விட்டனர். அவ் விருவருள் ஒருவர் பஞ்சாபின் பலம் வாய்ந்த பிரபுவான தௌலத்கான்(Daulat Khan) என்பவர் ஆவர். அவர் தம்முடைய மகனை திலாவர் கானுக்கு(Dilawar-Khan) கொடுமைகள் பல செய்த இப்ராஹீம் லோடியின்மீது சீற்றமுற்றிருந்தார். மற்றவர் இப்ராஹீம் லோடியின் மாமனரான ஆலம்கான்(Alam Khan) என்பவர். இவர் டில்லிச் சிம்மாசனம் தமக்கு உரியது என்று உரிமை கொண்டாடினர்.

அதற்குமுன் சிறிது காலமாகப் பாபர் இந்துஸ்தானத்தின்மீது படையெடுக்க வேண்டுமென்ற அடங்காப் பேராசைக் கொண்டிருந்தார். இளமைப் பருவத்திலேயே துன்பங்களைச் சமாளிக்கும் பயிற்சி அவருக்குக் கிடைத்திருந்தமையால் வீரத் துணிகரச்

செயலில் தம்மை உடனே ஈடுபடுத்திக்கொள்ள அவர் துணிந்தார்; உடனே அவர் அழைப்புக்கு இணங்கினர்; பஞ்சாபில் நுழைந்தார். 1524-ல் லாகூரை வசப்படுத்தினர். ஆனால், இந்தியக் கூட்டாளிகளான தௌலத்கானும் ஆலம்கானும் விரைவில் தங்கள் தவற்றை உணர்ந்தனர். இந்தியாவில் வெற்றிபெற்ற இடங்களைத் திருப்பிக் கொடுப்பதற்கு பாபர் சிறிதும் விருப்பமில்லாதிருப்பதைக் கண்டதும் அவர்கள் பாபருக்கு எதிராக மாறிவிட்டனர். இதனால், அவர் காபூலுக்கு நிர்ப்பந்தமாகத் திரும்பிச் செல்ல நேரிட்டது. மீண்டும் வந்து தாக்குவதற்காக அங்கே படைகளைத் திரட்டிக்கொண்டிருந்தார்.

தாக்குதல் விரைவிலேயே ஏற்பட்டது. நவம்பர் 1525-ல் அவர் காபூலிலிருந்து புறப்பட்டு வந்து பஞ்சாபை வசப்படுத்திக் கொண்டு தௌலத்கான் லோடியைப் பணியும்படி செய்தார். டில்லியை வெல்லும் வேலை இன்னும் மிகு கடினமானதுதான். எனினும், அப் பேராசையை பாபர் வளர்த்துக்கொண்டே வந்தார்; எப்படியும் கைப்பற்றி விடுவதென்றே முடிவு செய்தார். அதனால், சிதைந்த ஆப்கானிய இராச்சியத்தின் பெயரளவு ஆட்சியாளராயிருந்த இப்ராஹீம் லோடியை 1526 ஏப்ரல் 21ஆம் நாளில், பானிப்பட்டு என்னும் வரலாற்றுச் சிறப்பு மிக்க போர்க்களத்தில், எதிர்த்துக் கடும்போர் புரிந்தார். பாபரிடம் மிகப் பெரிய பீரங்கிப் படையும் 12,000 பேரடங்கிய காலாள் படையும் இருந்தன. ஆனால், பாபரின் மதிப்பீட்டின்படி இப்ராஹீம் லோடியிடம் எண்ணிக்கையில் மிகப்பெரிய, 100,000 படை வீரர்கள் இருந்தனர். ஆனால், பாபருக்கு உள்ளத்து உரனும், ஊக்கமும், சிறந்த தளபதியாகச் செயலாற்றிய அனுபவமும் பேருதவியாக இருந்தன. அவருடைய பகைவரான இப்ராஹீம் லோடியோ, பாபர் சொல்லியதுபோல 'அனுபவமில்லாத மனிதராயும், படை இயக்கங்களில் போதிய கவனம் இல்லாதவராயும் இருந்தார். ஒழுங்கின்றிப் படைகளை நடத்திச் சென்று, முறையின்றி இடையில் நின்று அல்லது பின் சென்று, முன் யோசனையின்றிப் போரிடுவதில் ஈடுபட்டார்.' இவ்வாறு பாபர், மேலான யுத்த தந்திரங்களைக் கையாண்டும் திறமையான தளபதியாயிருந்தும், பீரங்கிப் படையைப் பயன்படுத்தியும்[1] லோடி சுல்தானை வென்று அடிப்படுத்தினர். சுல்தானும் பாபரை எதிர்க்கப் பெருமுயற்சி செய்து கடைசியில் போர்க்களத்தில் தம் படையுடன் வீழ்ச்சியுற்றார். இதைப்பற்றி பாபர் 'எல்லாம் வல்ல கடவுளின் கருணையாலும் அருளாலும் இந்தக் கடுமையான செயல்

[1] இந்தியாவில் பீரங்கி பயன்படுத்தப்பட்டது இதுதான் முதல் தடவையன்று என்பது முன்பே குறிப்பிடப்பட்டமை இங்கு நினைவுகூரத் தக்கது.

எனக்கு எளிதாகப் போயிற்று. அந்த மாபெரும் படை அரை நாளில் மண்ணைக் கவ்விற்று' என்று எழுதியிருக்கிருர். பாபர் விரைவில் டில்லியையும் ஆக்ராவையும் கைப்பற்றினுர்.

ஆனுல், இப்ராஹீமின்மேல் பாபர் வெற்றி கொண்டதனுலேயே இந்துஸ்தானத்தில் முகலாயரின் வெற்றி நிலைநாட்டப்பட்டது என்று சொல்வதற்கில்லை. அவ் வெற்றியால் இந்திய நாட்டின் மீது அதிகாரபூர்வமான ஆட்சியுரிமை அவருக்கு ஏற்பட்டுவிடவில்லை. ஏனெனில், ஆப்கானியப் படைத்தலைவர்களைப் போன்ற வேறு பெருஞ் சக்திகள் பாபருக்கு எதிராக இருந்தன. ராணு சங்காவின் தலைமையில் கூடியிருந்த ராஜபுத்திரர்கள் அரசியல் மேலதிகாரத்திற்காக ஆசைப்பட்டுக்கொண்டிருந்தனர். அவர்களும் திண்ணமாகப் பாபரை எதிர்க்கத்தான் துணிந்திருந்தனர். 'பாபரின் வேலை உண்மையில் பானிப்பட்டிலிருந்து தொடங்கிற்று என்பதைச் சரியாக உணர்ந்துகொள்வோருக்குப் பாபர் செய்ய வேண்டியிருந்த வேலை எவ்வளவு பெரியது என்பது தெரியவரும். பேராசை நிலவும் பாதையில் பாபரை அடியெடுத்து வைக்கச் செய்தது பானிப்பட்டுப் போர். ஆனுல், அந்தப் பாதையில் முதல் பெரிய முட்டுக் கட்டையாய் ஆப்கானியப்படையினரின் எதிர்ப்பு இருந்தது' என்று தற்கால ஆசிரியர் ஒருவர் எழுதியிருக்கிருர். ஆப்கானியரில் பல படைத் தலைவர்கள் இருந்தனர். அவர்களுள் ஒவ்வொருவரும் தத்தம் ஜாகீர்களில் அல்லது பிரதேசங்களில் முழுவலிமை வாய்ந்தவர்களாக விளங்கினர். எனினும், இந்தியாவில் முகலாய இராச்சியத்துக்கு அடிகோலிய பெருமை பானிப்பட்டுப் போருக்குரிய சிறப்புரிமையாகும்.

தோ ஆப்பைக் (Doab) கைப்பற்றியவுடனே பாபர் வடக்கிலும், தெற்கிலும், கிழக்கிலுமிருந்த ஆப்கானியப் பிரபுக்களை அடக்கினுர். நாட்டில் இன்னும் வெல்லப்படாத பகுதிகளுக்குத் தம்முடைய பிரபுக்களை அனுப்பி, அங்கிருந்து ஆப்கானியத் தலைவர்களைத் துரத்தும்படி பாபர் ஆணையிட்டார். அவரே தீரமிக்க ராஜபுத்திரத் தலைவர் ராணுசங்காவை எப்படியும் எதிர்க்கவே நேரும் என்று எண்ணிக்கொண்டு, அந்த எதிர்ப்புக்கு வேண்டிய ஏற்பாடுகளையெல்லாம் ஆக்ராவில் இருந்துகொண்டே செய்துகொண்டிருந்தார். உண்மையில் ஆப்கானியப் பிரபுக்களை அடக்கும் வேலை முடியுமுன்பே ராஜபுத்திரரைப் பாபர் எதிர்க்க நேர்ந்தது. அஞ்சாமையும், மிக்க அனுபவமும் கொண்ட வீரர் ராணு சங்கா பயாஞு(Bayana)என்ற இடத்திற்குத் தம் படைகளை நடத்திச் சென்ருர். அவ் விடத்தில் ஹஸன்கான் மேவாட்டியும் (Hasan khan Mewati) இன்னும் சில லோடி வமிசத்தை ஆதரிக்

கும் முஸ்லிம்களும் ராணு சங்காவுடன் சேர்ந்துகொண்டனர். இவ்வாறு ராஜபுத்திரர்களும் வேறு சில இந்திய முஸ்லிம்களும் மற்றொரு வெளிநாட்டு ஆட்சி தங்கள் மேல் திணிக்கப்படுவதை எதிர்ப்பதற்காக ஒன்று திரண்டு துணிந்து வரிந்துகட்டிக் கொண்டிருந்தனர். ஆனால், இந்தச் சிக்கலான சமயத்தில் எல்லா ஆப்கானியத் தலைவர்களும் ஒன்றாக ராஜபுத்திரர்களுடன் சேர முடியவில்லை. இந்தியாவிலிருந்த இந்துக்களும் எல்லா முஸ்லிம் களும் ஒன்றுதிரண்டு பாபரை எதிர்த்திருந்தால் இந்திய வரலாற் றின் போக்கே வேறு திசையில் மாறிச்சென்றிருக்கும்.

ராஜபுத்திரர்களுடைய தேசிய மறுமலர்ச்சியின் தலைவரான ராணுசங்கா திண்ணமாய்ப் பாபருக்கு இப்ராஹீமை விட வலிமை வாய்ந்த எதிரியாவர். அவர் 120 படைத்தலைவர்களுடனும், 80,000 குதிரை, 500 யுத்த யானைகள் இவற்றுடனும், மார்வார் (Marwar), ஆம்பெர்(Amber), குவாலியர்(Gwalior), அஜ்மீர் (Ajmer), சந்தேரி(Chanderi) முதலிய பிரதேசங்களின் ஆட்சித் தலைவர்களுடனும் சேர்ந்து பெரும் படைகளை நடத்திச் சென்றார். ராணுசங்காவினால் டில்லியின் ஆட்சித் தலைவர் என்று ஒப்புக் கொள்ளப்பட்ட சுல்தான் மஹ்மூத் லோடியும் (சுல்தான் சிகந்தர் லோடியின் இன்னொரு மகன்) ராணுசங்காவுடன் சேர்ந்துகொண் டார், மேலும், ராஜபுத்திரர்கள் 'வலிமையும் வீரமும் செறிந்தவர்களாய், பகைப்படையின் மிகு திறம் வாய்ந்த தலைவர் களை நேருக்குநேர் எதிர்ப்பதற்குத் தயாராய், தங்களுடைய பெருமையைக் காப்பாற்றி உயிரையும் கொடுக்க எல்லாச்சமயத் திலும் சித்தமாய் இருந்தார்கள்.' பாபரின் சிறிய படை அச்சமும் கிலியுங் கொண்டு அஞ்சியது. பாபரே தாம் ஈடுபட்டிருக்கும் வேலையின் கடினத்தை உணர்ந்திருந்தார். ஆனால், அவர் அசை விலா ஊக்கம் உடையவராய் இருந்தார். சிறிதும் தளராமல் பயங்கொண்டிருந்த தம் போர்வீரர்களுடைய நெஞ்சங்களில் ஆர்வமும் ஊக்கமும் மூண்டெழுமாறு செய்தார். அவர் தாம் மதுக்குடிக்கும் கிண்ணத்திலிருந்த சாராயத்தைக் கீழே ஊற்றி விட்டு, 'இனிமேல் போதையூட்டும் மதுவை அருந்துவதில்லை' என்று சபதம் செய்து மதுக்கிண்ணத்தையும் தரையில் போட்டு உடைத்தார். தம் போர் வீரர்களிடையே கிளர்ச்சிச் சொற் பொழிவு செய்து அவர்களுடைய வீர உணர்ச்சியைத் தூண்டினார்.

இதனால் கருதிய பலன் விளைந்தது. அவருடைய எல்லா வீரர் களும் அவருக்காகப் போரிடுவதாகக் குர்ரான்மீது சபதம் செய் தனர். முகலாயர்களும் இந்தியர்களும் 1527ஆம் ஆண்டு மார்ச்சு

16ஆம் நாள் ஆக்ராவின் நேர் மேற்கேயிருந்த கான்வா அல்லது கானுவா (Kanwa or Khanua) என்ற கிராமத்தில் போர் உடற்றினர். ராஜபுத்திரர்கள் வலிய வீரத்துடன் போரிட்டனர். ஆனால், பானிப்பட்டில் செய்தது போலவே பல யுத்த தந்திரங்களைக் கையாண்டு பாபர் அங்கும் அவர்களை வெற்றிகொண்டார். ராஜபுத்திரர்கள் முழுத் தோல்வியடைந்தனர். தம்முடைய சில வீரர்களின் உதவியினால் ராணா தப்பினார். ஆனால், மனமுடைந்து இரண்டாண்டுகளுக்குள் உயிர் துறந்தார். பாபர் கானுவாவில் பெற்ற வெற்றிக்குப்பின் யமுனையைக் கடந்து, ராஜபுத்திரர்களின் வீரமிக்க கடும் எதிர்ப்பையும் வென்று சந்தேரிக் கோட்டையைத் தகர்த்தெறிந்தார்.

இந்திய வரலாற்றின் போக்கினைத் திருப்பிய போர்களுள் கானுவாப் போரும் ஒன்றெனில் தவறாகாது. ஒருவிதத்தில் பானிப்பட்டுப் போரைக் காட்டிலும் மிகு முக்கியமான விளைவுகளை உண்டாக்கியது கானுவாப் போர் எனலாம். பாணிப்பட்டுப்போர் முழு ஆட்சியதிகாரத்தை உண்மையில் செலுத்தமுடியாமல் பேருக்குமட்டும் சுல்தானாக இருந்த டில்லி சுல்தான்களின் தோல்வியைக் காட்டுகிறது. ஆனால், கானுவாப் போர் மிக்க வல்லமை வாய்ந்த ராஜபுத்திரர்களின் கூட்டுப்படையே தோல்வியுற்றதைக் காட்டுகிறது. இவ்வாறு துருக்கிய-ஆப்கானியச் சுல்தானியத்தின் சீர்குலைவுக் காலத்தில் தங்களுடைய அரசியல் புதுமலர்ச்சியை ஏற்படுத்திவிடலாம் என்று எண்ணிக்கொண்டிருந்து, அதற்கு முயற்சி செய்த ராஜபுத்திரர்களின் வாய்ப்பு இதனால் அழிந்து விட்டது. ஆனால், அவர்கள் 'அதிலிருந்து இந்துஸ்தானத்தின் அரசியல் அரங்கில் ஆதிக்கம் செய்வதிலிருந்து அடங்கிவிட்டார்கள்' என்று சொல்லுவது உண்மையாகாது. உண்மையில் அரசியலரங்கிலிருந்து அவர்கள் ஓய்வெடுத்துக்கொண்டிருந்தது சிறிது காலத்திற்குத்தான். முப்பது ஆண்டுகளுக்குப் பிறகு மீண்டும் அவர்கள் புத்துயிர்பெற்றெழுந்தனர்; முகல் ஆட்சியின் வரலாற்றில் பெரிய ஆதிக்கத்தைச் செலுத்திவந்தனர். ஷெர்ஷா கூட ராஜபுத்திரரின் பகைமையைக் கருத்தில் வைத்துக்கொண்டிருக்க நேர்ந்தது. ஆனால், கானுவாப் போருக்குப் பின்பு சிறிது காலம் ராஜபுத்திரர்கள் தலைகாட்டாமல் மறைந்திருந்தது பாபருக்கு வசதியாகப்போயிற்று. அது புதிய அயலாரின் ஆட்சியை இந்தியாவில் நிலைநாட்ட பாபருக்குத் துணைபுரிந்தது. ரஷ்புரூக்-வில்லியம்ஸ் (Rushbrook-Williams) கீழ்வருமாறு கூறியிருப்பது பொருத்தமானதாகும். 'கானுவாப் போருக்கு முன்பு பாபரின் துணிகரச்செயல் மிக்க வீரவாழ்க்கையில் இந்துஸ்தானத்தைக் கைப்பற்றுவது என்பது ஒரு வெறுங்கதை நிகழ்ச்சியாகவே கருதப்

பட்டிருந்திருக்கும். ஆனால், அதற்குப் பிறகு அவருடைய வாழ்க்கையின் மீதிப் பாகம் முழுவதும் இந்துஸ்தானம் முழுவதையும் ஆட்சிக்குள் அடக்குவதே தாம் செய்யவேண்டிய முக்கிய வேலையாக மாறிவிட்டது. அவர் செல்வத்தைத் தேடிக்கொண்டு அலைந்த காலம் எல்லாம் மலையேறிவிட்டது. பெருஞ் செல்வம் எல்லாம் அவருக்கே உரியதாக இருந்தது. அதற்குத் தகுதியுடையவராக அவர் தம்மை ஆக்கிக்கொள்ள வேண்டியதொன்றுதான் அவர் செய்யவேண்டியிருந்தது. இந்தப் போர் அவருடைய வாழ்க்கையில் ஒரு முக்கியமான நிலையைக் காட்டுகிறது. அதற்குப் பிறகு அவர் சிம்மாசனத்துக்குத் தீங்கு ஏற்படும் என்றோ அப்படி ஏற்பட்டால் உயிரைப் பணயமாக வைத்து அதை மீட்கவேண்டுமென்றோ அஞ்சவேண்டிய தேவை இல்லாமற் போயிற்று. அதற்குப் பிறகு போர்கள் இருந்தன; பற்பல போர்களை அவர் புரியவேண்டியிருந்தது. ஆனால், அவையெல்லாம் அவருடைய அதிகாரத்தை விரிவுபடுத்தவும், கலகக்காரர்களைக் குறைக்கவும் இராச்சியத்தை ஓர் ஒழுங்கிற்குள் கொண்டுவருவதற்காகவும் நடைபெற்றபோர்களாகும். சிம்மாசனத்துக்காகப் போரிடவேண்டிய நெருக்கடியுண்டாகவில்லை. காபூலிலிருந்து இந்துஸ்தானத்துக்கு அவருடைய அதிகார வன்மை மாறியதிலிருந்து பாபர் வலிமை வாய்ந்த சிக்கல்களை முன்கூட்டியே எவ்வாறு அறிந்திருந்தார் என்பதும், அதற்கேற்ப நடக்கும் திறன் எவ்வாறு படைத்திருந்தார் என்பதும் நன்றாகப் புலனாகின்றன.'

ஆப்கானியத் தலைவர்களை அடியோடு அடக்குவதை விட்டுவிட்டு, எப்படிப் பாபர் ராஜபுத்திரர்களை எதிர்ப்பதற்கு விரைந்தார் என்பதை நாம் மேலே பார்த்தோம். ஆனால், இப்பொழுது அவர் ஆப்கானியத் தலைவர்களின் பக்கம்தம் முழுக் கவனத்தையும் செலுத்த முடிந்தது. பாட்னாவுக்குப் பிறகு கங்கை நதி கோக்ரா (Gogra) நதியுடன் கூடுமிடத்திற்கருகே, கோக்ரா நதி தீரத்தில், பாபர், பீஹார், வங்காள மாநிலங்களின் ஆப்கானியத் தலைவர்களை எதிர்த்தார். 1529 மே மாதம் 6ஆம் நாள் அவர்கள் பெருந்தோல்வி எய்துமாறு செய்தார். இவ்வாறு மூன்று போர்களைச் செய்து வட இந்தியாவின் கணிசமான பகுதியைத் தம் ஆட்சிக்குட்படுத்தினார் பாபர். இப்போது அவர் ஆக்சஸிலிருந்து (Oxus) கோக்ரா வரையிலும், இமாலயத்திலிருந்து குவாலியர் வரையிலுமுள்ள நிலப்பகுதிக்குத் தலைவரானார். எனினும், இந் நிலப் பரப்புக்கு இடையே அங்கும் இங்கும் சில சுதேசி இராச்சியங்கள் இருந்தன.

ஆனால், அரும்பாடுபட்டுப் பெற்ற வெற்றிகளின் இன்ப விளைவுகளை அனுபவிக்க பாபருக்குக் கொடுத்து வைக்கவில்லை.

அவர் 1530 டிசம்பர் மாதம் 26ஆம் நாள் ஆக்ராவில் தம் நாற்பத்தேழு அல்லது நாற்பத்தெட்டாம் வயதில் இறந்தார். முஸ்லிம் வரலாற்றாசிரியர்கள் அவருடைய சாவைப் பற்றி ஒரு சுவையான செய்தியைப் பிணைத்துச் சொல்கின்றனர். அவருடைய மகன் ஹுமாயூன் நோயால் படுத்த படுக்கையாகக் கிடக்கும்போது பாபர் தம் மகனுக்கு வந்த நோய் தம் உடம்பில் புகுமாறும், மகன் குணமடையுமாறும் கடவுளை மிகவும் இரங்கி வேண்டிக்கொள்ள, அவ்வாறே அவருடைய உடல் நலம் வரவரக் குறைந்துகொண்டே வந்து, கடைசியில் உயிர்க்கு இறுதி நேர்ந்தது என்று கூறுகின்றனர். தற்கால ஆசிரியர் ஒருவர் 'பாபர் நோய்வாய்ப்பட்டு இறந்தார்' என்றும், 'தம் மகனுக்காகத் தியாகம் செய்து உயிர் துறந்தார். என்று அபுல் ஃபாஸல் (Abul Fazl) கட்டிவிட்ட கதையை நம்புவதற்கு போதிய சான்று எதுவும் இல்லை'[1] என்றும் கூறுகிறார். முதலில் பாபரின் உடல் ஆக்ராவில் ஆராம்பாகில் (Arambagh) வைக்கப்பட்டிருந்தது. பின்பு காபூலுக்கு எடுத்துச் செல்லப்பட்டு அங்கே அவருக்கு மிகு விருப்பமாயிருந்த தோட்டம்[2] ஒன்றில் புதைக்கப்பட்டதாகத் தெரிகிறது.

இந்துஸ்தானத்தில் பாபர் கழித்த நாலாண்டுக் காலத்தில் பஞ்சாப், இக் காலத்து மத்தியப் பிரதேசம், வட பீஹார் பகுதிகளடங்கிய பிரதேசம் ஆகியவை அவரால் வெல்லப்பட்டன. ராஜபுத்திர மாநிலங்களுள் முதன்மையாக இருந்த மேவார் பிரதேசமும் அவருக்கு அடிபணிந்தது. ஆனால், வெற்றி பெற்றதற்குமேல் அவர் வேறு ஒன்றும் செய்ய முடியாது போயிற்று. ஒரு பேரரசை நிலை நிறுத்துவதற்கு நாடுகளை வெற்றி பெறுவது மட்டும் போதாது; உடனுக்குடனே அல்லது வெற்றி பெற்ற சிறிது காலத்திற்குள்ளே ஆட்சி முறையில் ஒரு நிலைப்பாடு உண்டாகும் வேலையைச் செய்வது முக்கியம். பாபர் செய்துவிட்டுப் போனதைவிடச் 'செய்யாது விட்டுவிட்டுப் போனவை இன்னும் முக்கியத்துவம் வாய்ந்தவை' என்று தற்கால நூலாசிரியர் ஒருவர் கூறுகிறார். அவருடைய படைகள் பெற்றுத்தந்த வெற்றிகளால் இராச்சியப் பரப்பு விரிவடைந்திருந்தாலும், அரசியல் சூழ்நிலையைப் பொறுத்தவரை அப் பரந்த பேரரசின் வெவ்வேறு பகுதிகளிலும் ஒரேவித ஆட்சி ஏற்படவில்லை' என்று எர்ஸ்கின் (Erskine) எழுதுகிறார். மேலும் அவர் கூறியதாவது, 'அரசனின்

[1] Sri Ram Sharma, "Story of Babur's death', Calcutta Review, September, 1936.

[2] காபூல் நகர்மீது தமக்குத் தனி விருப்பம் உண்டு என்று பாபரே கூறியிருக்கிறார். 'தட்பவெப்பநிலை மிகவும் இன்பமாயிருக்கிறது. இதைப்போல உலகில் வேறு எந்த இடமும் இல்லை' என்று அவரே எழுதியிருக்கிறார்,

தடையில்லா அதிகாரத்திற்கு மேலாக எல்லா மாநிலங்களுக்கும் பொதுவான சட்டம் என்று ஒன்றும் இருக்க முடியாதுதான்; ஒவ்வொரு பிரதேசமும், ஒவ்வொரு மாகாணமும், ஒவ்வொரு மாவட்டமும், ஒவ்வொரு கிராமமும்கூடச் சாதாரண விஷயங் களில் அவ்வவற்றிற்கே உரிய தனிப்பட்ட பழக்க வழக்கங்களுக் கேற்ப ஆளப்பட்டுவந்தன. நீதி வழங்குவதற்காகப் பிரதேசம் முழுவதும் ஒழுங்கான நீதி மன்றங்கள் இருக்கவில்லை...நிலத்தைப் பற்றிய தகராறுகள் எல்லாம் கிராம அதிகாரிகளாலோ, கலெக்டர்களாலோ, ஜமீன்தார் அல்லது ஜாகீர்தார்களாலோ தீர்க்கப்பட்டுவந்தன. அரசாங்க உயர் அதிகாரிகள் மிகப்பெரிய வழக்குகளாயிருப்பினும், சிவில் வழக்குகளையும், குற்ற வழக்கு களையும் விசாரித்துத் தீர்ப்புச் சொல்வதற்கு எவ்விதத் தடையும் இருக்கவில்லை. 'உண்மையில் வெற்றிகள் பெற்ற பிறகு புதிய சட்டங்களைக் கொண்டுவருவதற்கோ, ஆட்சியமைப்பை மாற்றி யமைப்பதற்கோ பாபருக்குச் சிறிது நேரங்கூட இல்லை. ஆனால், ஆட்சிமுறை பழைய மத்தியகால சிற்றரசாட்சி முறைப்படி அதன் பலவகைக் குறைபாடுகளுடன் நடந்துவந்தது. அவரால் ஒரு வலிமை வாய்ந்த பொருளாதாரத் திட்டத்தை உண்டாக்க முடியவில்லை. அவர் தமக்கு அடங்கித் தம்மைப் பின்பற்றி வாழ்ந் தோர்க்கு நிறையக் கொடைகள் வழங்குவதில் பெருஞ் செல்வத்தைச் செலவிட்டார். முஸ்லிம்களுக்குச் சில வரிச் சலுகைகளை அளித்தார். மக்களின் நல்லெண்ணத்தைப் பெறு வதற்கேற்ற வகையில் அவர் தமக்குப் பின் நின்று நிலவும் குறிப் பிடத்தக்க பொது நிலையம் அல்லது அற நிலையங்களை' ஏற்படுத்தி வைக்கவில்லை. பாபர் செய்தவற்றிலுள்ள இக் குறைகளை யெல்லாம் நோக்கும்போது அவர் தம் மகனுக்குப் போர்க்கால நிலையில் மட்டும் ஒன்றாய் நிற்கக்கூடியதும் அமைதிக் காலத்தில் வலுவில்லாத, ஒழுங்கமைப்பில்லாத, முதுகெலும்பில்லாத ஒரு பேரரசை உரிமையாக்கி விட்டுப்போனார்' என்றே சொல்ல வேண்டியிருக்கிறது. எனினும், இந்திய வரலாற்றில் அவர் ஒரு முக்கியமான இடத்தைப் பெற்றுள்ளார். ஏனெனில் அவருடைய புகழ்பெற்ற பேரரான அக்பரால் மிகு விரிவாகக் கட்டப்பட்ட முகலாயப் பேரரசு என்னும் கட்டடத்தை இந்தியாவில் எழுப்பு வதற்குக் கால்கோள் செய்த முதல் கட்டடக் கலைஞர் அவரே யாவர்.

ஆசியாவின் வரலாற்றில் வீரமும் கேட்டார்க்குச் சுவை பயக்கும் குணங்களும் பொருந்திய ஆண்மை படைத்தோருள் பாபரும் ஒருவர். அவர் எதற்கும் கலங்காத உள்ள உரமும், மிகச் சிறந்த படை இயக்கும் வன்மையும் உடையவராயினும்

தேவையில்லாமல் கொன்று குவித்துக் களிக்கும் இயல்பு கொண்ட வரோ, வேண்டுமென்றே அழிவுகளைச்செய்பவரோ அல்லர்; அன்பு மிக்க ஒரு தந்தையாகவும், அன்புள்ள ஒரு தலைவராயும், தாராள மாய் உதவும் நண்பராயும், கடவுளிடத்து ஆழ்ந்த நம்பிக்கை உள்ளவராயும், உண்மை, இயற்கை இவற்றில் பெருங்காதல ராயும் இருந்தார். அவர் 'இசை முதலிய பல கலைகளிலும் வல்லவராயும்' இருந்தார். அவர் தம் தந்தையிடமிருந்து இடையறுது துணிகரச் செயல் புரிவதில் ஊக்கமும், நல்ல மன இயல்பும் பெற்றிருக்கலாம். அவற்றை அவர் தம் வாழ்க்கையின் மிகு பெருந் துன்பக் காலத்திலும் இழக்கவில்லை. அவர் தம் தாய்வழிப் பாட்டனரிடமிருந்து இலக்கியச் சுவையுணர்வுகளைப் பெற்றிருக்கலாம். அவரைப் பற்றி லேன்பூல் (Lane Poole), 'அவர் மத்திய ஆசியாவையும் இந்தியாவையும் பிணைக்கும் பாலமாகவும், முற்கால நாடோடிகளுக்கும் பேரரசுக்கும் இடைப்பட்ட பாலமாகவும், தைமூருக்கும் அக்பருக்கும் இடைப் பட்ட குணமுடையவராகவும் காணப்படுகிறுர். ஆசியாவின் இரு பெருங்கேடு விளைவித்தோராகிய செங்கிஷ்கான், தைமூர் இவர்களின் இரத்தத்தில் நாடோடிகளான தார்த்தார் (Tartar) களின் அஞ்சாமையும், இடைநில்லாமையுமான குணங்கள் பொருந்திய அவர் பாரசீக நாகரிகப் பண்பாட்டைத் தழுவியிருந் தார். சோம்பேறிகளான இந்துக்களை அடக்குவதற்காக மங்கோ லியரின் வலிமையையும் துருக்கியரின் துணிவையும், சக்தியையும் கொண்டுவந்தார். செல்வத்தைத் தேடும் போர் வீரரான அவர் பேரரசை நிர்மாணிக்கும் கலைஞராயில்லாது போயினும் அழகான பேரரசாகிய கட்டடத்திற்குரிய அடித்தளக் கல்லை முதலில் நாட்டினர். அக் கட்டடத்தை அவருடைய பேரர் அக்பர் கட்டி முடித்தார்......பேரரசை நிறுவுவதற்கு வழி வகுத்த அவருடைய இந்திய வெற்றிகளிலே அவருடைய பெயர் வரலாற்றில் அழியா இடத்தைப் பெற்றுவிட்டது. ஆனுல், அவரைப் பற்றிய வர லாற்றிலும், இக் காலத்திலும் அவருக்குள்ள இடம் அவர் தம் இளமைக் காலத்தில் செய்த துணிகரச்செயல்கள், எண்ணியதைச் சாதிக்கும் இடைவிடா முயற்சிகள் இவற்றுலும், அவற்றைச் சுவையின்ப மூட்டும்படி எழுதி வைத்த குறிப்புகளாலும் நிலை யானதாயிருக்கும். பொருட்செல்வம் தேடிய போர் வீரராயினும் இலக்கியச் செல்வம் சுவைக்கும் சுவை குறைந்தவராக அவர் இருக்கவில்லை. சுவைத்திறம் பொருந்திய சிறந்த திறனுய்வு மனப் பான்மையும் பெற்றிருந்தார். பண்பாட்டின் மொழியும் இந்தியா வுக்குப் போல மத்திய ஆசியாவுக்கும் இலத்தீனுக விளங்கு வதுமான பாரசீக மொழியில் அவர் ஒரு சிறந்த கவிஞர். சொந்த மொழியான துருக்கியில் உரை நடையிலும் கவிதையிலும்

தூய, இனிய நடையில் எழுதும் வல்லமையும் கைவரப்பெற்றிருந்தார்' என்று கூறுகிறார். மனித இலக்கிய வரலாற்றில் சிறந்த இடத்தைப் பெறத் தகுதியான அவர் எழுதி வைத்துச் சென்ற வாழ்க்கைக் குறிப்புகள் (Memoris) 1590-ல் அக்பர் காலத்தில் அப்துல் ரஹீம் கானிகானன் (Abdul Rahim Khan-i-Khanan) என்பவரால் பாரசீக மொழியிலும், 1826-ல் லெய்டன், எர்ஸ்கின் (Leyden, Erskine) என்பவர்களால் ஆங்கிலத்திலும் 1871-ல் ஃபிரெஞ்சு மொழியிலும் மொழிபெயர்க்கப்பட்டன. அன்னெட் சுசன்னு பெவரிட்ஜ் (Annette Susannaah Beveridge) என்பவர் இவற்றின் திருந்திய பதிப்பை வெளியிட்டிருக்கிறார். அவருடைய அழகிய துருக்கிப் பாடல்களின் சிறு தொகுப்பும் நமக்குக் கிடைத்திருக்கின்றது.

## 2. ஹுமாயூனும் அவருடைய ஆட்சியின் தொடக்க காலத்தில் நிகழ்ந்த போர்களும்

பாபர் இறந்து மூன்று நாள்களுக்குப் பிறகு ஹுமாயூன் தம் இருபத்துமூன்றும் வயதில் இந்துஸ்தானத்தின் சிம்மாசனத்தில் ஏறினார். அவர் அரசாட்சியை ஏற்றபோது நிலைமை எளிதாக இருக்கவில்லை. எல்லாப் பக்கங்களிலிருந்தும் வந்த பலவகைப் பகைமைச் சக்திகளை அவர் எதிர்க்க வேண்டியிருந்தது. அச் சக்திகள் மறைமுகமாய் இருந்தமையின் மிகவும் ஆபத்தானவையாய் இருந்தன. அரச குடும்பத்திலும் எவ்வித ஒற்றுமையும் நிலவவில்லை. அவருடைய ஒன்று விட்ட சகோதரர்களான மகமது ஸமானும் (Muhammad Zaman) மகமது சுல்தானும் பட்டத்துக்கு வரத் தாங்களே தகுதியுடையவர்கள் என்று கூறினர். மேலும், மூத்த மகனே பட்டத்துக்குரியவன் என்ற நியதி முஸ்லிம்களுக்குள் கட்டாயமாகப் பின்பற்றப்பட வேண்டியதில்லையாதலின், ஹுமாயூனின் சகோதரர்களான கம்ரன் (Kamran), ஹிந்தால் (Hindal), அஸ்காரி (Askari) ஆகிய மூவரும் சிம்மாசனம் ஏறப் பேராசைப்பட்டனர். 'எது சரி என்பதைத் தீர்மானிக்கும் பெரிய நடுநிலையாளர் வாளே. ஒவ்வொரு சகோதரனும் மற்றச் சகோதரர்களுக்கு எதிராக வாளெடுத்துத் தம் நற்பேற்றைக் காண விழைந்தனர்' என்று எர்ஸ்கின் குறிப்பிடுவது உண்மை. அரசவையில் பிரபுக்கள் நிறைந்திருந்தனர். அவர்களும் சிம்மாசனத்தைக் கைப்பற்றத் திட்டங்கள் தீட்டிக் கொண்டிருந்தனர். மேலும், ஹுமாயூனிடமிருந்து துணிகரச் செயல் விரும்பிய படைவீரர்கள் பலநாடுகளிலிருந்து வந்தவர்கள்; பல திறத்தினர். அவர்கள் ஒருவருக்கொருவர் முரண்பாடான விருப்பங்களை உடையவர்களாக இருந்தனர். இதனால், அவர் தம் உறவினர்களையோ, அரசவையையோ, படையையோ உதவிக்

காகப் பெரிதும் நம்பியிருக்க முடியவில்லை. மேலும், ஹுமாயூனுக்குப் பாபர் விட்டுச்சென்ற உரிமைகளும் தெளிவற்றவையாயும், நிலையற்றவையாயும் இருந்தன. மேலே நாம் பார்த்தபடி பாபர் ஒருநிலைப்படுத்தப்பட்ட, நன்கு ஒழுங்குபடுத்தப்பட்ட பேரரசை விட்டுச்செல்லவில்லை. உண்மையில் 'அவர் நாட்டை ஆண்டுவந்த அரசவமிசத்தின் சக்தியைமுறியடித்துப் படைகளைத் தோற்கடித்திருந்தார். ஆனால், அவரோ அவரது சந்ததியினரோ மக்களின்மீது வைத்திருந்த ஒரே பிடிப்பு படைபலமே.' ராஜபுத்திரர்கள் தாற்காலிகமாகவே அடக்கி வைக்கப்பட்டிருந்தனர். ஆப்கானியர்கள் தோற்கடிக்கப் பட்டிருந்தாலும், அவர்கள் நிலையாக அடக்கியொடுக்கப்படவில்லை. சிதறுண்டிருந்த எண்ணற்ற ஆப்கானியத் தலைவர்களும் எதிர்த்துக் கிளர்ச்சி செய்ய எப்போதும் தயாராய் இருந்தார்கள். அவர்கள் வேண்டியதெல்லாம் தங்களை எல்லாம் ஒருமுகப்படுத்தி உயிரூட்ட வேண்டிய பலமும் திறமையும் வாய்ந்த ஒரு தலைவரே. அப்படிப்பட்ட தலைவராக ஷெர்ஷாவை அவர்கள் கண்டனர். பகதூர் ஷா (Bahadur Shah)வின் கீழ் வளர்ந்துவந்த குஜராத்தின் சக்தியும் ஹுமாயூனுக்கு ஒரு பெரிய பேரிடியாக இருந்தது.

படைத்துறையில் பேரறிவும் அரசியல் சூழ்ச்சித் திறமும், அரசியல் ஞானமும் உடைய ஓர் ஆட்சியாளரே அச் சமயத்திற்குத் தேவைப்பட்டார். ஆனால், ஹுமாயூனுக்கு இவற்றுள் ஒன்றும் இல்லை. உண்மையில் அவர் தமக்குத்தாமே ஒரு பெரிய விரோதியாகக் காணப்பட்டார். அறிவுத்துறையில் சுவைத் திறன்களும், பண்பாட்டின்மேல் காதலும் உடையவராயினும் தம் தந்தையிடம் காணப்பட்ட ஞானமும், ஆயும்திறனும், வலிய மன உறுதிப்பாடும், இடைவிடா ஊக்கமும் அவரிடம் காணப்படவில்லை. லேன்பூல் கூறுவது போல, 'அவர் மேன்மேலும் ஊக்கமுற்றுச் செயலில் ஈடுபடும் சக்தி இல்லாதவராய் இருந்தார். வெற்றி கிடைத்த கண நேரத்தில் அந்தப் புரத்தில் அடைந்துகொண்டு அபினி உண்போர் காணும் தேவ உலகத்தில் தாமும் கனவுகள் கண்டுகொண்டு, தம் அரிய காலத்தைக் கழிப்பார். அப்போது வெளியே பகைவர்கள் வாயிலைத் தகர்த்துக்கொண்டிருப்பினும் வாளா இருப்பார். இயல்பாகவே இரக்கக் குணம் படைத்த அவர் தண்டிக்க வேண்டியவர்களையும் மன்னித்துவிடுவார். எளிதில் மனமகிழ்ச்சியை எய்திவிடுபவரும் மக்களோடு கலந்து பழகுபவருமான அவர் குதிரையின்மீது இருக்கவேண்டிய காலத்தில் விருந்தில் அமர்ந்து களிப்புற்றிருப்பார். அவருடைய குண இயல்புகள் கவர்ச்சியானவை. ஆனால், ஆதிக்கம் செலுத்துபவை அல்ல. தனிப்பட்ட வாழ்க்கையில் இன்புறுத்தும் நண்பராகவும், உயர்

நண்பராகவும் அவர் விளங்கியிருக்கக் கூடும். ஆனால், அரசராக இருப்பதில் அவர் தோல்வியுற்றார். 'அதிர்ஷ்டமுள்ளவன்' என்பது அவருடைய பெயரின் பொருள். ஆனால், இவரைப் போலத் துரதிர்ஷ்டம் பிடித்த ஓர் அரசர் இப்படித் தவறான பெயரில் என்றும் வழங்கப்பட்டதில்லை.'

ஹுமாயூன் செய்த முதல் தவறு தம் சகோதரர்களுக்குத் தகுதியில்லாத இரக்கம் காட்டியதேயாகும். இறந்து கொண்டிருந்த தந்தை ஏதாவது அறிவுரை கூறியிருந்து அவர் அப்படிச் செய்திருக்கலாம். பொறாமையுள்ள போட்டியாளர்களான அவர்களை அவர் வன்மையான கட்டுப்பாட்டிற்குள் வைத்திருக்கவேண்டும். ஆனால், அஸ்காரி ஸாம்பாலின் (Sambhal) சிற்றரசனாக்கப்பட்டார். ஹிந்தால் ஆள்வர் (Alwar) நாட்டின் சிற்றரசனாக்கப்பட்டார். மூன்று சகோதரர்களிலும் மூத்தவரான கம்ரனுக்குக் காபூல், கந்தஹார் (Qandahar) இவற்றின் உரிமை உறுதியாக்கப்பட்டது. மேலும், கம்ரன் லாகூரில் (Lahore) ஹுமாயூனின் தளபதியாயிருந்த மீர் யூனுஸ் அலியை (Mir Yunus Ali) எதிர்த்துப் படையை நடத்திச் சென்ற பஞ்சாபையும் அதன் கிழக்கேயிருந்த ஹிஸ்ஸார் ஃபிரோஸா (Hissar Firuza) என்ற மாவட்டத்தையும் கைப்பற்றிக் கொண்டார். இவ்வாறு பாபரின் பேரரசின் ஒருமைப்பாட்டிற்கு ஹுமாயூன் உலை வைத்துவிட்டார். மேலும் சிந்துநதிப் பகுதியையும் அதற்கப்பாலிருந்த பகுதியையும் கம்ரனுக்குக் கொடுத்துவிட்டமையால் தம் படைக்குச் சிறந்த ஆள்களைத் தரும் பிரதேசத்தை இழந்தார். ஹுமாயூன் இந்தியாவில் குழந்தைப்பருவத்திலிருந்த முதல் இராஜ்யத்தின் பாதுகாப்புக்குப் படைபலம் மிகு இன்றியமையாததாயிருந்தது. ஹிஸ்ஸார் ஃபிரோஸாவை உரிமையாகக் கொண்டதால் பஞ்சாபிற்கும் டில்லிக்கும் இடையேயுள்ள பெருஞ்சாலையின்மேல் கம்ரனுக்கு அதிகாரம் ஏற்பட்டது.

பகைமைச் சக்திகள் அடக்கமுடியாமல் வளருமுன்பு அதிர்ஷ்டம் ஹுமாயூனுக்கு முதலில் செய்த போர்களில் உதவி செய்தது. பட்டத்திற்கு வந்து ஐந்து அல்லது ஆறு மாதங்களுக்குப் பிறகு பந்தல்கண்டின் (Bundelkhand) ராஜா ஆப்கானியர்களுடன் அனுதாபமுடையவராய் இருக்கிறார் என்று ஐயுற்றுப் பந்தல்கண்டிலுள்ள கலிஞ்சார்க் (Kalinjar) கோட்டையை முற்றுகையிடுவதற்குப் படையை நடத்திச் சென்றார். ஆனால், அந்த ராஜாவிடமிருந்து ஒரு குறிப்பிட்ட அளவு பணம் பெற்றுக்கொண்டு கிழக்கே தொல்லைகள் கொடுத்துக்கொண்டிருந்த ஆப்கானியர்களை அடக்குவதற்காக அங்கிருநது அவர் திரும்பவேண்டியதாயிற்று. தௌராவில் (Dourah), தௌஹ்ருவா (Dauhrua) ஆப்கானியர்களை முறியடித்துச் சிறந்த வெற்றி பெற்றார். ஜான்பூரிலிருந்த சுல்தான்

மகமூத் லோடியைத் துரத்தினர். ஆப்கானியத் தலைவர் ஷேர்கான் உரிமையாகக்கொண்டிருந்த சூனரை (Chunar) முற்றுகையிட்டார். ஆனல், குஜராத்தின் ஆட்சித் தலைவர் பகதூர் ஷாவின் வளரும் அதிகாரங்களை அடக்கி ஒடுக்குவதற்காக மேற்கே படையுடன் செல்லவேண்டியிருந்தமையால் ஷேர்கான் கீழ்ப்படிவதாகச் சொல்லிய 'வெறும் வார்த்தையை' ஏற்றுக்கொண்டு எழுச்சியுற்று வந்த ஆப்கானியத் தலைவரை முழுமையாக அடக்கிவிடாமல் முற்றுகையைக் கைவிட்டுச் சென்றுவிட்டார். இதனல், ஆப்கானியத் தலைவர் தம் படை பலத்தையும் சக்தியையும் பெருக்கிக்கொள்ளச் சுதந்திரமான நல்வாய்ப்பு ஏற்பட்டுவிட்டது.

பகதூர்ஷா ஹுமாயூனின் கோபத்தை நன்கு கிளறி விட்டிருந்தார். வெளிப்படையாகவே அவர் பல ஆப்கானிய அதிகாரிகளுக்கு ஆதரவும் உதவியும் கொடுத்தார். ஹுமாயூனின் பகைவர்களுக்கும் ஆதரவும் உதவியும் அளித்தார். மேவாரின் வீழ்ச்சி அவருக்குத் தம் ஆட்சிப்பரப்பை விரிவுபடுத்தும் வாய்ப்பை நல்கியது. மாளவத்தைத் தம் இராச்சியத்துடன் இணைத்துக் கொண்ட பிறகு பிரசித்தி பெற்ற ராஜபுத்திரக் கோட்டையான சித்தூர்க் கோட்டையை முற்றுகையிட்டார். அப்போது, 1534ஆம் ஆண்டின் இறுதியில் ஆப்கானியர்களின்மேல் கொண்ட வெற்றியின் முழுப்பலனையும் அனுபவிக்கு முன்பே ஹுமாயூன் மாளவத்தை அடைந்தார். குஜராத்தியர்களால் மிகவும் கொடுமைப்படுத்தப்பட்ட மேவார் ராணி கர்ணவதி (Karnavati) பகதூர்ஷாவுக்கு எதிராக ஹுமாயூனின் உதவியை வேண்டினுள். ஆனல், அம் முகல் அரசர் அவ் வேண்டுகோளுக்குச் செவிசாய்க்கவில்லை. தமக்காகவேணும் அவர் பகதூர்ஷாவை உடனே தாக்க முடியவில்லை. ஆனல், பொறுமையுடன் காத்திருந்தார். அப்போது பகதூர்ஷா கான்ஸ்டாண்டிநோபிலைச் சார்ந்த துருக்கியப் பொறி வல்லாரான ரூமி கான் (Rumi Khan), போர்ச்சுகீசிய ஐரோப்பியப் பீரங்கிவீரர்கள் இவர்களுடைய உதவியுடன் சித்தூர்க் கோட்டையைத் தகர்த்து ராஜபுத்திரர்களைத் தோற்கடித்துக்கொண்டிருந்தார். ராஜபுத்திரர்களின் வேண்டுகோளைப் புறக்கணித்ததன் மூலம் ஹுமாயூன் ஒரு மாபெருந் தவற்றைச் செய்துவிட்டார்.

உண்மையில் தம்முடைய நன்மைக்காக ராஜபுத்திரர்களின் அனுதாபத்தையும் ஆதரவையும் பெறுவதற்குரிய பொன்னன ஒரு நல்ல வாய்ப்பை இழந்துவிட்டார். விலை மதிக்க முடியாத அவற்றின் பெருமையை அவருடைய மகன் அக்பர் பின்னர் உணர்ந்தார். அந்தச் சமயத்தில் ஹுமாயூன் மண்டசார்க்கு (Mandasor) அருகிலுள்ள இரு செயற்கை ஏரியின் கரைகளில் பகதூர்ஷாவின்

படைகளை எதிர்த்து அவற்றைத் தோற்கடித்தார். பகதூர் ஷாவைத் துரத்திக் கொண்டு சென்றார். பகதூர்ஷா மாண்டுவிலிருந்து சம்பானீர்க்கும் (Champaner) அகமதாபாத்திற்கும், பிறகு காம்பேயுக்கும் (Cambay) ஓடினார். கடைசியில் டையூத் (Diu) தீவில் அடைக்கலம் புகவேண்டிய கட்டாயம் ஏற்பட்டது. ஆனால், குஜராத் ஆட்சியாளர்மேல் ஹுமாயூன் பெற்ற இவ் வெற்றி சிறிது காலத்திற்குமேல் நீடிக்கவில்லை. அவருடைய வாழ்வுக் காலத்தில் மற்றச் சமயங்களில் நிகழ்ந்தது போலவே இந்தச் சமயத்திலும் விரைவில் அவருடைய குண இயல்பின் பலவீனம் வெளிப்படத் தொடங்கிவிட்டது. வெற்றிக் களிப்பினால் அவரும் அவருடைய சகோதரர் அஸ்கரியும், அவருடைய பெரும்பாலான படைவீரர்களும் விருந்திலும் களியாட்டத்திலும் மூழ்கிவிட்டனர். இதன் உடன் விளைவாக 'அவருடைய காரியங்களெல்லாம் குழப்பமாயின. அவருடைய சொந்தப் பாசறையே கலகமும், வீரர்கள் கீழ்ப்படியாது செய்யும் கிளர்ச்சியும் நிகழும் களமாயிற்று.' குஜராத்தின் சுல்தான் இந் நிலைமையைத் தமக்குச் சாதகமாக ஆக்கிக்கொண்டு முகலாயர்களிடம் தாம் இழந்த பகுதிகளையெல்லாம் மீண்டும் பெற்றார். ஆப்கானியத் தலைவர்கள் கிழக்கே மிகவும் சக்தி வாய்ந்தவர்களாக வளர்ந்திருந்தமையின் ஹுமாயூனின் கவனம் அங்கே திரும்பியது. அதனால் குஜராத் சுல்தானை மீண்டும் அடக்குவதைப்பற்றி அவரால் எண்ண முடியவில்லை. அவர் திரும்பிச் செல்லத் தொடங்கிய உடனே மாளவத்தின் உரிமையையும் அவர் இழக்க நேரிட்டது. இவ்வாறு 'ஒரு வருடத்தில் விரைவில் இரு பெரிய மகாணங்களை வெல்லும் வாய்ப்புகள் கிடைத்தன. ஆனால், அடுத்த வருடம் அவற்றை விரைவில் இழக்கவும் நேரிட்டது.' ஹுமாயூனின் வாழ்க்கையில் அடுத்த கட்டம் ஆப்கானியரின் மறுமலர்ச்சிக்கு வித்திட்ட தலைவரான ஷெர்ஷாவுடன் துரதிஷ்டவசமாகப் போர்கள் செய்யவேண்டி நேர்ந்தமையாகும்.

### ஷெர்ஷாவும் சூரர்களும் :
### ஆப்கானிய மறுமலர்ச்சியும் வீழ்ச்சியும்

பானிப்பட்டிலும் கோக்ராவிலும் பாபர் பெற்ற வெற்றிகள் ஆப்கானியத் தலைவர்களை அடியோடுஅழித்துவிடவில்லை. புதிதாக ஏற்பட்ட அன்னிய ஆட்சியைக் கண்டு அவர்கள் மனக் கொதிப்பு அடைந்திருந்தனர். அதைத் தேசிய மனப்பான்மையுடன் எதிர்ப்பதற்குச் சிதறுண்டிருந்த முயற்சிகளையெல்லாம் ஒன்று சேர்த்து ஒழுங்கு முறைக்கு உட்படுத்தும் ஒரு வலிமை வாய்ந்த தலைவரே அவர்களுக்கு வேண்டியிருந்தது. அப்படிப்பட்ட தலைவ

ராக ஷெர்கான்சூர் அவர்களுக்குக் கிடைத்தார். அவர் ஆப்கானிய அதிகாரத்தின் மறுமலர்ச்சி ஏற்படும்படி செய்தார். புதிதாக நிறுவப்பட்ட முகலாய அதிகாரத்தைக் கவிழ்த்து இந்தியாவில் ஒரு சிறந்த ஆட்சியை நிறுவினர். ஆனல், அந்த ஆட்சி மிகக் குறுகிய காலத்திற்குள்ளாகவே முடிவடைந்தது.

இந்திய முஸ்லிம் மறுமலர்ச்சியின் தந்தையான ஷெர்கான் சூரின் வாழ்க்கை வரலாறு பாபரின் வாழ்க்கை வரலாற்றைப் போன்று சுவைமிக்கதாய் இருக்கிறது. மாபெரும் முகல் அரசரான அக்பரின் வாழ்க்கை வரலாற்றைப்போல அறிவுரைகளைப் பயப் பதாயும் உள்ளது. ஆரம்பத்தில் பரீத் (Farid) என்ற பெயரு டையவராக இருந்த அவர், தம் வாழ்க்கையை எளிய முறையில் தொடங்கினர். வரலாற்றில் வரும் பல பெரிய மனிதர்களைப் போலவே, அவரும் தம் தனிப்பட்ட திறமையால் முன்னுக்கும் மேன்மைக்கும் வருமுன்பு பல வகைச் சோதனைகளுக்கு ஆளாகி யும், விதியின் விளையாட்டுகளுக்கு இலக்காகியும் வாழ நேர்ந்தது. சூர் குலத்தைச் சேர்ந்த ஆப்கானியரான இப்ராஹீம் என்ற பெயருடைய அவருடைய பாட்டனர் பெஷாவருக்கு அருகில் வாழ்ந்தார். அவருடைய தந்தையின் பெயர் ஹஸன் என்பது. பஹ்லூல் லோடியின் ஆட்சிக் காலத்தின் முற்பகுதியில் படைத் தொழிலைத் தேடிக்கொண்டு இப்ராஹீமும் அவருடைய மகனும் கிழக்குப்பகுதியில் குடியேறினர். பஞ்சாபில் ஹரியாண(Hariana) பக்கலா(Bakhala) இவற்றிடையே பர்காணக்களின் (Paragana) ஜாகீர்தார்களாயிருந்த மகபத்கான் சூர், தாவுத்கான் சாஹு (Mahabat Khan Sur and Daud Khan Sahu) இவர்களுடைய படையில் முதலில் அவர்கள் சேர்ந்தனர். பாஜ்வாரா(Bajwara) அல்லது பெஜௌரா (Bejoura) என்று வழங்கப்பட்ட பர்காணவில் குடியேறினர். அங்கேதான் கி.பி. 1472-ல் பரீத் பிறந்திருக்க வேண்டும்.[1] சிறிது காலத்துக்குப் பிறகு டில்லி மாவட்டத்தில் ஹிஸ்ஸார் ஃபிரோஸாவில் ஜமால்கான் சராங் கானீ (Jamal Khan Sarang Khani) என்பவரிடம் இப்ராஹீம் வேலை கிடைக்கப் பெற்றார். பரீத்தை அவருடைய தந்தையான ஹஸன் சசாரம் (Sasaram) என்ற இடத்திற்கு எடுத்துச் சென்றார். அங்கே ஹஸனின் தலைவரான கானி ஆஸம் என்ற பட்டப் பெயர் கொண்ட உமர்கான் சர்வானி (Umar Khan Sarwani) என்பவர் ஜான்பூரின் கவர்னராக அப்போது ஹஸனுக்கு ஒரு ஜாகீரை

[1] கி.பி. 1486-ல் ஹிஸ்ஸா பிரோஸாவில் பரீத் பிறந்தார் என்று டாக்டர் கானுங்கோ கொண்டிருந்த பழைய கொள்கை இப்போது பேராசிரியர் பரமாத்ம சரண் அவர்களால் J.B.O.R.S.-ல் (1934 பக்கம் 108-122) வெளியிடப்பட்ட 'ஷெர் ஷாவின் பிறந்த நாளும் இடமும்' என்ற கட்டுரையில் தவறு என்று காட்டப் பட்டிருக்கிறது.

அளித்தார். அந்தக் காலத்து மற்றப் பிரபுக்களைப் போலவே ஹஸனும் பல மனைவியரை மணந்திருந்தார். பரீத்தின் மாற்றாந் தாய் ஹஸன்மீது ஆதிக்கம் செலுத்திவந்தாள். இதனால் ஹஸன் பரீத்தைச் சரியாகக் கவனிக்கவில்லை. அதனால் பரீத் தம் இருபத்திரண்டாம் வயதில் வீட்டைவிட்டு வெளியேறி ஜான் பூருக்குச் சென்றார். இவ்வாறு அந்த ஆப்கானிய இளைஞர் துணிகரச்செயல்செய்யவும், வாழ்க்கையில் போராடவும்வேண்டிய கட்டாயம் ஏற்பட்டது. இவற்றால் அவர் மனமும் குண இயல்பும் வீரஞ் செறிந்தனவாக மாறின. சிறிது காலம் அவர் படிப்பில் ஈடுபட்டிருந்தார். தம்முடைய இடைவிடாது முயன்று உழைக்கும் உழைப்பாலும், இடையறாத செயற்பாட்டாலும் பரீத் முதலில் ஜான்பூரிலுள்ள தம் ஆசிரியர்களின் கவனத்தை ஈர்த்தார். விரைவில் பாரசீக மொழியிலும் இலக்கியத்திலும் மிகச் சிறந்த பயிற்சி பெற்றார். குலிஸ்தான்(Gulistan) புஸ்தான்(Bustan), சிகந்தர் நாமா (Sikandar-namah) முதலியவற்றை அவர் மனப் பாடமாக ஒப்புவிக்கும் திறமையைப் பெற்றிருந்தார். முன்னேறக் கூடிய இந்த இளைஞரைக் கொண்டு மகிழ்ச்சியும் மன நிறைவுமுற்ற இவருடைய தந்தையின் புரவலரான ஜமால்கான் இவருக்கும் தந்தைக்குமிடையேயிருந்த பிணக்கத்தைத் தீர்த்து இருவரையும் ஒன்றுபடுத்தினார். தந்தையும் இளவரசைச் சசாரமுக்குத் திரும்பி வர அனுமதித்தார். சசாரமிலும் காச்சிபூரிலும்(Khawaspur) இருந்த பர்கானக்களை ஆட்சி செய்துவரவும் அனுமதி தந்தார். அப் பர்கானக்கள் பீஹாரிலிருந்த ரோஹிதாக்களுக்குரியவை. (Rohtas) அந்த இரு இடங்களையும் பரீத் வெற்றியோடு ஆட்சி செய்ததைக் கண்டு மாற்றாந்தாயின் பொறாமை அதிகரித்தது. அதனால் மீண்டும் சசாரமை நீங்கி ஆக்ராவை அடைந்தார்.

தந்தை இறந்த பிறகு ஓர் அரச ஆணையைக் (firman) காட்டி அதன்மூலம் தம் தந்தையின் ஜாகீரை உரிமையாகப் பெற்றார். அந்த அரச ஆணையை அவர் ஆக்ராவில் பெற முடிந்தது. 1522-ல் பீஹாரின் சுயேச்சை ஆட்சியாளரான பஹார்கான் லோஹானி யிடம் (Bahar Khan Lohani) அவர் வேலைக்கு அமர்ந்தார். தம் கடமைகளை நேர்மையாகவும் இடையறா ஆர்வத்துடனும் செய்து வந்ததால், அவருடைய தயவை விரைவில் பெற்றார். ஒரு புலியைத் தனியாளாக நின்று கொன்ற வீரத்தைப் பாராட்டி அவருடைய தலைவர், அவரைத் தமக்குத் துணைவராக(வக்கீலாக) அமர்த்திக்கொண்டும், தம் இளம் மகனை ஜலால்கானுக்கு(Jalal Khan) ஆசிரியராய் (அதாலிக் Ataliq) இருக்கும்படி அமர்த்தியும் அவருடைய திறமையையும் பற்றுறுதியையும் போற்றிப் பாராட்டினார்.

ஆனால், தொடர்ந்து தீமை செய்யும் விதி மீண்டும் ஷேருக்கு எதிராகவே இருந்தது. அவருடைய பகைவர்கள் அவருக்கு எதிராக அவருடைய தலைவரின் மனத்தை மாற்றிவிட்டார்கள். அதனால்,அவர் மீண்டும் தம் தந்தையின் ஜாகீரை இழக்கவேண்டி ஏற்பட்டது. 'முகலாயப் படைகளின் முழு வெற்றியைக் கண்டு சிறப்பெண்ணம் கொண்ட' அவர் எதிர்காலத்தில் கிடைக்கும் பயன்மிக்க வாய்ப்பையும் கருதி, பாபரின் பாசறையில் சேர்ந்து 1527 ஏப்ரல் முதல் 1528 ஜூன்வரை அங்கே தங்கியிருந்தார். தம்முடைய கிழக்கத்திய படையெடுப்புகளில் மிகச் சிறந்த தொண்டுகள் செய்ததற்குப் பதிலாகப் பாபர் அவருக்கு மீண்டும் சசாரம் கிடைக்கும்படிச் செய்தார்.

விரைவில் ஷெர்ஷா முகலாயர்க்குச் செய்த ஊழியத்தை விட்டுவிட்டுத் தம் பழைய மாணவனை ஜலால் கானுடைய பாதுகாவலராயும், பீஹாரின் துணை ஆளுநராகவும் ஆவதற்காகப் பீஹாருக்குத் திரும்பி வந்தார். பட்டத்துக்குரிய வயதை அடையாத இளவரசன் பெயருக்கு மாத்திரம் பீஹாரின் அரசனாக இருந்தான். ஷெர்ஷாவே பீஹார் அரசாங்கத்தின் உண்மையான தலைவராயிருந்தார். நான்கு ஆண்டுக் காலத்திற்குள் படையின் பெரும்பான்மையான பாகத்தைத் தம் பக்கம் வசப்படுத்திக் கொண்டு 'முழுச் சுதந்திர நிலையை எய்துமளவுக்குத் தம்மை உயர்த்திக் கொண்டார்.' அதிர்ஷ்டவசமாக இதற்கு இடையில் சூனார்க் கோட்டையும் அவருக்கு உரிமையாகிவிட்டது. சூனாரின் தலைவரான தாஜ் கான் (Taj Khan), லாட் மாலிகா(Lad Malika) என்ற ஓர் இளம் மனைவியுடன் வெறித்தனமாக நடந்துகொண்டிருந்ததால் அவருடைய மூத்த மகன் அவருக்கு எதிராக எழுந்து அவரைக் கொலை செய்துவிட்டான். அந்த விதவை ஷெர் கானை மணந்துகொண்டு சூனார்க் கோட்டையை அவரிடம் கொடுத்து விட்டாள். 1531-ல் ஹுமாயூன் சூனாரை முற்றுகையிட்டார். ஆனால், ஷெர்கான் அந்த வருடம் ஆப்கானிய எழுச்சியில் பங்கு எடுத்துக்கொள்ளாமல், தந்திரமாக முகலாய படையெடுப்பாளருக்குப் பணிந்துபோவதாகத் தக்க சமயத்தில் கூறித் தம் நிலையைப் பாதுகாத்துக் கொண்டார்.

லோஹானி ஆப்கானியர்களைப் பயன்படுத்திக்கொண்டே வேகமாகவும், எதிர்பாராத வகையிலும் வளர்ச்சியுற்று உயர்ந்து வந்த ஷெர்ஷாவைக் கண்டு லோஹானி ஆப்கானியர்கள் பொறுமை இழந்தனர். ஜலால் கான்கூடத் தம் பொறுமை அடக்கத்தைக் கைவிட்டார். இந்தக் கொடுங்கோலனை ஒழிக்க வேண்டும் என்று அவர்கள் முயன்றனர். ஷெர்ஷா 'மிகச் சிறந்த

வகையில் எச்சரிக்கையாக இருந்தமையின்' அவர்களுடைய முயற்சி தோற்றது. பிறகு அவர்கள் (1533 செப்டம்பரில்) வங்காள அரசராயிருந்த மகமூத் கானுடன் கூட்டுறவாயிருப்பதாக ஒப்பந்தம் செய்துகொண்டனர். ஷெர்ஷாவின் உயர்வு தம் சொந்த மதிப்பையும் அதிகாரத்தையும் பாதிப்பதாகக் கருதிய அவர் ஷெர்ஷாவை முன்னேறவொட்டாமல் அடக்கியொடுக்கவேண்டும் என்னும் ஆர்வத்தை இயல்பாகவே பெற்றிருந்தார். ஆனால், ஆப்கானியரின் துணை ஆளுநராயிருந்த ஷெர்ஷா, பீஹார் நகரின் கிழக்கிலுள்ள கியூல்(Kiul) நதியின்கரைகளில் சுராஜ்கார்(Surajgarh) என்ற இடத்தில் வங்காளச் சுல்தானும், லோஹானிகளும் கொண்டு வந்திருந்த கூட்டுப் படைகளை முறியடித்தார். உண்மையில் சுராஜ்காரில் பெற்ற வெற்றி ஷெர்ஷாவின் வாழ்க்கையில் ஒரு திருப்பத்தை ஏற்படுத்தி விட்டது. 'படை பலத்தால் பெற்ற ஒரு பெரிய சாதனையாய் இருந்த அவ் வெற்றி நீடித்த அரசியல் விளைவுகளைக் கொடுத்தது. சுராஜ்காரில் வெற்றி பெற்றிராவிடில் சசாரமின் சாதாரண ஜாகீர்தாராயிருந்த அவர், தாழ்ந்த சூழ்நிலையிலிருந்து அரசியல் அரங்கிற்கு வரும் பெரு நிலையை எய்திப் பரம்பரையாக மணிமுடி தாங்கும் உரிமை பெற்ற பஹாதூர் ஷா, ஹுமாயூன் பாதுஷா போன்ற ஆட்சித் தலைவர்களோடு போட்டி போட்டுக் கொண்டு எளியவராயிருந்தும் ஒரு பேரரசை நிறுவும் முயற்சியில் ஈடு பட்டிருக்க முடியாது.' அவ் வெற்றி பீஹாரின் உண்மையான ஆட்சியாளராக இருப்பதுடன் ஆட்சித்தலைவர் என்ற பெயரையும் அவருக்குத் தந்துதவியது.

ஹுமாயூன் பகதூர் ஷாவுக்கு எதிராகக் குஜராத்துக்குப் படையை நடத்திச் சென்றபோது ஷெர்ஷா தம் சக்தியை அதிகரித்துக்கொள்ள ஒரு வாய்ப்பைப் பெற்றார். திடீரென்று அவர் வங்காளத்தின்மீது படையெடுத்து அதன் தலைநகரான கௌர் முன்பு தோன்றினார். அங்கே வழக்கமான பாதையான தெலியா கர்ஹிக் (Teliagarhi) கணவாய்கள் (கிழக்கிந்திய இரயில்வே லூப் லைனில் இப்போதுள்ள சாஹெப்கெஞ்ச் (Sahebganj) அருகில்) வழியாகச் செல்லாமல் பழக்கமில்லாத சிறிது குறுக்கு வழியான வேறொரு பாதை வழியாகச் சென்றார். வங்காளத்தின் பலமில்லாத அரசராயிருந்த மகமூத் ஷா ஆப்கானியப் படையெடுப்பாளரை எதிர்க்க எவ்வகையான கடு முயற்சியும் மேற்கொள்ளாது முப்பது லட்சம் பொன் நாணயங்களுக்குச் சமமான பெருந்தொகை ஒன்றை அவருக்கு அளித்ததுடன் 90 மைல் நீளமும், 30 மைல் அகலமும் கொண்ட கியூலிலிருந்து சக்ரிகாலி (Sakrigali) வரையிலுள்ள நிலப்பரப்பை அவருக்குப் பிரித்துக்

கொடுத்ததும் சமாதானமாகப் போய்விட்டார். இந்தப் புதிய பேறுகள் ஷெர்ஷாவின் பலத்தையும் பதவியையும் கணிசமான அளவுக்கு உயர்த்தின. குஜராத்தின் தலைவர் பகதூர் ஷா டையூவுக்கு ஓட்டப்பட்ட பிறகு பல சிறந்த ஆப்கானியப் பிரபுக்கள் கிழக்கே உயர்ச்சி பெற்றுவரும் தங்கள் தலைவரிடம் வந்து சேர்ந்தனர். இவ்வாறு பலங்கொண்ட ஷெர்ஷா வங்காளத்தை நிரந்தரமாக வென்றுவிட வேண்டுமென்று கருதி, 1537 அக்டோபரின் நடுப்பகுதியில் வங்காளத்தின்மீது படையெடுத்துச் சென்று கௌர் நகரத்தைப் பலமாக முற்றுகையிட்டார். குஜராத்திலிருந்தும் மாளவந்திலிருந்தும் திரும்பி வந்த ஹுமாயூன் வழக்கம் போல ஆக்ராவில் காலத்தை வீணுக்கிக் கொண்டிருந்ததால் மிகு தாமதமாகவே கிழக்கே தோன்றிய ஆப்கானியத் தீங்கினை உணர்ந்தார். பிறகு 1537 டிசம்பரில், இரண்டாவது வாரத்தில் ஷெர்கானை எதிர்க்கப் படையுடன் சென்றார். அவர் நேரடியாகக் கௌருக்குச் சென்றிருந்தால் ஷெர்கானின் திட்டங்களைத் தவிடு பொடியாக்கி இருக்கலாம். ஆனால், அவர் வங்காளச் சுல்தானுடன் கூட்டுச் சேர்ந்துகொண்டு சூனரை முற்றுகையிட்டார். சூனரிலிருந்த ஷெர்கானின் தீரமிக்க படை வீரர்களால் ஆறு மாதங்கள் முற்றுகையிட்டோரின் முயற்சிகள் எல்லாம் வீணாயின. அதுவரை கௌர் நகரை அடிப்படுத்துதற்கு வேண்டிய காலமும் வாய்ப்பும் ஷெர்கானுக்குக் கிடைத்தன. 1538 ஏப்ரலில் கௌரைத் தம்வசமாக்கிக் கொண்டார். எப்படியோ ரோஹ்தாக்களின் கோட்டையையும் அவர் கைப்பற்றினார். அங்கே தம் குடும்பத்தையும் செல்வத்தையும் அனுப்பி வைத்தார். பீஹாரில் ஏமாற்றமுற்ற ஹுமாயூன் வங்காளத்தை நோக்கித் திரும்பி வந்து 1538 ஜூலையில் கௌரை அடைந்தார். ஆனால், ஷெர்கான் தந்திரமாக அவருடன் வங்காளத்தில் நேரிடையாகப் போர் தொடுப்பதை விட்டுவிட்டுப் பீஹாரிலும், ஜான்பூரிலும் இருந்த முகலாயப் பகுதிகளைக் கைப்பற்றுவதற்கும், மேற்கே கானோஜ் (Kanauj)வரையிலுள்ள பாதையில் கொள்ளையடிக்கவும்சென்றார்.

அப்போது கௌர் நகரில் களியாட்டங்களிலும் விழாக்களிலும் காலத்தை வீணாகக் கழித்துக்கொண்டிருந்த ஹுமாயூன் மேற்கே ஷெர்ஷா செய்துவந்த செயல்களைப்பற்றிக் கேள்வியுற்று மனம் கலங்கினார். அவர் தாம் திரும்பி வருவது தடைப்படுவதற்கு முன் வங்காளத்தைவிட்டு ஆக்ராவிற்குப் புறப்பட்டார். ஆனால், வழியில் பக்ஸார் (Buxar) என்ற இடத்திற்கு அருகில் உள்ள சௌன்ஸாவில் (Chaunsa) ஷெர்கானும் அவருடைய ஆப்கானிய வீரர்களும் ஹுமாயூனை எதிர்த்துத் தாக்கி, 1539 ஜூன் மாதத்தில் அவர் பெருந்தோல்வியடையும்படி செய்தனர். முகலாயர் படை

வீரர்களுள் பெரும்பாலோர் சிறைப்பிடிக்கப்பட்டனர். அல்லது மூழ்கடிக்கப்பட்டனர். அவர்களுடைய துரதிர்ஷ்டம் பிடித்த தலைவரான ஹுமாயூன் கதிகலங்கிக் கங்கை ஆற்றில் விழுந்துவிட அவரைத் தண்ணீர் சுமப்போன் ஒருவன் தோலால் செய்த தன் தண்ணீர்ப் பையில் வைத்துத் தூக்கிச் சென்று காப்பாற்றினான்.

டில்லிப் பேரரசரின்மீது வெற்றிகொண்டதால் ஷெர்கானின் பேராசையின் அளவு விரிவடைந்தது. மேலும், அவரை மேற்கே கானோஜிலிருந்து அஸ்ஸாம் குன்றுகள் வரையிலும், கிழக்கே சிட்டகாங்கு வரையிலும், வடக்கே ஹிமயமலையிலிருந்து ஜார்க்கண்டு (Jharkhand) மலைகள் வரையிலும் (ரோஹ்தாலி லிருந்து பீர்பம் வரை), தெற்கே வங்காள விரிகுடா வரையிலுள்ள நிலப்பகுதிகளின் உண்மையான ஆட்சியாளராக ஆக்கியது. படைகளின் வன்மையினாலும், யுத்த தந்திரத்தினாலும் தாம் பெற்றவற்றைச் சட்டப்படி தமக்கே உரியவை என்பதைக் காட்டுவதற்காக அப்போது அவர் ஷெர்ஷா என்ற அரசப் பட்டத்தைப் புனைந்துகொண்டார். குத்பா (Khutba) படிக்கும்படி கட்டளையிட்டார். தம்முடைய பெயரில் நாணயங்கள் அடித்து வெளியிடுமாறு ஆணையிட்டார். அடுத்த வருடம் ஹுமாயூன் இழந்த தமது செல்வத்தை மீண்டும் பெறுவதற்காக மற்றொரு முயற்சி செய்தார். ஆனால், மிகச் சிறந்த முயற்சிகள் செய்தும் அவர் தம்முடைய சகோதரர்களின் ஒத்துழைப்பைப் பெற முடியவில்லை. 1540ஆம் ஆண்டு மே 17ஆம் நாளில் முகலாயர்களும், ஆப்கானியர்களும் மீண்டும் கானோஜுக்கு எதிரில் எதிர்த்தனர். ஹுமாயூனின் படை மிகவும் மனமுடைந்து போய் அரை குறை விருப்பத்துடன் போரிட்டது. படையதிகாரிகளும் சரிவரத் தங்கள் கடமைகளைச் செய்யவில்லை. அதனால் அது பொதுவாகக் கானோஜ் போர்த்தளம் என வழங்கப்பட்ட கங்கை அல்லது பில்கிராம் (Bilgram) போர்க்களத்தில் ஆப்கானியர்களால் மிகு கடுமையாக முறியடிக்கப்பட்டுவிட்டது. ஹுமாயூன் எப்படியோ தப்பித்துக் கொண்டார். இவ்வாறு பாபரின் முயற்சிகள் சீர்குலைக்கப்பட்டு விட்டன. இந்தியாவின் மேலாண்மை அதிகாரம் மீண்டும் ஆப்கானியர்கள் கைக்குச் சென்றது. அந்தச் சமயத்திலிருந்து சுமார் பதினைந்து ஆண்டுகள் ஹுமாயூன் நாடோடியாகத் திரிந்து தம் வாழ்க்கையைக் கழிக்க வேண்டியிருந்தது.

ஹுமாயூன் லாகூருக்குச் சென்று தம் சகோதரர்களையும் வசமாக்கப் பெருமுயற்சிகள் செய்தபோதிலும் மிக ஆபத்தான அந்தச் சமயத்தில் பாபரின் புதல்வர்கள் ஒன்றாய்ச் சேரத் தவறிவிட்டனர். அவர்களுடைய சுயநலம் பொதுநலங்களைத் தாழ்த்தி

வெற்றி கொண்டுவிட்டது. அதனால், ஷெர்ஷா அதிகாரத்தைப் பஞ்சாப் வரையிலுங்கூடப் பரப்ப முடிந்தது. சிந்து, ஜீலம் நதிகளின் மேற்பகுதிகளில் அமைந்திருந்த கக்கார் (Gakkar) நாட்டின் போர்வீரமிக்க பல ஜாதியினரை அடக்குவதற்காக அந்த ஆப்கானியத் தலைவர் வழக்கம்போலத் தக்க சமயமறிந்து பெரிய உற்சாகத்துடனும், மன உறுதியுடனும் படையை நடத்திச் சென்றார். அந்தப் பகுதியை அவர் படுநாசத்திற்குள்ளாக்கிய போதும் கக்கார்களை முழுமையாக அடிப்படுத்த முடியவில்லை. ஏனெனில், அதற்குள் அவர் தம் அதிகாரத்துக்கு எதிராகஅறிவின்மையால் கிளர்ச்சி செய்த தம் துணையாட்சியாளரை அடக்குவதற்காக 1541ஆம் ஆண்டு மார்ச்சு மாதத்தில் வங்காளத்தை நோக்கி அவசரமாகச் செல்ல வேண்டியிருந்தது. அவர் கிளர்ச்சி செய்த வரை வேலையிலிருந்து நீக்கிவிட்டு மாகாண ஆட்சி முறையிலிருந்த படைத்துறைப் பண்பை மாற்றினார். முழுவதும் புதிய ஓர் ஆட்சிப் பாங்கைப் புகுத்தினார். செயல் முறையில் அம் முறை சிறப்புடையதாகவும், கொள்கையில் அது தனிப்பட்ட பண்புடையதாகவும் காணப்பட்டது.' மாகாணம் பல மாவட்டங்களாகப் பிரிக்கப் பட்டது. ஒவ்வொருமாவட்டத்திற்கும் ஷெர்ஷாவினால் நேரடியாக நியமிக்கப்பட்ட அதிகாரிகளே ஆட்சியாளர்களாக அமர்த்தப் பட்டனர். அவ் வதிகாரிகள் ஷெர்ஷா ஒருவருக்கே பொறுப்புள்ள வர்களாய் இருந்தனர்.

அடுத்ததாக ஷெர்ஷா மேற்கிலிருந்த ராஜபுத்திரர்களின் பக்கம் தம் கவனத்தைத் திருப்பினார். கானுவாக்களிடமிருந்து பெற்ற அடியிலிருந்து அவர்கள் இன்னும் முழுமையும் மீளவில்லை. கி.பி. 1542-ல் மாளவத்தை அடிப்படுத்திய பிறகு ஷெர்ஷா மத்திய இந்தியாவில் உள்ள ரெய்சினைச் (Raisin) சேர்ந்த பூரன் மால் என்பவனை எதிர்த்துப் படையை நடத்திச்சென்றார். சிறிது காலம் எதிர்த்துச் சமாளித்த பிறகு ரெய்சின் கோட்டையைக்காத்துவந்த படையினர் சில சலுகைகளுக்குட்பட்டுச் சரணடைந்தனர். மாளவ எல்லைக்கு அப்பால் 'எவ்விதத் தொல்லைக்கும் ஆட்படுத்தாமல்' செல்லுவதற்கு அனுமதியளித்தால் அக் கோட்டையைக் காலி செய்துவிடுவதாக ராஜபுத்திரர்கள் ஒப்புக்கொண்டனர். ஆனால், அவர்கள் கோட்டைச் சுவர்களைத் தாண்டி வெளியே வந்ததும் ஆப்கானியர்கள் அவர்கள்மீது கோபாவேசத்துடன் பாய்ந்தனர். தங்களுடைய மனைவிமக்கள் குழந்தைகளை அவமதிப்புக்கு ஆளாகாமல் காப்பாற்றுவதற்காகத் தங்கள் உயிரையும் இழக்க முன்வந்தனர். 1543-ல் எவராலும் வெல்ல முடியாத எதிரியாகிய ஷெர்ஷாவை எதிர்த்து வீரத்துடன் சண்டையிட்டு ஒருவர் பாக்கி யில்லாமல் போரில் இறந்தனர். ரெய்சின் நிகழ்ச்சி ஷெர்ஷாவின்

சிறப்பு மிக்க பண்புகளுக்குப் பெரிய களங்கத்தை உண்டாக்கியது என்றுபலசரித்திர ஆசிரியர்கள் இகழ்ச்சியாகக் கூறியிருக்கின்றனர். பஞ்சாபின் கவர்னரால் சிந்துவும் மூல்தானும் ஆப்கானியப்பேரர சுடன் இணைக்கப்பட்டன. இன்னும் ஒரே ஒரு வலிமை வாய்ந்த எதிரிதான் ஷெர்ஷாவால் அடக்கப்படுவதற்கு இருந்தார். அவர் தான் மார்வார் நாட்டின் ராஜபுத்திர அரசரான மால்தேவ் (Maldav) என்பவர். அவர் ஒரு திறமை மிக்க தளபதியாகவும், சக்திவாய்ந்த ஆட்சியாளராகவும் இருந்தார். அவருடைய இராச்சியப் பரப்புப் பத்தாயிரம் சதுர மைல்கள் வரை பரந்திருந்தது. தங்களுடைய இராச்சியப் பகுதிகளை வென்று தம் இராச்சியத் துடன் மால்தேவ் சேர்த்துக்கொண்டதால் அதிருப்தியுற்றிருந்த சில ராஜபுத்திரத் தலைவர்களால் தூண்டப்பட்டு, ஷெர்கான் கி.பி.1544-ல் ராத்தோர்த் தலைவருக்கு எதிராகப் படையெடுத்துச் சென்றார். ராத்தோர்களுடன் அவர்களுடைய சொந்த நாட்டி லேயே நேரடிப் போரில் ஈடுபடுவது உகந்தது என்று கருதியதால் ஷெர்ஷா ஒரு யுத்த தந்திரத்தை மேற்கொள்ள முற்பட்டார். ராஜபுத்திரத் தளபதிகளால் எழுதப்பட்டவை போன்றும், மால் தேவுக்கு உதவிசெய்வதாக வாக்களிப்பது போன்றும் சில பொய்க் கடிதங்களை எழுதி மால்தேவுக்கு அனுப்பினார். இவ்வாறு ராத்தோ ரின் ஆட்சியாளரைப் பயப்படுத்துவதில் வெற்றியடைந்தார். ராத்தோரின் ஆட்சியாளர் களத்திலிருந்து பின்வாங்கிச் சிவன் கோட்டையில் புகலடைந்தார். எனினும், ஜேடன் (Jeta), காமன் (Kama) போன்ற ராஜபுத்திரத் தளபதிகளும் அவர்களுடைய வீரர்களும் ஷெர்ஷாவின் படையை எதிர்த்தனர். மிகச் சிறந்த வீரத்துடன் போரிட்டாலும் வெற்றியடையாது வீரர்களுக்குரிய வீர மரணத்தையே அவர்கள் அடைந்தனர். மிகுந்த செலவில் தான் ஷெர்ஷா வெற்றிபெற முடிந்தது. போர்க்களத்தில் பல்லா யிரம் ஆப்கானியர்கள் உயிரிழந்தனர். ஷெர்ஷாவும் தம்பேரரசை இழக்கும் தறுவாயில் இருக்க நேர்ந்தது. ஆனால், ஷெர்ஷாவின் வெற்றிக்குப் பிறகு ராஜபுத்திரர்கள் மீண்டும் தலைதூக்கும் வாய்ப்பை இழந்தனர். வட இந்தியா முழுவதும் ஆப்கானியரின் எதிரில்லாத மேலாண்மைக்கு வழிகோலப்பட்டுவிட்டது. இந்த வெற்றிக்குப் பிறகு அஜ்மீரிலிருந்து ஆபூ (Abu) வரையிலுமுள்ள எல்லாப் பகுதிகளையும் தம் அடிக்கீழ்ப்படுத்தினார். பிறகு கலிஞ் சார்க் (Kalinjar) கோட்டையை முற்றுகையிடுவதற்கும் படையு டன் சென்றார். கோட்டையைப் பிடிப்பதில் வெற்றியுற்றார்; ஆனால், 1515ஆம் ஆண்டு மே மாதம் 22ஆம் நாள் வெடிமருந்தின் திடீர் வெடிப்பால் நிகழ்ந்த விபத்தில் அவர் உயிர் இழந்தார்.

ஒருசிறந்த போர் வீரராகவும், வெற்றி மிக்க நாடு பிடிப்பாள ராகவும் திகழ்ந்த ஷெர்ஷா ஒரு சிறந்தஆட்சியமைப்பு முறையைக்

கண்டு பிடித்தவராயும் விளங்கினர். அவருடைய ஆட்சி முறை அவருடைய எதிரிகளான முகலாயர்களைப் புகழ்ந்தவர்களாலும் வியந்து பாராட்டப்பட்டது. உண்மையில் போர்க்களத்தில் அவர் பெற்ற வெற்றிகளைக் காட்டிலும், அவர் ஆட்சியாளராகப் பெற்றிருந்த பண்புகளே மிகவும் போற்றத்தக்கவையாயிருந்தன. அவருடைய குறுகிய ஆட்சிக்காலமான ஐந்தாண்டுகளும் ஒவ்வொரு முக்கிய ஆட்சித் துறையிலும் அவர் புதிதாகத் தோற்றுவித்த, அறிவுமிக்க, போற்றத்தக்க மாறுதல்களால் பொலிவுற்றன. அவற்றுள் சில இந்தியாவின் பழைய இந்துக்கள் முஸ்லிம்களின் ஆட்சிமுறைகளின் பரம்பரைப் பண்புகளைச் சீர்திருத்தியவை யாயும், உயிர்ப்பித்தவையாயும் அமைந்தன; மற்றவை தோற்றத்திலும் பண்பிலும் முற்றிலும் புதியனவாயிருந்தன. உண்மையில் அவை பழைய இந்தியாவுக்கும் புதிய இந்தியாவுக்கும் பாலமாயிருந்தன. 'இந்தப் பட்டாணியரின் ஆட்சியைப்போல எந்த அரசாங்கமும்-பிரிட்டிஷ் அரசாங்கம்கூட அவ்வளவு அறிவுடைமையைக் காட்டவில்லை' என்று திரு கீன் (Mr. Keen) வலியுறுத்திக் கூறுகிறார். ஷெர்ஷாவின் அரசாங்கம் அரசரின் கையில் உண்மையான எல்லா அதிகாரமும் செறிந்திருப்பதாயும், மத்திய அரசுக்கே முழு அதிகாரமும் இருப்பதாயும் காணப்பட்ட முழு மத்திய ஆட்சியரசாங்கமாய் இருப்பினும், அவர் கடிவாளமிடப்படாத ஒரு தன்முனைப்புடைய சர்வாதிகாரியாகப் பொது மக்களின் விருப்பங்களையும் உரிமைகளையும் மதிக்காதவராக இருக்கவில்லை. அறிவுடைமை மிக்க சுயேச்சை அதிகாரியாக இருந்துகொண்டே அவர் மக்களின் விருப்பத்தைப் பெரும்பாலும் தழுவிய ஒரு பேரரசை நிறுவ முயன்றார்.

நாட்டு ஆட்சி எளிமையாகவும், வசதியாகவும் நடைபெற வேண்டும் என்னும் கருத்துடன், தம் பேரரசு முழுவதையும் நாற்பத்தேழு பகுதிகளாகப் சர்க்கார்களாக, (Sarkars) பிரித்தார். ஒவ்வொரு சர்க்காரும் மேலும் பல பர்கானுக்களாகப் (Paraganas) பிரிக்கப்பட்டன. ஒவ்வொரு பர்கானுவிலும் கணக்குகளைவைத்துக் கொள்வதற்காக ஓர் அமீன் (Amin), ஒரு ஷிக்தார் (Shiqdar), ஒரு பொருளாளர் (Treasure), ஓர் இந்து எழுத்தர், ஒரு பாரசீக எழுத்தர் (Persian writer) ஆகியோர் இருந்தார். பர்கானு அதிகாரிகளின் வேலையைக் கண்காணிப்பதற்காக அதற்கு அடுத்த உயர்ந்த ஆட்சிப் பகுதியான சர்க்காரில் ஷிக்தார்-இ-ஷிக்தாரான் (Shiqdar-i-Shiqdaran), முன்சீஃப்-இ-முன்சிஃபான் (Munsif-i-Munsifan) என்போர் அமர்த்தப்பட்டனர். தங்களுடைய ஆட்சி எல்லையில் அளவுக்கு மிகுதியான செல்வாக்கு அடைவதைத் தடுப்பதற்காக அரசர் இரண்டு அல்லது மூன்றாண்டுகளுக்கு ஒருமுறை அதிகாரி

களை இடம் மாற்றும் திட்டத்தைக் கடைப்பிடித்தார். ஆனால், அவருடைய ஆட்சிக் காலம் மிகக் குறுகியதாய் இருந்தமையின் இத் திட்டம் நீண்ட காலத்துக்கு நிலைக்கவில்லை. ஆட்சித் துறையின் ஒவ்வொரு பகுதியும் ஷெர்ஷாவின் நேரடிக் கண்காணிப்புக்கு உட்பட்டுவந்தது. 'பெருஞ் செயல்புரிவோர் எப்போதும் சுறுசுறுப்பாகவே இருப்பார்கள்' என்ற முதுமொழிக்கிணங்க ஷெர்ஷாவும் அசோகரையும், ஹர்ஷரையும்போல எப்போதும் ஊக்கம் உடையவராகவே இருந்தார்.

அறிவுடைமையும் மனிதத் தன்மையும் வாய்ந்த கொள்கைகளின் அடிப்படையில் ஷெர்ஷா செய்த நிலவருவாய்ச் சீர்திருத்தங்கள் இந்தியாவின் ஆட்சி முறை வரலாற்றில் மிகச் சிறந்த இடத்தைப் பெற்றுள்ளன. பிற்கால உழவு முறைகளுக்கு அது ஒரு முன் மாதிரியாயிருந்தது. நிலங்களை மிகு கவனமாகவும், சரியாகவும் அளந்து உழுவோரைக் கலந்து நிலத் தீர்வையைத் தீர்மானித்தார். அரசுக்குக் கொடுக்க வேண்டிய நிலவரி மொத்த விளைச்சலில் நாலில் அல்லது மூன்றில் ஒரு பங்காக நிலையாக்கப் பட்டது. அவ் வரியைத் தானியமாகவும், பணமாகவும் செலுத்தலாம். பணமாகச் செலுத்துவதே முதன்மையாக விரும்பப் பட்டது. வரி வசூலுக்காக அரசாங்கம் அமீன்கள், மகதம்கள் (Maqadams), ஷிக்தார்கள், கானுங்கோக்கள் (Qanungos) பட்வாரீகள் முதலிய அதிகாரிகளின் பணியைப் பயன்படுத்திக்கொண்டது. குறித்த காலத்தில் விதிக்கப்பட்ட வரித்தொகை முழுவதையும் கொடுத்துவிடவேண்டும் என்று வலியுறுத்தப்பட்டும் வற்புறுத்தப் பட்டும் வந்தன. சில சமயங்களில் அவசியமானால் ஷெர்ஷா விடமிருந்தே வற்புறுத்தல் வரும். தீர்வையின்போது கொஞ்சம் தாராளமாயிருக்கும்படியும் வரி வசூலின்போது, கண்டிப்பாயிருக்கும்படியும் ஷெர்ஷா தம் அதிகாரிகளுக்கு அறிவுறுத்தியிருந்தார். உழுவோரின் உரிமைகள் ஒன்றாக ஏற்றுக்கொள்ளப் பட்டன. ஒவ்வோர் உழவரும் கொடுக்க வேண்டிய கடன்கள் கபூலியத் (Gabuliyat) என்ற ஒப்பந்தப் பத்திரத்தில் தெளிவாக வரையறுக்கப்படும். அப் பத்திரத்தை அரசாங்கம் எடுத்துக் கொண்டு அதற்குப் பதிலாக உழவருக்குப் பட்டாவை (உரிமைப் பத்திரத்தை) அளிக்கும். வரி விலக்குகள் அல்லது வரிக் குறைப்புகளும் சில சமயம் செய்யப்பட்டன. படைவீரர்கள் கூடாரமடித்துத் தங்கியதாலோ போதிய மழை பெய்யாமையாலோ பயிர் விளைச்சலுக்குச் சேதம் ஏற்பட்டால் உழவர்களுக்குக் கடன்களும் கொடுக்கப்பட்டன. இந்த நிலச் சீர்த்திருத்தங்கள் நாட்டின் வருவாயைப் பெருக்கியதுடன் நாட்டு மக்களின் ஆர்வத்தையும் அதிகப்படுத்தின.

ஷெர்ஷாவின் நாணய, சுங்கவரிச் சீர்திருத்தங்களும் அவருடைய பேரரசின் பொதுப் பொருளாதார நிலைமை உயர் வதற்கு அடிகோலின. அவர் நாணயச் சாலையில் சில குறிப்பிட்ட மாறுதல்களைப் புகுத்தியதுடன் 'முந்திய அரசர்களின் காலங்களி லிருந்து படிப்படியாகக் குறைந்து வந்த நிலையையும்' சரிப்படுத் தினார். தொல்லை மிகுந்த சுங்கங்களுக்கு வரி விதித்திருந்ததைத் தவிர்த்தார். நாட்டின் எல்லைப் பகுதிகளிலும், வாணிகப் பொருள்கள் விற்பனை செய்யப்பட்ட இடங்களிலும் மட்டும் சுங்கங்கள் வற்புறுத்தப்படுமாறு அனுமதித்தார். அதனால், எளிதாகவும் சிக்கனமாகவும் வாணிகப் பொருள் ஓரிடத்திலிருந்து மற்றோரிடத்திற்குக் கொண்டுபோகப்பட்டன. அதனால், வாணிகம் வளர்ந்தோங்க வழி உண்டாயிற்று.

இந்த வியாபாரம் செய்தியறிவிப்புகளில் ஏற்பட்ட முன்னேற் றத்தால் மேலும் விருத்தியடைந்தது. தம் பேரரசின் பாதுகாப்புக் காகவும் பொது மக்களின் சௌகரியத்திற்காகவும் ஷெர்ஷா தம் இராச்சியத்தின் முக்கியமான இடங்களைச் சிறந்த பல பாதைகளின் மூலம் இணைத்தார். அவற்றுள் மிகவும் நீளமான கிராண்ட் டிரங்குப் பாதை கிழக்கு வங்காளத்திலிருக்கும் சோனார்காவனி லிருந்து(Sonargaon) சிந்துநதிவரை 1,500 கோஸ் நீளம் நீண்டுள்ளதாய் இன்றும் இருந்துவருகிறது. ஒரு பாதை ஆக்ராவி லிருந்து புர்ஹான்பூருக்கும், மற்றொரு பாதை ஆக்ராவிலிருந்து ஜோத்பூருக்கும், சித்தூர்க் கோட்டைக்கும், நான்காவது பாதை லாகூரிலிருந்து மூல்தானுக்கும் சென்றன. பழங்காலத்துச் சில ஆட்சியாளர்களைப் பின்பற்றி ஷெர்ஷாவும் பெரிய சாலைகளின் இரு மருங்கிலும் நிழல் தரும் மரங்களை நட்டுவைத்தார். வழியில் பாதையின் பல இடங்களிலும் சராய்கள் (Sarais) அல்லது தங்கும் விடுதிகளை அமைத்து அவற்றில் முஸ்லிம்களுக்கும் இந்துக்களுக்கும் தனித்தனி அறைகள் இருக்குமாறு ஏற்பாடு செய்தார். இந்தச் சராய்கள் தபால் நிலையங்களாகவும் பணி செய்தன. பேரரசின் பல பாகங்களிலிருந்தும் வரும் செய்திகளை அரசாங்கத்துக்குத் தெரியப்படுத்தி அவற்றுக்குரிய அரசாங்கத்தின் பதில்களையும் உரிய இடங்களுக்கு அனுப்பி வந்தன. மிகச் சிறந்த ஒற்றர்களை வைத் திருந்தமையால் தம் இராச்சியத்தில் என்னென்ன நிகழ்கின்றன என்பதை உடனுக்கு உடனே அரசர் அறிந்து வர முடிந்தது.

அமைதியும் ஒழுங்கும் நிலைநாட்டுவதற்காகப் போலீஸ் முறை திருத்தி அமைக்கப்பட்டது. உள்ளூர்க் குற்றவாளிகளின் குற்றங் களுக்கு உள்ளூரைப் பொறுப்பாக்கும் கொள்கை வற்புறுத்தப் பட்டது. இதனால், நாட்டுப்புறங்களில் கிராமத் தலைவர்கள்

குற்றவாளிகளைக் கண்டுபிடிப்பதற்கும் அமைதி நிலவுவதற்குமான பொறுப்பாளராய் இருந்தனர். இந்த முறையின் சிறப்பை எல்லா முஸ்லிம் நூலாசிரியர்களும் எடுத்துக் கூறிப் பாராட்டியிருக்கின்றனர். ஷெர்ஷாவின் பக்கம் சார்ந்து பேசவேண்டிய காரணம் எதுவும் பெற்றிராத நிஸாம்-உத்-தீன், 'தங்க நாணயங்கள் நிறைந்த ஒரு பையை ஒருவன் எடுத்துச் சென்று வழியில் இரவுக் காலங்களில் ஆள் நடமாட்டமில்லாத இடங்களில் தூங்கினாலும், பொருளைக் காப்பதற்காக விழிப்பாக இருக்க வேண்டிய தேவை இல்லை; பெருஞ்சாலைகளின் பாதுகாப்பு அப்படிப்பட்டதாயிருந்தது' என்று கூறியிருக்கிறார்.

ஷெர்ஷா நீதியுணர்ச்சி நிரம்பியவர். அவருடைய ஆட்சியில் நீதி விருப்பு வெறுப்பின்றி வழங்கப்பட்டது. நீதி வழங்குவதில் உயர்ந்தவர்களுக்கும் தாழ்ந்தவர்களுக்கும் வேறுபாடு பாராட்டப் படவில்லை. அரசரின் நெருங்கிய உறவினர்கள்கூட நீதியின் ஆணைகளிலிருந்து தப்புவிக்கப்படவில்லை. பர்காணக்களில் சிவில் வழக்குகள் அமீன்களாலும், மற்ற வழக்குகள் பெரும்பாலும் குற்ற வழக்குகள் காஸியாலும் மீர்-இ-அதாலாலும் விசாரித்துத் தீர்க்கப்பட்டன. பல பர்க்காணக்களில் சிவில் வழக்குகளை விசாரிக்க முன்சிப்-இ-முன்சிபான் என்ற ஒரு மேலதிகாரியும் இருந்தார். தலைநகரில் தலைமைக் காசியும், அரசாங்க சதரும் (Sadr) இருந்தனர். எல்லாருக்கும் மேலாகச் சக்கரவர்த்தி மற்றச் செய்திகளில் போல நீதித்துறையிலும் தலைமை வாய்ந்த அதிகாரியாகத் திகழ்ந்தார்.

ஷெர்ஷா பக்தியுள்ள முஸ்லிமாக இருந்தாலும் ஒரு முரட்டுச் சமயவெறியராக[1] இருக்கவில்லை. இந்துக்களை அவர் நடத்திய முறை பொதுவாகவே நியாயமானதும், பொறுக்கும் மனப்பான்மை பொருந்தியதாகவுமே இருந்தது. அரசாங்கத்தின் முக்கியமான உத்தியோகங்களில் இந்துக்களை அவர் அமர்த்தினார். அவருடைய மிகச்சிறந்த தளபதிகளுள் ஒருவரான பிரமஜித் கௌர் (Brahmajit Gaur) என்பவர் ஓர் இந்துவே. டாக்டர் கானுங்கோ (Dr. Qanungo) என்பவர் 'அவர் இந்து மதத்தின் மேல் கொண்டிருந்த கொள்கை அதை வேண்டா வெறுப்பாகப் பொறுத்துக் கொண்டதன்று; ஆனால், மதிப்புடன் மரியாதை செய்ததேயாகும்; நாட்டில் அக் கொள்கை தக்கவாறு அறிந்து போற்றப்பட்டது' என்று கூறியுள்ளார்.

[1] தற்கால ஆசிரியர் ஒருவர் கூறியிருப்பது போல ஷெர்ஷாவின் சமயக் கொள்கை 'குறுகியது' என்று கூறுவது பொருத்தமற்றது. பார்க்க: I. H. Q. டிசம்பர், 1936, பக்கம் 600.

வலிமையும் திறமையும் மிகப் படைத்த ஒரு படையை வைத்துக்கொள்ள வேண்டியதன் இன்றியமையாமையை ஷெர்ஷா உணர்ந்திருந்தார். அதனுல் பெரும்பாலும் அலாவுதீன் கில்ஜியின் படைமுறைக் கொள்கைகளைப் பின்பற்றித் தம் படையைச் சீரமைப்புச் செய்து ஒழுங்குமுறைக்குள்ளாக்கினுர். நிலப்படையினரின் பணிகளோ, சிற்றரசர்களிடமிருந்து பெற்ற படையின் பணிகளோ அவருடைய தேவைகளுக்குப் போது மானவையாகக் கருதப்படவில்லை. அதனுல் அவர் ஓர் ஒழுங்கான படையை வைத்துக்கொள்வதில் மிகுந்த அக்கறை எடுத்துக் கொண்டார். அப்படைவீரர்கள் எல்லாரும் தங்களுக்கு அடுத்த படி உயர்ந்த ஆணையிடும் அதிகாரிகளின்மூலம் அவருடன் பக்தி சிரத்தையோடு அல்லது கட்டுப்பாடு மிக்க ஈடுபாட்டுணர்வுடன் நேரடியாக மிகச் சிறந்த தொடர்பு கொண்டிருந்தனர். அவர் தம்முடைய நேரான ஆணையின்கீழ் 150,000 குதிரைப்படைகள், 25,000 காலாள் படைகள், 500 யானைப் படைகள், பீரங்கிகள் அடங்கிய ஒரு பெரிய படையை வைத்திருந்தார். கோட்டை களைப் பாதுகாக்கும் படைகள் இராச்சியத்தின் வெவ்வேறு யுத்த தந்திரத்தில் முக்கியமான இடங்களில் வைக்கப்பட்டிருந்தன. ஃபௌஜ் (Fauj) என்று வழங்கப்பட்ட அவ் வகைப் படை ஒவ் வொன்றும் தனித்தனியே ஃபௌஜ்தார் என்பவரின் ஆணையின் கீழ் இருந்தன. ஷெர்ஷா படையில் கண்டிப்பான ஒழுக்கக் கட்டுப் பாட்டை வலியுறுத்தினுர். படை வீரர்களுக்குள் ஊழல் எதுவும் ஏற்படாதவாறு எச்சரிக்கையுடன் போதிய முன்னேற்பாடுகளைச் செய்தார். படை வீரர்களைப் புதிதாகப் படையில் சேர்த்துக் கொள்வதை ஒழுங்காகக் கண்காணித்து வந்த அவர் தாமே அவர்களுடைய சம்பளத்தை நிர்ணயித்தார். வீரர்களைப் பற்றிய விவரங்கள் அடங்கிய பட்டியல்களைத் தம்மிடமே வைத்திருந்தார்; குதிரைகளுக்கு அடையாளமிடும் பழக்கத்தையும் மீண்டும் வழக்கத்திற்குக் கொண்டுவந்தார்.

மத்திய இந்திய வரலாற்றில் ஷெர்ஷா உண்மையில் ஒரு கவர்ச்சிமிக்க ஆளுமையுடையவராகவே காணப்படுகிருர். தம் தகுதிச் சிறப்பு, திறமை இவற்றை மட்டும் கொண்ட மிகு தாழ்மையான ஒரு நிலையிலிருந்து ஆப்கானிய மறுமலர்ச்சித் தலைவராகவும் இந்தியா உண்டாக்கிய மிகப் பெரிய அரசர்களுள் ஒருவராகவும் ஆனுர். அவருடைய 'படைத்துறைப் பண்பு' 'எச்சரிக்கையும் முன்னேற்ற ஆர்வமும் அரிதாய் இணைந்த ஓர் ஒருமைப் பாட்டினுலே' சிறப்புற்றிருந்தது. மொத்தத்தில் அவருடைய அரசியல் நடத்தை நேர்மையாகவும், இரக்கக் குணம் பொருந்தியதாகவுமே இருந்தது. அவருடைய மதக் கொள்கை

மத்திய காலத்தில் பரவியிருந்த மதவெறி பற்றப்படாமல் இருந்தது. கட்டடங் கட்டுவதில் அவருக்கு இருந்த சிறந்த சுவைத்திறம் அவர் சசாரமில் கட்டிய அருமையான மசூதியின் மூலம் நன்கு அறியப்படுகிறது. அவர் தம் இடைவிடா முயற்சியையும், உழைப்பையும் நாட்டுப் பணியில் செலவிட்டார். அவருடைய சீர்திருத்தங்கள் எல்லாம் மக்களின் நலன்களைக் காப்பதற்காகவே மிகவும் சிந்தித்துக் கொண்டுவரப்பட்டன. 'அக்பருக்கு முன்பு எந்த அரசரிடத்திலும் காணப்படாத சட்ட மன்றத்தினர்க்குரிய உணர்வும் தம் மக்களைக் காப்பாற்றும் பொறுப்புணர்ச்சியும் அவரிடம் இருந்தன என்று எர்ஸ்கின் கூறுகிறார். உண்மையில் இந்தியாவில் ஒரு தேசிய அரசாங்கத்தை நிர்மாணிப்பதற்கு வேண்டிய எல்லாப் பண்புகளும் அவரிடம் பொருந்தியிருந்தன. அவர் பல வழிகளிலும் பிற்காலத்தில் மிகச் சிறந்த அக்பர் ஆட்சி தோன்றுவதற்கு வழி வகைகள் வகுத்திருந்தார். ஐந்துஆண்டுகள்மட்டும் ஆட்சிசெய்த பிறகு அவர் தற்செயலாக இறந்து போகாதிருந்தால் அவ்வளவு விரைவில் முகலாயர்கள் தலைதூக்கிப் பழைய நிலையை எய்திருக்க முடியாது. ஸ்மித்(Smith) கூறுவதுபோல் ஷெர்ஷா உயிரோடு பிழைத்திருந்தால், 'மாபெரும் முகலாய அரசர்கள்' வரலாற்றின் மேடையில் தோன்றியிருக்கவே மாட்டார்கள். ஹுமாயூனைக் காட்டிலும் இந்திய சிம்மாசனத்தைப் பெறும் உரிமைத் தகுதிகள் அவருக்கே மிகுதியாக இருந்தன. மத்திய ஆசியாவிலிருந்து வந்த துணிகரச் செயல்வீரர் ஒருவரின் வெற்றிகளை வாரிசாகப் பெற்றிருந்த ஹுமாயூன் இந்தியாவில் தமது மரபினர்அரசாண்டுவருவதற்குப் படைபலத்தைத் தவிர வேறு எந்த நியாயமான வலிய காரணத்தையும் கண்டுபிடித்ததாகக் கூறமுடியாது. ஆனால், இந்தியாவின் எல்லைப்புறத்திலிருந்து வந்த ஷெர்ஷாவின் குடும்பம் மூன்று தலைமுறைகளாக இந்தியாவிலேயே வாழ்ந்துவந்தது. மேலும், அரசருக்கு வேண்டிய உயர்ந்த தகுதிகள் ஷெர்ஷாவிடமே மிகச் சிறந்த முறையில் காணப்பட்டன. பிரதேசங்களை வென்று பெற்ற வெறும் வெற்றிகளைக் காட்டிலும் பல அரிய சாதனைகளை அவர் செய்திருக்கிறார்.

## 4. ஷெர்ஷாவின் வழித்தோன்றல்கள்

ஷெர்ஷாவினால் நிர்மாணிக்கப்பட்ட ஆப்கானியப் பேரரசு அவருடைய இறப்புக்குப்பின்பு நீடித்து நிலைக்கவில்லை. அவருடைய வலிமையான ஆளுமையின் மறைவும், அவருக்குப் பின் ஆட்சிக்கு வந்தோரின் பலவீனமும்,ஆப்கானியப் பிரபுக்களிடையே மீண்டும்

மனக் கலக்கத்தையும் மனக் கோட்டத்தையும் ஏற்படுத்தின. அவர்கள் நாடு முழுவதிலும் அராஜகம் தலைவிரித்தாடும்படி செய்தனர். இவ்வாறு முகலாய ஆட்சி மீண்டும் தழைக்குமாறு வழி செய்தனர். ஷெர்ஷா இறந்தவுடன் அப்போது ரேவாவி லிருந்த (Rewah) அவருடைய இரண்டாவது மகனை ஜலால்கான் பொதுவாக ஸலீம்ஷா (Salim Shah) என்று வழங்கப்பட்ட சுல்தான், இஸ்லாம் ஷா என்ற பட்டப் பெயருடன் அரசராக்கப் பட்டார். ஸலீம் மிகு கடுமையான நடவடிக்கைகள் எடுத்துக் கொண்டு தம் சகோதரருக்கும் அவருடைய ஆதரவாளர்களுக்கும் தமக்கும் உள்ள சிக்கல்களைச் சமாளித்துத் தம் நிலையைப் பலப் படுத்திக் கொண்டார். படையின் திறமையை அவர் பாதுகாத்து வந்தார், தம் தந்தையின் அறிவுமிக்க சீர்திருத்தங்களுள் பெரும் பாலானவற்றை அப்படியே அவர்கடைப்பிடித்தார். 'அவருடைய உள்நாட்டு ஆட்சிமுறை மிகச் சிறந்ததாய் இருந்தது.' ஆனால், அவர் இளமையிலேயே 1554 நவம்பரில் இறந்துவிட்டார். அவர் இறந்ததும் விரைவில் குழப்பங்கள் நாட்டில் எழுந்தன. அவருடைய இளம் புதல்வரான ஃபிரேஸ் கான் (Firuz Khan) அவருடைய அத்தை கணவனை முபாரிஜ்கானுல் (Mubariz Khan) கொலை செய்யப்பட்டார். (முபாரிஜ்கான் ஷெர்ஷாவின் சகோதரன் நிஸாம் கான் சூரின் மகனும், ஃபிரோஸ்கானின் அம்மாவான பீபி பாயின் (Bibi Bai) சகோதரனும் ஆவார்). அவர் சிம்மா சனத்தைப் பறித்துக்கொண்டு முகம்மதுஆதில் ஷா என்று பெயர் சூட்டிக்கொண்டார். ஆதில் ஷா சோம்பலுள்ளவராயும், தகுதி யில்லாத அரசராயும் இருந்ததால், மேவாட் நாட்டைச் சேர்ந்த ரேவாரி என்ற நகரின் சாதாரண பேனியா(Benia)வாக இருந்து சொந்த முயற்சியால் முன்னேறி, சூர்ப் பேரரசின் தலைமை அமைச்சர் பதவி வரை உயர்ந்த ஹீமு (Himu) என்பவர் தந்திர மாகவும், திறமையுடனும் நாட்டின் காரியங்களை நிறுவகிக்க முயன்றார். ஆனால், அவருடைய தலைவரான ஆதில் ஷாவின் சந்தேகப் பண்பினுலும், அவர் செய்த பெருந் தவறுகளாலும் அவருடைய முயற்சிகள் எல்லாம் தோல்வியுற்றன. அதன் விளை வாக, சீர்குலைந்துகொண்டுவந்த ஆப்கானியப் பேரரசின் நலன் களும் பெரிதும் பாதிக்கப்பட்டன. ஆதில் ஷா அதற்குப் பின் விரைவிலேயே வங்காளத்தையும் மாளவத்தையும் இழந்தார். அவருடைய சொந்தக்காரர்களே அவருக்கு எதிராகக் கலகமும் கிளர்ச்சியும் விளைவித்தனர். சிம்மாசனத்துக்கு உரிமை கொண் டாடிய ஷெர்ஷாவின் இரு மருமக்களும் ஆதில் ஷாவிற்கு நாட்டை ஆளுவதற்குரிய அதிகாரமும் உரிமையும் கிடையாது என்று எதிர்த்துப் போரிட்டனர்.

## 5. முகலாயர்கள் மீண்டும் தழைத்தல்

இந்தக் குழப்பநிலை சற்றேறக்குறைய பதினைந்து ஆண்டுகளுக்குப் பிறகு ஹுமாயூன் தாம் இழந்துவிட்ட இராச்சியத்தை மீண்டும் பெறுவதற்கு முயற்சி செய்யத் தூண்டியது. அதுவரை அவர் பாதுகாப்பும், உதவியும் தேடித் தேடிப் பல இடங்களுக்கும் அலைந்துகொண்டிருந்தார். இந்தத் துன்பக் காலத்திலும்கூட மிகவும் அன்பில்லாதவர்களாய் நடந்துகொள்ளுமளவுக்கு ஹுமாயூனின் சகோதரர்கள் ஆப்கானியர்களுக்கு எதிராகத் தங்கள் பலத்தை ஒன்று திரட்டிக்கொண்டிருப்பதைப் பற்றியோ ஒன்றும் சொல்ல வேண்டியதில்லை. சிந்துவில் தமக்காக ஒரு தலைமை இடத்தைப் பெறுவதற்காக அவர் செய்த முயற்சிகளும் வீணாயின. ஏனெனில், சிந்துவின் கவர்னர் ஷா ஹுசேன் (Shah Husain) அவரிடம் பகைமை பாராட்டினார். மேலும், அவரைத் தொடர்ந்து வந்த வீரர்களுடன் நிலையாகத் தங்க விரும்பாத பல வீரர்கள் மிகுதியாகச் சேர்ந்திருந்தனர்; அதனால் வீரர்களுக்கு வேண்டிய இன்றியமையாத பொருள்களுக்குப் பஞ்சம் ஏற்பட்டது. சிந்துப் பாலைவனங்களில் அலைந்துகொண்டிருந்த சமயத்தில்தான் 1542ஆம் ஆண்டின் ஆரம்பத்தில் அவர் ஹமீதா பானு பேகம் (Hamida Banu Begam) என்பவளைத் திருமணம்செய்துகொண்டார். அவள் அவருடைய தம்பி ஹிந்தாலுக்கு ஆசிரியராயிருந்த ஷேய்க் அலி அம்பர் ஜெயினி (Shaikh Ali Ambar Jaini) என்பவரின் மகளாவாள். ராஜபுத்திர அரசர்கள் அவருக்குப் பாதுகாப்பு அளிக்க முன்வரவில்லை. பின்பு அவர் அமர்கோட்டுக்குச் (Amarkot) சென்றார். அதன் இந்துத் தலைவரான ராணா பிரசாத் (Rana Prasad) என்ற பெயருடையவர் தட்டா (Thatta), பக்கார் (Bhakkar) என்ற இடங்களை வெல்வதற்கு அவருக்கு உதவுவதாக வாக்களித்துப் பின் கடைசியில் ஏமாற்றிவிட்டார். இங்கேதான் அவருடைய மகன் அக்பர் 1542ஆம் ஆண்டு நவம்பர் 23ஆம் நாளில் பிறந்தார். ஹுமாயூனால் பக்காரையும் வெல்லமுடியவில்லை. தம் சகோதரரான கம்ரனிடம் புகலடையவும் முடியவில்லை. இவ்வாறு தூணிலிருந்து கம்பத்திற்குத் துரத்தப்பட்டவரைப் போல ஹுமாயூன் இந்தியாவை விட்டுப் போய் ஷா தஹ்மாஸ்ப் (Shah Tahmasp) என்பவரின் உதாரகுணத்துக்குச் சரணடைந்தார். பாரசீகத்தின் இளைய அரசரான அவர் 14,000 படை வீரர்களை அவருக்குக் கொடுத்து உதவினார். ஹுமாயூன் ஷியா மதக் கொள்கையைப் பின்பற்ற வேண்டுமென்றும், வெற்றி பெற்றால் காந்தகார்ப் பகுதியைத் தமக்குத் தந்துவிடவேண்டும் என்றும் அவர் ஹுமாயூனிடம் வாக்குறுதிகள் வாங்கிக்கொண்டார். இவ்வாறு முன்பு பாபரின் கிழக்கிந்தியப் படையெடுப்பின்

வெற்றிக்கு வழிகோலிய பாரசீகரின்உதவி இப்போதுஅவருடைய வழித்தோன்றலுக்குத் தமது இழந்த இராச்சியத்தைமீட்பதற்கும் கிடைத்தது. அப் படையுடன் ஹுமாயூன் காந்தகாரையும் காபூலையும் 1545-ல் கைப்பற்றினார். ஆனால், பாரசீகர்களுக்குக் காந்தகார் கொடுக்கப்படவில்லை. அதிலிருந்து அப் பிரதேசம் பாரசீகர்களுக்கும் முகலாயர்களுக்கும் அடிக்கடி சண்டை மூட்டும் வித்தாக இருந்துவரலாயிற்று. கம்ரன் கைதியாக்கப் பட்டுக் கண்பிடுங்கப்பட்டு மெக்காவுக்கு அனுப்பப்பட்டார். அவற்றிற்கெல்லாம் ஹுமாயூன் மிகவும் தயங்கிய பிறகே ஒப்புக் கொண்டார். கம்ரனின் பழைய நடத்தையைப் பார்க்கும்போது ஹுமாயூனிடமிருந்து அவர் எவ்விதச் சலுகையும் பெறு வதற்குச் சிறிதும் அருகதை உள்ளவர் அல்லர். அஸ்காரியும் மெக்காவுக்குப் பயணமானார். ஆனால், ஹிந்தால் என்பவரால் ஓர் இரவில் நடந்த தாக்குதலில் உயிர் இழந்தார்.

வடமேற்கே அன்பில்லாத தம் சகோதரர்களின் பகையை வென்ற பிறகு, 1554 நவம்பரில் ஹுமாயூன் இந்துஸ்தானத்தை மீண்டும் கைப்பற்றுவதற்காகப் படையுடன் சென்றார். சூர்களிடம் உள்நாட்டுச் சண்டைகள் ஏற்பட்டிருந்ததனால், ஹுமாயூன் எண்ணிய காரியம் வெற்றிபெறச் சிறந்த வாய்ப்புக் கிடைத்தது. 1555 பிப்ரவரியில் அவர் லாகூரைக் கைப்பற்றினார். ஆப்கானியர் களால் சக்ரவர்த்தியாக அறிவிக்கப்பட்டவரும், பஞ்சாபின் கலகக் கவர்னருமான சிக்கந்தர் சூரை சிர்ஹிண்ட் என்ற இடத்திற்கு அருகில் நடந்த போரில் தோற்கடித்தார். பிறகு, 1555ஆம் ஆண்டு ஜூலை மாதத்தில் ஹுமாயூன் டில்லியையும், ஆக்ரா வையும் கைப்பற்றினார். சிகந்தர் சிவாலிக் மலைகளுக்கு (Siwalik Hill) ஓடிவிட்டார். இவ்வாறு தம் சொந்த பலவீனத்தாலும் எதையும் சரியாகத் தீர்மானஞ் செய்ய முடியாத பண்பினாலும் இழந்துவிட்ட இராச்சியத்தின் ஒரு பகுதியை, நன்மை தரும் ஊழின் ஆற்றலால், ஹுமாயூன் மீட்டுக் கொள்வதில் வெற்றி காண முடிந்தது. ஆனால், நல்லூழ் கொடுத்த பெருந்துன்பங் களால் அவருடைய இயல்புப் பண்பில் பயன்மிக்க மாற்றம் ஏற்பட்டதா என்பதைக் காட்டுவதற்கு அவர் நீண்டநாள் உயிரோடிருக்கவில்லை. 1556ஆம் ஆண்டு ஜனவரி 24-ல் டில்லியில் உள்ள ஒரு நூலகத்தின் மாடிப் படியிலிருந்து தற்செய லாகக் கால் இடறி விழுந்ததன் விளைவாக உயிர் துறந்தார்.

அப்போது ஹுமாயூனின் பழைய தோழரான பைராம் (Bairam) என்பவரின் பாதுகாப்பில் பஞ்சாபில் வளர்ந்துவந்த இளம் வயதினரான அக்பர் 1556ஆம் ஆண்டு பிப்ரவரி 14ஆம் நாள்

அவருடைய பதின்மூன்றுவது வயதில் ஹுமாயூனுக்கு அடுத்த அரசராகப் பட்டம் சூட்டப்பெற்றார். ஆனால், இன்னும் இந்துஸ்தானத்தின்மீது முகலாயரின் மேலாண்மை சிறிதும் உறுதியாக நிறுவப்படவில்லை. ஸ்மித் (Smith) சொல்லுவதுபோல, 'அக்பர், தாம் உண்மையாகப் பாதுஷாவாக ஆவதற்கு முன்பு, சிம்மாசனத்தின் உரிமைக்காகப் போட்டியிடுபவர்களுள் தாமே மிகச் சிறந்த உரிமையுடையவர் என்று நிரூபிக்க வேண்டியவராயும், குறைந்த பட்சம் தம்தந்தையின் இழந்த இராச்சியத்தை மீண்டும் வெற்றி கொள்ள வேண்டியவராயும் இருந்தார்.' உண்மையில் இந்தியா 1556-ல் ஷேர்ஷாவின் பின்வழியினரின் முட்டாள்தனமான செயல்களாலும்,போர்களாலும் நாடு ஷேர்ஷாசெய்த சீர்த்திருத்தங்களின் நன்மைகளை அனுபவிக்க முடியாது போனதுடன், அதே சமயத்தில் மிகுபயங்கரமான பஞ்சத்தின் கொடுமைகளுக்கும் ஆளாக நேர்ந்தது. மேலும், இந்தியாவின் வெவ்வேறு பாகங்களிலிருந்த சுதந்திர இராச்சியங்கள் அதிகாரத்திற்காகப் போட்டியிட்டன. வடமேற்கே அக்பரின் மாற்றாந்தாயின் புதல்வரான மீர்ஸா மகமது ஹகீம் (Mirza Muhammad Hakim) காபூலைப் பெரும்பாலும் சுதந்திரமாகவே ஆண்டு வந்தார். வடக்கே காஷ்மீர் ஓர் உள்நாட்டு மகமதிய அரச வமிசத்தின் ஆளுகையின் கீழ் இருந்தது. ஹிமாலய நாடுகள்கூட எல்லாம் சுதந்திரமாக இருந்தன. ஷேர்ஷாவிற்குப் பிறகு, சிந்துவும் மூல்தானும் அரசரின் ஆணைக்கு அடங்காதவை ஆகிவிட்டன. ஒரிஸ்ஸா, மாளவம், குஜராத்து முதலியவையும் (தற்காலத்து மத்தியப் பிரதேசத்திலுள்ள) கோண்ட்வானாவின் (Gondwana) உள்நாட்டுத் தலைவர்களும் மேலதிகாரி எவருடைய கட்டுப்பாட்டுக்கும் அடங்காத தனியுரிமையுடைய நாடுகளாயும் அரசர்களாயும் ஆயினர். விந்தியமலைகளுக்குத் தெற்கே பரந்த விசய நகரப் பேரரசு இருந்தது. காந்தேஷ், பீரார், பீடார், அகமத் நகர், கோல்கொண்டாக்களின் முஸ்லிம் சுல்தானியங்கள் வடக்கத்திய அரசியலில் சிறிதும் அக்கறை எடுத்துக்கொள்ளவில்லை. மேற்குக் கடற்கரையில் போர்ச்சுகீசியர்கள் கோவா (Goa) டையூப் பகுதிகளை உரிமையாகப் பெற்றுத் தம்முடைய செல்வாக்கை நிலைநாட்டினர். ஹுமாயூன் இறப்பதற்கு முன்பு இந்துஸ்தானத்தில் ஒரு மிகச் சிறிய பகுதியைத்தான் மீட்க முடிந்தது. ஷேர்ஷாவின் இராச்சியத்தின் பெரும்பகுதி இன்னும் சூர்கள் வசமாகவே இருந்தது. அஹ்மத்யாத்கர் (Ahmad Yadgar) சொல்வது போல, 'ஆக்ராவிலிருந்து மாளவம்வரை பரவியிருந்த நாடும் ஜான்பூரைச் சார்ந்த பகுதிகளும் ஆதில் ஷாவின் அரச அதிகாரத்தைப் பெற்றிருந்தன. டில்லியிலிருந்து காபூலுக்குச் செல்லும் பாதையிலுள்ள சிறிய ரோஹ்தாஸ் வரையிலுள்ள

பகுதிகள் சிகந்தரின் கையில் இருந்தன. மலைகளின் எல்லைப் பகுதி களிலிருந்து குஜராத்தின் எல்லைப் பகுதிகள் வரை இப்ராஹீம் கானுக்குச் சொந்தமாயிருந்தன.' இந்துஸ்தானத்தின் தலைமையின் உரிமைகளைப் பொறுத்தவரை அவற்றிற்கு அக்பர், ஷெர்ஷாவின் பிரதிநிதிகள் இவர்களுள் யாரைத் தேர்ந்தெடுப்பது என்பது முடிவு செய்ய இயலாததாகவே இருந்தது. ஸ்மித் கூறியதைப் போல, 'அவ் வுரிமைகள் வாள் பலத்தினால் மட்டுமே தீர்மானிக்கப் பட வேண்டியவையாயிருந்தன.' இவ்வாறு அக்பரின் பரம்பரை உரிமை ஆபத்தான இயல்பினதாக இருந்தது. ஒரு பேரரசை நிர்மாணிக்கும் அவருடைய வேலை உண்மையில் மிகப் பெரிய தொன்றாகவே இருந்தது.

அக்பர் பட்டத்திற்கு வந்தவுடனே ஆதில்ஷா சூரின் திறமை வாய்ந்த தளபதியும் அமைச்சருமான ஹீமூ முகலாயர்களை எதிர்க்க முன்வந்தார். அவர் முதலில் டில்லியின் முகலாய கவர்னரான தார்தி பேக் (Tardi Beg) என்பவரைத் தோற்கடித்து ஆக்ராவை யும் டில்லியையும் கைப்பற்றினார். டில்லியைக் காப்பாற்றத் தவறி யதற்காகத் தார்திபேக் பைராமின் ஆணைப்படி கொல்லப்பட் டார். ராஜா விக்ரம்ஜித் (Raja Vikramjit) அல்லது விக்ரமாதித் தியன் (Vikramaditya) என்ற பட்டப் பெயரைச் சூட்டிக்கொண்டு ஹீமூ 1,500 போர் யானைகளும் அடங்கிய ஒரு பெரிய படையுடன் வரலாற்றுச் சிறப்பு வாய்ந்த பானிப்பட்டுப் போர்க்களத்தில் அக்பரையும் பைராமையும் எதிர்த்தார். முகலாயப் படையின் இரு தரப்புகளையும் எதிர்த்து முதலில் சிறு வெற்றிகளை அடைந்து வந்தார். ஆனால், தற்செயலாக அவர் கண்ணில் பாய்ந்த ஓர் அம்பினால் விதியின்போக்கு வேறு விதமாகக் காணப்பட்டது. அவர் தம்முணர்வு இழந்தார். அவருடைய படைவீரர்கள் தங்கள் தலைவரை இழந்ததால் குழப்பத்துடன் கலைந்து ஓடினர். ஆதர வற்ற நிலையில் அக்பர் தம் கையாலேயே அவரைக் கொல்ல மறுத்ததால், பைராம் கொன்றார் என்று சிலரும் அக்பர் தம்முடைய பாதுகாப்பாளரின் உத்தரவின் பேரில் அவரை கொன்றார் என்று சிலரும் கூறுகின்றனர்.

இரண்டாவது பானிப்பட்டுப் போரின் விளைவு திசை திருப்புவ தாயிருந்தது. இந்தியாவில் மேலாண்மைக்காக ஆப்கானியர் களும் முகலாயர்களும் போட்ட போட்டிக்கு ஒரு முற்றுப்புள்ளி வைத்து, முகலாயர்களுக்கு ஆதரவாகப் பானிப்பட்டுப்போர் தீர்ப்புக் கூறிவிட்டது. வெற்றியாளர்கள் விரைவில் டில்லியையும் ஆக்ராவையும் தம் வசப்படுத்திக்கொண்டனர். கி.பி. 1557ஆம் ஆண்டு மே மாதத்தில் சிகந்தர்சூர் அவர்களிடம் சரணடைந்தார்.

அவருக்குக் கிழக்குப் பிரதேசத்தில் ஒருசிறுபகுதி அளிக்கப்பட்டது. ஆனல், விரைவிலேயே அக்பரால் அவர் அங்கிருந்து துரத்தப் பட்டார். அதன் பிறகு வங்காளத்தில் நாடோடியாக (கி.பி. 1558—1559-ல்) இருந்தார். வங்காளக் கவர்னரை மோங்கிர் (Monghyr) என்ற இடத்தில் எதிர்த்துச் சண்டையிட்டு (1556-ல்) முகம்மது ஆதில் இறந்தார். இப்ராஹீம் சூர் நாடோடியாகப் பல இடங்களிலும் அலைந்து திரிந்து ஒரிஸ்ஸாவில் புகலிடம் பெற்ருர். அங்கே பத்தாண்டுகளுக்குப் பிறகு (கி.பி. 1567—1568) கொல்லப் பட்டார். இவ்வாறு இந்துஸ்தானத்தின் மேலாண்மைக்காக அக்பரின் உரிமைகளை எதிர்த்துப் போட்டியிடுவார் சூர் அரசமர பில் ஒருவரும் இலராயினர். பிற்காலத்தில் பதினாறும் பதினேழாம் நூற்றுண்டுகளில் முகலாய-ஆப்கானியர்களுக்கு எதிராக எழுந்த கிளர்ச்சிகள் எல்லாம் ஆங்காங்கே சிற்சில இடங்களில் சிறு சிறு கிளர்ச்சிகளாய் இருந்தமையின், முகலாயப் பேரரச அதிகாரத் திற்கு அவை ஒன்றும் பெரிய இடர்ப்பாடாய் இருக்கவில்லை.

# 2. மாண்பு மிக்க அக்பர்

## 1. பிரதிநிதி ஆட்சியின் முடிவு

இரண்டாவது பானிப்பட்டுப் போர்தான் முகலாயர் பேரரசு இந்தியாவில் உண்மையாகத் தொடங்கப்பட்டதைக் குறிக்கிறது. அப் பேரரசு விரிந்து பரவுமாறு ஊக்கியதும் அப் போரேயாகும். 1558-லிருந்து1560-க்குள் குவாலியர், ஆஜ்மீர், ஜான்பூர் ஆகியவை அப் பேரரசுடன் இணைக்கப்பட்டன. ஆனால், அக்பர் தம் பாது காவலரும் காப்பாளருமான பைராம்கானின் கண்காணிப்பு வலையிலிருந்து வந்ததால் இன்னும் உரிமையுடன் ஒன்றும் செய்ய முடியவில்லை. அக் காப்பாளர் முகலாயர்களுக்கு அரிய சேவை களைச் செய்தார். எனினும், அவர் தம் அதிகாரத்தை வரன்முறை யின்றித் தம் விருப்பம்போல் பயன்படுத்திவந்தார். அதனால் இக் காலத்திற்குள்ளாகவே தமக்குப் பல எதிரிகளையும் தேடிக் கொண்டார். 'கடைசியில் பைராமின் நடவடிக்கைகள் எல்லாம் சிறிதும் பொறுத்துக்கொள்ள முடியாத அளவுக்குச் சென்று விட்டன' என்று அபுல்பாஸல் எழுதுகிறார். அக்பருக்கும் தாம் பெயரளவில் மட்டும் அல்லாமல் உண்மையான அரசராயிருக்க வேண்டுமென்ற எண்ணம் தோன்றலாயிற்று. அக்பருடைய அன்னை ஹமீதாபானு பேகமும், மாற்றாந்தாய் மாஹம்அனகாவும்(Maham Anaka)அவளுடைய மகன் ஆதம்கானும்(Adam Khan) அப் பிரதி நிதியை ஒழித்துவிடவேண்டும் என்று வற்புறுத்தினர். 1560-ல் அக்பர் சக்ரவர்த்தி இராச்சிய பாரத்தை இனித் தம் தோளிலேயே தாங்கிக்கொள்ள விரும்புவதாகத் தமது முடிவை பைராம் கானுக்கு முன்பு தெரிவித்தார். அவரை வேலையினின்று நீக்கப் போவதையும் தெரிவித்தார். காப்பாளர் இப்போது பற்றுவிட்ட வரைப் போலத் தம் தலைவருடைய தீர்மானத்திற்குப் பணிந்தார். மெக்காவுக்குப் (Mecca) போய்விடுவதாகவும் ஒப்புக்கொண்டார். ஆனால், அக்பர் பைராமின் சொந்த எதிரியும் முன்னால் கீழதிகாரியு மாயிருந்த பீர் முகம்மதை (Pir Muhammad) உடன் அனுப்பித் தம் பாதுகாவலாய்ப் பேரரசின் எல்லையை விட்டுஅப்பால் செல்லு மாறு பார்த்துக்கொள்வதாக ஏற்பாடு செய்தபோது அல்லது பதௌனி (Badauni) சொல்வது போல, 'அவரை எவ்வளவு விரைவில் மெக்காவுக்கு மூட்டை முடிச்சுடன் அனுப்பமுடியுமோ அவ்வளவு விரைவில் அனுப்பிவிட' ஏற்பாடு செய்தபோது,

காப்பாளர் அதை இழிவாகக் கருதிக் கலகம் செய்தார். ஜலந்த ருக்கு அருகில் அவர் தோற்கடிக்கப்பட்டார். ஆனால், அவருடைய பழங்காலச் சேவைகளைக் கருத்தில்வைத்துஅக்பர்அவரைத்தாரள மனப்பான்மையுடன் நடத்துமளவிற்கு அறிவு வாய்ந்தவராய் இருந்தார். 1561 ஜனவரியில், பைராம் மெக்காவுக்குப் போகும் வழியில் லோஹானி ஆப்கானியன் ஒருவனால் குத்திக் கொல்லப் பட்டார். முன்பு ஒரு சமயம் பைராமின் ஆணையின்கீழ் முகலாயப் படைகள் அந்த ஆப்கானியனின் தந்தையைக் கொன்றுவிட்டன. பைராம் தம்முடன் கொண்டுபோயிருந்த பொருள்களை எல்லாம் ஆப்கானியர்கள் கொள்ளையடித்துக் கொண்டாலும், அவருடைய குடும்பம் அவமதிப்புக்கு ஆளாகாது தப்பியது. அவருடைய மகன் அப்துர் ரஹீம் (Abdur Rahim)என்பவர் அக்பரின் பாதுகாப்பைப் பெற்றார். பிற்காலத்தில் அவர் பேரரசின் முக்கியமான பிரபுக் களுள் ஒருவராகச் சிறப்புற்றார்.

பைராம் வீழ்ச்சியுற்றும், அக்பர் உடனே இராச்சிய பாரம் முழுவதையும் தம் தோள்களில் ஏற்றுக்கொள்ள முடியவில்லை. ஏனெனில், அதற்கு மேலும் இரண்டு ஆண்டுகள் (கி.பி. 1560—1562) அவருடைய மாற்றாந்தாயான மாஹம் அனகாவும் அவளுடைய மகன் ஆதம்கானும், அவர்களுடைய உறவினர்களும் இராச்சியத்தில் தங்கள் செல்வாக்கை அளவுக்குமீறிப் பயன்படுத்தி வந்தனர். (1561-ல்) ஆதம்கானும் பீர்மகமதுவும் பதௌனியால் நிரல்பட விளக்கப்பட்ட முறைகளில், மாளவத்தை வென்றனர். அவர்கள் செய்த கொடுமைகளை எல்லாம் பதௌனி நேரில் கண்டறிந்தவர். ஆனால், அவர்கள் தண்டிக்கப்படாமலேயே இருந்தனர். கடைசியில் அவர்களுடைய அதிகாரச் செல் வாக்கைப் பொறுத்துக்கொண்டிருக்க முடியாமல் அக்பர் ஆதம்கான் சாகும்படி செய்தார். ஆதம்கானின் அன்னை துயரம் தாங்காது நாற்பது நாள் கழித்து இறந்தாள். இவ்வாறு 1562 மே மாத அளவில் அக்பர் அந்தப்புர அதிகாரத்தினின்று விடுதலை பெற்றார்.

## 2. வெற்றிகளும் புதிய சேர்க்கைகளும்

இயல்பிலேயே ஒரு வலிமை வாய்ந்த பேரரசரான அக்பர் 1601 ஜனவரியில் அசீர்காரைப் (Asirgarh) பிடிக்கும்வரை நாட்டை விரிவுபடுத்துவதற்குப் படையெடுத்துச் செல்லும் கொள்கையை மேற்கொண்டிருந்தார். ஆனால், அதைத் தொடர்ந்து செயலாற்றாதவாறு எதிர்பாராத அவர் சக்திக்கு அப்பாற்பட்ட சூழ்நிலைகள் தடுத்தன. 'ஒரு பேரரசர் எப்போதும் வெற்றிபெறுவதிலேயே கண்ணாயிருக்கவேண்டும்; இல்லாவிட்டால்

பக்கத்து நாட்டரசர்கள் தமக்கு எதிராகப் படையுடன் எழுவர்' என்று அவர் கருதிக்கொண்டிருந்தார். உண்மையில் அக்பர் நாற்பதாண்டுகளாக அடிக்கடி புதிய இராச்சியங்களைத் தம் பேரரசுடன் சேர்த்துக்கொண்டுவந்து, பெரும்பாலும் வட, மத்திய இந்தியா முழுவதிலும் அரசியல் ஒருமைப்பாடு ஏற்படுமாறு செய்துவிட்டார். 1561-ல் ஆதம்கானாலும், பீர்மகமதாலும் மாளவம் எப்படி வெல்லப்பட்டது என்பதை ஏற்கெனவே நாம் கண்டோம். ஆனால், அரசர் பாஸ்பஹாதூர் விரைவிலேயே அதை மீண்டும் பெற்றார். சில ஆண்டுகள்வரை முகலாயர்களுக்கு அடி பணியாமல் இருந்தார். 1564-ல் அக்பர் இப்போதுள்ள மத்தியப் பிரதேசத்தின் வடக்கு மாவட்டங்களை ஏறக்குறைய உள்ளடக்கிய (கோண்ட்வானாவில் உள்ள)கரஹ் கடங்கா (Garah Katanga) இராச்சியத்தை வென்றுவருமாறு, காரா(Kara) கிழக்கு மாகாணங்கள் இவற்றின் கவர்னரான ஆசஃப்கானை அனுப்பினார். அப் பகுதியை ஆண்டுவந்த அரசர் பீர் நாராயண் (Bir Narayan) என்பவர் மிகவும் இளவயதினர். ஆனால், அவருடைய அன்னை துர்க்காவதியால் அது மிகு சிறப்புடன் ஆளப்பட்டுவந்தது. துர்க்காவதி பேரழகுடையவளாயிருந்ததுடன் வீரம்மிக்க ஆரணங்காகவும் விளங்கினாள். அவள் பேரரசாட்சியாளர்களை மிக்க வீரத்துடன் எதிர்த்தாள். ஆனால், இப்போது ஜப்பல்பூர் (Jabbalpur) மாவட்டத்தில் உள்ள, கரஹ்வுக்கும் மண்டலாவுக்கும் இடையே உள்ள ஓரிடத்தில் அவர்களுடன் செய்த போரில் தோல்வியுற்றாள். உண்மையான ராஜபுத்திரர்களுக்குரிய உணர்ச்சிப்படியே அவமானம் அடைவதிலும் சாவே விரும்பத்தக்கது என்று எண்ணினாள்; தற்கொலை செய்துகொண்டாள். இவ்வாறு 'அவளுடைய வாழ்க்கை எவ்வளவு பயனுடையதாக இருந்ததோ அவ்வளவு சீர்மையுற்றதாகவும், தியாகமுடையதாகவும் அவளுடைய முடிவு இருந்தது. இளம் ஆட்சியாளரான பீர் நாராயண் தம் எதிரிகளை எதிர்த்துத் தீரத்துடன் போர்புரிந்தார்; படையெடுப்பாளர்கள் பெருங்கொள்ளைப் பொருள் பெற்றனர்; சிறிது காலம் அந்த இராச்சியத்தை ஆசஃப்கான் ஆண்டார். பிறகு பழைய ஆட்சிவமிசக் குடும்பத்தின் பிரதிநிதி ஒருவருக்கு அது கொடுக்கப்பட்டது. ஆனால், முகலாயர்களால் அவருடைய இராச்சியத்தின் அந்தப் பகுதியை அவர் இழந்துவிடும்படி நேர்ந்தது. அப் பகுதி இப்போது போபால் (Bhopal) இராச்சியத்தின் பகுதியாக இருக்கிறது.'

நாம் ஏற்கெனவே கண்டதைப்போல், கானுவாப் போர்(1527) வடக்கில் ராஜபுத்திரர்கள் அடியோடு மறைந்துவிடும்படி செய்து விடவில்லை. இந்திய வரலாற்றில் ராஜபுதனம் அச் சமயத்திலும்

வலிமை வாய்ந்த ஒரு சக்தியாகவே இருந்தது. இந்திய மண்ணின் மக்களான்' ஆப்கானியர்களிடமிருந்து பறித்துக் கொண்ட அன்னியவமிசத்தவரான அக்பர், தம்பேரரசை இந்தியாவில் நிறுவு வதற்கேற்ற பண்புகளான நாட்டு நலங்கருதும் அரசியல்வாதி யின் உண்மையான உள்ளார்ந்த உணர்வும், தெளிந்த அறிவும், தாராள நோக்கமும் உடையவராக இருந்தார். அவர் ராஜ புத்திரர்களுடைய கூட்டுறவின் மதிப்பை உணர்ந்தார். இவ்வாறு அவர் தம்மால் முடிந்தவரை ராஜபுத்திரர்களைச் சமாதானப் படுத்த முயன்றார். பெரும்பாலும் தம்முடைய எல்லா நட வடிக்கைகளிலும் அவர்களுடைய கூட்டுறவைப் பெறவும் அதை நிலைநிற்கச் செய்யவும் முயன்றார். அவருடைய அறிவுமிக்க, தாராள மனப்பான்மை கொண்ட கொள்கையால் ராஜபுத்திரர் களில் பெரும்பான்மையோரின் உள்ளத்தைக் கொள்ளைகொண்டு விட்டார். அவர்கள் அவருடைய பேரரசுக்கு மிகச் சிறந்த பணி களைச் செய்ததுடன் அதற்காகத் தங்கள் இரத்தத்தைச் சிந்து மளவுக்கு அக்பரிடம் ஈடுபாடு கொண்டு அன்பு காட்டினர். உண்மையில் அக்பரின் பேரரசு முகலாயரின் வீரம், போரியல் சூழ்ச்சிகளுடன் ராஜபுத்திரர்களின் வீரமும் கொண்டு இணைந்த கூட்டுறவின் விளைவாகவே திகழ்ந்தது. 1562-ல் ஆம்பெர் (ஜெய்ப் பூர்) நாட்டையாண்ட ராஜா பிஹாரிமால் அக்பரைச் சரண டைந்ததுடன், திருமணத் தொடர்புமூலம் அவருடைய நட்பை உறுதியாக்கிக்கொண்டார். பிஹாரிமால் தம்முடைய மகன் பகவான் தாசுடனும் (Bhagwan Das), பேரன் மான்சிங்குடனும் ஆக்ராவுக்குச் சென்றார். அவர் 5,000 படை வீரர்களுக்குத் தலைவ ராக நியமிக்கப்பட்டார். அவருடைய மகனும் பேரனும்கூடப் படையில் உயர்ந்த நிலையில் சேர்த்துக்கொள்ளப்பட்டனர். இவ்வாறு முகலாய பேரரசர்கள் நான்கு நூற்றாண்டுகள் 'மத்திய இந்தியா பெற்றெடுத்த மிகப் பெரிய தளபதிகள், அரசியல் நுணுக்கம் வல்லார்களுள் சிலரின் பணிகளைப் பெறுவதற்கு வழி திறக்கப்பட்டது.'

ஆனால், ராஜபுத்திர உணர்ச்சி மிகச் சிறந்து விளங்கியதும், செங்குத்தான மலைகளும், பலம் வாய்ந்த கோட்டைகளும் கொண்டு மிகச் சிறந்த தற்காப்பு வசதிகளைப் பெற்றிருந்ததும், வட இந்தியாவில் மேலாண்மை அதிகாரத்திற்காகப் பாபருடன் சண்டையிட்டதுமான மேவார் மட்டும் முகலாய பேரரசுக்கு அடிபணிந்து தலைவணங்கவில்லை. மாளவத்தின் நாடோடி ஆட்சி யாளரான பாஸ் பஹதூருக்குப் பாதுகாப்பளித்ததன் மூலம் பேரரசரின் கோபத்துக்கும் ஆளாகியது. இந்தியா முழுதையும் ஓரே பேரரசாகக் காணவேண்டும் என்ற குறிக்கோளை மனத்துள்

போற்றி வந்த அக்பருக்கு மேவார்கள் சுதந்திரம் எரிச்சலையே மூட்டியது. மேவாரின் வழியே கங்கை, யமுனை தோவாப்புக்கும் மேற்குக் கரைக்கும் இடையே வாணிகப் பெருஞ்சாலைகள் அமைந்து கிடந்தமையின் பொருளாதார நலன்களுக்காகவும் மேவாரை அவர் தம் ஆளுகையின்கீழ் அடக்கி வைக்கவேண்டிய நெருக்கடி உண்டாயிற்று. ராணு சங்காவின் மரணத்திற்குப் பிறகு, அந்தச் சிறந்த பெருமகனுரின் தகுதியற்ற மகனுன உதய சிங்கின் (Udai Singh) பலவீனத்தால் மேவாரில் ஏற்பட்டிருந்த உள்நாட்டுப் பகைமை அக்பரின் பேராசைத் திட்டம் எளிதில் நிறைவேறத் துணை செய்தது. 'மேவாரின் சரித்திர ஏடுகளில் அதன் அரசர்களின் பட்டியலில் உதய சிங்கின் பெயர் என்றும் குறிப்பிடாமல் இருந் திருந்தால் மேவாருக்கு நல்லாதாயிருந்திருக்கும்' என்றுடாட் (Tod) கூறுகிருர். 1567 அக்டோபரில் சித்தூர்க் கோட்டையை அக்பர் முற்றுகையிட்டபோது உதயசிங்கு அக் கோட்டையை அதன் தலைவிதிக்கே விட்டுவிட்டு மலைகளின் பக்கம் ஓடி ஒளிந்து கொண்டார். ஆனுல், ராணுவின் அடியொற்றி வாழ்ந்தோருள் சில வீரர்கள் இருந்தனர். குறிப்பாக ஜெய்மால் (Jaimall) பட்டா (Patta) என்போர் பேரரசினரை எதிர்த்து நான்கு மாதங்கள் (1567 அக்டோபர் 20ஆம் நாள் முதல் 1568 பிப்ரவரி 23ஆம் நாள் வரை) விடாப்பிடியாகவும் வன்மையாகவும் எதிர்த்து வந்தனர், கடைசியில் ஜெய்மால் அக்பராலேயே சுடப்பட்ட கைத்துப்பாக்கிக்குண்டு ஒன்றினுல் அடிபட்டு உயிர் துறந்தார். பின்பு பட்டாவும் (Patta) போரில் இறந்து வீழ்ந்தார். தங்கள் தலைவர்களின் சாவைக் கண்டு மனம் மறுகிக் கோட்டையைக் காத்துக்கொண்டிருந்த வீரர்கள் கைகளில் வாள் தாங்கி எதிரி களின்மேல் பாய்ந்தனர். ஒரு வீரர்கூட இல்லாமல் இறக்கும் வரை வீரத்துடன் போரிட்டனர். ராஜபுத்திரப் பெண்மணிகள் ஜௌஹர் (Jauhar) என்ற சடங்கினைச் செய்தனர். பிறகு அக்பர் சித்தூர்க் கோட்டையைத் தகர்த்தெறிந்தார். அபுல் பாஸல் கருத்துப்படி 30,000 ஆள்கள் கொல்லப்பட்டனர். ஆனுல் இந்த எண்ணிக்கை மிகவும் மிகைப்பட்டது போலவே தோன்று கிறது. அக்பரின் கோபம் டாட் 'அரச சின்னங்கள்' என்று வழங்குபவற்றின்மீதும் பாய்ந்தது. அதனுல் அவர் மாபெரும் அளவினதாகிய வீர முரசத்தை அகற்றினுர். (அவ் வீரமுரசம் எட்டு அல்லது பத்து அடி விட்டமுடையது. சித்தூர்க் கோட்டை யில் அரசர்கள் நுழையும்போதும் கோட்டையிலிருந்து வெளி வரும்போதும் அடிக்கப்பட்ட அம் முரசத்தின் ஒலி பல மைல் சுற்றளவுக்கும் கேட்டது). மேலும், அவர் சித்தூர்ப் பெரும் மாதாவின் கோயிலிலிருந்து மிகப் பெரிய தொங்கும் விளக்கை ஆக்ராவுக்கு எடுத்துச் சென்றுவிட்டார்.

சித்தூரின் வீழ்ச்சியைக் கண்டு பேரதிர்ச்சியுற்ற, நீண்ட காலமாக அக்பரை எதிர்த்து வந்த மற்ற இராஜபுத்திரத் தலைவர்கள் அவருக்கு அடிபணிந்தனர், 1569 பிப்ரவரியில் ராந்தாம்போரின் தலைவர் இராய் சுர்ஜன ஹரன் (Rai Surjana Hara) என்பவர் தம் கோட்டையின் சாவிகளை அக்பரிடம் சமர்ப்பித்துப் பின் பேரரசின் ஊழியருள் ஒருவரானார். பந்தல்கண்டில் இருந்த காலிஞ்சாரின் தலைவர் ராஜாராம்சந்த் (Raja Ramchand) அதே ஆண்டில் தம் கோட்டையை அக்பரிடம் விட்டுவிட்டார். காலிஞ்சார்க் கோட்டையை வசமாக்கியது அக்பரின் படை வன்மையைப் பெருக்கியது. முகலாயர் பேரரசின் வளர்ச்சியில் அந் நிகழ்ச்சி ஒரு முக்கியமான இடத்தைப் பெற்றுள்ளது. 1570-ல் பிக்கானெர் (Bikaner) ஜெய்சால்மெர் ஆட்சியாளர்கள் முகலாய பேரரசருக்கு அடிப்பணிந்ததுமன்றி, அவருக்குத் தம் மகள்களையும் திருமணம் செய்து கொடுத்தனர்.

இவ்வாறு ஒருவர் பின் ஒருவராக ராஜபுத்திரத் தலைவர்கள் முகலாய ஆட்சியை ஒப்புக்கொண்டனர். ஆனால், மேவார் மட்டும் இன்னும் ஏற்றுக்கொள்ள மறுத்தது. உதயசிங்கு தம் மூதாதையரின் தலைநகரை இழந்துவிட்டபோதிலும் சுதந்திரமாகவே இருந்தார், உதயப்பூரின் வடமேற்கே பத்தொன்பது மைல் அளவில் அமைந்திருந்த கோகுண்டா (Gogunda) என்ற இடத்தில் 1572ஆம் ஆண்டு மார்ச்சு 3ஆம் நாள் இறந்த பிறகு அவருடைய மகனை பிரதாப்பை மேவார் உண்மையான ஒரு தேசபக்தராகவும் தலைவராகவும் பெற்றது. எல்லா வகையிலும் தம் நாட்டின் மரபுகளை விசுவாசத்துடன் கடைப்பிடிப்பவராயிருந்த பிரதாப் படையெடுப்பாளர்களுக்கு ஈடுகட்ட முடியாத எதிர்ப்புகளை அளித்தார். தலைநகர்கூட இல்லாமல், சிறு பொருள்வளங்கள் மட்டும் உடையவராய், அப்போது ‘உலகத்திலேயே அளவிட முடியாத பெருஞ்செல்வமுடைய சக்கரவர்த்தி’யான முகலாய பேரரசரின் ஒழுங்குமுறைக்குட்பட்ட படைபலத்தைப் பிரதாப் எதிர்க்கவேண்டியிருந்தது என்றால் அவருடைய வேலையின் பெருமை எளிதில் உணரப்படும். மேலும், அவருடைய தோழர்களான பிற தலைவர்களும், அண்டை நாடுகளில் இருந்தோரும் அவருடைய உடன்பிறந்த சகோதரர்கூட ராஜபுத்திரர்களுக்குரிய உயர் குறிக்கோள்களான வீரமும் சுதந்திரமும் இல்லாமல் முகலாயர்களுடன் சேர்ந்துகொண்டிருந்தனர். ஆனால், ராஜபுதனத்தின் தேசிய வீரரான இவருக்கு எந்தத்தடையும் அச்சத்தை விளைவிப்பதாக இருக்கவில்லை. அவருடைய சொந்தக்காரர்களைக் காட்டிலும் அவர் மிகு தூய்மையான குணங்களுடன் படைக்கப் பட்டிருந்தார். ‘வரப்போகும் துன்பத்தின் அளவு மிகுதி’

பிரதாப்பின் வீரத் துணிவை வன்மையாக்கியது. கவிஞரின் சொற்களில் கூறவேண்டுமானுல் அவர் 'என்னுடைய அன்னை அளித்த பாலின் பெருமையைப் பிரகாசிக்கச் செய்வேன்' என்று சபதம் செய்தார். அவ் வஞ்சினத்தை அவர் மிகச் சிறந்த முறையில் நிறைவேற்றினுர். 'அவருடைய எல்லையில் நிச்சயமாக வரவிருந்த பேரரசின் படையெடுப்பு 1576 ஏப்ரலில் ஆம்பெர் நாட்டின் மான்சிங்கு, ஆஸப்கான் ஆகிய இருவரின் தலைமையில் திரண்டு வந்த ஒரு பெரும்படையுடன் மேற்கொள்ளப்பட்டது. கோகுண்டாவுக்கு அருகிலுள்ள ஹல்திகாட்(Haldighat)கணவாயில் ஒரு கொடிய போர் நடைபெற்றது. பிரதாப் தோற்கடிக்கப் பட்டார்.' ஜாலா (Jhala) நாட்டுத் தலைவரின் சுயநலமற்ற தொண்டினுல் அவர் தம் உயிருடன் தப்பினுர். அத் தலைவர் தாமே ராணு என்று விளம்பரப்படுத்திக்கொண்டு பேரரசின் வீரர்களைத் தம் பக்கம் இழுத்துக்கொண்டார். தமக்கு மிகவும் பிரியமான செய்தக் (Chaitak) என்ற குதிரையின்மீது ஏறிக்கொண்டு ராணு மலைகளுக்குச் சென்ருர். அவருடைய கோட்டைகள் எல்லாம் ஒன்றன்பின் ஒன்ருகப் பகைவர்களால் பிடிக்கப்பட்டன. ஆனுல், நேரடியாகப் பெருந்துன்பம் வந்து தாக்கியபோதிலும் பிரதாப் தாம் அடிபணியவேண்டும் என்று மனத்தாலும் நினைக்கவில்லை. இணக்கத்திற்கு வராத எதிரியால் குன்றுக்குக் குன்று வேட்டையாடப்பட்டபோதிலும், தம்முடைய குடும்பத்தை மலைகளில் கிடைக்கும் கனி வகைகளைக் கொண்டே உண்பித்துவந்தபோதிலும் அசைக்க முடியாத ஊக்க உணர்ச்சியுடனும், சக்தியுடனும் அவர் போரைத்தொடர்ந்து நடத்தினுர். '1597 ஜனவரி 19ஆம் நாள் தம் ஐம்பத்தேழாம் வயதில் அவர் இறப்பதற்கு முன்பு இழந்துவிட்டிருந்த பல பகுதிகளை மீட்டதிருப்தியை அடைந்திருந்தார். கடைசி நிமிடத்தில்கூட அந்த ராஜபுத்திர தேசபக்தர் தம் தாய்நாட்டைப்பற்றிய கவலையாகவே இருந்தார். ஏனெனில், அவருக்குத் தம் மகன்மீது நம்பிக்கை இல்லை. கடைசி மூச்சு விடுமுன்பு அவர்தமக்குக் கீழிருந்த தலைவர்களிடமிருந்து, 'நாட்டைத் துருக்கியர்களுக்கு விட்டுவிடக் கூடாது' என்ற வாக்குறுதியை வற்புறுத்தி வாங்கிக்கொண்டார். 'இவ்வாறு இன்றுகூட ஒவ்வொரு சிசோதியா(Sisodia)வாலும் தெய்வமாக வணங்கப்படும் ஒரு இராஜபுத்திர வீரரின் வாழ்க்கை முடிவடைந்தது' என்று டாட் எழுதுகிருர். 'மேவார் தன்னுடைய தூசிடைடிஸ்ஸையோ(Thucydydes) அல்லது செனபன்னையோ (Xenophon) பெற்றிருந்தால், மேவாரில் பல மாறுதல்கள் ஏற்பட்டுக் கொண்டிருந்தாலும், மிகச் சிறந்த ஆட்சி நடந்து வந்தது என்பதைக் காட்டிலும், வரலாற்றுக் கவிஞருக்குப் பெலோபோன்னீசஸ்ஸின் (Peloponnesus) போரோ, 'பத்தர்

யிரத்தின்' பின்வாங்கலோ மிகுதியான வெவ்வேறான நிகழ்ச்சிகளை விளைவித்திருக்கா. அசைக்க முடியாத வீரத்திறம், தடுமாற்றம் அடையாத தைரியம், 'மானத்தை மங்காமல் காக்கவேண்டும் என்பதில் கொண்டிருந்த உண்மையான ஆர்வம், எந்த நாடும் இப்படித் தற்பெருமை கொள்ள முடியாத அளவுக்கு நம்பிக்கையுடன் கொண்டிருந்த விடாமுயற்சி, இவையே உயர்ந்தேறிவரும் பேராசை, ஆணையிட்டு அடக்கும் சக்தி, அளவில்லாத ஆற்றல், மத உணர்ச்சியில் தீவிர ஆர்வம், இவற்றுக்கு எதிர்க்கப்படும் பொருள்களாக இருந்தன. ஆனால், இவற்றால் வெல்லப்பட முடியாத ஓர் உள்ளத்துடன் போட்டி போட முடியவில்லை. உண்மையில் இந்திய வரலாற்றில் பிரதாப் கிளர்ச்சியூட்டும் ஆளுமையானவராவர். இராஜபுத்திரர்கள் பிரதாப்பைக் காட்டிலும் திறமை மிக்க தளபதிகளையும் தந்திரமிக்க அரசியல்வாதிகளையும் பெற்றிருக்கின்றனர். ஆனால், அவரைக் காட்டிலும் வீரம் மிக்க சிறந்த தேசபக்தி கொண்ட தலைவர்களைப் பெறவில்லை. பிரதாப்பின் மகன் அமர்சிங்கு தம் தந்தையின் கட்டளையை நிறைவேற்ற முயன்றார். ஆனால், 1599-ல் மான்சிங்கின்கீழ் வந்த முகலாயப் படையினால் தாக்கப்பட்டார். மிகுந்த வீரத்துடன் எதிர்த்தும் தோற்கடிக்கப்பட்டார். உடல் நலமின்மையால் அக்பர் அதற்குப் பிறகு வேறு எந்தப் படையெடுப்பையும் மேற்கொள்ள முடியவில்லை.

கி.பி. 1569-ல் ராந்தாம்போரையும், காலிஞ்சாரையும் சேர்த்துக்கொண்ட பிறகு முகலாயர்கள் குஜராத்தை அடிப்படுத்தினர். தன் கடற்கரைகளில் வளமிக்க, மேலோங்கிவரும் துறைமுகங்களைப் பெற்றிருந்த குஜராத்து வாணிக வளத்தில் கவர்ச்சிமிக்கதாய் இருந்தது. அதனால் டில்லியின் முந்திய அரசர்களும் அதைப் பற்றுவதற்குப் பெருவிருப்புக் கொண்டிருந்தனர். ஹுமாயூன்கூட அதைக் கைப்பற்றினார். ஆனால், சிறிது காலமே அது அவர் வசத்திலிருந்தது. ஆனால், அக்பரும் தம்பேரரசின் நலன்களுக்காக அம் மாகாணத்தைத் தம் வசமாக்குவதன் முக்கியத்துவத்தை உணர்ந்திருக்கவேண்டும். அதன் பெயரளவில் அரசராயிருந்த மூன்றாவது முஸஃப்பர் ஷா(Muzaffar Shah III)காலத்தில் குழப்பமான நிலை நிலவியிருந்ததால், அது அக்பருக்குத் தம் ஆவலை நிறைவேற்றிக்கொள்ள ஒரு சிறந்த வாய்ப்பை அளித்தது. உண்மையில் உள் நாட்டுக் கலவரம் ஒன்றின் தலைவரான இதிமத்கான்(Itimad Khan) என்பவரால் அக்பருடைய இடையீடு வரவேற்கப்பட்டதால் அக்பரின் படையெடுப்புக்குச் சிறிது சமாதானமும் கூறலாம். 1572-ல் அக்பர் தாமே குஜராத்துக்கு எதிராகப் படையை நடத்திச் சென்றார். எல்லா எதிர்ப்புகளையும்

முறியடித்தார். பொம்மை ராஜாவுக்கு ஓய்வூதியம் கொடுத்தார். ஒன்றரை மாதம் முற்றுகையிட்டபிறகு 1573ஆம் ஆண்டு பிப்ரவரி 26-ல் சூரத்தை அவர் கைப்பற்றினர். அந்தச் சமயத்தில் அவரோடு தொடர்பு கொள்ள நேர்ந்த போர்ச்சுகீசியர்கள் அவருடைய நட்பை நாடினர். ஆனால், அவர் ஃபாத்பூர் சிக்ரியிலிருந்த(Fathpur Sikri) தம் இருப்பிடத்தை அடைந்தாரோ இல்லையோ, அதற்குள் புதிதாக வெல்லப்பட்ட அம் மாகாணத்தில் கிளர்ச்சிகள் தோன்றின. அவற்றுள் சிலவற்றில் அக்பரின் சொந்த ஒன்றுவிட்ட சகோதரர்களே பங்கெடுத்துக்கொண்டனர். இதனால், பெருஞ் சினம் கொண்ட அக்பர் பதினொரு நாளில் அறுநூறு மைல்கடந்து, அவசரமாக அகமதாபாத்துக்குப் படையை நடத்திச் சென்றார். 1573 செப்டம்பர் 2ஆம் நாள் அகமதாபாத்துக்கு அருகில் நடந்த போரில் கிளர்ச்சியாளர்கள் அனைவரையும் முற்றிலும் ஒடுக்கி விட்டார். இவ்வாறு குஜராத் அக்பரின் அதிகாரத்தின் கீழ் வந்தது. அதிலிருந்து குஜராத்து பேரரசோடு இணைந்த ஒரு பகுதியாகவே ஆயிற்று. அது ஆதாயம் மிக்க வருவாய் மிகுத்துத் தரும் பகுதி யாய் விளங்கியது. முக்கியமாக அதன் பொருள்வளங்களையும், வருமானங்களையும் தோடர்மால் சீர்திருத்தி அமைத்ததன்மூலம் வளமார்ந்த பகுதியாத் திகழ்ந்தது. அம் மாகாணத்தில் தோடர் மால் தொடங்கிவைத்த பணி 1577 முதல் 1584 வரை ஷிஹாப்-உத்-தீன் அஹ்மது (Shihab-ud-din Ahmad) என்பவரால் திறமையாக நிறைவேற்றப்பட்டது. 'குஜராத்தின் வெற்றி அக்பரின் வரலாற்றில் ஒரு முக்கியமான சகாப்தத்தைத் தோற்று வித்தது' என்று டாக்டர் ஸ்மித் கூறுகிறார். குஜராத் தன் பொருள் வருவாய்களைப் பேரரசுக்கு உரிமையாக்கியதுடன், கடல் வழியில் செல்ல முழு உரிமையும் தந்தது. அவற்றால் இந்தியாவின் வரலாறு சில வழிகளில் மாறுதல் அடைந்தது. ஆனால், முகலாயர்கள் கடல் சக்தியை வளர்ப்பதற்கு எந்த முயற்சியையும் மேற்கொள்ளவில்லை. இத் துறையில் அவர் களுக்கு எதிர்கால நிலையைக் கூர்ந்துநோக்கி உணரும் ஆற்ற லின்மையால் ஐரோப்பிய வணிகர்கள் உள் நுழைய வாய்ப்பு ஏற்பட்டது.

இதைவிட முக்கியமான மாகாணமான வங்காளம் அடுத்து முகலாயர்களால் வெல்லப்பட்டது. முகம்மது ஆதில் ஷாவின் குறைந்த காலத்திய, புயல் நிறைந்த ஆட்சிக் காலத்தில், சூர் அரசர்கள் வங்காளத்தில் தங்களைச் சுதந்திரஅரசர்களாகச் செய்து கொண்டு வங்காளத்தை 1564வரை ஆண்டுவந்தனர். பின்பு ஆண்ட இளவரசர் கொலை செய்யப்பட்டதைத் தொடர்ந்து ஏற் பட்ட குழப்பங்களைத் தமக்குச் சாதகமாக பயன்படுத்திக்கொண்டு

தென் பீகாரின்கவர்னர் சுலைமான் கரராணி(Sulaiman Kararani) என்பவர் தம் அதிகாரத்தை வங்காளம் வரை பரப்பினார். கி.பி. 1572-ல் சுலைமான் சாகும்வரை, அவர் அக்பரின் மேலாட்சி அதிகாரத்தை முறையாக ஒப்புக்கொண்டு அவருடன் நட்புத் தொடர்புகளை மேற்கொண்டிருந்தார். சுலைமான் தம்முடைய தலைநகரைக் கௌரிலிருந்து தாண்டாவுக்கு (Tanda) மாற்றிக் கொண்டு, இந்து இராச்சியமான ஒரிஸ்ஸாவையும் தம்இராச்சியத்துடன் இணைத்துக்கொண்டார். ஆனால், அவருடைய மகனாகிய தாவூத் (Dawood), தபாகத் (Tabaqat) என்ற நூலின் ஆசிரியர் கூறுவதுபோல,'அரசாங்கக் கலைஒன்றும் அறியாதவராயிருந்தார்'. விரைவில் 'அவருடையதந்தையின் அறிவு மிக்க நடவடிக்கைகளைக் கைவிட்டார்.' தம்மைச் சுதந்திர அரசராக அறிவித்துக் கொண்டதுடன் (உத்தரப் பிரதேசத்தில் காஜிப்பூரில் (Ghazipur) அமைந்துள்ளதுமான) ஸமாணியா (Zamania) என்ற காவல் ஊரைத் தாக்கியதன்மூலமும் பேரரசின் பெருங் கோபத்துக்கு ஆளானார். 1574-ல் அக்பர் செருக்கு மிக்க வங்காளக் கவர்னருக்கு எதிராகத் தாமே படையெடுத்துச் சென்று அவரைப் பாட்னாவிலிருந்தும், மழைக் காலத்தில் காஜிப்பூரிலிருந்தும் விரட்டியடித்தார். வங்காளப் போருக்கு முனீம் கான் (Munim Khan) என்பவரைப் பொறுப்பாக வைத்துவிட்டுப் பாத்பூர் சிக்ரிக்குத் திரும்பினார். தாவூத் ஒரிஸ்ஸாப் பக்கம் ஓடினார். ஆனால், 1575ஆம் ஆண்டு மார்ச்சு 3ஆம் நாள் சுவர்னரேகா (Suvarnarekha) என்ற நதியின் கிழக்குக்கரைக் கருகிலுள்ள துகாராய் (Tukaroi) என்றஇடத்தில் முகலாயப் படைகளால் தோற்கடிக்கப்பட்டார். ஆனால், சிறந்த அறிவு படைத்திராத முனீம்கான் ஓடி ஒளிந்த எதிரியின்மீது காட்டிய தாராள மனப்பான்மையால் அந்தப் போரினால் நிலைத்த பயன் ஏற்படவில்லை. அதன் விளைவாக 1575 அக்டோபரில் தாவூத் மீண்டும் தாக்குதல்செய்து வங்காளத்தைத் திரும்பப்பெற முடிந்தது. இதனால், தாவூத்துக்கு எதிராக இன்னொரு படையெடுப்பு எடுக்கவேண்டிய தேவை உண்டாயிற்று. கடைசியில் அவர் தோற்கடிக்கப்பட்டார். 1576 ஜூலையில் ராஜ்மஹாலுக்கு (Rajmahal) அருகில் நடந்த போரில் அவர் கொல்லப்பட்டார். அதிலிருந்து வங்காளம் முகலாயப் பேரரசோடு இணைந்த ஒரு பகுதியாக ஆகிவிட்டது. ஆனால், பேரரசின் கவர்னர் முஸஃபர் கான் துர்பாதி (Muzaffar Khan Turbati) 'கடுமையான நடவடிக்கைகளை மேற்கொள்பவராயும், கேட்போர் மனங்கசக்கும்படி பேசுபவராயும்' இருந்தமையாலும், அவருடைய பலவீனமான அரசியல்கொள்கையாலும், அம் மாகாணத்தில் புதிய தொல்லைகள் எழுந்தன. மேலும், சக்திவாய்ந்த வங்காளத்தலைவர்கள் சிலர் முகலாயப் பேரரசின் அதிகாரத்தை நீண்டகாலம் எதிர்த்துக்

கொண்டே வந்தனர். அவர்களுள் மிகு மிகு முக்கியமானவர்கள் கிழக்கு மத்திய டாக்காவின் தலைவர் ஈஸா கான் (Isa Khan), மைமென்சிங்கு (Mymensingh), விக்கிரம்பூர் (Vikrampur) தலைவர் கேதார் ராய்(Kedar Rai), சந்திரதுவைபா (Chandradvipa), பகர்கன்ஜ்(Bakarganj) தலைவர் கந்தர்ப்ப நாராயண் (Kandarpa Narayan), ஜெஸ்ஸோர் (Jessore) தலைவர் பிரதாபாதித்யா (Pratap Aditya) என்போர்ராவர். கடைசியில் 1592-ல் ஒரிஸ்ஸா பேரரசுடன் இணைக்கப்பட்டது.

இதற்கிடையில் எல்லாவகையாலும் சுதந்திரமாகக் காபூலை ஆண்டுவந்த அக்பரின் மாற்றாந்தாய் மகன் மீர்ஸா முகமது ஹக்கீம் (Mirza Muhammad Hakim) என்பவரின் தீய எண்ணங்களால் நேர்ந்த ஒரு நெருக்கடியான நிலைமையைச் சமாளிக்க வேண்டியிருந்தது. கிழக்கு மாகாணங்களின் சில பிரபுக்களுடனும் அரசவையில் இருந்த பேரரசின் திவானுன காஜா மன்சூர் (Khwaja Mansur) போன்ற அதிருப்தியடைந்த அதிகாரிகளுடனும் மற்றவர்களுடனும் சேர்ந்து சதியாலோசனைகள்செய்து இந்துஸ்தானத்தின் சிம்மாசனத்தைத் தாமே கைப்பற்றிக் கொள்ளலாம் என்ற பேராசையை வளர்த்துக்கொண்டு வந்தார். இன்னும் அவருடைய இயக்கங்களையும், தொல்லைகளையும் புறக்கணித்துக்கொண்டிருப்பது நல்லதன்று என்று கருதி, அக்பர் 1581 பிப்ரவரி 8ஆம் நாள் தம் தலைநகரிலிருந்து சுமார் 50,000 குதிரைகள், 500 யானைகள், மிகப் பெரிய காலாள் படை இவற்றுடன் புறப்பட்டு, ஆப்கானிஸ்தானத்தை நோக்கி வந்தார். பேரரசர் முன்னேறி வருவதையறிந்த மீர்ஸா முகமது ஹக்கீம் தம் சகோதரர்க்கு எவ்வித எதிர்ப்பும் கொடுக்காமல் பஞ்சாபிலிருந்து காபூலுக்கு ஓட்டம் பிடித்தார். அதனுல் 1581 ஆகஸ்டு 9ஆம் நாள் பேரரசர் காபூலுக்குள் நுழைந்தார். மீர்ஸா முகமது ஹக்கீம் தோற்கடிக்கப்பட்டார். ஆனுல், பேரரசர்க்கு என்றும் உண்மையுள்ளவனுக இருப்பேன் என்று அவர் வாக்குறுதி தந்தமையால் அவருடைய மாகாணம் அவருக்கே திருப்பியளிக்கப்பட்டது. பேரரசர் 1581ஆம் ஆண்டு டிசம்பரின் தொடக்கத்தில் டில்லி திரும்பினுர். காபூலில் பெற்ற வெற்றி அக்பருக்கு அளவில்லாத நிம்மதியைத் தந்தது. ஸ்மித் எழுதுவதுபோல அது அவருடைய வாழ்க்கையின் உச்சக் கட்டமாகக் கருதப்படத்தக்க 'அவருடைய பிற்கால வாழ்க்கையின் மீதிப்பாகத்தில் முழுச்சுதந்திரமும் உடையவராக வாழ்வதற்கு' வாய்ப்பளித்தது. 1585 ஜூலையில் மீர்ஸா முகம்மது ஹக்கீம் இறந்த பிறகு காபூல் முறைப்படி டில்லிப் பேரரசுடன் இணைக்கப்பட்டது.

## 3. வடமேற்கு எல்லைப் பகுதி

இந்தியாவின் ஒவ்வோர் அரசாங்கமும் குழப்பம் மிகுந்த வட மேற்கு எல்லைச் சிக்கலில் ஈடுபடவேண்டியிருந்தது. இந்தப் பகுதி போரியல் சூழ்ச்சிக்கும், பொருளாதாரத்திற்கும் சிறந்த முக்கியத் துவம் வாய்ந்த இடமாயிருந்தது. அதனால் இந்தியாவின் ஆட்சி யாளர்கள் அதை வன்மையாகத் தங்கள் அடக்குமுறையின்கீழ் வைத்திருக்க வேண்டிய இன்றியமையாமை மிகுதியாயிருந்தது. மத்திய ஆசியாவையும், தெற்கு ஆப்கானிஸ்தானம், பலுசிஸ் தானம், இந்தியாஇவற்றையும் பிரிக்கும் இந்துகுஷ் மலைத்தொடர் ஹீராட்டின் (Herat) மேற்கே 'மிகு குறைவாக விரும்பத்தக்க' பகுதியாகவே இருந்தது. இடையூறுமிக்க இந்தப் பகுதியின் வழியாகப் பாரசீகத்திலிருந்தோ, மத்திய ஆசியாவிலிருந்தோ படையெடுத்துவரும் வெளிநாட்டினர் எளிதாகக் காபூல் சமவெளிக்குள்ளும், இந்தியாவிற்குள்ளும் புகுந்துவிட முடியும். காபூலின் தலைவரான முகலாயப் பேரரசர் 'காந்தகாரையும் தம் வசத்தில் வைத்திருக்கவேண்டும். இல்லாவிடில் அவர்எதிர்பாராத இடர்களிலிருந்து முழுவதும் விடுபட்டிருப்பதாகக் கொள்ள முடியாது. டில்லிப் பேரரசினது பகுதியாகக் காபூல் இருந்த காலத்தில் முகலாயர்களின் முதல் பாதுகாப்பு காந்தகாரைப் பற்றியதே.' காந்தகார் ஒரு முக்கியமான வாணிகக் களமாக இருந்தது. அங்கே ஆசியாவின் வெவ்வேறு பாகங்களிலிருந்தும் வந்த வணிகர்கள் ஒன்றுகூடித் தங்கள் பொருள்களைப் பண்ட மாற்றிக் கொண்டனர். கருங்கடலின்மீது போர்ச்சுகீசியர் ஆதிக்கம் செலுத்திவந்ததாலும், அவர்கள் பாரசீகத்தோடு பகைமை பாராட்டிவந்ததாலும் முன்பு இருந்ததைக் காட்டிலும்இப்போது மிகவும் அடிக்கடி ஆசிய நாடுகளுக்குக் காந்தகார் வழியாகவே சரக்குகள் அனுப்பப்பட்டுவந்தன. மேலும், எல்லையிலிருந்த உஸ்பெக்குகள், யூஸுப்ஸாயிகள் (Yusufzais) போன்ற குழப்பம் விளைவிக்கும் ஆப்கானிய மலைநாட்டு மக்கள் 'அவர்களுக்குரிய மலை களில் மிகவும் ஆபத்தானவர்களாய் இருந்தனர்'. ஓரளவு குடியரசு மனப்பான்மை வாய்ந்தவர்களாயும், தங்கள் சுதந்திரத்தின்மீது பெரு மோகம் கொண்டவர்களாயும் இருந்தனர். மிகச் சிறந்த இயற்கைப் பாதுகாப்புகளையுடைய அரண்களைப் பெற்றிருந்த அவர்கள், தங்கள் நாட்டில் போர் புரிவதில் வல்லவராயிருந்தனர். அவர்கள் தங்களை அடிப்படுத்த எண்ணும் அருகிலுள்ள எந்தப் பேரரசின் எவ்வகை முயற்சிகளையும் எப்போதும் எதிர்த்து வந்தனர். முகலாயப் பேரரசு பற்றி அவர்கள் கொண்டிருந்த கொள்கை நட்புச் சார்பானதாயில்லை. ஆனால், இந்த எல்லையைத் திறமையுடன் அடக்கிக்காப்பதன் முக்கியத்துவத்தை அக்பர்

போன்ற பேரரசர் ஒருவர் உணரத் தவறியிருக்கமுடியாது. அவரால் உஸ்பெக்குகளின் கலவரங்களை அடக்க முடிந்தது. உஸ்பெக்குகளின் தலைவர் அப்துல்லாகான் (Abdullah Khan) முகலாயப் பேரரசரிடம் நட்புறவாயிருந்தார். அக்பர் ரோஷ்னி யாக்களையும் (Roshniyas) தோற்கடித்தார். ராஜா தோடர்மால் இளவரசன் முராத்(Murad)இவர்கள் தலைமையின் கீழ்ப் போரிட்ட முகலாயப் பெரும்படையால் யூசுப்ஸாயிகளும் முழுதும் முறி யடிக்கப்பட்டுவிட்டனர். அபுல்பாஸல் எழுதுவதாவது; 'அவர் களுள் மிகு பெரும்பாலோர் கொல்லப்பட்டனர். பலர் துரானி லும் பாரசீகத்திலும் விற்கப்பட்டனர். சவத் (Swat), பாஜோர் (Bajaur), பூனெர் (Buner) முதலிய பழங்களுக்கும் விலைமலிவான உணவுக்கும் பெயர் பெற்றவையும், இணையில்லாத இனிய தட்ப வெப்பநிலையை உடையவையுமான நாடுகளிலிருந்து திங்கு இழைப் போர்கள் எல்லாரும் அகற்றப்பட்டுவிட்டனர். 5,000 ஆள்க ளுக்குத் தலைமை தாங்கிக் காஷ்மீரை வெல்லுவதற்காக அனுப்பப் பட்ட பகவான்தாஸ், காசீம்கான் ஆகியோர் 1586-ல் காஷ்மீரின் சுல்தானுகிய யூஸுப் ஷாவையும் அவருடைய மகன் யாக்கூப்பை யும் தோற்கடித்தனர். அப்பொழுது காஷ்மீர் பேரரசுடன் இணைக்கப்பட்டது. சிந்துவும் பலுசிஸ்தானும் முறையே 1590-91-லும் 1595-லும் வெல்லப்பட்டன. காந்தகார் அமைதி யாகவே அக்பருக்கு உரிமையாயிற்று. காந்தகாரின் பாரசீகக் கவர்னரான முசஃப்பர் ஹுஸேன் மீர்ஸா(Muzaffar Husain Mirza)தம்முடைய சொந்தக்காரர்களாலும், உஸ்பெக்கினராலும் தொல்லைப்படுத்தப்பட்டு வந்தமையால் கி.பி. 1595-ல் காந்த காரை அக்பரின் பிரதிநிதியான ஷாபேக்கிடம்(Shah Beg)அடைக் கலமாக்கினுர். இவ்வாறு வடமேற்கு எல்லையைப் பற்றி அக்பர் கொண்டிருந்த அரசியற் கொள்கையின் விளைவாக முக்கியமான பிரதேசங்கள் எல்லாம் அவருடைய பேரரசுடன் சேர்க்கப்பட்டன. அந்த எல்லையில் பேரரசுக்கும் பாதுகாப்பு ஏற்பட்டது. பேரரசின் மதிப்பும் அளவில்லாமல் சிறப்புற்றது. 1595ஆம் ஆண்டளவில் அக்பர் இந்துகுஷிலிருந்து பிரம்மபுத்திரா வரையிலும் உள்ள பெரும்பரப்பின் எவரும் மறுக்க முடியாத ஏகச் சக்கரவர்த்தியாக ஆனுர். மேற்கூறிய பரப்பெல்லையில் சிந்துவுக்கு அப்பால் இருந்த மலைநாட்டுச் சிறுபகுதியும் வேறுசில பகுதிகளுமே அடங்காதவை.

[1] ரோஷனியாக்கள் என்போர் பாயஸீத் (Bayazid) என்பவரின் வழியைப் பின்பற்றுபவர்கள். 'அவர் ஒரு தனிப்பட்ட முகம்மதிய மதப் பிரிவுபற்றி உபதேசித்து வந்தார். ஒரு பக்கம் பொது உடைமையையும், மறுபக்கம் இஸ்லாமின் எதிரிகளை அழிப்பதும் அதன் முக்கியமான சிறப்பியல்புகளாகும். இதற்கு மேலும், இனி வரப்போகும் கடவுள் தூதராகிய மெஹ்தி (Mehdi, Messiah) தாமே என்றும் கூறினுர். அதனுல் மதக் குமுறலின் பலவகைக் கூறுகளும் கிளர்ந்தெழுந்தன.' கென்னடி, 'பெரும் முகலாய அரசர்களின் வரலாறு' பக்கம், 27,

## 4. அக்பரும் தக்கணமும்

இவ்வாறு இந்தியாவிலும், மத்திய இந்தியாவிலும் தம் அதிகாரத்தை ஒருநிலைப்படுத்திய பிறகு அக்பர் தம் அரசைத் தக்கணத்திலும் பரப்ப முடிவு செய்தார். இதில் அவர் முற்கால வடக்குப் பேரரசு அரசாங்கங்களாகிய மௌரியர்கள், குப்தர்கள் பரம்பரையாகப் பின்பற்றி வந்த கொள்கையையே பின்பற்றத் தொடங்கினார். முதலாவதாக, 'ஒன்றுபட்ட இந்தியப் பேரரசுக்' குறிக்கோளைக் கொண்டிருந்த அவர் இயல்பாகவே தக்கணத்துச் சுல்தானியங்களான அகமத் நகர், பீஜப்பூர், கோல்கொண்டா, காந்தேஷ் ஆகியவற்றைத் தம் ஆளுகைக்கீழ் கொண்டுவர முயன்றார். இரண்டாவதாக நாட்டு நலனில் அக்கறை கொண்ட கூரிய அறிவுடையவராயிருந்த அவர் போர்ச்சுகீசியர்களைக் கடலுக்கு அப்பாலேயே தள்ளிவிடுவதற்காகத் தக்கணத்தைத் தம்ஆணைக்கீழ் அகப்படுத்திப் பயன்படுத்திக் கொள்ளலாம் என்று விரும்பினார். போர்ச்சுகீசியரிடம் அவர் கொண்டிருந்த தொடர்புகள் மேற்போக்கில் நட்புமுறையிலிருந்தனவேனும் நாட்டின் பொருளாதார வளங்களின் ஒரு பகுதியை அவர்கள் தங்களுக்காகப் பயன்படுத்திக்கொண்டு அனுபவிப்பதையும் நாட்டின் அரசியலில் அவர்கள் இடையீடு செய்வதையும் அனுமதிப்பது உகந்ததன்று என்று கருதினார். இவ்வாறு அக்பரின் தக்கணக் கொள்கை மூலத்திலும் தோற்றத்திலும், முழுதும் பேரரசுச் சார்பையுடையதாகவே இருந்தது. ஓரளவுக்குச் சமயச் சார்பான ஷாஜஹான் அல்லது அவுரங்கசீப் (Aurangzeb) பின் கொள்கையைப்போல இல்லாமல் முழுதும் சமயச் சார்பற்ற கொள்கையாகவே இது இருந்தது.

தக்கணத்துச் சுல்தானியங்கள் மேன்மேலும் உயர்ந்து வரும் முகலாயப் பேரரசினுக்கு எதிராகத் தங்களைக் காத்துக்கொள்ளும் நிலைமையில் இருக்கவில்லை. ஏனெனில், கி.பி. *1564—1565*-ல் சிறிது காலம் தாற்காலிகமாக விசயநகருடன் கூட்டாயிருந்த பிறகு, தங்களுக்குள் சண்டையிட்டுக் கொண்டேயிருந்தமையால், பெரும் பாலும் தங்கள் பலமெல்லாம் இழந்தவையாயும், திறமையற்றவையாயும் இருந்தன. அக்பர் 1591-ல் அரசியல் தூதர்களை அந்த சுல்தானியங்களுக்கு அனுப்பித் தக்கணத்தின்மீது தம்முடைய அரச அதிகாரம்இருப்பதை முறையாகஒப்புக்கொள்ளும்படி வற்புறுத்த முயன்றார். ஆனால், காந்தேஷைத் தவிர மற்ற எல்லா சுல்தானியங்களும் அவருடைய கருத்துகளுக்கு உறுதியான பதில்களைத் தரவில்லை. தம் அரசியல் தூதுக் குழுக்களால் பயன் ஏற்படாததால் படைக்கலங்களின் உதவியை கேற்கொள்ளத் துணிந்தார். உள்நாட்டுப் போர்களால் வலிமை குன்றியிருந்த அகமத் நகரின்

மீது செல்லும்படி பைராம்கானின் மகனை அப்துல் ரகீம், பேரரசரின் இரண்டாவது மகன் இளவரசன் முராத் ஆகியோரின் தலைமையின் கீழ் ஒரு பெரும்படை அனுப்பப்பட்டது. முகலாயப் படையின் முயற்சிகள் மிகவும் சிதறுண்டு போயினும், படைத் தளபதிகள் இருவருக்குள்ளும் சுமுகமான உடன்பாடுகள் இல்லாது போயினும், அகமத் நகர் 1595-ல் அப் படையால் முற்றுகையிடப் பட்டது. அந் நகரம் பீஜப்பூரின் விதவை அரசியும், ஹுஸேன் நிஸாம் ஷாவின் மகளுமான சாந்த் பீபியால் (Chand Bibi) அற்புதமான துணிவுடனும், வியக்கத்தக்க தீர்மானத்துடனும் பாதுகாக்கப்பட்டது. 1596-ல் முற்றுகையாளர்கள் சாந்த் பீபி யுடன் ஓர் ஒப்பந்தம் செய்துகொண்டனர். அதன்படி பீரார் முகலாயர்களுக்குப் பிரித்துக் கொடுக்கப்பட்டது. அகமத் நகரின் அரசச் சிறுவன் அக்பரின் மேலதிகாரத்தை ஏற்றுக்கொள்வதாக வாக்குறுதியளித்தார். ஆனல், மொகலாயர்கள் சென்ற பிறகு 'சாந்த் பீபி தன்னுடைய அதிகாரத்தைக் கைவிட்டாள்.ஒப்பந்தத் திற்கு எதிராகவும், அவளுடைய விருப்பத்திற்கும் அறிவுரைக்கும் மாறுகவும் அகமத் நகரில் ஒரு கலகம் எழுந்தது. அதனல் பீராரி லிருந்து முகலாயரைத் துரத்திவிடும் நோக்கத்துடன் அடுத்த ஆண்டில் முகலாயர்களுடன் போர் மீண்டும் தொடங்கப்பட்டது. முகலாயர்கள் 1597 பிப்ரவரியில் கோதாவரியில் அஷ்டிக்கருகி லுள்ள சூபா(Supa)என்ற இடத்தில் தக்கணத்தினரை எதிர்த்துப் போரிட்டு வெற்றியும் பெற்றனர். அகமத் நகரில் உள்நாட்டுப் பிளவுகள் நிறைந்திருந்தன. சாந்த் பீபி 'கொல்லப்பட்டிருக்க வேண்டும்; அல்லது விஷம் அருந்தும்படி வற்புறுத்தப்பட்டிருக்க வேண்டும்.' இக் காரணங்களால் பேரரசினர் 1600 ஆகஸ்டில் எளிதாக அந் நகரத்தைத் தாக்கினர். ஆனல், அந்த இராச்சியம் ஷாஜஹானின் ஆட்சிக் காலம் வரை பேரரசுடன் இணைக்கப் படாமலேயே இருந்தது.

காந்தேஷை ஆண்டுவந்த மியான் பகதூர் ஷா பேரரசின் அதிகாரத்துக்கு அடிபணிய மறுத்துவிட்டார். 1598-ல் அப்துல்லா கான் இறந்தபிறகு உஸ்பெக் படையெடுப்பின் நெருக்கடியிலிருந்து விடுபட்ட அக்பர் 1599 ஜூலையில் தெற்கே படையுடன் திரும் பினர். விரைவில் அவர் காந்தேஷின் தலைநகரான புர்ஹான் பூரைப் (Burhanpur) பிடித்தார். வலிமைமிக்க அசீர்கார் கோட் டையை எளிதாக முற்றுகையிட்டார். 'அக் கோட்டையைக் காட்டிலும் வலிமை மிக்க கோட்டை ஒன்றையோ, பீரங்கிகள், போருக்குரிய தளவாடங்கள், பண்டங்கள் மிகவும் அதிகமாக நிறைந்திருந்த கோட்டை ஒன்றையோ காண்பது அரிது.' முற்றுகையிடப்பட்ட படையிலிருந்தவர்களுள் பலர் கொடிய

கொள்ளை நோய் ஒன்றினால் மாய்ந்து போயினும், அப்படையினர் ஆறு மாதங்களாகக் கோட்டையைக் காத்து நின்றனர். அதன் பிறகு அக்பர் வேறு மதி நுட்ப மிக்க சூழ்ச்சிகளின் மூலம் தம் நோக்கத்தை நிறைவேற்றிக் கொள்ள விரைந்தார். தம்முடைய மகன் சலீம் தமக்கு எதிராகக் கிளர்ச்சிகள் செய்துகொண்டிருந்தமையின் கோட்டையின் முற்றுகையை நீடிக்க விரும்பாது, தம் பாசறையில் மியான் பஹதூர் ஷாவின் உயிருக்குப் பாதுகாப்புத் தருவதாகக் கூறி, அவரை ஒப்பந்தத்திற்கு இணங்கும்படி செய்தார். ஆனால், அங்கேயே அவரைநிறுத்திவைத்துக் கோட்டையைக் கைவிட்டுச் சரணடையுமாறு அறிவுரைகள் எழுதச் செய்து அவருடைய படையினருக்கு அனுப்புமாறு வற்புறுத்தினர். எனினும், படையினர் அப்போதும் கோட்டையை விடவில்லை. அடுத்து அக்பர் காந்தேஷ் அதிகாரிகளுக்கு அளவில்லாத பணம் வழங்கி அவர்களை இணக்குவித்தார். இவ்வாறு 'அசீர்காரின் கோட்டைக் கதவுகள் பொன் சாவிகளால் திறக்கப்பட்டன.' அக்பரின் கடைசி வெற்றி இதுவேயாகும்.

புதிதாக வெற்றி பெற்ற பகுதிகளை அகமத் நகர், பீரார் காந்தேஷ் என்ற மூன்று சுபாக்களாக ஒழுங்காகத் திருத்தியமைத்து விட்டும், தெற்கு மேற்கு இந்தியா அதாவது மூன்று தக்கண சுபாக்கள், மாளவம், குஜராத் இவற்றிற்கு எல்லாம் ராஜப்பிரதிநிதியாக இளவரசன் தானியலை (Daniyal) நியமித்துவிட்டும், அக்பர் 1601 மே மாதத்தில் கிளர்ச்சி செய்து வந்த சலீமைக் கவனிப்பதற்காக ஆக்ராவுக்குத் திரும்பினர். அக்பரின் தக்கணப் போர்களின் விளைவால் முகலாய பேரரசின் எல்லை நருமதையிலிருந்து [பீமா. (Bhima) என்று இந் நாட்டவரால் அழைக்கப் பெறும்] கிருஷ்ணநதியின் மேலைத்தீரங்கள் வரை நீண்டுசென்றது. ஆனால், இந்த இணைப்பு வெறும் உருவில் மட்டும் இருந்தது. திறமையுடன் ஆளுவதற்கோ, முழுதும் வெல்லப்படுவதற்கோ முடியாத அளவு மிகப் பெரியதாயிருந்தது. அப் புதிய பகுதி எங்கும் குறிப்பாகத் தெற்கிலும் மேற்கிலும், பழைய அரச மரபைச் சேர்ந்த உள்நாட்டு அதிகாரிகள் வெற்றியாளருக்குக் கீழ்ப்படிய மறுத்தனர்; அல்லது தங்கள் கொள்கைகளை நிறைவேற்றிக்கொள்ளப் பொம்மை ராஜாக்களைத் திரையாக வைத்துக் கொள்ளத் தலைப்பட்டனர். பீஜப்பூர், கோல்கொண்டாச் சுல்தான்கள் வீழ்ச்சியுற்ற தங்கள் அண்டை நாட்டினருக்குரிய பக்கத்திலுள்ள மாவட்டங்களைக் கைப்பற்றினர்.'

## 5. அக்பரின் இறுதிக்காலம்

அக்பரின் இறுதிக்காலம் கவலையும் துன்பமும் நிறைந்து மகிழ்ச்சியற்றதாக இருந்தது. அவருடைய அன்பிற் சிறந்த

நண்பரும் கவிஞருமான ஃபெய்ஸி (Faizi) 1595-ல் மறைந்தார். சிம்மாசனத்தைக் கைப்பற்றவேண்டும் என்ற ஆர்வத்துடன் சலீம் அலகாபாத்தில் தம்மை ஒரு சுதந்திர அரசராக ஆக்கிக் கொண்டார். தம்முடைய குறிக்கோளை அடைவதற்காகப் போர்ச்சுகீசியர்களுடன் மறைமுகமான உடன்படிக்கை செய்து கொண்டார். தக்கணத்திலிருந்து திரும்பி வந்துகொண்டிருந்த பேரரசின் நெருங்கிய நண்பரான அபுல்பாஸலை 1602-ல் கொல்லு மாறு செய்து, மேலும் சலீம் தந்தையின் மனத்தைப் புண் படுத்தினார். 1603-ல் சுல்தானா சலீமா பேகத்தின் மத்தியஸ்தத்தால் தந்தைக்கும் மகனுக்குமிடையே ஒரு தாற்காலிக இணக்க உடன் பாடு ஏற்பட்டது. ஆனால், சலீம் மீண்டும் அலகாபாத்திற்குச் சென்று மிகவும் வெறுக்கத்தக்க முறையில் செயலாற்றத் தொடங்கிவிட்டார். இதற்கிடையில் கானி ஆஸம், ராஜா மான்சிங்கு, இன்னும் அரசவையின் மற்றப் பிரபுக்களும் சேர்ந்து சலீமின் மகன் குஸ்ராவ் சிம்மாசனம் ஏறச் சூழ்ச்சிகள் செய்தனர். ஆனால், மற்றப் பிரபுக்கள் எல்லாம் அதை எதிர்த்தமையால் அவர்களுடைய திட்டம் தோற்றது. அக்பரின் மற்ற ஆண் மக்கள் ஏற்கெனவே இறந்துவிட்டனர். உரிமைக்குப் போட்டியிட்ட மற்ற வர்கள் எல்லாம் அகற்றப்பட்ட பிறகு உயிரோடிருக்கும் அக்பரின் ஒரே மகனை சலீம் தந்தையுடன் இணங்கிப் போனார். அக்பர் அவரைக் குறும்புத்தனம் நிறைந்த குழந்தையாகக் கருதி, கடுமை யாக இகழ்ந்துரைத்துச் சிறிது காலம் சிறையில் வைத்துப் பின்பு 1604 நவம்பரில் அவரை மன்னித்து விடுதலை செய்தார். ஆனால், அக்பரின் அந்திம காலம் நெருங்கிக்கொண்டிருந்தது. 1605 இலை யுதிர் காலத்தில் கடுமையான வயிற்றுப்போக்கு அல்லது சீதபேதி யால் தாக்கப்பட்டு, அவ் வருடம் அக்டோபர் பதினேழாம் நாள் அக்பர் உயிர்நீத்தார்.

## 6. அக்பரின் சமயம்

அக்பருடைய கருத்துகளின் மேன்மையும், அவருடைய மன இயல்பு, குறிக்கோள்கள் இவற்றில் காணப்பட்ட பரந்த மனப் பான்மையும் பல்வேறு வகையான செல்வாக்குகளால் உருவாக்கப் பட்டன. முதலாவதாக அவருடைய பரம்பரைப் பண்பு 'சூழ்நிலை களின் நிலையை மனத்தில் பதித்துக்கொள்ளவும், அதை மிகச் சிறந்த முறையில் சிந்தித்துப் பார்க்கவும் வேண்டிய மன, மூளைக் குணங்களை அவருக்கு அளித்தது.' வெற்றிப் படையெடுப்பாளராய் இருப்பினும் தைமூரும் அவருடைய சந்ததியினரும் கலை, இலக் கியம் இவற்றின் காதலர்களாய் இருந்தனர். சூஃபி (Sufi) மதத் தினிடம் கொண்ட பெருந்தொடர்பினால் அவர்கள் சமய வைதீ

கத்திற்கும் அப்பாற்பட்டவர்களாய் உயர்ந்தனர். பாரசீக அறிஞரின் மகளான அக்பரின் அன்னையார் அவருடைய உள்ளத்தில் 'பொறுமை' எனும் விதைகளைத் தூவியிருந்தார். இரண்டாவதாக, சபவீக்களின் கொடுமைக்கு ஆற்ருது பாரசீகத்திலிருந்து ஓடிவிட்ட பல சூஃபி முனிவர்கள் வாழ்ந்த காபூல் அரசவையில் தங்கியிருந்தபோதே அக்பர் சூஃபி சமயத்துடன் முதலில் கொண்டிருந்த தொடர்பும், பிறகு அவருடைய ஆசிரியரான அப்துல் லதீஃப்பின் போதனைகளும், பொது நோக்கமும் உயர்ந்த எண்ணங்களும் கொண்டிருப்பதன் சிறப்பை அவர் மனத்தில் பதிவித்துத் 'தெய்வீக உண்மைப் பொருளுடன் நேரடித் தொடர்பு கொள்வதால் கிடைக்கும், விளக்கிக் கூற முடியாத பேரின்பத்தை அடைய' ஆர்வம் கொள்ளும்படி அவரைத் தூண்டின. கடைசியாக ராஜபுத்திர மனைவிகளும், இந்து மதத்துடன் அவர் கொண்ட தொடர்பும், அவர் காலத்தில் ஏற்பட்டிருந்த சீர்திருத்த இயக்கங்களும் அவருடைய கற்பனைமிக்க உள்ளத்தில் சிறந்த குணங்களைப் பதிவித்தன. இவ்வாறு சிறப்புமிக்க அறிவுக் கூர்மையும், எப்போதும் விழிப்புள்ள மனமும், ஆராய்ந்தறியும் உள்ளமும், பிறப்பினுலும் வளர்ப்பினுலும் கொண்ட தொடர்பினுலும் அவருக்கு நன்கு அமைந்திருந்தன. அவர் தம் காலத்தில் காணப்பட்ட ஆன்மீக ஆர்வ நிறைவின்மையையும், உயர் லட்சியங்களுக்காக வாழும் ஆசையையும் தம் மனத்திலும் பதியுமாறு செய்துகொண்டார். அவர் தாம் வாழ்ந்த நூற்ருண்டின் குழந்தையாக மட்டுமன்றி அந் நூற்ருண்டின் பிரதிபலிப்பாகவும் திகழ்ந்தார்.' அவர் காலத்தில் இங்கிலாந்தில் வாழ்ந்த எலிஸபெத் (Elizabeth) அரசியின் ஆட்சியில், அரசியல் காரணங்கள் மத அமைப்பைப் பெரிதும் மாற்றும் வகையில் அமைந்திருந்தது போன்றே, ஒரே இந்திய முகலாயப் பேரரசை நிறுவும் அக்பரின் அரசியல் குறிக்கோள் அவருடைய சமயக் கொள்கையிலும் மாற்றம் ஏற்படும்படி செய்திருக்கலாம். எனினும், உண்மையைக் காண்பதில் அக்பர் தீரா விருப்பம் உடையவராய் இருந்தார் என்பதில் ஐயமில்லை. அடிக்கடி 'உணர்ச்சிப் புயல்கள் அக்பரின் ஆன்மாவை நசுக்கியிருக்கின்றன.' அவரிடம் பகைமை கொண்டிருந்த திறனுய்வாளர் பதௌனி 'பாத்பூர் அரண்மனைக்கருகில் ஒரு தனியிடத்தில் ஒரு பழைய கட்டடத்தின் பெரிய தட்டையான கல்லின்மீது தனியாகப் பிரார்த்தனை மனத்துடனும், துன்பம் நிறைந்த முகத்துடனும் பல காலைநேரங்களில் உட்கார்ந்திருப்பார்' என்றும், காலை நேரத்தின் இனிமையை நுகர்ந்துகொண்டு சில சமயங்ளில் நெஞ்சின்மீது முகம் படிந்திருக்குமாறும் அமர்ந்திருப்பார்' என்றும் கூறியிருக்கிருர். 'வெவ்வேறு மதப் பிரிவுகளிடையே காணப்பட்ட சிக்கல்கள்

அவருடைய ஆன்மாவை அதிர்ச்சிக்குள்ளாக்கின. அவரும் ஒரு புதிய சமயத்தை உருவாக்குவதில் ஈடுபட்டார். தமக்குள் பூச லிட்டுக்கொண்டிருக்கும் சமயக் கொள்கைகளின் ஓர் இணைப் பாகவும், தமது பரந்த பேரரசில் காணப்பட்ட முரண்பட்ட கூறுகளை ஒன்றுபடுத்துவதன்மூலம், இசைவு மிக்க முழுமைத் தன்மை வாய்ந்ததாகவும் அச் சமயம் விளங்கவேண்டும் என்று அவர் விரும்பினார்.'

1575 வரை அக்பர் (இஸ்லாமின்) ஸுன்னி (Sunni) மதப் பிரிவின் வெளிச் சடங்குகளையும், கொள்கைகளையும் கடைப்பிடித் தார். அந்த ஆண்டில் ஷேக் முபாரக்குடனும் அவருடைய இரு மக்களான ஃபைஸி (Faizi), அபுல் பாஸல் இவர்களுடனும் அவர் கொண்ட தொடர்பினால் அவருடைய கருத்துகளில் ஒரு மாறுதல் ஏற்பட்டது. பிறகு அவர் தத்துவ, தெய்வ நெறிக் கொள்கை களை வாதிப்பதற்காகப் பாத்பூர் சிக்ரியில் ஒரு மாளிகை கட்டு வித்து அதை இபாதத்கானா அல்லது 'வழிபாட்டு இல்லம்' என்று வழங்கினார். முதலில் அவர் அங்கே இஸ்லாமின் தெய்வக் கொள் கையில் வல்லவரை அழைத்தார். ஆனால், அவர்களுடைய விவா தங்கள் விரைவில் 'கீழ்த்தரமான பெருவெறுப்பு, இழிந்த வைதீக விடாப்பிடி, ஆள்களைத் திட்டுதல்' போன்ற வடிவங்களை எடுத்தன. அக்பர் கேட்ட சில கேள்விகளுக்கு அவர்களால் தக்க பதில் அளிக்க முடியவில்லை. உண்மையில், படௌனியால் விளக்கமாக வரையப் பட்டுள்ளபடி அவர்களுடைய சிறுமைச் சண்டைகள் அக்பரின் ஆராய்ச்சி மிக்க ஆன்மாவைத் திருப்தி செய்யத் தவறிவிட்டன. அதனால், அவர் உண்மை அறிவதற்கு வேறிடம் பார்க்குமாறு செய்துவிட்டன. எனவே, அவர் தம்முடைய இபாதத் கானாவுக்கு வெவ்வேறு சமயங்களையும், சமயப் பிரிவுகளையும் சேர்ந்த அறிவு மிக்கோரை அழைத்தார். குறிப்பாக, புருஷோத்தமர் போன்ற இந்து தத்துவ அறிஞர்கள், தேவி (Devi), இன்னும் சில மற்றவர் களையும், சில சமண ஆசிரியர்களையும் அழைத்தார். சமணர்களுள் மிகவும் சிறப்பாகக் குறிப்பிடத்தக்கவர்கள் ஹரி விஜய சூரி (Hari Vijaya Suri), விஜய சென் சூரி (Vijaya Sen Suri), பானுசந்திர உபாத்தியாயர் (Bhanuchandra Upadhiyaya) ஆகியோராவர். மேலும், பார்சி புரோகிதர்களையும், கோவாவிலிருந்து கிறித்தவப் பாதிரியார்களையும் அழைத்தார். ஒவ்வொரு மதத்தையும் விளக்குவோர் கூறிய வாதங்களை எல்லாம் அவர் பொறுமை யுடன் கவனித்துக் கேட்டார். 'வெவ்வேறு மதத்தைச்சேர்ந்தவர் களும் அவரை ஒரு ஸொராஸ்டியர் (Zoroastrian), ஓர் இந்து, ஒரு சமணர் அல்லது ஒரு கிறித்தவர் என்று போதிய காரணங்களுடன் நம்பும் அளவுக்கு ஒவ்வொரு மதத்திலும் அவர் தொடர்பு கொண்

டிருந்தார்.' ஆனால், அவர் இந்த மதக் கொள்கைகளுள் எதற்கும் மாறிவிடவில்லை. மற்ற எந்த மதத்தைக் காட்டிலும் அதிகமாகக் கிறித்தவ மதத்தின் செல்வாக்கு அவரிடமிருந்தது என்று மிகைப்படுத்திக் கூறப்படுவதற்கு எத்தகைய சான்றும் இல்லை. முஸ்லிம் சமய நெறியாளர்களிடையே தோன்றிய கடுமையான விவாதங்களைக் கண்டு அதிருப்தியுற்றதனால்தான், அவர் 'விவாதங்கள், சொற்பொழிவுகள் மூலம் மற்ற மதங்களைப்பற்றி அறிய வேண்டிய நிலை ஏற்பட்டது. கடைசியில் அவற்றால் அவர் எல்லா மதங்களிலிருந்தும் நல்லனவற்றைத் தேர்ந்தெடுத்துக்கொள்ள வேண்டியவரானார்; தீன்-இ-இலாஹியைத்(Din-i-Illahi) தோற்று விக்கவும் வேண்டியவரானார். பார்ட்டோலி (Bartoli) என்ற இயேசு சங்கத்தைச் சார்ந்த ஆசிரியர் ஒருவர் எழுதுவதுபோல அது ஒரு புதிய மதம். அது 'பலவகையான கூறுகளைக்கொண்டு கலப்பாக்கப்பட்டது; முகம்மதுவின் குர்ரானிலிருந்து ஒரு பகுதியும், பிராமணர்களின் தெய்வ நூல்களிலிருந்து ஒரு பகுதியும் தமக்கு விருப்பமானபடி ஓரளவு கிறித்துவின் வேத நூலிலிருந்து ஒரு பகுதியும் எடுத்து அமைக்கப்பட்டது.' சமய வேறுபாடுகளைப் பொறுத்துக்கொள்ளவேண்டும் என்ற கொள்கையில் உறுதியான நம்பிக்கை உடையவராயிருந்த அக்பர் மதமாற்றப் பற்றுள்ளவர் அல்லது மத வெறி பிடித்தவர் ஒருவரைப்போல மற்றவர்களிடம் தம்முடைய மதத்தைத் திணிக்க எம் முயற்சியும் செய்யவில்லை. ஆனால், மக்கள் அக உணர்ச்சிகளை மதிக்கவேண்டும் என்று அவர் வேண்டினார்.

பிற மதங்களின் கொள்கைகளைத் தூற்றாது பொறுத்துக் கொள்ள வேண்டும் என்று அக்பர் கொண்டிருந்த கருத்து உண்மையில் மிகச் சிறந்த ஒன்றே. அது அவருடைய தேசியக் குறிக்கோளுக்கு ஒரு ஒளிமிக்க சான்றாகத் திகழ்கிறது. திருப்திப்படுத்தப்பட முடியாத அக்பரின் திறனாய்வாளரான பதௌனியின் சான்றுகளை நம்பியும், தங்களுடைய கொள்கைக்கு அக்பரை மாற்ற முடியவில்லையே என்று வருந்தியிருக்கும் இயேசு சங்கத்தினர் எழுதியிருப்பனவற்றைக் கொண்டும் தவறாக புரிந்துகொண்டு ஸ்மித் பின்வருமாறு கூறியிருக்கிறார். 'தெய்வ நம்பிக்கை' யானது அக்பரின் முட்டாள்தனத்துக்கு—அவருடைய அறிவுடைமைக்கு அன்று—ஒரு மிகச்சிறந்த நினைவுச்சின்னமாகும். முழுத் திட்டமும் இகழத்தக்க செருக்கு, அடக்க முடியாமல் இராட்சத உருவில் வளர்ந்த எதேச்சாதிகாரம் இவற்றின் விளைவால் எழுந்ததே'. அக்பரின் வரலாற்றை எழுதிய ஜெர்மன் வரலாற்றாசிரியரான வான் நோயர் (Von Noer) என்பவர் அக்பரின் தெய்வக் கொள்கையைச் சரியாக மதிப்பிட்டுப் பின்வருமாறு

உரைத்திருக்கிறார். 'பெரும் சக்கரவர்த்தியான அக்பரின்மேல் மீண்டும் மீண்டும் தாக்குதல் செய்வதற்காகவே பதௌனி அவருடைய மதக் கொள்கையில் குற்றம் கண்டுபிடிப்பதில் நிச்சயமாய் ஒவ்வொரு வாய்ப்பையும் பயன்படுத்திக்கொண்டார். எனினும், அவர் தீன்-இ-இலாஹியைப் பற்றி முழுமையாகத் தெரிந்து கொள்ளவில்லை. பொதுமக்களிடையே அக் காலத்தில் நிலவி யிருந்த தவறான கருத்துகளையே அவர் திருப்பிக் கூறுகிறார். அக்பரைப் பற்றிய கருத்துகள் பொதுமக்களினால் வழக்கம் போலச் சிதைக்கப்பட்டும் கலவையாக்கப்பட்டும் நிலவின. அக்பர் தம் ஆட்சியின் நடவடிக்கைகளைக் குறித்து உண்மையில் நியாயமான பெருமை அடைந்திருக்கலாம். ஆனால், அவருடைய வாழ்க்கையில் நேர்ந்த பல நிகழ்ச்சிகள் அவர் மனிதர்களுக்குள் மிகவும் அடக்கம் வாய்ந்தவர் என்பதை நிரூபிக்கின்றன. அரசியல், தத்துவ மத அமைப்பாக ஒருங்கே விளங்கிய ஓர் அமைப்பைத் தோற்றுவித்த ஒரு மனிதரைக் கடவுளாக்கியவர்கள் பொதுமக்களே. மத விஷயங்களில் பொறுமையைக் கடைப்பிடிக்க வேண்டும் என்று கருதி அவர் தோற்றுவித்த புதிய மதம் மனிதஇனத்திற்கு நன்மை புரிந்த பெரியோர்களின் வரிசையில் அவரை வைத்து எக் காலத்தும் எண்ணப்படும் வாய்ப்பை அளித்துள்ளது.'

அக்பர் தமது பிற்காலத்தில் இஸ்லாமைத் துறந்துவிட்டதாகப் பதௌனியும், இயேசு சங்கத்து ஆசிரியர்களும் குற்றம் சாட்டியுள்ளனர். 'தம் குடிமக்களின் பிளவுபடாத கீழ்ப்படிதலைப்' பெற வேண்டும் என்ற நோக்கத்துடன், மத்தியகால ஐரோப்பாவில் போப்புகள் செய்ததைப்போல 'மக்கள் அரசனுக்குக் கீழ்ப்படிவது போலத் தமக்கும் கீழ்ப்படிய வேண்டுமென்று உரிமை பேசிய உலேமாக்கள் அளவுக்கு மீறிய ஆதிக்கஞ் செலுத்துவதைத் தடுக்க முற்பட்டார் என்பது உண்மையே. மேலும், படிப்படியாகக் கோவிலின் உயர்நிலைத்தலைவராயிருக்கும்நிலையில்(இமாமெ ஆதில் (Imam-i-Adil) தம்மை நிலைநிறுத்திக்கொண்டார். இவ்வாறு 1579 ஜூன் மாதத்தில் பாத்பூர் சிக்ரியில் இருந்த தலைமைப் புரோகிதரை நீக்கிவிட்டுத் தம்முடைய பெயரிலேயே குத்பாவைப் படித்தார். சமயத் தொடர்பான செயல்களில் தம்மை மிக உயர்ந்த நடுவராக்கும் 'தவறுபடாக்கொள்கையின் ஆணை' (Infallibility Decree) என்ற ஒன்றை 1579 செப்டம்பரில் வெளியிட்டார். இது உலேமாக்களுக்கும், அவர்களைப் பின்பற்றுவோர்க்கும் அளவில்லாத எரிச்சலை மூட்டியிருக்கும். ஆனால், அக்பர் அஞ்சாதவராய் இருந்தார். 'ஆன்மீகச் சாதனைகளைப் பெறாமல் நாட்டின் ஆன்மீகத் தலைவராய் வீற்றிருப்பதை அவர் விரும்பவில்லை ..... தொடக்கம் முதல் இறுதிவரை பாத்பூர் சிக்ரியில் சொற்பொழிவு மேடையில்

ஏறுவது முதல் தீன்இ-இலாஹியைப் பரப்புவது வரை அவர் மிகுந்த உண்மையுடன் இருந்தார்.' அவ்வளவு பகுத்தறிவும், தாராள மனப்பான்மைகளும் கொண்டிருந்த அவர், மற்ற மதங்களைத் தாழ்வாக மதித்தார் என்றோ, மற்ற மதங்களின் பகைவராக இருந்தார் என்றோ இழித்துரைப்பது நன்றன்று. அவர் எப் பொழுதும் குர்ரானின் அதிகாரத்தை மறுக்கவில்லை. தம்முடைய 'தவறுபடாக் கொள்கை ஆணை'யில்கூட அதை மறுத்துப் பேச வில்லை. வெவ்வேறு மதங்களில் உள்ள சிறந்தவற்றையெல்லாம் எடுத்துச் சிறந்த வகையில் இணைப்பதே அவருடைய குறிக்கோளா யிருந்தது. அது சிறப்பான தேசியக் குறிக்கோளாகவும் இருந்தது. அதற்காக அவர் பிற்காலத்தினரின் நன்றியறிதலுக்குப் பாத்திர மானது பொருத்தமானதேயாகும்.

## 7. அக்பரின் ஆளுமை

அஞ்சாத போர் வீரராயும், இரக்கமும் அறிவுடைமையும் பொருந்திய ஆட்சியாளராயும், ஒளி மிக்க கருத்துகள் பெற்ற மனிதராயும், குணவியல்பை மதிப்பிடுவதில் ஒரு சிறந்த நீதிபதி யாகவும் விளங்கிய அக்பர் இந்திய வரலாற்றில் ஒரு தனிப்பட்ட சிறப்பு மிக்க இடத்தைப் பெற்றுள்ளார். அபுல்பாஸலிடமிருந்தும் பகைமை பாராட்டிய திறனாய்வாளரான பதௌனியிடமிருந்தும் கூட அக்பர் அதிகாரம் செலுத்தும் ஆளுமை பெற்றிருந்தார் என்றும், ஒவ்வொரு அங்குலமும் அரசராகக் காணப்பட்டார் என்றும் அறிகிறோம். ஜஹாங்கீர் தம்முடைய குறிப்பேடுகளில் தம் தந்தை 'அவருடைய செயல்களிலும் இயக்கங்களிலும் இவ் வுலகத்து மனிதர்களைப் போலக் காணப்படவில்லை. கடவுளின் கீர்த்தி அவரிடம் வெளிப்பட்டுக் காணப்பட்டது' என்று எழுதி யிருக்கிறார். தைமூர்க் குடும்பத்திலிருந்து வந்த மற்ற அரசர்களைப் போலவே அக்பரும் போற்றத்தக்க தைரியமும், இயற்கைக்கு மாறான உடல் வன்மையும் பெற்றிருந்தார். பகைவர்களைத் துரத்தி ஓட்டுவதிலும் போர்க்களங்களிலும் அவர் சிறிதும் அச்ச மில்லாதவராய் இருந்தார். 'மாஸிடோனைச் சேர்ந்த அலெக் ஸாந்தரைப் போல அரசியல் விளைவுகளைப்பற்றிச் சிறிதும் கவனி யாது தம்முடைய உயிரையும் ஆபத்துக்குள்ளாக்குவதில் எப்பொழுதும் தயாராய் இருந்தார்'. மழைக்காலத்தில் அவர் அடிக்கடி வெள்ளம் நிறைந்தோடும் ஆறுகளைக் குதிரைமீது ஏறிக் கடந்து அக் கரைக்குப் பாதுகாப்பாகச் சென்றார். ஒரு மாபெரும் படையெடுப்பாளராயிருந்தாலும் பொதுவாக அவர் 'வதைக் காகவே வதை செய்வதில்' ஈடுபடவில்லை. உறவினர்களிடம் மிகவும் அன்புடையவராய் இருந்தார். காரணமின்றிப் பழிவாங்க

அவர் முற்படுவதில்லை. அவருடைய உடன்பிறந்தவரான ஹக்கீமிடம் அவர் நடந்துகொண்ட விதத்திலிருந்து அவர் செய்தநற்கிரங்கும் ஒரு கிளர்ச்சிக்காரனை மன்னிக்கும் இயல்பும் பெற்றிருந்தார் என்பதை அறிகிறோம். அரிதாகச் சில சமயங்களில் அவருக்குச் சினம் மிகுதியாகிவிடும். அப்போது குற்றவாளிகளைக் கடுமையாகத் தண்டித்துவிடுவார். இதை அவர் தம்முடைய அம்மான் முவஸ்ஸமிடமும்(Muazzam) மாற்றாந்தாய் மகன் ஆதம் கானிடமும் நடந்துகொண்ட விதத்திலிருந்து அறியலாம். ஆனால், பொதுவாக அவர் தம்மை முழுதும் கட்டுப்படுத்தி வைத்துக் கொண்டிருந்தார். அவருடைய பழக்கங்கள் எல்லாம் மிகவும் இன்புறுத்துபவையாக இருந்தன. அவர் பிறரை அழைக்கும் விதமும் இனிமை தருவதாயிருந்தது. இதனால் அவரிடம்தொடர்பு கொண்ட அனைவரும் அவரை வானளாவப் புகழ்ந்துள்ளனர். அவர் தம் குடிமக்களின் அன்பையும் மதிப்பையும் பெற்றிருந்தார். குடிமக்கள் டில்லி அரசரை உலகத் தலைவராகிய கடவுளாகவே கருதினர். அவர் உணவில் மிகவும் அளவாகவே இருந்தார். பழங்களை உண்பதில் பெரு விருப்பம் கொண்டிருந்தார். இறைச்சியில் அவருக்குச் சிறிதும் விருப்பமில்லை. பிற்காலத்தில் இறைச்சி உண்பதை அடியோடு நிறுத்திவிட்டார்.

அக்பர் எழுதப்படிக்கத் தெரியாதவராய் இருந்தாலும்[1] அவர் பண்பாடில்லாதவராய் இருக்கவில்லை. சிறந்த இலக்கிய ஆர்வமும் ஆழ்ந்த அறிவு ஆர்வமும், வியக்கத்தக்க நினைவாற்றலும் பெற்றிருந்த அவர், தத்துவம், இறையியல்(Theology), வரலாறு, அரசியல் போன்ற பல அறிவுத் துறைகளில் ஈடுபாடு கொண்டிருந்தார். வெவ்வேறு பொருள்களைப் பற்றிய நூல்கள் நிறைந்த ஒரு நூலகத்தை வைத்திருந்தார். அறிஞர்கள், கவிஞர்கள் தத்துவவாதிகள் இவர்களின் கூட்டத்தை மிக விரும்பினார். அவர்கள் புத்தகங்களை அவருக்கு உரக்கப் படித்துக் கூறிவந்தமையால் அவர் சூஃபி, கிறிஸ்தவ, ஸொராஸ்டிரிய, இந்து, சமண இலக்கியங்களில் நல்ல பயிற்சியுடையவரானார். 'விவாதப் பொருள் ஒன்றைப் பற்றி அவர் கூறிய அறிவுடனும், தெளிவுடனும் விவாதிப்பதைக் கேட்க நேர்ந்த எவரும் அவருக்குப் பரந்த இலக்கிய அறிவு இருப்பதாகவும், ஆழ்ந்த கல்வியறிவு இருப்பதாகவும் கூறுவர். அவர் எழுதப்படிக்க அறியாதவர் என்று எவரும் ஐயுறவே மாட்டார்கள்' என்று ஸ்மித் மொழிந்துள்ளமை இங்குக் குறிப்பிடத்தக்கதாகும். கலை, கட்டடக்கலை,

[1] இப்போது சில ஆசிரியர்கள் அவருக்குக் கல்வியறிவு உண்டு என்பதை நிரூபிக்க முயல்கின்றனர். பார்க்க, 1931 டிசம்பர் 30ஆம் நாளில் வெளிவந்த Liberty; இந்திய வரலாற்று முத்திங்கள் (Indian Historical Quarterly), டிசம்பர், 1940.

இயந்திர வேலைகள் இவற்றிலும் அவருக்கு ஓரளவுக்குச் சுவையார்வம் இருந்தது. பொருத்தும் பூட்டுகள் உற்பத்தி செய்வதில் சீர்திருத்தங்களும், வேறு பல கண்டுபிடிப்புகளும் செய்த பெருமையைப் பெற்றிருக்கிறார். அளவிடமுடியாத சக்தியும், சிறிதும் தளர்ச்சியடையாத முயற்சியும் கடவுள் கொடையாகப் பெற்றிருந்த அவர், அடுத்த அதிகாரத்தில் விளக்கப்போகும் பரந்த ஆட்சி முறை இயந்திரத்தை மிகு விரிவான திட்டத்தின்படி நிலை நிறுத்தினார். 'அய்னி அக்பரி'யிலிருந்து நாம் அறிவதுபோல அவர் 'மிகச் சிறிய செய்திகளும் மிகப் பெரிய விளக்கத்தைப் பிரதிபலிக்கும் சக்தியுடையன' என்று கருதினார்.

வெற்றிகளின்மூலம் நாட்டின் பரப்பை விரிவுபடுத்தும் பேராசையுடையவராயிருப்பினும், அவ் வெற்றிகளால் முகலாயப் பேரரசு பெரிதும் வட இந்தியாவின் கடைசி எல்லைவரை பரந்திருந்தாலும், அக்பர் தன்னலம் வாய்ந்தவரோ, கட்டுக்கடங்காத தம்முரிமை நாடும் வெறியாளரோ அல்லர். தோல்வியுற்ற மக்களின் உணர்ச்சிகளை அவர் புறக்கணிக்கவில்லை. சுயநலம் ஒன்றையே கருதி அவர்களுடைய உரிமைகளையும், சிறப்புரிமைகளையும் நசுக்கவில்லை. அவருடைய கருத்துப்படி அரசின் குறிக்கோள் மிக உயர்ந்தது. 'அரசனின் நடத்தையைப் பொறுத்தே எந்தச் செயற்பாட்டின் திறமையும் இருக்கும். அதனால் நேர்மையாக ஆட்சி செய்வதன் மூலமும், பிறருடைய தகுதிகளையறிந்து போற்றுவதன் மூலமுந்தான் அரசன் கடவுளுக்குத் தன் நன்றியைச் செலுத்த முடியும். குடிமக்களின் நன்றியறிவு அரசனுக்குக் கீழ்ப்படிதலிலும், அரசனைப் புகழ்ந்துரைப்பதிலும் காணப்படும்' என்று அவர் கூறியுள்ளார். மேதைக்குரிய தொலைவில் உணரும் ஆற்றலையும் பெற்றிருந்த அவர் தம்முடைய எல்லாக் குடிமக்களின் ஒத்துழைப்பையும் நல்லெண்ணத்தையும் கொண்டே முகலாயப் பேரரசின் அரசியல் அமைப்பையும் ஆட்சி முறையையும் நிறுவினார். மக்கள் தொகையில் மிகு பெரும்பான்மையானவர்களாக இருந்த இந்துக்களை இழிவாக நடத்துவதன் பொருத்தமின்மையையும், அல்லது அவர்களை எப்பொழுதும் சமத்துவமின்றியும் தாழ்மைப்படுத்தப்பட்டும் வைத்திருக்கும் நிலையிலேயே நீடித்து வைத்திருப்பதன் தகுதியின்மையையும் அவர் உண்மையாக உணர்ந்திருந்தார். இதிலிருந்து நாட்டு நலன் கருதும் அரசியல்வாதியாக அவர் மிகு மேலான சக்தி பெற்றிருந்ததை அறிகிறோம். ஷெர்ஷாவும் அவருடைய சந்ததியினரும் செய்ததைப் போலவே அக்பரும் இந்துக்களை நல்ல முறையில் நடத்தி அவர்களை உயர்ந்த உத்தியோகங்களில் அமர்த்தியதுடன் முஸ்லிம்களுக்கும், முஸ்லிம் அல்லாதவர்களுக்கும் இடையேயுள்ள

வெறுப்பைத் தோற்றுவிக்கும் வேறுபாடுகளை எல்லாம் களைய முயன்ருர். இவ்வாறு தம் ஆட்சியில் எட்டாம் ஆண்டில் பிரயாண வரியையும், ஒன்பதாம் ஆண்டில் ஜெஸியா (Jizya) வரியையும் நீக்கினுர். எல்லா மதங்களேயும் பொறுத்துக் கொள்ளவேண்டும் என்ற கொள்கையைத் தொடங்கிவைத்தார். உண்மையில் இந்தியாவின் தேசிய ஆட்சியினராயிருக்கும் நிலேயை அவாவும் ஒருவர் எந்த வழியில் ஒழுக வேண்டும் என்பதற்கான நெறியை இதன் மூலம் வகுத்திருக்கிருர்.

அக்பர் மனிதத் தன்மையை மதித்துப் போற்றும் சமுதாயச் சீர்திருத்தங்களேக் கொண்டுவர முயற்சி செய்தார். கலே இயக்கங் களின் புரவலராக இருந்தார். அடுத்து வரும் அதிகாரங்களில் இவையெல்லாம் விளக்கிக் கூறப்படும். எல்லா வகையிலும் அவருடைய ஆட்சிக் காலம் இந்திய வரலாற்றில் ஒளிமிக்க காலங் களுள் ஒன்ருகத் திகழ்கிறது. 'வரலாற்றில் பேராற்றல் வாய்ந்த அரசர்களுள் ஒருவராகத் திகழும் நேர்மையான உரிமையுடன், பிறக்கும்பொழுதே அவர் மக்களின் அரசராகப் பிறந்தார். அவ் வுரிமை அவருடைய சிறப்பு மிக்க இயற்கைப் பண்புகளாலும், அவருக்கே உரிய கொள்கைகளாலும், மாண்பு மிக்க செயற்கருஞ் செயல்களாலும் உறுதியுடன் நிலேத்து நிற்கிறது' என்று ஸ்மித் கூறுவது முற்றிலும் உண்மையாகும்.

# 3. ஜஹாங்கீரும் ஷாஜஹானும்

## 1. ஜஹாங்கீர்

அக்பர் இறந்த ஒருவாரத்திற்குப்பின் சலீம் தம் முப்பத்தாரும் வயதில் நூர் உதீன் முகம்மது ஜஹாங்கீர் பாதுஷா காஸி (Noor-ud-din Muhammad Jahangir Padshah Ghazi) என்ற பட்டப் பெயரைப் புனைந்துகொண்டு ஆக்ராவில் அரசுகட்டில் ஏறினர். இன்பம் காண்பதில் பெரு விருப்பினராயிருந்தாலும், அவர் படைபல வெற்றியில் முழுதும் பேராசை யில்லாதவராய் இருக்கவில்லை. முற்காலத் தைமூர்த்துகளின் அரச இருப்பிடமான டிரான்சோக்ஸியானவை (Transoxiana) வெற்றிக்கொள்வதைப்பற்றிக் கனவு கண்டுகொண்டிருந்தார். பட்டத்திற்கு வந்தவுடனே, ஆஸாதின் (Asad) சொற்களில் கூறினல்-எல்லாமக்களுடைய உள்ளங்களையும் வெற்றிகொள்ளப் பல வகையான முறைகளில் அவர் முயன்றார். அவரை எதிர்த்தவர்களுக்குப் பொது மன்னிப்புக் கொடுத்தார். சிறைக்கைதிகளை விடுதலை செய்தார். ஆக்ராக் கோட்டையிலுள்ள ஷாபுர்ஜிக்கும்(Shahburji) யமுனையின் கரையில் நிறுவப்பட்டிருந்த ஒரு கற்றூணுக்கும் இடையே புகழ்பெற்ற நீதிச் சங்கிலியை (Chain of Justice) நிறுவினர். அதில் கீழ்வரும் பன்னிரண்டு கட்டளைகளைப் பொறித்து வைத்துத் தம் இராச்சியத்தில் கவனிக்கப்படவேண்டிய ஆணை அவை என்று ஆணையிட்டார்.

1. வரிகளுக்குத் (zakat) தடை.

2. வழிப்பறிக் கொள்ளை, திருட்டு ஆகியவைபற்றிய ஒழுங்கு முறை விதிகள்.

3. இறந்து போனவர்களின் சொத்தைக் கட்டுப்பாடின்றி உரிமையாகப் பெறுதல்.

4. வைன் (wine) விற்பனைக்கும், போதையூட்டும் எல்லா வகையான மதுக்களுக்கும் தடை.

5, வீடுகளைக் கைப்பற்றுவதற்கும், குற்றவாளிகளின் மூக்குகளையும் காதுகளையும் வெட்டிவிடுவதற்கும் தடை.

6. சொத்தினை வலிந்து (ghasbi) கைப்பற்றுவதற்குத் தடை.

7. மருத்துவ விடுதிகளைக் கட்டுதலும் நோயாளிகளைக் கவனிப்பதற்காக மருத்துவர்களை நியமித்தலும்.

8. சில குறிப்பிட்ட நாள்களில் விலங்குகளைக் கொல்வதற்குத் தடை.

9. ஞாயிற்றுக்கிழமைக்கு உரிய மதிப்பளித்தல்.

10. மன்சப்தார்கள் (Mansabs), ஜாகிர்கள் இவற்றைப் பொதுவாக நிர்ணயித்தல்.

11. ஐமா (aima)[1] நிலங்களை நிர்ணயித்தல்.

12. கோட்டைகளிலும், எல்லாவகையான சிறைகளிலும் இருக்கும் எல்லாக் கைதிகளுக்கும் மன்னிப்பு.

ஜஹாங்கிர் அரசாங்க அலுவல்களில் அப்போது செய்த சில மாறுதல்களும் தமக்காக ஆதரவாளர்களின் குழு ஒன்றை ஏற்படுத்திக்கொள்ளச் செய்யப்பட்டவையேயாகும். அபுல் பாஸலைக் கொலைசெய்த பீர்சிங்கு பந்தேளாவுக்கு 3,000 குதிரைகள் அடங்கிய படையின் தளபதி என்ற பதவியை அளித்துச் சிறப்புச் செய்தார் ஜஹாங்கிர். ஆனால், அபுல் பாஸலின் மகனை அப்துல் ரஹ்மான், மான்சிங்கின் மகனை மஹாசிங்கு (Maha Singh) இவர்கள் 2,000 குதிரைகளடங்கிய படைக்கே தளபதிகளாக உயர்த்தப்பட்டனர். பாரசீகத் துணிகரச் செயல்வீரரும் நூர்ஜஹானின் தந்தையும், இத்திமத்-உத்தௌலா (Itimad-ud daulah) என்ற சிறப்புப் பெயருடன் புகழ் பெற இருந்தவருமான மீர்ஸா கியாஸ் பெக் என்பவர் 1,500 குதிரைகளடங்கிய படைக்குத் தளபதியாக உயர்த்தப்பட்டார்.

ஜஹாங்கிரின் 'முதல் இனிய கனவுகள்' எல்லாம் அவருடைய மூத்த மகனை குஸ்ராவின் கலகத்தினால் விரைவில் சிதைந்து நிலைகுலைந்தன. அக்பரின் ஆட்சிக்கால இறுதியிலிருந்தே குஸ்ராவுக்கும் அவருடைய தந்தைக்குமிடையே நிலவிய உறவு நட்புறவுக்கு அப்பாற்பட்டவையாய் இருந்தது. பாட்டனாரின் அன்பையும் ஆதரவையும் பெற்று அனுபவித்துக்கொண்டிருந்த குஸ்ராவ் பேரரசிலேயே மிகவும் புகழ் பெற்ற இளவரசராய் விளங்கினார்.

[1] வழிபாட்டிற்காகவும் புகழுக்காகவும் விடப்பட்ட நிலங்களை 'ஐமா' என்று வாகியாத்-இ-ஜஹாங்கீரியில் (Waqiat-i-Jahangiri) விளக்கப்பட்டுள்ளமை இங்குக் குறிப்பிடத்தக்கது.

அவருடைய தாய் மாமன் மான்சிங்கு, மாமனும் அக்பரின் மாற்றுந்தாயின் புதல்வருமான கானி ஆஸம் அஜீஸ் கோக்கா (Khan-i-A' zam Aziz Koka) போன்ற பல செல்வாக்கு மிக்க ஆதரவாளர்கள் அவர் சார்பில் இருந்தனர். ஜஹாங்கீர் பட்டத்துக்கு வந்த ஐந்து மாதங்களுக்குப் பிறகு அவர் ஆக்ராவை விட்டுப் பஞ்சாபிற்கு ஓடிப்போய் அங்கே கலகத்தை உண்டாக்கினார். ஜஹாங்கீர் தாமதமின்றி ஒரு பெரும் படையுடன் தம் மகனை அடக்கப் புறப்பட்டார். வழக்கமாகக் காலையில் அருந்தும் அபினியைக்கூடப் படையுடன் புறப்படும்அன்று காலையில் அருந்த மறந்துவிடுமளவுக்கு அவர் மனம் மிகப்பெரிதும் கலங்கியிருந்தது. ஜலந்தருக்கு அருகில் இளவரசரின் படைகள் பேரரசின் படைகளால் எளிதாகத் தோற்கடிக்கப்பட்டன. காபூலுக்குப் போவதற்காகச் சீனுப் நதியைக் கடக்க முயற்சி செய்யும்போது இளவரசரும் அவருடைய முக்கியமான பின்பற்றுவோரும் ஹுஸேன் பேக், அப்துல் அஜீஸ் இவர்களும் சிறை பிடிக்கப்பட்டனர். 'காலில் ஒரு விலங்கு பூட்டப்பட்டுக் கைகளும் கட்டப்பட்டு இளவரசர் தம் தந்தையின் முன்பு தர்பார் கூடியிருக்கும்போது கொண்டுவரப்பட்டார். கடுமையாக இகழ்ந்துரைக்கப்பட்ட பிறகு சிறையில் அடைக்கப்படுமாறு கட்டளை பிறந்தது.' அவருடைய ஆதரவாளர்களுக்கு இரக்கமற்ற கொடியதண்டனைகள்[1] தரப்பட்டன. சிறைப்பட்ட இளவரசர் 1622-ல் தாம் சாவை அடையும்வரை இன்னும் பல துன்பங்களுக்கு ஆளாக்கப்பட்டார். குஸ்ராவும் அவருடைய மருமகன் தாராஷுக்கோவும் முகலாய வரலாற்றில் இரக்கம் காட்டத்தக்க இருவராவர்.

ஐந்தாவது சீக்கிய குரு அர்ஜுன் (Arjun)[2] தூக்குத்தண்டனை அளிக்கப்பட்டார். அவருடைய சொத்து முழுவதும் பேரரசரால் பறிமுதல் செய்யப்பட்டது. அவர்மேல் சாட்டப்பட்ட குற்றம் அவர் கலகம் செய்த இளவரசருக்குப் பண உதவி செய்தார் என்பதுதான். சில வரலாற்றாசிரியர்கள், அவர் 'பெரும் அரசத் துரோகத்திற்கும் அரசருக்கு எதிரான செயலில் ஈடுபட்டதற்கும் ஏற்ற தண்டனை' அடைந்தார் என்று நம்புகின்றனர். ஆனால், ஜஹாங்கீரின் சொந்தக் குறிப்புகள் அப் பேரரசர் வெறும் அரசியல் காரணங்களைக் கொண்டு மட்டும் அம் முடிவுக்கு

[1] ஜஹாங்கீரே எழுதுவதாவது: 'நான் குஸ்ராவுக்குச் சிறையைக் கொடுத்தேன். இந்த இரண்டு போக்கிரிகளையும் (ஹுஸேன் பெக், அப்துல் அஸீஸ்) பசுமாடு, கழுதை இவற்றின் தோல்களால் சுற்றப்பட்டுக் கழுதைகளின்மீது வால் பக்கம் முகம் இருக்குமாறு உட்காரவைத்து நகர் முழுவதும் ஊர்வலமாக இழுத்துச் செல்லும்படிக் கட்டளையிட்டேன், (Elliot, Vol. VI, p. 300)

[2] அவருடைய கல்லறை லாகூர் கோட்டைக்குச் சிறிது வெளியேதான் அமைந்துள்ளது.

வரவில்லை என்பதைத் தெளிவாக்குகின்றன. டெர்ரியின்(Terry) வார்த்தைகளில் குருவினால் உதவி செய்யப்பட்ட இளவரசர் 'சிறந்த நடத்தையும், கண்டார் விரும்பும் தோற்றமும் கொண்டவரும் பொதுமக்களால் அளவிலாத அன்பு காட்டப்படுபவருமான ஒரு பெருமகனாயிருந்தார்.' [1]

'பொதுமக்கள் எல்லாருடைய அன்பிற்கும், ஆசைக்கும் நிலைக்களனாக அவர் விளங்கினார்.'[2] குருவின் நடத்தைக்கு அவருடைய இரக்க உள்ளமும் இயல்பான சமயப்பண்புமே காரணமாய் இருந்திருக்கலாம். பேரரசரிடம் சொந்த முறையில் எந்தப் பகைமையும் அவர் பெற்றிருந்தார் என்பதை அது காட்டுவதாகக் கொள்ள வேண்டியதில்லை. குருவே தம்முடைய தருமத்தின்படி தாம் செய்த செயல் நியாயமானதே என்றும், அக்பரால் காட்டப்பட்ட பழைய சலுகைகளுக்கு நன்றிசெலுத்தும் வழியாக அது இருந்தது என்றும் கூறினார். பேரரசர் ஜஹாங்கீருக்கு 'எதிராக இருந்ததனால் அன்று' என்றும் கூறினார். சீக்கியரின் மதக் குருவைத் தூக்கிலிட்ட ஜஹாங்கீரின் செயல் அரசியல் விவேகமற்ற செயலாகும். ஏனெனில், அச் செயல் அதுவரை அமைதியை விரும்பும் சமூகமாயிருந்த சீக்கியர்களின் எரிச்சலைக் கிளப்பிவிட்டு அவர்களைப் பேரரசின் எதிரிகளாக மாற்றிவிட்டது.

*1611* மே மாதத்தில் ஜஹாங்கீர் முன்பு மிஹிருன்னிஸா (Mihrun-nisa) என்று அழைக்கப்பட்ட நூர்ஜஹானை மணந்தார். அவருடைய வாழ்க்கையிலும் ஆட்சியிலும் அவள் பேரளவிற்குத் தன் செல்வாக்கைச் செலுத்தினாள். மிஹிருன்னிஸாவின் பிறப்பைப் பற்றியும் இளமை வாழ்க்கையைப் பற்றியும் கூறப்பட்ட பல கற்பனைக் கதைகளைத் தற்கால ஆராய்ச்சிகள் உண்மையல்லவென ஒதுக்கிவிட்டன. இக்பால் நாமா-இ-ஜஹாங்கீரி (Iqbal-Nama-i-Jahangiri) என்ற நூலின் ஆசிரியரான முதாமீத் கான் (Mutamid Khan) நம்பத்தகுந்த ஒரு சுருக்கமான வரலாற்றைக் கூறியிருக்கிறார். அதன்படி மிஹிருன்னிஸா அக்பரின் ஆட்சிக் காலத்தில் தம் மனைவியுடனும் குழந்தைகளுடனும் பாரசீகத்திலிருந்து வந்து இந்தியாவில் குடியேறிய மீர்ஸா கியாஸ் பெக் (Mirza Ghiyas Beg) என்பவரின் மகளாவாள். அவள் இந்தியாவுக்கு வரும் வழியில் காந்தகாரில் பிறந்தாள். அக்பருடைய ஆட்சிக்காலத்திலும், அவருடைய மகனுடைய ஆட்சியிலும் அவளுடைய தந்தை உயர்ந்த பதவிகளை அடைந்தார்.

[1] டெர்ரி, கிழக்கிந்தியப் பிரயாணம் (Voyage to East India), பக்கம் 411. சர் தாமஸ் ரோவின் (Sir Thomas Roe) குருவான டெர்ரி, குஸ்ராவைப் பல முறை சந்தித்தார்.

[2] அதே ஏடு.

அவள் பதினேழாம் வயதில் மற்ருெரு பாரசீகத் துணிவு மிக்க வீரரான ஆலி கூலி பெக் இஸ்தாஜ்ஹி (Ali Quli Beg Istajhi) என்பவருக்கு மணம் செய்து கொடுக்கப்பட்டாள். அவர் ஜஹாங்கீரின் ஆட்சித் தொடக்கத்தில் வங்காளத்தில் பாத்வான் ஜாகீரையும், ஷெர் ஆஃப்கன் (Sher Afghan) என்ற பட்டத்தையும் பெற்ருர். ஷெர் ஆஃப்கன் கீழ்படியாமல் கிளர்ச்சிகளில் ஈடுபட்டிருக்கிருர் என்று கேள்வியுற்றதும் கி.பி. 1607-ல் தம் மாற்ருந் தாயின் புதல்வரும் வங்காளத்தின் புதிய கவர்னருமான குதுப்-உதீனை ஷெர் ஆஃப்கனை அடக்கியொடுக்குமாறு ஜஹாங்கீர் அனுப்பினுர். குதுப்-உதீன் பேரரசருக்கு 'ஒரு அன்பு மகனைப் போலவும் அன்புச் சகோதரனைப் போலவும் இனிய நண்பனைப்போலவும்' இருந்தார். ஷெர் ஆஃப்கனுக்கும் குதுப்-உதீனுக்கும் பாத்வானில் போர் நடந்தது. அதில் குதுப்-உதீன் கொல்லப்பட்டார். குதுப்-உதீன் வழியாளர்கள் ஷெர் ஆஃப்கனைப் பிடித்துத் துண்டுதுண்டாக வெட்டினுர்கள். மிஹிருன்னிஸாவையும் அவருடைய இளம் மகளையும் அரசவைக்கு இழுத்துச் சென்றனர். நான்கு ஆண்டுகள் கழித்து மிஹிருன்னிஸாவின் கவர்ச்சிமிக்க 'தோற்றப் பொலிவு அரசரின் துரதிர்ஷ்டக் கண்களைக் கொள்ளைக் கொண்டது.' அதனுல் அவர் அவளை மணந்து கொண்டதோடு, அவளைத் தம்முடைய பட்டத்து அரசியாக்கிக்கொண்டார். நூர்-உதீன் என்று தம்மை அழைத்துக் கொண்ட பேரரசர் புதிய மனைவிக்கு நூர் மஹால் (அரண்மனை ஒளி) என்ற சிறப்புப் பெயரை அளித்தார். விரைவில் அப் பெயர் நூர்ஜஹான்(உலகின் ஒளி) என்று மாறிவிட்டது. மிஹிருன்னிஸா 'கன்னியாயிருக்கும்போதே, அக்பர் உயிரோடிருந்த காலத்தில்' அவளை ஜஹாங்கீர் காதலித்துவந்தார் என்றும், அவருடைய காமவெறி ஷெர் ஆப்கனின் உயிரைக்குடித்தது என்றும் சிலசமயங்களில் கூறப்படுகின்றன. ஆனுல், அக் காலத்து இந்திய வரலாற்ருசிரியர்களும், சில ஐரோப்பியப் பிரயாணிகளும் அதைப்பற்றி ஒன்றும் பேசாதிருப்பதனுல் பிற்கால ஆசிரியர்களால் புனைந்துரைக்கப்பட்டது என்று, இக் கருத்தின் உண்மை அண்மைக் காலத்தில் ஐயத்திற்கிடமாக்கப்பட்டிருக்கிறது. ஆனுல், மிஹிருன்னிஸாவைப் பேரரசில் ஒரு முக்கியமான பதவி வகித்த அவள் தந்தையிடம் கொண்டுபோகாமல் அரசவைக்குக் கொண்டுபோனதற்கான காரணம் என்ன என்று விளக்கப்படவில்லை; ஜஹாங்கீர் அரசவை மகளிருடன் மறைவாகக் காதல் உறவு கொண்டிருந்தார் என்பது அவர் 1615-ல் லாகூரில் அனுர்கலிக்காக ஓர் அழகிய பளிங்குக் கல்லறையை[1] எழுப்பி, அதில் கீழ்வரும் உணர்ச்சி மிக்க வாக்கியத்தைப் பொறித்ததிலிருந்து தெரிகிறது. 'ஆ! என்னு

[1] 1857 முதல் அது செயின்ட் ஜேம்ஸ் மாதாகோவிலாய் இருந்தது. இப்போது பஞ்சாப் அரசாங்கத்தின் ஆவணப் பதிவு அலுவலகமாக இருக்கிறது.

டைய ஆசைக் காதலியின் முகத்தை இன்னொரு முறை பார்க்க முடியுமாயின் மீட்புநாள்வரை நான் கடவுளுக்கு நன்றி செலுத்திக் கொண்டிருப்பேன்.'

உண்மையில் நூர்ஜஹான் அழகின் கொழுந்தாக இருந்தாள். பாரசீக இலக்கியம், கவிதை, கலைகளில் அழகிய சுவையுணர்வும் ஊடுருவி நோக்கும் அறிவும், பலவற்றில் ஆர்வம் கொள்ளும் மன இயல்பும், சிறந்த பகுத்தறிவும், வாய்ந்தவளாய் விளங்கினாள். ஆனால், அவளுடைய குண இயல்பில் மிகவும் ஆதிக்கம் வாய்ந்த பண்பாக இருந்தது அவளுடைய அளவுக்கு மீறிய பேராசையாகும். அப் பண்புதான் தன் கணவருக்கு மேல் அளவில்லாமல் உயர்ந்து நிற்கும்படி அவளைச் செய்தது. அவளுடைய தந்தையான இதிமாத் உத்-தௌலாவும் அவளுடைய சகோதரன் ஆஸப்கானும் அரச வையின் முதன்மை வாய்ந்த பிரபுக்களாயினர். மேலும், அவள் தன் முதல் கணவனுக்குப் பிறந்த மகளை ஜஹாங்கீரின் கடைசி மகனான இளவரசன் ஷஹ்ரியாருக்கு(Shahryar) மணமுடித்து வைத்துத் தன் நிலையை மேலும் பலப்படுத்திக்கொண்டாள்.

ஜஹாங்கீர் ஆட்சியின் முற்பகுதி சில முக்கியமான படைத் துறை வெற்றிகளைக் கண்டது. அவருடைய கவனம் முதலில் வங்காளத்தின் பக்கம் திரும்பியது. வங்காளம் பேரரசுடன் இணைந்துவிட்டபோதிலும் அங்கே ஆப்கானிய எதிர்ப்புக்கு இன்னும் முடிவு ஏற்படவில்லை. வங்காள கவர்னர்கள் அடிக்கடி மாற்றப்பட்டு வந்தமையின் அந் நாட்டு ஆப்கானியர்கள் கிளர்ச்சி செய்வதற்கு ஊக்கம் கொண்டனர். இஸ்லாம் கான் கவர்னரா யிருக்கும்போது, ஆப்கானியர்கள் உஸ்மான் கான் என்பவரின் தலைமையில் கிளர்ச்சி செய்தனர். திறமை மிக்கவரான இஸ்லாம் கான் கிளர்ச்சியை ஒடுக்குவதற்கு உடனே சீரிய முறைகளை மேற் கொண்டார். 1612 மார்ச்சு 12ஆம் நாள் பேரரசினர் ஆப்கானியர் களைத் தோற்கடித்தனர். அவர்களுடைய தலைவரான உஸ்மான் கான் தலையில் பலத்த காயம் பட்டதனால் அவர் இறந்தார். அது முகலாயர்களை எதிர்த்து வந்த ஆப்கானியர்களின் அரசியல் அதிகாரத்தை அன்றோடு முடிவடையுமாறு செய்தது. அதன் பின் ஜஹாங்கீரின் இணக்கக் கொள்கை, அவர்களைப் பேரரசுடன் நட்புடன் இருக்கச் செய்தது.

ஜஹாங்கீர் ஆட்சியில் முகலாயப் பேரரசின் மிகச்சிறந்த வெற்றியாகக் கருதப்படுவது மேவார் ராஜபுத்திரர்களின்மேல் பெற்ற வெற்றியே ஆகும். அந்த ராஜபுத்திரர்கள் பேரரசைச் சிறிதும் மதியாதவர்கள். அமர்சிங்கிடம் பிரதாப்பின் அசைக்க

முடியாத உறுதி காணப்படவில்லை. ஜஹாங்கீரின் மூன்றும் மகனுன இளவரசன் குர்ரம் (Khurram) கொண்ட கொள்கை சமாதானத் திற்காக இணங்கும்படி அவரை வற்புறுத்தியது. ராணுவும் அவருடைய மகன் கரனும் (Karan) முகலாயர்களுக்கு அடிபணிந்து பேரரசின் மேலாண்மையதிகாரத்தை ஒப்புக்கொண்டனர். ராணு மட்டும் பேரரசின் அரசவைக்கு நேரில் செல்ல வேண்டும் என்ற நியதியிலிருந்து விலக்கு அளிக்கப்பட்டார். அவருடைய குடும் பத்தைச் சார்ந்த எந்த இளவரசியும் அரசாங்க அந்தப்புரத் திற்கு எடுத்துச் செல்லப்படவில்லை. ஜஹாங்கீரே இதைப்பற்றி எழுதும்போது, 'அமர்சிங்கும் அவருடைய முன்னோர்களும் தங்கள் மலை நாட்டுப் பலத்தினுலும், தங்கள் இருப்பிடங்களின் பலத்தினுலும் செருக்குக் கொண்டு இந்துஸ்தானத்தின் அரசர் எவரையும் (அரசவையில்) பார்க்கவுமில்லை; எவருக்கும் அடி பணியவுமில்லை. இது என்னுடைய ஆட்சிக்காலத்திலும் நிகழப் பெறவேண்டும்' என்று குறிப்பிட்டிருக்கிருர். அதன் பின் ஜஹாங்கீர் தம்முடைய ஆக்ரா அரண்மனைத் தோட்டத்தில் ராணு, அவருடைய மகன் இருவருடைய ஆள் அளவு பளிங்குச் சிலைகளையும் வைத்தார். அவுரங்கசீப்பின் கொள்கை ராணு ராஜ் சிங்கைப் பிரித்து விடும்வரை ஜஹாங்கீர் மேவாருக்குத் தாராள மான சலுகைகள் அளித்தும், மேவாரைப் பொறுத்தவரை இணக்கமான ஒரு கொள்கையினை மேற்கொண்டும் மேவார் முகலாயப் பேரரசுக்கு அடங்கியிருக்கும்படி செய்தார்.

தக்கணத்தைப் பொறுத்தவரை ஜஹாங்கீர் தம் தந்தையின் முன்னேற்றக் கொள்கையினையே கடைப்பிடித்தார். அவருடைய ஆட்சிக்காலம் முழுவதும் அகமத் நகருக்கு எதிராக இடைவிட்டு விட்டுப் போர் நடந்துகொண்டேயிருந்தது. தக்கண இராச்சி யத்தின் பலத்தினுலும், பேரரசின் படைகள் போரில் ஊக்கம் காட்டாததாலும், முகலாயப்படைகள் அகமத் நகர்ப் படைகளைத் தோற்கடித்து முழு வெற்றியடைய முடியவில்லை. அகமத்நகர் இராச்சியம் அப்போது மக்களின் பிறவித் தலைவரும், மத்தியகால இந்தியா பெற்றெடுத்த மிகப் பெரிய நாட்டு நலன் கருதும் அரசியல் வாதிகளுள் ஒருவருமான மாலிக் ஆம்பர் (Malik Ambar) என்னும் அபிசீனிய மந்திரியால் திறமையாக ஆளப்பட்டு வந்தது. அவர் சிறந்த முறையில் இராச்சியத்தின் பொருள் வருவாய் முறையைச் சீர்திருத்தி அமைத்தார். அதனுல் இராச்சியத்தில் பொருளாதார நிலையுறுதி ஏற்பட்டது. பெரும்பாலும் மராத்தி யர்கள் அடங்கிய தம் படைவீரர்களுக்கு கொரில்லா (Guerrilla) போர் முறைப்படி பயிற்சி கொடுத்திருந்தமையால் அவர்கள் பேரரசப் படையினரை வெற்றியுற எதிர்த்து நிற்க முடிந்தது.

மாலிக் ஆம்பரின்மேல் எவ்வித விருப்பு வெறுப்பும் கொண்டிருக்க இயலாத முதமித்கான்(Mutamid Khan) என்னும்முகலாய அரசவையைச் சேர்ந்த வரலாற்று நிகழ்ச்சிக் கோப்பாளர் அவரைப் பற்றிப் பின்வருமாறு கூறுகிறார்: 'இந்த ஆம்பர் ஓர் அடிமையாய் இருந்தார். ஆனால், திறமை மிக்க மனிதர். போர்முறை, படைகளுக்கு ஆணையிடுதல், சிறந்த மதிப்பீடு, ஆட்சிமுறை இவற்றில் தமக்கு ஒப்பாரும் மிக்காரும் இல்லாதவராய் இருந்தார். தாகின் (Dakhin) மொழியில் பர்கி-கிரி (Bargi-giri) என்றழைக்கப்பட்ட எதிர் காலத்தில் வரப்போகும் போர் முறையைப்பற்றி நன்கு உணர்ந்திருந்தார். அந் நாட்டின் குழப்பம் விளைவிக்கும் உணர்ச்சிகளையெல்லாம் நசுக்கிவைத்துத் தம் வாழ்நாள் முடிவுவரையிலும் தம் உயர்ந்த நிலையைக் காப்பாற்றிவந்தார். அதே உயர்ந்த மதிப்பு நிலையில் தம் வாழ்க்கைப் பணியை முடித்துக்கொண்டார். அபிசீனிய அடிமை ஒருவர் அவ்வளவு உயர்ந்த நிலைமையை எய்தியதற்கு வேறொரு சான்றினை வரலாறு காட்டவில்லை.' தளபதிகளுக்குள் இடைவிடாது நிகழ்ந்த பிணக்குகளால் பேரரசின் படைகளுடைய செயல் முறைகள் எல்லாம் பெரிதும் தடைப்படுத்தப்பட்டன. போரை நடத்துவதற்குப் பெயரளவில் ஆணை முதலில் இளவரசர் பார்வேஸுக்குக் (Parwez) கொடுக்கப்பட்டது; பின்பு இளவரசர் குர்ரமுக்குக் கொடுக்கப்பட்டது.ஆனால்,அப்துர் ரஹீம் கானி-கானன்'(Abdur RahimKhan-i-Khanan)போன்ற இன்னும் சில முக்கியத் தலைவர்களே உண்மையில் போர்ச் செயல்களைக் கண்காணித்துவந்தனர். அவர்கள் தக்கண வீரர்களுடன் போரிடுவதைக்காட்டிலும்பெரும்பாலான நேரம்தங்களுக்குள் போரிட்டுக் கொள்வதில் கழித்தனர். கி. பி. 1616-ல் முகலாயர்களுக்கு ஒரு சிறு வெற்றியே கிடைத்தது. இளவரசர் குர்ரம் அகமத்நகரையும் வேறு சில கோட்டைகளையும் கைப்பற்றினார். குர்ரம் பெற்ற இவ் வெற்றியால் அவருடைய தகப்பனார் இவருக்கு ஷாஜஹான் (உலகத்தின் அரசர்) என்ற பட்டப் பெயரைக் கொடுத்துச் சிறப்பித்தார். மேலும் பல வகையான பரிசுகளையும் அவருக்கு அளித்தார். 30,000 ஸாத்துகள் (zat), 20,000 ஸவார்கள்(sawar) இவர்களுக்குத் தலைவராகக் குர்ரத்தின் பதவியை ஜஹாங்கீர் உயர்த்தினார். ஆனால், முகலாயர்களின் அகமத்நகர் வெற்றி வெளித்தோற்றத்திற்கு வெற்றியாகக் காணப்பட்டதேயன்றி உண்மையான வெற்றியன்று. தக்கணம் அவர்களால் முழுதும் வெற்றிகொள்ளப்படுவதற்கு மிகவும் எட்டாததாயிருந்தது. அகமத்நகர்'இலட்சக்கணக்காண ரூபாய்களும்,ஆயிரக்கணக்கான உயிர்களும் செலவிட்டும் முகலாய எல்லை 1605-ல் இருந்ததைக் காட்டிலும் ஒரு கோடுகூட அப்பால் விரிவுபடுத்தப்படவில்லை

என்ற ஆற்றல்மிக்க உண்மையை யாரும் மறைக்க முடியாது' என்று ஓர் ஆசிரியர் உரைத்துள்ளமை உண்மையேயாகும்.

ஜஹாங்கீர் ஆட்சியில் குறிப்பிடத்தக்க படைத்துறை வெற்றி வடகிழக்குப் பஞ்சாபின் மலைகளில் இருந்த வன்மைமிக்க காங்க்ராக் (Kangra)கோட்டையை 1620 நவம்பர் 16ஆம் நாள் கைப்பற்றியதேயாகும். ஆனால், ஜஹாங்கீருக்கு மிக்க மகிழ்ச்சியளித்த இந்த நிகழ்ச்சியைப் பின்தொடர்ந்து கொடிய துன்பங்களும் கிளர்ச்சிகளும் ஏற்பட்டன. இத் துன்பங்களும் கிளர்ச்சிகளும் ஜஹாங்கீர் கடைசியாகக் கண்மூடும்வரையில் முடிவடையவில்லை.

காந்தகாரை இழந்தமை பேரரசுக்கு முதல் பெரும் இடர்ப்பாட்டை உண்டாக்கியது. காந்தகார் நீண்ட காலமாக முகலாயர்களுக்கும் பாரசீகர்களுக்கும் இடையே மனக்கசப்பை உண்டாக்கும் மூலக் கருவியாகவே இருந்துவந்தது. ஆசியாவில் அக் காலத்தில் மிகப் பெரிய ஆட்சியாளர்களுள் ஒருவரான ஷா அப்பாஸ் (Shah Abbas) (1587—1629) முகலாய அதிகாரிகளுக்கு நிறையப் பரிசுகளைக் கொடுத்தும், நட்புமுறையில் பல வாக்குறுதிகளை அளித்தும், அவர்களை ஏமாற்றியும், பேரரசில் நிலவியிருந்த உள்நாட்டுக் குழப்பங்களைச் சாதகமாகப் பயன்படுத்திக்கொண்டும் 1621-ல் காந்தகாரின்மேல் படையெடுத்துக் கடைசியில் 1622 ஜூன் மாதத்தில் அதைப் பிடித்துக்கொண்டார். காந்தகாரை மீட்பதற்காக ஜஹாங்கீர் செய்த மிகப் பெரிய ஏற்பாடுகள் எல்லாம் வீணாயின. ஏனெனில், ஜஹாங்கீரால் படையெடுப்புக்குத்தலைமை தாங்கி நடத்திச் செல்லுமாறு ஏவப்பட்ட அவருடைய மகன் ஷாஜஹான் தாம் தலைநகரை விட்டுப் போய்விட்டால் சிம்மாசனத்துக்குரிய தம்முடைய உரிமைகளை எல்லாம் நூர்ஜஹான் மாற்றிவிடக்கூடும் என்றும், அவள் தன்னுடைய மருமகனை ஷஹ்ரியாரின் உரிமைகளைப் பலப்படுத்திக்கொள்வாள் என்றும் பயந்துகொண்டு நகராமல் இருந்தார். நூர்ஜஹானின் சூழ்ச்சிகளால் உரிமைகளை இழந்த ஷாஜஹான் விரைவில் தந்தைக்கு எதிராகக் கிளர்ச்சிசெய்தார். பேரரசரும் பேரரசியை அடக்கி வைக்கும் துணிவோ, ஆற்றலோ இல்லாமல் இருந்தார். இருதலைக் கொள்ளியின் உள்ளெறும்பு போல—வடமேற்கே பாரசீகர்களின் ஆதிக்கத்தை எதிர்க்கவேண்டியவராயும், அதே சமயத்தில் பேரரசின் இதயம் போன்ற பகுதியில் ஷாஜஹானின் கிளர்ச்சியை அடக்கவேண்டியவராயும்—பெருந் தொல்லைகளால் துன்புற்றார்; அவருடைய கவனமும் முயற்சிகளும் விரைவில் உள்நாட்டில் ஏற்பட்டிருந்த கிளர்ச்சியை அடக்குவதற்காகத் திரும்பலாயின;

ஷாஜஹான் அப்துர் ரஹிம் கானிகானுன் என்ற வயது முதிர்ந்த அதிகாரியைச் சேர்த்துக்கொண்டு முதலில் ஆக்ராவுக்குச் செல்லலாம் என்று எண்ணியிருந்தார். ஆனல், இளவரசர் பார்வேஸின் பெயரளவு ஆணையைக் கொண்டும் மஹபத்கானை (Mahabat Khan) உண்மையான தலைவராகவும் கொண்டுவந்த பேரரசின் ஒரு படை அவரை டில்லிக்குத் தெற்கிலுள்ள பலோச்பூர் (Balochpur) என்ற இடத்தில் 1623-ல் முழுமையாகத் தோற்கடித்து விட்டது. மாகாணத்துக்கு மாகாணம் அவர் துரத்தப்பட்டார். அவர் மீண்டும் மீண்டும் பின்வாங்கவே நேரிட்டது. முதலில் தக்கணத்துக்குச் சென்ருர். பின்பு அங்கிருந்து வங்காளத்துக்குத் துரத்தப்பட்டார். ஆனல், அங்கே நிலையாய்த் தங்கியிருக்க முடியாமல் மீண்டும் தக்காணத்துக்குத் திரும்பி வந்தார். சில ஆண்டுகள் மாலிக் ஆம்பர் போன்ற மற்றும் சிலருடைய கூட்டுறவை நாடி அலைந்து திரிந்தார். கடைசியில் 1625-ல் அவர் தம் தந்தையுடன் இணக்குவிக்கப்பட்டார். அவர்களுடைய புதல்வர்களான தாராஷுக்கோவும், அவுரங்கசீப்பும் அரசவைக்கு அனுப்பப்பட்டனர். ஒரு வேளை அவர்கள் ஷாஜஹானின் நன்னடத்தைக்கு ஜாமீனுக இருக்கும்படி அனுப்பப்பட்டிருக்கலாம். பிறகு அவர் தம் மனைவி மும்தாஜ் மஹாலுடனும், நூர்ஜஹானின் ஒரு மருமகனுடனும், கடைசி மகனுன முராதுடனும் நாசிக் சென்று ஓய்வெடுத்துக்கொண்டார். இவ்வாறு அவருக்காக எவ்விதப் பயனுமின்றி, ஆனல் பேரரசுக்குப் பெரிய நஷ்டத்துடன் ஷாஜஹானின் வீணுன கிளர்ச்சி முடிவுற்றதாகத் தெரிகிறது.

ஜஹாங்கீரின் ஆட்சிக்காலத் தொடக்கத்தில் பிறப்பில் ஆப்கானியரான மஹபத்கான் 500 பேர்கள் அடங்கிய மன்சாப் ஒன்றை மட்டும் வைத்திருந்தார். விரைவாக உயர்ந்தநிலைகளுக்கு உயர்த்தப்பட்டதால் அவர் பேரரசருக்கு மிகச் சிறந்த தொண்டுகள் செய்தார். ஆனல், அவருடைய வெற்றி நூர்ஜஹான் அவளுடைய சகோதரன் ஆஸஃப்கான் ஆகிய இருவரின் பொருமைத் தீயையும் கிளப்பிவிட்டது. அரசியின் வெறுப்பு அவரையும் கிளர்ச்சி செய்யத் தூண்டியது. பேரரசர் காபூலிலிருந்து திரும்பி வந்துகொண்டிருக்கும்போது வழியில் துணிவான ஒரு திடீர்த் தாக்குதல் மூலம் ஜீலம் நதிக்கரையில் அவர் ஜஹாங்கீரைச் சிறை பிடித்துவிட்டார். நூர்ஜஹான் எப்படியோ தப்பிவிட்டாள். ஆனல், படைபலத்தின் மூலம் தன் கணவரைக் காப்பாற்றச்செய்த முயற்சிகள் எல்லாம் வீணுயின. அவளும் கணவருடன் சிறைக்குச் சென்ருள். கடைசியில் அவளும் அவளுடைய கணவரும் மஹபத்கானை ஏமாற்றிவிட்டுத் தங்களுடைய வீரர்கள் ஒரு பெரிய

படையைத் திரட்டி வைத்திருந்த ரோஹ்தாஸுக்குத் தப்பிச் செல்வதில் வெற்றியுற்றனர். ஆனால், நூர்ஜஹானின் வெற்றி குறுகிய காலமே இருந்தது. ஏனெனில், 1627 அக்டோபர் 28ஆம் நாள் பேரரசர் இறந்துபோனார். அவருடைய உடலம் ரவி நதிக் கரையில் உள்ள ஷாதாராவில் (Shahdara) ஓர் அழகிய கல்லறையில் புதைக்கப்பட்டது.

இந்திய வரலாற்றில் ஜஹாங்கீர் ஒருசிக்கல் நிறைந்த ஆளுமை யாளராகத் தோன்றுகிறார். டெர்ரி அவரைப்பற்றிக்கூறுவதாவது: 'அந்த அரசரின் மன இயல்பு முரண்பட்ட இரு கோடிகளுக்கும் அடிக்கடி இடம்மாறிச் செல்வதாயிருந்தது என்றே எனக்குத் தோன்றுகிறது. ஏனெனில் சில சமயம் அவர் கொடுமையாளராய் இருப்பார். மற்றச் சமயங்களில் மிகவும் தாராளமுடையவராயும், இளகிய மனமுடையவராயும் காணப்படுவார்.' பெவரிட்ஜ் (Beveridge) கூறுகிறார்: ஜஹாங்கீர் உண்மையில் வியப்பு மிக்க பண்புகளின் ஒரு கலவையாக இருந்தார். அவர் மனிதர்கள் உயிரோடு தோல் உரிக்கப்படுவதை அருகில் நின்று கவனிப்பார்... எனினும், நீதியின் காதலராயும், வியாழக்கிழமை மாலை நேரங் களைப் பிறரிடம் உயர்ந்த தத்துவம் பேசுவதில் கழிப்பவராயும் காணப்படுவார். அபுல்பாஸலை இரக்கமின்றிக் கொலை செய்யச் செய்துவிட்டு அதை ஒப்புக்கொண்டும்விடுவார். குளிர்காலத்தில் அரசாங்க யானைகள் தங்கள் மேல் குளிர்ந்த நீரை ஊற்றிக் கொண்டு குளிரில் நடுங்கும்போது அவற்றைப் பார்த்து இரக்கப் படவும் செய்வார்...ஜஹாங்கீரிடம் இருந்த ஒரு நல்ல பண்பு அவர் இயற்கையை நன்றாக அனுபவித்ததும் பூக்களைக் காதலித் ததுமாகும். பேரரசரின் கடைசி வரலாற்றாசிரியர் ஒருவரின் கருத்துப்படி 'அவர் அறிவுணர்ச்சியும் இரக்க உள்ளமும் படைத்த வராய் இருந்தார். குடும்பத்தில் மிகுந்த பாசமுடையவராயும், எல்லாரிடத்திலும் தாராளமானஉதாரகுணம் காட்டுபவராகவும், பிறரை நசுக்குவதில் மிக்க வெறுப்புஉடையவராயும், நீதியிடத்துப் பேரார்வம் உடையவராயும் இருந்தார். இளவரசராகவும் பேரரசராகவும் அவர் வாழ்ந்த காலத்தில் ஒரு சில சமயங்களில் தனிப்பட்ட முறையில் கொடுஞ் செயல்கள் புரியுமாறு சின முற்றதும் உண்டு. அச் சீற்றத்திற்குப் போதிய தூண்டுதலும் இருந்திருக்கும். ஆனால், பொதுவாக அவர் மனத்திண்மை, அன்புடைமை திறந்த உள்ளம் படைத்தவராகச் சிறந்து விளங் கினார்.' ஃபிரான்சிஸ் கிலாட்வின்கூட (Francis Gladwin) 'ஜஹாங்கீரின் ஆட்சியின் தொடக்கம் முதல் இறுதிவரை குடிமக்க ளிடம் அவர் கொண்டிருந்த மன இயல்பு எப்போதும் மனிதத் தன்மையுள்ளதாகவும, கண்ணோட்டமுள்ளதாகவுமே இருந்தது'

என்று கூறியிருக்கிறார். பொருள்களை ஓரிடத்திலிருந்து இன்னோரிடத்திற்கு எடுத்துச்செல்வதற்கான தொல்லைமிக்க சில சுங்கங்களையும், வரிகளையும் நீக்கினார். அலிகளைச் (eunuchs) சேரும் புணர்ச்சிக்குத் தடை விதிக்க முயற்சி செய்தார். நீதியுணர்ச்சி மிக்கு விளங்கினார். 'நான் கொடுத்த முதல் உத்தரவு நீதிச் சங்கிலியை இறுகக் கட்டுவதற்கேயாகும்' என்று அவரே எழுதியிருக்கிறார். அறுபது ஆராய்ச்சி மணிகளைக் கொண்டிருந்த அந்த நீதிச் சங்கிலியை எந்த மிகு தாழ்மையான குடிமக்களும் தங்களுடைய கஷ்டங்களை அவருடைய கவனத்திற்குக் கொண்டுவர அசைத்து அடிக்கலாம். குற்றவாளியின் உயர்பதவியைப் பற்றி எந்த விதமான சலுகையும் காட்டாது அவர் தண்டனைகள் வழங்கினார். இவ்வாறு ஒரு சமயம் செல்வாக்குமிக்க ஒரு கொலையாளிக்குத் தூக்குத்தண்டனையளித்து விட்டு அவர் இவ்வாறு கூறியிருக்கிறார்; 'இப்படிப்பட்ட விஷயங்களில் இளவரசர்களுக்குச் சலுகைகள் அளிப்பதையோ அமீர்களுக்குச் சலுகைகள் கொடுப்பதையோ கடவுள் தடுக்கட்டும்.' அவருடைய ஆட்சிக் காலத்தில்தான் இந்தியாவுக்கும் ஐரோப்பாவுக்கும் தொடர்பு ஏற்படத் தொடங்கியது.

சிறந்த கலைச் சுவையுணர்வு கொண்டிருந்த அவர், தாம் ஒரு ஓவியராயும், கலை, இலக்கியங்களின் புரவலராயும், இயற்கையின் காதலராயும் இருந்தார். அவருடைய தூஸிக்(Tuzuk) வாழ்க்கைக் குறிப்புகள் அவருடைய இலக்கியப் பயிற்சிக்குச் சிறந்த எடுத்துக் காட்டாய்த் திகழ்கிறது. ஆனால், அவர் கட்டுப்பாட்டை இழந்து அளவுக்குமீறிச் சென்றுவிடும் பழக்கமுடையவராய் இருந்தமையின் அது படிப்படியே அவருடைய சிறந்த பண்புகளையெல்லாம் கெடுத்துவிட்டது. மேலும், அவருடைய மன இயல்பு அடிக்கடி முரண்பாடாக மாறுபடுவதற்கும் காரணமாய் இருந்தது. ஜஹாங்கீரின் சமயக் கொள்கை தந்தையினுடையதைப் போன்று பகுத்தறிவு வாய்ந்ததாய் இருக்கவில்லை. ஆனால், பிற மதங்களிலுள்ள நல்லவற்றையெல்லாம் தேர்ந்தெடுத்துக் கொள்பவராகவோ, இதயத்தில் ஒரு கிறித்தவராகவோ இருக்கவில்லை. கடவுளிடத்தில் உண்மையான நம்பிக்கை கொண்டிருந்தவராய் அவர் எந்த ஒரு குறிப்பிட்ட மதப் பிரிவையோ மதக் கொள்கைகளையோ வெறுமனே பின் பற்றுவதில் திருப்தி அடையவில்லை. ஆனால், ஒரு வகை தெய்வக் கொள்கையினராவர். இந்து முஸ்லிம் முனிவர்களுடனும், கிறிஸ்தவ மதப் பிரசாரகர்களுடனும் உரையாடல் செய்வதில் அவர் பெருவிருப்பம் கொண்டிருந்தார். ஆனால், மதங்களுக்குரிய படங்களை முக்கியமாகக் கிறிஸ்தவப் படங்களை, மதித்துப் போற்றினார். ஆனால், இந்துக்கள், பாரசீகர்கள், (ஸெராஸ்டிரியர்கள்), கிறிஸ்தவர்கள் இவர்களுடைய சடங்குகளையும் பழக்க வழக்கங்களையும் அவர் ஏற்றுக் கொள்ளவில்லை;

## 2. ஷாஜகான்

### அ. சிம்மாசனத்திற்குப் போராட்டம்

ஜஹாங்கீரின் மரணத்திற்குப் பிறகு சிறிது காலம் சிம்மாசன உரிமைக்காகப் போராட்டம் நடந்தது. அவர் 1627 அக்டோபரில் இறந்தபோது அவருடைய மகன் ஷாஜஹான் இன்னும் தக்கணத்திலேயே இருந்தார். அவருடைய இரண்டு சகோதரர்கள் குஸ்ராவ், பார்வேஸ் இருவரும் ஏற்கெனவே இறந்துபோய் விட்ட போதிலும் இன்னொருவர் இளவரசர் ஷஹ்ரியார் இருந்தார், தம்முடைய மாமியாரான நூர்ஜஹானின் தூண்டுதலின் பேரில் அவர் லாகூரில் தம்மைச் சக்கரவர்த்தி என்று அறிவித்துக்கொள்வதில் சிறிதும் காலந்தாழ்க்கவில்லை. ஆனால், மும்தாஜ்மஹாலின் தந்தையான ஆஸப்கான் ஷாஜஹானுக்காகத் திறமையாகப் பாடுபட்டார். மிகவும் விழிப்பாயிருந்த அவர் வடக்கே புறப்பட்டு வரும்படி ஷாஜஹானுக்குச் செய்தியனுப்பினார். அதே சமயத்தில் ஷாஜஹான் வரும்வரை, தலைநகரத்து மக்களைத் திருப்திபடுத்துவதற்காகக் காலஞ்சென்ற இளவரசர் குஸ்ராவின் மகனை இளவரசன் தாவர் பக்ஷைப் (Dawar Bakhhs) பேரரசரின் இடம் நிரப்பும் அரசராகச் சிம்மாசனத்தில் ஏற்றி வைத்தார். மீர்பக்ஷியான (Mir Bakshi)இராதத்கானைத் (Iradat Khan) தம் வசமாக்கிக்கொண்டு ஆஸப்கான் படையுடன் லாகூருக்குச் சென்றார். ஷஹ்ரியாரின் படைகளைத் தோற்கடித்து அவரைக் கைதியாக்கிக் கண்களை குருடாக்கினார். ஷாஜஹான் தக்கணத்திலிருந்து ஆக்ராவுக்கு விரைந்து வந்தார். 1628 பிப்ரவரியில் தலைநகரில் அவர் சக்கரவர்த்தியாக அறிவிக்கப்பட்டார். 'அபுல் முஸஃப்பர் ஷிஹாப்-உத்-தீன் முகமது ஸாஹிப்-இ-கிரான் II ஷாஜஹான் பாதுஷா காஸி (Abul Muzaffar Shihab-ud-din Muhammad Sahib-i-qiran II Shah Jahan Padshah Ghazi) என்ற பெரும் பட்டப் பெயரையும் அவர் தரித்துக் கொண்டார். அக்காலத்து வரலாற்றுக் கோப்பாளரால் பொருத்தமுறப் 'பலி ஆடு என்று வருணிக்கப்பட்ட இளவரசர் தாவர்பக்ஷ் விரைவில் சிம்மாசனத்திலிருந்து அகற்றப்பட்டுச் சிறைக்கு அனுப்பப்பட்டார். ஆனால், பிறகு விடுதலையளிக்கப் பெற்றார். அதன் பின் அவர் பாரசீகத்திற்குச் சென்று அதனுடைய ஷாவின்கீழ் ஊதியம் பெற்று வாழ்ந்துவந்தார். ஷாஜஹான் தமக்கு எதிராக இருக்கும் எல்லாப் போட்டியாளர்களையும் 'உலகத்திலிருந்தே' நீக்கிவிடுவதில் வெற்றி பெற்றார். தம்முடைய புதல்வர்கள் இருவர் தூக்கிலிடப்படுவதையும், மூன்றாமவர் நாட்டைவிட்டுத் துரத்தப்படுவதையும் அவர் தம் கண்ணாலேயே பிற்காலத்தில்

பார்க்க நேர்ந்தது. அவரே தம் கடைசிக் காலத்தைச் சிறைக் கைதியாகவே கழிக்கவும் நேர்ந்தது.

## ஆ. கிளர்ச்சிகள்

அந்தச் சமயத்தில் எல்லாம் பேரரசுக்குச் சாதகமாகவே நடந்தன. அவர் ஆழ்ந்த தன்னம்பிக்கையுடனும் வெற்றியுடனும் தம் ஆட்சியைத் தொடங்கினார். ஆஸப்கானும் மஹபத்கானும் அவர்கள் செய்த தொண்டுகளுக்காக உயர்ந்த பதவிகளுக்கு உயர்த்தப்பட்டனர். முதலாமவர் பேரரசின் வஸீர் (Wazir) ஆகவும், பின்னவர் அஜ்மீர் கவர்னராகவும் ஆக்கப்பட்டனர்; தம் ஆட்சியின் முதலாவது ஆண்டிலும் இரண்டாவது ஆண்டிலும் முறையே தோன்றிய இரு கிளர்ச்சிகளைப் பேரரசர் எளிதில் அடக்கிவிட்டார். முதலாவது பீர் சிங்கு பந்தேலாவின் (Bir Singh Bundela) மகனும் பந்தேலாவின் தலைவருமான ஜுஜ்ஹார் சிங்கு (Jujhar Singh) என்பவராலும், மற்றது தக்கணத்து முன்னாள் ராஜப் பிரதிநிதியான பலம் பொருந்திய ஆப்கானியப் பிரபு கான் ஜஹான் லோடி என்பவராலும் செய்யப்பட்டன. பந்தேலாத் தலைவர் விரைவில் தோற்கடிக்கப்பட்டு மலைகளுக்கு ஓடுமாறு விரட்டப்பட்டார். ஆனால், அவர் அங்கிருந்து கொண்டே 1634 வரை பேரரசுக்குத் தொல்லைகள் விளைவித்துக் கொண்டே இருந்தார். கடைசியில் அவர் பேரரசுப் படைகளால் தோற்கடிக்கப்பட்டு அவருடைய நாட்டிலிருந்து போய்விடும்படி கட்டாயப்படுத்தப்பட்டார். பந்தேலா எழுச்சியைக் காட்டிலும் மிகு வலிமை வாய்ந்ததாயிருந்தது கான்ஜஹான் லோடியின் கிளர்ச்சியாகும். அவர் அகமத்நகரின் கடைசி நிஸாம் ஷாஹி ஆட்சியாளர்களுடன் சேர்ந்துகொண்டும், மராத்தியர்,ராஜபுத்தி ரர்களை ஆதரவாளர்களாகக் கொண்டும், கிளர்ச்சி செய்தார். 'முகலாய அரச வமிசத்தின்மீது ஆப்கானியத் தலைவர்கள் கொண்டிருந்த பரம்பரைப் பகைமையைக் கொண்டு செலுத்து வதாய்' இருந்த அவருடைய முயற்சிகள் வெற்றி பெற்றபின் பேரரசுக்குரியனவாய் இருந்த தெற்கு மாகாணங்கள் பேரரசுக்கு உரியனவல்லாமற் போயிருக்கும். ஆனால், அந்த இடர்ப்பாடான நிலைமையை முற்றிலும் அறிந்துகொண்டிருந்த ஷாஜஹான் கிளர்ச்சியை ஒடுக்குவதற்காகச் சிறந்த வீரர்கள் அடங்கிய படையை அனுப்பினார். இடத்துக்கு இடம் துரத்தப்பட்டும், கூட்டாளிகளால் கைவிடப்பட்டும், நண்பர்களையும் உறவினர் களையும் போரில் இழந்தும் அந்த ஆப்கானியத் தலைவர் மூன்றாண்டு களாகப் பேரரசினரை எதிர்த்துக் கடும்போர் புரிந்தார். ஆனால், கடைசியில் காலிஞ்சாரின் வடக்கிலிருந்த டால் ஸெஹோண் டாவில் (Tal Schonda) தோற்கடிக்கப்பட்டு நான்காம் ஆண்டில்

அவருடைய புதல்வரான அஸீஸ் (Aziz), ஜமால் (Aimal) ஆகிய இருவருடன் அவரும் துண்டு துண்டாக வெட்டப்பட்டார்.

## இ. போர்ச்சுகீசியர்களை நடத்திய முறையும் ஹூக்ளியைக் கைப்பற்றுதலும்

அரசஆணை ஒன்றைக்கொண்டு போர்ச்சுகீசியர்கள் வங்காளத்திலுள்ள சத்கவோனில் (Satgaon) கி.பி. 1579ஆம் ஆண்டளவில் தங்களை நிலைப்படுத்திக்கொண்டனர். ஹூக்ளியைச் சுற்றிலும் பல பெரிய கட்டடங்களை எழுப்பிக்கொண்டு படிப்படியாகத் தங்கள் நிலையை வலிமைப்படுத்திக்கொண்டனர். அதன் விளைவாக ஹூக்ளி வாணிகத்துறைக் கண்ணோட்டத்தில் சத்கவோனைவிட மிகு முக்கியமான நகரமாகிவிட்டது. ஆனால், அமைதியான வாணிக வேலைகளைக் கவனிப்பதுடன் நின்றுவிடாமல், போர்ச்சுகீசியர் சில விரும்பத்தகாத செயல்களையும் மேற்கொண்டு ஷாஜஹானுக்குச் சீற்றம் உண்டாகுமாறு செய்தனர். அரசாங்கத்துக்குச் சேரவேண்டிய பொருள் வருவாய்க்கு ஊறு உண்டாகுமாறு இந்திய வாணிகர்களிடமிருந்து, சிறப்பாக அந்தக் காலத்தில் ஒரு முக்கியமான வாணிகப்பொருளாகச் சிறப்படைந்திருந்த புகையிலை மீது மிகு அதிகமான சுங்கம் வசூலித்ததுடன் அவர்கள் வெறுக்கத்தக்க கொடிய பழக்கமான அடிமை வாணிகத்தைத் தொடங்கு மளவுக்குக் கொடுமை வாய்ந்தவர்களாகவும் இருந்தனர். அடிமை வாணிகத்திற்காகப் பல இந்து அல்லது முஸ்லிம் அநாதைக் குழந்தைகளைத் திருடிக்கொண்டு சென்று அவர்களைக் கிறித்தவ மதத்திற்கு மாற்றிவிட்டனர். அவர்களுடைய அடாச்செயல் மும்தாஜ்மஹாலின் இரண்டு அடிமைச் சிறுமிகளை அவர்கள் பிடித்துக்கொள்ளுமளவுக்கு முற்றிப்போய்விட்டது. இது ஒன்றே மூகலாய பேரரசரின் கடுஞ்சினத்தை மூட்டுவதற்குப் போதுமானதாய் இருந்திருக்கவேண்டும். இயேசு சங்கத்தைச் சேர்ந்த சில பாதிரிமார்கள் இந்தியர்களைக் கிறித்தவர்களாக மாற்றிவந்தமையும் போர்ச்சுகீசியருக்கு எதிராக அவருக்குப் பெருவெறுப்பு ஏற்படும்படி செய்தது. பட்டத்திற்கு வந்ததும் ஷாஜஹான் காஸிம் அலிகானை (Kasim AliKhan) வங்காள கவர்னராக நியமித்துப் போர்ச்சுகீசியர்களுக்குத் தண்டனை கொடுக்கும் கடமையையும் பொறுப்பையும் அவருக்கு அளித்தார். அதனால், காஸிம் அலிகானின் மகனுடைய தலைமையின்கீழ் ஒரு பெரும்படை 1632 ஜூன் 24ஆம் தேதி ஹூக்ளியை முற்றுகையிட்டு, மூன்று மாதங்களுக்குப் பிறகு அதைக் கைப்பற்றியது. அரசவை வரலாற்று நிகழ்ச்சிக் கோப்பாளரான அப்துல் ஹமீத் லாஹூரி மூலம் நாம் அறிந்துகொள்வதுபோலப் போர்ச்சுகீசியர்களுள்

பலர் கொல்லப்பட்டனர். மிகுந்த எண்ணிக்கையுடைய போர்ச்சு கீசியர்கள் சிறைபிடிக்கப்பட்டு ஆக்ராவுக்குக் கொண்டு செல்லப் பட்டனர். அங்கே அவர்கள் மிகு பெருந் துன்பங்களை அடைந்தனர்.

## ஈ. தக்கணத்திலும் குஜராத்திலும் பஞ்சம், 1630—1632

ஷாஜஹான் ஆட்சியின் நான்காம், ஐந்தாம் ஆண்டுகளில் அஞ்சத்தக்க மிகு கொடிய ஒரு பெரும் பஞ்சம் தக்கணத்தையும், குஜராத்தையும் பாலைவனமாக்கியது. அஞ்சத்தக்க அழிவை உண்டாக்கிய அப் பஞ்சத்தின் கொடுமைகளைப்பற்றி அப்துல் ஹமீத் லாஹுரிஇவ்வாறு வருணித்துக் கூறியுள்ளார். 'இந்த இரு நாடுகளிலும் வாழ்ந்த மக்கள் இல்லாமை என்னும் உச்சிக்கே சென்றுவிட்டனர். ஒரு ரொட்டித் துண்டுக்காகத் தம்மையே விற்க முன்வந்தனர். ஆனால், வாங்குவார் ஒருவரும் இல்லை. ஒரு கேக்குக்காக உயர் பதவி விற்கப்பட்டது. ஆனால், ஒருவரும் அதைப்பற்றி அக்கறைப்படவில்லை. வரையாது வழங்கி வந்த கைகள் உணவுக்காகப் பிச்சையெடுக்க நீட்டின. எப்போதும் மன நிறைவு என்னும் பாதையில் நடந்துவந்த பாதங்கள் உயிரோ டிருந்தால் போதும் என்ற நிலையில் உணவைத்தேடி அலைந்தன. நீண்ட காலமாக ஆட்டிறைச்சிக்குப் பதிலாக நாயின் இறைச்சி விற்கப்பட்டுவந்தது. இறந்தவர்களின் எலும்புகள் அரைக்கப் பட்டுத் தூளாக்கி மாவுடன் கலந்து விற்கப்பட்டன. இது கண்டு பிடிக்கப்பட்டபோது அப்படி விற்றவர்கள் நீதியின் முன் கொண்டு வந்து நிறுத்தப்பட்டனர். மனிதர்கள் ஒருவரை ஒருவர் கடித்து விழுங்கும் அளவுக்கு, இல்லாமையாகிய பஞ்சம் உச்சநிலையை அடைந்திருந்தது. மகனுடைய அன்பைக் காட்டிலும் அவனுடைய உடலிறைச்சியையே தந்தை விரும்பினார். பாதைகளில் பிணமாக வீழ்ந்துகிடந்தோர்களால்போக்குவரத்துக்குத் தடை ஏற்பட்டது. அளவிலாக் கொடுந்துன்பங்கள் உற்றும் உயிர் போகப்பெறுமல் இருந்த ஒவ்வொருவரும் பிறநாடுகளின் சிற்றூர்களுக்கும் நகரங் களுக்கும் நாடோடிகளாகச் சென்றனர்.' பஞ்சம் தலைவிரித்தாடும் போது பீட்டர் மண்டி(Peter Mundy) என்ற ஓர் ஆங்கில வணிகர் வியாபாரத்திற்காகச் சூரத்திலிருந்து ஆக்ராவுக்கும், பாட்னு வுக்கும் போய் வந்தவர்கூடப் பஞ்சத்தின் கொடுமைகளைப்பற்றி விரிவான செய்திகளை எழுதிவைத்துச் சென்றிருக்கிறார்.

## உ. வடமேற்கு எல்லைக் கொள்கை

முக்கிய மாகாணமான காந்தகாரை மீட்டுவிடவேண்டும் என்று ஷாஜஹான் தீர்மானித்தார். அம் மாகாணமில்லாமல் வடமேற்கு எல்லையில் முகலாயரின் நிலை சிறிது பலவீனமாகவே

இருந்தது. தந்திரமான பேச்சுவார்த்தைகள் மூலம் அவர் காந்த காரின் பாரசீகக் கவர்னரான அலிமர்தான் கானை (Ali Mardan Khan) ஷாவுக்கு விசுவாசமாயிருப்பதினின்று திருப்பித் தம் பக்கம் சேர்த்துக்கொண்டு கோட்டையை முகலாயர்களுக்கு ஒப்படைத்து விடுமாறு அவரைத் தூண்டினார். அலிமர்தான் முகலாயப் பேரரசு ஊழியத்தில் புகுந்தார். பணமும் மதிப்பும் அளித்துச் சிறப்பிக்கப் பெற்றார். அலிமர்தான் கானின் செயலால் காந்தகாரைப் பாரசீகம் இழந்தது. ஆனால், முகலாயர்கள் அதை நீண்டகாலம் வைத்திருக்க முடியவில்லை. பாரசீகர்கள் தங்கள் சக்திவாய்ந்த அரசர் இரண்டாம் ஷா அப்பாஸ் தலைமையில் 1648 ஆகஸ்டு மாதத்தின் குளிர்காலத்தில் காந்தகாரைத் தாக்குவதற்கான ஏற்பாடுகளைச் செய்தனர். குளிர்காலத்தில் முகலாயர்கள் இந்தியாவிலிருந்து மேன்மேலும் படைகளைக்கொண்டுவர முடியாதபடி பனி வீழ்ச்சி தடுத்துவிடும் என்று கருதினர். ஷாஜஹானின் அமைச்சர்கள் குளிர்காலம் போகும்வரை பாரசீகர்களை எதிர்ப்பதை ஒத்திப் போடும்படி ஆய்ந்து பாராது அறிவுரை கூறினர். பகைவனைப் புறக்கணிப்பதனால் நேரக்கூடிய இயல்பான விளைவு நேர்ந்தது. ஷாஜஹானின் அமைச்சர்கள் நம்பிக்கையை வளர்த்து வைத்திருந்த எல்லா இடர்ப்பாடுகளையும், குளிர்காலத்தின் கொடுமையையும் தம்படைக்கு வேண்டிய பொருள்களின் குறைவையும் சமாளித்துப் பாரசீக அரசர் வெற்றிபெற்று ஓங்கினார்.' 1648 டிசம்பர் 16ஆம் நாள் காந்தகாரை முற்றுகையிட்டார். முக்கியமாகக் காந்தகாரின் முகலாய கவர்னரான தௌலத்கானின் பலவீனத்தால் கி.பி. 1649ஆம் ஆண்டு பிப்ரவரி 11ஆம் நாள் முகலாயக் கோட்டைப் படை கடைசியில் சரணடைய நேர்ந்தது. மே மாதம் தொடக்கத்தில் காந்தகாரை மீட்பதற்காக முயற்சிசெய்யும்படி இளவரசர் ஔரங்கசீப் தலைமையமைச்சர் சாதுல்லா கானுடன் (Sadullah Khan) அனுப்பப்பட்டார். அம் மாதம் 16ஆம் நாள் ஔரங்கசீப் காந்தகாரைத் தாக்கினார். ஆனால் பாரசீகர்களின் திறமையினாலும், மேலான படைத்துறை ஏற்பாடுகளாலும் அந்த முயற்சி தோல்வியுற்றது. எனினும், ஷாஜஹான் காந்தகாரை மீட்டும் வெல்வதற்கான தம் திட்டத்தைக் கைவிடுவதாக இல்லை. அவர் மூன்று ஆண்டுகள் ஏற்பாடுகளைச் செய்த பிறகு கோட்டையைப் பிடிக்கும் முறையில் பயிற்சி பெற்ற பலம் வாய்ந்த படையெடுப்பிற்குரிய படையை மீண்டும் ஔரங்கசீப் சாதுல்லாகான் தலைமையில் காந்தகாருக்கு அனுப்பி விட்டுத் தாமும் போர்த் தளவாடங்களையும் வீரர்களுக்கு வேண்டிய பொருள்களையும் அனுப்புவதற்கான ஏற்பாடுகளைச் செய்வதற்காகக் காபூலில் தங்கியிருந்தார். 1652மே 2ஆம் நாள் பேரரசுத் தளபதிகள் காந்தகாரைத் தாக்க முற்பட்டனர். கோட்டையில் விரிசல் ஏற்படுத்தாமல் கோட்டையின்

மேல் தாக்குதலைச் செய்யக் கூடாதென்று கண்டிப்பான உத்தரவு களை அவர்கள் தங்கள் தலைவரிடமிருந்து பெற்றிருந்தனர். ஆனால், பாரசீகர்களின் தரம் மிக்க பீரங்கிப் படைக்கு முன்பு வலிமை குறைந்த தங்கள் பீரங்கிகளின் மூலம் கோட்டையில் விரிசல் ஏற்படுத்த அவர்களால் முடியவில்லை. இவ்வாறு இந்தத் தடவையும் முகலாயத் துருப்புகளுக்கு வெற்றி கிடைக்கவில்லை. அதனால், ஷாஜஹான் முற்றுகையைக் கைவிட்டுவிடுமாறு கட்டளை யிட நேர்ந்தது. பேரரசரின் மூத்த புதல்வரும், செல்லப்பிள்ளையு மான தாராஷுக்கோவினால் (Dara Shukoh) (இப்போது ஷா புலந்து இக்பால். (Shah Buland Iqbal) அல்லது அதிர்ஷ்டம் மிக்க அரசர் என்ற பட்டப் பெயரால் உயர்த்துக் கூறப்படுவர்) அடுத்த ஆண்டு செய்யப்பட்ட மூன்றாவது முயற்சியும் அவருடைய சகோதரரின் முயற்சியைப்போலவே துரதிர்ஷ்டத்தில் முடிந்தது. நன்மை பயப்பதற்காகவே காந்தகார் முகலாயர்களின் கையி லிருந்து போய்விட்டது. எனினும், ஷாஜஹான் ஆட்சிக் காலத் தில் அதை மீட்பதற்காகச் செய்த படையெடுப்புகளுக்குப் பன்னிரண்டு கோடி ரூபாய்க்குக் குறையாமல் செலவாயிற்று. அதாவது அரசாங்கத்தின் ஆண்டு வருமானத்தில் பாதிக்குமேல் செலவாயிற்று. மேலும், விலையுயர்ந்த உயிர்களும் இழக்கப் பட்டன. மேலும், காந்தகாருக்கு முன்பு திரும்பத் திரும்ப முகலாயப் படைகள் தோல்வியுற்றதால் பேரரசின் மதிப்பும் பெருமையும் பேரளவிற்குப் பாதிக்கப்பட்டன.

## ஊ. மத்திய ஆசியக் கொள்கை

முகலாயர்களின் மத்திய ஆசியப் படையெடுப்புகளும் பேரிழப் பிலேயே முடிந்தன. ஷாஜஹானும், தம் தந்தையையும் பாட்டனா ரையும் போலவே மத்திய ஆசியாவில் இருந்த தம் மூதாதையரின் பழைய பகுதிகளை மீண்டும் வெல்லலாம் என்று கனவு கண்டு கொண்டிருந்தார். தம்முடைய ஆட்சி தொடங்கிய காலத்தி லிருந்தே தம் குடும்பத்தின் பரம்பரை உரிமைப் பகுதிகளாகிய பால்க் (Balkh), பதக்ஷான் (Badakhshan) ஆகிய பகுதிகளை வெல்வது எப்படி என்பதிலேயே பேரரசரின் உள்ளம் ஈடுபட்டி ருந்தது. 'அப் பகுதிகள் அவருடைய பெரிய மூதாதையர் தைமூரின் சொந்த ஊரும், தலைநகருமான சாமர்கண்டைப் பெறுவதற்குச் சாவிகளாகவும் இருந்தன' என்று அப்துல் ஹமீத் லாஹுரி எழுதுகிறார். ஆனால், மாபெரும் இந்துகுஷ் மலைத் தொடர்களைத் தாண்டிப் பெரும் படையை நடத்திச் செல்வதில் பெருந் துன்பங்கள் ஏற்படும். மேலும், அவ் வெற்றியால் இந்தியா விலுள்ள முகலாயப் பேரரசுக்குப் பயன் ஏதேனும் ஏற்படுமா என்பதும் ஐயத்திற்கிடமாய் இருந்தது. எனினும், ஷாஜஹான்

இதைப்பற்றியெல்லாம் ஆராயவில்லை. 'அவருடைய ஆட்சியின் செல்வச் செழிப்பும் அவருடைய அமைச்சர்களின் புகழ்ச்சியுரைகளும் அவருடைய தலையைக் கனக்க வைத்தன. அதனால், அவர் மிகு மிகு வீணான கனவுகளைக் கண்டு கொண்டிருந்தார்.' 1646-ல் ஆக்ஸஸ் (Oxus) பகுதியிலுள்ள ஆளும் குடும்பத்தில் உள்நாட்டுச் சண்டை எழுந்தது. அதனால், சாதகமான சூழ்நிலைகள் முகலாயருக்கு ஏற்பட்டது. எனவே, இந்துகுஷுக்கும் ஆக்ஸஸுக்கும் இடையே எல்லையோரத்தில் இருந்த பால்க், பதக்ஷான் என்ற இடங்களை இளவரசர் முராதும், அலிமர்தானும் கைப்பற்றிக் கொண்டனர். ஆனால், இந்த வெற்றிகளை ஒருநிலைப்படுத்தல் என்பது முடியாததாய் இருந்தது. பால்க்கின் வசதியற்ற தட்ப வெப்ப நிலையாலும், வேறு துன்பங்களாலும், தந்தையின் விருப்பத்துக்கு மாறாக இளவரசர் முராது அங்கிருந்து இந்தியாவுக்குத் திரும்பிவிட்டார். அதற்காகத் தந்தையாரால் இழிவு படுத்தப்பட்டார். வஸீரான சாதுல்லாகான் நிலைமையைச் சரிப் படுத்துவதற்காகப் பால்க்குக்குஅனுப்பப்பட்டார். அடுத்த ஆண்டு தம் வெற்றிகளைக் கைவிட்டுவிடக்கூடாதென்று தீர்மானித்து ஒரு பெரும் படையுடன் பால்க்குக்கு அவுரங்கசீப்பை அனுப்பிவைத்தார். ஆனால், அப்போது உஸ்பெக்குகள் ஒன்று திரண்டு தேசிய அடிப்படையில் முகலாயர்களை எதிர்த்தனர். ஔரங்கசீப் மிகவும் உண்மையாகவும் ஊக்கத்துடனும் முயற்சிகள் செய்தும், அந்த எதிர்ப்புக்கு முன்னால் எதுவும் செய்து முடிக்க இயலாதவராகிப் பலவிதமான கடுந் தொல்லைகளுக்கு உள்ளாகிப் பின் இந்தியாவுக்குத் திரும்பி வர நேரிட்டது. மத்திய ஆசியப் படையெடுப்பு முகலாய பேரரசுக்கு அளவிட முடியாத ஆள்சேதத்தையும் பொருள்சேதத்தையும் விளைவித்தது. சர் ஜே. என். சர்க்கார் (Sir J.N. Sarkar) 'இவ்வாறு ஷாஜஹானின் முட்டாள்தனமான பால்க் போர் முடிவுற்றது. இப் போரில் இந்தியக் கருவூலம் இரண்டாண்டுகளில் நாலு கோடி ரூபாய்களைச் செலவிட்டது. ஆனால், வெற்றிபெற்ற நாட்டிலிருந்து 22½ லட்சம் பொருள் வருவாயே கிடைத்தது. 'பால்க்கின் ஓர் அங்குலம் கூடப் பிற இராச்சியத்துடன் இணைக்கப்படவில்லை. அரச மரபும் மாறவில்லை. பால்க்கின் சிம்மாசனத்தில் வேறு எந்த எதிரியும் வந்துஅமரவில்லை பால்க் கோட்டையில் சேமித்து வைக்கப்பட்டிருந்த ஐந்து இலட்சம் ரூபாய் பெறுமான தானியங்களும், மற்றக் கோட்டைகளில் சேர்த்து வைக்கப்பட்டிருந்த பல பொருள்களும் எல்லாம் புகாரியர்களுக்கே கொடுத்துவிடப்பட்டன. மேலும், மொத்தத் தொகையாக 50,000 நாஸர் முஹம்மதுவின் (Nazar Muhammad) பேரர்களுக்கும், ரூ. 22,500 தூதர்களுக்கும் கொடுக்கப்பட்டன. ஐந்நூறு வீரர்கள் போரில் உயிர் துறந்தனர். அதைவிடப் பத்து

மடங்கு வீரர்கள் (பாசறை வீரர்கள் உள்பட) மலைகளில் மிகுந்திருந்த பனியாலும், குளிராலும் கொல்லப்பட்டனர். வடமேற்கு எல்லையைத் தாண்டி ஆக்கிரமிப்புமிக்க பேரரசு செய்த போர்களுக்காக இந்தியா இவ்வளவு பயங்கரமான விலையைக் கொடுக்க வேண்டியிருந்தது,' என்று கூறுகிறார்.

## எ. ஷாஜஹானும் தக்கண நாடுகளும்

தக்கண நாடுகள் முழுவதும் அக்பரால் அடிப்படுத்தப்படவில்லை என்று நாம் ஏற்கெனவே பார்த்திருக்கிறோம். ஷாஜஹானும் தெற்கே தம் இராச்சியத்தை விரிவுபடுத்தும் மரபுக் கொள்கையை மேற்கொண்டார். அக்பர் காந்தேஷை மட்டும் வென்றார்: பேரரசின் ஒரு பகுதியைத் தம் இராச்சியத்துடன் சேர்த்துக் கொண்டார். அகமத் நகரை வெல்லுவதற்கு ஜஹாங்கீர் செய்த முயற்சி அந் நகரின் திறமை வாய்ந்த அமைச்சர் மாலிக் ஆம்பரால் வெற்றிகரமாகத் தடுக்கப்பட்டுவிட்டது. பீஜப்பூரும் கோல்கொண்டாவும் சுதந்திரமாகவே இருந்தன. தீபகற்பம் முழுவதையும் முகலாய பேரரசு வெல்லவேண்டுமாயின் இன்னும் சாதிக்க வேண்டியவை எவ்வளவோ இருந்தன.

தெற்கே அகமத்நகரின் நிஸாம் ஷாஹி இராச்சியம் முகலாய எல்லைக்கு அருகிலேயே இருந்ததால் அதுவே முகலாயப் படைகளின் கவனத்தை முதலில் உணர்ந்தது. 1626-ல் ஜஹாங்கீர் ஆட்சிக் காலத்தில் முகலாயப்படையின் தாக்குதலிலிருந்து அகமத் நகரைக் காத்த ரட்சகரான மாலிக் ஆம்பர் இறந்த பிறகு அந்த இராச்சியம் பலவீன நிலையை அடைந்தது. சுல்தானுக்கும் அவருடைய அமைச்சரும், பெருந்தன்மை மிக்க அபீசீனியரான மாலிக் ஆம்பரின் தகுதியற்ற புதல்வருமான ஃபதேகானுக்கும் (Fateh Khan) மன வேறுபாடுகள் இருந்துவந்தமையின், சில ஆண்டுகளுக்குள் அந்த இராச்சியம் முகலாயரின் பிடிக்குள் அகப்பட்டுவிட்டது. 1630-ல் அகமத் நகரைச் சேர்ந்த வலிமை வாய்ந்த கோட்டையான பரேந்தாவைக் கைப்பற்ற முயன்று தோற்றனர். ஆனால், சுல்தான் நிஸாம்-உல்-முல்க்குடன் மனவேறுபாடுற்ற ஃபதேகான் முகலாய பேரரசருடன் ஒப்பந்தப் பேச்சு நடத்தத் தொடங்கினார். பேரரசரின் யோசனையின்பேரில், அவர் தம்முடைய தலைவரை மறைவாகத் தொலைத்துவிட்டார். தம்முடைய சொந்தச் செல்வாக்கை நிலையாக்குவதற்காகப் பத்தே வயதான நிஸாம்-உல்-முல்க்கின் மகன் ஹுஸேன் ஷாவைச் சிம்மாசனத்தில் ஏற்றினார். முகலாயர்களுடன் கொண்ட நட்புறவில் அவர் உண்மையாகவே இருக்கவில்லை. 1631-ல் முகலாயர்கள் தௌலதாபாத்துக் கோட்டையை முற்றுகையிட்டபோது முதலில் அவர்

அவர்களுக்கு எதிராகச் சென்றார். ஆனால், அவர்கள் அவருக்குப் பத்தரை லட்சம் ரூபாய் லஞ்சம் கொடுத்துத் தங்கள் பக்கத்திற்கு அவரை இழுத்துக்கொண்டனர். அவர் கோட்டையை அவர்களுக்கு விட்டுவிட்டார். இவ்வாறு அசீர்கார் தங்களுக்குக் கொடுக்கப்படுவதற்கு மேற்கொண்ட அதே தகாத வழிகளைப் பயன்படுத்தி முகலாயர்கள் தௌலதாபாத்தையும் அடைந்தனர். கி.பி. 1633-ல் அகமத்நகர் முகலாய பேரரசுடன் இணைக்கப் பட்டது. பெயரளவில் அரசராயிருந்த ஹுசேன் ஷா ஆயுள் தண்டனை கொடுக்கப்பட்டுக் குவாலியர்க் கோட்டையிலேயே சிறைவைக்கப்பட்டார். இவ்வாறு நிஸாம் ஷாஹிகளின் அரச வமிசம் அழிவுற்றது. எனினும், புகழ்பெற்ற சிவாஜியின் தந்தையான ஷாஜி 1635-ல் அந்த அரச மரபிற்குப் புத்துயிர் கொடுக்க முயன்றார்; ஆனால், முடியவில்லை. முகலாயர்களுக்குச் செய்த உதவிக்குப் பரிசாக ஃபதேகான் பேரரசின் ஊழியத்தில் உயர்ந்த சம்பளத்தில் அமர்த்தப்பட்டார்.

ஷியாமதப் பிரிவைச் சேர்ந்த கோல்கொண்டா, பீஜப்பூர் நாடுகள் சுதந்திரமாய் இருந்தமை ஷாஜஹானின் பேரரசாண்மைக்கும் மதப்பற்றுக்கும் மானக்கேடாக இருந்தது. பேரரசின் படைகள் 1629, 1631-ல் முறையே அப் பகுதிகளுக்குள் புகத் தலைப் பட்டுவிட்டன. நிஸாம் ஷாஹியின் பையனை அப்போது மறைந்து விட்ட அகமத்நகர் இராச்சியத்துக்குப் பெயரளவில் அரசனாய் வைத்திருக்கவேண்டும் என்றுமுயற்சி செய்த ஷாஜிக்கு 1635ஆம் ஆண்டில் அந்த இருநாடுகளின் அரசர்களும் மறைமுகமாகஉதவிய பொழுது முகலாயபேரரசர் அவர்களிடம் தம்முடைய மேலாண்மையை ஒப்புக்கொள்ளவேண்டும் என்றும், கப்பத்தை ஒழுங்காக அனுப்பிவிடவேண்டும் என்றும், ஷாஜிக்கு உதவி செய்வதிலிருந்து நீங்க வேண்டுமென்றும் கூறினார். தம்முடைய வேண்டுதல்களை வற்புறுத்துவதற்காக அவரே தக்கணத்துக்கு வந்தார். 1636 பிப்ரவரி 21ஆம் நாள் தௌலதாபாத்தை அடைந்ததும் தக்கண நாடுகளைத் தாக்குவதற்காகத் தீவிர ஏற்பாடுகளைச் செய்தார். அவற்றைக் கண்டு கிலியுற்ற கோல்கொண்டா சுல்தான் அப்துல்லா ஷா, ஷாஜஹானின்மேலாண்மையை ஒப்புக்கொண்டார். பேரரசருக்கு ஆண்டுதோறும் கப்பம்கட்டுதல், நாணயங்கள் அடித்தல், அவருடைய பெயரில் குத்பா படித்தல் முதலிய விதிகளுக்குக் கட்டுப்பட்டு நடக்க இசைந்தார்.

ஆனால், பீஜப்பூர் சுல்தான் ஆதில் ஷா பேரரசுக் கட்டளைக்கு அடிபணிய மறுத்துத் தம்முடைய உரிமைகளைக் காப்பாற்றிக் கொள்வதற்காகத் துணிந்து நின்றார். மூன்று முகலாயர் படைகள்

மூன்று பக்கங்களிலிருந்து அவருடைய இராச்சியத்தைத் தாக்கின. ஒரு படை கானி தௌரானின் (Khan-i-Dauran) தலைமையில் வடகிழக்கில் பீடாரிலிருந்தும், வேறொரு படை கானிஜாஹான் தலைமையில் மேற்கில் ஷோலாப்பூர் (Sholapur) வழியாகவும், மூன்றும் படை கானிஸ்மான் தலைமையில் வடமேற்கில் உள்ள இந்துப்பூர் வழியாகவும் தாக்கின. பகைவர்கள், பொருள்கள் எவையும் வராதபடி தடுத்தல், கிணறுகளை இடித்தழித்தல், கிணற்று நீரில் நஞ்சுகலந்துவிடல் போன்ற பழங்கால மரபுவழிகளை மேற்கொண்டும் பீஜப்பூர் வீரர்கள் வீரத்துடன் தங்கள் தலை நகரைக் காத்து நின்றனர். அவர்களுடைய இராச்சியத்தின் எஞ்சிய பகுதியெல்லாம் முகலாயர்களால் சூறையாடப்பட்டு அழிக்கப் பட்டன. இவற்றால் சுல்தான் சமாதானத்திற்கே வரவேண்டிய கட்டாயத்திற்கு உள்ளானார். 1636 மே மாதத்தில் அமைதி காண உடன்படிக்கை செய்துகொண்டனர். முகலாயப் பேரரசரின் மேலாண்மையை அவர் ஒப்புக்கொண்டார். பேரரசருக்குக் கப்பம் கொடுக்கவும் ஒப்புக்கொண்டார். அப்போது பேரரசரின் கீழிருந்த கோல்கொண்டாவைத் தாக்கக்கூடாது என்றும் அவர் கட்டளையிடப்பட்டார். மூதாதையரின் இராச்சியத்தை வைத்துக் கொள்ள அனுமதிக்கப்பட்டதுடன் அகமத்நகர் இராச்சியப் பகுதிகளுள் சிலவற்றையும் பெற்றார். தத்தம் அதிகாரிகளை இலஞ்சம் முதலியன கொடுத்து வசப்படுத்தக் கூடாது என்று இரு தரப்பினரும் ஒப்புக்கொண்டனர். சுல்தான் ஷாஜிக்கு உதவுவதோ, பாதுகாப்புக் கொடுப்பதோ கூடாது என்றும் வற்புறுத்தப் பட்டது. சர் ஜே.என். சர்க்கார் எழுதுகிறார்: 'இவ்வாறு நாற்பது ஆண்டுப் போராட்டத்திற்குப் பிறகு (1595—1636) தக்கணத்துச் சிக்கல் கடைசியில் ஒரு முடிவுக்கு வந்தது. எதிர்த்துக் கூற முடியாதபடி பேரரசரின் நிலை உறுதியாக்கப்பட்டது; அவருடைய ஆட்சிக்குட்பட்ட நாட்டின் எல்லை தெளிவாக வரையறுக்கப் பட்டது. தெற்கு இராச்சியங்களின்மேல் அவருடைய மேலாண்மை முறைப்படி நிலைநிறுத்தப்பட்டது. 1636 ஜூலை 11ஆம் நாள் பேரரசர் தக்கணத்தை விட்டுச் சென்று, அப்போது பதினெட்டு வயதுக் காளையாயிருந்த தம்முடைய மூன்றாவது மகனை ஔரங்கசீப்பை முகலாய தக்கணத்துக்கு இராசப் பிரதிநிதியாக அனுப்பி வைத்தார். அப்போது முகலாய தக்கணம் காந்தேஷ், பீரார் தெலிங்கானா, தௌலதாபாத் என்ற நான்கு மாகாணங்கள் அடங்கிய ஓரளவு பரந்த எல்லைப் பரப்புடையதாய் இருந்தது. ஓர் ஆண்டுக்கு ஐந்து கோடி வருமானம் தருவதாக மதிப்பிடப் பட்டது. அது அறுபத்து நான்கு மலைக்கோட்டைகளைப் பெற்றிருந்தது. அவற்றுள் சில இன்னும் ஷாஜி போன்ற வேறு சில பகைவர்களான தலைவர்களிடம் இருந்தன.

இளம் இராசப் பிரதிநிதி எதிரிகளை அடக்குவதிலேயே தீவிர மாக ஈடுபட்டார். காந்தேஷுக்கும் சூரத் கடற்கரைக்கும் இடையே இருந்த பாக்லானு மாவட்டத்தைக் கைப்பற்றிக்கொண் டார். ஷாஜியைத் தமக்கு அடிபணியுமாறும், சில கோட்டைகளை விட்டுவிடுமாறும் வற்புறுத்தினர். அக் காலத்தில் ஒரு முகலாய அதிகாரியாக வேலையில் அமர்ந்திருந்தவரும், பாரசீக அரச குடும்பத்தைச் சேர்ந்தவருமான ஷா நவாஸ்கான் (Shah Nawaz Khan) என்பவரின் மகளான தில்ராஸ் பானு பேகம் (Dilras Banu Begam) என்பவளை மணந்துகொள்வதற்காக 1637-ல் ஔரங்கசீப் ஆக்ராவுக்குச் சென்றார். ஆனால், போதிய பொருள்வசதி இல்லா மையால் தக்கண ஆட்சி முறையில் பெருந்தொல்லைகளுற்றார். மேலும், அவருடைய சகோதரரான தாரா ஷுக்கோவின் தலைமையில் ஒரு பகைமைக் கட்சியும் அவருக்குத் தொல்லை கொடுத்துவந்தது. 1644ஆம் ஆண்டு மார்ச்சு மாதத்தில் மிகு கடுமையாகத் தீப்புண் பட்டிருந்த தம்முடைய அன்புக்குப் பாத்திர மாயிருந்த ஜஹானராவைப் பார்ப்பதற்காக ஆக்ராவுக்குச் சென்றார். ஆரிப்[1] என்ற பெயருடைய அடிமை ஒருவரால் தயாரிக் கப்பட்ட களிம்பு ஒன்றின்மூலம் அந்த ஆண்டு நவம்பர் மாதம் அவருடைய சகோதரி முழுக்குணம் அடைந்தாள். ஆனால், ஆக்ராவுக்கு வந்த மூன்று வாரங்களுக்குள் சில சூழ்நிலைகளால் ஔரங்கசீப் தம் பதவியை விட்டு விலக நேர்ந்தது. 'அவருடைய முட்டாள் தோழர்களின் தீய அறிவுரைகளால் தூண்டப்பட்டு அவர் ஒரு துறவிக்குரிய வாழ்க்கையை மேற்கொள்ள விரும் பினர்; பேரரசர் விரும்பாத செயல்களையும் செய்தார்' என்று அப்துல் ஹமீத் லாஹூரி எழுதியுள்ளார். காஃபி கானின் (Khafi Khan) கருத்துப்படி 'ஔரங்கசீப் தம்முடைய தீய செயல்களுக் காகத் தந்தையின் தண்டனையை எதிர்பார்த்துத் தாமே வாளை உதறி எறிந்து விட்டுச் சில நாள்கள் ஒரு துறவியைப் போல வாழ்ந்தார்.' அதுதான் தக்கண இராசப் பிரதிநிதிப் பதவியி லிருந்து அவர் ஓய்வெடுத்துக் கொண்டதற்குக் காரணமாகும். ஆனால், ஔரங்கசீப்பின் கடிதங்களிலிருந்து உண்மையான காரணம் அறியப்படுகிறது. தமக்கு எதிராகத் தாராஷுக்கோ நிரந்தரமாகப் பகைமை பாராட்டி வந்தாலும், பேரரசர் அவருக்குச் செல்வம் கொடுத்துத் தனிப்பட்ட வகையில் உரிமைகள் வழங்கியதாலும், ஔரங்கசீப் தக்கணத்தில் ஆட்சியைச் செலுத்துவது கடினமானதென உணர்ந்தார்.

[1] கேப்ரியல் பௌடன் (Gabriel Boughton) என்ற ஓர் ஆங்கில மருத்துவர் ஜஹானராவைக் குணப்படுத்தினர் என்ற கதை உண்மையன்று என்பது சர் வில்லியம் பாஸ்டராலும்(Sir William Foster)இந்தியன்ஆண்டிக்வரி 1911(Indian Antiquary, 1911) டாக்டர் ஸ்மித்தினலும் (ஆக்ஸ்போர்டு ஹிஸ்டரி, பக்கம். 401) (Smith, Oxford History) காட்டப்பட்டுள்ளன,

தம்முடைய தன்மானத்திற்கு இழுக்கு வராமல் காப்பதற்காகவே வெறுப்புடன் அவர் வேலையை விட்டு விலகினார்.

தக்கண அரசப் பிரதிநிதிப் பதவியை வேண்டாமென்று உதறிவிட்ட பிறகு, ஔரங்கசீப் 1645 பிப்ரவரியில் குஜராத்தின் கவர்னராக நியமிக்கப்பட்டார். பிறகு, நாம் பார்த்தபடி தோல்வியில் முடிந்திருந்த பால்க், பதக்ஷான், காந்தகார்ப் படையெடுப்பை மீண்டும் மேற்கொள்ளுமாறு செய்யப்பட்டார். காந்தகாரிலிருந்து திரும்பி வந்த பிறகு, தாரா ஷுக்கோவின் பகைமைச் சூழ்நிலையால் ஔரங்கசீப் அரசவையில் பாதுகாப்பாகவோ மதிப்பாகவோ தங்கியிருக்க முடியவில்லை. அதனால், அவர் கி.பி. 1653ஆம் ஆண்டின் தொடக்கத்தில் இரண்டாம் முறையாகத் தக்கண இராசப் பிரதிநிதியாக அனுப்பப்பட்டார். 1653 நவம்பரிலிருந்து தௌலதாபாத் அல்லது ஔரங்காபாத் அவருடைய அரசாங்கத்தின் தலைநகரமாயிருந்துவரலாயிற்று.

ஔரங்கசீப்பினால் செய்யப்படவேண்டிய வேலை மிகு மிகு கடினமாயிருந்தது. அவருடைய ராஜினாமாவுக்குப் பிறகு குறுகிய காலங்களுக்குத் தகுதியில்லாத பல இராசப் பிரதிநிதிகள் ஆட்சிக்கு வந்தமையால் தக்கண ஆட்சி மிகவும் குழப்பமாகப் போயிருந்தது. அதனுடைய பொருளாதார நிலையும் மிகவும் சீர் குலைந்திருந்தது. நிலையான பொருளாதாரப் பற்றுக்குறையுடன் ஆட்சி நடைபெற்று வந்தது. பற்றுக்குறையைச் சரிப்படுத்தப் பேரரசின் கருவூலத்திலிருந்து பணம் எடுக்க வேண்டியிருந்தது. ஆனால்,இப்படிச் செய்வது உண்மையில் ஒரு தொலைநோக்கில்லாக் கொள்கையாகும். அதனால் தக்கணத்தின் பொருளாதார நிலையைச் சீர்படுத்தி உயர்த்துவதே ஔரங்கசீப்பின் முதல் வேலையாய் இருந்தது. குடியானவர்களின் நலன்களைக் கருதி உழவுத்தொழில் செழிப்படைவதற்கு வேண்டிய முயற்சிகள் எடுத்துக்கொண்டார். சில பொருள் வருவாய்க்குரிய முயற்சிகளையும் மேற்கொண்டார். பொருள் வருவாய்க்காக அவர் மேற்கொண்ட முறைகள் அவருடைய ஆட்சி எல்லையில் பொருளாதாரத்தை வளர்ந்தோங்கச் செய்ததுடன் தக்கணத்தில் நில அமைப்புகளின் வரலாற்றில் அவர் இராசப் பிரதிநிதியாக இருந்து ஆற்றிய தொண்டு அவருக்குப் புகழைத் தேடித் தந்தது. நல்ல வேளையாக அவருக்கு முர்ஷித் குலிகான் (Murshid Quli Khan) என்ற பாரசீகப் பொருள் வருவாய்த் துறையின் அதிகாரியின் விலைமதிக்க இயலா உதவியும், அறிவுரையும் கிடைத்தன. அலி மர்தான் கானின் கூட்டத்தில் முதலில் சேர்ந்திருந்த முர்ஷித் குலி ஔரங்கசீப்புடன் தௌலாபாத், தெலிங்கானா ஆகியவற்றின் திவானாக வந்தார்.

பிறகு பீரார், காந்தேஷ் முதலியவற்றின் திவானாகவும் பதவி உயர்வு பெற்றார். நில வருமானத்தை வசூல் செய்வதற்காகத் தக்கணம் பைங்காட்(Painghat) அல்லது கீழ்ப்பிரதேசம் என்றும், பலாகாட் (Balaghat) அல்லது மேல்பிரதேசம் என்றும் இரு பகுதி களாகப் பிரிக்கப்பட்டன. முதல் வகைப் பிரதேசம் காந்தேஷ் முழுவதையும், பீராரின் ஒரு பகுதியையும் உள்ளடக்கியிருந்தது. அடுத்தது இராசப் பிரதிநிதியின் கண்காணிப்பில் மற்றப் பகுதி களைக் கொண்டிருந்தது. தக்கணப் பொருளாதார நிலைகளைச் சீரமைத்ததுடன், முர்ஷித் குலி அங்கே தோடர்மாலின் நில அளவு, வரிவிதிப்பீட்டு முறைகளையும் மேற்கொண்டார். இடங்களின் நிலைமைகளுக்கேற்ப அம் முறைகளில் சிற்சில மாறுதல்களையே செய்துவந்தார். இவ்வாறு மக்கள் நெருக்கம் குறைந்த பகுதி களிலும், உழவுத் தொழில் ஓரளவு பிற்பட்ட நிலையில் இருந்த பகுதிகளிலும் அவர் ஒரு விளைச்சலுக்கு ஒரு குறிப்பிட்ட நிலையான தொகை ஒன்றை மொத்தமாகக் கொடுக்கும் பழைய மரபு முறை யையே பின்பற்றினார். ஆனால், மற்ற இடங்களில் பாதாய் (Batai) முறையைப் (அதாவது உழவர்கள் பணமாக வரி கொடாமல் தானியங்களாகக் கொடுக்கும் முறையை) புகுத்தினார். இதனால் விளைச்சலில் அரசாங்கத்துக்குக் கிடைக்கும் பங்கின் தன்மை யையும், நீர் வரும் வழியையும் பொறுத்ததாய் வரி விதிப்பு அமைந்தது. சில இடங்களில் ஜரீப்(jarib) என்ற மற்றொரு வரி விதிப்பு முறையைப் புகுத்தினார். அதன்படி தானியமாகக் கொடுக்கப்படும் அரசாங்க நிலவரி ஒரு பிகாவுக்கு (Bigha) இவ்வளவு என்று வரையறுக்கப்பட்டு விளைச்சலில் நாலில் ஒரு பங்காக வசூலிக்கப்பட்டது. நிலங்கள் மிகு கவனமாக அளக்கப் பட்டு விளைச்சலின் அளவையும், தன்மையையும் கவனத்தில் வைத்துக்கொண்டு அந் நிலவரி விதிக்கப்பட்டது. சீரழிந்த கிராமங்களின் நிலையைச் சீர்திருத்துவதற்கான ஏற்பாடுகள் செய்யப்பட்டன. முன் பணம்கொடுத்து உழவர்களுக்கு உதவி செய்யப்பட்டது. மொத்தத்தில் முர்ஷித் குலியின் அறிவுமிக்க முறைகள்-தக்கணத்தில் செல்வச் செழிப்பு மீண்டும் ஏற்படும்படி செய்தன. எனினும், பல ஆண்டுகளாக நடந்துவந்த ஒழுங்கில்லா ஆட்சியின் விளைவாகக் குவிந்திருந்த தீமைகள் குறுகிய காலத் திற்குள் முழுவதும் அகற்றப்பட முடியாதவையாய் இருந்தன. நுஸ்கா-இ-தில்குஷா (Nuskha-i-Dilkhusha)என்ற நூலின் ஆசிரிய ரான பீம்சேன் புர்ஹான்பூரி (Bhimsen Bur hanpuri)என்பவரின் சான்றினைத் துணையாகக் கொண்டு சர் ஜே.என். சர்க்கார் கூறுவ தாவது: '1658-ல் ஔரங்காபாத்தின் அருகில் ஒரு சிறிய பாழ் நிலங்கூடக் காணப்படவில்லை; கோதுமையும் பயறுகளும் ஒரு ரூபாய்க்கு 2½ மணங்குகளாக விற்கப்பட்டன. ஐவாரும் (சோளம்

jawar) பாஜ்ராவும் (தினை, Bajra) ரூபாய்க்கு 3½ மணங்கு வீதமும் வெல்லம் ½ மணங்கு வீதமும், மஞ்சள் எண்ணெய் (நெய்) 4 சேர் வீதமும் விற்கப்பட்டன.'[1]

இவ்வாறு உள்நாட்டு ஆட்சியைச் சீர்திருத்தி அமைத்த பிறகு ஔரங்கசீப் செல்வமிக்க ஷியா நாடுகளான கோல்கொண்டா, பீஜப்பூர் ஆகியவற்றின் சுதந்திரத்தை அழிக்கத் தம் கவனத்தைத் திருப்பினார். உடனடியாகத் தாக்குதல் செய்வதற்குப் போதிய சாக்குப் போக்குகளும் கிடைக்காமல் போகவில்லை. 1636-லிருந்து முகலாயப் பேரரசிற்கு உட்பட்ட பகுதியான கோல்கொண்டா நாட்டைப் பொறுத்தவரை அது முன்பு கப்பமாகக் குறிப்பிடப்பட்டிருந்த தொகையை முழுவதும் கொடுக்காமல் அடிக்கடி பாக்கிவைத்திருந்தது. மேலும், சுல்தான் தம்முடைய பலம் வாய்ந்த மந்திரியாகிய மீர் ஜும்லாவைச் (Mir Jumla) சரியாக நடத்தாமையால் அவர் முகலாயர்களின் பாதுகாப்பைப் பெற்றிருந்தார். முற்கூறப்பட்ட காரணத்தைக் காட்டிலும் இக் காரணம் படையெடுப்பதற்கு மிகவும் பொருத்தமாக இருந்தது.

மீர் ஜும்லா என்று புகழ் பெற்றிருந்த முகம்மது சையீத் ஒரு பாரசீக வாணிகத் துணிகரச் செயலாளராயிருந்தார். 'மற்றத் துணிகரச் செயலாளர்களைப் போலவே, வைரம் போன்ற விலை உயர்ந்த மணிக்கற்களில் வியாபாரஞ் செய்து பெருஞ் செல்வம் திரட்டினார். விரைவில் கோல்கொண்டா சுல்தானான அப்துல்லா குதுப் ஷாவினிடத்து(Abdullah Qutb Shah)வேலையில்அமர்ந்தார் அவர் படைத்துறையில் பேரறிவும், பேராற்றலும் வாய்ந்தவராக இருந்ததோடு சிறந்த ஆட்சியாளராகவும் விளங்கினார். இப் பண்புகள் அவருடைய தலைவரால் போற்றப்பட்டன. அதனால் அவருடைய தலைவர் அவரைத் தம் அரசாங்கத்தின் முதலமைச்சராக ஆக்கிக்கொண்டார். மீர்ஜும்லா தம்முடைய பதவியை நன்கு பயன்படுத்திக்கொண்டு, அரசாங்கத்தின் உண்மைச் சர்வாதிகாரியாகத் தம்மை ஆக்கிக்கொண்டார். அவர் மேலும் ஒருபடி சென்று கருநாடகத்தில் புதிதாக வெற்றி பெற்றபகுதிகளைக் கொண்டு தமக்காக ஓர் இராச்சியத்தை அமைத்துக் கொண்டார். முந்நூறு மைல் நீளமும், ஐம்பது மைல் அகலமும் கொண்ட அந்த இராச்சியம் அவருக்கு ஆண்டுதோறும் ஐம்பது இலட்சம் வருமானத்தைக் கொடுத்தது. அதை வைத்துக்கொண்டு அவர் சிறப்பாகப் பீரங்கிப் பயிற்சி பெற்ற ஒரு வலிமை வாய்ந்த

[1] சர்க்கார் எழுதிய ஔரங்கசீப், தொகுதி 1, பக்கம். 173 (Sarkar, Aurangzep Vol, I P. 173)

படையை அமைத்துக்கொள்ளமுடிந்தது. இவ்வாறு 'ஒரு பிரபுவின் நிலையிலிருந்த அவர், ஓர் ஆளும் இளவரசர்க்குரிய அதிகாரம், செல்வம், பெருமை ஆகியவற்றைப் பெற்றிருந்தார்.' இயல்பாகவே தம் அமைச்சரின் வளரும் சக்தியையும், செல்வத்தையும் கண்டு அச்சமுற்ற சுல்தான், அவரைத் தமக்குக் கீழ்ப்படியுமாறு வற்புறுத்தினார். தம்மிடம் அவமதிப்பாக நடந்துகொண்டதற்காக அமைச்சரின் மகனை முகம்மது அமீன்கானை (Muhammad Amin Khan) அவருடைய குடும்பத்துடன் சிறையில் வைத்தார். பிறகு மீர் ஜும்லா முகலாயப் பேரரசருடனும், ஔரங்கசீப்புடனும் சூழ்ச்சித் திட்டங்களில் இறங்கினார். கோல்கொண்டாவைத் தாக்க எண்ணியிருந்த ஔரங்கசீப் சுல்தானிடம் மாறு கொண்டவரும், அரைச் சுதந்திர அதிகாரியுமான இவருடைய நட்புறவின் நன்மையை உணர்ந்தார்.

இவ்வாறு கோல்கொண்டா சுல்தான் மீர் ஜும்லாவினால் காட்டிக் கொடுக்கப்பட்டார். மீர் ஜும்லாவின் குடும்பத்தினரை விடுதலை செய்துவிடுமாறு கோல்கொண்டா சுல்தானுக்கு ஆணை தருமாறு ஷாஜஹானிடமிருந்து வேண்டிய ஓர் ஆணையை ஔரங்கசீப் பெற்றார். ஆனால், பேரரசின் கடிதத்திற்கு விடை கொடுப்பதற்கு சுல்தானுக்குப் போதிய நேரம் கொடுக்காமல் சுல்தான்மேல் போரிடப் போவதாக அறிவித்தார். ஔரங்கசீப்பின் அறிவுரைகளின்படி நடந்த அவருடைய மகன் இளவரசர் முகமது சுல்தான் 1656 ஜனவரியில் ஹைதராபாத்தைத் தாக்கினார். முகலாயர் படை அந் நாட்டைக் கொள்ளையடித்தது. ஔரங்கசீப்பும் தாமே பிப்ரவரி ஆறும் நாள் அங்கே சென்று, அடுத்த நாள் கோல்கொண்டாவை முற்றுகையிட்டார். அந்த இராச்சியம் முழுவதையும் தம் இராச்சியத்துடன் சேர்த்துக் கொள்ள வேண்டும் என்பதே அவருடைய பேராசையாயிருந்தது. ஆனால், தாராஷுக்கோ, ஜஹானரா ஆகியோர்களின் செல்வாக்குமூலம் ஷாஜஹான் அதற்கு இடையீடு செய்ததால் அப் பேரரசை நிறைவேற்றுவதற்குத் தடை ஏற்பட்டது. தந்தையின் கட்டளைகளுக்குக் கீழ்ப்படிந்த ஔரங்கசீப் 1656ஆம் ஆண்டு மார்ச்சு 30ஆம் நாள் கோல்கொண்டா இராச்சியத்தைக் கைவிட்டார். இவ்வாறு கோல்கொண்டா இராச்சியம் முகலாயப் பேரரசருக்குப் பத்து இலட்சம் ரூபாய்க்கு உறுதியீடு கொடுத்தும், இக் காலத்தில் மானிக்துர்க் (Manikdurg) என்றும் சின்னூர் (Chinoor) என்றும் வழங்கப்படும் ரங்கீர் (Rangir) மாவட்டத்தைப் பிரித்துக் கொடுத்தும், மீண்டும் தம் உயிரைக் காப்பாற்றிக் கொண்டது. ஔரங்கசீப்பின் மகன் இளவரசர் முகம்மது சுல்தான் ஆள்மாறாட்டம் செய்து சுல்தானின் மகளை மணந்து

கொள்ளப் பெற்றார். இரகசிய ஒப்பந்தம் மூலம் ஔரங்கசீப் சுல்தானிடம் அவருடைய புதிய மருமகனை அவருக்குப் பின் அரசுரிமை பெறுவதற்குரியவராக்க வேண்டும் என்று வலிந்து வாக்குறுதி கேட்டு வாங்கிக்கொண்டார். அதன்பின் உடனேயே மீர் ஜும்லா பேரரசின் தலைமை அமைச்சராக நியமிக்கப்பட்டார்.

அடுத்தது பீஜப்பூர் இராச்சியத்தின் முறை அதன் தகுதிமிக்க ஆட்சியாளர் முகம்மது ஆதில் ஷா 1656 ஆம் ஆண்டு நவம்பர் 4ம்ஆம் நாள் இறந்துவிட்டபிறகு அந்த இராச்சியம் சீர்கேடுற்றது. இது ஔரங்கசீப்புக்குத் தம் திட்டத்தை நிறைவேற்றிகொள்ள ஒரு வாய்ப்பை அளித்தது. அப்போது பீஜப்பூரின் புதிய அரசரா யிருந்த பதினெட்டு வயது இளைஞர் இறந்துபோன சுல்தான் மகன் அல்லர் என்றும், அவருடைய பிறப்பைப்பற்றி ஐயப்பாடுகள் இருந்தன என்றும் கூறி அக் காரணத்தைக்கொண்டு அந்த இராச் சியத்தின்மேல் படையெடுக்க ஷாஜஹானின் அனுமதியைப் பெற்றுக்கொண்டார். அக் காரணம் ஒரு நொண்டிச் சாக்கைத் தவிர வேறன்று. பீஜப்பூருக்கு எதிராக அவர் படையெடுத்தது நேர்மைக்கு முற்றிலும் முரணானது. பீஜப்பூர் ஒரு குறு நில இராச்சியமன்று. ஆனால், அது முகலாயப் பேரரசுடன் கூட்டா யிருந்த ஒரு சுதந்திர நாடு. சட்டப்படி முகலாயப் பேரரசர் பீஜப்பூரின் அரசுரிமைக்கு உரியவரைப் பற்றிக் கேள்வி எழுப்பு வதற்கோ, அதற்குரியவரைத் தேர்ந்தெடுப்பதற்கோ உரிமை பெற்றவர் அல்லர். முகலாய இடையீட்டுக்கு முக்கிய காரணம் சிறுவனாயிருந்த அரசனின் ஆதரவில்லா நிலையும் அவருடைய அதிகாரிகளுக்குள் இருந்த பிணக்குமேயாகும். அது, ஔரங்கசீப் கூறியது போல, 'இராச்சியத்துடன் இணைத்துக்கொள்ளும் அருமையான வாய்ப்பைக் கொடுத்தது.' மீர் ஜும்லாவின் உதவி யுடன் ஔரங்கசீப் 1657ஆம் ஆண்டு ஜனவரித் தொடக்கத்தில் அந்த இராச்சியத்தின்மீது படையெடுத்தார். நீண்டதொரு முற்றுகைக்குப் பின்பு மார்ச்சு இறுதியில் பீடார்க் கோட்டையைத் தகர்த்தார். ஆகஸ்டு முதல் தேதியன்று கல்யாணிக் கோட்டை யைத் தகர்த்தார். மேலும் தக்கணத்தை வெல்லுவது, தாரா ஷுக்கோ போன்ற மற்ற ஔரங்கசீப்பின் எதிர்ப்பாளர்களின் செல்வாக்கின் பேரில் ஷாஜஹான் திடீரென்று செய்த இடை யீட்டினால் தடைப்பட்டது. பேரரசர் பீஜப்பூர் சுல்தானுக்கு (1657-ல்) அமைதியை அளித்தார். ஆனால், கோல்கொண்டா சுல்தானைப் போலவே அவரும் மிகப் பெரிய ஈட்டுறுதி கொடுக்க வேண்டும் என்ற கட்டுப்பாட்டு விதி வற்புறுத்தப்பட்டது. மேலும் பீடார், கல்யாணி, பரேந்தா(Parenda) இவற்றையும் அவர் விட்டுவிட நேர்ந்தது. ஷாஜஹான் நோயுற்றதனாலும், அதன்

விளைவாக அவருடைய புதல்வர்களுக்குள் சிம்மாசனத்திற்காக எழுந்த கடும் போட்டியாலும், தக்கணத்தில் ஔரங்கசீப்பின் திட்டங்கள் முழுவதும் நிறைவேற்றப்படுவது தள்ளிப்போடப் பட்டது. இவ்வாறு முப்பது வருடங்கள் தக்கணம் சிறிது ஓய்வை பெற்றது.

## ஏ. ஆட்சியுரிமைக்காகப் போர்

அடுத்துப் பட்டத்துக்குரியவர் யார் என்பதைப்பற்றி ஷாஜஹானின் புதல்வர்களுக்குள் எழுந்த பயங்கரப் போரினால் அவருடைய கடைசிக் காலம் மிகமிக வருந்தத்தக்கதாயிருந்தது. 1657 செப்டம்பரில் அவர் நோய்வாய்ப்பட்டபோது அப் போர் தொடங்கியது. அது வயது முதிர்ந்த அப் பேரரசர் இந்த உலகத்தை விட்டுப் போகும் வரை அவருக்கு மிகப்பெரிய மானக்கேட்டையும் கடுந்துன்பத்தையும் அளித்தது. ஷாஜஹானுக்கு நான்கு புதல்வர்கள் இருந்தனர். அவர்கள் அனைவரும் அந்தச் சமயத்தில் வயதில் மிக்கவராய் இருந்தனர். தாராஷுக்கோவுக்கு வயது 43 ஷுஜாவுக்கு வயது 41 ஔரங்கசீப்புக்கு வயது 39; முராதுக்கு வயது33. இரண்டுமகளிர் இருந்தனர். ஒருத்திஜஹானாரா(Jahanara) தாராஷுக்கோவின் பக்கம் இருந்தாள். மற்றவள் ரோஷனாரா (Raushnara) ஔரங்கசீப்பின் கட்சியைச் சேர்ந்தவள். அவர்கள் எல்லாரும் மாகாணங்களின் கவர்னர்களாகவும், படைகளின் தளபதிகளாகவும் இருந்து அந்தச் சமயத்திற்குள் உள்நாட்டு, படைத்துறைச் செய்திகளில் பேரளவிற்கு அனுபவம் பெற்றிருந் தனர். ஆனால், தனிப்பட்டவர்களின் இயல்புகளையும், திறமைகளை யும் பொறுத்தவரை அவர்களுக்குள் பல வேறுபாடுகள் இருந்தன. எல்லாரிலும் மூத்த தாராஷுக்கோ தம் தந்தையின் நம்பிக்கை யைப் பெற்றிருந்தார். அவரே தமக்குப் பின் அரசாள வேண்டும் என்று தந்தை விரும்பினார் பிறவற்றிலிருந்து நல்லனவெல்லாம் பொறுக்கி எடுத்துக்கொண்ட கருத்துகளையும் தாராள மனப்பான் மையையும், கல்வி வல்ல அறிஞர்க்குரிய உணர்வுகளையும் பெற்றி ருந்த ஷுக்கோ, பிற மதக்கொள்கைகளைப் பின்பற்றியோரிடமும் தாராளமாகக் கலந்து பழகினார். வேதாந்தக் கொள்கைகளையும் தால்மத்(Talmud) புதிய ஏற்பாடு(NewTestament)சூஃபிஆசிரியர் களின் நூல்கள் இவற்றையும் கற்றார். அதர்வ வேதத்தையும் (Atharva Veda), உபநிஷத்துகளையும்(Upanishads) சில பிராமண அறிஞர்களின்[1] உதவியைக்கொண்டு பாரசீக மொழியில் மொழி

[1] தாரா ஷுக்கோவின் நூல்பட்டியல் வேண்டுமாயின் கீழ்வருவனவற்றைப் பார்க்க. J.P.H.S. தொகுதி II, பக்கம் 21-38. J.A.S.B. பகுதி I, 1870, பக்கம் 273-279. சர்க்கார் எழுதிய ஔரங்கசீப் தொகுதி I, பக்கம் 271 அடிக்குறிப்பு; கானுஸ்கோ எழுதிய தாரா ஷுக்கோ தொகுதி I, அத்தியாயம் VI.

பெயர்க்கச் செய்தார். மேற்போக்கில் பகைமையுடையனவாய்த் தோன்றும் கொள்கையில் வேற்றுமைக்கிடையே ஒற்றுமை காண விழைந்தார். இதனால் அவர் இயல்பாகவே தம் மதத்தைச் சார்ந்தவர்களுள் பழமைப்பற்று மிக்கவர்களின் வெறுப்பைச் சம்பாதிக்க நேர்ந்தது. அவர்கள் அவருக்கு எதிராக இருந்தனர். ஆனால், அவர் தம் மதத்தைப் புறக்கணித்தவர் அல்லர். அவர் ஒருபோதும் இஸ்லாமின் முக்கியமான கொள்கைகளை ஒதுக்கி வைத்ததில்லை. இஸ்லாமியக் கொள்கையினரில் ஒரு சிறப்பு வாய்ந்த சூஃபிகளின் நல்லனவற்றைப் பொறுக்கி எடுத்துக்கொள்ளும் கொள்கையைத் தான் தாமும் பின்பற்றினர். மதத்தின் வெளிச் சடங்குகளை அவர் வெறுத்துவந்தார். அது அவர் ஜான் மில்டனைப் (John Milton) போல மாதா கோவில்பற்றிச் சீர்திருத்த எண்ணங்கள் கொண்டிருந்தவர்களின் நிலைமையிலேயே அவரும் இருந்தார் என்பதைக் காட்டும். அவருடைய வரலாற்றை எழுதிய கடைசி ஆசிரியர் கீழ்வரும்படி எழுதியது மிகவும் பொருத்தமே. 'இந்தியாவில் மத அமைதிச் சிக்கலைத் தீர்க்கவேண்டும் என்று முயற்சி செய்ய விழைபவர்கள் தாரா விட்ட இடத்திலிருந்து தொடங்கி அந்த இளவரசரால் காட்டப்பட்ட வழியில் மேற் செல்வதே செய்யத்தக்கது என்று கூறுவது சிறிதும் மிகையன்று. ஆனால், அவர்மேல் அவர் தந்தை அளவுக்கு மீறிக் காட்டிய அன்பும், அரசவையில் அவர் அடிக்கடி இருந்தமையும், தந்திரமிக்க அரசியல் வாதியின் குணங்களோ, தீரம்மிக்க தளபதியின் திறமைகளோ அவரிடம் வளர்வதைத் தடுத்ததுடன், பிறர் எவருடைய ஆலோசனையையும் உதறித் தள்ளும் ஆணவ மனநிலையையும் வளர்த்துவிட்டன. எனினும், அவருடைய கோபம் எல்லாம் ஒரு கணத்திற்குமேல் நில்லாது.' அப்போது வங்காளக் கவர்னராயிருந்த இரண்டாவது மகனான ஷுஜா கூரிய அறிவு வாய்ந்தவராயும் தீரமிக்க போர் வீரராயும் விளங்கினர். ஆனால், சோம்பவிலும், இன்பத்திலும் அவர் கொண்டிருந்த பெரு விருப்பம் அவரைப் பலவீனமுள்ளவராயும், சோம்பலுள்ளவராயும், கவனக் குறைவானவராயும், இடைவிடா முயற்சி, விழிப்பான எச்சரிக்கை, ஆழ்ந்த இணக்கம் இவற்றைப் பெறத் தகுதியில்லாதவராயும் ஆக்கிவிட்டது. அப்போது குஜராத்தின் கவர்னராயிருந்த இளையவரான முராத் நேர்மையுடையவராயும், தாராள மனப்பான்மையுடையவராயும், வீரராயும்தான் இருந்தார். ஆனால், மிகுதியாகக் குடித்துவிடும் வழக்கத்தில் பழகிவிட்டார். அதனால், தலைவருக்குரிய தகுதிகளை வளர்த்துக்கொள்ள முடியவில்லை. மூன்றாவது மகனான ஔரங்கசீப்தான் மற்ற மூவரைக் காட்டிலும் மிகு திறமை வாய்ந்தவராய் இருந்தார். அவர் உழைப்புத் திறனும், ஆழ்ந்த அரசியல் சூழ்ச்சியும், படைத்துறைச்

சூழ்ச்சித் திறனும், எவரும் மறுத்துக் கூறமுடியாத ஆட்சித் திறமையும் பெற்றிருந்தார். மேலும் பற்றுமிக்க ஸுன்னி முஸ்லி மாயிருந்ததால் பழமைப்பற்று மிக்க ஸுன்னிகளின் ஆதரவை இயல்பாகவே பெற்ருர். சிம்மாசனத்திற்குப் போட்டியிடும் இளவரசர்களின் பண்புகளில் காணப்பட்ட வேறுபாடுகள் போராட்டத்தின் போக்கைப் பாதித்தன என்பதைப் பார்க்கப் போகிறோம். தாராள மனப்பான்மை கொண்டிருந்த தாரா ஷுக்கோ தகுதியில்லாத தளபதியாயும் தகுதியில்லாத நாட்டு நலன் கருதும் அரசியலாளராயும் இருந்தமையின் புத்தி சாதுரியமும் கூரிய அறிவுமுடைய ஔரங்கசீப் தமக்கு ஒப்பாரும் மிக்காருமின்றித் தந்நிகரற்று விளங்கினுர். மிகு மேலான தளபதித் திறனும், சுதந்திரமும் மிக்க ஔரங்கசீப்பின் முன்பு ஷுஜா, முராத் இருவரும் திறமைக் குறைவால் திண்டாடவேண்டி யிருந்தது.

1657-ல் ஷாஜஹான் நோய்வாய்ப்பட்டபோது நான்கு சகோதரர்களுள் தாரா ஷுக்கோ ஒருவர் மட்டும் ஆக்ராவில் இருந்தார். நோய் உண்மையில் மிகக் கடுமையாகவே இருந்தது. ஆக்ராவில் இல்லாத மூன்று சகோதரர்களும் தந்தை உண்மையில் இறந்துவிட்டதாகவும் அச் செய்தி தாரா ஷுக்கோவினுல் மறைத்து வைக்கப்பட்டதாகவும் ஐயுற்றனர். பேரரசர் நோய் வாய்ப்பட்டதும் உடனே இராச்சியத்தில் குழப்பமும் ஒழுங்கின் மையும் ஏற்படும் நெருக்கடியான நிலைதான் சுயேச்சையாட்சியின் நிலை. சகோதரர்களுக்குள் போட்டி தொடங்கியவுடனே அந்த நெருக்கடிநிலை இன்னும் மிகு சீர்கேடடைந்தது. ஷுஜா அப்போது வங்காளத்தின் தலைநகராயிருந்த ராஜ்மஹாலில் தம்மைச் சக்கரவர்த்தியாக அறிவித்துக்கொண்டு பேரரசின் தலைநகரை நோக்கிச் சென்ருர். ஆனுல், அவர் வாரணுசிக்கருகில் வந்ததும் தாரா ஷுக்கோவின் மகன் சுலைமான் ஷுக்கோவின் தலைமையில் வந்த படையால் தோற்கடிக்கப்பட்டு வங்காளத்திற்கே திரும்பிச் செல்லவேண்டியதாயிற்று.

முராதும் 1657 டிசம்பர் 5ஆம் நாள் ஆமதாபாத்தில் தாமே முடிசூட்டிக்கொண்டார். மாளவத்தில் ஔரங்கசீப்பைச் சந்தித்து அவரைத் தம் கூட்டாளியாக ஆக்கிக்கொண்டார்: கடவுளின் பெயராலும், நபிநாயகத்தின் பெயராலும் ஆணை யிட்டுப் பேரரசைப் பிரித்துக்கொள்வதென இருவரும் உடன் படிக்கை செய்துகொண்டனர். அவ் வுடன்படிக்கையில் கண்ட விதிகளாவன: 1. கொள்ளைப் பொருளில் மூன்றில் ஒருபாகம் முராத் பக்ஷுக்கும் மூன்றில் இருபங்குகள் ஔரங்கசீப்புக்கும்

சேரவேண்டும். 2. பேரரசை வென்ற பிறகு பஞ்சாப், ஆப்கானிஸ் தானம், காஷ்மீர், சிந்து இவை முராத்துக்கு உரியவையாகும். அவர் அங்கே தம் அரசாட்சி முறையை ஏற்படுத்திக்கொள்ளலாம்; நாணயங்களை அடித்து வழங்கலாம்; தாமே அரசராகப் பிரகடனம் செய்துகொள்ளலாம் என்பவையாகும். ஔரங்கசீப், முராத் இருவரின் கூட்டுப்படைகள் வடக்கு நோக்கிச் சென்று தர்மாட் (Dharmat) என்ற இடத்தை அடைந்தன. அவ்விடம் உஜ்ஜயினி யின் (Ujjain) தென்மேற்காகப் பதினான்கு மைல் தூரத்தில் இருந்தது. அப் படைகளின் முன்னேறுதலைத் தடுக்கப் பேரரசர் ஜோத்பூரின் (Jodhpur) ராஜா ஜஸ்வந்த் சிங்கையும் (Jeswant Singh) காஸிம்கானையும் அனுப்பினார். எதிரிப் படைகள் 1658 ஏப்ரல் 15ஆம் நாள் தர்மாட்டில் சந்தித்தன. அங்கே பேரரசுப் படைகள் நன்றாகத் தோற்கடிக்கப்பட்டன. அதற்குக் காரணங்கள் இந்து முஸ்லிம் வீரர்களுக்கிடையே இருந்த பொறாமையும், அவர்கள் மேற்கொண்ட வெவ்வேறு அறிவுரைகளின் தீமை களும், ஓரளவு 'போரில் வயது மிக்க' ஔரங்கசீப்போடு ஒப்பிடும் போது தாழ்மையுறும் ஜஸ்வந்த் சிங்கின் படைத்துறைத் தந்திரங் களும் ஆகும். ராத்தோர்கள் மிகு தீரம் பொருந்திய வீரத்துடன் போரிட்டனர்; மிகப் பெரிய இழப்பினை அடைந்தனர். அதனால் காஸிம்கான் தம் தலைவருக்காகப் பெரிதும் ஒன்றும் செய்யவில்லை. ஜஸ்வந்த் சிங்கு ஓடிவிட்ட பிறகு அவருடைய செருக்குமிக்க மனைவி போர்க்களத்திலிருந்து பின்வாங்கி ஓடியதற்காகச் சினமுற்று அரண்மனைக் கதவுகளைச் சாத்திவிட்டாள். தர்மாட்டில் நடந்தபோர் ஔரங்கசீப்பின் பொருள்வளத்தையும் மதிப்பையும் மிகுதிப்படுத்தியது. சர் ஜே. என். சர்க்கார் குறிப்பிடுவதுபோலத் தக்கணப் போர்களின் தலைமை வீரரும், தர்மாட்டின் வெற்றியா ளருமான ஔரங்கசீப் தம் புகழில் இழப்பு எதுவும் இல்லாமலும், ஆனால், இந்தியாவிலேயே ஈடும் இணையுமற்ற பெரும் புகழ் வாய்ந்தவராயும் விளங்கினார்.

வெற்றி பெற்ற இளவரசர்கள் புறக்கணிக்கப்பட்டிருந்த ஒரு துறையின் வழியாகச் சாம்பல் (Champal) என்ற இடத்தைக் கடந்து ஆக்ராக் கோட்டையிலிருந்து எட்டு மைல் கிழக்கிலிருந்த சமுகார் (Samugarh) என்ற சமவெளியை அடைந்தனர். தாரா ஷுக்கோவும் அங்கே மே மாதக் கடைசியில் அவருடைய எதிரிகளை எதிர்க்க 50,000 படை வீரர்களுடன் சென்றார். அவ் வீரர்கள் 'தோற்றத்தில் மட்டுந்தான் வீரம் செறிந்தவர்களாகக்' காணப் பட்டனர். ஆனால், 'அவர்கள் பல இடங்களிலிருந்தும், பல வேறுபட்ட வகுப்பினரிடையே இருந்தும் அவசரமாகச் சேர்க்கப் பட்ட கலவையாக இருந்ததுடன், ஒழுங்காக வகைப்படுத்தப்

படாதவர்களாகவும்,ஒன்றுய்ச் சேர்ந்து போர் செய்யக் கற்பிக்கப் படாதவர்களாகவும் இருந்தனர்.' மே 29ஆம் நாள் போர் தொடங்கியது. அப் போர் மிகு கடுமையாக நடந்தது. இரு தரப்பினரும் மிகுந்த வீரத்துடன் போரிட்டனர். முராத் முகத்தில் மூன்று காயங்களை அடைந்தார். தங்கள் இனத்தின் மரபுக்கு ஏற்ப ராஜபுத்திர வீரர்கள் தாரா ஷுக்கோவின் தலைமை யிலும்,தங்கள் புதிய தலைவர் ராம்சிங்கின் தலைமையிலும்பெருவீரத் துடன் போர் செய்தனர். இளவரசர் முராத்தின் படைப்பிரிவைக் கடுமையாகத் தாக்கி ஒருவர் பாக்கியில்லாமல் உயிர் துறந்தனர். துரதிர்ஷ்டவசமாகத் தாரா ஷுக்கோவின் யானை ஓர் அம்பினுல் பலத்த காயத்துக்குள்ளாகியதால், அவர் அதிலிருந்து இறங்கி ஒரு குதிரையின்மீது ஏறினர். 'அச் செயல் சண்டையின் விதியை நிர்ணயித்துவிட்டது' என்று ஸ்மித் கூறுகிருர். தங்களுடைய தலைவரின் யானைமீதிருந்த அம்பாரி காலியாக இருந்ததைக் கண்டு மீதியிருந்த படைவீரர்கள் எல்லாம் அவர் இறந்துவிட்டா ரென்றே கருதிப் பெருங் குழப்பத்துடன் களத்திலிருந்து கலைந்து சென்றனர். தம்முடைய பாசறையினையும், துப்பாக்கிகளையும் பகைவர்கள் கைப்பற்ற விட்டுவிட்டு ஆழ்ந்த கவலை கொண்ட வராய்த் தாரா ஷுக்கோ ஆக்ராவை நோக்கி ஓடிச் 'சொல்ல முடியாத அவல நிலையில்' அவ் விடத்தை அடைந்தார். உண்மையில் தாரா ஷுக்கோவின் தோல்வி அவருடைய தளபதி களின் தந்திரங்களில் ஏற்பட்ட தவறுகளாலும், அவருடைய துப்பாக்கிப் படையின் பலவீனத்தாலும் ஏற்பட்டதே ஒழியச் சில வரலாற்று ஆசிரியர்கள் குறிப்பிடுவதுபோல, அவருடைய படையின் வலது சாரியின் பொறுப்பேற்றிருந்த கலீலுல்லாவின் (Khalilullah) சூழ்ச்சி மிக்க அறிவுரைகளினுல் முழுவதும் ஏற் பட்டதெனக் கொள்ளக்கூடாது.

ஷாஜஹானின் புதல்வர்களுக்குள் ஏற்பட்டிருந்த சிம்மாசன உரிமைப் போருக்குச் சமுகார்ப் போர் செயல்முறையில் தீர்ப்புக் கூறிவிட்டது. தம்முடைய பல வீரர்களையும் இழந்து தாரா தோற்றோடிப் போனமை ஔரங்கசீப் தம் பேராசை எண்ணத்தை நிறைவேற்றிக் கொள்வதை எளிமையாக்கிவிட்டது. ஔரங்கசீப் இந்துஸ்தானத்தின் சிம்மாசனத்தைக் கைப்பற்றியது பெரிதும் சமுகார்ச் சண்டையின் நேரடி விளைவே என்றுகூடக் கூறிவிடலாம். இந்த வெற்றிக்குப் பிறகு உடனேயே அவர் ஆக்ராவுக்குச் சென்று அந்த வருடம் ஜூன் மாதம் 8ஆம் நாள் கோட்டையைக் கைப்பற்றினர். இணக்கமான ஏற்பாடு செய்வதற்கு முயன்ற ஷாஜஹானின் எல்லா முயற்சிகளையும் தோற்கடித்தும், கோட்டையைக் காத்துவந்த பேரரசுப் படைகள் கோட்டையைக்

கைப்பற்றுவதைத் தடுக்கச் செய்த முயற்சிகளைப் பயனற்றதாகச் செய்தும் கோட்டையைப் பிடித்துவிட்டார்.

சிம்மாசனத்தை இழக்க நேர்ந்த ஷாஜஹான் மிகு கொடுமையாய் நடத்தப்பட்டுத் துன்புற நேர்ந்தது. ஆக்ராக் கோட்டையைக் காத்து நின்றவர்களின்மேல் கடுமையான நடவடிக்கை எடுக்கும் முறையில் ஔரங்கசீப் யமுனை நதியின் நீரை அவர்களுக்குச் செல்லாமல் தடுத்து நிறுத்தியபோது பாவம் துயரார்ந்த பேரரசர் ஜூன் மாதத்துக் கடுங் கோடையில் கோட்டைக்குள்ளேயிருந்த கிணறுகளின் உப்புத் தண்ணீரையே குடித்துத் தம் தாகத்தைத் தணித்துக்கொள்ள நேர்ந்தது. மிகவும் பரிதாபமான முறையில் அவர் ஔரங்கசீப்புக்கு இவ்வாறு எழுதினார்:

> 'எப்பொழுதும் இந்துக்கள் புகழ்ச்சிக்குரியவர்களாகட்டும். அவர்கள் இறந்தவர்களுக்குத் தவறாமல் நீரைக் கொடுக்கின்றனர். என் மகனே நீயோ ஒரு விந்தையான முஸ்லிமாய் இருக்கிறாய். ஏனெனில், தண்ணீரின்றித் தவிக்கும்படி என்னை விட்டிருக்கிறாய்.'

சாதாரணக் கைதியைப்போலக் கடுஞ்சிறைக் கட்டுப்பாட்டில் வைக்கப்பட்டிருந்த ஷாஜஹானுக்கு எளிமையான சிறு வசதிகள் கூட மறுக்கப்பட்டன. பேரரசரின் எல்லா வேண்டுகோளுக்கும் ஔரங்கசீப் செவிசாய்க்க மறுத்துவிட்டார். ஜஹானாரா இணக்கம் செய்விக்கப் பலமுறை முயன்றபோதும் அவளுடைய பேச்சுகளை அவர் கேட்க மறுத்துவிட்டார். துன்புற்ற பேரரசர் கடைசியில் விதிக்குத் தலைவணங்கவே நேரிட்டது. அழுது கொண்டே தூங்கிவிடும் குழந்தையைப் போலத் தம் குறைகளைத் தெரிவிப்பதை அவர் பின்னர் நிறுத்திவிட்டார். அவர் மத உண்மைகளை எண்ணி ஆறுதல் அடைந்தார். கடைசிவரை பக்தி மிக்க மகளான ஜஹானாராவுடன் சேர்ந்து தியானிப்பதிலும், வழிபாடு செய்வதிலும் தம் கடைசிக் காலத்தைக் கழித்தார். முடிவில் 1666ஆம் ஆண்டு ஜனவரி 22ஆம் நாள் அவருடைய எழுபத்து நான்காவது வயதில் மரணம் அவருடைய துன்பங்களுக்கெல்லாம் முற்றுப்புள்ளி வைத்தது.

ஆக்ராவிலிருந்து ஔரங்கசீப் 1658 ஜனவரி பதின்மூன்றும் நாள் டில்லியை நோக்கிச் சென்றார். வழியில் மதுராவுக்கருகில் இருந்த ரூப்நகரில் (Rupnagar) அவருடைய சகோதரர் முராத்தின் எதிர்ப்பை நசுக்குவதற்காக நின்றார். அச்சமயத்திற்குள் முராத் தம் சகோதரரின் சூழ்ச்சித் திட்டத்தை நன்கு புரிந்துகொண்டு

அவர்மேல் பொருமையை வளர்த்துக்கொண்டிருந்தார். முராத்தை நேரடியாகப் போர்க்களத்தில் சந்திக்காமல் ஔரங்கசீப் அவரைச் சூழ்ச்சிவலையில் சிக்கவைத்துப் பிடித்துவிட்டார். துரதிர்ஷ்டம் பிடித்த அந்த இளவரசன் முதலில் சலீம்கர்க் கோட்டையில் (Salimgarh) சிறைவைக்கப்பட்டிருந்து பின்பு அங்கிருந்து 1659 ஜனவரியில் குவாலியர்க் கோட்டைக்குக் கொண்டு போகப் பட்டார். திவான் ஆலி நாகியைக்(Ali Naqi)கொலை செய்ததாகக் குற்றம் சாட்டப்பட்டு 1661 டிசம்பர் 4ஆம் நாள் தூக்கிலிடப் பட்டார். முராத் சிறை செய்யப்பட்டவுடனே ஔரங்கசீப் டில்லிக்குப் போய்விட்டார். அங்கே 1658ஆம் ஆண்டு ஜூலை 21ஆம் நாள் பேரரசராக முடி சூட்டிக்கொண்டார்.

ஔரங்கசீப் பிறகு மற்ற எதிரிகளை அடக்குவதற்காகச் சென்றார். தர்மாட்டிலும், சமூகாரிலும் தாரா ஷூக்கோ அடைந்த தோல்வி அதிகாரத்தை அடக்குவதற்காகப் புதிதாக ஒரு முயற்சி செய்வதற்கு ஷூஜாவுக்குத் தைரியத்தை அளித்தது. ஆனால், 1659 ஜனவரி 5ஆம் நாளில் அலகாபாத்துக்கு அருகிலிருந்த காஜா (Khajwah) என்ற இடத்தில் ஔரங்கசீப் அவரைப் படு தோல்வி அடையுமாறு செய்தபோது அவருடைய நம்பிக்கைகள் எல்லாம் தூள்தூளாயின. மீர் ஜூம்லாவினால் அவர் மேற்கு வங்காளம் வழியாக டாக்காவுக்கும், அங்கிருந்து 1660 மே மாதத்தில் அராக்கானுக்கும் (Arakan) துரத்தப்பட்டார். அதன் பிறகு ஷூஜாவைப்பற்றி ஒன்றும் அறியப்படவில்லை. அராக்கானியர்களால் அவர் குடும்பத்துடன் கொல்லப்பட்டிருக்கலாம். ஔரங்கசீப்பின் மூத்த மகன் இளவரசன் மகம்மது மீர் ஜூம்லாவுடன் சண்டை போட்டுக்கொண்டு சிறிது காலம் ஷூஜாவுடன் சேர்ந்திருந்தார். ஆனால், இதற்காக அவர் ஆயுட்காலச் சிறைத் தண்டனை கொடுக்கப்பட்டார். ஏறக்குறைய 1676-ல் அவர் இறந்தார்.

நல்வினை தாரா ஷூக்கோவுக்கு எதிராகச் சென்றபோது அவருடைய மகன் சுலைமான் ஷூக்கோவும் தம்முடைய தளபதிகளாலும் வீரர்களாலும் கைவிடப்பட்டார். 'தோற்கும் பக்கத்திலேயே இனியும் சார்ந்து இருப்பதால் இலாபமில்லை' என்று கருதி அவர்கள் அவரைக் கைவிட்டுவிட்டனர். சுலைமான் ஷூக்கோ தம்முடைய மாற்றுந்தாய் மகனை முஹம்மது ஷா, இன்னும் பதினேழு வழியாளர்கள் இவர்களுடன் இடத்துக்குஇடம் ஓடிப்போய்க் கடைசியில் கர்வால் மலைகளின் (Garhwal Hills) இந்து அரசர் ஒருவரிடம் அடைக்கலம் அடைந்தார். 'அவலமுற்ற அரசவிருந்தாளியிடம் பேரன்பும், பெருங் கவனிப்பும்' உடைய

வராயிருந்தார் அந்த இந்து அரசர். ஆனால், ஔரங்கசீப்பினால் வற்புறுத்தப்பட்டபோது விருந்துபசரித்தவரின் மகன் 1660 டிசம்பர் 27ஆம் நாள் ஷுக்கோவைக் காட்டிக் கொடுத்து, அவருடைய பகைவர்களின் கையில் ஒப்படைத்துவிட்டார். அப்போது இளமைச் செழிப்பும், மிகச் சிறந்த பேரழகும் கொண்டிருந்த சிறைப்பிடிக்கப்பட்ட இளவரசர் ஔரங்கசீப்பின் முன்பு விலங்கு மாட்டப்பட்டுக் கொண்டுவரப்பட்டார். அவர் ஔரங்கசீப்பிடம் பௌஸ்தா (Pousta) பானம் கொடுத்தோ, அல்லது 'அபினி கசகசாச் சத்தை உட்புகுத்தியோ' கொல்வதைக் காட்டிலும் உடனடியாகக் கொல்லப்படுவதையே விரும்புவதாகக் கூறினார். 'இந்தப் பானம் கொடுக்கப்படமாட்டாது என்றும் அவருடைய மனம் சிறிதும் சஞ்சலமின்றியே இருக்கும்' என்றும் ஔரங்கசீப் வாக்குறுதி தந்தார். ஆனால், அந்த வாக்குறுதி காப்பாற்றப்படவில்லை. பயங்கரமான அந்தப் பானம் ஒவ்வொரு காலையிலும் கொடுக்கப்பட்டு வந்தது. கடைசியில் 1662 மே மாதத்தில் அவருடைய காப்பாளர்களின் முயற்சிகள்மூலம் அவர் அடுத்த உலகத்துக்கு அனுப்பப்பட்டார். தாரா ஷுக்கோவின் இளைய மகனான சிபீர் ஷுக்கோவும் (Siphir Shukoh) முராதின் மகன் இஸித் பக்ஷும் கொடுமையான எதிரிகளாகக் கருதப்படவில்லையாதலின், உயிரோடு வாழ அனுமதிக்கப்பட்டனர். பின்னர், அவர்கள் ஔரங்கசீப்பின் மூன்றாவது, ஐந்தாவது பெண்களுக்கு முறையே மணம்செய்து வைக்கப்பட்டனர்.

தாரா ஷுக்கோவின் முடிவின் கதை அவருடைய சகோதரர் முராத் அல்லது அவருடைய மகன் சுலைமான் ஷுக்கோவின் முடிவைக் காட்டிலும் இரக்கமும் வருத்தமும் மிகுதியாகத் தரத்தக்கதன்று. ஔரங்கசீப்பினால் ஆக்ரா பிடிக்கப்பட்ட பிறகும், ஷாஜஹான் சிறைப்படுத்தப்பட்ட பிறகும், தாரா ஷுக்கோ டில்லியிலிருந்து லாகூருக்கு ஓட்டம் பிடித்தார். அங்கே துரத்திக் கொண்டுவரும் ஔரங்கசீப்பின் படைகளை எதிர்ப்பதற்காக ஏற்பாடுகளைச் செய்வதில் முனைந்திருந்தார். சட்லெஜ் நதியின் மீதுள்ள சில துறைகளைக் காப்பதற்குச் சில முறைகளை மேற்கொண்டார். மழை பெய்யத் தொடங்கியதும் ஔரங்கசீப் லாகூரை அடைவதற்குச் சிறிது காலம் பிடிக்கும் என்று நம்பினார். 'ஆனால் இவ்வாறு நம்பும்போது, அவர் ஔரங்கசீப்பின் சக்தியையும் எண்ணத்தின் திண்மையையும் விட்டுவிட்டே கணக்கிட்டுவிட்டார். அவற்றின் முன்பு ஒவ்வொரு தடையும்-மனிதத் தடையாயிருப்பினும், பொருள்களினால் வரும் தடையாயிருப்பினும், நீங்கிப்போய் வழி விட்டுவிடும்' என்று சர் ஜே. என். சர்க்கார் எழுதுகிறார். லாகூருக்குத் தாரா வந்த ஒரு மாதத்துக்குப் பிறகு

அவருடைய 'அஞ்சத்தக்க எதிரி' தம் படையுடன் சட்லெஜ் நதியைத் தாண்டி வந்து தாராவை அவருடைய குடும்பத்துடன் மூல்தானுக்குத் துரத்தினர். நாடோடியாகிவிட்ட அந்த இளவரசர் இன்னும் ஔரங்கசீப்பின் முக்கியமான அதிகாரி களால் இடத்துக்கு இடம் துரத்தப்பட்டார். அவரே ஷுஜாவி னாலும் சுலைமான் ஷுக்கோவினாலும் உண்டாக்கப்பட்ட இடர்ப் பாடுகளிலிருந்து நீங்குவதற்காக 1657 செப்டம்பரில் கிழக்கே திரும்பிவந்து, கடைசியில் குஜராத்தை அடைவதில் வெற்றி யுற்றார். அங்கே எதிர்பாராத விதமாகக் குஜராத்தில் புதிதாக நியமிக்கப்பட்டிருந்த கவர்னரான ஷா நவாஸ்கான்(Shah Nawaz Khan) என்பவரால் வரவேற்றுப் (1659 ஜனவரி) படை உதவி செய்யும் பேற்றைப் பெற்றார். இவ்வாறு ஓரளவு தமது பலத் தைப் புதுப்பித்துக்கொண்ட பிறகு, தாரா தக்கணத்துக்குத் திரும்பிச் செல்லலாம் என்று நினைத்துக்கொண்டிருந்தார். அங்கே பீஜப்பூர் கோல்கொண்டா நாடுகளை ஆண்ட ஷியா அரசர்களின் ஆதரவைப் பெறலாம் என்று எதிர்பார்த்தார். இது அவருக்கு ஏற்ற ஒரு கொள்கையாகவே இருந்திருக்கும். ஆனால், ஔரங்க சீப்பினால் ஏற்கெனவே வசமாக்கப்பட்டிருந்த ஜஸ்வந்த் சிங்கு அஜ்மீரை நோக்கிச் சென்றால் உதவி செய்வதாக வாக்குறுதிகள் அளித்து அவரைத் தூண்டினர். அந்த இராஜபுத்திரத் தலைவர் இந்தச் சிம்மாசனத்திற்கான போரில் நடந்துகொண்ட விதம் ஐயுறத்தக்கதாகவே இருக்கிறது. தம்முடைய வாக்குறுதிகளைக் காற்றில் பறக்க விட்டுவிட்டார். தாராவும் மிகவும் நம்பி எதிர் பார்த்திருந்த ராஜபுத்திர உதவியைப் பெறமுடியவில்லை. அவர் அஜ்மீருக்கு அருகில் வந்துவிட்ட ஔரங்கசீப்புடன் போரிட வேண்டிய கட்டாயம் ஏற்பட்டுவிட்டது. தேவைக்கு மிகு குறை வாக இருந்த தம்முடைய வசதிகளைக்கொண்டு திறந்தவெளியான போர்க்களத்தில், எதிரியின் மிகப் பெரிய வன்மை படைத்த படையை எதிர்த்துப் போரிட முற்படுவது விரும்பத் தக்கதன்று என்று கருதிய தாரா, அஜ்மீருக்கு நான்கு மைல் தெற்கே தியோரைக் (Deorai) கணவாயில் வலிமை வாய்ந்த வியக்கத்தக்க சிறந்த ஓரிடத்தைத் தேர்ந்துகொண்டு, அங்கே ஓர் அகழிக்குள் இருந்துகொண்டு, 1659 ஏப்ரலில் 12 முதல் 14 வரையுள்ள மூன்று நாள்கள் போரிட்டார். ஆனால், கடைசியில் அவர் தோற்கடிக்கப் பட்டார். உயிர் தப்புவதற்காக விரைவில் ஓட்டம் பிடித்தார். ஜெய்சிங்கு, பஹதூர்கான் இவர்கள் தலைமையில் ஔரங்கசீப்பின் படை வீரர்களால் இடத்துக்கு இடம் (ராஜபுதனம், கட்ச், சிந்து) துரத்தப்பட்ட தாரா, இந்தியாவில் எங்கும் புகலடைய முடிய வில்லை. 1659 ஜூனில் வடமேற்கு எல்லையை நோக்கி விரைந்தார். சிலஆண்டுகளுக்கு முன்பு ஷாஜஹானால் தூக்குத்தண்டனை கொடுக்

கப்பட்டபோது தம்மால் காப்பாற்றப்பட்டவரும் (போலன் கணவாய்க்கு ஒன்பது மைல் கிழக்கேயிருந்த) தாதர் (Dadar) என்ற இடத்திலிருந்த ஆப்கானியத் தலைவருமான ஜிவான் கானிடம் (Jiwan Khan) அடைக்கலம் தேடச் சென்றார். ஆனால், தாதருக்குச் செல்லும் வழியில் 'எல்லாத் துரதிர்ஷ்டங்களிலும் மிகப்பெரிய துரதிர்ஷ்டம்' நேர்ந்தது. அலைந்து திரிந்த காலங்களில் எல்லாம் அன்பாதரவுடன் கூட இருந்து உதவி செய்தவரும், சில காலமாக வயிற்றுப் போக்கினால் துன்புற்றுக் கொண்டிருந்தவருமான அவருடைய மனைவியார் நாதிரா பேகம் (Nadira Begam) நீடித்து வந்த துன்பங்களாலும், போதிய மருந்தும் ஓய்வும் இன்மையாலும் அப்போது உயிர் துறந்தார். இதனால் தாரா பேரதிர்ச்சியிலும், ஆழ்ந்த துக்கத்திலும் ஆழ்ந்துவிட்டார்.[1] இவ்வாறு அடுக்கி வந்த மலைபோன்ற துன்பங்களும், துக்கத்திற்குமேல் துக்கமும், துயரத்திற்குமேல் துயரமும் தாராவின் நெஞ்சை நெருக்கி அதன் சமநிலையை இனிமேல் நீடித்து வைத்திருக்க முடியாத நிலையை எய்தச் செய்துவிட்டன. அவருடைய துரதிர்ஷ்டத்தை அதிகரிக்கும் வகையில் நன்றியற்ற அந்த ஆப்கானியத் தலைவர் அவரைக் காட்டிக் கொடுத்து, அவரையும், அவருடைய இரு புதல்விகளையும், அவருடைய இரண்டாவது மகனை சிபிர் ஷுக்கோவையும் பஹதூர் கானிடம் ஒப்படைத்தார். அவர் 1659 ஆகஸ்டு 23ஆம் நாள் சிறைப்பிடிக்கப்பட்ட அவர்களை டில்லிக்குக் கொண்டு சென்றார். அதே மாதம் 29ஆம் நாள் அவர்கள் நகர் முழுவதும் ஊர்வலமாகக் கொண்டு செல்லப்பட்டனர். சர் ஜே. என். சர்க்கார் எழுதுகிறார்: 'மண்பூசப்பட்ட ஒரு சிறிய பெண்யானையின் முதுகின்மீது திறந்த அம்பாரி ஒன்றில் தாரா உட்கார வைக்கப்பட்டார். ஆகஸ்டு மாதத்தில் கடும் வெயிலுக்கு ஆளாக்கப்பட்டு அவர் தம்முடைய பழைய புகழும் பெருமையும் விளங்கிய இடங்கள் வழியாக இட்டுச்செல்லப்பட்டார். தாங்க முடியாத மானக்கேட்டில் அவர் தலையைக்கூட நிமிர்த்தவில்லை; எந்தப் பக்கமும் கண் ஓட்டத்தைச் செலுத்தவில்லை. ஆனால், நசுக்கப்பட்ட சிறு மரக்கொம்பினைப் போல உட்கார்ந்திருந்தார்.' அவருடைய அவல நிலை குடிமக்களின் உள்ளத்தில் இரக்கத்தைத் தோற்றுவித்தது. அக் காட்சியை நேரில் கண்ட பெர்னியர்

[1] முகலாயப் பேரரசர்கள் பலதார மணப்பழக்கம் உடையவராயினும் மனைவியர்பால் பற்றுக் காட்டினர் என்பது குறிப்பிடத்தக்கது. டாக்டர் ஸ்மித் குறிப்பிடுவது போல, 'இந்தியா ஆபீஸ் நூலகத்தில் தாரா ஷுக்கோவின் காதலுக்கு இரங்கத்தக்க ஓர் அடையாளமாக ஓர் அழகிய படத்தொகுப்பு (album) இருக்கிறது. அதில் அவருடைய சொந்தக் கையெழுத்திலேயே இவ்வாறு எழுதப் பட்டிருக்கிறது: 'இப் படத் தொகுப்பு 1051ஆம் ஆண்டில் (கி.பி. 1641—1642) பேரரசர் ஷாஜஹானின் மகனை இளவரசர் முஹம்மது தாரா ஷுக்கோவினால் தம்மிடம் மிக நெருங்கிய மிக இனிய நட்புக் கொண்ட நாதிரா பேகம் அம்மையாருக்கு வழங்கப்பட்டது.'

என்பவர் எழுதுகிறார்: 'கூடியிருந்த கூட்டம் மிகப் பெரியதாய் இருந்தது. எங்குப் பார்த்தாலும் மக்கள் அழுவதையும், இரக்கம் தூண்டும் மொழியில் தாராவின் விதியை எண்ணி வருந்துவதையும் கண்டேன்......ஒவ்வொரு பகுதியிலிருந்தும் மனத்தை அறுக்கத் தக்க, அவல அழுகை ஒலிகளைக் கேட்டேன். ஆண்களும் பெண் களும் குழந்தைகளும் தங்களுக்கே ஒரு பெரிய கேடு நேர்ந்து விட்டதுபோல அழுதுகொண்டிருந்தனர்.' ஆனால், அந்தத் துரதிர்ஷ் டம் கொண்ட இளவரசர் குதிரைப்படையாலும் விற்படை யினராலும் சூழப்பட்டிருந்ததால், அவரைக் காப்பாற்ற ஒருவரும் முன்வர முடியவில்லை. அப்போது ஆகஸ்டு 30ஆம் நாள் துரோகி மாலிக் ஜிவான்கான் என்பவருக்கு எதிராக ஒரு பெரும் மக்கள் கலகம் ஏற்பட்டது. ஔரங்கசீப்பினால் அதற்குமேல் தாராவின் உயிரை வைத்திருக்க முடியவில்லை. எனவே, அந்தக் கலகம் தாரா வின் முடிவை விரைவுபடுத்திவிட்டது. முஸ்லிம் சட்ட அறிஞர் களின் முன்பு தாராவின் வழக்கு வைக்கப்பட்டது. இஸ்லாமியக் கொள்கைக்கு மாறாக நடந்ததாக அவர்கள் இகழ்ந்துரைத்தனர். ஆகஸ்டு 30ஆம் நாள்இரவு கொலையாளிகள் தந்தையைஅணைத்துக் கொண்டிருந்த சிபீரைப் புறந்தள்ளிவிட்டுத் தாராவைப் பிடித்துத் தலையை வெட்டி எறிந்தனர். ஔரங்கசீப்பின் கட்டளையினால் மக்கள் தங்களுடைய அபிமானத்துக்குரியவர் உயிரோடு இல்லை என்பதைப் புரிந்துகொள்வதற்காகத் தாராவின் சவமடங்கிய பெட்டி நகர் முழுவதும் ஊர்வலமாகக் கொண்டுசெல்லப் பட்டது. பிறகு ஹுமாயூனின் கல்லறைக்கு அருகிலிருந்த தூபியின் கீழ் இருந்த ஒரு சிறு அறையில் புதைக்கப்பட்டது. இவ்வாறு மிக உயர்ந்த சிறப்பு வாய்ப்புகளுடன் தொடங்கிய ஷாஜஹானின் ஆட்சி பல அடுக்கடுக்கான துன்பம் நிறைந்த அவலக் காட்சி களுடன் முடிவுற்றது.

## ஐ. ஷாஜஹானின் குணவியல்பும் ஆட்சியும் பற்றிய திறனாய்வு மதிப்பீடு

ரோ (Roe), டெர்ரி, பெர்னியர், டிலேயெட் (Delaet) போன்ற ஐரோப்பிய ஆசிரியர்களும் டாக்டர் ஸ்மித் என்ற தற்கால ஆசிரியரும் கருதுவது போலவே ஷாஜஹான் முக்கியமாக இரங்காத உள்ளம் படைத்தவராகவோ, அளவுக்கு மீறி இன்பந் தேடும் அரசராகவோ இருக்கவில்லை. எனினும், அவருடைய கடுமையைக் காட்டும் சில நிகழ்ச்சிகள் இல்லாமல் போகவில்லை. வெற்றிப் படையாளராகத் திண்மை வாய்ந்த அவர் தம்முடைய அரசியல் எதிரிகளை ஒழித்துக்கட்டி உண்மையில் மகிழ்ச்சியில்லாத நினைவுகளைக் கொடுக்கும் முறைகளில் சிம்மாசனத்தைப் பெற்றார். ஆனால், நூர்ஜஹானின் இடைவிடாத தொல்லைகளுக்கு அவர்

ஆளாகிவர நேர்ந்ததைக் கவனிக்கும்போது, டௌ (Dow) என்பவர் எழுதுவது போல, 'அந்தப் பேய்ச் செயல் செய்யும்படி தூண்டிய சூழ்நிலைகளின் வன்மைப் போக்கைக் கண்டு நம்முடைய பாதிக் காலம் மறந்து போய்விடுகிறது.' மேலும், 'முதலில் செய்த இந்தக் குற்றங்களுக்காகப் பின்னால் அவர் கண்டிப்பான நீதியும் கண்ணோட்டமுடைய அரசாட்சியின் மூலமும், தம்முடைய குடிமக்களின் நலத்திற்காகப் பாடுபடும் உள்ளத்தாலும் போதுமான அளவு கழுவாய் தேடிக்கொண்டார்.' இவ்வாறு 1631—1632ஆம் ஆண்டுகளில் ஏற்பட்ட கொடிய பஞ்சத்தின்போது குடிமக்கள் பட்ட துன்பங்களையெல்லாம் குறைப்பதற்காக மிகவும் உழைத்தார். ஆட்சி முறையில் போதிய அளவு உழைப்பும் உற்சாகமும் காட்டினார். அவருடைய மூதாதைகளைப்போல, அவர் அவ்வளவு பெரிய போர் வீரராய் இல்லாமற் போயினும், அவரிடம் படைத்துறைப் பண்புகள் இல்லாமற் போய்விடவில்லை. அவருடைய மதக்கொள்கையில் தீவிரமான பற்றுக்கொண்டிருந்தவராய் அக் கொள்கைக்காகப்பாடுபட்டார். புனிதப் பயணவரியை (Pilgrimage Tax) மீண்டும் கொண்டுவந்தார். முஸ்லிம்கள் மற்ற மதங்களுக்கு மாறுவதைத் தடுக்க நடவடிக்கைகள் மேற்கொண்டதுடன் முஸ்லிம்களின் எண்ணிக்கையைப் பெருக்கவும் பாடுபட்டார். ருகையா பேகத்தால் (Ruqayya Begam) வளர்க்கப் பட்ட அவர் துருக்கியில் எழுதப்படிக்கவும் அறிந்திருந்தார். இளமை வாழ்க்கையில் முல்லா காஸிம் பேக் தப்ரெஸி (Mulla Qasim Beg Tabrezi), ஹக்கீம் தவாயி (Hakim Dawai), ஷேக் அப்துல் கைர் (Shaikh Abdul Khair), ஷேக் சூஃபி (Shaikh Sufi) போன்ற தலைசிறந்த ஆசிரியர்களிடம் பயிற்சிபெற்ற அவர் பாரசீக மொழி, இந்தி இரண்டும் பேசுவதற்கு நன்கு கற்றிருந்தார். இயல்பிலேயே இரக்க மனம் படைத்தவரான ஷாஜஹான், அன்பு மிக்க தந்தையாகவும், ஆசை மிக்க கணவராயும் இருந்தார். 1612-ல் திருமணம் செய்துகொண்ட மும்தாஜ்மஹாலிடம் ஆழ்ந்த காதல் கொண்டிருந்தார். அத் தம்பதிகள் ஏறக்குறையப் பத்தொன்பது ஆண்டுகள் இன்பவாழ்க்கையில் திளைத்திருந்தனர். மும்தாஜ் தம் கணவரின் தவறுபடாத நண்பராயும், அவருடைய துன்பக் காலத்தில் அறிவு மிக்க ஆலோசனைகள் அளிப்பவராயும் இருந்தார். 1613-ல் குழந்தைப் பேற்றின்போது அவர் இறந்து விட்டார். அவருடைய பெயரை அழியாமல் செய்வதற்காக, அவருடைய கல்லறையின்மீது ஷாஜஹான் புகழ்பெற்ற தாஜ் மஹாலைக் கட்டினார். அது காதல் தொடர்புக்கு இணையில்லாத ஒரு நினைவுச் சின்னமாய் விளங்குகிறது.

ஷாஜஹானின் ஆட்சிக் காலம் இந்தியாவில் முகலாய ஆட்சியின் பொற்காலமாகப் பொதுவாகக் கருதப்படுகிறது. அக்

காலத்தில் முகலாய ஆட்சி உச்ச நிலையில் இருந்தது. அடுத்த அரசுரிமைப்போர் தொடங்குவதற்கு முன்பு பேரரசரின் அதிகாரத்தை நன்றாகக் கட்டிக் காப்போர் எவருமில்லை. அக் காலத்தில்தான் இந்தியாவுக்கும் மேற்கு ஆசியாவுக்கும் இடையே ஏற்றுமதி வாணிகம் வளர்ச்சியுற்றது. ஐரோப்பாவுடன் ஏற்றுமதி வாணிகம் தொடங்கியது, அரசாங்கத்தில் பொருள் வருவாய் மிகுதிப்பட்டுக்கொண்டு வந்தது.'ஆடம்பரமும் அலங்காரச் சிறப்பும் அக் காலத்தில்மிக்கிருந்தன. அவை கம்பீரம்மிக்க தாஜ், ஆக்ராவின் முத்துமசூதி (Pearl Mosque), திவானி ஆம் (Diwan-i-Am), திவானி காஸ்(Diwan-i-Khas), ஜாமிமசூதி (Jami Masjid), புகழ் பெற்ற மயில் சிம்மாசனம் (Celebrated Peacock Throne) போன்ற கலைக்கவின் மிக்க அற்புதமான கட்டடங்கள் யாவும் அதற்கு அழியாத பெருஞ் சான்றுகளாகும். இவை யாவும் அமைதியும் செழிப்பும் அக் காலத்தில் இராச்சியம் முழுவதும் நிலவியிருந்தன என்பதை நாம் நம்பும்படி செய்கின்றன. ஆனால், அக் காலத்து ஐரோப்பிய வணிகர்கள் எழுதிவைத்துள்ள குறிப்புகளையும், இந்தியாவில் இருந்த ஆங்கிலத் தொழிற்சாலைகளின் ஏடுகளையும் கவனித்துப் படித்துப் பார்க்கும்போது 'ஆட்சியை விளக்கி வரைந்த படத்தில் சில கறுப்புப் புள்ளிகளும் இருந்தன; அவை அரசவை வரலாற்றுக் கோப்பாளர்களால் புறக்கணிக்கப்பட்டு விட்டன' என்று அறிகிறோம். வெளித் தோற்றத்தில் ஒளிச் சிறப்பும் செல்வ வளமும் பொருந்தியதாகக் காணப்பட்ட மேற் பரப்பின் கீழே நாட்டின் பொருளாதார முறையில் சில வருந்தத் தக்க சீர்கேடுகளும் இருந்தன. மாகாணக் கவர்னர்களின் முறை கேடான ஆட்சி 'உழவர்களும், நுண்தொழில் செய்வோர்களும் அடிக்கடி வாழ்க்கைத் தேவைகளைக் கூடப் பெறாமல் செய்து வந்தது' என்று பெர்னியர் என்பார் கூறிய கூற்று அந்தக் காலத்துத் தொழிற்சாலை ஏடுகளில் காணப்படுகிறது. மேலும் விரிவான படிமுறை அதிகாரிகளின் ஆட்சி மேற்கொள்ளப்பட்டதாலும், பெரியதொரு படை வைக்கப்பட்டிருந்ததாலும், அற்புதமான அமைப்பு கலைக்கவின் மிக்க கட்டடங்கள் எழுப்புவதற்கு மிகுதியான செலவுகள் ஏற்பட்டதாலும், உழவர்கள்மீதும், உற்பத்தியாளர்கள்மீதும் பெரிய வரிச்சுமை விழுந்தது. பேரரசின் உயிர்நிலையே உழவர்கள், உற்பத்தியாளர்கள் இவர்களிடமே இருந்தது. இவ்வாறு தேசியப் பொருளாதாரச் சீர்குலைவு ஏற்பட்டது. அடுத்த ஆட்சியில் அச் சீர்குலைவு மிகுதியாகத் தொடங்கியது. இந்தியாவில் அக்பரின் அறிவுத் திறனாலும், அவருடைய துணையாளர்களின் சிறப்பறிவினாலும் வளர்ந்து விரிவாக்கப்பட்ட மாபெரும் தைமூரித்தின் அரசு பிறகு சீர்குலைந்து போகத் தொடங்கியதற்குச் சிறந்த காரணங்களுள் அப்

பொருளாதாரச் சீர்குலைவு முக்கியமான ஒன்றாகும். சுருக்கமாகக் கூறுமிடத்து, ஷாஜஹானின்கீழ் இருந்த இந்தியா பலவிதங்களில் பதினான்காம் லூயியின்(Louis XIV)கீழிருந்த பிரான்சினை ஒத்திருந்



முகலாய இந்தியா

தது. அரசாங்கத்தின் படைத்துறை முறையும் பலவீனப்பட்டுக் கொண்டே வந்தது. பொருளாதார ஆட்சிமுறையும் தளர்ச்சியுற்றுக்கொண்டே வந்தது.

# 4. ஔரங்கசீப் ஆலம்கீர் (1658-1707)

## 1. ஆட்சியின் இரண்டு பகுதிகள்

ஔரங்கசீப்பின் குறிப்பிடத்தக்க ஐம்பது ஆண்டு ஆட்சியை இயல்பாகவே இரண்டு சம பகுதிகளாகப் பிரிக்கலாம். ஒவ்வொரு பாதியும் தனக்கென நன்கு வரையறுக்கப்பட்ட சிறப் பியல்புகளையும், மற்றப் பாதியிலிருந்து வேறுபடுத்திஅறியக்கூடிய சிறப்பியல்புகளையும் பெற்றிருப்பதைக் காணலாம். முதல் பாதியில் அதாவது 1658-லிருந்து 1681 வரை வடக்குப் பாகம் கவனத்தை ஈர்க்கத்தக்க பகுதியாகவும், சிவில், படைத்துறை போன்ற எல்லா முக்கியமான வளர்ச்சிகளும் ஏற்படுவதற்கான இடமாயும் இருந்துவந்தது. அப்போது தெற்குப்பாகம் 'நெடுந் தூரத்தில் இருந்த பகுதியாயும் புறக்கணிக்கத் தக்க பகுதியாயும் காணப்பட்டது.' ஆனால், ஆட்சியின் இரண்டாம் பாதியில் அரசியல் ஈர்ப்புத்தானம் வட இந்தியாவிலிருந்து தக்கணத்துக்கு மாறியது. 1681-ல் பேரரசர் தம் குடும்பத்துடன் தக்கணத்துக்குச் சென்றார். அதன் விளைவாக அவருடைய அரசவையும் பெரிய படையும் வடக்கின் ஆட்சியும் புறக்கணிக்கப்பட்டன. வடநாடு முழுவதிலும் குழப்பமும் அராஜகமும் மலியத்தொடங்கிவிட்டன. பேரரசர் பீஜப்பூர், கோல்கொண்டாக்களின் முஸ்லிம் சுல்தானி யங்களை அடக்கியொடுக்க முடிந்தது. ஆனால், புதிதாக முளைத்து வந்த மராத்தியத் தேசிய எழுச்சியுடன் செய்துவந்த அவருடைய போராட்டம் முடிவு பெறாமலேயே இருந்துவந்தது. தக்கணப் புறப்பாடு பேரரசுக்குப் பெருங்கேடுகளை விளைவித்தது. வியப்பு மிக்க இடைவிடா உழைப்பும், கடமையில் அற்புதமான ஈடு பாடும் கொண்டிருந்தவராயினும் ஔரங்கசீப்பின் நீண்ட ஆட்சி அவல நிலையினை அடைந்து முடிந்தது.

## 2. அரசுரிமை பெறுதலும் இருமுறை முடிசூட்டப் பெறுதலும்

ஔரங்கசீப் அரசு கட்டிலேறிய வரலாற்றை முன்னரே விளக்கியிருக்கின்றோம். அவர் இருமுறை முடிசூட்டப்பட்டார்

முதலில் ஆக்ராவைக் கைப்பற்றியவுடனே 1658 ஜூலை 21ஆம் நாளிலும், மீண்டும் காஜா, தியோரை இவற்றின் பெரிய வெற்றிகளுக்குப் பிறகு 1659 ஜூன் மாதத்தில் பெரிய ஆடம்பரத்துடனும் முடிசூட்டப்பட்டார். அவருடைய பெயரில் குத்பா படிக்கப்பட்டது. பாதுஷா (பேரரசர்), காஸி (புண்ணிய வீரர்) என்ற பட்டங்களுடன் ஆலம்கீர் (உலகத்தை வென்றவர்) என்ற பட்டத்தையும் புனைந்துகொண்டார். அரசுரிமைப் போர் நடந்த காலத்தில் பொது ஆட்சி முறையில் ஏற்பட்டிருந்த சீர்கேடுகளாலும், பொருள்களுக்குப் பஞ்ச காலத்தில் உயர்ந்திருந்த விலைகளாலும் குடிமக்களுக்கு ஏற்பட்டிருந்த துன்பங்களைக் குறைப்பதற்கான முயற்சிகளை மற்ற முஸ்லிம் அரசர்களைப் போலவே, ஔரங்கசீப்பும் மேற்கொண்டு தம் ஆட்சியைத் தொடங்கினார். தொல்லைமிக்க பல தீர்வைகளையும் வரிகளையும் குறைத்தார். ஆனால், அவருக்கு முற்பட்ட அரசர்கள் காலத்தில் ஏற்பட்டது போலவே அவருடைய தடை ஒன்றிரண்டு நிகழ்ச்சிகளில் தவிர 'ஒன்றும் பயனளிக்கவில்லை.'

## 3. ஆட்சிப்பரப்பின் விரிவு : வட கிழக்கில் ஆதிக்கம்

இரண்டு நூற்றாண்டுகளாகத் தொடர்ந்து நடைபெற்றுவந்த முகலாயப் பேரரசின் ஆட்சி எல்லையை விரிவுபடுத்தல், ஔரங்கசீப்பின் ஆட்சியிலும் முன்னேற்றத்தைக் கண்டது சிறப்பு மிக்க செய்தியாகும். முந்திய ஆட்சியில் இழக்கப்பட்ட காந்தகாரையும் மத்திய ஆசியாவையும் நீக்கிவிட்டால், பேரரசர்களின் மற்ற வெற்றிகள் அப்படியே இருந்தன. தெற்கே மராத்திய இராச்சியம் எழுவதற்கு முன் 'புதியன செய்வதில் ஆர்வம் கொண்டிருந்த அதிகாரிகள்' வெற்றிகரமாகத் தங்கள் தலைவரின் இராச்சியத்தை விரிவுபடுத்தினார்கள். பீஹாரின் கவர்னரான தாவூத்கானால் 1661-ல் பலாமவு (Palamau) வெல்லப்பட்டது. பேரரசின் கிழக்கு எல்லைப்பகுதியில் ஔரங்கசீப்பின் அதிகாரிகள் தங்கள் சக்திகளுக்குச் சிறந்த வாய்ப்புகளைப் பெற்றிருந்தனர். 1661-ல் வங்காளக் கவர்னராயிருந்த மீர் ஜும்லா நன்கு தளவாடங்கள் நிறையப்பெற்ற ஒரு படையுடன் ஆஹோம்களின் (Ahoms) ஆக்கிரமிப்பை அடக்குவதற்கு அந்த எல்லையை நோக்கிப் புறப்பட்டார். பிறப்பில் மங்கோலிய இனத்தைச் சார்ந்தவர்களான ஆஹோம்கள் மேற்குப் பர்மாவிலிருந்த சொந்த நாட்டை விட்டுக் குடியேறிக் கி.பி.பதின்மூன்றும் நூற்றாண்டிலேயே பிரம்மபுத்திராச் சமவெளியின் ஒரு பகுதியைக் கைப்பற்றியிருந்தனர். பதினைந்து பதினாறும் நூற்றாண்டுகளில் படிப்படியாகத் தங்கள் எல்லையை மேற்கே விரிவுபடுத்திக்கொண்டே அவர்கள் ஓர் இராச்சியத்தை நிறுவினர். அந்த இராச்சியம் வடமேற்கே பார்(Bar) நதிவரை

யிலும் தென்மேற்கே கலாங் (Kalang) நதிவரையிலும் பரவி யிருந்தது. அங்கே அவர்கள் படிப்படியாக இந்துக்களாக மாறிவந்தனர். இந்து மதத்தையும், பழக்க வழக்கங்களையும் மேற்கொண்டனர். அதே சமயத்தில் முகலாயப்பேரரசின் கிழக்கு எல்லே இப்போதுள்ள மாவட்டங்களான காமரூபா (Kamarupa), கோவால்பாரா (Coalpara) என்பவற்றைச் சேர்த்துக்கொண்டி ருந்த கோச் ஹாஜோ (Koch Hajo) என்ற பிரதேசத்தை வென்றி ருந்ததால் பார் நதிவரை பரந்திருந்தது. இது முகலாயர்களுக்கும் ஆஹோம்களுக்கும் இடையே மோதுதல் உண்டாவதைத் தவிர்க்க முடியாததாகச் செய்தது. உண்மையில் ஏற்கெனவே ஷாஜஹான் ஆட்சிக் காலத்தில் ஆஹோம்கள் அவருடைய பேரரசின் கிழக்கு எல்லேப்பகுதியில் படையெடுத்தபோது முகலாயர்கள் அவர் களுடன் கடுமையாகப் போரிட நேர்ந்தது. 1639ஆம் ஆண்டுத் தொடக்கத்தில் இருவருக்கும் ஒப்பந்தம் ஏற்பட்டதும் போர் நின்றது. ஆனல், வாரிசுரிமைப் போரைச் சாதகமாகப் பயன் படுத்திக்கொண்டு ஆஹோம்கள் 1658-ல் கல்ஹத்தியைக் கைப் பற்றிக்கொண்டனர். 140 குதிரைகள், 40 துப்பாக்கிகள், 200 பொருத்துப் பூட்டுகள், நிறைந்த பொருள் இவற்றையும் கைப் பற்றினர். இந்த ஆக்கிரமிப்பாளர்களேத் தண்டிப்பதற்காக மீர் ஜூம்லா அந்தப் பகுதிகளில் போர் நடத்துவதற்கு மிகவும் இன்றியமையாது தேவைப்பட்ட மிகு பல படைக்கலன்கள் நிறைந்த படகுகள், முற்றுகையிடுவதற்கு வேண்டிய பொருள்கள் பீரங்கிகள், இவற்றுடன் 12,000 குதிரை வீரர்கள், 30,000 காலாள்கள் கொண்ட வலிமை வாய்ந்த ஒரு பெரும்படையுடன் 1661 நவம்பரின் தொடக்கத்தில் டாக்காவிலிருந்து புறப்பட்டார். அவருடைய முதல் முற்றுகைகள் வெற்றிகரமாய் முடிந்தன. கூச் பீஹார், அஸ்ஸாம் இரண்டையும் வென்ருர். தம்முடைய வெற்றிப் படைநடப்பின்போது இயற்கையும் மனிதனும் தந்த எதிர்ப்புகள் அளித்த துன்பங்களேயெல்லாம் சாதாரண வீரர்களுடன் பகிர்ந்து கொண்டு, அவர் 1662 மார்ச்சு 17ஆம் நாள் ஆஹோம் இராச்சி யத்தின் தலைநகரான கார்காவோனே அடைந்தார். அப்போது ஆஹோம்கள் எதிர்ப்புச் செய்யாமல் தங்கள் தலைநகரையும் சொத்துகளேயும் பேரரசினரின் கருணைக்கே விட்டுவிட்டு ஓடிவிட் டனர். பேரரசினர் ஏராளமான கொள்ளேப் பொருள்களேப் பெற்றனர்.

ஆனல், விரைவில் இயற்கை ஆஹோம்களுக்காகப் போரா டியது. மழைக் காலம் தொடங்கியவுடன் மீர்ஜூம்லாவின் படை ஆரோக்கியமில்லாத தட்பவெப்ப நிலையினலும் போதுமான உணவுப் பொருள்கள், மருந்து முதலியன இல்லாததாலும் மிகு

கடுமையாகத் துன்புற்றது. இது கண்டு 'நசுக்கப்படாமல் பயப் படுத்தப்பட்டிருந்த' ஆஹோம்கள் தைரியம் கொண்டு விரைவில் தாக்குதலைச் செய்ய முற்பட்டு முகலாயர்களுக்குத் தொந்தரவு கொடுக்கத் தொடங்கினர். முகலாயர்களின் பாசறையில் கொள்ளைநோயும் பஞ்சமும் ஏற்பட்டதால் அவர்களுடைய துன்பங் கள் மிகுதிப்பட்டன. ஆனால், தொந்தரவுகளால் மனந்தளராது முகலாய கவர்னர் மழைக்காலம் முடிந்தவுடன் மீண்டும் தாக்கு தலைத் தொடங்கிப் போரைத் தொடர்ந்து நடத்தினர். மேலும், எதிர்த்துப் போரிடுவதால் பயனில்லை என்று எண்ணி ஆஹோம்கள் பேரரசினருடன் சமாதான உடன்படிக்கை செய்துகொண்டனர். இவ்வாறு 'ஒரு படைத்துறைக் கொள்ளைப் படையெடுப்பு என்ற கண்ணோட்டத்தில் பார்த்தால் மீர் ஜும்லாவின் அஸ்ஸாம் படை யெடுப்பு ஒரு வெற்றியே' என்று சர் ஜே. என். சர்க்கார் கூறுகிறார். ஆஹோம் அரசரான ஜயத்வஜ் (Jayadhvaj) ஆண்டுதோறும் கப்பம் கட்டுவதாக வாக்குறுதி அளித்ததுடன் போரினால் நேர்ந்த இழப்புக்குப் பெருந்தொகையை இழப்பீடாகக் கொடுப்பதாகவும் ஒப்புக்கொண்டார். இழப்பீட்டின் ஒரு பகுதியை உடனே கொடுத்துவிடுமாறும் மீதியை அடுத்த பன்னிரண்டு மாதங்களில் மூன்று தவணைகளில் கொடுத்துவிடுமாறும் உடன்படிக்கை செய்யப்பட்டது. முகலாயர்கள் யானைகள் நிறைந்த தர்ராங் (Darrang) மாகாணத்தின் பாதிக்கு மேற்பட்ட பாகத்தையும் உரிமையாகப் பெற்றனர். ஆனால், அந்த வெற்றி மிகு பெருஞ் செலவு செய்தே பெறப்பட்டது. அது முகலாயர்களுக்கு அளவிலாப் பெருந்துன்பங்களை அளித்தது. ஔரங்கசீப்பின் மிகச் சிறந்த தளபதிகளுள் ஒருவரான மீர்ஜும்லா உட்படப் பல்லோர் உயிரைக் குடித்தது. டாக்காவுக்குத் திரும்பிவரும்போது 1663 மார்ச்சு 30ஆம் நாள் மீர் ஜும்லா இறந்தார். அந்த வெற்றியும் நீண்ட காலம் நீடிக்கவில்லை. சில ஆண்டுகள் கழிந்ததும் ஆஹோம்கள் மீண்டும் காமரூபாவைக் கைப்பற்றினர். முகலாய அரசு நீண்ட ஆனால், இடையீடுபட்ட போரை நடத்திவந்தது. ஆனால், நிலையான நன்மை எதுவும் ஏற்படவில்லை.

ஆஸப்கானின் மகனும் ஔரங்கசீப்பின் தாய்மாமனுமான ஷெயிஷ்டகான் (Shaista Khan) மீர் ஜும்லாவின் மரணத்திற்குப் பின் தொடர்ந்த தாற்காலிக வைஸ்ராயின் குறுகியதும் வெற்றி யற்றதுமான நிருவாகத்திற்குப் பிறகு வங்காள கவர்னராக நியமிக்கப்பட்டார். அவர் அந்தப் பதவியை மூன்று ஆண்டு களுக்குக் குறைவான இடையீட்டுடன் சுமார் முப்பது ஆண்டுக் காலத்திற்குப் பொறுப்பேற்றிருந்தார். 1694-ல் தொண்ணூறுக்கு மேல் வயதடைந்த பிறகு ஆக்ராவில் இறந்தார். அவர் போர்ச்சுக்

கீசியக் கப்பல் கொள்ளைக்காரரைத் தண்டித்து, வங்காள விரிகுடாவில் கப்பல் கொள்ளைக்காரர்களுக்கு அரண் போல இருந்த சோந்திப் (Sondip) தீவினைச் சேர்த்துக்கொண்டார். அவர்களின் கூட்டாளியாக இருந்த அராகானின்அரசனிடமிருந்து (1666-ல்)சிட்டகாங்கை வென்றார். கொள்ளைக்காரர்களின் தீங்கு முழுவதையும் ஒழிக்க முடியவில்லை; அதிலிருந்து பதினெட்டாம் நூற்றாண்டின் கடைசிவரை கிழக்கு வங்காளத்தின் மக்களைத் துன்புறுத்திக்கொண்டே இருந்தது.

## 4. வடமேற்கு எல்லைக் கொள்கை

முகலாயப் பேரரசுக்குப் பெருந்தொல்லைகளைத் தொடர்ந்து நெடுங்காலமாகக் கொடுத்துக்கொண்டுவந்த கலகக்கார முஸ்லிம் மலைச் சாதி மக்கள் நிறைந்த வடமேற்குப் பகுதியில் ஔரங்கசீப் அரசியல், பொருளாதார முறைகளுள் ஒரு முன்னேற்றக் கொள்கையைத் தேர்ந்தெடுத்துக் கடைப்பிடிக்க வேண்டியவரானார். அங்கே வாழ்ந்து வந்த பலம் வாய்ந்த, எண்ணிக்கையில் பெருகி வந்த ஆப்கானிய இனப் பிரிவினர் அந்தப் பகுதியில் விளைச்சல் மிகு குறைவாயிருந்தமையின் வழிப்பறிக் கொள்ளையடித்தல், வடமேற்குப் பஞ்சாபின் வளம் நிறைந்த நகரங்களை இருட்டடிப்புச் செய்தல் ஆகியவற்றில் ஈடுபட நேர்ந்தது. வடமேற்குக் கணவாய்களைத் திறந்து வைத்திருக்கவும் அவற்றின் அடிவாரத்திலிருந்த சமவெளிகளைப் பாதுகாப்பாக வைத்திருக்கவும் வேண்டி ஔரங்கசீப்பின் அரசாங்கம் முதலில் அந்த மலைச்சாதியினருக்குப் பணம் கொடுத்துத் தங்கள் பக்கம் அவர்களை வசமாக்கிக் கொள்ள முயன்றனர். ஆனால், 'அரசியல் ஊதியத் தொகைகள்கூட மக்களின் கீழ்ப்படிதலைப் பெறுவதில் எப்போதும் வெற்றிகரமாக இருக்கவில்லை.' யூசுப் ஸாயிக்கள் தங்கள் தலைவர்களுள் ஒருவரான பாகூ (Bhagu) என்பவரின் தலைமையில் கி.பி. 1667ஆம் ஆண்டுத் தொடக்கத்தில் படைக் கருவிகளுடன் திரண்டபோது தொல்லைகள் தோன்றத் தொடங்கின. அவர்களுள் பெரும்பாலோர் அட்டாக்குக்கு(Attock) அப்பால் இருந்த சிந்து நதியைத் தாண்டி ஹஸாரா (Hazara) மாவட்டத்தைப் படையெடுத்தனர். மீதியிருந்த கூட்டத்தினர் மேற்குப் பெஷாவரையும் அட்டாக் மாவட்டங்களையும் சூறையாடத் தொடங்கினர். எனினும், ஒரு சில மாதங்களில் யூசுப் ஸாயிக்களின் எழுச்சி ஒடுக்கப்பட்டது.

ஆனால், 1672-ல் அஃப்ரிடிஸ் (Afridis) தங்கள் தலைவர் அக்மல் கான் (Akmal Khan) என்பவரின் தலைமையில் முகலாயர்களுக்கு எதிராகக் கிளர்ச்சி செய்யத் தொடங்கினர். அக்மல்கான் தாமே அரசராக முடிசூட்டிக்கொண்டு ஒரு வகைத் தேசியப்

போருக்காக ஒழுங்கு முறைப்படி அணியாகத் திரண்டிருக்கும்படி பட்டாணியர்களை அழைத்தார். மே மாதத்தில் அஃப்ரீத்துப் படைகள் 'ஆலி மசூதி' (Ali Masjid) என்ற இடத்தில் முஹம்மது ஆமின்கானை (Muhammad Amin Khan) நன்ருகத் தோற்கடித் தனர். முஹம்மது ஆமீனும் அவருடைய உயர் அதிகாரிகள் சிலரும் உயிர் தப்பினர். ஆனல், முகலாயர்கள் மற்ற எல்லாவற் றையும் இழந்தனர். இந்த வெற்றி அக்மல்கானின் மதிப்பையும் பொருள் வருவாய் வழிகளையும் மிகுதிப்படுத்தியது. மேலும், பல வீரர்கள் அவருடைய படையில் சேரும்படி கவர்ச்சி தந்தது. அதனல் 'அட்டாக்கிலிருந்து காந்தகார்வரையிலிருந்த பட்டாணி யர் நிலம் முழுதும்' படைக்கலந் தாங்கி எழுந்தது. பட்டாணி யர்களின் கட்டாக் இனப் பிரிவினரும் அப்ரீத்துகளுடன் சேர்ந் தனர். அப் பிரிவினரைச் சேர்ந்த கவிஞரும் தலை வீரருமான கூஷ்-ஹால்-கான் (Khush-hal-Khan) 'தேசிய எழுச்சியின் வழி காட்டும் தலைவராஞர்; தம் பேனு மூலமும், வாள்மூலமும், ஒரே மாதிரி மலைச்சாதியினரின் உணர்ச்சிகளைக் கிளர்ந்தெழச் செய் தார். 1674 பிப்ரவரியில் ஷுஜாத்கான் (Shujaat Khan) கீழ் வந்த பேரரசப் படையை ஆப்கானியர்கள் தாக்கினர். ஷுஜாத் கான் கொல்லப்பட்டார். ஆனல், அவருடைய படை யின் மீதிப்பகுதி முகலாயர்களுக்கு ஆதரவாக ஜஸ்வந்த்சிங்கு அனுப்பிய ஒரு ராத்தோர்ப் படையால் காப்பாற்றப்பட்டது.

வடமேற்கில் பேரரசின் மதிப்பைமீண்டும் நிலைநாட்ட இன்னும் மிகு தீவிரமான நடவடிக்கைகள் தேவைப்படுகின்றன என்பதை இப் பேராபத்தின்மூலம் ஔரங்கசீப் உறுதியாக அறிந்துகொண் டார். அவர் 1674 ஜூலை மாதத் தொடக்கத்தில் பெஷாவருக்கு அருகிலிருந்த ஹஸன் அப்தால் (Hasan Abdal) என்ற இடத்துக்கு நேரில் சென்று போரியல் சூழ்ச்சி, படைக்கலங்கள் இவற்றின் சாதுரியமான இணைப்பால் பெருவெற்றி அடைந்தார். கொடைப் பொருள்கள், ஊதியங்கள், ஜாகீர்கள், உத்தியோகங்கள் இவற்றின்மூலம் பல ஆப்கானிய இனப் பிரிவினர் அவர் பக்கம் சேர்க்கப்பட்டனர். இவற்றிற்கு இணங்காதவர்கள் ஆயுதங்கள் மூலம் அடக்கப்பட்டனர். நிலைமை ஓரளவு நன்ருகச் சீராக்கப் பட்டவுடன் 1675 டிசம்பர் மாத அளவில் பேரரசர் பஞ்சாபை விட்டு டில்லிக்குச் சென்ருர். 1677 முதல் 1698வரை ஆப்கானிஸ் தானத்தில் திறமைமிக்க கவர்னராயிருந்த ஆமீன்கானின் அறிவு மிக்க அரசியல் கொள்கையால் ஔரங்கசீப்பின் வெற்றி உறுதி யாக்கப்பட்டது. அலிமர்தான் கானின் மகளும் தம்முடைய மனைவியுமான ஷாஹிப்ஜீ (Sahibji) என்பவளின் அறிவுமிக்க அறிவுரையின்படி ஆமீன்கான் தந்திரமிக்க இணக்கக் கொள்

கையைக் கடைப்பிடித்தார். இவ்வாறு பொருட்காட்சியளிக்கும் கொள்கையைக் கடைப்பிடித்தல் அல்லது ஓர் இனப்பிரிவுக்கு எதிராக மற்றோர் இனப்பிரிவைத் தூண்டிவிட்டு மோதச் செய்தல் அல்லது அவருடைய சொந்த உருவகத்தில் கூறினால், இரண்டு எலும்புகளை ஒன்றொடொன்று மோதி நொறுக்குதல் இவற்றின் மூலம் வடமேற்கே பேரரசின் மதிப்பை மீண்டும் நிலைநிறுத்தி, முகலாயப் பேரரசர் ஆப்கானிய எழுச்சிகளை ஒடுக்க முடிந்தது. கட்டாக்கின் (Khattak) தலைமை வீரரான கூஷ்ஹால், கடைசியில் அவர் மகனே பெரும் எதிரியாக அவரை முகலாயர்களுக்குக் காட்டிக் கொடுக்கும்வரை, பல ஆண்டுகளாகத் தொடர்ந்து போரிட்டுக்கொண்டிருந்தார்.

முகலாயர்களின் எல்லைப்புறப் போர்கள் வெற்றிகரமான ஒரு நிலையில் முடிந்தன என்பதில் ஐயமில்லை. ஆனால், அவற்றின் மறைமுக விளைவுகள் பேரரசின் நலங்களுக்குக் குந்தகமானவை யாகவே இருந்தன. சர் ஜே. என். சர்க்கார் கூறுகிறார்: 'ஆப்கானியப் போர் பேரரசின் பெரும் பொருளை அழித்து விட்டது; அதன் அரசியல் விளைவு இன்னும் தீங்கு மிக்கதா யிருந்தது. அடுத்து நேர்ந்த ராஜபுத்திரப் போரில்ஆப்கானியர் களைப்படைவீரர்களாக அமர்த்திக் கொள்ள முடியாது போயிற்று. ஆப்கானியப்படையினரே அந்தக் கரம்பான பாழ்நிலத்தில் போரிட்டு வெற்றி பெறக்கூடிய சிறந்த படைவீரர்களாவர். மேலும், வடமேற்கு எல்லைப் பகுதியில் பணி செய்வதற்காகத் தக்க ணத்திலிருந்து மிகச் சிறந்த முகலாயப் படைகள் கொண்டு போகப்பட்டமையின், சிவாஜியின் மேல் ஆக்கிரமிப்புச் செய்வதற் கான பிடிப்புத் தளர்ந்தது. தம்முடைய பகைவரின் இப் படைபலப் பிரிவைச் சாதகமாகப் பயன்படுத்திக்கொண்டு 1675 டிசம்பருக்குப் பிறகு பதினைந்து மாதங்களில் மராட்டியத் தலைவரான சிவாஜி கோல்கொண்டாவிலிருந்து கர்நாடகத்திற்கும் பின்புமீண்டும் மைசூர்,பீஜப்பூரிலிருந்து ராய்காருக்கும்(Raigarh) சென்று, மேலும் மேலும் பல வெற்றிகளை அடைந்தார். அவருடைய வாழ்க்கையில் அது உச்ச கட்டமாயிருந்தது. ஆனால், அப்ரீத்துகளும் கட்டாக்குகளும்தான்(Khattaks) அவருக்கு இடை விடாது வெற்றியைத் தேடித் தந்தனர்.

## 5. இந்தியாவுக்கு வெளியே முஸ்லிம் உலகத்துடன் தொடர்புகள்

1661-க்கும் 1667-க்கும் இடைப்பட்ட காலத்தில் ஔரங்க சீப்பு மெக்காவின் ஷரீப்,பாரசீகம்,பால்க், புக்காரா (Bukhara), காஷ்கர் (Kashghar), உர்கன்ஞ்ச்(Urganj), கிவா(Khiva),ஷஹ்ரி

நௌ(Shahr -i-nau)ஆகிய நாடுகளின் அரசர்கள், பஸ்ரா (Basra) ஹத்ரமௌத் (Hadramaut), யாமன் (Yaman),மோச்சா(Mocha) இவற்றின் கவர்னர்கள், பார்பரி(Barbary)நாட்டின் ஆட்சியாளர் அபிசீனியாவின் (Abyssinia) அரசர்போன்ற அயல்நாட்டு முஸ்லிம் நாடுகளிடமிருந்து 'நல்வாழ்த்துத் தூதுக்குழுக்கள்' தம்மிடம் வரப் பெற்றார். அவருடைய ஆட்சிக்காலத்தில் ஒரே ஒருமுறைதான் 1590 ஜூன் மாதத்தில் கான்ஸ்டான்டிநோபிலிலிருந்து ஒரு தூதுக் குழு வந்தது. சர் ஜே. என். சர்க்கார் கூறுகிறார்; 'தொடக்கத்தில் அவருடைய கொள்கை ஏராளமான பொருள் கொடைகள் மூலம் அயல்நாட்டு இளவரசர்கள் அவர்களுடைய தூதுவர்கள் ஆகி யோரை வியப்புக்கு ஆளாக்கினர். அதன் மூலம் தம் தந்தை, சகோதரர்கள் ஆகியோரைத் தாம் கொடுமையாக நடத்திய முறையை வெளி முஸ்லிம் உலகம் மறக்கும்படி செய்தார். மேலும், குறைந்தது செயலில் வெற்றி வீரராகவும், பணத்தை விருப்பப்படி செலவு செய்வதற்கு வாய்ப்புப் பெற்றிருந்தபோது, இந்தியாவின் அளவிட்டுச் சொல்ல முடியாத பெருஞ்செல்வத்துக்கு உரியவ ராகவும் இருந்தவருக்கு மரியாதைகாட்டுவதாகவும் தோன்றியது.

## 6. ஔரங்கசீப்பின் சமய நோக்கும் சமயக் கொள்கையும்

ஔரங்கசீப் எல்லாவற்றுக்கும் மேலாக ஓர் ஆர்வமிக்க ஸுன்னி முஸ்லிமாக இருந்தார். உலகப்பொருள் ஆதாயத்தைக் கருதி அவருடைய சமயக் கொள்கை அமையவில்லை. தாராள மனப்பான்மை கொண்டிருந்த தாராவுக்கு மாறாக ஸுன்னி வைதிகத்தின் காப்பு வீரராகச் சிம்மாசனத்தைப் பெற்றிருந்த அவர் குர்ரானின் சட்டப்படி ஒவ்வொரு பக்தியுள்ள முஸ்லிமும் 'கடவுள் வழியில் தம்மை முயற்சியுடன் ஈடுபடுத்திக்கொள்ள வேண்டும்' அல்லது வேறு வகையில் கூறினால், முஸ்லிம் அல்லாத நாடுகள்(தார்-உல்-ஹர்ப், Dar-ul-Harb) இஸ்லாமிய நெறியில் (தார்-உல்-இஸ்லாம், Dar-ul-Islam) மத மாற்றப்படும்வரை புண்ணியப் போரைத் தொடர்ந்து நடத்திவரவேண்டும். இது அவரை மன இயல்பில் மிகவும் தூய்மைக் கொள்கை உடைய வராகச் செய்தது. அதனால் அவர்' வாழ்க்கையில் கடுமை மனப் பான்மையும், நெறி தவறாத பழைமை வழியில் பற்றும் உடைய தம்முடைய சொந்தக் கருத்துகளை, மக்களிடையே வற்புறுத்தப் பல முயற்சிகள் எடுத்துக்கொண்டார். அவருடைய பிறந்தநாள் விழாவிலும் முடி சூட்டுவிழா நாளிலும் வழக்கமாகக் கொண்டாடப்படும் கொண்டாட்டங்களைக் குறைக்கச்செய்தார். தம் ஆட்சியின் பதினொன்றாம் ஆண்டிலிருந்து ஜரோக்கா தரிசனப்

(Jharoka-darsan) பழக்கத்தை நிறுத்திவிட்டார். ஜரோக்கா தரிசனம் என்பது அவருக்கு முந்திய அரசர்கள் நாள்தோறும் காலையில் அரண்மனையின் ஒரு புறத்தில் ஒரு மேன்மாடத்தில் தோன்றி எதிரில் நிலத்தில் நின்று கொண்டு மக்கள் செய்யும் வணக்கத்தை ஏற்றுக்கொள்வதாகும். அதே ஆண்டில் அவர் இசையையும் அரண்மனையிலிருந்து நீக்கினார். பழைய இசை வாணர்களையும் பாடகர்களையும் வேலையிலிருந்து நீக்கினார். ஆனால், அரசவையிலிருந்து இசை நீக்கப்பட்டுவிட்டாலும், அதை மனிதரின் ஆன்மாவிலிருந்து நீக்கிவிட முடியவில்லை.' மறை முகமாகப் பல பிரபுக்களால் இசை தொடர்ந்து பயிலும்படி செய்யப்பட்டது. பேரரசரின் தடை முக்கியமான சில நகரங் களில் மட்டும் சிறிது வரியுள்ளதாய் இருந்தது. ஆட்சியின் பன்னிரண்டாம் ஆண்டில், இரண்டு பிறந்த நாள்களின் தங்கம், வெள்ளி முதலிய பொருள்களைப் பேரரசரின் எடைக்குச் சரியாக நிறுக்கும் வழக்கச் சடங்கும் கைவிடப்பட்டது. அரசாங்க வானியல் ஆராய்ச்சியாளரும், சோதிடர்களும் வேலையிலிருந்து நீக்கப்பட்டனர். ஆனால், பேரரசின் கட்டளையால் நீக்கிவிட முடியாத அளவுக்கு முஸ்லிம்களுடைய உள்ளத்தில் சோதிடத்தில் நம்பிக்கை ஆழ்ந்து வேரூன்றியிருந்தது. பதினெட்டாம் நூற்றாண் டின் பிற்பகுதிவரை அந் நம்பிக்கை உறுதியாகவே இருந்து வந்தது. மற்றச் சமயக் கொள்கையினர் நாணயங்கள் மூலம் முஸ்லிம்கள் நம்பிக்கைப் பிரமாணம் எடுத்துக்கொள்ளும் கலிமாவைத் (Kalima) தூய்மை கெடச் செய்தமையின் அதைத் தடுப்பதற்காக அவர் அம் முறையைப் பயன்படுத்தக் கூடாதென்று தடை விதித்தார். இந்தியாவின் முகலாயப் பேரரசர்கள் பாரசீகத்திலிருந்து கடன் வாங்கியிருந்த நௌரோஸையும் (Nauroz) கைவிட்டார். 'புண்ணியச் சட்டத்தின்படி கண்டிப்பான முறையில் மக்களின் வாழ்க்கையை ஒழுங்குபடுத்தப்' பொது ஒழுக்கக் கண்காணிப்பாளர்களை (Censors of Public Morals, Muhtasibs) நியமித்தார்.

பிறரைச் செய்யும்படி வற்புறுத்தினவற்றை ஔரங்கசீப் தாமும் கடைப்பிடித்துவந்தார். அவருடைய சொந்த வாழ்க்கை உயர்ந்த ஒழுக்கத்திற்குச் சிறந்த எடுத்துக்காட்டாய் விளங்கியது. அவருடைய காலத்தில் காணப்பட்ட பொதுவான தீங்குகளை எல்லாம் அவர் அறவே களைந்தார். அக் காலத்தவரால் அவர் கருஞ் சிவப்பில் பிறந்த தர்விஷ் (சந்நியாசி, Darvish) என்று மதிக்கப்பட்டார். முஸ்லிம்கள் அவரை 'ஜிந்தாபீர்' அல்லது வாழும் முனிவர் என்று போற்றினர். பொது ஒழுக்கத்தின் வளர்ச்சிக்காகப் பல சட்டங்களை ஏற்படுத்தினார். சாராயமும்

கஞ்சாவும் உற்பத்தி செய்வதோ, விற்பதோ பொதுமக்களால் பயன்படுத்தப்படுவதோ கூடாது என்று ஒரு தடைச் சட்டத்தை இயற்றினர். நடனமாடும் பெண்களும், பொதுமகளிரும் திருமணம் செய்துகொண்டு வாழ வேண்டும். அல்லது இராச்சியத்தை விட்டுப் போய்விட வேண்டும் என்று கட்டளையிடப்பட்டனர் என்று மனுச்சி (Manucci) கூறுகிறர். கீழ்த்தரமான பாட்டுகளைப் பாடுவதை எதிர்த்துக் கண்டிப்பான கட்டளைகளைப் பேரரசர் விதித்தார். சில மத சம்பந்தமான விழாக்களில் ஊர்வலங்கள் வருவதையும், குச்சிகள் எரிப்பதையும் தடை செய்தார். ஔரங்கசீப்பின் ஆட்சிக் காலத்து அதிகாரபூர்வமான 'வழிகாட்டி நூல்களில்' (1663-டிசம்பர்) அவர் சதி அல்லது உடன்கட்டை ஏறுவதைத் தடை செய்தார் என்று குறிப்பிடப்பட்டிருக்கிறது. ஆனல், 'இந்தியாவில் அக் காலத்தில் பிரயாணம் செய்த ஐரோப்பியர்களின் சான்றுகள் அரசரின் தடை சிறிதும் பொருட்படுத்தப்படவில்லை' என்பதைக் காட்டுகின்றன.

எனினும், இந்த ஒழுங்கு முறைகளினுல் மட்டும் பேரரசர் திருப்தியடைந்து நின்றுவிடவில்லை. மற்ற அரச மேலிட உத்தரவுகளையும் கட்டளைகளையும் பிறப்பித்தார். அவை பொதுமக்களில் முக்கியமான பிரிவினரைப் பொறுத்தவரை ஒரு புதிய கொள்கையைத் தோற்றுவிப்பதாயிருந்தது. 1679-ல் 'நம்பிக்கை கொள்ளாதவர்கள்' மீது ஜெஸியா வரி மீண்டும் போடப்பட்டது.

இப் புதிய விதிகளாலும் சட்டங்களாலும் பாதிக்கப்பட்ட மக்களிடத்து, அவை ஆழ்ந்த மனப்புண்ணை ஏற்படுத்தியிருக்க வேண்டும். அதனுல் அவை பேரரசரின் அரசாங்கம் கவனிக்க வேண்டிய துன்பங்களுக்கு மேல் பல துன்பங்களைச் சேர்த்தன. பேரரசர் ஔரங்கசீப் தம்மிடம் இருந்த கொள்கையை உண்மையாகவும் மனசான்றுக்கு விரோதமின்றியும் பரப்பினர் என்ற பெருமை அவருக்கு உண்டு என்பதை யாரும் மறுக்க முடியாது. ஆனல், அவருடைய பேரார்வத்தாலும், ஊக்கத்தாலும் அவரை ஆளும்படி செய்த இந் நாட்டில் ஒரே இனமக்கள் தொகை மட்டும் வாழவில்லை என்றும் மத மரபுகளும், இலட்சியங்களும் நிறைந்த பல வேறு கூறுகள் நாட்டில் இருந்தன என்றும், அவை அனுதாப அறிவுணர்ச்சிகளுடனும், தந்திரமாகவும் அணுகப்பட வேண்டும் என்றும் அவர் உணர்ந்து கொள்ள மறந்துவிட்டார். தம்முடைய கொள்கையைப் பின்பற்றியோரின் நலங்களே நாட்டின் நலங்கள் என்று கருதிக்கொண்டதன் மூலமும், அக் கொள்கையில் மாறுபாடு கொண்டவர்களைப் புண்படுத்தியதன் மூலமும், ஔரங்கசீப் உண்மையிலேயே ஒரு மாபெரும் தவற்றைச்

செய்தார். இக் கொள்கை மக்களின் ஒரு சில பிரிவினரிடையே அதிருப்தியுணர்ச்சிகளை விளைவித்தது. அவை அவருடைய ஆட்சியின் மீதிப் பாகத்தில் அவருடைய சக்திகளை வீணாக்கியதோடு, முகலாயப் பேரரசின் வீழ்ச்சிக்கும் அழிவுக்கும் மிகச் சிறந்த காரணங்களுள் ஒன்றாகவும் அமைந்தன.

## 7. புதிய கொள்கைக்கு எதிர்ப்பு

### அ. ஜாத்துகள் (Jats) பந்தேலாக்கள் (Bundelas), சத்நாமிகள் (Satnamils)

பேரரசுக்கு எதிரான முதல் முக்கிய எதிர்ப்பு முத்ரா (மதுரா) மாவட்டத்திலிருந்த ஜாத்துகளிடையே ஏற்பட்டது. அங்கே அரசாங்கப் பௌஜ்தாரான அப்துன்-நபி (Abdun-Nabi) அவர்களை மிகவும் கொடுமையாக அடக்குமுறைக்கு ஆளாக்கியிருந்தார். 1679-ல் கட்டுடலைப் பெற்றிருந்த ஜாத் குடியானவர்கள் தில்பத்தின் (Tilpat) ஜமீன்தாரான கோக்லா (Gokla) என்பவரின் தலைமையின்கீழ் கிளர்ந்தெழுந்து பௌஜ்தாரைக் கொன்று அம் மாவட்டம் முழுவதும் ஓராண்டு குழப்பம் மலிந்திருக்கும்படி செய்தனர். பின்பு முத்ராவின் புதிய பௌஜ்தாராய் வந்த ஹஸன் ஆலிகான் என்பவரின் தலைமையில் வந்த வலிமை வாய்ந்த பேரரசின் படை அவர்களை அடக்கியது. கோக்லா கொல்லப் பட்டார். அவருடைய குடும்பத்தினர் இஸ்லாமுக்கு மாற்றப் பட்டனர். ஆனால், இது ஜாத்துகளை நிரந்தரமாக ஒடுக்கி அழித்து விடவில்லை. மீண்டும் அவர்கள் 1685-ல் இராஜாராம் என்பவரின் தலைமையில் கிளர்ந்தெழுந்து 1688-ல் சிகந்தராவிலிருந்த அக்பரின் கல்லறையைச் சூறையாடினர். 1691-ல் இராஜாராம் தோற் கடிக்கப்பட்டுக் கொல்லப்பட்டார். ஜாத்துகளின் முதன்மை யான கோட்டை தரைமட்டமாக்கப்பட்டது. ஆனால், விரைவில் அவர்கள் சூராமன் (Churaman) என்ற வலிமை மிகுந்த ஒரு தலைவரைப் பெற்றனர். அவர் சிதறுண்டிருந்த ஜாத்துகளை ஒன்றுதிரட்டி வலிமை வாய்ந்த படைத்துறைப் பயிற்சி பெற்றவர் களாக ஆக்கினார். அவர்கள் ஔரங்கசீப்பின் இறப்புக்கு பின்பு முகலாயர்களுக்கு எதிராகப் படைக்கலம் தாங்கி ஒழுங்காக எதிர்த்துக் கலகம் செய்துவந்தனர்.

இரண்டாவது முறையாக ஔரங்கசீப்பின் கொள்கைக்கு எதிராகப் படைக்கலம்தாங்கிய எதிர்ப்பு சத்ரசால் (Chhatrasal) என்ற பந்தேலா இளவரசரால் நடத்தப்பட்டது. பந்தேலாக் களுடன் முகலாயர்கள் முன்பு கொண்டிருந்த தொடர்புகளைப் பற்றி நாம் முன்னரே கண்டோம். ஔரங்கசீப்பின் ஆட்சியின்

மூற்பகுதியில் சத்ரசாலின் தந்தை சம்பத்ராய் (Champat Rai) ஔரங்கசீப்புக்கு எதிராகக் கிளர்ந்தெழுந்தார். ஆனால், பேரரசரால் நன்றாக அடக்கப்பட்டுச், சிறைக்குப் பயந்து தற்கொலை செய்துகொண்டார். தக்கணத்தில் சத்ரசால் பேரரசருக்குப் பணிசெய்துகொண்டிருந்தார். அங்கே சிவாஜியின் எழுச்சியால் ஊக்க உணர்ச்சி பெற்றுத் 'துணிகரச் செயலில், சுதந்திரம் நிறைந்த வாழ்க்கையில் ஈடுபடலாம் என்று கனவு கண்டார்'. பந்தேல்கண்டு, மாளவம் இவற்றில் வாழ்ந்த இந்து மக்களின் திருப்தியின்மை அவர் தம்முடைய கொள்கையின் 'வீரராகத்' திகழும்படியும் 1671ஆம் ஆண்டளவில் பந்தேலாச் சுதந்திரத்திற்காகப் பாடுபடும் படியும் ஒரு வாய்ப்பை அளித்தது. முகலாயர்களின்மேல் பல வெற்றிகளை அவர் அடைந்தார். 1731-ல் இறந்து போவதற்கு முன்பு பண்ணாவைத் தலைநகராகக்கொண்ட கிழக்கு மாளவப் பிரதேசத்தைத் தமக்காக உருவாக்கிக்கொள்வதில் வெற்றி பெற்றிருந்தார்.

1672ஆம் ஆண்டு மார்ச்சு மாதத்தில் சத்நாமிகளால் மற்றொரு கலகம் ஏற்பட்டது. சத்நாமிகள் முதலில் இந்து பக்தியாளர்களுள் குற்றம் ஏதும் எண்ணாதவர்களாகப் பாட்டியாலா இராச்சியத்தில் நார்னோல் என்ற இடத்தையும் ஆள்வார் என்ற பகுதியில் மேவாட் என்ற இடத்தையும் தங்களுக்குரிய முக்கிய இடங்களாகக் கொண்டிருந்தனர். அவர்களைப்பற்றிக் காஃபிகான் (Khafi Khan) எழுதுவதாவது: 'இந்த மக்கள் பக்திமான்களைப் போல ஆடை உடுத்திக்கொள்கின்றனர். ஆனால், உழவும் வாணிகமும் செய்துவருகின்றனர். எனினும், அவர்களுடைய வாணிகம் சிறு அளவினதாகவே உள்ளது. தங்களுடைய மத நெறியில் சத்நாம் என்ற வார்த்தையின் பொருளான 'நல்ல பெயர்' என்ற சிறப்புப் பெயருடன் தங்களின் மதிப்பை உயர்த்திக்கொண்டிருந்தனர். சட்டத்திற்குட்பட்ட முறையில் அன்றி வேறு எவ் விதத்திலும் பொருள் சேகரிக்க அவர்கள் அனுமதிக்கப்படவில்லை. பலத்தால் எவரேனும் ஒருவர் அவர்களுக்குத் தீங்கு சூழவோ, அவர்களை அடக்கி விடவோ முயற்சி செய்தால், அதை அவர்கள் பொறுத்துக்கொண்டிருக்க மாட்டார்கள். அவர்களுள் பெரும்பாலோர் ஆயுதங்கள் அல்லது படைக்கருவிகளை வைத்துக்கொண்டிருக்கின்றனர்,' சத்நாமிகளின் எழுச்சிக்கு முதற்காரணம் அவர்களுள் ஒருவரை முகலாயக் காலாள்படை வீரருள் ஒருவர் கொன்றுவிட்டதேயாகும். அவர்கள் நார்னோலைக் கைப்பற்றிக் கொண்டனர். நிலைமை மிகவும் நெருக்கடியுடையதாக மாறுவது தெரிந்தபோது, முகலாயப் பேரரசர் 'அவருடைய கூடாரங்களை வெளியே கொண்டுவரும்படி கட்டளையிட்டார்.' படைப் பயிற்சி

பெருத சத்நாமிகள் ஒரு பெரிய பேரரசுப் படையால் விரைவில் அடக்கி ஒடுக்கப்பட்டனர். 'அவர்களுள் மிகச் சிலரே தப்பினர்; அந் நாட்டின் வழி திறந்துவிடப்பட்டுவிட்டது.

## ஆ. சீக்கியர்கள்

புதிய பேரரசுக் கொள்கை சீக்கியர்களிடையேயும் அதிருப்தியைத் தோற்றுவித்தது. சீக்கியர்களுக்கும் ஔரங்கசீப்புக்கும் இடையேயிருந்த தொடர்புகளைப்பற்றிப் பார்க்கு முன்பு, இங்கே அவருக்கு முற்பட்ட அரசர்களின் காலத்திய சீக்கியர்களின் சுருக்கமான வரலாற்றை அறிவது நலம். தற்கால இந்தியாவில் ஒரு முக்கியமான இடத்தை வகிக்கும் பெருமை பெற்ற சீக்கிய இனம்'பதினைந்து பதினாறும் நூற்றாண்டுகளில் இந்திய வரலாற்றில் சமய மறுமலர்ச்சி ஏற்பட்டபோது தோன்றியது. முனிவரைப் போன்ற குணவியல்புகள் பெற்றிருந்த சமயப் பிரசாரகரான குரு நானக்கால் ஒரு மதப்பிரிவாக அந்த இனம் முதலில் தோற்றுவிக்கப்பட்டது. அவர் எல்லா மதங்களுக்கும் அடிப்படையாயுள்ள உண்மையை வற்புறுத்தினார். 'மதம் சாரா இயல்பும்' மதப் பற்றற்ற வாழ்க்கையில் அது கொண்டிருந்த இணக்கமும் அவர் ஏற்படுத்திய மதப்பிரிவு முறையின் முக்கியமான சிறப்பியல்புகளாகும். தம் இரண்டு புதல்வர்களையும் ஒதுக்கிவிட்டுத் தமக்கு அடுத்த குருவாகத் தம் சீடர்களுள் ஒருவரான அங்காட் (Angad 1538—1552) என்பவரை நியமித்துவிட்டு, 1538-ல் இறந்தார். அங்காடும் அவருக்கு அடுத்த குருவான அமர்தாஸும் (1552-1574) உயர்ந்த ஒழுக்கமுடையவர்களாய்த் திகழ்ந்தனர். அமர்தாஸுக்கு அடுத்தவராகக் குரு ஸ்தானத்தில் அவருடைய மருமகன் ராம்தாஸ் (1574—1581) வந்தமர்ந்தார். இந்தக் குருவினிடம் பெருமதிப்புக் கொண்டிருந்த அக்பர், அமிர்தசரஸில் (Amritsar) ஒரு குளம் அடங்கிய நிலப்பகுதி ஒன்றைத் தானமாக அளித்தார். அந் நிலப்பகுதி பின் விரிவாக்கப்பட்டும், செப்பஞ் செய்யப்பட்டும் அதன் ஒரு பகுதியில் ஒரு புகழ் பெற்ற சீக்கியக் கோயில் கட்டப்பட்டது. ராம்தாஸின் குரு ஆட்சிக் காலத்தில் சீக்கியர்களின் ஆன்மீக குரு ஸ்தானத்திற்கு வருவோர் பரம்பரையினராயிருக்க வேண்டும் என்ற நியதி ஏற்பட்டது. ஐந்தாவது குருவான அர்ஜுன்மால்(Arjun Mal, 1581-1606)நிருவாக ஆற்றல் மிக்கவராகக் காணப்பட்டார். அவருடைய தலைமையின்கீழ் சீக்கிய இனத்தார் எண்ணிக்கையில் மிகுந்து வரலாயினர். பஞ்சாபின் எல்லா இடங்களிலும் பரவினர். அவர் சீக்கியர்களின் வேத நூலாகக் கூறப்படும் ஆதிகிரந்தம் (Adi Granth) அல்லது 'முதல் தெய்விக நூல்' என்ற நூலைத் தொகுத்தார். அவருக்கு

முன்பிருந்த நான்கு குருமார்களின் நூல்களிலிருந்த முக்கியமான செய்யுள்களையும், ஜெயதேவர் காலத்திலிருந்து தோன்றிவந்த இந்து முகமதிய முனிவர்களின் நூல்களிலிருந்து முக்கியமான பகுதிகளையும் தேர்ந்தெடுத்து அந் நூலைத் தொகுத்தார். குருவினுடைய மதிப்பும்,செல்வமும் கணிசமான அளவு வளர்ந்துவந்ததால், அவர் தம் சமயத்தை ஒருநிலைப்படுத்தித் தம்மால் இயன்ற வரை பெரிதும் உழைத்தார். அவர் காலத்தில் வாழ்ந்த ஒருவர் பேரரசரும் (அக்பர்), அரசர்களும் அவர் முன்பு தலை குனிந்து வணங்குகின்றனர்; செல்வம் அவரைத் தேடி வந்து குவிகிறது' என்று கூறியுள்ளார். தங்கள் சீடர்களால் 'தொகையளவு வேறுபடுகின்ற, தாமாகக் கொடுக்கப்படும் கொடைகளை ஏற்றுக் கொண்டதோடு அவருக்கு முன்பிருந்த குருமார்கள் திருப்தி அடைந்தனர். ஆனால், குரு அர்ஜுன் மசாண்ட்கள் (Masands) என்று அழைக்கப்படும் தம்முடைய முகவர்களின் குழுவினால்(Band of agents) பெரிதும் கட்டாயமாகக் கொடுக்கப்பட வேண்டிய 'ஆன்மீக இறை' யை வசூலிக்கும் முறையைத் தொடங்கி வைத்துத் தம் கோயிலின் பொருள் வருவாய்களை ஒழுங்கு படுத்தமுயன்றார். முந்திய குருமார்கள் சமயப் பிரசாரகர்களாக மட்டும் இருந்தனர்; அரசியலில் தலையிடவில்லை. ஆனால், குரு அர்ஜுன் கலகம் செய்ய விழைந்த இளவரசர் குஸ்ராவுக்குத் தம் வாழ்த்துகளை வழங்கினார். ஜஹாங்கீர் இக் குருவின் பெருஞ் செல்வத்தையும் செல்வாக்கையும் கண்டு ஐயுற்றவர்போல, இராசத் துரோகக் குற்றம்சாட்டி அவரை 1606-ல் கொலை செய்வித்தார். இது சீக்கியர்களின் மனத்தைப் புண்படுத்தியிருக்கவேண்டும். எனினும் அந்தச் சமயத்தில் முகலாயப் பேரரசுக்கு எதிராகத் தங்களுடைய பகைமையை அவர்கள் வெளிப்படையாகக் காட்டிக் கொள்ளவில்லை.அடுத்துக் குருவாக வந்தஅர்ஜுனின் மகன் ஹரகோவிந்தர் (1606—1645) போரில் விருப்புடையவராயும், துணிகரச் செயல் புரியும் உணர்ச்சி உடையவராயும் இருந்தார். தம் கீழ் ஒரு சிறிய படையைச் சேர்த்து வைத்துக்கொண்டார். ஜஹாங்கீரின் கீழ் வேலைக்கு அமர்த்தப்பட்டிருந்தாலும், அவருடைய தந்தையின் மேல் சுமத்தப்பட்ட அபராதத் தொகையின் பாக்கியைக் கட்டமறுத்ததால் அவர் குவாலியரில் பன்னிரண்டு ஆண்டுச் சிறைவாசம் அனுபவிக்கநேர்ந்தது. அவர் ஷாஜஹானுக்கு எதிராகக் கிளர்ந்தெழுந்து 1628-ல் அமிர்தசரஸுக்கருகில் சங்கிராமா என்ற இடத்தில் பேரரசுப் படை ஒன்றைத் தோற்கடித்தார். ஆனால், கடைசியில் அவர் தோற்கடிக்கப்பட்டார். அதனால், காஷ்மீர் மலைகளில் உள்ள கிராத்பூரில் (Kiratpur) அடைக்கலம் புகவேண்டிய நெருக்கடிக்குள்ளானார். தம்முடைய இளைய பேரரான ஹர ராய்(Har Rai, 1645—1661) என்பவரைத்

தமக்குப்பின் குருவாக நியமித்துவிட்டு 1645-ல் அங்கேயே இறந்தார். 1661-ல் ஹரராய் இருந்தபிறகு அவருடைய இரண்டாவது மகன் ஹர கிஷன் (Har Kishan, 1661—1664) குருபதவிக்கு வந்தார். இந்த இரண்டு குருமார்களின் காலத்தில் முக்கிய நிகழ்ச்சி எதுவும் நடக்கவில்லை. ஆனல், அர்ஜுனின் பொருள் வருவாய்க் கொள்கையும், அவருடைய புதல்வர் தோற்றுவித்த படைமுறையும், பேரரசுக்குள் ஏற்கெனவே சீக்கியர்களுக்கு ஒரு தனிநாட்டை உருவாக்கிவைத்தது.'

1664-ல் ஹரகிஷன் இறந்தார். குரு ஸ்தானத்திற்காகச் சில சிறு போர்கள் ஏற்பட்ட பிறகு ஆறும் குருவான ஹரகோவிந்தரின் இரண்டாவது மகனை தேஜ் பஹதூர் (Teg Bahadur) பெரும்பாலான சீக்கியர்களால் தங்கள் இனத்து ஆன்மீகத் தலைவராக ஏற்றுக்கொள்ளப்பட்டார். அவர் கிராத்பூரிலிருந்து (Kiratpur) ஆறு மைல் தொலைவிலிருந்த ஆனந்தப்பூரில்தங்கினர். பீஹாரில் உள்ள பாட்னவில் சில மாதங்கள் வாழ்ந்தார். அப்போது அவருக்குக் குரு கோவிந்த் என்ற மகன் பிறந்தார். (கி.பி. 1666). அவர் அஸ்ஸாம் போரில் (கி.பி. 1668) மீர்ஸா ராஜா ஜெய்சிங்கு என்பவரின் மகனை ராஜாராம்சிங்கு என்பவருடன் சேர்ந்தார். ஆனல், விரைவில் பழைய இருப்பிடமான ஆனந்தப்பூருக்குத் திரும்பினர்; பேரரசின் அரசாங்கத்துக்கு எதிராகப் பகைமைச் செயல்களில் ஈடுபட்டார். பேரரசின் சில முறைகளுக்கு எதிர்ப்புகளைச் செய்தார். காஷ்மீரப் பிராமணர்களையும் பேரரசின் ஆட்சியை எதிர்க்கத் தூண்டினர். இது ஔரங்கசீப்பினல் பொறுத்துக்கொண்டிருக்க முடியாததாயிற்று. அவர் சீக்கியக் குருவைச் சிறைப்பிடிக்குமாறு செய்து டில்லிக்குக் கொண்டுவருமாறும் செய்தார். அங்கே சாவு அல்லது மத மாற்றம் இரண்டில் ஒன்றைத் தேர்ந்தெடுத்துக்கொள்ளுமாறு சீக்கியக் குருவைக் கேட்டார். தேஜ் பஹதூர் தம் உயிரினும் கொள்கையே சிறந்தது என்று கூறினர். அதனல் ஐந்து நாள்களுக்குப் பிறகு (கி.பி. 1675-ல்) தூக்கிலிடப்பட்டார். இவ்வாறு அவர் தம் தலையைக் கொடுத்தார். ஆனல், அவர் தம் கொள்கையை விட்டுவிடவில்லை. (ஸர் தியாஸர் நதியா)குருவின் தியாக மரணம் முகலாயப் பேரரசை எதிர்த்துப் பழிக்குப் பழிவாங்க வேண்டுமென்ற உணர்ச்சியைச் சீக்கியர்களிடயே கொதித்தெழச் செய்தது. தேஜ் பகதூருக்குப் பின் வந்த அவருடைய புதல்வர் குரு கோவிந்த் இந்திய வரலாற்றிலேயே மிகச் சிறந்த ஆளுமையாளர்களுள் ஒருவர். 'ஒரு கிரேக்கச் சட்டம் இயற்றி நிறைவேற்றுபவரைப்' போல அவர் தம்மைப் பின்பற்றுவோர்களை மிகச் சிறந்த வகையில் ஒழுங்குற ஒன்று கூட்டும் வேலையில்

ஈடுபட்டார். ஓர் உடைவாளினுல் தண்ணீரைக் கலக்கிப் பெயர் வைக்கும் சடங்கு (பஹுல்-Pahul) ஒன்றைத் தோற்றுவித்தார். இந்தப் பெயர் வைக்கும் புதிய முறையை ஏற்றுக்கொண்டவர்கள் தூய்மையுடையவராகக் (கல்சாவாக-Khalsa) கருதப்பட்டனர். சிங்கு (சிங்கம்) என்ற பட்டமும் கொடுக்கப்பட்டது. அவர்கள் கேசம் (Kes-நீண்ட மயிர்), கங்கம் (Kangha-சீப்பு), கரிபியன் (Kripan-வாள்), கச்சா (Kachcha-குறுகிய காலுடைகள்), கரம் (Kara-எஃகு வளையம்) என்ற ஐந்து பொருள்களைப் பெற்றிருக்க வேண்டும். அவர்களை போர்க்களத்தில் பகைவனுக்குப் புறமுதுகு காட்டக் கூடாது. அவர்கள் எப்பொழுதும் ஏழைகளுக்கும் வறுமையில் வாடி நலிவோருக்கும் உதவவேண்டும் என்று அறிவுறுத்தினர். குரு கோவிந்த் தஸ்வேன் பாதுஷா கா கிரந்த் ('பத்தாவது பேரரசின் புத்தகம்') என்ற இரண்டாவது கிரந்தம் ஒன்றைத் தொகுத்தார். அவர் போற்றத் தக்கத் துணிவுடனும் தீரத்துடனும் சில பக்கத்து மலைநாட்டு இளவரசர்களுடனும் முகலாய அதிகாரிகளுடனும் போரிட்டார். அவர் பஹதூருக்குச் சிம்மாசனப் போரில் உதவி செய்தார் என்றும், அதன்பின் அவருடன் தக்கணத்துக்குச் சென்றூர் என்றும் கூறப்படுகின்றன. கோதாவரி நதியின் தீரத்தில் நந்தூர் என்ற இடத்தில் 1708ஆம் ஆண்டின் இறுதியில் ஆப்கானிய மத வெறியன் அவரைக் குத்திக் கொன்றுவிட்டான்.

## இ. இராஜபுத்திரருடன் போர்

பேரரசுக்கு எதிராக எழுந்த மிகச் சிறிய கிளர்ச்சிகளாகக் காணப்பட்ட எழுச்சிகளை ஔரங்கசீப் ஒடுக்கிவிட்டார். ஆனுல், பேரரசரின் கொள்கைக்கு எதிர்ப்பாகத் தோன்றி வந்த சில பலம் மிக்க எதிர்ப்புகள் அவருடைய பேரரசுக்குப் பேராபத்தான விளைவுகளை உண்டாக்கிவிட்டன. பேரரசின் வளர்ச்சிக்கு முன்பு மிகவும் உதவிய ராஜபுத்திரர்களின் கூட்டுறவின் மதிப்பை உணர்ந்துகொள்ளத் தவறிய ஔரங்கசீப் அவர்களைக் குறித்து அரசாங்கக் கொள்கையில் ஒரு மாற்றத்தைக் கொண்டுவந்தார். தம்முடைய கொள்கைக்கு எதிராக முளைத்த ராஜபுத்திர எதிர்ப்புக்குப் பலம் வாய்ந்த ஒரு தலைவராக அவரால் கருதப் பட்ட ஆம்பர் நாட்டு ராஜா ஜெய்சிங்கு 1667-ல் தக்கணத்தில் தம்முடைய உயிரை இழந்தார்.

பல காரணங்களால் மார்வாரின் வெற்றி, அடுத்து அவர் கருத்தைக் கவர்ந்தது. முகலாயத் தலைநகரிலிருந்து மேற்கு இந்தியாவின் செல்வ வளமிக்க நகரங்கள், துறைமுகங்கள் இவற்றிற்குச் செல்லும் சில வாணிக வழிகள், பட்டாளம் செல்லும் வழிகள்

முதலியனவற்றைத் தம்மிடத்தே கொண்டிருப்பதான ஒரு போரியல் சூழ்ச்சித் திறம் வாய்ந்த இடமாக மார்வார் இருந்தது. மேலும், அந்தச் சமயத்தில் வட இந்தியாவில் வலிமைமிக்க படைபலம் கொண்ட நாடாக அது இருந்த நிலைமை, ஔரங்கசீப்புக்கு எப்போதும் தொல்லையாக இருந்துவந்தது. முன்பு தாரா ஷுக்கோவின் துணையாளராக இருந்தவரும், அப்போது மார்வாரின் தலைவராய் இருந்தவருமான ஜஸ்வந்த் சிங்கு (Jaswant Singh) தம்முடைய கொள்கையின் எதிர்ப்புத் தலைவராக ஆகிவிடுவாரோ என்று ஔரங்கசீப் ஐயமுற்றுக் கொண்டிருந்தார்.

மார்வாருக்கு எதிராகப் பேரரசர் போட்டிருந்த திட்டங்கள் செயல்படுத்துவதற்கேற்ற ஒரு நல்ல வாய்ப்பு விரைவில் ஏற்பட்டது. கைபர் கணவாயிலும், பெஷாவர் (Peshawar) மாவட்டத்திலும் முகலாய எல்லைத் தளங்களை அடக்கி வைத்துக் கொண்டிருந்த ராஜா ஜஸ்வந்த் சிங்கு 1678ஆம் ஆண்டு டிசம்பர் மாதம் 10ஆம் நாள் ஜம்ரூத் (Jamrud) என்ற இடத்தில் இயற்கையெய்தினார். இந்தச் செய்தியைக் கேள்விப்பட்டவுடனே ஔரங்கசீப் மார்வாரைத் தம் இராச்சியத்துடன் சேர்த்துக் கொள்வதற்கான முயற்சிகளை உடனே மேற்கொண்டார். அங்கே தம்முடைய அதிகாரிகளாக பௌஜ்தார், கில்லாதார், கொத்த வால், அமீன் ஆகியோரை நியமித்து அந்தப் பிரதேசத்தை முக லாயரின் நேரடி ஆட்சியின் கீழ் கொண்டுவந்தார். தங்களுடைய தலைவர் இறந்துபோனதால் குழப்பமும் கலவரமும் அடைந் திருந்த ராத்தோர்கள் எவ்விதமான ஒன்றுபட்ட தேசிய எதிர்ப் பையும் செய்யத் தவறிவிட்டனர். மே மாதத்தில் 'சிம்மாசனக் கூலியாக' முப்பத்தாறு இலட்சம் ரூபாய் கொடுத்து நாகோ ரின் தலைவரும் ஜஸ்வந்தின் மருமகனின் புதல்வருமான இந்திர சிங்கு ராத்தோர் ஜோத்பூரின் ராணுவாக ஆனார். ஆனால், அவர் முகலாய அதிகாரிகளால் சூழப்பட்டுப் பெயரளவில் மட்டும் ஆட்சியாளராயிருந்தார்.

இவ்வாறு பேரரசரின் கொள்கை வெற்றியில் முடிந்ததாகக் கொள்ளவேண்டியிருக்கிறது. ஆனால், உண்மையில் மார்வார் அடிபணியும்படி செய்யப்படவில்லை அந்த இராச்சியத்தின் ஒவ்வொரு ராஜபுத்திர வீடும் பேரரசரின் திடீர்த் தாக்குதலை எதிர்த்தடிப்பதெனத் தீர்மானித்தது. இவ்வாறு 'ஒரு புதிய எதிர்ப்புக்கூறு தோன்றியது. அது முடிவில் பேரரசுக் கொள் கையைத் தோற்கடித்துவிட்டது.' ஏற்கெனவே, 1679 பிப்ரவரியில் ஜஸ்வந்த் சிங்கு இறந்தபின், லாகூரில் அவருக்கு

இரு குழந்தைகள் பிறந்தன. அவற்றுள் ஒரு குழந்தை பிறந்த வுடனே இறந்தது. ஆனால், மற்றது அஜீத் சிங்கு என்ற பெயருடன் உயிர் பிழைத்தது. அக் குழந்தையினது தந்தையின் முக்கிய வழியாளர்கள் அதை டில்லிக்கு எடுத்துச் சென்று,இறந்து போன அரசருக்கு 'வாரிசாக' அதை ஒப்புக்கொள்ளும்படி வேண்டிக்கொண்டனர். ஆனால், பேரரசர் அந்தக் குழந்தையைத் தம் அந்தப்புரத்திலேயே வளர்த்துவருவதாக ஏற்றுக்கொண்டார். அல்லது அக் காலத்தில் வழங்கிய மற்றொரு வரலாற்றுப்படி 'அஜீத் ஒரு முஸ்லிமாக மாறிவிட வேண்டும் என்ற நிபந்தனையின் பேரில் ஜோத்பூர் சிம்மாசனம் அஜீத்துக்கு அளிக்கப்பட்டது' என்றும் கொள்ளலாம். பேரரசரின் மிகவும் மோசமான இந்த ஏற்பாடு ராத்தோர்களின் உணர்ச்சிகளைக் கடுமையாகப் புண்படுத்தியது. பேரரசரின் ஏற்பாட்டுக்கு இணங்குவதைக் காட்டிலும் உயிரைத் தியாகம் செய்வதாக அவர்கள் சபதம்செய்தனர். ஆனால், பக்தியும், முரட்டுத் தைரியமும் மட்டும் பேரரசரின் ஒழுங்குற அமைந்த பலத்திற்குமுன் பயனளிக்கவில்லை. நல்ல வேளையாக அந்த நெருக்கடியான சமயத்தில் ராத்தோர்கள் துர்காதாஸ்(Durgadas) என்ற தகுதி மிக்க தலைவரைப்பெற்றனர். ஜஸ்வந்தின் அமைச்சரான அஸ்கரனின் மகனை அவர் 'ராத்தோர் வீரத்தின் மலராக' விளங்கினார்.

ராஜபுதன வரலாற்றில் பேராபத்துகளை எதிர்த்துத் தம் நாட்டிற்காகச் சுயநலமின்றிப் பக்தியுடன் உழைத்த அமரர்களுள் ஒருவராகத் துர்காதாஸ் கருதப்படுவது பொருத்தமானதே. 'அந்த உறுதி உரங்கொண்டிருந்த நெஞ்சத்தை முகலாயரின் தங்கம் தளர்த்திவிட முடியவில்லை; முகலாயப் படைக்கலன்கள் தகர்த்துவிட முடியவில்லை. பெரும்பாலும் ராத்தோர்களுள் தனியொருவராக அவர் ராஜபுத்திர வீரரின் தீரமும், முரட்டு வீரமும் முகலாய அரசாங்க அமைச்சர் ஒருவனின் போரியல் சூழ்ச்சித்திறமும், திறமை, ஒழுங்குபடுத்தும் சக்தி இவையும் அரிதின் கலந்திருந்த குணவியல்பைக்கொண்டிருந்தார்.' அரசிகளையும் அஜீத் சிங்கையும் பிடிப்பதற்காக அனுப்பப்பட்ட பேரரசுப் படைகளின்மீது 'சாவை விரும்பும் ராஜபுத்திர வீரர்களின் அணி ஒன்று பாய்ந்தபோது அந்தக் குழப்பத்தைத் தமக்குச் சாதகமாகக் கொண்டு துர்காதாஸ் ஆணுடை உடுத்துத் தாம் விரும்பிய பேர்களைத் தயாராக்கிக் கொண்டு குதிரைமீது ஏறிச்சென்றார். பேரரசினர் அவரை வந்து பிடிப்பதற்குள் ஒன்பது மைல்களை அவர் கடந்துவிட்டார். ஆனால், அங்கே ரஞ்சோர்தாஸ் ஜோதா (Ranchordas Jodha)என்பவரின்கீழ் ராஜபுத்திரர்களின் ஒரு சிறிய குழு துரத்திக்கொண்டு வந்தவர்களை எவ்வளவு தூரத்தில் நிறுத்தி

வைக்க முடியுமோ, அவ்வளவு தொலைவில் நிறுத்தி வைக்க முயன்றது. அதனால், துர்காதாஸ் அரசிகளுடனும், அஜீத்துடனும் 1679 ஜூலை 23ஆம் நாள் ஜோத்பூரை அடைந்துவிட முடிந்தது. அப்போது ஔரங்கசீப் வெவ்வேறு மாகாணங்களிலிருந்தும் மிகுந்த படைகளை வரவழைத்து, படையின் தனித்தனி அணிகளுக்கு மு'அஸ்ஸம் (Mu'azzam), ஆஸம் (Azam) அக்பர் என்ற மூன்று இளவரசர்களைத் தளபதிகளாக நியமித்தார். படைத்துறைச் செயல்களை முன்னின்று நடத்துவதற்காக 1679 ஆகஸ்டில் ஔரங்கசீப் தாமே ஆஜ்மீருக்குப் படையுடன் வந்தார். ஜோத்பூர் பிடிக்கப்பட்டுக் கொள்ளையிடப்பட்டது.

ஆனால், முகலாயப் பேரரசரின் இந்த ஆக்கிரமிப்புக் கொள்கையை, மேவாரின் வீரமிக்க சிசோதியாக்கள் முரட்டுத்தனங் கொண்ட மார்வார் ராத்தோர்களுடன் சேரும்படி செய்தது. மேவார் அரசர் ராணாராஜ்சிங்கு, அஜீத் சிங்கின் உறவினராவார். அஜீத் சிங்கின் தாய் ஒரு சிசோதிய இளவரசியாவாள். ராணா ராஜ்சிங்கு மார்வாரின் இணைப்பு மேவாரை முகலாய வெற்றியின் ஆபத்துக்கு உள்ளாக்கிவிடும் என்றும் கருதினார். மேலும், பல ஆண்டுகளுக்குப் பிறகு மீண்டும் கொண்டுவரப்பட்ட ஜிஸ்ஸியா வரி அவரை மிகவும் சீற்றமுறச் செய்தது. ராத்தோர் சிசோதியாக் கூட்டுறவின்மூலம் ராஜபுத்திரரின் போர் சுதந்திரத்தைக் காப்பாற்றுவதற்காகச் செய்யும் தேசிய எழுச்சியாகத் தோற்றமளித்தது.

ஔரங்கசீப் உடனே மேவாரின்மீது படையெடுத்தார். ஆனால், ராணா மிகவும் அதிகமான பலம் வாய்ந்த முகலாயர்களை நேருக்கு நேர் எதிர்ப்பது அறிவுடைமையாகாது என்று கருதி மேவாரின் நகரங்களையும் கிராமங்களையும் காலி செய்துவிட்டுக் கீழேயுள்ள சமவெளிப் பகுதிகளைப் பாழாக்கிவிட்டுத் தம் எல்லாக் குடிமக்களுடன் மலைகோட்டைகளுக்குக் குடியேறிச் சென்றார். முகலாயர்கள் எளிதில் சித்தூரைக் கைப்பற்றினர். வெற்றியில் மிகுந்த நம்பிக்கை கொண்டு பேரரசர் சித்தூரில் இளவரசர் அக்பரின்கீழ் ஒரு வலிமை மிக்க படையை வைத்துவிட்டு அஜ்மீரை நோக்கிப் புறப்பட்டுச் சென்றார். ஆனால், விரைவில் ஏமாற்றமுற நேர்ந்தது. ராஜபுத்திரர்கள் கொரில்லாப் போர் முறையைக் கையாண்டு, முகலாயக் காவல் தளங்களின்மீது மிகு தீரத்துடன் பாய்ந்தனர். அதனால், 'முகலாயக் காவல் தளங்கள் கெஞ்சியிரக்கும் நிலைக்குத் தாழ்ந்தன; சாக்குப் போக்குகளைச் சொல்லிவிட்டு ஒவ்வொரு தளபதியாக ஆபத்து நிறைந்த மதிப்பைப்பெற விரும்பாது வெளியேறினர். 'தங்கள் வெற்றிகளால் ஊக்கம்

கொண்டவர்களாகிய ராஜபுத்திரர்கள், 1680 மே மாதத்தில் இளவரசர் அக்பரின்கீழ் இருந்த முகலாயப் படையை வியப்புக் குள்ளாக்கினர். இளவரசர் அக்பர் குறை தெரிவித்தது போலப் பேரரசுப் படை பட்டினிக்காளாகி 'அச்சத்தால் அசையாமல்' நின்றிருந்தது. இந்த அவல நிலைக்கு இளவரசர் அக்பரே காரண மாகும் என்று கருதிப் பேரரசர் சித்தூரிலிருந்த படையின் தலை மையதிகாரப் பதவியை இளவரசர் ஆஸமுக்குக் கொடுத்துவிட்டு அக்பரை மார்வாருக்கு அனுப்பினர்.

பதவியிலிருந்து அகற்றப்பட்ட மானக்கேட்டால் மனப்புண் பட்டிருந்த இளவரசர் அக்பர் இராஜபுத்திரர்களின் கூட்டுறவுடன் டில்லிச் சிம்மாசனத்தைத் தந்தையிடமிருந்து பறித்துக்கொள்ள லாம் என்று கனவு கண்டார். இராஜபுத்திரர்களுடன் செய்த யுத்தத்திலிருந்து அவர்களுடைய உதவியின் பெருமையை அவர் நன்கு உணர்ந்திருக்க வேண்டும். அவருடைய தந்தையின் கொள்கை எவ்வாறு முகலாயப் பேரரசின் நிலைப்பேற்றைத் தகர்க்கக் கூடியதாயுள்ளது என்பதை அக்பருக்கு இராஜபுத்திர வீரர்கள் எடுத்துக் கூறினர். இவ்வாறு டில்லிச் சிம்மாசனத்தில் உண்மையான ஒரு தேசிய அரசரை வைப்பதாக நம்பிக்கொண்டு அவர்கள் சிசோதயாக்கள், ராத்தோர்கள் என்ற இராஜபுத்திரர் களின் இரு பெரு இனங்களின் படை பலத்தை ஆதரவாகத் தந்து உதவுவதாக வாக்களித்தனர்.' தம்முடைய படையைச் சேர்ந்த 70,000 ஆள்களுடனும், 'இராஜபுதனத்தின் மிகச் சிறந்த ரத்தம் பாயும் வீரர்களுடனும்' இளவரசர் அக்பர் 1681 ஜனவரி 15ஆம் நாள் அஜ்மீருக்கு அருகே வந்து சேர்ந்தார். ஔரங்கசீப்பின் நிலை அப்போது மிகவும் இடர்ப்பாடுடையதாக இருந்தது. ஏனெனில், அவருடைய படையின் முக்கியமான இரண்டு அணிகள் சித்தூ ருக்கு அருகிலும், ராஜ் சமுத்திர ஏரியிலும் நிறுத்தி வைக்கப் பட்டிருந்தன. இந்த அருமையான வாய்ப்பை இளவரசர் தக்க வாறு பயன்படுத்திக்கொண்டிருந்தால் பேரரசர் ஆபத்தில் சிக்கிக் கொண்டிருப்பார். ஆனால், இளவரசர் சோம்பேறித்தனமாகவும், இன்பப் பொழுதுபோக்கிலும் காலத்தை வீணாகக் கழித்தார். இவ்வாறு அவர் சமயோசித அறிவுமிக்க அவருடைய தந்தைக்குத் தம்மைக் காப்பாற்றிக்கொள்வதற்கான ஏற்பாடுகளைச் செய்ய இடம் கொடுத்துவிட்டார். கலகம் விளைவிக்கும் தம் புதல்வருக்கு எழுதுவதுபோலக் கடிதம் எழுதி அது அவருக்குச் சேராமல் இராஜபுத்திரர்களுக்குக் கிடைக்குமாறு செய்து, அதன்மூலம் அக்பரின் கூட்டுப்படைகள் முகலாய இளவரசர்களை ஏமாற்ற முற்படுகின்றன என்று நம்புமாறு சூழ்ச்சி செய்தார். பேரரசரின் போரியல் சூழ்ச்சி வெற்றிகரமாக முடிந்தது. ஏனெனில், இளவரசர்

அக்பரின் இராஜபுத்திரக் கூட்டுப்படைகள் கடைசியில் அக்பர் துரோகம் செய்துவிடுவார் என்று ஐயுற்று, அவரைக் கைவிட்டு விட்டு 'இராஜபுத்திரர்களின் வழியில் இனிய வாழ்க்கைக்காக அவசரமாக ஓடத் தொடங்கிவிட்டனர்.' எனினும், இராஜ புத்திரர்கள் விரைவில் தங்கள்மேல் ஏவி விடப்பட்ட சூழ்ச்சியைக் கண்டுபிடித்தனர். தீரமிக்க ராத்தோர் தலைவரான துர்க்காதாஸ் இளவரசரின் கபடமின்மையை நன்கு அறிந்துகொண்டு வீரத் துடன் அவருடைய தந்தையின் வஞ்சகத்திலிருந்து அவரைக் காப் பாற்றினார். காந்தேஷ்பக்லானா வழியாக மராட்டிய அரசரான ஷாம்பூஜியின் அரண்மனைக்கு வழித்துணையாக இருந்து அவரை அழைத்துச் சென்றார். ஆனால், தம் விருப்பங்களை நிறைவேற்றிக் கொள்வதில் ஆர்வம் கொண்ட அடுத்த மராத்திய அரசர் சிவாஜி முகலாய நாடோடி இளவரசருக்கு எவ்விதச் சிறந்த உதவியையும் அளிக்கவில்லை. அதனால் 'இந்து முஸ்லிம் இணக்கம்' நட்புறவு இவற்றின் அடிப்படையில் 'இந்தியப் பேரரசை நிறுவவேண்டும் என்று கனவு கண்டிருந்த இளவரசரின் கனவு வீண் கனவா யிற்று.' ஏறக்குறைய ஆறு ஆண்டுகளுக்குப் பிறகு ஏமாற்றமுற்ற முகலாய இளவரசர் பாரசீகத்திற்குப் புறப்பட்டுச் சென்றார். அங்கே அவர் கி.பி. 1704-ல் உயிர் நீத்தார்.

இளவரசர் அக்பரின் கிளர்ச்சி டில்லி ஆட்சியாளரை மாற்றி விட முடியாது போயினும், அது மேவார் ராணாவுக்குப் பெரிய நிம்மதியைத் தந்தது. ஆனால், ராணா முகலாயர்களை எதிர்த்துப் பெற்ற தாற்காலிக வெற்றி அவருடைய குடிமக்களுக்குப் பெருந் துயரம் கொடுத்தது. முகலாயர்களின் துன்பங்களும் கணிசமான அளவில் இருந்தன. அவர்கள் இராஜபுத்திரர்களை எதிர்த்து நிலையான வெற்றியை அடைய முடியவில்லை. இக் காரணங் களால் பேரரசரும் ராஜ்சிங்கின் மகனும் அவருக்கு அடுத்துப் பட்டத்துக்கு வந்தவருமான ஜயசிங்கும் 1681-ல் ஓர் உடன் படிக்கை செய்துகொள்ள வேண்டியவரானார்கள். ஜெஸியா வுக்குப் பதிலாகச் சில மாவட்டங்களை ராணா பிரித்துக் கொடுத் தார். முகலாயர்களும் மேவாரிலிருந்து பின்வாங்கித் திரும்பிச் சென்றுவிட்டனர். எனினும், மதிப்பு மிக்க அமைதி உடன்பாடு ஏற்படும்வரை மார்வார்'முப்பதுஆண்டுப் போரைத்' தொடர்ந்து நடத்திவந்தது. துர்க்காதாஸின் திறமைமிக்க தலைமையின் கீழ் ராத்தோர்கள் இடைவிடாது கொரில்லாப் போர் முறையைக் கையாண்டு முகலாயக் காவல் தளங்களுக்குப் பெருந்தொல்லைகள் கொடுத்தனர். அதனால் முகலாய அதிகாரிகள் இரக்கமில்லாத எதிரிகளின் தாக்குதலிலிருந்து தங்களைக் காப்பாற்றிக்கொள்வதற் காகச் சௌத் (Chauth) கொடுக்கும்படி கட்டாயப்படுத்தப்

பட்டனர். ஔரங்கசீப்பின் இறப்புக்குப்பின் அவருடைய மகனும் அடுத்துப் பட்டத்துக்கு வந்தவருமான முதலாம் பகதூர்ஷா அஜீத்சிங்கை கி.பி. 1709-ல் மார்வாரின் ராணு என்று ஒப்புக் கொள்ளும்வரை போர் தொடர்ந்து நடைபெற்றது.

ஔரங்கசீப் இராஜபுத்திரர்களிடம் செய்த போர்கள் அவருடைய இராச்சியத்தில் மிகு பெருங்கேடான விளைவுகளை உண்டாக்கிவிட்டன. ஆயிரக்கணக்கான உயிர்கள் தியாகம் செய்யப் பட்டன. பேரரசர்க்கு எந்த விதமான நிலையான வெற்றியும் இல்லாமல் அந்தப் பாலை நிலத்தில் மிகு பெருந்தொகை வீணுக் கப்பட்டது. 'இப் போரின் விளைவு பேரரசின் பெருமைக்குப் பேரிடியாக இருந்தது. பொருளாதாரம் முதலியவற்றின் விளைவுகளும் இன்னும் இழிவாக இருந்தன.' ஔரங்கசீப் அதுவரை பேரரசுக்கு நண்பர்களாயிருந்த இராஜபுத்திரர்களின் பகைமையைத் தேடிக்கொண்டார். அதனுல், வீரமிக்க தலைவர்கள், வீரர்கள் ஆகியோரின் பக்திமிக்க பணியை இழந்ததும், தக்கணத்தில் வீண் போர்களைச் செய்து வந்ததும், இன்னும், அமைதிப் படுத்த முடியாதவர்களாய் ஓயாது போரிட்டுவந்த ஆப்கானிய மலைச்சாதி மக்களை வட மேற்கு எல்லையில் அடக்கி வைத்திருக்க வேண்டும் என்ற முக்கியமான வேளையில் வீண்போர்களைச் செய்து வந்ததும் அவருடைய அரசியல் அறிவின்மையால் செய்யப்பட்ட செயல்களாகும்.

## 8. ஔரங்கசீப்பும் தக்கணமும்

ஔரங்கசீப்பின் ஆட்சிக் காலத்து முதல் பாதியில் அவருடைய கவனம் எல்லாம் வடக்கேயுள்ள நாடுகளின் விவகாரங்களில் முழுவதும் ஈடுபடுத்தப்பட்டிருந்தது. தக்கணம் அரசப் பிரதிநிதிகளிடம் விடப்பட்டிருந்தது. சீர்குலைவின்றித் தென்னகச் சுல்தானியங்கள் அவற்றின்மேல் முகலாயர்கள் செய்த தாக்குதல்களின்றும் முழுவதும் மீளமுடியாதவைகளாயிருந்தன. அவற்றின் சார்பில் மராத்தியர்கள் விழிப்புற்றெழுந்தனர். முகலாயப் பேரரசினை அறை கூவி அழைப்பதைப்போல எழுந்த மராத்தியர்களின் எழுச்சி தக்கணத்து அரசியல் விவகாரங்களைக் குழப்பத்துள்ளாக்கியது. அந்த எழுச்சியின் முழுச் சிறப்பையும் முதலில் பேரரசர் உணர்ந்து கொள்ளவில்லை. அவருடைய ஆட்சியின் முதல் இருபத்துநான்கு ஆண்டுகள்வரை அவருடைய தக்கணத்து அரசப் பிரதிநிதிகள் சுல்தானியங்களை எதிர்த்தாவது, மராத்தியர்களை எதிர்த்தாவது எவ்வித முடிவான வெற்றியையும் அடைய இயலவில்லை.

தம்முடைய மேலாண்மை அதிகாரத்தை ஒருநிலைப்படுத்த வேண்டுமென்று ஔரங்கசீப் தீர்மானம் செய்திருந்தபோதிலும்

1680-ல் சிவாஜியின் மறைவும் தக்கணத்தில் பேரரசின் நிலைமையில் எவ்வித முன்னேற்றத்தையும் காணமுடியவில்லை. மராத்திய அரசரான ஷாம்பூஜியிடம் கிளர்ச்சிக்கார இளவரசர் அக்பர் ஓடி அடைக்கலம் புகுந்ததும், இந்தியாவின் அமைதிக்குப் பங்கம் விளைவிப்பவர்' என்றும், 'பேய்த் தந்தைக்குப் பிறந்த பேய்மகன்' என்றும் ஔரங்கசீப்பினுல் கூறப்பட்ட அந்த இருவர்களிடையேயும் ஏற்பட்ட கூட்டுறவும் அவருடைய தக்கணக்கொள்கையில் ஒரு முழு மாற்றத்தை ஏற்படுத்தியது. பேரரசின் நலங்களுக்குப் பெருங் கேடாக இருந்த அந் நிலையைத் தடுப்பதற்காக, அங்கே தாமே நேரில் செல்லவேண்டியதன் இன்றியமையாமையை உணர்ந் திருந்த பேரரசர் 1681 ஜூன் மாதத்தில் மேவாருடன் ஓர் உடன் படிக்கை செய்துகொண்டார். 1681 செப்டம்பர் 8ஆம் நாள் அஜ்மீரை விட்டுத் தக்கணத்துக்குப் புறப்பட்ட அவர் 1681 நவம்பர் 23ஆம் நாள் புர்ஹான்பூரை அடைந்தார். அவருடைய மனம் உயர்ந்த நம்பிக்கைகளால் நிறைந்திருக்கவேண்டும். விதி அவரைத் தெற்கே இழுத்துச் சென்று, அவருக்கும் அவருடைய இராச்சியத்துக்கும் குழி தோண்டப்போவதாக அவர் முன்னறிந்து கொள்ள முடியவில்லை. முதல் நான்காண்டுகள் இளவரசர் அக்பரைப் பிடிக்கும் வீண்முயற்சிகளில் கழிந்தன; மாராத்தியர் களுக்கு எதிராகச் செய்தபோர்களில் பேராபத்துகள் ஏற்பட்டன. மராத்தியர்களின் சில கோட்டைகள் பேரரசினரால் வெல்லப் பட்டன. எனினும், சிவாஜியால் புதிதாகக் கிளர்ச்சி யூட்டப் பெற்ற பலம் வாய்ந்த மராத்தியர்களை முழுதும் அடக்கி ஒடுக்கி விட முடியவில்லை.

சீர்குலைந்த சுல்தானியங்களை வெற்றி கொள்வது அடுத்துப் பேரரசின் கவனத்தைக் கவர்ந்தது. ஷாஜஹானுடைய கருத் தைப் போலவே, தக்கணத்து ஷியா சுல்தானியங்களைப் பற்றிய ஔரங்கசீப்பின் கொள்கை ஒருபுறம் பேரரசின் நலங்களாலும், ஒருபக்கம் மதச்சார்பு பற்றியசிந்தனைகளாலும் உருவாகியிருந்தது. மராத்தியர்களின் எழுச்சியினுலும், கட்சிச் சண்டைகளாலும் பலவீனமுற்றிருந்த பீஜப்பூர் படையெடுப்பாளர்களுக்கு அடி பணிந்தது. அந் நகரின் கடைசி முகலாய முற்றுகை 1685 ஏப்ரல் 11ஆம் நாள் தொடங்கியது. பேரரசர் தாமே அங்கே 1686 ஜூலையில் சென்றார். முற்றுகையிடப்பட்ட கோட்டைப்படை, வீரத்துடன்தான் கோட்டையைக் காத்து நின்றது. ஆனுல், உணவுப்பொருள்கள் முதலியன இல்லாமற் போனதாலும், பஞ்சம் ஏற்பட்டதனுலும் எண்ணிலாத ஆள்களும் குதிரைகளும் மடிந்து போனதாலும் சோர்வுற்று அவர்கள் 1686 செப்டம்பரில் சரணடைந்தனர். ஆதில்ஷாக்களில் கடைசியான சிக்கந்தர்

பேரரசரிடம் சரணடைந்தார். யூசுப் ஆதில்ஷாவினுல் நிறுவப் பட்ட அரசமரபு இவ்வாறு அழிவுற்றது. பீஜப்பூருக்குள் நுழைந்ததும் பேரரசர் சிக்கந்தரின் அரண்மனைக்குள்ளிருந்த எல்லா அழகிய ஓவியங்களையும், வண்ணச்சுவர்ச் சித்திரங்களையும் அழித்தார். பீஜப்பூர் அதனுடைய சுதந்திரத்தை இழந்தவுடன் ஒரு பாழ்பட்ட நகரமாகவும் மாறியது. சர் ஜே. என். சர்க்கார், 'சில ஆண்டுகளுக்குப் பிறகு அந்த நகரமும் அதைப்போலவே பெரிதாயிருந்த நவ்ரஸ்பூரும் (Nauraspur) எவ்வாறு பாழடைந்து அழிபாடுற்றுக் காணப்பட்டன என்பதைப் பீம்சேன் பார்த்தார். மக்கள் சிதறுண்டு ஆங்காங்கு வாழ்ந்தனர். நகரில் மிகுதியாக நீரை வழங்கிவந்த கிணறுகள்கூடத் திடீரென்று வற்றிவிட்டன' என்று குறிப்பிடுகிறுர்.

அடுத்துக் 'கோல்கொண்டா' இராச்சியத்தின் குதுப்ஷாஹியின் முறை வந்தது. 1687ஆம் ஆண்டு பிப்ரவரியின் தொடக்கத்தில் ஔரங்கசீப் தாமே கோல்கொண்டாவின் முன்பு தோன்றினுர். ஒரு சில நாள்களில் முகலாயப் படைகள் உள்நாட்டுக் கோட்டையை முற்றுகையிட்டன. ஆனுல், அந்தக் கோட்டை உணவுப்பொருளும் படைக்கலப் பொருள்களும் நிறைந்திருந்த மையின் முற்றுகையிடப்பட்டவர்கள் ஏறக்குறைய எட்டு மாதம் வரை தீரத்துடன் சமாளித்தனர். சுரங்கப்பாதைகள், துப்பாக்கி வேட்டுகள், சுவர் ஏணிகள் முதலிய ஒவ்வோர் உபாயத்தையும் பயன்படுத்தினுலும், முற்றுகையிட்டவர்கள் எவ்வித நேரான வெற்றியையும் அடைய முடியவில்லை. ஆனுல், பஞ்சத்தாலும், கொள்ளை நோயாலும் பெரும் அவதிக்குள்ளாயினர். அவர்களு டைய பகைவர்கள் வன்முறையில் பொருள்களைக் கைப்பற்றிய தால் பெரும் இழப்பையும் அடைந்தனர். எனினும், ஔரங்கசீப் தீரம் மிக்க துணிவுடன் முற்றுகையை நீட்டித்தார். புதிய படைகளைத் திரட்டினுர். வீரமும், படைக்கலங்களும் வெற்றியை தராதொழியவே ஔரங்கசீப் ஆசீர்கார்க் கோட்டைக்காக அக்பர் பயன்படுத்திய முறையின் வழியே கோல்கொண்டாவைப் பிடிக்கப் 'பொன் சாவியைப்' பயன்படுத்தினுர். கோல்கொண்டா சுல்தானுன அபுல் ஹஸனின் ஊழியத்தில் அமர்ந்திருந்த, செல்வ மிக்க படைவீரர் அப்துல்லா பானி (Abdullah Pani) பேரரசரால் வசமாக்கப்பட்டுவிட்டார். கோட்டையின் முக்கிய வாயிலைத் திறந்துவிட்டு முகலாயப் படைகள் உள்ளே சென்று குவிய அனுமதித்தார். ஆனுல், அப்துர் ரஸ்ஸாக் லாரி (Abdur Razzaq Lari) என்ற பற்றுறுதி மிக்க கோல்கொண்டாப் பிரபு பேரரசின் பேராசையைத் தூண்டும் பொருட்டுக் கொடைகளைப் புறக் கணித்துவிட்டு, எழுபது காயங்களால் தம் உடல் முழுதும்

துளைக்கப்பட்டுவிடும் வரை, தனியாளாக நின்று போரிட்டார். முகலாயர்கள் அவரை மீண்டும் குணப்படுத்தினர். கடைசியில் அவர் பேரரசின்கீழ் ஓர் உயர்ந்த பதவியை ஒப்புக்கொண்டார். அப்துல் ஹஸன் அவருடைய கடைசிக்காலத்தில் ஆண்டொன்றுக்கு 50,000 ரூபாய் ஊதியம் பெற்றுக்கொண்டு தௌலதாபாத் கோட்டையில் வாழுமாறு அனுப்பப்பட்டார். (1687 செப்டம்பரில்) கோல்கொண்டா முகலாயப் பேரரசுடன் இணைக்கப்பட்டது.

எல்பின்ஸ்டன் (Elphinstone), ஸ்மித் போன்ற ஆசிரியர்களின் கருத்துப்படி தென்னகத்துச் சுல்தானியங்களை அழித்தது ஔரங்க சீப்பின் அரசியல் விவேகமற்ற செயலாகும். 'அது எந்த உள் நாட்டு எதிரிக்கும் பயப்படாதவாறு மராத்தியத் தலைவர்களுக்குச் சுதந்திரம் கொடுத்துவிட்டது' என்றும், முகலாயப் பேரரசர் மராத்தியர்களுக்கு எதிராகவும், தமக்கு நன்மையாகவும் அந்த எதிரிகளைப் பயன்படுத்திக்கொண்டிருக்கலாம் என்றும் கருது கின்றனர். ஆனால், சுல்தானியங்களுக்கும், அவர்களை ஆக்கிரமித்த முகலாயப் பேரரசர்க்கும் உண்மையான கூட்டுறவு ஏற்பட்டிருக்க முடியுமா என்பதும், அவர்கள் மராத்திய எழுச்சியைத் தடுத்திருக்க முடியுமா என்பதும் ஐயப்பாட்டிற்குரியதாகும். சர் ஜே. என். சர்க்கார் கூறுவதுபோல, 'அக்பர் விந்தியத்தைக் கடந்து வந்த பிறகு தக்கணச் சுல்தானியங்கள் முகலாயப் பேரரசின் உறக்க மில்லாக் குறிக்கோள் தங்கள் எல்லாப் பகுதிகளையும் அழித்து அவருடைய இராச்சியத்துடன் சேர்த்துக்கொள்வதேயாம் என்பதை ஒருபோதும் மறவாதவர்களாயிருந்தனர்.' மராத்தி யர்கள் ஏற்கெனவே முன்னேற்றமுள்ள ஒரு தேசிய நாடாகத் தங்களை ஒழுங்குற அமைத்துக்கொண்டமையால் அவர்களைச் சீர் குலைந்த சுல்தானியங்கள் சரிவரத் தடுத்து நிறுத்தியிருக்க முடியாது என்று சில ஆராய்ச்சியாளர்கள் கருதுகின்றனர்.

தமது தக்கணக் கொள்கையின் இரண்டு குறிக்கோள்களுள் ஒன்றில், அதாவது தக்கணத்துச் சீர்குலைந்த சுல்தானியங்களை இணைத்துக்கொள்வதில் வெற்றியுற்ற ஔரங்கசீப் மற்றக் குறிக் கோளையும், அதாவது புதிதாக முளைத்துவந்த மராத்தியரின் ஆற்றலை அடக்குவதற்காக முனைந்தார். முதலில் அவருடைய முயற்சிகள் வெற்றிபெற்றன. கி.பி. 1689 மார்ச்சு 11ஆம் நாள் ஷாம்பூஜி கொல்லப்பட்டார்; அவருடைய தலைநகரான ராய்கர் கைப்பற்றப்பட்டது. அவருடைய சகோதரரான ராஜாராம் தப்பிவிட்டாலுங்கூட, அவருடைய இளைய மகனை ஷாஹூ உள்பட அவருடைய குடும்பம் முழுவதும் சிறைப்பிடிக்கப்பட்டது; பேரரசர் இன்னும் தெற்கே தம்முடைய அதிகாரத்தைப்

பரப்பினுர். தஞ்சாவூர், திருச்சிராப்பள்ளி ஆகிய இந்து நாடுகளி லிருந்து கப்பம் வசூலித்தார்.

இவ்வாறு 1690ஆம் ஆண்டளவில் ஔரங்கசீப் தம்முடைய அதிகாரத்தின் உச்ச எல்லையை அடைந்தார். காபூலிலிருந்து சிட்டகாங்வரை, காஷ்மீரிலிருந்து காவேரி வரை, பெரும்பாலும் இந்தியா முழுவதற்கும் ஒப்பற்ற பேரரசராக விளங்கிஞர். 'இப்போது எல்லாம் ஔரங்கசீப்பிஞல் வெல்லப்பட்டவைபோல் தோன்றுகின்றன, ஆஞல், உண்மையில் எல்லாம் இழக்கப் பட்டன. அவருடைய முடிவின் தொடக்கம்தான் அது; அவருடைய வாழ்க்கையின் மிகவும் வருந்தத்தக்க, மிகவும் சீர்கேடான அதிகாரம் இப்போது தொடங்கிவிட்டது. ஒரு மனிதரால் அல்லது ஒரு தலைநகரிலிருந்து ஆளமுடியாத அளவிற்கு முகலாயப் பேரரசு விரிந்துவிட்டது........அவருடைய எதிரிகள் எல்லாப் பக்கங்களிலிருந்தும் எழுந்தனர்; அவர் அவர்களைத் தோற்கடிக்க முடியும். ஆஞல், பூண்டோடு அழித்துவிட முடியாது. வட இந்தியாவிலும் மத்திய இந்தியாவிலும் அராஜகம் தலைவிரித்தாடியது. நெடுந்தொலைவிலுள்ள தக்கணத் திலிருந்து வயது முதிர்ந்த பேரரசர் இந்துஸ்தானத்திலிருந்த தம்முடைய அதிகாரிகளைக் கட்டுப்படுத்தும் வன்மையை இழந்தார். ஆட்சிமுறை மந்தமாகவும், ஊழல் மலிந்ததாகவும் ஆயிற்று. ஊர்த்தலைவர்களும் ஜமீன்தார்களும், தல அதிகாரி களைப் புறக்கணித்துத் தங்கள் அதிகாரத்தை நிலை நாட்டினர். நாடு முழுவதும் குழப்பம் மலிந்திருந்தது. குறிப் பாக ஆக்ரா மாகாணத்தில் இடைவிடாத ஒழுங்கீனம் இருந்துவந்தது. பேரரசின் ஆதரவு மறுக்கப்பட்டதால் கலையும் கல்வியும் கடைநிலை உற்றன. எந்த ஒரு நினைவுச் சின்னமும், அழகாக எழுதப்பட்ட கையெழுத்துப் பிரதியும் அல்லது அழகு மிக்க படமும் ஔரங்கசீப்பின் ஆட்சியை நினைவூட்டுபவையாக இல்லை. தக்கணத்தில் முடிவில்லாமல் நடைபெற்றுவந்த போர் களால் அவருடைய கஜாஞ காலியாயிற்று. அரசாங்கம் கடன் வாங்க வேண்டிய நிலைக்கு உள்ளாகியது. சம்பளப் பாக்கி வராத தால் பட்டினி கிடந்த படைவீரர்கள் கலகம் செய்யத் தொடங்கினர். அவருடைய ஆட்சியின் கடைசியில் சில ஆண்டு களில், அதுவரை திறமையான வங்காளத் திவாஞக முர்ஷக் குலிகாஞல் ஒழுங்காக அனுப்பப்பட்டுவந்தபணந்தான்பேரரசரின் வீட்டுச் செலவுக்கும், அவருடைய படைக்கும் ஒரே ஆதரவான வருவாயாக இருந்தது. அதஞல் அது ஆர்வத்துடன் எதிர் பார்க்கப்பட்டுவந்தது. 'ஸ்பானியப் புற்று நோய்தான் என்னை அழித்துவிட்டது' என்று முதலாம் நெப்போலியன் (Nepoleon I)

சொல்வது வழக்கம். அது போலவே ஔரங்கசீப்பை அழித்தது தக்கணப் புற்றுநோய் எனலாம். பேரரசர் மராத்தியர்களை அடிப்படுத்தவோ, அவர்களுடைய நாட்டை வெல்லவோ தவறி விட்டார். 1691ஆம் ஆண்டளவில் எதிராகத் தேசிய எதிர்ப்புப் போரைத் தொடர்ந்து நடத்திவந்தனர். முதலில் ராஜாராம் என்பவரின் வேறு சில திறமைவாய்ந்த மராத்தியத் தலைவர்களின் தலைமையிலும், பின்பு 1700-ல் ராஜாராம் மறைந்தபின் வீரமிக்க விதவையான தாராபாயின் தலைமையிலும் மராத்தியர்கள் போரை நடத்திவந்தனர்.

## 9. ஔரங்கசீப்பின் இறுதிக் காலம்

இவ்வாறு வருடங்கள் உருண்டோடிக்கொண்டிருக்க, ஔரங்க சீப் தம் கண் முன்பேயே தோல்விமேல் தோல்வி குவிந்து வருவதை யும், தம் பேரரசு முற்றிலும் வலுவிழந்து வருவதையும் கண்டார். பேரரசினைப் பற்றிய எதிர்காலத்தை எண்ணி அவர் மனம் பெருங் கவலை அடைந்தது. அவர் மிகு பெருந்துன்பம் உடையவரானார். கிளர்ச்சி செய்துகொண்டிருந்த புதல்வர்களுக்குப், பேரரசைத் துண்டு போட்டு அதைக் காப்பாற்ற வேண்டும் என்று கூறிய அவருடைய அறிவுரையை யாரும் காதில் போட்டுக்கொள்ள வில்லை. தம்முடைய தோல்வியை நன்கு உணர்ந்துகொண்டும், வரப்போகும் தடுக்க முடியாத பேராபத்தைப் பற்றிப் பெருங் கவலை கொண்டவராயும் அவர் தம்முடைய மகன் ஆஸமுக்கு இவ்வாறு கடிதம் எழுதினார். 'நான் தனியாக வந்தேன்; தனி யாகவே போகிறேன். நாட்டுக்கும் மக்களுக்கும் நான் நல்லது செய்யவில்லை. எதிர்காலத்தைப் பற்றி எனக்கு எவ்வித நம்பிக் கையும் இல்லை.' காம்பக்ஷுக்கு (Kam Bakhsh) அவர், என்னு டைய குறைபாடுகளாகிய சுமையை நான் சுமந்து செல்கிறேன். வருவது வரட்டும். நான் என் போக்கிலேயே போகிறேன்' என்று எழுதினார். இக் கடிதங்கள் காட்டும் ஆழ்ந்த பரிதாபம் ஒவ் வொரு மனித உள்ளத்தையும் கட்டாயம் நெகிழச் செய்வதாய் இருக்கின்றன. 'தன்னந் தனியாக மரணப் படுக்கையில்' கிடந்த வயது முதிர்ந்த பேரரசர்மேல் இரக்கம் காட்டச் செய்கிறது. பெருங்கவலைகளாலும், கடின உழைப்பாலும் அழிந்து சிதைந்த மனத்தையும் உடலையும் அடைந்த பேரரசர் அகமத்நகரில் 1707 மார்ச்சு 3ஆம் நாள் காலையில் 'உதட்டில் முஸ்லிம் பச்சாதாபத் துடன் (செய்த குற்றங்களை ஒப்புக்கொள்ளும் சொற்களுடன்) உயிர் நீத்தார்.' அவருடைய சவம் தௌலதாபாத்துக்கு எடுத்துச் செல்லப்பட்டுப் புகழ் பெற்ற முஸ்லிம் முனிவர் புர்ஹானுதீனின் கல்லறை இருந்த நிலப்பகுதியில் புதைக்கப்பட்டது.

## 10. ஔரங்கசீப்—மனிதரும் ஆட்சியாளரும்

ஔரங்கசீப்பைப் போன்ற ஆளுமையுடையாரின் பண்பு நலனையும், கொள்கையையும் மதிப்பிடுவது உண்மையிலேயே ஒரு சிக்கலான செயலாகும். சிலர் அவருடைய தவறுகளை மட்டும் முக்கியமாக எடுத்துக் கொண்டு, அவருடைய நல்ல இயல்புகளைப் பெரிதும் புறக்கணித்துவிடுகின்றனர். அவர் சிம்மாசனத்தை அடைந்த விதத்தைப் பற்றிக் கடுமையாகக் கண்டித்துக் கூறுவதற்குத் தனியாக அவரை மட்டும் ஏன் தேர்ந்தெடுக்க வேண்டும் என்பது தெரியவில்லை. இதில் அவர் இந்தியாவில் தைமூரித்துகள் பரம்பரையாகப் பின்பற்றிவந்த பழைய மரபையே பின்பற்றினார் என்று கொள்ளவேண்டும். சிம்மாசனப் போருக்காக எல்லாப் பழியையும் அவர்மேல் சுமத்துவது நியாயமற்றதாகும். அவருடைய சகோதரர்களுள் எவரும் எவ்வித ஏற்பாட்டுக்கும் இணங்காமல் இருந்தமையால், எப்படியும் அவருக்கே சிம்மாசனம் கிடைக்கும் நிலையே பின்னரும் ஏற்பட்டிருக்கும். ஷாஜஹான் தமக்கு எதிரிகளாக வரக்கூடிய எல்லாரையும் அழித்து விட்டிருக்க ஔரங்கசீப் தம்முடைய எல்லா மருமக்களையும் கொன்று விடாதிருந்ததை நாம் மறந்துவிடக்கூடாது. உண்மையில் ஔரங்கசீப் வயது முதிர்ந்த தம் தந்தையைக் கடுமையாக நடத்தியதற்குச் சமாதானம் கூற முடியாது. ஆனால், இந்திய வரலாற்றிலும், பிற நாடுகளின் வரலாற்றிலும் பல எடுத்துக் காட்டுகள் காணப்படுவதைப்போல, ஔரங்கசீப் தம் தந்தையைக் கொல்லாமல் விட்டிருந்தது குறிப்பிடத்தக்கது.

ஔரங்கசீப்பின் சொந்த வாழ்க்கை எளிமையாகவும், பக்தி நிறைந்ததாயும், புலனடக்கம் உள்ளதாயும் இருந்தது. அவர் தம் உணர்ச்சிகளுக்கு அடிமையாக இருக்கவில்லை. தடை செய்யப் பட்ட உணவு, குடி அல்லது உடைகளைக் கட்டாயமாக நீக்கிவைத்திருந்தார். அவருடைய மனைவிகளின் எண்ணிக்கை 'குர்ரான் அனுமதித்த நான்கு என்ற எண்ணிக்கைக்கும் குறைவாகவே இருந்தது.' அந்தக் காலத்தில் ஒரு பேரரசரின் புலனடக்கத்திற்கு அது ஒரு போற்றத்தக்க எடுத்துக்காட்டாகவே இருந்தது. எனினும், அது தாரா ஷுக்கோ, குஸ்ராவ் இவர்களின் தரத்திற்குக் குறைவாகவே இருந்தது. அவர் முஸ்லிம் இறையியலின் ஆர்வமிக்க மாணவராயிருந்தார். அழகிய கையெழுத்தில் எழுதும் கலையில் (Calligraphy) வல்லவராயிருந்தார். 'புண்ணியக் கடவுள் நெறியில் தம் குழந்தைகளுக்குக் கல்வி கற்பிக்க முயன்றார். ஆனால், அவர் கலையையும் இலக்கியத்தையும் சிறிதும் ஆதரிக்காமற் போனது வருந்தத்தக்கது. அவருடைய ஆதரவைப் பெற்ற ஒரே இலக்கிய நூல் ஃபதாவா-இ-ஆலம்கீர் (Fatawa-i-Alamgiri)

என்பதுதான். அது 'இந்தியாவில்இயற்றப்பட்ட முஸ்லிம் சட்டத்தின் மிகப்பெரிய தொகுப்புக் களஞ்சியம்' என்று கருதப்பட்டு வருகிறது. ஔரங்கசீப் பக்தி மிக்க ஒரு முஸ்லிம். சமயத் தூய்மையாளரின் பேரார்வத்துடன் தூய குர்ரானில் விதிக்கப்பட்ட கட்டளைகளின்படியே மாறுது நடந்துவந்தார். ஒருமுறை பால்க் போரில் அவரைச் சுற்றிலும் போர் நடந்துகொண்டிருந்தாலும் தொழுகை நேரத்தில் மண்டியிட்டுத் தம் வழிபாட்டை முடித்துக் கொண்டார். அவருடைய சமயக் கொள்கைகளில் அவர் மிகவும் உண்மையாக இருந்தார் என்ற அவரது பெருமையை யாரும் மறுக்க முடியாது. ஆனல், அளவுக்கு மீறிய இந்த மதத் தூய்மைப் பற்று, அவரைக் கடுமையும் விடாப்பிடியும் உள்ளவராக ஆக்கி விட்டது. இதயத்தின் மென்குணங்களாகிய ஊற்றை வற்றச் செய்துவிட்டது. இவ்வாறு 'அவர் மண்டைக் கனத்தால் செய்யப் படும் ஒரு நூறு குற்றங்களை ஈடு செய்துவிடக்கூடிய குணங்களான அனுதாபம், கற்பனை, விரிந்த மனப்பான்மை, செயல்பாட்டு முறைகளைத் தேர்ந்தெடுப்பதில் இளக்கம் ஆகியவை இல்லா தவராய் இருந்தார்'.

எதற்கும் அஞ்சாத தறுகண்மை மிக்க நோக்கம், வீரம், ஈடேறுவதில் விடாப்பிடியுடன் இருக்கும் உறுதி மனப்பான்மை, இடைவிடா உழைப்பு இவை அவருடைய முக்கியமான குணங்களுள் சிலவாகும். அவருடைய படையெடுப்புப் போர்கள் அவருடைய சிறப்புமிக்க தைரியத்திற்குப் போதிய சான்று அளிக்கின்றன. அவர் தம் பகைவர்களைச் சிக்கலுக்குள்ளாக்கித் திகைக்க வைத்த முறைகளைப் பார்க்கும்போது போரியல் சூழ்ச்சித் திறனிலும், ஆட்சிக் கலையிலும் மிகச் சிறந்த வல்லுநராகக் காணப் படுகிறார். அவருடைய ஓயாச் சக்தி அசாதாரணமாய் இருந்தது; அவருடைய உழைப்புச் சலியாத உழைப்பாயிருந்தது. அவர் தாமே எல்லா விண்ணப்பங்களையும், முறையீடுகளையும் படித்தார். தம்முடைய கையாலேயே அவற்றிற்கு விடை அல்லது தீர்ப்புகளை எழுதியனுப்பினர். ஔரங்கசீப்பின் ஆட்சிக் காலத்தில் ஓர் இத்தாலிய மருத்துவரான ஜெமல்லி கரேரி (Gemelli-Careri) என்பவர் அவரை 1695-ல் பார்த்தார். அப்போது ஔரங்கசீப்பிற்கு வயது எழுபத்தேழு. 'மூக்குக் கண்ணாடியில்லாமல் அவர் தம் சொந்தக் கையாலேயே விண்ணப்பங்களுக்கு மேலொப்பமிடுதலைக் கண்டு வியந்தேன். மகிழ்ச்சி நிறைந்த புன்முறுவல் தவழும் முகத்தைப் பார்க்கும்போது தம் பணியில் அவர் மிகப் பெரிதும் மகிழ்ச்சியுடன் ஈடுபட்டிருந்ததுபோலக் காணப்பட்டார்' என்று அந்த இத்தாலிய மருத்துவர் குறிப்பிட்டுள்ளமை இங்குக் கருதத் தக்கதாகும்.

உள்ள வலிமையும் குணவியல்பு வன்மையும் பெற்றிருந்த போதிலும், அவர் இந்தியாவின் அரசாட்சியாளராக இருந்ததில் தோல்வியுற்றுர் என்றே சொல்ல வேண்டும். ஒரு பேரரசரின் பெருமையும் புகழும் மக்கள் எல்லாருடைய ஒருமுகமான முன்னேற்றத்தையும் பொறுத்தனவே என்பதை அவர் உணர்ந்த தாகத் தெரியவில்லை. தம்முடைய மதத்தில் ஆழ்ந்த பெரும் பற்றுக் கொண்டிருந்த அவர் குடிமக்களின் முக்கியமான பிரிவினரின் உணர்ச்சிகளைப் புறக்கணித்தார். அதனுல் தம்முடைய பேரரசுக்கு பகைமைச் சக்திகள் ஏற்படுமாறு செய்துவிட்டார். உண்மையில் மௌரியர்களின் காலத்திலிருந்து இந்திய வரலாற்றைப் பார்க்கும் போது, பல்வேறு முரண்பாடுகள் மலிந்த மக்களிடையே, ஓர் இன்ப இணக்கத்தை ஏற்படுத்தக்கூடிய சமயத்துறை பற்றிய பரந்த மனப்பான்மை கடைப்பிடிக்கப்படுவதைப் பொறுத்தே நாட்டில் அரசியல் முன்னேற்றம் ஏற்பட்டு வந்தது என்பது புலனுகும். மதவேறுபாடுகளை வலியுறுத்திக்கொண்டே ஒன்றுபட்ட ஒரே இந்தியாவை உருவாக்குவது ஒன்றும் பயனளிக் காத வீண் கனவாகவே முடியும். மேலும், ஔரங்கசீப்பின் தளரா உழைப்பும் கடின உழைப்புச் செய்யுந்திறனும் ஒருவிதத் தில் அவருக்கு எதிராகவே இருந்து அவர் மனத்தில் அளவுக்கு மீறிய அவநம்பிக்கையும், அவருடைய அதிகாரிகளின்மீது அளவுக்கு மீறிய அவநம்பிக்கையும் கொள்ளச் செய்தன. இதனுல் அவர் அரசாங்கத்தின் மிகச் சிறுசெயல்களிலும் அடிக்கடி தலையிட நேர்ந்தது. இதனுல் தல அதிகாரிகள் எல்லோரும் எப்போதும் அவருடைய ஆணையையே எதிர்பார்த்துக்கொண்டிருப்பவர்களா யும் தன்னூக்க உணர்ச்சியற்றவராயும், பொறுப்புணர்ச்சி, வேலைத் திறமை இல்லாதவராயும் மாறிவிட்டனர். 'மிகப் பரந்த முரண் பாட்டுக் கூறுகள் நிறைந்த இந்தியா போன்ற பேரரசில் இப்படிப் பட்ட நிலைமை ஆட்சித்துறை அழிவுக்காட்டை' அல்லது வேறு எதனையும் விளைவிக்காது. பழமைப்பற்று மிக்க ஒரு ஸுன்னி முஸ்லிமின் கண்ணேட்டத்தில் காபிகான் கீழ்வரும் மதிப்பீட்டைத் தருகிறுர். 'தைமூர் குடும்பத்தின் எல்லாப் பேரரசர்களிலும் இல்லை—டில்லிப் பேரரசர்கள் எல்லாரிலும் சிக்கந்தர் லோடி காலத் திலிருந்து ஔரங்கசீப்பைத் தவிர வேறு எவரும் பக்தி, கண்டிப்பு நீதி இவற்றுக்காக அவ்வளவு புகழ் வாய்ந்தவர் இல்லை. தைரியம் துன்பத்தை நீண்டகாலம் பொறுத்துக்கொள்ளல், சிறந்த தீர்ப்பு இவற்றில் அவர் ஒப்பாரும் மிக்காரும் இல்லாதவராய் இருந்தார். ஆனுல், அவர் சட்டத்தின் ஆணைக்குக் கொடுத்த மதிப்பைத் தண்டனையின் தரத்தை உயர்த்துவதற்கோ தாழ்த்துவதற்கோ பயன்படுத்தவில்லை. தண்டனை இல்லாமல் ஒரு நாட்டின் ஆட்சி முறை சரிவர நடைபெறுது. அதிகாரத்திற்கான போட்டியினுல்

அவருடைய பிரபுக்களிடையே வேறுபாடுகள் தோன்றின. அதனுல் அவர் போட்ட ஒவ்வொரு திட்டமும் சிறிதும் பயனளிக்காமல் போயின. மேற்கொண்ட ஒவ்வொரு புது முயற்சியும் நிறைவுறுவதற்கு நீண்டகாலம் தேவைப்பட்டது; அவற்றின் நோக்கங்களும் நிறைவேருமல் போயின.' ஔரங்கசீப் பல தங்கமான குணங்களைப் பெற்றிருந்தார். ஆனுல், அவர் ஒரு வெற்றிமிக்க அரசராக இருக்கவில்லை. அவர் ஒரு பெரிய போர் வீரராக இருந்தார்; ஆனுல், முன்னறியும் திறனுடைய மக்கள் தலைவராக அவர் இருக்கவில்லை. கூர்த்த மதியுடைய ராஜதந்திரியாகவே இருந்தார் அவர். ஆனுல், அறிவுமிக்க நாட்டு நலன் விரும்பும் ஒருவராக அவர் இருக்கவில்லை. சுருங்கக் கூறின், தம் காலத்தவர்கள் அல்லது எதிர்காலத்துச் சந்ததியினரின் எண்ணங்களையும் வாழ்க்கையையும் உருவாக்கும் சட்டங்களை இயற்றியும் கொள்கைகளைப் புகுத்தியும் வாழ்ந்த முகலாயப் பேரரசர்களுள் ஒரே ஒருவரான அக்பரைப் போன்ற அரசியல் மேதையாக அவர் விளங்கவில்லை. பெரும்பாலும் பேரரசரின் அரசியல் முன்னறிவின்மையால்தான் அவர் இவ் வுலகத்தை விட்டு நீங்குவதற்கு முன்பே முகலாயப் பேரரசின் வீழ்ச்சிக்கான அறிகுறிகள் தோன்றின. அவருக்குப் பின்வந்த பலவீன மிக்க அரசர்கள் சீர்குலைவை விரைவுபடுத்தத்தான் செய்தார்கள். மதத் தூய்மை கொண்டிருந்த பேரரசரின் ஆட்சி ஒரு பெரிய அவலத்திலேயே முடிந்தது.

## 11. பதினேழாம் நூற்றுண்டில் மராட்டியர்களும் முகலாயர்களும்

### அ. மராட்டியர்களின் எழுச்சி

முன்பு விசயநகர ஆட்சி செய்தது போலவே, பதினேழாம் நூற்றுண்டின் இரண்டாம் பகுதிக்காலத்தில் மராட்டிய ஆட்சியின் எழுச்சியானது இந்திய அரசியலில் ஒரு முக்கியமான திருப்பத்தை உண்டாக்கியது. இந்திய வரலாற்றில் மத்திய காலங்களின் தொடக்கத்தில் மராட்டியர்கள் அரசியல் பண்பாட்டுச் செயல்களில் மிகச் சிறந்த மரபுகளைப் பெற்றிருந்தனர். அப்போது அவர்கள் தேவகிரி யாதவர்களின்கீழ் தேசியத்தின் பொருட்டுப் போராடினர். அலாவுதீன் காலத்தில் இராமச்சந்திர தேவன் என்ற யாதவர் வீழ்ச்சியுற்றதும் மராட்டியர்களும் தங்கள் சுதந்திரத்தை இழந்தனர். ஆனுல், நாற்பதாண்டுகளுக்குள் அவர்கள் பாமினி இராச்சியத்திலும், பின்பு அடுத்து வந்த சுல்தானியங்களிலும் மீண்டும் பங்கெடுத்துக்கொள்ளத் தொடங்கினர். பதினேழாம் நூற்றுண்டில் அவர்கள் ஒரு தேசிய

நாடாக ஒழுங்குபட்டு அமைந்தனர். இந்த மராட்டிய தேசிய ஒற்றுமைக்குத் தலைவர் சிவாஜி என்பதில் சிறிதும் ஐயம் இல்லை. ஆனல், அவருடைய புகழ் பெற்ற சாதனைகள் நிறைவேறுவதற்குப் பலவகையான காரணங்கள் இருந்தன என்பது கவனிக்கத் தக்கது.

முதலாவதாக, மராட்டியர்களின் நிலவியல் அமைப்பு அவர்களுடைய குணச் சிறப்பையும் வரலாற்றையும் உருவாக்குவதில் பேராதிக்கம் உடையதாய் இருந்தது. அது வடக்கிலிருந்து தெற்காகச் சயாத்திரி (Sahyadri) மலைத் தொடராலும், கிழக்கிலிருந்து மேற்காக விந்திய சாத்பூரா மலைத் தொடரினாலும் சூழப்பட்டிருந்தது. இவ்வாறு இரு பக்கங்களிலும் மலைத் தொடர்களால் சூழப்பட்டிருந்தது. மேலும் அது நர்மதை, தபதி நதிகளால் காப்பாற்றப்பட்டுவந்தது. எண்ணில்லாத, எளிதில் தற்காத்துக் கொள்ளக்கூடிய மலைக்கோட்டைகளும் இருந்தன. மத்திய நாடு 'ஒரு குதிரைப்படையின் படையெடுப்பாலோ அல்லது ஓர் ஆண்டு தொடர்ந்து போரிட்டு வந்ததாலோ வெல்லப்பட முடியாததாயும் இருந்தது.' கரடு முரடான, விளைச்சல் கொடுக்காத அந் நாட்டு நிலமும் பருவ காலத்தில் பெய்யாத அல்லது சிறிதே பெய்கிற மழையும் அந் நாட்டின் மிகச் சிறு உழவுப் பொருள் வளங்களும் மராட்டியர்களை ஆடம்பரம், சோம்பல் போன்ற தீய குணங்கள் பற்றாதவாறு செய்ததுடன், 'தன்னம்பிக்கை, உள்ள உரம், விடாமுயற்சி, உறுதியான எளிமை, முரட்டுத்தனமான நேர்மை, சமுதாயச் சமத்துவ உணர்ச்சி இவற்றின் விளைவாக மனிதனை மனிதனாக மதிக்கும் மாண்பு' போன்ற குணங்களை வளர்த்துக்கொள்ளவும் உதவின. இரண்டாவது, மராட்டிய மதச் சீர்திருத்தவாதிகளான ஏகநாத், துக்காராம், ராம்தாஸ், வாமன பண்டிதர், ஆகியோர் அடுத்தடுத்துப் பல நூற்றாண்டுகளாகக் கடவுள் பக்திக் கொள்கையையும் சாதி, மதிப்பு, செய்யும் தொழிலின் சிறப்பு இவற்றால் வேறுபாடின்றிக் கடவுள் முன்னிலையில் எல்லா மனிதரும் சமம் என்ற கொள்கையையும் போதித்து, அவர்கள் நாட்டில் மறுமலர்ச்சி அல்லது தன் விழிப்பு விதைகளை விதைத்துவந்தனர். பொதுவாக ஒரு நாட்டில் தன் விழிப்புணர்ச்சி ஏற்படுவது அரசியல் புரட்சிக்கு முன்னோடியாகும். சிவாஜியின் குருவான சமர்த்த ராம்தாஸ் அவருடைய நாட்டு மக்களின் உள்ளத்தில் பெரும் விழிப்புணர்ச்சி ஏற்படும்படி செய்தார். சமுதாயச் சீர்திருத்தம், தேசிய மறுமலர்ச்சி முதலிய குறிக்கோள்கள் மடங்களில் இருந்த அவருடைய சீடர்கள்மூலமும் புகழ்பெற்ற அவருடைய நூலான தசபோதம் (Dasabotha) மூலமும் அவர்கள் உள்ளத்தில் நன்கு பதியுமாறு செய்தார். மூன்றாவதாக இலக்கியம், மொழி இவை மராட்டிய மக்களிடையே

மற்றொரு பிணைப்பை ஏற்படுத்தியது. சமயச் சீர்திருத்தக்காரர்களால் பக்திப் பாடல்கள் மராத்திய மொழியில் இயற்றப்பட்டன. அதன் விளைவாகப் பதினைந்து பதினாறும் நூற்றாண்டுகளில் அந் நாட்டு மக்களின் உள்ளத்தில் சீரிய பேரார்வ உணர்ச்சிகளை எழுப்பக்கூடிய வலிமைமிக்க இலக்கியம் வளர்ந்தது. சர் ஜே.என். சர்க்கார் கூறுகிறார், 'இவ்வாறு சிவாஜியினால் அரசியல் ஒற்றுமை ஏற்படும் முன்பே மகாராட்டிரத்தில் பதினேழாம் நூற்றாண்டில் மொழி, கொள்கை, வாழ்க்கை இவற்றில் குறிப்பிடத்தக்க கூட்டுறவு ஏற்பட்டுவிட்டது. அவரால் ஒரு தேசிய மராட்டிய நாடு தோன்றினமை, அவர்களுடைய புதல்வர்களின் தலைமையில் டில்லியிலிருந்து வந்த படையெடுப்பாளர்களிடம் நீண்ட போராட்டம், பேஷ்வாக்களின்கீழ் மராட்டியப் பேரரசு விரிவடைந்தமை முதலியவை மக்களின் ஒற்றுமைக்கு வேண்டிய மீதியை நிறைவு செய்துவிட்டன.'

தக்கணச் சுல்தானியங்களில் பல பதவிகளில் இருந்தமையால் மராட்டியர்கள் அரசியல் படைத்துறை இவற்றின் ஆட்சிமுறை பற்றிமுன்னரே சிறிது அனுபவம் பெற்றிருந்தனர். சிவாஜியின் புகழ்பெற்ற தந்தை ஷாஜி அகமத்நகர் சுல்தானின் படையில் ஒரு போர் விரராகச் சேர்ந்து தம் வாழ்க்கையைத் தொடங்கினார். படிப்படியாக அவர் உயர்நிலையடைந்தார். அந் நாட்டில் பரந்த நிலப்பரப்புகளை வென்றார். நிஸாம் ஷாஹியின் ஆட்சியின்கடைசிக் காலத்தில் அரசனை ஆக்குபவராகவும் திகழ்ந்தார். ஆனால், அவருடைய வெற்றி மற்றவர்களின் பொறாமையைக் கிளப்பிவிட்டது. ஷாஜஹானால் அகமத்நகர் சேர்த்துக்கொள்ளப்பட்ட பிறகு,1636-ல் பீஜப்பூர் அரசாங்க ஊழியத்தில் அவர் நுழைந்தார். இங்கும் அவர் ஓரளவு புகழைப் பெற்றார். கர்நாடகத்தில் பரந்த ஒரு ஜமீனைப் பெற்றார். மேலும், அகமத்நகர் அரசாங்கத்தின் ஊழியர் என்ற முறையில் பூனாவில் அவருக்கு ஒரு ஜாகீர் முன்பிருந்தே இருந்துவந்தது.

### ஆ. சிவாஜியின் வாழ்க்கை

சிவாஜி ஜுன்னாருக்கு அருகில் உள்ள ஷிவ்னர் (Shivner) மலைக் கோட்டையில் 1630-ல் பிறந்தார் என்று சில ஆசிரியர்கள் கருதுகின்றனர். தற்காலத்துச் சில வரலாற்றாசிரியர் அவர் 1627-ல் பிறந்ததாகச் சொல்கின்றனர்.[1] சிவாஜியையும், அவருடைய

[1] சர்க்கார் எழுதிய சிவாஜி (Sarkar's Shivaji, J. I. H. 1927 பக்கம் 177-197.) தசரத சர்மா அவர்கள் சிவாஜியின் பிறப்பைப்பற்றி அக் காலத்தில் எழுதி வைக்கப்பட்ட ஒரு பதிவேட்டை (record) அதாவது பிக்கானீர்க்கோட்டை நூலகத்தில் பாதுகாத்து வைக்கப்பட்டுள்ள சிவாஜியின் ஜாதகத்தை வெளிக்கொணர்ந்துள்ளார் (J.B.O.R.S. 1934 ஜுன்). அதன்படி சிவாஜி பிறந்தது சாம்வத் 1686ஆம் ஆண்டாகும்.

தாயான ஜீஜாபாய் என்பவரையும் தாதாஜி காண்டேவ்(Dadaj Khonddev) என்ற திறமைமிக்க பிராமணர் ஒருவரின் கண் காணிப்பில் விட்டுவிட்டு ஷாஜி தம் இரண்டாவது மனைவியுடன் தம்முடைய புதிய ஜாகீருக்கு இடம் மாறினர். கணவரால் புறக் கணிக்கப்பட்டவளும், சிறப்பு மிக்க அறிவும், பண்பும், நல் லொழுக்க உள்ளமும் கொண்ட ஜீஜாபாய் தம்முடைய குழந்தை யின் மனத்தில் உயர்ந்த, எழுச்சி ஊட்டக்கூடிய கருத்துகளைப் பழங்காலத்திய வீரம், ஆன்மீகம், தீரம் இவை பற்றிய கதைகள் கூறுவதன்மூலம் புகுத்தியதுடன் மதத்தைக் காப்பாற்றும் ஆர்வத் தையும் அவருள்ளத்தில் தூண்டிவிட்டார். 'உலகில் அருஞ் செயல் புரிந்த பெரியோர்கள் தங்கள் அன்னைமார்களினல் உயர்ச்சி யடையக் கூடுமாயின், அதற்குச் சிறந்த உதாரணமாகச் சிவாஜியின் வாழ்க்கையை உருவாக்குவதில் முதன்மையான முக்கியத்துவம் பெற்ற ஜீஜாபாயின் செல்வாக்கை எடுத்துக்காட்டலாம்' என்று ரானடே(Ranadey) கூறியிருக்கிறார். இதனோடு தாதாஜி காண்டே வின் செல்வாக்கும் கலந்து சிவாஜியைத் தைரியசாலியாகவும், துணிச்சலாளியாகவும் செய்தது. சிவாஜி முறையாக இலக்கியக் கல்வி பெற்றாரா என்பது நமக்குத் தெரியாது. ஆனல், 'துணிவு நிரம்பிய, துணிகரச் செயல் விரும்பும் வீரராக வளர்ந்தார்.' கொள்ளையடிக்கும் வெறும் விருப்பத்தினலன்றி, அயல்நாட்டுக் கொடுங்கோன்மை என்று தாம் கருதியதை ஒழித்துக்கட்டித் தம் நாட்டின் விடுதலைக்காக உழைக்கவேண்டும் என்ற உண்மை ஆர்வம் கொண்டவராய் ,அவர் வாழ்ந்தார். மேற்குக் கரையில் தொண்ணூறு மைல் நீளமும் பன்னிரண்டு முதல் பதினன்கு மைல் அகலமும் உடைய மாவல்(Maval) நாட்டு மலைமக்களுடன் இளமை யிலேயே நெருக்கமான உறவு கொண்டிருந்தமை பிற்காலத்தில் அவருக்கு அளவிறந்த உதவியாய் இருந்தது. ஏனெனில், மாவல் நாட்டு மக்கள் 'அவருடைய மிகச் சிறந்த போர்வீரர்களாயும், முதன்மையான தோழர்களாயும், அவருடைய பற்றுறுதிமிக்க தளபதிகளாகவும்' மாறினர். தாயின் வழியைப் பார்க்கும்போது அவர் தேவகிரியை ஆண்ட யாதவர்களின் சந்ததியினர் ஆவர். தந்தையின் வழியைப் பார்க்கும்போது அவர் மேவார் நாட்டு வீரம் மிக்க சிசோதியர்களின் பரம்பரையைச் சேர்ந்ததாகக் கூறிக் கொண்டார். இவ்வாறு புகழ் மிக்க பரம்பரையைச் சேர்ந்தவர் என்ற உணர்ச்சியும், இளமைக் காலப் பயிற்சியும், சூழ்நிலையும் இணைந்து இளமை பொருந்திய மராட்டிய வீரரான அவரிடத்தில், ஒரு சுதந்திர இராச்சியத்தை நிறுவும் பேரார்வ உணர்ச்சிகள் தோன்றின. தமக்காக அவர் ஒரு 'சுதந்திர வாழ்க்கையை' மேற் கொண்டார். அது இன்னல்களும் இடர்பாடுகளும் நிறைந்த தாயிருந்தாலும், 'அவர் வெற்றியடைய முடியுமானல் கனவிலும்

கருதாத நன்மைகளைத் தருவதாயும் துன்பப்பட்ட அளவிற்குப் பயன் தரத்தக்கதாயும் இருந்தது.'

தக்கணச் சுல்தானியங்களின் பலவீனப்பட்டுக்கொண்டே போகும் நிலையும், வடக்கே பேரரசினர் தொடர்ச்சியாக நீண்ட காலம் செய்துவந்த போர்களும் மராட்டிய அரசர் தோன்று வதற்கு மிகவும் சாதகமாயிருந்தன. 1646-ல் சிவாஜி தோர்ணாக் (Torna) கோட்டையைக் கைப்பற்றினார். அதன் கிழக்கே ஐந்து மைல் தூரத்தில் விரைவிலேயே ராஜ்கர்(Rajgarh)கோட்டையைக் கட்டினார். இதுபோன்ற இடர்ப்பாடான செயற்பாடுகளை விரும் பாதவராய்க் காணப்பட்ட தாதாஜி காண்டேவ்(1647-ல்) இறந்த பிறகு, சிவாஜி பரம்பரையாகக் கோட்டைகளைப் பெற்றிருந்தவர் களிடமிருந்தும், பீஜப்பூர் அதிகாரிகளிடமிருந்தும் வன்முறை கையூட்டு அல்லது தந்திரம் மூலம் பல கோட்டைகளை வாங்கினார்; பல புதிய கோட்டைகளையும் கட்டினார். இவ்வாறு அவர் சங்கிலித் தொடர்போன்று பல மலைக்கோட்டைகளால் பாதுகாக்கப்பட்ட ஒரு நிலப்பகுதியை உரிமையாக அடைந்தார். அவருடைய தந்தை பீஜப்பூர் அரசாங்கத்தால் சிறையிலிடப்பட்டுப் பின் மகனின் நல்ல நடத்தைக்கு உறுதி கூறிய பின் விடுதலை செய்யப்பட்டதால் அவர் சில ஆண்டுகள்(1649—1655) பீஜப்பூருக்கு எதிராகச் செய்துவந்த முயற்சிகளை நிறுத்திவைக்க நேர்ந்தது. ஆனால், இந்தச் சமயத்தில் அவர் தம்முடைய வெற்றிகளை ஒரு நிலைப்படுத்திக் கொண்டார். சிறிய மராட்டியத் தாலுக்காவான ஜாவ்லி(Javli) என்ற பகுதியின் அரைச் சுதந்திர இளவரசராயிருந்த சந்திரராவ் மூர்(Chandra Rao More) என்பவரை அவருடைய முகவருள் (agents) ஒருவரைக் கொண்டே கொல்வித்து அப் பகுதியை 1656 ஜனவரியில் சேர்த்து கொண்டார். இந்தச் சமயத்திற்குள் சிவாஜியின் பரம்பரைச் சொத்தின் பரப்பும் வருவாயும் இரண்டு மடங்குக்கும் மேலாயின. ஔரங்கசீப்பும் அவருடைய படைகளும் பீஜப்பூர் படையெடுப்பில் ஈடுபட்டிருந்த வாய்ப்பை நல்லமுறையில் பயன்படுத்திக்கொண்டு அவர் முதன் முதலாக 1657-ல் முகலாயரைப் பகைத்துக்கொண் டார். முகலாய மாவட்டங்களான அகமத்நகர், ஜுன்னார் இவற் றைத் தாக்கினார். ஜுன்னார் நகரைக் கொள்ளையிட்டார். உடனடி யாக ஔரங்கசீப் அந்தப் பகுதிகளில் இருந்த தம்முடைய அதிகாரி களைப் புது வலிமையுடையவராக்கினார். அதனால் சிவாஜி தோற் கடிக்கப்பட்டார். ஆதில் ஷா ஔரங்கசீப்புடன் அமைதி உடன் படிக்கை செய்துகொண்டபோது சிவாஜியும் ஔரங்கசீப்புக்கு அடிபணிந்தார். ஔரங்கசீப் சிவாஜியை ஒருபோதும் நம்பவில்லை. ஆனால், அவருடைய தந்தையின் நோய் காரணமாக அவர் வடக்கே செல்வது இன்றியமையாததாய் இருந்தமையின்

ஒருவாறு சமாதான உடன்படிக்கை செய்துகொண்டார். பிறகு சிவாஜி வட கொங்கணத்தின்பக்கம் தம் பார்வையைத் திருப்பினர். கல்யாண், பிஹ்வாண்டி (Bhiwandi), மாஹுலி (Mahuli) இவற்றைப் பிடித்தார். மாஹத் (Mahad) வரையில் தெற்கே சென்றார்.

உள்நாட்டுக் கலகத்திலிருந்தும், முகலாயப் படையெடுப்பின் அண்மைத் தாக்குதலிலிருந்தும் தற்காலிகமாக விடுதலை பெற்றிருந்த பீஜப்பூர் சுல்தான் ஒரேயடியாகச் சிவாஜியின் வலிமையை ஒழிக்க முடிவு செய்து 'தம் இராச்சியத்தின் முன்னணியான பிரபுக்கள் சிலருள் ஒருவரான அஃப்ஸல்கான் (Afzal Khan) என்பவரின் தலைமையில் கி.பி. 1659-ன் தொடக்கத்தில் கலகக்காரனை (சிவாஜியை உயிருடனே, உயிரைப்போக்கியோ) கொண்டு வருக' என்று ஒரு பெரும் படையை அனுப்பினர். அஃப்ஸல்கான் சதாராவின் (Satara) வடக்கே இருபது மைல் தூரத்திலிருந்த வைய் (Wai) என்ற இடத்தைப் பதினைந்து நாள்களுக்குள் அடைந்தார். சிவாஜியை அவருடைய பிரதாப்கர்க் கோட்டையிலிருந்து வெளிக் கொணர முடியாமல் பீஜப்பூர்த் தளபதி கிருஷ்ணாஜி பாஸ்கர் என்ற மராட்டிய பிராமணன் மூலம் உடன்படிக்கைகள் செய்துகொள்ளத் தொடங்கினர். ஒரு கூட்டத்திற்கு வரும்படி அவரை அழைத்தார். சிவாஜி தூதரை மரியாதையுடன் வரவேற்று, மதத்தின் பெயரால் அஃப்ஸல்கானின் உண்மையான நோக்கத்தை வெளிப்படுத்துக என்று அப் பிராமணனை வேண்டினர். அவ் வேண்டுகோளால் மனமிரங்கிய கிருஷ்ணாஜி பாஸ்கர் பீஜப்பூர்த் தளபதி தம் மனத்துள் தீங்கெண்ணம் கொண்டிருப்பதாகக் குறிப்பாகக் கூறினர். அது அஃப்ஸலிடம் அனுப்பிய சிவாஜியின் சொந்தத் தூதுவரான கோபிநாத்மூலம் அறிந்தவற்றால் உறுதி செய்யப்பட்டது. இதனால், சிவாஜி விழித்துக் கொண்டார். எதிரியைச் சந்திப்பதற்காகப் புறப்பட்டார். மேல் நோக்காக ஆயுதந் தரிக்காதவராகக் காணப்பட்ட அவர், நெருக்கடி நேர்ந்தால் சூழ்ச்சியைச் சூழ்ச்சியின்மூலம் எதிர்க்கலாம் என்று கருதிக் கவசந் தாங்கியவராகப் புறப்பட்டார். வலிமையும் உரமும் வாய்ந்த முஸ்லிம் தளபதி ஒல்லியாயும் குள்ளமாயுமிருந்த மராட்டியத் தலைவரைத் தழுவும்போது அவருடைய கழுத்தைத் தம் இடக் கையால் 'இரும்புப் பிடியாகப்' பிடித்து வலக் கையால் சிவாஜியின் உடலில் ஒரு குறுவாளைப் பாய்ச்சத் தொடங்கினர் என்றும், எனினும் சிவாஜியின் மறைக்கப்பட்டிருந்த கவசம் அவருக்கு நேரவிருந்த ஆபத்திலிருந்து அவரைக் காப்பாற்றியதென்றும் மராட்டியர்கள் ஒருமுகமாகக் கூறுகின்றனர். உடனே சிவாஜி பாக்நகம் (Baghnakh — புலி நகம்) அல்லது எஃகு அலகுகளை

யுடைய கையுறைகளால் அஃப்ஸலின் உடலைக் குத்திக் கிழித்து அவரைக் கொன்றார். மறைந்து பதுங்கியிருந்த தம்முடைய துருப்புகளின் உதவியால் தலைவரில்லாத பீஜப்பூர்த் துருப்புகளைத் தோற்கடித்து, அவர்களுடைய பாசறையைச் சிவாஜி சூறையாடினார். காபிகான், டஃப்(Duff)என்ற இருவரும் அஃப்ஸல்கான் சிவாஜியை முதலில் தாக்க முயலவில்லை என்றும் சிவாஜிதான் அவரை வஞ்சகமாகக் கொலை செய்தார் என்றும் குற்றம் சாட்டுகின்றனர். ஆனால், பீஜப்பூர்த் தளபதியின் தாக்குதலிலிருந்து தற்காத்துக் கொள்ளும் முயற்சியாக சிவாஜி செய்தது சரியே என்று மராட்டிய வரலாற்றாசிரியர்கள் வாதம் செய்தனர். அவர்காலத்துத் தொழிற்சாலைப் பதிவேடுகளும் மராட்டிய வரலாற்றுக் கோப்பாளரின் கூற்றையே ஆதரிக்கின்றன.

அடுத்து, சிவாஜி தென் கொங்கணத்திற்கும், கோல்ஹாபூர் மாவட்டத்திற்கும் சென்றார். ஆனால், 1660 ஜூலையில் சிதி ஜௌஹார் (Sidi Jauhar) என்பவரின் தலைமையின்கீழ் வந்த ஒரு பீஜப்பூர்ப்படை அவரை 1660 ஜூலையில் பண்ஹாலாக் கோட்டையில் சூழ்ந்துகொண்டது. சிவாஜி அக் கோட்டையைக் காலி செய்யும்படிக் கட்டாயப் படுத்தப்பட்டார். விரைவில் அவருக்குப் புதியதோர் இன்னலும் உண்டாயிற்று. தக்கணத்தின் புதிய முகலாய கவர்னரான ஷயிஸ்தாகான் மராட்டியத் தலைவரான சிவாஜியின் செயல்களை ஒடுக்குமாறு ஔரங்கசீப்பினால் ஆணையிடப்பட்டார். அவர் பூனாவிற்குள் நுழைந்து சாகன் (Chakan) கோட்டையைக் கைப்பற்றிக் கல்யாண் மாவட்டத்திலிருந்து மராட்டியர்களை விரட்டியடித்தார். ஆனால், பீஜப்பூர் அரசாங்கத்தில் இன்னும் முக்கியமான பதவியை வகித்து வந்த சிவாஜியின் தந்தை குறுக்கீடு செய்ததால் சிவாஜி பீஜப்பூர் அரசுடன் ஓர் உடன்படிக்கை செய்துகொள்ள முடிந்தது. இவ்வாறு அவர் தம் முழுக் கவனத்தையும் முகலாயர்களின் பக்கம் திருப்புமாறு விடுதலையுற்றார். சுமார் இரண்டாண்டுகள் இடையீட்டுடன் கூடிய போருக்குப் பிறகு அவர் பூனாவிலிருந்த ஷயிஸ்தாகானின் அறைக்குள் மறைவாகச் சில பணியாளர்களுடன் 1663 ஏப்ரல் 15ஆம் நாள் நுழைந்தார். 'தக்கணத்து முகலாய இராசப் பிரதிநிதியை அவருடைய சொந்தப் பாசறையின் நடுவிலேயே, அவருடைய மெய்க்காவலர்கள், பெண் அடிமைகள் முதலியோர்கள் சூழ்ந்திருக்கும் போதே நுழைந்து, ஷயிஸ்தாகானை வியப்புக்குள்ளாக்கி அவரைக் காயப்படுத்தினார்.' அபுல் ஃபத்(Abul Fath) என்ற பெயருடைய அவருடைய மகனைக் கொன்றார். ஒரு தளபதி, நாற்பது பணியாள்கள், அவருடைய அந்தப்புரத்திலிருந்த ஆறு பெண்கள் ஆகியோரைக் கொன்றுவிட்டுப் பிறகு, அருகிலிருந்த

சிங்காகர்க் (Singhagarh) கோட்டைக்குப் பத்திரமாகச் சென்றார். முகலாய இராச்சியப் பிரதிநிதி தம்முடைய கட்டைவிரலை இழந்து எப்படியோ உயிர் பிழைத்துச் சென்றார். சிவாஜியின் இத் துணிகரச் செயல் அவருடைய மதிப்பை மிகவும் உயர்த்தியது. அவர் விரைவில் மேற்கூறிய செயலைப் போலவே துணிகரமிக்க வேறொரு செயலையும் செய்தார். அவர் 1664 ஜனவரி 16-20 நாள்களில் மேற்குக்கரையின் வளம் மிக்க துறைமுகமான சூரத்தை எவ்வித மான தடையுமின்றித் தாக்கித் தகர்த்தார். அந்த இடத்தின் கவர்னர் அவரை எதிர்த்துப் போரிடாமல் ஓட்டம் பிடித்துவிட்டமையால் சிவாஜி எளிதில் வெற்றி பெற்றார். மராட்டியத் தலைவரான சிவாஜி ஒரு கோடி ரூபாய் பெறுமான கொள்ளையுடன் திரும்பிச் சென்றார். அங்கிருந்த ஆங்கில, டச்சுத் தொழிற்சாலைகள் தாம் வெற்றிகரமாக அவரை எதிர்த்துக் கொள்ளையடிக்கப்படாமல் தங்களைக் காத்துக்கொண்டன.

முகலாயரின் மதிப்பையும், தக்கணத்தில் முகலாயருக்கு இருந்த செல்வாக்கையும் மிகவும் பெரிதாகப் பாதிக்கக்கூடிய இச் செயல்களைச் சிவாஜி மீண்டும் மீண்டும் செய்து வந்ததால் எரிச்சல் கொண்ட ஔரங்கசீப் 1665ஆம் ஆண்டுத் தொடக்கத்தில் ஆம்பர் ராஜாவான ஜெயசிங்கு, திலீர்கான் ஆகியோரை ஒரு படையெடுப்புச் செய்யும் படையுடன் சிவாஜியைத் தண்டிப்பதற்காகத் தக்கணத்திற்கு அனுப்பினார். தந்திரமும், தீரமும் மிக்க தளபதியான ஜெயசிங்கு பேரரசின் பல பாகங்களிலும் நடத்திய போர்களால் பெற்ற பலவகைப்பட்ட படைத்துறை அனுபவங்களுடன் அரசியல் திறனுடனும், முன்னறிவுடனும் அறிவுமிக்க மராட்டியத் தலைவருக்கு எதிராக மிகு கவனத்துடன் சென்றார். சிவாஜியைச் சுற்றிப் பல எதிரிகளை எழுப்பி வைத்துக்கொண்டு புரந்தர்க்கோட்டையை முற்றுகையிட்டார். முற்றுகையிடப்பட்ட படையினர் கோட்டையைச் சிறிதுகாலம் மிகுந்த வீரத்துடன் காத்து நின்றனர். அச் சமயத்தில் மாஹத் நகரைச் சேர்ந்த முனார் பாஜி தேஷ்பாண்டே (Munar Baji Deshpande) என்ற கோட்டையின் பிரபு, என்ற தளபதியும் முந்நூறு மாங்லிகளும் உயிர் துறந்தனர். சிவாஜியின் அரசாங்கத்துத் தலைமையிடமான ராய்கர்க் கோட்டையையும் முகலாயர்கள் முற்றுகையிட்டனர். மேலும் எதிர்ப்புச் செய்து நிற்பதால் ஏற்படும் செலவைக் கருத்தில் கொண்டு சிவாஜி 1665 ஜூன் 22ஆம் நாள் ஜெயசிங்குடன் புரந்தர் உடன்படிக்கையைச் செய்துகொண்டார். அதன்படி தமக்காகப் பன்னிரண்டு கோட்டைகளைமட்டும் வைத்துக்கொண்டு முகலாயர்களுக்கு இருபத்துமூன்று கோட்டைகளை விட்டு விட்டார். தக்கணத்தில் முகலாயப்படையுடன் போரிடுவதற்காக ஐயாயிரம் குதிரைகள்

அடங்கிய படையைக் கொடுப்பதாக வாக்குறுதியளித்தார். இழந்த பகுதிகளுக்கு ஈடு செய்யும் பொருட்டு பீஜப்பூர் இராச்சியத்தின் சில மாவட்டங்களில் சௌத், சர் தேஸ் முகி இவற்றை வசூல் செய்துகொள்ள அனுமதிக்கப்பட்டார். விரைவில் அவர் பீஜப்பூருக்கு எதிராகச்செய்த போரில் பேரரசினருடன் சேர்ந்து கொண்டார். ஆனால், ஜெயசிங்கின் பீஜப்பூர்ப் போர் தோல்வியில் முடிந்தது. எனினும், அவர் 'மிக உயர்ந்த நம்பிக்கைகளுடன்' சிவாஜியைப் பயன்படுத்திக்கொண்டார். 'ஓராயிரம் முறைகளைப் பயன்படுத்தி ஆக்ராவிலிருந்த பேரரசு அவைக்குச் செல்லுமாறு சிவாஜியைத் தூண்டினார்.

சிவாஜியைப் பேரரசரது அவைக்கு அனுப்பவேண்டும் என்று ஜெயசிங்கு எண்ணியதன் கருத்து என்னவென்னில் அவரைத் தொல்லைகள் மிக்க தக்கணப் பகுதியிலிருந்து ஒழித்துவிட வேண்டும் என்பதேயாகும். ஆனால், அந்த ஏற்பாட்டுக்கு சிவாஜியை ஒப்புக்கொள்ளச் செய்தது எது என்பதைப் புரிந்துகொள்ளுவது மிகவும் கடினமாயுள்ளது. திரு. சர் தேசாய் என்பவர், சிவாஜி அரசவைக்குச் செல்ல 'விரும்பியதன் நோக்கம் தம்முடைய கண்களாலேயே பேரரசரை'யும் அவருடைய அரசவையையும் காண வேண்டும் என்ற விருப்பமும், அவருக்கு எதிராக எதிர்காலத்தில் ஒழுங்கான முயற்சிகளை மேற்கொள்வதற்காகப் பேரரசின் வன்மைக்கு மூலங்கள் எவையெனக் கண்டுபிடிப்பதாகும் என்று எழுதுகிறார். மேலும், அப்படிப்பட்ட இடர்ப்பாடான செயலை மேற்கொண்டால் சிறப்பும் பரிசும் கிடைக்கும் என்று வாக்குறுதிகளும், ஆக்ராவில் அவருடைய பாதுகாப்புக்குத் தாம் பொறுப்பாவதாகப் பலஆணைகளிட்டும் ஜெயசிங்கு அவரைத் தூண்டவேண்டியிருந்தது என்பதை நாம் அறிகிறோம். பேரரசின் ஊழியரான சித்தி (Sidi) என்பவரிடம் அப்போது இருந்த ஜன்ஜீரார் தீவை வசப்படுத்திக் கொள்வதற்குப் பேரரசின் அனுமதியைப் பெறுவதும் சிவாஜியின் நோக்கமாக இருந்திருக்கலாம். சோதிடர்களின் உறுதியுரையாலும், தம்முடைய அதிகாரிகளுள் பெரும்பாலார் சம்மதம் தெரிவித்ததாலும் அவர் தம் மகன் ஷாம்பூஜியுடன் ஆக்ராவிற்குப் புறப்பட்டு 1666 மே மாதம் 9ஆம் நாள் அதை அடைந்தார்.

ஆனால், ஔரங்கசீப் சிவாஜியைச் சரியாக வரவேற்கவில்லை. ஐயாயிரம் ஆள்களுக்குத் தளபதியாயிருக்கும் ஒரு பிரபுவைப் போலவே அவரை மதித்தார். அது சிவாஜியின் தன்மான உணர்ச்சியைப் புண்படுத்தியது. விரைவில் அவர் மயக்கமுற்றது அரசவையில் பரபரப்பை ஏற்படுத்தியது. தம்முணர்வைத் திரும்ப அடைந்ததும், அவர் நம்பிக்கைத் துரோகம் செய்துவிட்டதாகப் பேரரசரை இகழ்ந்துரைத்தார். அதனால் அவர், காவலில் வைக்

கப்பட்டார். இவ்வாறு அவருடைய 'உயர்ந்த நம்பிக்கைகள் உடைந்து தூளாயின. நம்பிக்கைகள் நிறைவேறுவதற்குப் பதிலாகச் சிறைக் கைதியானர்.' அந்தச் சிக்கலான சூழ்நிலையில் சாதாரண மனிதரானல் அவல நிலையை எய்தியிருக்கக் கூடும். ஆனல், அசாதாரண அறிவு வளம் பெற்றிருந்த சிவாஜி தம்மைத் தப்புவித்துக்கொள்ள ஒரு யுக்தியைக் கையாண்டார். தம்முடைய கற்பனை நோயிலிருந்து குணப்பட்டுக்கொண்டு வருவதாக நடித்து நோயைக் குணப்படுத்தியதற்கு நன்றிக் கொடையாக அவர் தம் வீட்டிலிருந்து ஒவ்வொரு மாலையிலும் பிராமணர்களுக்கும், பிச்சைக்காரர்களுக்கும், பிரபுக்களுக்கும் பழங்கள், இனிப்புகள் ஆகியவற்றைக் கூடைகளில் வைத்து அனுப்பிவந்தார். சில நாள்களுக்குப் பிறகு காவலாளிகள் கவனக்குறைவாக இருந்து கூடைகளைக் கவனிக்காமல் அனுப்பி வந்ததால் சிவாஜியும் அவருடைய மகனும் இரண்டு காலிக் கூடைகளில் மறைந்துகொண்டு முகலாயப் பேரரசரின் எல்லா ஒற்றர்களையும் ஏமாற்றிவிட்டு ஆக்ராவை விட்டு நழுவிச் சென்றனர். சிவாஜி ஷாம்பூஜியுடன் மூத்ராவுக்கு விரைந்தார். அங்கே சோர்வுற்றிருந்த மகனை ஒரு மராட்டிய பிராமணரின் பொறுப்பில் விட்டுவிட்டு ஒரு சந்நியாசி



ராய்கர்க் கோட்டை

யின் வேடத்தில் அலகாபாத், வாரணசி, கயா, தெலிங்கான வழியாகச் சுற்று வழியில் சென்று, 1666 நவம்பர் 30ஆம் நாள் தம் இருப்பிடத்தை அடைந்தார்.

இதற்குப் பிறகு மூன்று ஆண்டுகள் சிவாஜி முகலாயர்களிடம் அமைதியாக இருந்தார். அந்தக் காலத்தை உள்நாட்டு ஆட்சி முறையை ஒழுங்குபடுத்துவதில் செலவழித்தார். ஔரங்கசீப் அவருக்கு ராஜா என்ற பட்டத்தையும், பீஹாரில் ஒரு ஜாகீரையும் கொடுத்தார். அவருடைய மகன் ஷாம்பூஜியை 5,000 ஆள்களுக்குத் தலைவராய் இருக்கும் பிரபுவின் நிலைக்கு உயர்த்தினார். ஆனால், 1670-ல் மீண்டும் போர் தொடங்கிற்று. இராசப் பிரதிநிதி ஷா ஆலமுக்கும், அவருடைய தளபதி திலீர்கானுக்கும் இடையே மிகு கடுமையான போர் ஏற்பட்டிருந்ததால் பேரரசினரின் நிலைமை, முன்பிருந்ததைவிட பலவீனப்பட்டிருந்தது. அதனால் சிவாஜி 1665-ல் பெரிதும் முன்பு விடப்பட்ட எல்லாக் கோட்டைகளையும் திரும்பப் பெற்றார். 1670 அக்டோபர் மாதத்தில் அவர் இரண்டாம் முறையாகச் சூரத்தைத் தாக்கித் தகர்த்தார்; பணமாகவும், தானியமாகவும் பெருங்கொள்ளைப் பொருளைப் பெற்றார். பிறகு அவர் முகலாய மாகாணங்களில் படையெடுப்புச் செய்தார். பலமுறை நேரடிப் போரில் முகலாயத் தளபதிகளைத் தோற்கடித்தார். 1672-ல் அவர் சூரத்திலிருந்து சௌத் வேண்டிப் பெற்றார்.

அப்போது வடமேற்கே மற்ற எதைக் காட்டிலும் மலைநாட்டு மக்களின் எழுச்சி ஔரங்கசீப்பின் கவனத்தை முழுதும் ஈடுபடுத்தியிருந்தது. தக்கணத்திலிருந்து அந்தப் பகுதிக்கும் முகலாயப் படையின் ஒரு பகுதி மாற்றப்பட்டது. 1672 முதல் 1678 வரை இடைவிட்டு இடைவிட்டு முகலாயத் தளபதிகள் சிவாஜிக்கு எதிராகச் செய்த போர்களில் வெற்றி ஒன்றும் ஏற்படவில்லை. அப்போது அந்த மராட்டியப் பெருவீரர் அதிகாரம், ஆற்றல் ஆகியவற்றின் உச்சநிலையில் இருந்தார். 1674 ஜூன் 16ஆம் நாள் அவர் பெரும் ஆடம்பரத்துடனும் ஒளியுடனும் முறையாக அரசராக ராய்நகரில் முடி சூட்டிக்கொண்டு சத்ரபதி (குடையின் தலைவர் அல்லது மன்னர் மன்னன்) என்ற பட்டத்தைப் புனைந்து கொண்டார்.

மேலும், முகலாயர்கள் வடமேற்கே தம் முழுக் கவனத்தையும் ஈடுபடுத்திக்கொண்டிருந்தமையால், அவர்களிடமிருந்து எதிர்ப்பு ஒன்றும் இல்லாதவராய் சிவாஜி கோல்கொண்டா சுல்தானின் நட்புறவைப் பெற்றார். ஒரு வருடத்தில் (1677) அவர் செஞ்சி (Gingee), வேலூர் அவற்றின் அருகாமையிலிருந்த மாவட்டங்கள் இவற்றை வென்றார். இவை அவருடைய மதிப்பை மிகப் பெரிதாக்கியதுடன் சென்னை, கருநாடகத்திலும், மைசூர்ப் பீட பூமியிலும் அவருக்கு உரிமையாகப் பரந்த ஒரு நிலப்பரப்பை அளித்தன; அது அறுபது லீக்குகள் நீளமும் நாற்பது லீக்குகள்

அகலமும் உடையதாய் ஆண்டுதோறும் 20 லட்சம் ஹூன்கள் (huns) வருமானம் அளிப்பதாய் நூறு கோட்டைகள் அடங்கியதாய் இருந்தது. அவருடைய வெற்றிகரமான வாழ்க்கை 1680 ஏப்ரல் 14ஆம் நாள் அவருடைய ஐம்பத்து மூன்றும் வயதிலேயே (சிலர் கருத்துப்படி ஐம்பதாம் வயதிலேயே)முடிவடைந்துவிட்டது. அவருடைய இராச்சியப் பரப்பு, போர்ச்சுகீசிய, ஆப்பிரிக்க, ஆங்கிலேயக் குடியேற்றங்களான டாமன், சால்செட்டு (Salsette)பஸ்ஸெயின் (Bassein), சௌல், கோவா. ஜஞ்ஜீரா, பம்பாய் ஆகியவை நீங்கலாகப் பெரிதும் வடக்கே (இக் காலத்து சூரத் பகுதியில் உள்ள)தாராம்பூர் (Dharampur) எனப்படும் ராம் நகரிலிருந்து தெற்கே கார்வார் (Karwar) வரையிலுள்ள முழுக் கடற்கரைப் பகுதிவரை பரவியிருந்தது. கிழக்கே அதனுடைய எல்லை ஒழுங்கற்ற முறையில் வடக்கே பக்லானாவிலிருந்து (Baglana) நாசிக், பூனா மாவட்டங்கள் வழியாகச் சதாரா முழுவதையும் சுற்றிக்கொண்டு தெற்கே கோல்ஹாபூர் வரை பரவியிருந்தது. அவருடைய கடைசி வெற்றிகளினால் பெல்காமிலிருந்து(Belgaum) சென்னை மாகாணத்தின் ஒரு மாவட்டமாயிருந்த பெல்லாரி (Bellary) ஜில்லாவிற்கு எதிரே துங்கபத்திரா நதிக் கரைவரையிலும் பரவியிருந்தது. மேற்குக் கருநாடகப் பகுதிகளும், மைசூர் இராச்சியத்தின் பெரும்பகுதியும் அவருடைய இராச்சியப் பகுதிக்குள் அடங்கின.

## இ. சிவாஜியின் அரசாங்கம்

சிவாஜி தீரமிக்கப் படை வீரராகவும், வெற்றிகரமான படையெடுப்பாளராகவும் இருந்தார். திரு. ராலின்சன் கூறுவதுபோல, 'பெரிதும் உலகில் தோன்றிய மாபெரும் வீரர்களைப் போலவே (நெப்போலியன் ஒரு மிகச் சிறந்த உதாரணம்)சிவாஜியும் ஒரு பெரிய ஆட்சி வல்லுநராகவும் இருந்தார். வெற்றியுடன் ஒழுங்கு முறையை நிலைநாட்டுபவருக்கும், அரசியலறிவோருக்கும் வேண்டிய குணங்களே திறமை மிக்க தளபதி ஒருவரை உருவாக்குவதற்கு வேண்டிய குணங்களாகும்.' அவருடைய ஆட்சிமுறை இந்தியாவின் முஸ்லிம் ஆட்சியாளர்களைப் போலவே, முடியாட்சியாக இருந்தது. அதன் முதல் பெருந்தலைவர் அவரே. ஆனால், உண்மையில் நாட்டின் செயல் முறைகளைக் கவனிக்க அவருக்கு உதவியாக எட்டு அமைச்சர்கள் அடங்கிய அஷ்டப்பிரதான் (Ashta pradhan)சபை இருந்தது. அதனுடைய செயல்கள்பெரும்பாலும் அறிவுரைகூறுவனவாகவே இருந்தன. அந்த எட்டு மந்திரிகள் ஆவார்: (1) பேஷ்வா அல்லது முதல் அமைச்சர். இவர் நாட்டின் பொது நலன்களையும், முன்னேற்றத்திற்குரிய வழி வகைகளையும் கவனித்துக் கொள்ளவேண்டும்; (2) அமாத்தியர் (Amatya)

அல்லது நிதியமைச்சர்: இவருடைய வேலை எல்லாப் பொதுக் கணக்குகளையும் சரிபார்த்துக் கையெழுத்திட வேண்டும். (3) மந்திரி இவர் வேலை அரசரின் செயல்களை எல்லாம் நாடோறும் பதிவு செய்து கொண்டு அவற்றைப் பாதுகாத்து வைப்பதும், அரசவையின் நிகழ்ச்சிகளைக் குறித்து வைத்துக்கொண்டு அவற்றைப் பாதுகாத்து வைப்பதுமாகும். (4) சச்சீவா (Sachiva) அல்லது கண்காணிப்பாளர். இவர் அரசரின் தபால் போக்குவரத்துக்குப் பொறுப்பாளராயிருந்தார்; மஹால்கள், பர்கானாக்கள் இவற்றின் கணக்குகளைச் சரிபார்த்துவந்தார். (5) சுமந்த் (Sumant) அல்லது அயல்நாட்டுச் செயலாளர். (6) சேனாதிபதி அல்லது தலைமைத் தளபதி. (7) பண்டிட் ராவும் தானாதியக்ஷாவும் (Pandit Rao and Danadh yaksha) அதாவது அரசாங்கப் பூசாரியும் சோதிடரும், (8) நியாயாதீசர் (Nyayadhisa) அல்லது தலைமை நீதிபதி. நியாயாதீசரையும், பண்டிட் ராவையும் தவிர மற்ற எல்லா அமைச்சர்களும் தங்கள் உள்நாட்டுக் கடமைகளுடன் படைத்துறை அதிகாரங்களையும் பெற்றிருந்தனர். அவர்களுள் குறைந்தது மூவர் மாகாண ஆட்சி முறையிலும் பொறுப்புள்ளவர்களாக்கப் பட்டனர். அமைச்சர்கள் அரசாங்கத்தின் முப்பதுக்கும் குறையாத பல வேறுபட்ட துறைகளுக்கும் பொறுப்புள்ளவர்களாய் இருந்தனர். சிவாஜி தம் இராச்சியத்தைப் பல மாகாணங்களாகப் பிரித்து ஒவ்வொன்றிற்கும் ஒவ்வோர் இராசப் பிரதிநிதியைத் தலைவராக அமர்த்தினார். ஒவ்வோர் இராசப்பிரதிநிதியும் அரசர் விரும்பும்வரை பதவியிலிருந்தனர். அவர் எட்டுத் தலைமை அதிகாரிகளைக் காட்டிலும் சிறிது வேறான நிலையைப் பெற்றிருந்தார். மிகு அதிகமான அதிகாரமும் தம் விருப்பப்படி செயலாற்றுவதற்குரிய உரிமையும் பெற்றிருந்தார்.

வரி வசூலுக்காகவும், ஆட்சி முறைக்காகவும் சிவாஜியின் இராச்சியம் பல பிராந்தியங்கள் அல்லது மாநிலங்களாகப்பிரிக்கப் பட்டிருந்தது. மேலும், ஒவ்வொரு பிராந்தியமும் பர்கானாக்களாகவும், டார்ஃப்புகளாகவும் (Tarfs) பிரிக்கப்பட்டிருந்தன. கிராமம்தான் ஆட்சிப் பகுதியின் கடைசிப் பிரிவு ஆகும். வரி வசூல் பண்ணையாள்கள்மூலம் செய்யும் அக் கால முறையைக் கைவிட்டுவிட்டு, ரயத்துகளிடமிருந்து அரசாங்க அதிகாரிகள் நேரடியாக வரி வசூல் செய்யும் முறையைப் புகுத்தினார். அந்த அரசாங்க அதிகாரிகள் 'அரசியல் மேலாளரைப் போன்று அதிகாரம் 'செலுத்தவோ, ரயத்துகளைத் தொந்தரவுபடுத்தவோ கூடாது.' நிலங்களைக் கவனமாக அளந்து பார்த்த பிறகே நிலம் மதிப்பிடப் பட்டது. நிலத்தை அளப்பதற்காக ஒரே அளவுமுறை புகுத்தப் பட்டது. எதிர்பார்க்கும் விளைச்சலில் 30 சதவீதம் அரசாங்க வரி

யாகக் கொடுக்க வேண்டும் என்று வரையறுக்கப்பட்டது. பின்பு, சிவாஜி மற்ற வரிகளையும், தீர்வைகளையும் ஒழித்தபிறகு அவ் வரி வீதத்தை 40 சதவீதமாக உயர்த்தினர். உழவர்கள் தங்கள் அரசாங்கத்துக்குக் கொடுக்கவேண்டிய தொகையைச் செலுத்தி வந்தனர். வரியைப் பணமாகவோ, தானியமாகவோ கொடுக்கலாம் என்ற ஏற்பாடும் ஏற்பட்டிருந்தது. ரயத்துகளுக்குக் கால் நடைகள், விதைகள் வாங்குவதற்காக அரசாங்கக் கருவூலத்திலிருந்து முன்பணம் எடுத்துக் கொடுத்து அரசாங்கம் விவசாயத்திற்கு ஊக்கம் அளித்தது. அப்பணத்தை ஆண்டுதோறும் சிறு சிறு தவணைகளில் ரயத்துகள் திருப்பிக் கொடுத்துவிடலாம். சிவாஜி தம் இராச்சியத்தின் நிதி நிலைமை மிகச் சிறந்த நிலைமையில் இருக்க வேண்டுமென்று கருதி வரி வசூல் விஷயத்தில் மிகு கண்டிப்பாக இருந்திருக்கலாம் என்றாலும், ஃபிரையர் (Fryer) சொல்வதுபோல அரசாங்க அதிகாரிகள் உழவர்களை வற்புறுத்திக் கொடுமைப் படுத்தி வரிவசூல் செய்தனர் என்று கூறுவது தவறாகும். பல ஆண்டுகளுக்கு முன்பே கிராண்ட்டஃப் (Grant Duff) ஒப்புக்கொண்டது போலவே, இக் கால ஆராய்ச்சிகளும், சிவாஜியின் வரிவசூல் முறை மனிதத்தன்மை மிக்கதாயும், மிகச் சிறந்ததாயும் அவருடைய குடிமக்களின் நலன்களைக் கருத்தில் கொண்டதாயும் இருந்தது என்று நன்கு நிரூபித்திருக்கின்றன.

மகாராட்டிரத்தின் மலைப்பகுதிகள் நில வருவாயை மிகுத்துத் தாராமையினால், சிவாஜி தமக்கு முழுதும் அடங்கியிருந்த அருகிலுள்ள பகுதிகளில் அடிக்கடி சௌத், சர் தேஸ் முகி என்ற வரிகளை வசூலித்துவந்தார். பீஜப்பூர் அரசாங்கத்தின் முகலாயருக்குரிய சில மாவட்டங்களிலும், அவ் வரிகளை வசூலித்து வந்தார். சௌத் வரியை வசூலிக்கும் வழக்கம் ஏற்கெனவே மேற்கு இந்தியாவில் இருந்தது என்பது ராம் நகர் ராஜா அவ் வரியை டாமனிலிருந்த போர்ச்சுகீசியக் குடிமக்களிடமிருந்து வசூலித்து வந்ததிலிருந்து அறிகிறோம். சௌத் வரியின் இயல்பு இப்படிப்பட்டதென்று கூறுவதில் அறிஞர்கள் கருத்து வேறுபாடுஉடையவர்களாய் உள்ளனர். அம் முறையை வெல்லெஸ்லியின் துணைமுறையுடன் (Wellesley's Subsidiary System) ஒப்பிட்டு ரானடே, 'அது நீதி அல்லது சட்டப்படியான கடன்பாடாக இல்லாத ஒரு வெறும் படைத்துறைக் கொடை அன்று; ஆனால், மற்றோர் ஆட்சியாளரின் படையெடுப்பிலிருந்து காத்துவருவதற்குப் பதிலாகக் கொடுக்கப்படும் வரியாகும் என்று கூறுகிறார். சர். ஜே. என். சர்க்கார் வேறொரு மாறுப்பட்ட கருத்தைக் கூறுகிறார். அவர் கூறுகிறார்: 'சௌத் வரி கொடுப்பதால் வெறுமனே வரவேற்கப்படாத மராட்டியப் படைவீரர்கள், சிவில் அடியாள்கள் இவர்கள் புகாமல் தடுக்கத்தான் முடிந்தது. ஆனால், அது அயல் நாட்டுப் படையெடுப்பு அல்லது உள்நாட்டுக் குழப்பம்

இவை நேராமல் மாவட்டத்தைக் காக்கும் பொறுப்பை சிவாஜி யின்மேல் சுமத்திவிடவில்லை. மராட்டியர்கள் தங்கள் சொந்த இலாபத்தையே கருதினர். தாங்கள் சென்ற பிறகு எதிரிகளின் தலைவிதியைப் பற்றிக் கவலைப்படவில்லை. சௌத் வரி ஒரு திருடனை விலைகொடுத்து வாங்கிவிடுவதற்கு ஒப்பான ஒரு முறையாகும்; எல்லா எதிரிகளுக்கும் எதிராக அமைதியையும் ஒழுங்கையும் நிலை நிறுத்தும் துணை முறையாக அது கருதப்பட முடியாது. அதனால் சௌத் வரிக்கு உட்பட்ட நிலங்கள் செல்வாக்குமிக்க பகுதிகள் என்று கூறுவது சரியாகாது.' திரு. சர் தேசாயின் கருத்துப்படி, அது, எதிரியிடமிருந்து அல்லது வெல்லப்பட்ட பகுதிகளிலிருந்து வசூலிக்கப்படும் கப்பமாகும். டாக்டர் ஸென் அவர்கள், 'அவசர கால நெருக்கடியில் தவிர்க்க முடியாதபடி ஒரு படைத்துறைத் தலைவரால் வசூலிக்கப்படுவதே சௌத் வரியாகும்' என்று கூறுகிறார். இந்தச் சுமையான வரியின் கொள்கை எதுவாயிருப்பினும், அது அரசாங்க வருவாயில் நாலில் ஒரு பாகமாக இருந்தது. செயல் முறையில் அது ஒரு படைத்துறையைச் சார்ந்த வரியேயன்றி வேறன்று. பரம்பரையாக வந்த மகாராட்டிரத்தின் சர்தேஸ்முக் (Sardesh mukh-முக்கியத் தலைவர்) என்ற முறையில் உரிமை கொண்டாடி மேலும் 10 சதவீதம் சிவாஜி வரி வசூல் செய்ய முற்படச் செய்தது, சர்தேஸ் முகி என்ற வரியாகும். ஆனால், அது சட்டமுறைக்குட்பட்ட கற்பனையாகும். சௌத், சர்தேஸ்முகி என்ற வரிகளை வசூல் செய்யும் உரிமையால் மராட்டியர்கள் தங்கள் ஆட்சிக்கு உட்பட்ட எல்லைகளுக்கும் அப்பாலுள்ள மாவட்டங் களிலும் தங்கள் செல்வாக்கைச் செலுத்திவந்து, நாளடைவில் எளிதாக அவற்றைத் தங்கள் இராச்சியத்துடன் இணைத்துக் கொள்ள முடிந்தது.

ஒரு புதிய முறையில் மராட்டியப் படையைச் சிவாஜி அமைத்தது அவருடைய படைத்துறை மேதைமைக்கு ஒரு மிகச் சிறந்த சான்றாகும். அதற்கு முன்பு போரிடும் மராட்டியப் படைகள் பெரும்பாலும் குதிரைப்படையாக இருந்தன. அவை ஆண்டின் பாதிக்காலம் போர்க்களங்களிலும், வறட்சிக் காலத் தில் சுறுசுறுப்பான வேலைகளிலும் ஈடுபட்டுக்கொண்டிருந்தன. எனினும், சிவாஜி ஓர் ஒழுங்கான நிலைப்படையை வைத்துக் கொண்டார். அவருடைய படைவீரர்கள் எப்பொழுதும் வேலைக்குத் தயாராய் இருக்க வேண்டும். பழைய காலத்தில் அவர் களுக்குச் சம்பளமும் இருப்பிடங்களும் கொடுக்கப்பட்டன. இந்தப் படையின் எண்ணிக்கை முப்பதாயிரம் குதிரையிலிருந்து நாற்பதாயிரம் வரையிலும், பத்தாயிரம் காலாள்கள் வரையிலும் உயர்ந்திருந்தது. சிவாஜி கடற்படை ஒன்றையும் கட்டினார்;

அதற்கு வேண்டிய ஆள்களைப் பம்பாய்க் கடற்கரையிலிருந்த கீழ்ச்சாதி இந்துக்களிலிருந்து தேர்ந்தெடுத்து, அவர்களுக்குப் பயிற்சியளித்தார். சிவாஜியின்கீழ் இருந்த கடற்படையின் சாதனைகள் குறிப்பிடத்தக்கனவாக இல்லாமற்போயினும், பிற் காலத்தில் ஆங்கிரியாக்களின்(Angrias) கீழ் மராட்டியக் கடற் படை ஆங்கிலேயருக்கும், போர்ச்சுகீசியருக்கும், டச்சுக்காரருக்கும் போதிய தொந்தரவைக் கொடுத்தது. சபாஸத் பகர் (Sabhasad Bakhar) என்ற நூலின்படி சிவாஜி சுமார் 1,260 யானைகள் கொண்ட படை ஒன்றையும், 3,000 அல்லது 1,500 ஒட்டகங்கள் கொண்ட படை ஒன்றையும் வைத்திருந்தார். அவருடைய பீரங்கிப் படையின் வலிமை எப்படிப்பட்டது என்பது நமக்குத் தெளிவாகத் தெரியவில்லை. ஆனால், ஓர்ம் (Orme) என்பவர் 'அவர் முன்பு எண்பது பீரங்கிகளையும், அவருடைய பொருத்துப் பூட்டு களுக்கு வேண்டிய காரீயத்தையும் சூரத்தின் ஃபிரெஞ்சு டைரக்ட ரிடமிருந்து வாங்கியிருந்தார்' என்று கூறுகிறார்.

குதிரைப் படையிலும் காலாள் படையிலும் ஒழுங்கான அதிகாரிகளின் தரவேறுபாடு இருந்தது. குதிரைப் படையில் இரண்டு பிரிவுகள் இருந்தன. ஒன்று பார்கீகள் (Bargis) அல்லது அரசாங்கத்தினரால் சம்பளமும் தளவாடங்களும் தரப்படும் படை வீரர்கள் கொண்டபிரிவு; மற்றது சிலாகத்தார்கள் (Silahdars) கொண்டபிரிவு. இவர்கள் தளவாடங்களைத் தங்கள் சொந்தச் செலவிலேயே சேகரித்து வைத்துக்கொண்டு, அரசாங்கத்தின் வேலைக்காகக் கொண்டுவந்த படைவீரர்களுக்குச் சம்பளமும் தளவாடங்களும் கொடுப்பர். ஆனால், போர்க்களத்தில் அவர்கள் செய்யும் பணிக்காக ஏற்படும் செலவுக்காக அரசாங்கம் ஒப்பந்தம் பேசிப் பணத்தைக் கொடுத்துவிடும். குதிரைப் படையில் 25 துருப்புகள் ஓர் அளவாகும். இருபத்தைந்து குதிரை வீரர்களுக்குத் தலைவராக ஒரு ஹவல்தாரும், ஐந்து ஹவல்தாருக்கு ஒரு ஜும்லாதாரும், பத்து ஜும்லாதாருக்கு ஒரு ஹஸாரியும் இருந் தனர். ஹஸாரி ஆண்டு ஒன்றுக்கு 1,000 ஹுன்களைப் பெற்றார். ஹஸாரிக்கும் மேற்பட்ட அதிகாரிகள் பான்ச்ஹஸாரிகள் என் போரும், குதிரைப் படையில் தலைமைத் தலைவரான சர்னோபாத் (Sarnobat) என்பவரும் ஆவர். காலாள் படையில் ஒன்பது ஆள்கள் (பாயிக்குள்) கொண்ட பிரிவுதான் மிகச் சிறிய ஒரு பிரிவாகும். அதற்குத் தலைவர் நாயக் (Naik) எனப்படுவார். ஐந்து நாயக்கு களுக்குமேல் ஒரு ஹவல்தாரும் இரண்டு அல்லது மூன்று ஹவல் தாருக்கு மேல் ஒரு ஜும்லாதாரும், பத்து ஜும்லாதாருக்கு மேல் ஒரு ஹஸாரியும் இருந்தனர். குதிரைப் படையில் சர்னோபாத்தின் கீழ் ஐந்து ஹஸாரிகள் இருக்க, காலாள்படையில் ஏழு ஹஸாரிகள்

இருந்தனர். பெரும்பாலும் எல்லாச் சமயங்களிலும் சிவாஜியே நேராகப் படைகள் நடத்திச் சென்றாலும், படைக்கு முறையாக ஒரு சேனபதி அல்லது தலைமைத் தளபதி இருந்தார். அவர் அமைச்சர் அவையில் ஓர் உறுப்பினராக இருந்தார். மராட்டியர்களின் வரலாற்றில் கோட்டைகள் முக்கிய இடம் வகித்தமையின், மிகச் சிறந்த முறையில் கோட்டைப் படையை வைத்திருக்க ஏராளமான முன்னேற்பாடுகள் செய்யப்பட்டன. ஒவ்வொரு கோட்டையும் ஹவல்தார், சப்னி, சர்னோபாத் என்ற சம மதிப்பு வாய்ந்த மூன்று அதிகாரிகளின் கண்காணிப்பில் இருந்தது. அம் மூன்று பேரும் ஒன்றாயிருந்து வேலை செய்வதுடன் ஒருவர்க்கொருவரைக் கண்காணித்துக் கொள்ளவும் வேண்டும்; மேலும், கோட்டை அதிகாரிகளிடம் துரோக எண்ணம் தோன்றாதிருக்குமாறு 'ஒவ்வொரு கோட்டைப் படையிலும் பல சாதிக் கலப்பும்' இருக்கவேண்டும் என்று சிவாஜி ஏற்பாடு செய்தார்.

சம்பளம் கொடுப்பதிலும் படைவீரர்களுக்குப் பரிசுகள் கொடுப்பதிலும் ஒழுங்காகவும்தாராளமாகவும் இருந்தபோதிலும் சிவாஜி படைவீரர்கள்மேல் கண்டிப்பான கட்டுப்பாட்டை வற்புறுத்த மறக்கவில்லை. அவர்களுடைய நடத்தைக்காகக் கட்டுப்பாட்டு விதிகளை வகுத்தளித்தார். மேலும், அவர் அவர்களுடைய ஒழுக்கநிலை தாழாமல் கவனித்துக்கொண்டார். அந்த விதிகளில் மிகவும் முக்கியமானவை: 'எந்தப் பெண்ணும், அடிமைப் பெண்ணும் அல்லது கூத்தாடும் மகளும், படையுடன் சேர்ந்து செல்லக் கூடாது.[1] இவர்களுள் யாரையாவது வைத்திருக்கும் படைவீரன் தலை வெட்டப்படும். பசுக்களைக் கவரக்கூடாது. ஆனால், எருதுகளைப் போக்குவரத்துக்காக மட்டும் பயன்படுத்திக்கொள்ளலாம். பிராமணர்களைத் துன்புறுத்தக் கூடாது. அவர்களைப் பகைவர்களின் ஈட்டுப் பிணையாகவும் ஏற்றுக்கொள்ளக்கூடாது. எந்தப் படைவீரனும்(போர் சமயத்தில்)ஒழுங்கு தவறி நடந்துகொள்ளக் கூடாது.' போரில் கொள்ளையிடப்பட்ட பொருள்களைப் பற்றி சிவாஜி கட்டளையிட்டதாவது: 'எந்த ஓர் இடமும் சூறையாடப்பட்டபோது ஏழை மக்களின் பொருள்கள், புல்சியா (செப்புப் பணம்), பித்தளையினாலும், செப்பினாலும் ஆகிய பாத்திரங்கள் இவை இவற்றைக் கண்டவர்க்கே உரியனவாகும். ஆனால், மற்றப் பொருள்களும்,நாணயமாக அச்சடிக்கப்பட்டவையும்,படாதவையுமான தங்கங்களும், வெள்ளிகளும், இரத்தினங்களும், விலையுயர்ந்த பொருள்கள் அல்லது நகைகளும் அவற்றைக் கண்டவருக்கே உரியன ஆகமாட்டா. அவர்கள் அவற்றில் சிறிதும்

[1] மூகலாயப் படையுடன் சென்ற அந்தப்புர மகளிரின் செல்வாக்கோடு இதை வேறுபடுத்தி உணரலாம்.

எடுத்துக்கொள்ளாது அதிகாரிகளிடம் கொடுத்துவிடவேண்டும். அதிகாரிகள் அவற்றை சிவாஜியின் அரசாங்கத்திற்குச் செலுத்தி விடவேண்டும்.

### ஈ. சிவாஜியைப் பற்றிய மதிப்பீடு

சிவாஜி ஓர் ஆட்சியாளராகவும்,சிறந்த மனிதராகவும் இந்திய வரலாற்றில் தமக்கென்று சிறந்ததோர் இடத்தைப் பெற்றுள்ளார். மக்களின் தலைவராகவே பிறந்த அவர் தம்முடன் தொடர்பு கொள்வோர் எல்லாரையும் கவரத்தக்க ஆற்றல் படைத்திருந்தார். இயல்பான தீரத்தினாலும், போரியல் சூழ்ச்சித்திறனாலும், ஒரு ஜாகீர்தாரின் நிலையிலிருந்து ஒரு சத்ரபதின் நிலைக்கு அவர் உயர்ந்தார். அப்போது உச்ச அதிகார நிலையிலிருந்த முகலாயப் பேரரசுக்கு அடங்காத ஓர் எதிரியாக ஆனார். 'பல தக்கண இராச்சியங்களில் அணுக்களைப் போல சிதறிக் கிடந்த' மராட்டியர்களை ஒன்று திரட்டி, 'முகலாயப் பேரரசு, பீஜப்பூர், இந்தியப் போர்ச்சுகீசியர்கள், ஜாஞ்சிராவின் அபிசீனியர்கள்ஆகிய நான்கு பெருஞ் சக்திகளின் எதிர்ப்புகளுக்கிடையே' ஒரு பெரிய இராச்சியத்தை ஏற்படுத்திவிட்டார். இறக்கும்போது பரந்த ஓர் இராச்சியத்தை விட்டுவிட்டுச் சென்றார். கிராண்ட் டஃப் என்பவர் எழுதுகிறார்: 'சிவாஜி புதிதாகச் சேர்த்த இராச்சியப் பகுதிகளும் செல்வங்களும் முகலாயர்களுக்கு அவ்வளவு பெரிதாகத் தோன்றவில்லை. ஆனால், அவர் நடந்து காட்டிய முன்மாதிரி நிலையும், அவர் புகுத்திய பழக்கங்களும், முறைகளும், மராட்டிய மக்களுள் பெரும்பாலோரின் உள்ளத்தில் அவர் புகுத்திய உணர்ச்சியும்தான் முகலாயர்களுக்குப் பேரிடியாகத் தோன்றின.' அவர் நிர்மானித்த மராட்டிய நாடு ஔரங்கசீப்பின் காலத்திலும், அவருக்குப் பிறகும் முகலாயப் பேரரசை ஆட்டம் காணும்படி செய்தது. பதினெட்டாம் நூற்றாண்டில் இந்தியாவிலேயே அவருடைய நாடு ஒரு சக்தி வாய்ந்த நாடாகத் திகழ்ந்தது. ஆனால், ஔரங்கசீப்பின் சந்ததியினருள் ஒருவர் மகதாஜி சிந்தியா (Mahadaj Sindhia) என்ற மராட்டியத் தலைவருக்கு அடங்கிய பொம்மை அரசராக ஆனார். மராட்டிய அரசு இந்தியாவில் மேலாண்மைக்காக ஆங்கிலேயர்களுடன் போட்டியும் இட்டு வந்தது. ஆனால், கடைசியில் ஹேஸ்டிங்ஸ் பிரபு காலத்தில் நசுக்கப்பட்டுவிட்டது.

காபிகானும் மற்றச் சில தற்கால ஆசிரியர்களும் கூறியதுபோலச் சிவாஜியைக் கொள்ளையடிப்பதில் வல்லவர் என்றோ இந்துக்களுள் ஓர் அலாவுதீன் அல்லது தாமர்லின் என்றோ கூறுவது நேர்மையற்றதாகும். ஒரு பெரும் ஆக்க வேலைத்திறன் படைத்த அவர் ஒரு நாட்டின் தேசியப் புத்தமைப்பிற்கு வேண்டிய எல்லா முக்கிய

இயல்புகளையும் பெற்றிருந்தார். 'அவருடைய முறை முழுவதும் அவருடைய சொந்தப் படைப்பேயாகும். ரஞ்சித் சிங்கைப் போலன்றி அவர் தம் ஆட்சி முறையில் எந்த அயல் நாட்டு உதவி யையும் ஏற்றுக்கொள்ளவில்லை. அவருடைய படை அவருடைய நாட்டு மக்களாலேயே பயிற்சியளிக்கப்பட்டுப் போரில் ஈடுபடுத்தப் பட்டது; ஃபிரெஞ்சுக்காரர்களால் அல்ல. அவர் நிர்மாணித்தவை யெல்லாம் நீண்டகாலம்வரை நிலைபெற்றன. அவருடைய நிறு வனங்கள் எல்லாம் வியப்பார்வத்துடன் நோக்கப்பட்டன. ஒரு நூற்றுண்டுக்குப் பின் வெற்றிமிக்க பேஷ்வாக்களின் காலத்திலும் அவற்றைப் பின்பற்றியமைக்கும் நோக்கத்துடனும் அவை கவனிக் கப்பட்டன'. தேவையற்ற கொடிய வகையில் ஈடுபடும் இரக்க மற்ற படையெடுப்பாளர் அல்லர் அவர்; கொள்ளைக்காகவே கொள்ளையடிக்கவேண்டும் என்ற கொள்கையுடையவரும் அல்லர். போர்க்காலங்களில் அவர் முஸ்லிம் பெண்கள், குழந்தைகள் உட்பட எல்லாப் பெண்கள், குழந்தைகளிடமும் காட்டிய வீரஞ் செறிந்த பரிவு ஒழுக்கம் எதிர்த்திறனுய்வாளரான காபிகானுலும் புகழ்ந்துரைக்கப்பட்டுள்ளது. 'சிவாஜி எப்பொழுதும் தம்முடைய இராச்சியப் பகுதிகளில் இருந்த மக்களின் மதிப்பைக் காப்பாற்று வதில் முயற்சியுள்ளவராய் இருந்தார். அவருடைய கையில் வீழ்ந்த முகமதியப் பெண்கள், குழந்தைகள் ஆகியோரின் மானத்தையும், மதிப்பையும் காப்பாற்றுவதிலும் மிகு கவனத்துடன் இருந்தார். இதைப் பொறுத்தவரை அவர் இட்ட கட்டளைகள் மிகவும் கண்டிப் பாகவே இருந்தன. அவற்றை எவர் பின்பற்றாது போயினும், அவர் கடுந்தண்டனைக்கு உள்ளாகிவிடுவார்.' ராலின்ஸன் கீழ் வருமாறு உரைப்பதும் பொருத்தமானதேயாகும். 'அவர் வேண்டு மென்றே தேவையற்ற வகையிலோ கொடுமையாகக் காணப்பட வில்லை. போரில் ஈடுபடாதோரையும், மகுதிகளையும், பெண்களை யும், அதிகாரிகளையும் விடுதலை செய்து மரியாதை காட்டுவது முதலியவையெல்லாம் உண்மையில் சாதாரண நற்செயல்கள் அல்ல.' சிவாஜி தம் நாட்டில் ஓர் உள்நாட்டுப் பேரரசை நிலை நிறுத்த வேண்டும் என்ற குறிக்கோளைப் பெற்றிருந்தார். அந்த ஒரே நோக்கத்தைக் குறிக்கொண்டு இடைவிடாது உழைத்தார். ஆனுல், அதை முழுவதும் செயல்படுத்துவதற்கேற்ற காலம் அவருக்குக் கிடைக்கவில்லை.

சிவாஜி தம்முடைய சொந்த வாழ்க்கையில் அக்காலத்துப் பரவியிருந்த தீக்குணங்கள் எவையும் பற்றுதவராக வாழ்ந்தார். அவருடைய ஒழுக்க நற்குணங்கள் மிக உயர்ந்தவையாகவே இருந்தன. இளமையிலிருந்தே மதத்தில் உண்மைப்பற்றுக் கொண்டிருந்த அவர், தம்முடைய அன்னையாலும் தம்முடைய

குருவாலும் உபதேசிக்கப்பட்ட உயர்ந்த குறிக்கோள்களை அரசியல் அல்லது படையெடுப்புக் கடமைகளின் மத்தியிலும் மறந்துவிடாமல் கடைப்பிடித்தொழுகினர். மராட்டிய நாட்டின் முன்னேற்றத்திற்கு வலிமை வாய்ந்த ஒரு சக்தியாக மதத்தை ஆக்க வேண்டும் என்று அவர் முயன்றார். அதனால் இந்து மதத்தையும் கல்வியையும் எப்போதும் ஆதரித்துவந்தார். மதம் அவருக்குச் சரியான நடத்தையையும் தாராள மனப்பான்மையையும் வளர்க்கும் ஊற்றாகவே எப்போதும் இருந்துவந்தது. அது அவருடைய மனத்தை ஆக்ரமித்து அல்லது அவரை ஒரு மத வெறியராக்கி விடவில்லை' என்று தற்கால மராட்டிய நூலாசிரியர் ஒருவர் கூறுகிறார். மற்ற மதக் கொள்கைகளையும் மதித்துவந்தார். முஸ்லிம் முனிவர்களிடம் ஆழ்ந்த மதிப்பு வைத்திருந்தார். முஸ்லிம் கோயில்களிலும் மசூதிகளிலும் ஒளி விளக்கு ஏற்றி வைப்பதற்கு வரியில்லாத நிலங்களைத் தானமாகக் கொடுத்தார். சூரத்தை முதலில் அவர் தாக்குதல் செய்தபோது அவர் மிகவும் மரியாதையுடன் காபுச்சின் கிறிஸ்துவ சாமியார்களிடம் (Capuchin Fathers) நடந்துகொண்டார். அவரைக் கடுமையாகத் தாக்கி எழுதும் திறனுய்வாளரான காபீகான்கூட இவ்வாறு எழுதுகிறார்: 'ஆனால், அவர் (சிவாஜி) கொள்ளையடிக்கச் சென்ற தம் ஆள்களையெல்லாம் மசூதிகளுக்கோ, கடவுளின் நூலுக்கோ (குர்ரானுக்கோ), எந்தப் பெண்ணுக்கோ எவ்வித ஊறும் செய்யக் கூடாது என்று விதித்தார். தூய குர்ரான் பிரதி அவர் கைக்குக் கிடைத்தபோதெல்லாம் அவர் அதை மிகுந்த மதிப்புடன் போற்றிவைத்து, அதைத் தம்முடைய முஸ்லிம் படை வீரர்கள் யாருக்காவது கொடுத்துவிடுவார். அவருடைய ஆள்களினால் இந்து அல்லது முஸ்லிம் பெண்கள் சிறைப்பிடிக்கப்பட்டால், அவர்களுடைய உறவினர்கள் வந்து போதுமான ஈடுகட்டி அவர்களை விடுவித்துக்கொள்ளும் வரை அவர்களைக் கண்காணித்துவந்தார்.'

## உ. ஷாம்பூஜியும் அவருக்குப்பின் வந்தவர்களும்

சிவாஜிக்குப் பிறகு அவருடைய மூத்தமகன் ஷாம்பூஜி பட்டத்துக்கு வந்தார். அவர் இன்பவிருப்பினராய் இருந்தபோதிலும் தீரமுடையவராயுமிருந்தார். அவருடைய முக்கிய அறிவுரையாளர் வட இந்தியாவிலிருந்து வந்த கவிகுலஷ் (Kavi-Kulash) என்ற பிராமணராவர். அவருடைய ஒழுக்க நீதிகள் எல்லாம் ஓரளவு இகழத்தக்கவையாகவே இருந்தன. புதிய அரசரின் தலைமையில் மராட்டிய அரசு பலவீனப்பட்டது; ஆனால், முழுதும் செயலற்றுப் போய்விடவில்லை. ஷாம்பூஜி தாமே முகலாயத் தொந்தரவின் இயல்பை உணர்ந்திருந்தார். ஔரங்கசீப் தக்கணத்துக்குக் கொண்டுவந்திருந்த பெரும் படையைத் தீரத்துடனும்,

துணிவுடனும் எதிர்த்துப் போரிட்டார். கடைசியில்(1689 பிப்ரவரி 11ஆம் தேதியில்) சக்தி வாய்ந்த முகலாய அதிகாரியான முகர்ரப்கான் (Muqarrab Khan) என்பவரால் ரத்னகிரியிலிருந்து இருபத்திரண்டு மைல் தூரத்திலிருந்த சங்கமேஷ்வரத்தில் (Sangameshwar) திடீரென்று கைது செய்யப்பட்டார். அவருடன் அவருடைய மந்திரி கவிகுலஷும், அவருடைய முக்கிய வழியாளர்களுள் இருபத்தைந்து பேரும் சிறைப்பிடிக்கப்பட்டனர். இரண்டு முக்கிய சிறையாளிகளும் பகதூர்கரிலிருந்த பேரரசுப் பாசறைக்குக் கொண்டுவரப்பட்டுப் பொதுமக்கள் முன்பு ஊர்வலமாகக் கொண்டுவரப்பட்டனர். மூன்று வாரங்களுக்குமேல் சிறைப்பிடிக்கப்பட்டவர்கள் பல வகையிலும் சித்திரவதை செய்யப்பட்டு, கடைசியில் 1689ஆம் ஆண்டு மார்ச்சு 11ஆம் தேதி கொல்லப்பட்டனர். பேரரசினர் விரைவில் பல மராட்டியக் கோட்டைகளைப் பிடித்தனர்; ராய்கரிலிருந்த மராட்டியத் தலைநகரையும் முற்றுகையிட்டனர். ஆனால், ஷாம்பூஜியின் தம்பியான ராஜாராம் நகரிலிருந்து சந்நியாசி வேடத்தில் நழுவிச்சென்று பலவிதமான துணிகரச் செயல்களுக்குப் பின்பு கருநாடகத்திலிருந்த செஞ்சியை அடைந்தார். அதற்குள் தலைநகரம் கைப்பற்றப்பட்டுவிட்டது. முகலாயர்கள் ஷாம்பூஜியின் குழந்தை ஷாஹு உள்பட அவருடைய குடும்பம் முழுவதையும் சிறைப்பிடித்தனர். இவ்வாறு மராட்டிய அரசு முற்றிலும் கவிழ்ந்துவிட்டது போலத் தோன்றியது.

ஆனால், சிவாஜியால் ஊட்டப்பட்ட உணர்ச்சி மக்களிடத்திலிருந்து அவ்வளவு எளிதாக மறைந்துவிடவில்லை. விரைவில் மராட்டியர்கள் புத்துயிர் பெற்று எழுந்து மீண்டும் முகலாயர்களுக்கு எதிராகத் தேசிய எதிர்ப்புப் போரைச் செய்தனர். அப்போர் கடைசியில் முகலாயர்களின் வளங்களையெல்லாம் வற்றச் செய்துவிட்டது. மகாராட்டிரத்தில் மராட்டிய எழுச்சியை இராமச்சந்திர பந்த் (Ramachandra Pant), சங்கராஜி மால்ஹர் (Shankaraji Malhar), பரசுராம் திரிம்பக் (Parasuram Trimbak) போன்ற தலைவர்கள் தோற்றுவித்தனர். 1701-ல் பரசுராம் பிரதிநிதி ஆனார். கிழக்குக் கருநாடகத்தில் அரசியல் காரியங்கள் எல்லாம் முதல் பிரதிநிதியான பிரல்ஹாத் நிராஜியால் (Pralhad Niraji) திறமையுடன் நிருவகிக்கப்பட்டன. அப்போது மராட்டியத் தலைவர்கள் போரிட்டனர். தாங்களாகவே பல இடங்களின்மீது படையெடுத்தனர். உண்மையில் ஔரங்கசீப் 'மக்களின் போரை' எதிர்க்கவேண்டியிருந்தது. மராட்டியஅரசாங்கம் என்றோ, தாக்கி அழிப்பதற்கு அரசாங்கப்படை என்று ஒன்றும் இல்லாமையால் அவர் அப் போருக்கு முடிவுகட்ட இயலவில்லை. இரண்டு திறமை வாய்ந்த சுறுசுறுப்பு மிக்க மராட்டியத் தளபதியான சாந்தாஜி

கோர்பாடே (Santaji Ghorpade), தானாஜி ஜாதவா (Dhanaji Jadava) ஒவ்வொரு பகுதிக்கும் சென்று கொள்ளையடித்து நாட்டைப் பாழ்படுத்தினர். முகலாயர்களுக்குப் பெரு நஷ்டமும் குழப்பமும் ஏற்படும்படி செய்தார். மராட்டிய வரலாற்றுக் கோப்பாளர்களின் கருத்துப்படி அவர்கள் பல படையெடுப்புகளைச் செய்ததுடன் பேரரசின் பாசறைக்கேகூடப் படையெடுத்துச் சென்றனர். முகலாயத் தக்கணத்தின் பலஅதிகாரிகள் மராட்டியர் களுக்கு சௌத் வரி கொடுத்துத் தங்கள் உயிரைக் காப்பாற்றிக் கொண்டனர். அவர்களுள் சிலர் பேரரசரின் குடிமக்களைக் கொள்ளையடிப்பதில் மராட்டியர்களுடன் சேர்ந்துகொண்டனர். சர் ஜே.என். சர்க்கார் கூறுவது போல முகலாய ஆட்சிமுறை உண்மையில் கரைந்துவிட்டிருந்தது. நாட்டிலுள்ள தம் எல்லாப் படைகளுடனும் பேரரசர் வீற்றிருந்தமையால்தான் ஆட்சிமுறை சிறிது பிணைப்பாக இருந்தது. ஆனல், அது ஒரு மாயத் தோற்ற மாகவே காணப்பட்டது. அந்தக் காலத்தின் வீரர்களாகச் சாந்தாவும் பூனுவும் இருந்தனர். புத்தூக்க முயற்சி அவர்கள் கையிலேயே இருந்தது. பேரரசினரின் கணக்குகளையும் திட்டங் களையும் அவர்கள் தலைகீழாகக் கவிழ்த்துவிட்டனர்.

எட்டாண்டுகள் முற்றுகையைத் தாக்குப்பிடித்த செஞ்சி, 1698 ஜனவரியில் சுல்பிகர்கானல் பிடிக்கப்பட்டது. ஆனல், ராஜாராம் சதாராவுக்குத் தப்பி ஓடிவிட்டார். ஔரங்கசீப் தம் படைகளைச் சேர்த்து வைத்திருந்த வடக்குத் தக்கணத்தில் மீண்டும் போராட்டத்தைத் தொடங்கினர். 1699 டிசம்பரில் பேரரசினர் சதாராக் கோட்டையை முற்றுகையிட்டனர். ஆனல்,கோட்டைப் படை தீரத்துடன் கோட்டையைக் காத்துவந்தது. கடைசியில் 1700 மார்ச்சு 12ஆம் நாள் ராஜாராம் இறந்த பிறகு அவருடைய மந்திரி பரசுராம் சில நிபந்தனைகளுடன் கோட்டையை முகலாயர் களிடம் ஒப்புவித்தார். பின்பு பேரரசர் நேரில் வந்து மராட்டி யரின் கோட்டையை ஒவ்வொன்றாகப் பிடித்தார். ஆனல், ஒரு நாள் இழந்த கோட்டையை மறுநாளே மராட்டியர்கள் மீண்டும் பெற்றார்கள். இவ்வாறு முடிவில்லாமல் போர் நீண்டுகொண்டே சென்றது.

ராஜாராமின் மரணத்திற்குப் பின் அவருடைய விதவை மனைவியான தாராபாய் என்னும் மிகச் சிறந்த உள்ளுணர்ச்சிமிக்க மடந்தை அந்தச் சமயத்தில் தம்முடைய இள மகனை மூன்றாம் சிவாஜியின் பிரதிநிதியாக இருந்து மராட்டிய நாட்டின் ஆட்சியை நடத்திவந்தார். பகைமைத் திறனய்வாளரான காபீகான்கூட ஒப்புக் கொண்டபடி அவர் 'சாதுரியமும், அறிவுக் கூர்மையும்

உடைய ஒரு பெண்மணியாக இருந்தார். கணவர் உயிரோடிருக்கும் காலத்திலேயே உள்நாட்டுப் படைத்துறை விஷயங்களில் புகழத் தக்க நல்லறிவு படைத்திருந்தார். நாட்டின் ஆட்சி முறையை ஒழுங்குபடுத்திச் சிம்மாசனத்துக்காக எழுந்த போட்டிக் கட்சி களுக்குள்[1] ஏற்பட்ட போர்களை ஒடுக்கி, காபீகான் சொல்வது போல, அவர் 'பேரரசின் எல்லைப் பகுதியைப் பாழ்படுத்துவ தற்கான தீவிர முறைகளை மேற்கொண்டார். தக்கணத்தில் சிரோஞ், மாண்டேசர் (Mandasor), மாளவச்சுபா வரையிலிருந்த ஆறு சுபாக்களைக் கொள்ளையடித்து வரும்படி படைகளை அனுப் பினார்.' மராட்டியர்கள் ஏற்கெனவே 1699-ல் மாளவத்தின் மேல் படையெடுத்தனர்.

1703-ல் மராட்டியர்களின் ஒருபடையினர் ஒரு நூற்றுண்டாக முகலாய மாகாணமாக இருந்த பீராருக்குள் நுழைந்தனர். 1706-ல் அவர்கள் குஜராத்தின்மீது படையெடுத்தனர்; பரோ டாவைச் சிதைத்தனர். 1706 ஏப்ரல் அல்லது மே மாதத்தில் மராட்டியப் பெரும்படை ஒன்று அகமத் நகரிலிருந்த பேரரசின் பாசறையை அச்சுறுத்தியது. நீண்ட கடுமையான போராட்டத் துக்குப் பிறகே அப் படையினர் அங்கிருந்து வெளியேற்றப் பட்டனர். இவ்வாறு கொள்ளைப்படையெடுப்புகள்மூலம் தங்கள் வருவாய் வளங்களை மிகுதியான அளவில் மிகுத்துக்கொண்ட மராட்டியர்கள் அந்தச் சமயத்தில் செயல்முறையில் தக்கணத் திலும், மத்திய இந்தியாவின் மத்தியப் பகுதிகளிலும் இருந்த நிலைமையைக் கட்டுப்படுத்தும் தலைவர்களாக ஆய்விட்டனர். நேரில் பார்த்தவரான பீம்சேன் கூறுகிறார்: 'இராச்சியம் முழுவ திலும் மராட்டியர்கள் ஆதிக்கம் மிகுந்தவர்களாக ஆய்விட்டனர். பாதைகளை எல்லாம் அடைத்துவிட்டனர். கொள்ளையடித்துத் திருடுவதன்மூலம் வறுமைக்குத் தப்பித்து வளமார்ந்த செல் வத்தைப் பெற்றனர்.' அவர்களுடைய படைத்துறைத் தந்திரங் களும் ஒரு மாறுதலுக்கு உள்ளாயின. அம் மாறுதலின் உடனடி யான விளைவு அவர்களுக்கு நன்மையாகவே இருந்தது. 1704-ல் மனுச்சி குறிப்பிட்டுள்ளார். 'இந்த (மராட்டியத்) தலைவர்களும் அவர்களுடைய துருப்புகளும் இந்தக் காலத்தில் மிகுந்த நம்பிக்கை யுடன் செல்கின்றன. ஏனெனில், அவர்கள் முகலாயத் தளபதி களுக்கு அச்சமூட்டி அவர்களை அடக்கி வைத்திருக்கின்றனர். தற்போது அவர்களிடம் பீரங்கிகள், சிறு துப்பாக்கிகள், வில்கள், அம்புகள், அவர்களுடைய மூட்டை முடிச்சுகளையும் கூடாரப்

[1] தாராபாயும் அவருடைய மகனும் சேர்ந்த கட்சி; இரண்டாம் ஷாம்பூஜியின் தாயும் ராஜாராமின் மற்றொரு மனைவியுமான ராஜஸ் பாயின் கட்சி; முதலாம் ஷாம்பூஜி யின் மகனான ஷாஹுவை ஆதரித்த கட்சி.

பொருள்களையும் தூக்கிச் செல்லும் யானைகள், ஒட்டகங்கள் முதலியவை உள்ளன...சுருங்கக்கூறின், அவர்கள் முகலாயப்படைகளைப்




முகலாயப் பேரரசின் வீழ்ச்சி

போலவே எல்லாத் தளவாடங்களையும் பெற்றவராய் இடத்துக்கு இடம் செல்கின்றனர்...சில ஆண்டுகளுக்கு முன்பு இதுபோல அவர்கள் படையாகச் செல்லமுடியவில்லை, அக் காலத்தில் அவர்க

ளுடைய படைக்கலங்களாக இருந்தவை ஈட்டிகளும் இரண்டங்குல அகலமான நீண்ட வாள்களுமேயாகும். இவ்வாறான படைக்கலங் களுடன் அவர்கள் எல்லைப் பகுதிகளில் கொள்ளையடிக்க முற்பட்டு வந்தனர். இங்குமங்கும் கிடைத்தவற்றை எடுத்துக்கொண்ட னர். பிறகு தங்கள் இருப்பிடத்திற்குத் திரும்பினர். ஆனால், இப் போது அவர்கள் வெற்றிப் படையாளர்களைப்போலச் செல்கின்ற னர். முகலாயப் படைகளைப்பற்றி எவ்வித அச்சமும் இல்லாதவர் களாய் அவர்கள் காணப்படுகின்றனர்.' இவ்வாறு மராட்டியர் களை நசுக்குவதற்காக ஔரங்கசீப் செய்த அனைத்து முயற்சிகள் எல்லாம் வீணாயின. அவருக்குப் பின்பு பட்டத்துக்கு வந்த பலவீன மான அரசர்களால் எதிர்க்கமுடியாதபடி வெற்றியுடன் கூடிய ஆற்றலுடன் மராட்டிய தேசியம் உயிர் பெற்றது.

# 5. முகலாயப் பேரரசின் சீர்குலைவு

## 1. பிற்கால முகலாயப் பேரரசர்கள்

1707 மார்ச்சு மூன்றும் நாள் நேர்ந்த ஔரங்கசீப்பின் மரணம் மாபெரும் முகலாயப் பேரரசின் சீர்குலைவுக்கு ஓர் அடையாளமாக இருந்தது. தமக்குப் பிறகு தம் மக்களிடையே உள்நாட்டுப் போர் ஒன்று ஏற்படும் என்று ஔரங்கசீப் பயந்தார். அதனால் அதைத் தடுப்பதற்காக உயிரோடு வாழ்ந்த தம் மூன்று புதல்வர்களான மு'ஆஸ்ஸம், முகமது ஆஸம், முகமது காம்பக்ஷ்' இவர்களை அமைதியாகப் பேரரசைப் பங்கிட்டுக்கொள்ளுமாறு ஒரு விருப்பாவணம்(will)எழுதி வைத்தார் என்று சொல்லப்படுகிறது. தந்தை உயிர் துறந்தாரோ இல்லையோ, புதல்வர்கள் மூவரும் டில்லிச் சிம்மாசன உரிமைக்காகக் கடுமையான சகோதரச் சண்டைகளில் இறங்கலாயினர். மூன்று சகோதரர்களுள் மு'ஆஸ்ஸம் அப்போது காபூலின் கவர்னராகவும், ஆஸ்ஸம் குஜராத்தின் கவர்னராகவும், கடைசித் தம்பியான முகமது காம்பக்ஷ் பீஜப்பூரின் கவர்னராகவும் இருந்தனர். காம்பக்ஷ் 'பேரரசின் எல்லாப் பண்புகளையும்' புனைந்துகொண்டாலும் தக்கணத்தை விட்டுச் செல்ல முடியவில்லை. ஆனால், மூவரில் மூத்தவரான மு 'ஆஸ்ஸம் காபூலிலிருந்து ஆக்ராவுக்கு விரைந்து சென்றார். ஆஸ்ஸம் அதே நகரை நோக்கியே சென்றார். இறந்த தந்தையின் விருப்பப்படி பேரரசைப் பங்கிட்டுக் கொள்ளலாம் என்று மு 'ஆஸ்ஸம் ஆஸ்ஸமிடம் கூறினார். ஆனால், பின்னவர் அந்தக் கருத்துரைகளை ஏற்றுக் கொள்ளவில்லை. சிம்மாசனத்துக்குத் தமக்குள்ள உரிமைக்காகப் போரிடுவதென்று முடிவு செய்தார். வாளைத் தவிர வேறொன்றும் சிக்கலைத் தீர்க்கமுடியாத நிலை ஏற்பட்டது. இரண்டு சகோதரர்களும் உடனே வாளைக் கையிலேந்தினர். அவர்கள் 1707 ஜூன் மாதத்தில் ஆக்ராவிலிருந்து சில மைல் தூரத்தில் இருந்த ஜாஜௌ என்ற இடத்தில் சந்தித்தனர். அச் சந்திப்பில் ஆஸ்ஸம் தோல்வியுற்றதுடன் தம் உயிரையும் இழந்தார். இராஜபுதனத்துக்குக் குறுகியகாலப் படையெடுப்பு ஒன்றைச் செய்தபின் மூ 'ஆஸ்ஸம் தக்கணத்துக்குச் சென்றார்; ஹைதராபாத்துக்கருகில் காம்பக்ஷ் தோற்கடிக்கப்பட்டு 1708ஆம் ஆண்டுத் தொடக்கத்தில் காயங்களால் உயிர் துறந்தார்.

மு' ஆஸ்ஸம் பகதூர்ஷா (அல்லது முதலாம் ஷா ஆலம்) என்ற பட்டத்துடன் சிம்மாசனம் ஏறினர். மென்மையான, சமத்துவமான மன இயல்பை உடையவராயும், கற்றவராயும், பெருந்தன்மை மிக்கவராயும் தாராளகுணம் உடையவராயும் இருந்த போதிலும், அவர் பேரரசின் சீர்குலைவைத் தடுப்பதற்கு முடியாதபடி வயது முதிர்ந்தவராயிருந்தார். 1712 பிப்ரவரி 27-ல் அவர் மரணமடைந்தபிறகு, அவருடைய புதல்வர்களான ஜகாந்தர் ஷா (Jahandar Shah), அஸீமுஸ் ஷான் (Azim-us-Shan) ஜஹான் ஷா (Jahan Shah) ரஃபிவுஸ் ஷான் (Rafi-us-Shan) என்ற நால்வருக்குமிடையே மீண்டும் ஆட்சியுரிமைப் போர் தொடங்கியது. கடைசி மூவரும் போரில் கொல்லப்பட்டனர். ஜகாந்தார் ஷா சுல்பிகர் கானின் (Zulitiqar Khan) உதவியுடன் சிம்மாசனம் ஏறினர். சுல்பிகர்கான் அரசாங்கத்தின் முதன் மந்திரியானர். ஜகாந்தர் லால் குமாரி (Lal Kumari) என்ற பெயருடைய தமக்கு விருப்பமான ஓர் ஆரணங்கின் செல்வாக்குக்கு முழுதும் ஆட்பட்டிருந்தார். 'ஜகாந்தரின் குறுகிய ஆட்சிகாலத்தில் பலாத்காரம் பெரும் ஆட்சி பெற்றிருந்தது.' அக் காலம் பாடகர்கள், நாடோடிப் பாணர்கள், எல்லா மலைநாட்டுக் கூத்தர், நடிகர்கள் முதலிய எல்லாருக்கும் ஒரு சிறந்த காலமாக இருந்தது. எனினும், நீண்ட காலம் அவர் ஆண்டு அனுபவிக்கக் கொடுத்து வைக்கவில்லை. அஸீமுஸ் ஷானின் மகனை ஃபாருக்ஷியாரின் (Farrukhsiyar) ஆணையின்கீழ், அவர் சிம்மாசனத்திலிருந்து நீக்கப்பட்டு டில்லிக் கோட்டையில் கழுத்தை நெரித்துக் கொல்லப்பட்டார். ஃபாருக்ஷியார் தாமே பேரரசர் என்று கி.பி. 1713-ல் அறிவித்தார். பழைய அரசரைச் சிம்மாசனத்தில் வைத்த சுல்பிகர்கானும் தூக்கிலிடப்பட்டார்.

ஃபாருக்ஷியார் சிம்மாசனத்துக்கு வருவதற்கு இரண்டு சய்யிது சகோதரர்கள் உதவி புரிந்தனர். அவர்களுள் ஒருவர் பாட்னவின் துணைக் கவர்னரான ஹுஸேன் ஆலி ஆவர். மற்றவர் அலஹாபாத்தின் கவர்னர் அப்துல்லா ஆவர். அவர்கள் இருவரும் அதற்குப் பின் நாட்டின் உண்மையான அதிகாரத்தை செலுத்தத் தொடங்கினர். அவர்கள் சிம்மாசனத்தில் ஓர் இளவரசருக்குப் பிறகு ஓர் இளவரசராகப் பலரை அமர்த்தினர். அப்துல்லா வஸீரானர்; ஹுஸேன் ஆலி படையின் தலைமைத் தளபதியானர். முன்னவர் ஒரு படை வீரராயிருந்தமையாலும், உள்நாட்டு ஆட்சிமுறையில் முன் அனுபவம் இல்லாதவராய் இருந்தமையாலும், ஆட்சியின் முழுச் சுமையும் பின்னவர்மேல் விழுந்தது. ஃபாருக்ஷியார் 'பலவீனமானவராயும், கோழையாயும் வெறுக்கத் தக்கவராகவும்' இருந்தார். 'நல்லது அல்லது

கெட்டது எதிலும் உறுதிப்பாடு இல்லாதவராய்' இருந்தார். அவர் தம்முடைய அதிகாரத்தை நிலைநாட்ட முயன்ற முயற்சி, அவர் ஆட்சிக்காலத்தில் 'எங்கும் குழப்பமும் கலவரமும் நிறைந்ததாயும், மற்றொரு பேராசையான அவநிலை ஏற்படவும்' செய்தது: சய்யிதுக்கு எதிரான தம்முடைய நண்பர்களின், குறிப்பாக மீர்ஜும்லாவின் செல்வாக்குக்கு உட்பட்டு, அவர் ஆட்சியில் முதலிலிருந்தே சய்யிது மந்திரிகளிடம் நன்றியில்லாதவராய் நடந்து வந்தார். அதனால், பேரரசரைச் சிம்மாசனத்திலிருந்து நீக்கி அவரைக் குருடாக்கிக் கேவலமான முறையில் அவரைத் தூக்கிலிடும் அளவுக்கு அவர்களுடைய வெறுப்பு மிகுந்திருந்தது: அவர் தம்முடை எதிரிகளாய் இருக்கக்கூடியவர்களை நடத்திய முறையைக் காட்டிலும் மிகு கொடுமையாக சய்யிதுகள் அவரை நடத்தினார்கள் என்று கூறமுடியாது. அவருடைய தகுதியின்மை சிக்கல்கள், நன்றியறிவின்மை முதலியவற்றுக்காக அவருடைய மந்திரிகள் அவரை நீக்குவது இன்றியமையாதது ஆகிவிட்டது; ஆனால், உயர்ந்த பதவியிலிருந்தே அவர்களைப் போன்றவர்கள், 'கட்டாயம் செய்ய வேண்டிய செயல் ஒன்றை, அவர்கள் செய்த விதம் அளவுக்கு மீறிய கடுமையானதாகவும், வீழ்ச்சியுற்ற பேரரசின் தன்மானத்தைச் சிறிதும் மதிக்காததாகவும் இருந்தது. சிம்மாசனத்திலிருந்து நீக்கிய அரசரின் கண்ணைக் குருடாக்குவது வழக்கமான செயல்தான். அதற்காகச் சய்யிதுகளை நாம் குறிப்பாகக் குற்றம் கூறமுடியாது. ஆனால், அதன் பின்பும் சிறையிட்டுக் கடுமையாக வருத்தியது அளவுக்கு மீறிய கொடுமையாகும்: சிறைப்பட்டவரின் உயிரை வாங்கிவிடுதல் சிறிதும் விரும்பத்தகாத அடாச் செயலாகும்.'

அரசரை ஆக்குவோரான அப்துல்லாவும் ஹுசேன் ஆலியும் அப்போது ராபி-உஸ்-ஷானின்புதல்வர்களான ராபி-உத்-தரஜாத் ராபி-உத்-தௌலா என்ற இருவரையும் பொம்மை அரசர்களாக்கிச் சிம்மாசனத்தில் ஏற்றிவைத்தனர். ஆனால், சில மாதங்களுக்குள் 'பொம்மைப் பேரரசர்கள் தங்கள் ஆட்சியையே முழுதும் செலுத்தத் தீர்மானித்திருந்த' சய்யிதுகள், பஹாதுர் ஷாவின் நான்காவது மகனான ஜஹான்ஷாவின் மகனானவரும், பதினெட்டு வயது நிரம்பியவரும், முஹம்மது ஷா என்ற பட்டப் பெயருடன் சிம்மாசனம் ஏறியவருமான ரோஷன் அக்தர் என்ற இளைஞரே பொம்மை ராஜாவாக இருக்க மிகுந்த தகுதியானவர் என்று கண்டுபிடித்தனர். ஆனால்,சய்யிதுகள் எதிர்பார்த்தபடி அப் புதிய பேரரசர், அவர்கள் சொற்படி இணங்கி நடப்பவராய்க் காணப்படவில்லை. மந்திரிகள் ஏழாண்டு ஆட்சிக் காலத்தில் அவர்களுக்குப் பகைவர்களாகிவிட்ட பலர் அப் புதிய பேரரசரை

ஆதரித்தனர்; பேரரசரின் புதிய கூட்டாளிகளுள் மிகச் சிறந்த திறமை வாய்ந்தவர் தக்கணத்துப் புகழ்பெற்ற நிஸாம்-உல்-முல்க் ஆவர். நிஸாமைச் சீர்திருத்துவதற்காக மாளவத்திற்குப் புறப் பட்டுக் கொண்டிருக்கும்போது ஹுஸேன் அலி குத்திக் கொல்லப் பட்டார்; ராபி-உஸ்-ஷானின் மற்ருெரு மகனை முகம்மது இப்ராஹீம் என்ற மற்ருெரு நல்ல பொம்மை அரசரைச் சிம்மா சனத்தில் வைத்துத் தம்முடைய அதிகாரத்தை நீடித்துவைக்க அப்துல்லா முயன்ருர். ஆனுல், அவர் தோற்கடிக்கப்பட்டு 1720-ல் சிறைக்குள் வைக்கப்பட்டார்; 1722-ல் விஷம்மூலம் கொல்லப் பட்டார். புதிய வஸீரான முஹம்மது அமீன்கான் 1721-ல் இறந் தார்; அப் பதவியை ஏற்றுக்கொள்ளுமாறு கி. பி. 1722 பிப்ர வரியில் நிஸாம்-உல்-முல்க் அழைக்கப்பட்டார். அவர் சிறப்பான ஒரு செயல்வீரரானமையால், பேரரச அவையில் நிலவியிருந்த சூழ்நிலை அவருடைய மனப் பாங்குக்கு ஏற்றதாய் இருக்கவில்லை. விரைவில் அவர் தக்கணத்துக்குச் சென்று, அங்கே உண்மையில் ஒரு சுதந்திர இராச்சியத்தை நிறுவினுர். எனினும், பேரரச மேலாண்மையாகிய கற்பனை கடைசிவரை நீடித்திருந்தது. சய்யிது கள் வீழ்ச்சியும், நிஸாம்-உல்-முல்க் தக்கணத்துக்குப் புறப்பட்டுச் சென்றதும்கூட முஹம்மது ஷாவின் அதிகாரத்தையும் கௌரவத் தையும் அதிகரித்துவிடவில்லை. சியார் என்ற நூலின் ஆசிரியரான குலாம் ஹுஸேன் எழுதுவதுபோல, இளமையும் அழகும் செழுமி யிருந்த அவர் எல்லாவகையான இன்பங்களிலும் விருப்பினராய் இருந்தார். அதனுல், சோம்பல் வாழ்க்கையில் பழக்கப்பட்டுப் போனுர். அது அப் பேரரசின் சக்தியை எல்லாம் வீணுக்கி விட்டது.' விதி அவருக்கு நீண்ட ஆட்சிக் காலத்தை நல்கிய போதிலும் 'அவர் சிறிதும் கவனிப்பின்றிக் காரியங்கள் எல்லாம் அவற்றின் போக்கிலேயே நடக்கும்படி விட்டுவிட்டார். அதனுல் அதன் விளைவுகள் பெருங்கேடாய் முடிந்தன.' தக்கணம், அவுத்து, வங்காளம் முதலிய மாகாணங்கள் ஒவ்வொன்ருகப் பேரரசின் பிடியிலிருந்து நழுவின; மராட்டியர்கள் நீண்டதோர் எல்லைப் பரப்பில் தங்கள் அதிகாரத்தைச் செலுத்தினர்; ஆக்ராவுக்கு அருகில் ஜாத்துகள் சுதந்திரம் அடைந்தனர்; வடக்குக் கங்கைச் சமவெளியில் ரோஹில்கண்ட்(ருஹெல்கண்ட்)என்ற ராச்சியத்தை ருஹேலா ஆப்கானியர்கள் நிறுவினர்; பஞ்சாபில் சீக்கியர்கள் சுறுசுறுப்பாயினர். நாதிர்ஷாவின் படையெடுப்பும் டில்லிப் பேரர சுக்கு ஒரு பேரிடியாய் இருந்தது. இவ்வாறு ஔரங்கசீப் இறந்த முப்பதாண்டுகளுக்குள் பரந்த முகலாயப் பேரரசு அகில இந்திய அரசியல் அளவாயிருப்பதினின்று சீர்குலைந்து பல சுதந்திர அல்லது அரைச்சுதந்திர நாடுகளாகப் பிரிந்துவிட்டது.

முகம்மது ஷாவின் மகனும் அடுத்த பேரரசருமான அகமது ஷா எல்லாப் பக்கங்களிலும் அஞ்சத்தக்கவாறு பெருகியிருந்த சீர்குலைவுச் சக்திகளை வெற்றியுறச் சமாளிக்க முடியாதவராயிருந்தார். பேரரசு மிகு விரைவில் எல்லையில் மிகச் சுருங்கியது: டில்லியைச் சுற்றி ஒரு சிறு மாவட்டமாகச் சுருங்கியது. அப்போது அரசரை ஆக்கும் செயலில் சய்யிது சகோதரர்களைப் பின்பற்றியவரும், தக்கணத்தின் காலம் சென்ற நிஸாம்-உல்-முல்க்கின் பேரருமான வஸீர் காஜீ-உதீன் இமாத்-உல்-முல்க் (Ghazi-ud-din Imad ul-mulk) என்பவரால் பேரரசர் சிம்மாசனத்திலிருந்து நீக்கப்பட்டு 1754-ல் குருடாக்கப்பட்டார். காஸி உதீன் இமால்- உல்-முல்க் சிம்மாசனத்தில் ஜகந்தர் ஷாவின் மகனை அஸீஸ்-உதீனை வைத்தார். அஸீஸ்-உதீன் அதுவரை நீண்டகாலமாகச் சிறையில் இருந்தவர், அப்போது மாபெரும் ஔரங்கசீப்பைப் போலவே பட்டப் பெயர் புனைந்து கொண்டு தம்மை இரண்டாம் ஆலம்கீர் என்று அழைத்துக்கொண்டார். ஆனால், புதிய அரசர் 'முன்பு சிறையிலிருந்தது போலவே இப்போது சிம்மாசனச் சிறையில் இருப்பதை உணர்ந்தார். பேராற்றல் வாய்ந்த வஸீரின் பிடியிலிருந்து தம்மை விடுவித்துக் கொள்ள அவர் செய்த முயற்சி அவருடைய அழிவிலேயே சென்று முடிந்தது. ஏனெனில், வஸீரின் ஆணைகளால் அவர் கொல்லப்பட்டார். பேராசையும் கண்மூடித்தனமும் மிக்க இந்த வஸீரின் கொடுமை மிக்க பகைமையுணர்ச்சியைக் கண்டு இரண்டாம் ஆலம்கீரின் மகனும் அவருக்கு அடுத்துப் பட்டத்துக்கு வந்தவருமான இரண்டாம் ஷா ஆலம் இடத்துக்கு இடம் நாடோடியாகத் திரியும் நெருக்கடிக்கு ஆளாகி அல்லற்பட்டார். துரதிர்ஷ்டம் பிடித்த இந்த பேரரசர் பல முறை விதியின் விளையாட்டுகளுக்கு ஆட்பட்டுக் கடைசியில் ஆங்கிலேயரின் பாதுகாப்பில் சரணடைந்து, கி.பி. 1806-ல் அவர் இறக்கும்வரை அவர்களிடமிருந்து ஓய்வூதியம் பெறுபவராகவே வாழநேர்ந்தது. இரண்டாம் ஷா ஆலமின் மகன் இரண்டாம் அக்பர், பேரரசர் என்ற பட்டத்துடன் 1837 வரை டில்லியில் வாழ்ந்தார். பேரரசரின் மரபும் இரண்டாம் பஹாதூர்ஷாவுடன் அழிந்தது. அவர் சிப்பாய்க் கலகத்தினருக்கு உதவி செய்ததாகச் சந்தேகிக்கப்பட்டு ஆங்கிலேயர்களால் இரங்கூனுக்கு நாடு கடத்தப்பட்டார். அங்கே கி.பி. 1862-ல் அவர் இறந்தார்.

## 2. பிற்கால முகலாயப் பிரபுக்களின் மாறுதலுற்ற குணவியல்பும் கட்சிப் பிரிவுகளும்

பதினெட்டாம் நூற்றாண்டில் பிரபுக்களிடத்தில் ஏற்பட்ட சீர்குலைவு முகலாயப் பேரரசின் வீழ்ச்சியை விரைவு படுத்துவதில்

பெரும் பங்கு பெற்றதெனலாம். பதினாறு, பதினேழாம் நூற்றாண்டு களில் சில பிரபுக்கள் செய்துவந்த பயன்மிக்க செயல்களை இப் பிரபுக்கள் செய்வதை நிறுத்திவிட்டனர். நாட்டின் பெரும் துர திர்ஷ்ட வசமாக அவர்கள் தம் முன்னேற்றத்திலும், தனிப்பட்ட தங்களுடைய உயர்விலும் அதிக நாட்டம் உடையவர்களாய் மாறி விட்டனர். அவற்றை எய்துவதற்காக அவர்கள் நாட்டில் உள் நாட்டுப் போர்களும், பேராபத்துள்ள சதிகளும், மீட்க முடியாத குழப்பமும், அராஜகமும் தலை விரித்தாடும்படி செய்துவிட்டனர். சர் ஜாதுநாத் சர்க்கார் கூறுகிறார்: 'முகலாய வரலாற்றை ஆராய்ச்சி மனப்பான்மையுடன் படிக்கும் மாணவருக்குப் பிரபுக் களின் சீர்குலைவைத் தவிர வேறொன்றும் அவ்வளவு பெரிதாகத் தோன்றாது. தலைமைச் சிறப்புடையோர் ஒரு தலைமுறை வரைக் குந்தான் சிறப்புற வாழ்கின்றனர். பின்னர்த் தமக்குப் பின்பு தகுதி மிக்க சந்ததியினரை உண்டாக்கி வைக்காது சென்றுவிடு கின்றனர். பதினேழாம் நூற்றாண்டில் இந்தியாவின் வரலாற்றை உண்டாக்கிய பெருமைபெற்ற அப்துர் ரஹீமும், மஹாபத்தும் சாதுல்லாவும், மீர் ஜும்லாவும், இப்ராஹீமும், இஸ்லாம்கான் ரூமியும் தங்களுக்குள்ள அளவில் பாதியளவு பெற்றிருக்கும் புதல் வர்களையோ அல்லது பேரர்களையோகூட விட்டுச் செல்லவில்லை. இது நாட்டின் பிற்கால அரசர்களிடம் திறமையும், துணிந்து செயலாற்றும் திறனும் இல்லாமையின் விளைவாகும். ஆட்சிக்கு வேண்டிய தகுதியான ஆள்களைத் தேர்ந்தெடுக்கும் ஆற்றல் அவர் களிடம் காணப்படவில்லை. ஆனால், கீழ்மையான முகப் புகழ்ச்சி யாளர்களின் சுயநலம் மிகுந்த அறிவுரையின் வழியே நடந்து வந்தனர். இவ்வாறு பேரரசர் 'ஒரு சோம்பலுள்ளவராயும், மூட ராயும் இருக்கும்போது பிரபுக்களுக்குத் தலைவராயும், அவர் களுக்கு வழிகாட்டுபவராயும் இருக்க முடியவில்லை. அதனால், இயல்பாகவே பிரபுக்கள் அரசவையிலும், மாகாணங்களிலும், கட்டுப்படுத்தும் அதிகாரம் மிக்கவர்களின் தயவைப் பெற அவர்கள் பக்கம் சார்ந்திருந்தனர்,'

வெளிப்படையாகக் கூறுமிடத்து, பிரபுக்கள் இரண்டு கட்சி களாகப் பிரிந்திருந்தனர். இந் நாட்டிற்கே உரியவர்களும் இந்த நாட்டில் நீண்டகாலமாகக் குடியேறி வாழ்ந்துவந்தவர்களும் இந்துஸ்தானி அல்லது இந்திய- முஸ்லிம் கட்சியை உருவாக்கிக் கொண்டனர். இந்தப் பிரிவில் ஆப்கானியப் பிரபுக்களும், பார்ஹாப் (Barha) பிரதேசத்து சய்யிதுகளும், படக்ஷான் நாட்டி லிருந்து வந்தவர்களின் சந்ததியினராகிய கானிதௌரான்(Khan-i Dauran) பிரபுக்களும் சேர்ந்திருந்தனர். இந்த இந்திய முஸ்லிம்கள் தங்கள் இந்துத் தோழர்கள் உதவியையே பெரிதும் நம்பியிருந்

தனர். இந்துஸ்தானிக் கட்சிக்கு எதிராக ஒரு கட்சியைத் தோற்று வித்துக் கொண்ட வேறுவேறு இனத்தைச் சேர்ந்த அயல்நாட்டுப் பிரபுக்கள் எல்லாம் முகலாயர்கள் என்ற பொதுப் பெயரில் வழங்கப்பட்டனர். அவர்கள் தங்களுடைய பிறந்த நாட்டின்படி இரண்டு பிரிவுகளாகப் பிரிந்திருந்தனர். டிரான்சோக்சியானுவி லிருந்தும் மற்ற மத்திய ஆசியப் பகுதிகளிலிருந்தும் வந்தவர்களும், பெரும்பாலும் ஸுன்னி மதப்பிரிவைச் சார்ந்தவர்களும் துரானி யக் கட்சியை அமைத்துக்கொண்டனர். இப் பிரிவின் முதன்மை யான அங்கத்தினர்கள் முகம்மது அமீன்கானும் அவருடைய ஒன்று விட்ட சகோதரரும் நிஸாம்-உல்-முல்க் என்று பேரும் புகழும் பெற்ற சீன்கிலீச்கானுமாவர் (Chin Qilich Khan). பாரசீகப் பிரதேசங்களிலிருந்து வந்தவரும், ஷியா மதப்பிரிவைச் சேர்ந் தவரும் இரானிக் கட்சியை அமைத்துக்கொண்டனர். இக் கட்சியின் முக்கியமான அங்கத்தினர்கள் ஆஸாத்கானும், அரசரை ஆக்கு வோரான சுல்பிகர்கானும் ஆவர். இவையெல்லாம் சிறு கட்சிப் பிரிவுகளேயல்லாமல் தற்காலத்து அரசியல் கட்சிகளைப் போன் றவை அல்ல. தன்னலத்தைத் தவிர அவற்றின் அங்கத்தினர் களிடையே செயற்பாட்டின் ஒரு பொதுக்கொள்கையோ கட்சிக்கு உறுதியாகக் கட்டுப்பட்டிருப்பதோ காணப்படவில்லை. பஹாதூர் ஷா, ஜகாந்தர்ஷா இவர்களின் ஆட்சிகளில் இரானிக் கட்சி அதன் தலைவரான சுல்பிகர்கானின் தலைமையில் சிறப்புற்றிருந்தது என்பதை அறியும்போது அந்தக் காலத்தின் அரசியல் போராட் டங்களின் இயல்பை நாம் நன்கு அறிந்துகொள்ளலாம். ஆனுல், ஃபரூக்ஷியாரின் ஆட்சித் தொடக்கத்திலிருந்தே இந்துஸ்தானிக் கட்சி துரானியக் கட்சியுடன் தொடர்பு கொண்டு தன்னுடைய அதிகாரத்தை நிலைநாட்டிக்கொண்டுவந்தது. பிறகு துரானியர் களும் இரானியர்களும் சேர்ந்து இந்துஸ்தானிகளை அதிகாரத்தி லிருந்து அகற்ற முயன்றனர்.

## 3. அயல் நாட்டுப் படையெடுப்புகள்

### அ. நாதிர்ஷாவின் படையெடுப்பு

பாபர், அக்பர், ஔரங்கசீப் ஆகியோரின் தகுதியற்ற வழித் தோன்றல்களின் புகழ்பெற்ற ஆற்றல் இன்மையின் இயல்பான விளைவாக, முகலாய அரசு ஊழல் மலிந்ததாகவும், நிருவாகத்திறன் குறைந்ததாகவும் ஆயிற்று. இந்தியாவின் உள்ளே மட்டுமன்றி, இந்தியாவின் வெளியிலும் அது தன் மதிப்பினை இழந்தது. துருக் கிய ஆப்கானிய சுல்தானியத்தின் சீரழிவுக் காலத்தில் ஏற்பட்டது போன்றே மிகு பழங்காலத்திலிருந்தே வெளிநாட்டுப் படை யெடுப்பாளர்களின் ஆசையைத் தூண்டிவந்த புகழார்ந்த வளம்

நிரம்பிய இந் நாடு மீண்டும் அயல்நாட்டுப் படையெடுப்புக்கு இலக்காகியது. இந்தத் தடவை படையெடுப்பாளர் மத்திய ஆசியாவிலிருந்து வரவில்லை. ஆனல், பாரசீகத்திலிருந்தே வந்தனர். பாரசீகம் ஏற்கெனவே முகலாயர்களிடமிருந்து காந்தகாரைக் கைப்பற்றிக்கொண்டிருந்தது. பேரரசின் சிறந்த உயிர்நிலைப் பகுதியான வடமேற்கு எல்லைப்பகுதியை ஔரங்கசீப்பின் காலத்திலிருந்து முகலாயர்களால் காக்க முடியாமல் போனமை பாரசீகர்களுக்கு ஒரு சிறந்த வாய்ப்பை அளித்தது. 1736ஆம் ஆண்டளவில் அவர்கள் உள்நாட்டுத் தொல்லைகளிலிருந்து விடுப்பட்டனர். அதன் பிறகு அவர்கள் தைரியம்மிக்க துணிகரச் செயல்வீரரான நாதிர்ஷாவின் தலைமையில் இந்துஸ்தானத்தின் இதயத்திற்குள் துணிந்து ஊடுருவிச் செல்ல முற்பட்டனர். காபூல், பஞ்சாப் ஆகியவற்றின் கவர்னர்களாக இருந்த முறையே நாஸிர்கான், சகரியா கான் என்ற இருவரும் தங்கள் மாகாணங்களைக் காத்துக்கொள்ளச்செய்த எளிய முயற்சிகள் எல்லாம் வீணுயின. ஏனெனில் அரசவையில் தங்கள் அதிகாரத்திற்காகச் சண்டையிட்டுக் கொண்டிருந்த எதிர்கட்சித்தலைவர்கள் தோற்றுவித்த சூழ்ச்சிகளால்,காபூல் பஞ்சாப் கவர்னர்கள் டில்லி அரசவைக்கு உதவி செய்யும்படி, விண்ணப்பித்த முறையீடுகளைக் கேட்டு ஆவன செய்ய முடியாமல் போயிற்று. பதினெட்டாம் நூற்றுண்டின் நடுப்பகுதியின் இந்திய வரலாற்றுசிரியர்களின் மிகு முக்கியமானவர்களுள் ஒருவரான குலாம்ஹுஸேன், அவர்களுடைய ஆதரவற்ற தற்காப்பு நிலைமையைப் பின்வருமாறு விவரிக்கிறுர்: 'பாதைகளும் கணவாய்களும் புறக்கணிக்கப்பட்டிருந்தன. ஒவ்வொருவரும் கவனிப்பாரற்றுப் போக்குவரத்துப் புரிந்துகொண்டிருந்தனர். என்ன நடக்கிறது என்று அரசவைக்குச் செய்தி அனுப்புவார் யாருமில்லை. பேரரசரோ, அமைச்சரோ ஏன் எவ் வகையான செய்தியும் தங்கள் காதுகளுக்கு எட்டவில்லை' என்று எப்போதும் கேட்டதில்லை.

ஓர் எளிய குடும்பத்தில் பிறந்தவரும், ஒரு திருடர் தலைவராய் முன்பு இருந்தவருமான நாதிர்ஷா துன்பங்களும், துயரங்களும் மலிந்த வாழ்க்கையில் அடிப்பட்டவராய் இருந்தமையில் அவருக்குப் போதிய துணிவு, ஆற்றல், ஓய்வுகொள்ள வேண்டாத சக்தி முதலியவை ஏற்பட்டிருந்தன. கி.பி.1722-ல் ஷாஹுஸேன் சபவியிலிருந்து பல ஆப்கானியர்கள் பாரசீகத்தைக் கொடுமைப்படுத்தி வந்தபோது நாதிர்ஷா பாரசீகத்தை ஆப்கானியர்கள் கையிலிருந்து மீட்க உதவினுர். சிம்மாசனத்திலிருந்து நீக்கப்பட்ட அரசரான ஷா ஹுஸேனின் மகனும், பாரசீகத்தின் பட்டத்துக்கு திருப்பிக் கொண்டுவரப்பட்ட அரசருமான ஷா தஹ்மாஸ்பின் (Shah Tahmasp) ஊழியத்தில் கி.பி. 1727-ல் நாதிர்ஷா நுழைந்தார்.

தம் தலைவரின் திறமைக்குறைவைக் கண்டு நாதிர்ஷா அரசாங்கத்தின் மறை முக ஆட்சியாளரானார். கடைசியில் 1732-ல் அவரைச் சிம்மாசனத்திலிருந்து அகற்றினார். ஷா தஹ்மாஸ்பிற்குப் பின் பட்டத்திற்குரிய அவருடைய ஆண் குழந்தை இறந்ததனால் நாதிர் ஷா பெயரிலும் உண்மையாகவும் பாரசீகத்தின் அரசர் ஆனார்.

கி.பி. 1738-ல் நாதிர் இந்தியாவை நோக்கிப் புறப்படத் தொடங்கினார். முஹம்மது ஷா வாக்குறுதிகளை மீறியதாகக் கூறப்பட்டதும், டில்லி அரசவை அவருடைய தூதர்களை இழிவாக நடத்தியமையும் அவருடைய படையெடுப்புக்குப் போதிய காரணங்கள் ஆயின. முகலாயர்கள் வருந்தத்தக்க வகையில் வட மேற்கு எல்லைப்பகுதியைக் காக்காமல் புறக்கணித்திருந்தமையால் நாதிர் எளிதாகக் கி.பி. 1739-ல் கஜனி, காபூல், லாகூர் இவற்றைக் கைப்பற்றினார். பஞ்சாப் மாகாணம் முழுவதும் பெருங் குழப்பத்திலும் ஒழுங்கின்மையிலும் ஆழ்ந்திருக்கும்போது இன்ப விருப்பினரான பேரரசரும், அரசவையின் கம்பள-வீரர்களும் (Carpet Knights) அவரை எதிர்ப்பதற்காக ஒரு முயற்சியும் செய்ய வில்லை. நாதிரின் படையெடுப்பின்போது அவர்களுடைய நடத்தை, 'ஆற்றலின்மையை வெளிப்படுத்தும் வெட்கப்படத்தக்க திறமைக் குறைவின் கதையைக் கூறுவதாக இருந்தது. பாரசீகப்படை டில்லிக்குச் சில மைல் தூரத்திற்குள் வரும்வரைக்கும் தங்கள் சோம்பேறித்தனத்தை விட்டுவிட அவர்கள் தயாராயில்லை. பிறகு, பேரரசப் படைகள் பாரசீகர்களின்முன்னேற்றத்தைத் தடுப்பதற்காகப் புறப்பட்டுச் சென்று பானிபட்டு அருகே இருபது மைல் தூரத்திலிருந்த கர்னால் என்ற இடத்தில் பாசறையை அமைத்துக் கொண்டனர். தோல்வியுற்று நாதிர்ஷாவின் கைதியான டில்லிப் பேரரசர் நாதிரின் இரக்கத்தினால் விடுதலையுற்றுச் சமாதான உடன்படிக்கை செய்துகொள்ளத் துடித்தார்.

வெற்றி பெற்ற நாதிரும், தாழ்மையுற்ற டில்லிப் பேரரசரும் டில்லியில் நுழைந்தனர். அங்கே திவானிகான் மூலம் நாதிர், ஷாஜகானின் அரண்மனை அறைகளை அடைந்தார். முதலில் பேரரசின் நகரில் எவ்வித அமைதிக்குலைவும் ஏற்படவில்லை. ஆனால், சில குறும்புக்காரர்கள் நாதிர்ஷா இறந்துவிட்டார் என்று பொய் வதந்தியைப் பரப்பிவிட்டதால் ஒரு குழப்பம் ஏற்பட்டது. அதில் சில பாரசீக வீரர்கள் கொல்லப்பட்டனர். முதலில் நாதிர் வெறுமனே குழப்பத்தை ஒடுக்கவே முயற்சிகள் எடுத்துக்கொண்டார். ஆனால். தம்முடைய வீரர்கள் கொலையுண்ட காட்சியைக் கண்டதும் கொதித்தெழுந்தார். பழிக்குப்பழி வாங்கும் உணர்ச்சி அவருள்ளத்தில் உணர்ச்சிகளைக் கொழுந்துவிட்டெரியச் செய்தது.

விதிவசப்பட்ட டில்லி நகரின்குடிமக்களை எல்லாம் கொலைசெய்யும் படி பொதுவான ஆணை ஒன்றைப் பிறப்பித்தார். அந்தக் காலத்தில் எழுதப்பட்ட ஒரு வரலாற்றுக் குறிப்பின்படி ஆள்கொலை காலையில் எட்டு மணியிலிருந்து மாலை மூன்று மணிவரை நிகழ்ந்தது. 'விதிவசப்பட்ட எல்லைப் பகுதிகளில் வீடுகள் கொள்ளையிடப் பட்டன. எல்லா ஆண்களும் வயது வேறுபாட்டைக் கவனியாது கொல்லப்பட்டனர். எல்லாப் பெண்களும் அடிமைப்படுத்தப் பட்டு அரண்மனைக்கு இழுத்துச் செல்லப்பட்டனர். அழிவு வேலையில் ஈடுபட்டோர் பல வீடுகளைத் தீக்கிரையாக்கினர். அவர்களுடைய கொடுமைக்குப் பலியான பல இந்துக்களும் முஸ்லிம் களும், இறந்தவர்களும், புண்பட்டவர்களும் வேறுபாடின்றி ஒன்றாக வைத்து எரிக்கப்பட்டனர். உயிர் தப்பியவர்கள் நகர எல்லைக்குள்ளேயே சூழப்பட்டனர். ஏனெனில், சந்தையிடங்களைக் கொள்ளையடித்ததுடன் நாதிர் தானியக் களஞ்சியங்களையும் பூட்டி முத்திரையிடும்படி செய்தார். அங்கே காவலர்களை நியமித்தார். கிராமப்புறங்களைக் கொள்ளையிடும்படி சிறுசிறு படைகளை அனுப்பினர். பணத்திற்காக நகரின் முக்கியமான குடிமக்களைப் பாரசீக படைவீரர்கள் சித்திரவதை செய்தனர். அந்த இரங்கத் தக்க நகரின் ஆதரவற்ற பட்டினி கிடக்கும் மக்களிடமிருந்து பலாத்காரத்தினால் மூன்று கோடி ரூபாய் வசூலிக்கப்பட்டன. எட்டு வாரங்கள் அந் நகரம் கொடுமையும் கொலையும் மலிந்த பயங்கரக் காட்சியை அளித்தது. முகமது ஷாவின் பணிவுமிக்க வேண்டுகோளுக்கிரங்கி நாதிர்ஷா கடைசியில் தம் படை வீரர்களைத் திரும்ப அழைத்துக்கொண்டார். ஆனால், அப் படையெடுப்பாளர் தம் நாட்டிற்குத் திரும்பிச் செல்லும்வரை அந் நகரில் அமைதி கூடவில்லை. முகம்மது ஷா சிம்மாசனத்தை வைத்துக் கொண்டிருந்தார்; ஆனால், அவர் மீட்க முடியாத பல நஷ்டங் களுக்கு உள்ளானார். கொடுமைமிக்க அந்த வெற்றியாளர் புகழ் பெற்ற கோகினூர் வைரம் உள்பட எல்லா மணிமுடியின் நகைகளையும், விலைமதிப்புமிக்க ஷாஜஹானின் மயில் சிம்மாசனத்தையும், பேரரசர் முகமது ஷாவின் ஆணையின்படி எழுதப்பட்ட இந்து இசை பற்றிய புகழ்பெற்ற விளக்கங்கள் மிகுந்த பாரசீக கையெழுத்துப் படியையும் கவர்ந்து சென்றார். நாதரின் சொந்தச் செயலரின் மதிப்பீட்டின்படி நாதிர்ஷா டில்லியில் பதினைந்து கோடிரூபாய் நாணயத்தையும் பேரளவினதான நகைகள், ஆடைகள், தட்டுமுட்டுச் சாமான்கள், இன்னும் இவைபோன்ற விலை உயர்ந்தபொருள்கள் முதலியவற்றையும் பேரரசர் கிடங்கிலிருந்து வலிந்து பற்றிக்கொண்டார். மேலும், அவர் தம்முடன் 300 யானைகள், 10,000 குதிரைகள், 10,000 ஒட்டகங்கள் இவற்றை எடுத்துச் சென்றார். இவ்வாறு பாரசீகப் படையெடுப்பு, சீர்

குலைந்துகொண்டிருந்த டில்லிப் பேரரசின் வளங்களின் பொருளாதார நிலைமையில் மாபெரும் நஷ்டத்தை ஏற்படுத்திவிட்டது. சிந்து, காபூல், பஞ்சாபின் மேற் பகுதிகள் ஆகிய சிந்துவின் குறுக்கேயுள்ள மாகாணங்கள் எல்லாம் பாரசீகர்களுக்குக் கொடுக்க நேர்ந்தது. மேலும், முகலாயப் பேரரசு இதுவரை பெற்றிருந்த சிறிது கௌரவத்தையும் இழந்தது. அதனுடைய சீர்குலைவு இப்போது உலகம் எங்கணும் அறியத்தக்க ஒரு செய்தியாயிற்று. சுருங்கக் கூறுமிடத்து நாதிரின் படையெடுப்பு அப் பேரரசைத் 'தலைத்தூக்க முடியாதவாறு தாழ்வுறும்படி' செய்துவிட்டது. உள்நாட்டு வளங்களை எல்லாம் இழந்த அப் பேரரசு மீண்டும் குறைகளை நிறைவு செய்து புத்துயிர் பெறுவதற்குக் காலம் கிடைக்கவில்லை. ஏனெனில், 1739ஆம் ஆண்டுப் படையெடுப்புப் பிற வெளிநாட்டுப் படையெடுப்புகளுக்கு முன்னோடியாக அமைந்துவிட்டது. நாதிர் ஷாவின் பேரரசுக்கு உரியவராக அடுத்துப் பட்டத்துக்கு வந்த அகமதுஷா அப்தாலி (Ahmad Shah Abdali) இந்தியாவின்மீது படையெடுத்தார்.

## ஆ. அகமதுஷா அப்தாலியின் படையெடுப்புகள்

1747-ல் நாதிர் ஷாவைக் கொலைசெய்த பிறகு அப்தாலி கோத்திரத்தைச் சேர்ந்த ஆப்கானியத் தலைவரும், நாதிரின் அதிகாரிகளுள் ஒருவருமான அகமத்ஷா என்பவர் அதிகாரத்துக்கு வந்தார். ஆப்கானிஸ்தானத்தின் சுதந்திர அரசர் என்று தம்மை நிலைநிறுத்திக்கொள்வதில் வெற்றியுற்றார். 'காலத்தின் முத்து' என்று பொருள்படும் துர்ரீதுர்ரான் (Durri-i-Durran) என்று தம்மை வழங்கிக்கொண்டார். அவருடைய குடும்பம் அதற்குப் பிறகு துர்ரானி என்று வழங்கப்பட்டது. நாதிர்ஷா இந்தியாவுக்குச் சென்றிருந்த அகமதுஷா அப்தாலி தம் கண்களாலேயே பேரரசின் பலவீனத்தையும், பேரரசின் ஆற்றல் இன்மையையும் பிரபுக்களின் சுதந்திர உணர்ச்சியையும் கண்டிருந்தார். அதனால் தம்முடைய அதிகாரத்தைத் தம் நாட்டில் நிலைநாட்டிய பிறகு இந்தியாவின்மீது கி.பி. 1748 முதல் கி.பி. 1767 வரை பலமுறை படையெடுத்து வந்தார்.[1] இவை இதற்கு முற்பட்ட படையெடுப்புகளிலும் சிறிது முக்கியத்துவம் உடையவை. அவை இந்தியாவுக்கு உள்ளேயும் வெளியேயும் ஆப்கானிய மறுமலர்ச்சியைக் குறித்துள்ள முகலாயப்பேரரசின் சீர்குலைவின்போது மேலாண்மைக்காக புது முயற்சி செய்தன. உண்மையில் பதினெட்டாம் நூற்றாண்டின் ஒரு கருதத்தக்க பகுதியில் இந்திய வரலாற்றின் ஆப்கானிய

[1] கி.பி. 1769-ல் அகமதுஷா அப்தாலி பஞ்சாபின்மீது படையெடுத்ததாகச் சில ஆங்கிலப் பதிவேடுகள் குறிப்பிடுகின்றன. பார்க்க: Indian Historical Quarterly, December 1934.

மேலாண்மை முயற்சி ஒரு முக்கியமான கட்டமாகும். குறைந்தது இந்தியாவின் ஒரு பகுதியிலாவது அகமதுஷா அப்தாலி அரசியல் அதிகாரத்தை நிலைநாட்டும் விருப்பத்தைக் கொண்டிருக்க வேண்டும். எல்பின்ஸ்டோன் குறிப்பிடுவது போல அவர் இந்தப் படையெடுப்புகளை மேற்கொள்ள வேறு பிற நோக்கங்களும் இருந்தன. வெற்றிகரமான அயல்நாட்டுப் படையெடுப்புகளின் மூலம் பெறும் புகழினால் தம்முடைய சொந்த நாட்டில், தம்முடைய அதிகாரத்தை ஒருநிலைப்படுத்த முயன்றார். மேலும், அவர் இந்தியப் போர்களின்மூலம் கிடைக்கும் கொள்ளைப்பொருள்களைக் கொண்டு தம்முடைய படைக்குச் செலவுகள் செய்வதற்கும் ஆப்கானியப் பிரபுக்களுக்கு வெகுமதிகளும், மரியாதைகளும் செய்வதற்கும் முடியும் என்று நம்பினார்.

காந்தகார், காபூல் பெஷாவர் ஆகியவற்றை வென்ற பிறகு அகமதுஷா அப்தாலி முதன் முதலாக 1748 ஜனவரியில் 12,000 சிறந்த பயிற்சி பெற்ற துருப்புகளுடன் இந்தியாவின்மீது படையெடுத்தார். ஆனால், மான்பூர்ச் சண்டையில் முகலாய இளவரசரான அகமது ஷாவினாலும், காலம்சென்ற வஸீர் கமார்-உதீனின் (Qamar-ud-din) மகனை மீர் மன்னுவினாலும் (Mir Mannu) தோற்கடிக்கப்பட்டு ஓட்டம் பிடித்தார். மீர் மன்னு பஞ்சாபின் கவர்னராக நியமிக்கப்பட்டார். ஆனால், அவர் பதவியேற்று அமையு முன்னரே அகமதுஷா அப்தாலி பஞ்சாபின்மீது, இரண்டாம் முறையாகக் கி.பி. 1750-ல் படையெடுத்து அவரைத் தோற்கடித்து அந் நாட்டை வென்றார். டில்லி அரசவையிடம் உதவி பெறாத பஞ்சாப் கவர்னர் தம்முடைய எல்லா எதிர்ப்பும் வீணானதைக் கண்டு படையெடுப்பாளரிடம் சரணடைந்தார்.

1751 டிசம்பரில் அப்தாலி மூன்றாம் முறையாக இந்தியாவின் மீது படையெடுத்தார். மீண்டும் அவர் மீர்மன்னுவைத் தோற்கடித்துக் காஷ்மீரை வென்றார். முகலாயப் பேரரசரான அகமது ஷாவை சிர்ஹிண்ட் வரையுள்ள கிழக்குப்பகுதிகளைத் தமக்கு பிரித்துக் கொடுக்கும்படி வற்புறுத்தினார். இவ்வாறு முகலாயப் பேரரசு இன்னும் எல்லைப்பரப்பில் சுருங்கியது. இப்போது மீர் மன்னு லாகூரில் அப்தாலியின் கவர்னராக விடப்பட்டார். பஞ்சாபில் மீதியான வருவாயை வெற்றியாளருக்கு அனுப்பிவிடுவதாகவும் அவரிடமிருந்து, முடிவான கட்டளைகள் பெறாமல் முக்கியமான விவகாரங்களைச் செய்வதில்லை என்றும் உறுதி கூறினார். ஆனால், அப்தாலி இரண்டாம் ஆலம்கீர் காலத்தில் (1754—1759) மற்றொரு படையெடுப்புச் செய்தார். 1753 நவம்பரில் மீர்மன்னு இறந்த பிறகும், அவருக்குப்பின் பட்டத்துக்குரிய அவருடைய

ஆண் குழந்தை 1754 மே மாதத்தில் இறந்த பிறகும் பஞ்சாப் மாகாணம் முக்கியமாகப் பிரதிநிதி அன்னையாகிய முக்லானி பேகத்தின்(Mughlani Begam)தன் சுதந்திரம், தன் விருப்பம் இவற்றினுல் அமைதி குலேந்து அராஜகம் தலேவிரித்தாடுவதற்கு இடமாயிற்று. அவளிடமிருந்து உதவிக்கு வரும்படி வந்த வேண்டுகோளுக்கிணங்கச் சர்வ வல்லமையுள்ள டில்லி வஸீர் 'இமாத்-உல்-முல்க் பஞ்சாபுக்குப் படையுடன் சென்ருர். அவர் தாமே பஞ்சாபின்மேல் பெரு விருப்பம் கொண்டிருந்தார். 1756-ல் அவர் பஞ்சாபைத் தம் ஆணையின்கீழ்க் கொண்டுவந்து 'லாகூரின் தலேமையான பிரபு'வான மீர் முனிமை (Mir Munim) மாகாணக் கவர்னராக நியமித்தார். இதனுல் கோபம்கொண்ட அகமதுஷா அப்தாலி 1756 நவம்பரில் நான்காம் முறையாக மிகுந்த உறுதியான தீர்மானத்துடன் இந்தியாவின்மீது படையெடுத்தார். 1757 ஜனவரி 23ஆம் நாள் டில்லியை அடைந்தார். பேரரச நகரமான டில்லி மீண்டும் கொள்ளேயிடப்பட்டது. துரதிர்ஷ்டம் பிடித்த அதன் மக்கள் மீண்டும் சூறையாடலுக்கு உள்ளாயினர். இமாத்-உல்-முல்க் சரணடைந்தார். படையெடுப்பாளர் அவரை மன்னித்தார். பின்பு, முகலாயப் பேரரசரிடமிருந்து பஞ்சாப், காஷ்மீர், சிந்து, சிர்ஹிண்ட் மாவட்டம் இவற்றை முறையாகப் பிரித்துக் கொடுக்குமாறு செய்தார். டில்லியின் தெற்கேயுள்ள ஜாத் நாட்டைக் கொள்ளேயிட்ட பிறகு அப்தாலி 1757 ஏப்ரலில் இந்தியாவிலிருந்து திரும்பிச் சென்ருர். போகும்போது மிகுந்த கொள்ளேப் பொருளுடனும் பல சிறைப்பட்ட வீரர்களுடனும் சென்ருர். தம்முடைய மகனை தைமூர் ஷாவை லாகூரின்அரசப் பிரதிநிதியாகவும் திறமைமிக்க ஆப்கானிய தளபதியான ஜஹான் கானே அவருடைய வஸீராகவும் நியமித்துவிட்டுச் சென்ருர்.

1757 மே மாதம் முதல் 1758 ஏப்ரல் வரையுள்ள தைமூர் ஷாவின் ஆட்சியின் ஓராண்டுக் காலம் சட்டம் நிலவாத, குழப்பம் மலிந்த காலமாக இருந்தது. சீக்கிய இனத்தவர் தங்களின் தலேவர்களுள் ஒருவர் இழிவாக நடத்தப்பட்டதால் சீற்றமடைந்து எல்லாப் பக்கங்களிலிருந்தும் பொங்கியெழுந்து கிளர்ச்சி செய்தனர். ஜல்லந்தர் தோஆப்பின் கவர்னரான ஆதினுபேக்கான் ஆப்கானியர்களுக்கு எதிராகக் கிளர்ச்சி செய்து,மராட்டியர்களேத் தமக்கு உதவும்படி அழைத்தார். ரகுநாதராவின் தலேமையின்கீழ் வந்த ஒரு பெரிய மராட்டியப்படை 1758 ஏப்ரலில் பஞ்சாபின்மீது படையெடுத்தது. லாகூரைக் கைப்பற்றி, ஆப்கானியர்களே வெளியேற்றியது. ஆனுல், மராட்டியர்களின் லாகூர் ஆக்கிரமிப்பு ஆறுமாத காலத்திற்குமேல் நீடிக்கவில்லே. தைமூர் ஷாவை

அவர்கள் அகற்றியதற்காகப் பழிக்குப் பழி வாங்குவதற்காக அகமது ஷா அப்தாலி 1759 அக்டோபரில் ஐந்தாம் முறையாக இந்தியாவின்மீது படையெடுத்து வந்து கடைசியில் பஞ்சாபை வென்றார். மராட்டியர்களுக்கும் ஆப்கானியர்களுக்கும் இன்னும் பலமான மோதல் ஏற்படுவது இன்றியமையாததாய் இருந்தது. ஏனெனில், பெரும்பாலும் அவர்கள் இருவரும்தான் இந்துஸ் தானத்தில் அரசியல் மேலாண்மைக்காகப் போட்டியிட்டு வந்தனர். இம் மோதல் கி.பி. 1761 ஜனவரி 14ஆம் நாள் பானிப் பட்டுக்களத்தில் நிகழ்ந்தது. அகமதுஷா அப்தாலி கி.பி. 1762ஆம் ஆண்டின் முடிவில் இந்தியாவிலிருந்து வெளியே புறப்பட்டார். இரண்டாம் ஷா ஆலமைப் பேரரசராக மதித்து நடந்துகொள்ள வேண்டும் என்று இந்தியத் தலைவர்களுக்குக் கட்டளையிட்டார். நாஜிப்-உத்-தௌலாவும், முனீர்-உத்-தௌலாவும் இந்திய அரசாங்கத்தின் சார்பில் அப் பதவிக்கு ஆண்டுதோறும் நாற்பது இலட்சம் ரூபாய் கப்பம் செலுத்துவதாக ஒப்புக்கொண்டனர்.

இதற்குள் புத்துயிர் பெற்ற சீக்கியர்கள் காஜா ஆபித் (Khwaja Abid) என்ற லாகூரின் துர்ரானிக் கவர்னரைக் கொன்று நகரைப் பிடித்தனர். இதனால் 1764 மார்ச்சு மாதத்தில் அப்தாலி மீண்டும் லாகூருக்கு வந்தார். எனினும், அவருடைய நாட்டில் உள்நாட்டுக் கலகமும் அவருடைய வீரர்களிடையே கலகமும் ஏற்பட்டமையால் லாகூரில் இரண்டு வாரங்கள் தங்கியபின், அவருடைய நாட்டுக்கே திரும்பிச் செல்ல நேரிட்டது. அகமதுஷா அப்தாலி மீண்டும் 1767-ல் இந்தியாவின்மீது படையெடுத்தார். சீக்கியர்களை நன்கு முறியடித்து வெற்றி பெற முடியவில்லை. உள்நாட்டுத் தொந்தரவுகளால் முக்கியமாக அவருடைய படை களுக்கு ஒழுங்காகச் சம்பளம் கொடுக்கப் பெறுமல் இருந்தமை யால் ஆர்ப்பாட்டம் செய்ததால், 'கடைசியாகத் தோல்வியை உணர்ந்துகொண்டு' அவர் திரும்பிச் செல்ல நேரிட்டது. அவர் திரும்பிச் சென்றாரோ இல்லையோ அதற்குள் சீக்கியர்கள் மீண்டும் லாகூரையும் மற்ற நாட்டின் திறந்த பகுதிகளையும் கைப்பற்றினர். அகமது ஷா அப்தாலி 'பெஷாவர்' அட்டாக்கின் மேற்குப் பிரதேசம் ஆகியவற்றின்மீது அதிகாரம் வைத்துக்கொண்டு மஞ்சா (Manjha) மாவட்டங்களையும், லாகூர் உள்பட மத்திய பஞ்சாபையும் சீக்கியர்களுக்கு விட்டுவிட்டார். ஆனால், சிந்து சாகரும் மேற்குப் பஞ்சாபில் இருந்த ஜெக்தோ ஆப்பும் சர்ச்சைக்குரிய பகுதியாக இருந்தன. கடைசியில் அவை அப்தாலியின் தகுதியற்ற சந்ததியினரின் காலத்தில் சீக்கியர் களின் உரிமையாகவே ஆகிவிட்டன.

அகமது ஷா அப்தாலி அவசரமாக இந்தியாவிலிருந்து திரும்பிச் சென்றபோதிலும் அவருடைய படையெடுப்பு இந் நாட்டின் வரலாற்றைப் பல விதங்களிலும் பாதித்தது. முதலாவதாக, அது சீரழிந்து கொண்டிருந்த முகலாயப் பேரரசின் சீர்குலைவை விரைவுபடுத்தியது. இரண்டாவதாக அது மிகு விரைவாகப் பரந்துகொண்டிருந்த மராட்டியப் பேரரசுக்குப் பெரிய தடையை ஏற்படுத்தியது. மூன்றாவதாக, அது சீக்கிய சக்தியின் எழுச்சிக்கு மறைமுகமாக உதவியது. இந்தியாவில் அவருடைய வாழ்க்கை முடிவில் சீக்கியர்களின் சுதந்திரப் போராட்டத்தின் ஒரு பகுதியாகவே இருந்தது, கடைசியாக அகமது ஷா அப்தாலி காலத்திலும், அவருடைய மரணத்திற்குப் பின் சிறிது காலம் வரையிலும் ஆப்கானியப் படையெடுப்பின் தொந்தரவு ஆங்கிலேயரின் கிழக்கிந்தியக் கம்பெனியைப் பெருங் கவலைக்குள்ளாக்கியது.

## 4. புதிய முஸ்லிம் நாடுகளின் தோற்றம்

டில்லியின் மத்திய ஆட்சி அதிகாரம் சீர்குலைந்ததும் தவிர்க்க முடியாத விளைவாகிய பிரிந்து செல்லும் மனப்பான்மை பேரரசின் பல்வேறு பகுதிகளிலும் காணப்பட்டது. பெயர் அளவிற்கு மட்டும் டில்லியில் பேரரசராயிருந்தவருக்கு அடங்காமல் செயல் முறையில் மாகாண அரசப் பிரதிநிதிகள் தங்களைச் சுதந்திர ஆட்சியாளர்களாக ஆக்கிக்கொண்டனர். பெயரளவில் அதிகாரம் படைத்த பேரரசருக்குக் கொள்கையளவில் கீழ்ப்படிவதாக நடித்தனர். அவர்களுள் மிகவும் முக்கியமானவர்கள் தக்கணம், ஔத், வங்காளம் ஆகியவற்றின் சுபேதார்கள் ஆவர்.

### அ. தக்கணம்

நிஸாம்-உல்-முல்க் என்ற பெயரால் நன்கு அறியப்பட்ட மீர் கமார்-உதீன் சீன் கிலிக் கானின்கீழ்த் தக்கணச் சுபா சுதந்திரம் அடைந்தது. அவருடைய பாட்டனார் புக்காராவைச் சேர்ந்த காஜா ஆபித் ஷேய்க்-உல்-இஸ்லாம் என்பவர் பதினேழாம் நூற்றாண்டின் மத்தியில் இந்தியாவில் குடியேறி ஔரங்கசீப்பின் ஊழியத்தில் புகுந்தார். நிஸாமின் தந்தையான காஸி-உதீன் பெரோஸ் ஜங் கூட ஔரங்கசீப்பின் ஆட்சிக்காலத்தில் இந்தியாவுக்கு வந்தார். முகலாயப் பேரரசின் ஊழியத்தில் பல பதவிகளைப் பெற்றுப் புகழேணியில் ஏறினார். மீர் கமார் உதீனே அவருடைய பதின்மூன்றும் ஊழிய ஆண்டில் ஒரு சிறு படைத்தலைவரானார்; விரைவில் பதவி உயர்வு கிடைக்கப்பெற்றார். சீன்கிலிக் கான் என்ற பட்டப் பெயரும் அவருக்குக் கிடைத்தது. ஔரங்கசீப்

மரணம் அடைந்தபோது சீன் கிலிக் கான் பீஜப்பூரில் இருந்தார். பேரரசின் புதல்வர்களிடையே அரசுரிமைப் போர் நடந்த போது அவர் எவர் பக்கமும் சேராமல் பொதுநிலையை அனுசரித்தார். பஹதூர் ஷா அவரைத் தக்கணத்திலிருந்து அகற்றி ஔத்தின் கவர்னராக ஆக்கினார். அவர் சில காலம் பொது ஊழியத்திலிருந்து ஓய்வு பெற்றிருந்தார். ஆனால், பஹதூர் ஷாவின் ஆட்சிக் கால முடிவில் காஸி உதீன் பெரோஸ் ஜங் என்ற பட்டப்பெயருடன் மீண்டும் பொது ஊழியத்தில் புகுந்தார். ஃபாருக்ஷியார் அவரைத் தக்கணத்துக் கவர்னராக்கி (1713-ல்) அவர் தமக்காக உழைத்தமைக்காகக் கான் கானன், நிஸாம்-உல்-முல்க் பஹதூர் பத்ஜங் என்ற பட்டப் பெயர்களை அளித்தார். நிஸாம்-உல்-முல்க்கின் அரசப் பிரதிநிதி ஆட்சியின் தொடக்கத்திலிருந்தே அவர் தக்கணத்தில் மராட்டியர்களின் வளர்ந்துவரும் சக்தியை மேலோங்க வொட்டாமல் தடுத்துவந்தார், ஆனால், டில்லி அரசவையில் நேர்ந்த கட்சிப் பூசல்களினால் அவர் தக்கணத்து அரசப்பிரதிநிதிப் பதவியை இழக்க நேர்ந்தது. அது பிறகு சய்யிது ஹுஸேன் ஆலியிடம் அளிக்கப்பட்டது. நிஸாம்-உல்-முல்க் முராதாபாத்துக்கு மாற்றப்பட்டார். அதன்பின் அவரைப் பீஹாருக்கு மாற்றுவது என்றும் தீர்மானிக்கப்பட்டது. ஆனால், புதிய மாகாணத்தில் அவர் பதவி ஏற்றுக் கொள்ளும்முன்பு ஃபாருக்ஷியாரின் ஆட்சி முடிவுற்றது; அதனால் அவர் மாளவ அரசாங்கத்துக்கு மாற்றப்பட்டார். மாளவத்தில்தான் நிஸாம்-உல்-முல்க் தம் எதிர்காலப் பெருமைக்கு அடிக்கல் நாட்ட முடிந்தது. அவருடைய நடவடிக்கைகள் சய்யிதுகளின் சந்தேகத்தை கிளப்பின. அதனால் அவர்கள் முன்புகொடுத்திருந்த வாக்குறுதியை மீறி மீண்டும் அவருடைய மாற்றுதலுக்கு ஆணை அனுப்பினர். ஆனால், அந்த ஆணைக்குக் கீழ்ப்படிவதற்குப் பதிலாகப் படைக்கலம் தாங்குவதன்மூலம் தம் நிலையைக் காத்துக்கொள்ள அவர் தயாராய் இருந்தார். அவர் தில்வார் ஆலிகானையும், அலீம் ஆலிகானையும் தோற்கடித்துக் கொன்றார்; ஹுஸேன் ஆலி அவருக்கு எதிராகப் படையெடுத்து வரத் தயாராய் இருந்தபோது குத்திக் கொல்லப்பட்டார். சய்யிதுகளின் வீழ்ச்சிக்குப் பிறகு அவர் மீண்டும் 1720ஆம் ஆண்டின் முடிவில் தக்கணத்தின் தலைவரானார். அவருடைய ஒன்றுவிட்ட சகோதரரான வஸீர் அமீர்கான் 1721-ல் இறந்த போது நிஸாம்-உல்-முல்க் டில்லிக்கு அழைக்கப்பட்டு 1722 பிப்ரவரியில் வஸீர்ப் பதவியில் அமர்த்தப்பட்டார். ஆனால், டில்லி அரசவையின் மோசமான சூழ்நிலையில் அவர் மகிழ்ச்சியாக இருக்க முடியவில்லை. அங்கே முகம்மது ஷாவின் அற்ப புத்தியுள்ள அரசவையினர் அவருடைய ஆலோசனையை ஏற்க மறுத்து

அவருக்கு எதிராகப் பேரரசரின் மனம் மாறும்படி நயவஞ்சகமாகக் கூறினர். அதனால், அவர் கி.பி. 1723 டிசம்பர் மூன்றும் வாரத்தில் பேரரசரின் அனுமதியில்லாமல் தக்கணத்திற்குச் சென்றார். அவருடைய பகைவர்கள் எதையும் எளிதில் நம்பக் கூடிய பேரரசரிடம் அவர் கிளர்ச்சியில் ஈடுபட்டுள்ளார் என்று நம்பும்படி செய்து, ஹைதராபாத்தின் கவர்னரான முபாரிஸ் கானுக்கு அவரை எதிர்த்துச் சண்டை செய்யும்படியும், போரில் வெற்றி பெற்றால் தக்கணத்து அரசப் பிரதிநிதியாக ஆக்குவதாக உறுதி கூறியும், மறைவாக அறிக்கை அனுப்பும்படி தூண்டினர். ஆனால், நிஸாம்-உல்-முல்க் 1724 அக்டோபர் பதினோராம் நாள் பிராரில் சக்கர் கேதா (Sakhar Kheda) என்ற இடத்தில் முபாரிஸ் கானைத் தோற்கடித்துக் கொன்றதுடன், தக்கணத்தின் அரசப் பிரதிநிதியாக அறிவிக்கும்படியும், ஆஸப்-ஜா என்ற பட்டத்தைத் தமக்குக் கொடுக்கும்படியும் அப்பாவியான டில்லிப் பேரரசரை மறைமுகமாக வற்புறுத்தினர். ஆஸப்-ஜா என்ற அவருடைய சந்ததியினர் இன்னும் அப் பட்டத்தை வைத்துக்கொண்டுள்ளனர். 'இந்தச் சமயத்திலிருந்து நிஸாம்-உல்-முல்க்கின் உண்மையான சுதந்திர ஆட்சியும், இக் கால ஹைதராபாத் மாநிலத்தின் கால்கோளும் தொடங்குகின்றன என்று கொள்ளலாம்.' நிஸாம்-உல்-முல்க்கின் மிகச் சிறந்த தக்கண ஆட்சிமுறை காபிகானால் சிறப்பாகப் புகழ்ந்து பேசப்படுகிறது. குலாம் ஹுஸேன் கூட, 'அந்தப் பரந்த நிலப்பரப்பை (தக்கண சுபாவை) அவர் தனி அதிகாரத்துடன் முப்பத்தேழு ஆண்டுகளாக ஆட்சி செய்தார்' என்று கூறுகிறார். அவர் 1748 மே 21-ல் தம் முதுபெரும் வயதில் தம் தொண்ணூற்றேராவது ஆண்டில் உயிர் துறந்தார். அப்போது தக்கண அரசாங்கத்துச் சிம்மாசனச் சண்டைகள் சுபாவின் அரசியலில் ஐரோப்பிய வாணிகக் கம்பெனிகள் தீவிரமாக ஈடுபட வாய்ப்புகள் அளித்தன.

### ஆ. அவுத்து (Oudh)

அவுத்து சுபா அப்போது தற்கால அவுத்தும் அதன் கிழக்கே வாரணசியும், அதன் மேற்கே வாரணசியின் ஒரு பகுதி நிலப் பரப்பும், அலகாபாத்து, கான்பூர் இவற்றிற்கு அருகிலிருந்த சில மாவட்டங்களும் உடையதாயிருந்தது. அவுத்து இராச்சியத்தினை நிறுவியவர் குரோசனிலிருந்து வந்து குடியேறிய சாதத் கான் (Saadat Khan) ஆவார். 1724-ல் அவுத்தின் கவர்னராக நியமிக்கப்பட்டிருந்த அவர் விரைவில் அதிகாரத்திலும் புகழிலும் உயர்ந்தார்; நாதிர் ஷாவின் படையெடுப்பின்போது டில்லிக்கு அழைக்கப்பட்டார்; ஆனால், அதே ஆண்டில் அவர் தற்கொலை செய்துகொண்டார். அவுத்தின் அடுத்த கவர்னரான சப்தர் ஜங்,

சாதத் கானின் மருமகன் ஆவார். 1748-ல் டில்லிப் பேரரசின் வஸீராக நியமிக்கப்பட்ட சப்தர் ஜங், ஆஸப் ஜா நிஜாம்-உல்-முல்க்கின் மகனும் பேரனும் எதிர்ப்பு தெரிவித்துக்கொண்டே வந்திருப்பினும், 1754-ல் மரணம் அடையும் காலத்துக்குச் சிறிது முன்புவரை அக்கால இந்திய வரலாற்றில் முக்கியப் பங்கினை ஏற்றிருந்தார். அவருக்குப் பிறகு அவருடைய மகன் ஷுஜா-உத்-தௌலா அவுத் அரசாங்கத்தின் தலைவரானார். அவரும் பேரரசின் வஸீரானார். கி.பி. 1775-ல் இறக்கும்வரை வட இந்திய வரலாற்றில் முக்கியமான ஆட்சியாளர்களுள் ஒருவராய் இருந்தார்.

இ. வங்காள சுபா

ஔரங்கசீப்பினால் 1705-ல் வங்காள கவர்னராக நியமிக்கப்பட்ட முர்ஷித் குலி ஜாபர் கான் சில சமயம் உள்நாட்டு ஜமீன்தார்களிடமிருந்து வரி வசூல் செய்யக் கடுமையான முறைகளை மேற்கொண்டபோதும், வலிமையும் ஆற்றலும் வாய்ந்த ஓர் ஆட்சியாளராகவே விளங்கினார். அவர் வங்காளத் தலைநகரை டாக்காவிலிருந்து முர்ஷிதாபாத்துக்கு மாற்றினார். தம் மாகாணத்தின் பொருளாதார நலன்களை நன்கு உணர்ந்திருந்த அவர் ஆங்கிலேயக் கிழக்கிந்தியக் கம்பெனியின் ஊழியர்கள் தஸ்தக்கைப் புறக்கணிப்பதைத் தடுப்பதற்காக முயற்சிகளைச் செய்தார்; இந்திய வணிகர்கள் எவ்வளவு சுங்கம் கொடுத்தார்களோ, அதே அளவு அவர்களிடமிருந்தும் வசூல் செய்ய விரும்பினார். கி.பி. 1727-ல் அவர் இறந்தபிறகு அவருடைய மருமகன் ஷுஜாவுதீன் கான் அவருக்குப் பிறகு வங்காள அரசாங்கத்தின் தலைவர் ஆனார். ஷுஜாவுதீனின் ஆட்சிக்காலத்தில் தான் தெலியாகர்ஹி (Teliagarhi) (கிழக்கிந்திய இரயில்வே லூப் லைனில் இருந்த ஸாஹேப்கஞ்சுக்கருகில்) வரை கிழக்கு எல்லை பரந்திருந்த பீஹார் சுபா கி.பி. 1733-ல் வங்காளத்துடன் இணைக்கப்பட்டது. ஆலிவர்டி அதனுடைய நாயிப் நாஸிமாக அனுப்பப்பட்டார். ஷுஜாவுதீன் 1739-ல் இறந்தார். அதன்பின் அவருடைய மகன் சர்பராஸ் கான் வங்காள நவாப் ஆனார். ஆனால், புதிய நவாப்பின் ஆட்சி நீண்டகாலம் நடக்கும் விதி இல்லை. ஆலிவர்டி, அவருடைய சகோதரர் ஹாஜீ அஹ்மது, ராய் ராயன் ஆலம் சந்த், ஜகத் சேத் பதே சந்த் ஆகியோர் அவருக்கு எதிராகச் சதி செய்தனர். ஆலிவர்டி பீஹாரிலிருந்து படையுடன் சென்று கி.பி. 1740 ஏப்ரல் 10ஆம் நாள் ராஜ்மஹாலுக்கு அருகிலுள்ள கிரியா என்ற இடத்தில் சர்பராஸைத் தோற்கடித்துக் கொன்றுவிட்டு வங்காளத்தின் மஸ்னதைக் (Masnad) கைப்பற்றினார். விரும்பத் தகாத முறைகள் மூலம் அவர் தம் புதிய அதிகாரத்

துக்குப் பேரரசின் உறுதிப்பாட்டைப் பெற்ருர். பின்பு மாகாணத்தைச் சுதந்திரமான முறையில் ஆட்சி செய்யத் தொடங்கினர். துன்பச் சூழ்நிலேயில் வளர்ந்து பயிற்சி பெற்ற ஆலிவர்டி சில நல்ல குணங்களேயும் வளர்த்துக்கொண்டிருந்தார். அவை அவரை ஒரு திறமையான ஆட்சியாளராக ஆவதற்கு உதவின. குலாம் ஹுசேன், 'அறிவுமிக்கவராயும், கவனமிக்க வராயும், வீரமிக்க போர்வீரராயும் இருந்த அவரிடம் காணப் படாத தகுதிகள் இல்லே' என்று கூறுகிருர். ஐரோப்பியர்கள் பற்றிய அவருடைய கொள்கை கண்டிப்பானதாக, ஆனுல், ஒரு தலேச் சார்பற்றதாக இருந்தது. தவிர்க்க முடியாத சில சூழ்நிலே களில் மட்டும்தான் அவர்களிடமிருந்து நன்கொடைகளேப் பெற்ருர். ஆனுல், பலாத்காரத்தினுல் கைப்பற்றிய மஸ்னதை அமைதியாக அனுபவிப்பதற்கு விதி அவருக்கு ஓய்வைக் கொடுக்க வில்லே. அவருடைய ஆட்சியின் பெரும்பாலான காலத்தில் ஒவ்வோர் ஆண்டும் வங்காளத்தின்மீது மராட்டியர்கள் படை யெடுத்து வந்தது அவருக்குப் பெரும் கவலே தரத்தக்கதா யிருந்தது. அவருடைய ஆப்கானியத் தளபதிகள் பீஹாரிலுள்ள தர்பங்காத் தோழர்களுடன் உறவுகொண்டு செய்த கிளர்ச்சிகள் அவருடைய அதிகாரத்திற்குப் பெரும் பங்கம் விளேவிப்பனவா யிருந்தன. காஸிம் பஜாருக்கு அருகிலுள்ள மங்காராவில் மராத்தி யர்களின் தளபதிகளுள் ஒருவரான பாங்கர் பண்டிட்டைக் கொலே செய்வித்தும் அவர்களே எதிர்த்துப் போரிட முடியாதவராகி, ஆலிவர்டி கி.பி.1751 மே மாதம் அல்லது ஜுன் மாதத்தில் அவர்களுடன் ஓர் உடன்படிக்கை செய்துகொண்டார். அதன்படி சௌத் வரியாக அவர்களுக்கு ஆண்டுதோறும் பன்னிரண்டு இலட்சம் ரூபாய் கப்பமாகக் கட்டி விடுவதாகவும், ஒரிஸ்ஸாவின் ஒரு பகுதியிலிருந்து கிடைக்கும் வருவாயினேப் பிரித்துக் கொடுத்து விடுவதாகவும் ஒப்புக்கொண்டார். இது கடைசியில் மராத்தி யர்கள் ஒரிஸ்ஸாவின்மீது மேலாண்மை செலுத்துவதற்கு வழி வகுத்து விட்டது. சுமார் கி. பி. 1803 வரை ஆங்கிலேயர்கள் அவர்களுடைய அந்த மேலாண்மையை ஒழித்துக் கட்ட முடியாமல் இருந்தனர். ஆலிவர்டி கி.பி. 1756-ல் உயிர் நீத்தார். அவருக்குப் பின் அவரால் பட்டத்துக்குரியவராக நியமிக்கப்பட்ட அவருடைய செல்லப் பேரரான நவாப் சிராஜ்-உத்-தௌலா என்று நாடு முழுவதும் அறியப்பட்ட மீர்ஸா முகமதுவுக்கு வங்கா ளத்தின் மஸ்னத் உரித்தாயிற்று. சிராஜ்-உத்-தௌலாவின் ஓர் ஆண்டு இரண்டு மாத கால ஆட்சி வங்காள வரலாற் றிலும், இந்திய வரலாற்றிலும் ஒரு திருப்பு மையத்தை ஏற்படுத்திவிட்டது.

## 5. இந்துக்களின் அரசியல் புத்துயிர்ப்பு

பதினெட்டாம் நூற்றுண்டில் இந்திய வரலாற்றின் ஒரு சிறப்பான கூறு இந்துக்களின் புத்துயிர்ப்பாகும். எனினும், அப் புத்துயிர்ப்பு அகில இந்திய அடிப்படையில் தேசிய, மத அல்லது பண்பாட்டு மறுமலர்ச்சியின் உணர்ச்சியாய் விளையவில்லை. ஆனுல் ராஜபுத்திரர்கள், சீக்கியர்கள், ஜாத்துகள், மராட்டியர்கள் போன்ற பல்வேறு இந்து, அரை இந்து அரசுகள் முகலாயப் பேரரசு வீழ்ச்சியின்மீது தங்கள் அரசியல் மேலாண்மையை முறையே நிறுவும் தனித்தனி முயற்சிகளினுல் விளைந்த ஒன்ருகும்.

### அ. ராஜபுத்திரர்கள்

ராஜபுத்திரர்களின் முதன்மையான ராச்சியங்களான மேவார் (உதய்பூர்), மார்வார் (ஜோத்பூர்), ஆம்பர் (ஜெய்ப்பூர்) போன்றவை பேரரசிடம் கொண்டிருந்த அனுதாபம் ஔரங்கசீப்பினுல் மாற்றப்பட்டுவிட்டமையின், அப் பேரரசர் இறந்த பிறகு பேரரசுக்கு உட்பட்டிருப்பதினின்றும் விடுதலை பெற அவை முயன்றன. முதலில் அவை பகதூர் ஷாவினுல் அடிபணியும்படி செய்யப்பட்டன. ஆனுல், மிகு விரைவில் ஜோத்பூரைச் சார்ந்த அஜித்சிங்கும், ஆம்பர் நாட்டு இரண்டாம் ஜெயசிங்கும், துளசி தாஸ் ராத்தோரும் 1708 ஏப்ரல் 30ஆம் நாள் பேரரசரின் பாசறையினின்றும் புறப்பட்டுச் சென்று அவருக்கெதிராக ஒரு கூட்டுறவுக் கழகத்தை உருவாக்கினர். சிர்ஹிண்டின் வடக்கே சீக்கியர்கள் எழுச்சி பெற்று வந்தமையால் பகதூர் ஷா இணக்க முறைகளால் ராஜபுத்திரர்களைச் சமாதானப்படுத்த முயன்ருர். ஆனுல், அவருடைய இறப்புக்குப்பின் ஏற்பட்ட குழப்பக்காலத்தில் அஜித்சிங்கு பேரரசுக்கு உட்பட்ட பகுதிகளின்மீது படையெடுத்தார். மார்வார்த் தலைவரை அடக்குவதற்காகச் சய்யிது ஹூஸேன் ஆலி அனுப்பப்பட்டார். ஆனுல், அக்காலத்து அரசவை, அரசியல் நிலை, பேரரசரும் சய்யிதுக்கு எதிரான குழுவும் 'எவ்விதத்திலாவது ஹூசேன் ஆலியைக் கொன்றுவிடுமாறு' ராஜபுத்திர ஆட்சியாளரை இரகசியமாகத் தூண்டுமளவுக்கு மோசமாக இருந்தது. 'ஹூசேன் ஆலியைக் கொன்ருல் பக்ஷியின் முழுச் சொத்தும் செல்வமும் ராஜபுத்திர ஆட்சியாளர்க்கே உரிமையாகும் என்றும், மேலும் மற்றப் பரிசுகளும் கிடைக்கும்' என்றும் அவர்கள் கூறினர். எனினும், அஜித்சிங்கு இந்த அறிவுரைகளின்படி நடக்கவில்லை. ஒரு சண்டைகூட இல்லாமல் ஹூஸேன் ஆலியிடம் நட்புக்கொண்டார்; பேரரசருக்குத் தம்முடைய மகளிருள் ஒருவரை மணம் செய்து கொடுப்பதாகக் கூறி அவரிடம் அமைதி உடன்படிக்கை செய்து கொண்டார். திருமணம் அடுத்த ஆண்டு நடந்தேறியது.

அதிலிருந்து ஜோத்பூர், ஜெயப்பூர் தலைவர்கள் டில்லி அரசியலில் முக்கியமான அங்கம் வகித்தனர். 'தக்க சமயத்தில் தனித்திருந்தும் அல்லது சேர்ந்திருந்தும் பேரரசின் ஒரு பெரும் பகுதியைத் தங்களுக்கு உரிமையாகச் சேர்த்துக்கொண்டனர்.' சய்யிதுகள் அவர்களைத் தங்களுடைய கட்சியில் சேர்த்துக்கொள்ள முயன்றனர். அவர்கள் தங்கள் சொந்த இராச்சியப் பகுதிகளை முழு அதிகாரத்துடன் ஆண்டுகொண்டே வேறு சில உத்தியோகங்கள் வகிக்குமாறு செய்யப்பட்டனர். அஜித்சிங்கு 1721 வரை ஆஜ்மீர், குஜராத் இவற்றின் கவர்னராயிருந்தார். முகம்மது ஷாவின் ஆட்சிக் காலத்தில் ஜெய்ப்பூரைச் சேர்ந்த இரண்டாம் ஜெயசிங்கு சூரத்தின் கவர்னராக நியமிக்கப்பட்டார். சய்யிதுகளின் வீழ்ச்சிக்குப் பிறகு ஆக்ரா அரசாங்கத்தையும் அவர் பெற்றார். 'இவ்வாறு இந்தத் திறந்த எல்லைப்பகுதியில் முகலாயர்களின் மிகவும் நம்பிக்கைக்குரியரல்லாத எல்லைக்காப்பாளர்களான இந்த இரு அரசர்கள் கையிலும் டில்லியின் தெற்கே அறுபதுமைல் தூரத்திலிருந்து சூரத்தின் கடற்கரை வரையிலுமுள்ள பகுதி இருந்தது.' அஜித்சிங்குமேற்கு இந்தியாவில் இருந்த மராட்டியர்களின் நடவடிக்கைகளுக்கு மறைமுகமாக உதவி செய்தார்; அதனால் குஜராத் அரசாங்கத்திலிருந்து நீக்கப்பட்டார். அவர் தம்முடைய மகனை பக்தி சிங்கின் கையினாலேயே அவலமும் மறை பொருளும் நிறைந்த முறையில் கொலை செய்யப்பட்டார். ராஜபுத்திரர்களின் புத்துயிர்ப்புத் தாற்காலிகமானதாகவே இருந்தது. உள்நாட்டுக் குழப்பத்தின் வருந்தத் தக்க நிலையும், அயல் நாட்டுச் சுரண்டலும், அவர்கள் நாட்டுக்கு விரைவில் வரவிருந்தன.

## ஆ. சீக்கியர்கள்

1708-ல் குரு கோவிந்த் ஓர் ஆப்கானியனால் கொல்லப்பட்டார். அக் கொலைக்குப் பின்பு சீக்கியர்கள் பாந்தா என்பவரைத் தங்கள் தலைவராக்கினர். அவர் வடக்கு நோக்கிச் சென்று சீக்கியர்களுள் பெரும் எண்ணிக்கையுடையோரை ஒன்றுகூட்டிக் கொண்டு, குருகோவிந்தின் குழந்தையைக் கொன்றவனும், சிர்ஹிண்டின் பௌஜ்தாருமான வஸீர்கானைக் கொன்று சிர்ஹிண்டைக் கைப்பற்றினார். அடுத்துச் சட்லஜ், யமுனை நதிகளுக்கிடையேயுள்ள நிலப்பகுதி அவருடைய அதிகாரத்தின்கீழ் வந்தது. அவர் நாஹன், சதௌரா என்ற இடங்களுக்கு மத்தியிலிருந்த முக்லிஸ்பூரில் (Mukhlispur) லோஹார்க் கோட்டை (குருதியும் இரும்பும் கலந்த கோட்டை) ஒன்றை நிறுவினார். அங்கே அவர் 'அரசாட்சி செய்யும் ஆட்சியாளரைப் போல் நினைத்துக்கொண்டு' தம் சொந்தப் பெயரில் நாணயங்களை அச்சிட்டார். பேரரசர் அவருக்கு

எதிராகப் படையெடுத்துச் சென்று லோஹார்க் கோட்டையை முற்றுகையிட்டார். அதனால், அவர் தம்முடைய ஆதரவாளர்கள் பலருடன் லாகூரின் வடக்கே இருந்த மலைகளுக்கு ஓடிச் சென்றார். எனினும், பகதூர் ஷா இறந்த பிறகு பாந்தா வெளிப்பட்டு, சதௌரா நகரைக் கைப்பற்றி, லோஹார்க் கோட்டையைத் திரும்பப் பெற்றார். மீண்டும் சிர்ஹிண்ட் மாகாணத்தைக் கொள்ளையிட்டார். ஆனால், 1715-ல் அவர் குர்தாஸ்பூர்க் கோட்டையில் முற்றுகையிடப்பட்டார். சீக்கியர்கள் 'தங்களுக்குள் தியாகஞ்செய்து உயிர் விடுவதாக, போட்டி போட்டுக்கொண்டு' தீரத்துடன் போர் செய்தனர். அவர்களுள் பலர் நீண்ட கடுமையான எதிர்ப்புக்குப்பின் சிறைப்பிடிக்கப்பட்டனர்.' பாந்தாவும் அவருடைய ஆதரவாளர்களும் டில்லிக்கு அனுப்பப்பட்டனர். அங்கே அவர்கள் இரக்கமின்றி நடத்தப்பட்டனர். 'ஒவ்வொரு சீக்கியத் தலைவருக்கும் ஒவ்வொரு பரிசு கொடுக்கப்பட்டது.' ஒரு பிரபு இகழ்ந்துரைக்கும்போது பாந்தா கூறினார். 'தீயோருக்குத் தண்டனை கொடுப்பதற்காகக் கடவுளின் கையில் ஒரு சவுக்காக இருந்தேன். இப்போது சர்வ வல்லமையுள்ள இறைவனுக்கு எதிராகச் செய்த குற்றங்களின் பயனை அனுபவிக்கிறேன்.' அவருடைய கண்களுக்கு முன்னரே அவருடைய சொந்த மகன் கொல்லப்பட்டான். அவரும் 'யானைகளின் பாதங்களில் மிதியுண்ணச் செய்து சித்திரவதை செய்யப்பட்டுக் கொல்லப்பட்டார். இவ்வாறு 1716-ல் சீக்கிய நாட்டின் வளமான பேறுகள் எல்லாம் மிகு விரைவில் நலிந்து போயின.'

ஆனால், சீக்கியர்களின் படைத்துறை வலிமை முற்றிலும் அழிக்கப்பட முடியாததாகவே இருந்தது. நானக், கோவிந்த் இவர்களின் கொள்கைகள் 'மக்களின் உள்ளத்தில் ஆழமாகப் பதிந்துவிட்டன. உழவரும் இயந்திரத் தொழிலாளிகளும் மறைமுகமாகத் தங்கள் நம்பிக்கைகளை வளர்த்தனர். மிகவும் அதிகமான ஆர்வம் படைத்தவர்கள் மிகுதியாகப் பழிக்குப் பழி வாங்கி விரைவில் வெற்றியடைய வேண்டும் என்ற நம்பிக்கை கொண்டிருந்தனர்.' சீக்கியர்கள் படிப்படியாகத் தங்களுக்குள் ஒழுங்குமுறைகளை ஏற்படுத்திக்கொண்டனர். ஃபைஸுல்லாப்பூர் (Fyzullapur) வாசியான காபூர் சிங்கு ஓர் அமைப்பைத் தொடங்கினார். அது பிற்காலத்தில் புகழ் பெற்ற தால் கால்சா (Dal Khalsa) அல்லது சீக்கியர்களின் மதவழிபாட்டு முறையாக மாறியது. நாதிர்ஷாவின் படையெடுப்பை அடுத்து ஏற்பட்ட குழப்பங்களும் அமைதிக் குலைவுகளும் சீக்கியர்களால் தங்கள் பொருளாதார வளத்தையும், படைபலத்தையும் பெருக்கிக்கொள்ளப் பயன்படுத்தப்பட்டன. 'எந்தச் சூழ்நிலையிலும் அடிப்படுத்த முடியாத சீக்கியர்கள்

இப்போது இன்னும் அரிதானவர்களாயினர்'. அவர்கள் ரவி நதிக் கரையில் தலேவால் என்ற இடத்தில் ஒரு கோட்டையைக் கட்டினர். சுற்றிலுமுள்ள பகுதிகளைக் கொள்ளையடித்துக்கொண்டே லாகூரின் எல்லையருகே சென்றுவிட்டனர். அஹ்மது ஷா அப்தாலியின் படையெடுப்பும் சீக்கியர்களின் வலிமை ஓங்குவதற்குப் பெருமளவு உதவியது. 1752-க்குப் பிறகு அவர்கள் சில தோல்விகளைக் கண்டாலும் கடைசியில் முழு வெற்றியே அடைந்தனர். குறிப்பாக மூன்றும் பானிப்பட்டு யுத்தத்திற்குப் பிறகு நாட்டின் குழப்பமான அரசியல் நிலையைச் சாதகமாகப் பயன்படுத்திக் கொண்டு தங்களை ஒழுங்குற அமைத்துக்கொண்டு போதுமான அளவு பலப்படுத்திக் கொண்டனர். அப்தாலி திரும்பி வரும் போது அவருக்குப் பெருந்தொல்லைகளைக் கொடுத்தனர். அடுத்த படையெடுப்புகளின்போதும் அப்தாலியை எதிர்த்தனர். 1767-ல் அவருடைய படையெடுப்புக்குப் பின்பு திறந்த நாட்டை முழுவதையும் மீண்டும் வசப்படுத்திக்கொண்டனர்.

### இ. ஜாத்துகள்

ஔரங்கசீப்பின் ஆட்சிக்கால முடிவில் ஜாத்துகளின் முதல் கொள்ளைக் கூட்டத்தினர் ராஜாராம், பஜ்ஜா (Bhajja), சூராமன் (Churaman) போன்ற தனித்தனிக் கிராமத் தலைவர்களின்கீழ் டில்லி, ஆக்ரா இவற்றைச் சுற்றிக் கொள்ளையடித்துவந்து தங்கள் சக்தியைப் பெருக்கிக்கொண்டனர். ஆனுல், அவர்களால் அடையக்கூடிய சாதனைகள் யாவும் 1721-ல் இரண்டாம் சவாய் ஜெய சிங்கு, தூன் (Thun) என்ற இடத்திலிருந்து சூராமனின் கோட்டையைப் பிடித்துக் கொண்டதாலும், சூராமன் தற்கொலை செய்து கொண்டதாலும் நிறைவேருமல் போயின. சர் ஜே. என். சர்க்கார் எழுதுகிறுர்: 'பதினெட்டாம் நூற்றுண்டின் நடுப்பகுதி வரையிலும் ஜாதி அரசு என்று ஒன்றும் ஏற்படவில்லை. அரசியலால் ஒன்றுபட்ட ஜாத் நாடு ஏற்படவில்லை; மற்றக் கிராமத் தலைவர்களுக்கு மேலான ஜாத் அரசன் என்று தெளிவாக அறியப் படுபவன் அல்லது சமமான அந்தஸ்துடையோரில் முதலானவன் என்ற நிலையை எய்தியவன் யாரும் இல்லை. ஆனுல், கொள்ளைத் தலைவன்தான் இருந்தான். சமுதாயத்தில் அவனைப் போன்ற மதிப்புள்ளவர்கள் அவனுடைய துணிகரச் செயலிலும் கொள்ளையிலும் பங்கு கொள்வதற்காக அவனுடைய கொடியின் கீழ் ஒன்று கூடினர். ஆனுல், ஜாத்துகளின் சிதறியிருந்த கூறுகள் எல்லாம் சூராமனின் சகோதரரான பாவோ சிங்கின் (Bhao Singh) மகனை பதன் சிங்கின் மேலான அடக்கும் சக்தியின் பிடியில் ஒன்றுக்கப் பட்டன. பெரும் இடர்ப்பாடுகளுக்கு இடையிலும் பதன் சிங்கு சில சக்தி வாய்ந்த ஜாத் குடும்பங்களில் திருமண உறவு கொண்டதன்

மூலம் இணையற்ற தந்திரம், சலியாத பொறுமை, வழித்துறைகளைத் தேர்ந்து பயன்படுத்துவதில் அறிவுமிக்க திறமை இவற்றின் மூலமும், பெரிதும் ஆக்ரா, முத்ரா மாவட்டங்கள் இவை முழுவதிலும் உள்ள தம் நாட்டுப் பகுதியில் அதிகாரத்தை நிலைநாட்டினர். 1756 ஜூன் மாதம் 7ஆம் நாள் பதன் சிங்கு இறந்தார். அவருக்குப் பின் வந்த அவருடைய தத்துப்பிள்ளையான சூராஜ்மால் அவருடைய அரசியல் அறிவு, ஒரு படித்தான புத்தி, தெளிவான காட்சி இவற்றால் 'ஜாத் இனத்தின் ப்ளேட்டோ (Plato) என்று அக் கால வரலாற்றாசிரியர்களாலும் ஜாத் மக்களில் யுலிஸ்ஸஸ் (Ulysses)என்று இக் கால ஆசிரியர் ஒருவராலும் புகழ்ந்துரைக்கப் பட்டுள்ளார். அவர் ஆக்ரா, தோல்பூர் (Dholpur), மெய்ன்புரி, ஹாத்ராஸ், ஆலிகார், எடாவா, மீரட், ரோதக், பாரூக்நகர், மேவாத், ரீவாரி, ரூர்காவோன், முத்ரா, ஆகிய மாவட்டங்களின் மீது பராத்பூர் இராச்சியத்தின் அதிகாரத்தைப் பரப்பினர். ஜாத்துகள் பெற்றெடுத்த மிகுபெரும் போர்வீரரும், மிகச் சிறந்த அரசியல்வாதியுமான சூராஜ்மால் 1763 டிசம்பர் 25ஆம் நாள் இறந்தார். அவர் காலத்தில் ஜாத் இனத்தின் புகழ் உச்சநிலையை அடைந்திருந்தது. அவருக்குப் பிறகு அது தாழ்வுறுவது உறுதியாயிற்று.

### ஈ. மராட்டியர்கள்

மராட்டியர்கள் இந்து அரசர்களுள் மிகவும் வன்மையுடையவர்களாவர். முகலாயப் பேரரசு சிதறுண்டபோது மேலாண்மைக்காக இவர்கள் முயன்றனர். உண்மையில் ஔரங்கசீப் இறந்தவுடனே ஒரு பேரரசை நிறுவுவதில் எந்தவிதமான உறுதியான தீர்மானமும் மேற்கொள்ள முடியாதவர்களாய் இவர்கள் இருந்தனர். ஆனால், உள் நாட்டுப் போர்களில் தங்களைச் சில ஆண்டுகளாக முழுவதும் ஈடுபடுத்திக்கொண்டிருந்தனர். ஆஸம் ஷா, ஜுல்பிகார்கானின் ஆலோசனையின் பேரில், 1707-ல் ஸாஹூ என்று நன்கு அறியப்பட்ட இரண்டாம் சிவாஜியை விடுதலை செய்தார். ஸாஹூ அவருடைய இராச்சியத்துக்குத் திரும்பிச் சென்றதும் மராட்டியர்களுக்குள் கட்டாயம் பிரிவு ஏற்படும் என்றும், அதனால் தக்கணத்தில் தலைமைப் படை இல்லாதபோது பேரரசுக்குரிய பகுதிகளை அவர்கள் கொள்ளையடிக்க முடியாமல் போகும் என்றும் ஜுல்பிகார்கான் குறிப்பிட்டார். அவர் எதிர்பார்த்தபடியே நடந்தது. ஸாஹூவின் உரிமைகள் தாராபாயினால் வன்மையாக எதிர்க்கப்பட்டன; அதனால் நீண்டதொரு உள் நாட்டுக் கலகம் ஏற்பட்டது. ஸாஹூ கடைசியில் சிறப்பாகக் கொங்கணத்துச் சித்பாவன பிராமணரான பாலாஜி விஸ்வநாத்

என்பவரின் ஆலோசனை, உதவி இவற்றைப் பெற்று வெற்றி யடைந்தார்.

எளிய குடும்பத்தில் பிறந்த பாலாஜி விஸ்வநாத் ஸாஹூவின் சேனாதிபதி அல்லது தலைமைத் தளபதியான தனாஜிஜாதவால் (Dhanaji Jadav) 1708-ல் ஒரு கர்க்கூன் அல்லது பொருள்வருவாய் எழுத்தராக நியமிக்கப்பட்டார். தனாஜியின் மரணத்துக்குப் பின்பு அவருடைய மகனான சந்திரசேன ஜாதவுடன் தொடர்பு கொண்டு 1712-ல் சேனாகர்த்தே அல்லது 'படைக்குப் பொறுப் பான முகவர்' அல்லது படை அமைப்பாளர் என்ற பட்டத்தைப் பெற்றார். இவ்வாறு அவர் ஸாஹூவுக்கு முன்பு உள்நாட்டு ஆட்சியாளராயும், படைத்துறை அமைப்பாளராயும் தம்முடைய ஆற்றல்களைவெளிப்படுத்தும் வாய்ப்புகளைப் பெற்றார்.ஸாஹூவும் அவருடைய மதிப்பு மிக்க பணிகளுக்குக் கைம்மாறாக 1713 நவம்பர் 16ஆம் நாள் அவரைப் பேஷ்வா (Peshwa) அல்லது முதல் மந்திரி யாக நியமித்தார். கொள்கையளவில் பிரதிநிதியின் பதவி பேஷ்வாவின் பதவியினும் உயர்ந்ததுதான். ஆனால், மேலான தம் திறமைகள் ஆற்றல்கள் இவற்றால் பாலாஜி விஸ்வநாத்தும், அவருக்குப் பின் வந்த புகழ்மிக்க அவருடைய மகனான முதலாம் பாஜிராவும் (Baji Rao-I) பேஷ்வாவை மராட்டியப் பேரரசின் உண்மைத்தலைவராக ஆக்கிக்கொண்டு சத்ரபதி அல்லது அரசரைச் சில ஆண்டுகளுக்குள் பின்னணியில் இருக்குமாறு செய்தனர்.

சீர்குலைந்து வந்துகொண்டிருந்த பேரரசின் சீர்கேடுகளைத் தமக்குச் சாதகமாகப் பயன்படுத்திக்கொள்ள மராட்டியர்கள் தவறவில்லை. ஹூஸேன் ஆலி தக்கணத்துக்கு வந்தபோது, உண்மையில் முக்கியமான சலுகைகளை அவரிடமிருந்து பாலாஜி விஸ்வநாத் பெற்றார்; டில்லியிலிருந்த பொம்மை அரசரிடமிருந்து வெறும் தோற்றத்தில் மட்டும் சலுகைகள் பெறுவதாகக் காட்டிக் கொண்டார். மராட்டியர்களைத் தம் பக்கம் வசமாக்கிக் கொள் வதற்காகக் கீழ்க் கண்ட முறையில் அவர்களுடன் ஹூஸேன் ஆலி உடன் படிக்கை செய்துகொண்டார். (i) முகலாயர்களால் வெல்லப்பட்ட பகுதிகளைத் தவிர, சிவாஜிக்கு முன்பு உரியனவா யிருந்த எல்லாப் பகுதிகளும் ஸாஹூ திரும்பிப் பெற வேண்டும். அவற்றுடன் மராட்டியர்களால் வெல்லப்பட்ட காந்தேஷ், கோண்ட்வானா, பீரார் மாகாணங்களும், ஹைதராபாத்திலும், கருநாடகத்திலுமுள்ள மாவட்டங்களும் சேர்க்கப்பட வேண்டும். (ii) தக்கணத்தில் ஆறு சுபாக்களில்,சௌத் சர்தேஷ்முகி இவற்றை வசூலிக்கும் உரிமை ஸாஹூவுக்குக் கொடுக்கப்படும். இதற்குப் பதிலாக ஸாஹூ பேரரசின் பணிக்காக 15,000 குதிரைகளடங்கிய

படையை வைத்திருக்க வேண்டும்; தக்கணத்தில் அமைதியையும் ஒழுங்கையும் நிலைநாட்ட வேண்டும். டில்லிப்பேரரசரை மேலாண்மையுடையவராக ஸாஹூ ஒப்புக்கொண்டது சிவாஜியால் போற்றப்பட்ட முழு உரிமை இலட்சியத்தினின்றும் முற்றிலும் மாறுபட்டதாயிருந்தது. மராட்டியர்கள் பெற்ற சலுகைகளும் டில்லி அரச அதிகாரத்தை எவ்விதத்திலும் பாதிப்பதாக இருக்கவில்லை. ஆனால், இவை செயல் முறையில் சிறந்த பயன்களைத் தந்தன என்பதை அறிய வேண்டும். 1714ஆம் ஆண்டு ஒப்பந்தம் 'மராட்டிய வரலாற்றில் ஒரு சிறப்புக் கூறாகக்' கருதப்படுவது நியாயமானதே. அதன் மூலம் மராட்டியர்கள் பேரரசுக்குரிய மாகாணங்களில் பொருள் வருவாயில் பங்கு கொள்பவராயும் அதன் விளைவாக அங்கே அரசியல் அதிகாரத்திலும் பங்கு கொள்பவராயும் ஆயினர்.'

டில்லி அரசவையில் சய்யிதுக்கு எதிரான கட்சி ஏற்றம் பெறுவதைத் தடுப்பதற்காகச் சய்யிது ஹூஸேன் ஆலி தம்முடைய புதிய கூட்டாளிகளுடன் டில்லிக்குப் படையுடன் சென்றார். ஃபாருக்ஷியாரைச் சிம்மாசனத்திலிருந்து அகற்றிவிட்டு மற்றொரு பொம்மை அரசரைச் சிம்மாசனத்தில் வைத்தார். அவரும் ஏற்கெனவே ஹூஸேன் ஆலிக்கும், மராட்டியர்களுக்குமிடையே ஏற்பட்ட ஒப்பந்தத்தை உறுதிப்படுத்தும் கட்டாயத்துக்குள்ளானார். மராட்டியர்கள் 1719-ல் டில்லியை நோக்கிச் சென்றது அவர்களுடைய வரலாற்றில் ஒரு குறிப்பிடத்தக்க நிகழ்ச்சியாகும். 'பேரரசின் தலைநகரில் அவர்கள் செல்வமிக்கவர்களாயில்லாமல் அரசரை ஆக்குவோரின் ஆதரவாளர்களாயும், கூட்டாளிகளாயும் இருந்ததன் சிறப்பு அவர்களும் ஒரு நாள் பேரரசை ஆக்குவதற்கும் நீக்குவதற்கும் வல்லமை பெற முடியும் என்ற உறுதியை அவர்களுக்குத் தந்தது. உண்மையில் பாலாஜி விஸ்வநாத் நம்பிக்கையுடன் ஒரு மராட்டியப் பேரரசை நிறுவுவதற்கான கொள்கைக்கு உறுதியான நிலைக்களமாய் இருந்ததும் அதுவே'. மராட்டியர்கள் சக்தி மற்ற வழிகளிலும் பெருகியது. ராஜாராம் ஆட்சியின் தொல்லை நிறைந்த காலத்தில் புத்துயிர் ஜாகீர் முறைமூலம் மராட்டியர்களுள் துணிகரச் செயல் வீரர்கள் தங்களுக்காகச் சிறந்த வாய்ப்புகளைப் பெற்றனர். இதற்கு மேலும் மராட்டியர்கள் சௌத், சர்தேஷ்முகி இவற்றை வசூல் செய்யும் உரிமை பெற்றிருந்தனர். அதற்காக முக்கிய மராட்டிய அதிகாரிகளைத் தெளிவான பல எல்லைப் பரப்புகளுக்கு பாலாஜி விஸ்வநாத் நியமித்தார். அந்த அதிகாரிகளும் கூலிபெற்ற பங்காளிகளாக முஸ்லிம் பிரபுக்களிடையே நேர்ந்த சண்டைகளில் பங்கெடுத்துக்கொண்டனர்.

1720-ல் பாலாஜி விஸ்வநாத் இறந்த பிறகு எதிர்காலத்தில் சிறந்து விளங்கும் குணங்கள் பெற்றிருந்த இளைஞராகிய அவருடைய மகனை முதலாம் பாஜிராவ் பேஷ்வாப் பதவியைப் பெற்றார். பாலாஜி விஸ்வநாத்தின் குடும்பத்தில் பேஷ்வாப் பதவி பரம்பரையாக எய்தப்படுவதாக மாறியது.

முதலாம் பாஜிராவ் திறமை வாய்ந்த ஒரு போர்வீரர் மட்டுமன்றி அறிவுமிக்க ஓர் அரசியல்வாதியுமாவார். உடனே அவர் முகலாயப் பேரரசு தன் முடிவு காலத்தை நெருங்கிக்கொண்டிருக்கிறது என்றும், இந்துத் தலைவர்களின் அனுதாபத்தைப் பெற்று மராட்டியர்களின் சக்தியை அதிகப்படுத்திக்கொள்ள அந்த நிலையைச் சாதகமாகப் பயன்படுத்திக்கொள்ளலாம் என்றும் உணர்ந்தார். துணிவும் கற்பனையும் உள்ளவராய் அவர் முதல் பேஷ்வா தொடங்கிவைத்த மராட்டியப் பேரரசுக் கொள்கையைத் தெளிவாய் உருவாக்கினார். பேரரசுச் சக்தியின் நடுமத்தியைத் தாக்குவதற்காக நருமதைக்கு அப்பால் இராச்சியத்தை விரிவாக்கும் கொள்கையை மேற்கொண்டார். அதனால் அவர் தம்முடைய தலைவரான ஸாஹூவிடம் இவ்வாறு கூறினார்: 'உலர்ந்து போய்க்கொண்டிருக்கும் மரத்தின் அடிபாகத்தை வெட்டுவோம்; கிளைகள் எல்லாம் தாமாகவே விழுந்துவிடும்; இவ்வாறு மராட்டியக் கொடி கிருஷ்ணாவிலிருந்து சிந்து வரையிலும் பறக்க வேண்டும்.' பாஜிராவின் இக் கொள்கை அவருடைய தோழர்கள் பலராலும் ஏற்றுக்கொள்ளப்படவில்லை. அவர்கள் வட நாட்டு வெற்றிகளுக்காக முயற்சிகளை மேற்கொள்ளும் முன்பு தெற்கே மராட்டிய சக்தியை ஒன்று திரட்டி ஒருநிலைப்படுத்தவேண்டும் என்று அவரை வற்புறுத்தினர். ஆனால், சொல்லாற்றலாலும், ஆர்வத்தாலும், அவருடைய வடநாட்டு இராச்சிய விரிவுத் திட்டத்தை அவருடைய தலைவர் ஏற்றுக்கொள்ளுமாறு செய்தார்.

இந்துத் தலைவர்களின் ஆதரவைப் பெற்று அவர்களின் அனுதாபத்தைப் பெருக்குவதற்காக முதலாம் பாஜிராவ் இந்து பாத்-பாதுஷாஹி (Hindu-pad-Padushahi) அல்லது ஓர் இந்துப் பேரரசு என்ற இலட்சியத்தைப் பிரசாரம் செய்தார். 1723 டிசம்பரில் அவர் மாளவத்தின்மீது படையெடுத்தபோது, அந் நாட்டு இந்து ஜமீன்தார்கள் அவருக்குப் பெரிதும் உதவிசெய்து அதனால் ஏராளமானபொருள், உயிர்த் தியாகங்களைச் செய்தனர். குஜராத்தில் ஏற்பட்ட ஓர் உள்நாட்டுக் கலகத்தைச் சாதகமாக்கிக் கொண்டு மராட்டியர்கள் அந்த வளமிக்க மாகாணத்தில் தங்கள் அதிகாரத்தை நிறுவினர். ஆனால், அதன் விவகாரங்களில் முதலாம் பாஜிராவ் தலையிடுவதைப் போட்டியாக முளைத்த ஒரு மராட்டியக் கட்சியின் தலைவரும் பரம்பரைச் சேனாதிபதி அல்லது தலைமைத்

தளபதியுமான திரிம்பக் ராவ் தாபாடே (Trimbak Rao Dhabade) வன்மையாக எதிர்த்தார். சிவாஜி குடும்பத்தின் கோல்ஹாப்பூர்க் கிளையைச் சேர்ந்த இரண்டாம் ராஜா ஷாம்பூஜியும் முதலாம் பாஜிராவின் வெற்றியைக் கண்டு பொருமை கொண்ட நிஸாம்-உல்-முல்க்கும் திரிம்பக் ராவ் தாபாடேயுடன் சேர்ந்துகொண்டனர். ஆனுல், முதலாம் பாஜிராவ் தம்முடைய மேலான மேதையின் வன்மையால் எதிரிகளின் திட்டங்களைத் தவிடுபொடியாக்கினுர். பரோடாவுக்கும் தாபோயிக்கும் (Dhaboi) இடையிலுள்ளதும் தாபோயிக்கு அருகிலுள்ளதுமான பில்ஹாப்பூரின் சமவெளிகளில் நடந்த போரில் 1731 ஏப்ரல் 1ஆம் நாள் திரிம்பக் ராவ் தாபாடே தோற்கடிக்கப்பட்டுக் கொல்லப்பட்டார். முதலாம் பாஜிராவின் இவ் வெற்றி 'பேஷ்வாக்களின் வரலாற்றில் ஒரு சிறப்பிடத்தைப் பெற்றுள்ளது'. அது உள் நாட்டில் அவருக்கு எவ்விதப் போட்டியாளரும் இல்லாமல் செய்ததுடன், 'பெயரளவில் மராட்டியப் பேரரசின் அதிகாரமும், அவரிடம் இருக்கச் செய்தது. 1731 ஆகஸ்டில் அவர் நிஸாம்-உல்-முல்க்குடன் ஒரு சமாதான உடன்படிக்கையைச் செய்துகொண்டார். அதன்படி நிஸாம்-உல்-முல்க்குக்குத் தெற்கே தம்முடைய திட்டங்களை நிறைவேற்றிக்கொள்ளச் சுதந்திரம் உண்டு; பேஷ்வாவுக்கு வடக்கே தம்முடைய ஆசைகளைச் சுதந்திரமாகப் பூர்த்தி செய்துகொள்ளலாம்'.

அதிர்ஷ்ட வசமாக முதலாம் பாஜிராவ், ஆம்பர் நாட்டு இரண்டாம் ஜெயசிங்கு சவாய், சத்ரசால் பந்தேலா (Chhatrasal Bandela) ஆகியோரின் நட்பைப் பெற முடிந்தது. 1737-ல் அவர் டில்லிக்குஅருகுவரை படையுடன் சென்ருர். ஆனுல், பேரரசின் உணர்ச்சிகளைப் புண்படுத்தக் கூடாதென்று டில்லியின் உள்ளே நுழையவில்லை. இந்த மராட்டியத் தொந்தரவை ஒழிப்பதற்காகப் பேரரசர் முதலாம் பாஜிராவின் ஜன்ம விரோதியான நிஸாம் உல்-முல்க்கை டில்லிக்கு உதவி செய்ய வரும்படி அழைத்தார். நிஸாம்-உல்-முல்க் 1731-ல் செய்துகொண்ட சமாதான உடன்படிக்கையையும் புறக்கணிப்பதில் எவ்விதத் தயக்கமும் கொள்ளாமல், உடனே பேரரசரின் அழைப்புக்கிணங்கினுர். முதாலாம் பாஜிராவின் வளர்ந்துவரும் சக்தியைத் தடுத்து நிறுத்துவதற்கு அது ஒரு சாதகமான வாய்ப்பு என அவர் கருதினுர். இரண்டு போட்டியாளர்களும் போப்பால் அருகே எதிர்த்துப் போரிட்டனர். நிஸாம்-உல்-முல்க் தோற்கடிக்கப்பட்டு உடன்படிக்கை செய்துகொள்ளும்படி வற்புறுத்தப்பட்டார். அதன்படி அவர் 'மாளவம் முழுவதையும் நருமதைக்கும் சம்பாலுக்கும் இடையிலுள்ள நிலப்பரப்பின் முழு அதிகாரத்தையும் முதலாம் பாஜி

ராவுக்கு அளித்துவிட வேண்டும் என்பதற்கும், இந்த ஏற்பாடு பேரரசரால் உறுதி செய்யப்பட வேண்டும் என்பதற்கும், பேஷ்வா வின் செலவுகளுக்காக ஐம்பது இலட்சம் ரூபாய் கொடுத்துவிட எல்லா முயற்சிகளும் செய்யப்படவேண்டும் என்பதற்கும்' வாக் குறுதி அளித்தார். இந்த ஏற்பாடுகளுக்குப் பேரரசர் அனுமதி யளித்ததால் இந்துஸ்தானத்தில் ஒரு பகுதியில் ஏற்கெனவே நிறுவப்பட்ட மராட்டிய மேலாண்மை மேலும் நன்கு விரிவடைந் தது. மேற்குக் கரையில் மராட்டியர்கள் சால்செட்டையும், பேஸ்ஸீனேயும் போர்ச்சுகீசியரிடமிருந்து 1739-ல் பற்றிக்கொண் டனர். ஆனால், விரைவில் முதலாம் பாஜிராவ் நாதிர்ஷாவின் படையெடுப்பைக் கேட்டுச் சிறிது கலவரமடைந்தார். அதனால் அண்டை நாட்டு முஸ்லிம் அரசர்களுடன் கொண்டிருந்த எல்லா வேற்றுமைகளையும் மறந்து பாரசீகப் படையெடுப்பாளரைக் கூட்டாக எதிர்க்க வேண்டும் என்று முயன்றார். ஆனால், அதைச் செயல்படுத்துவதற்கு முன்பு அவர் 1740 ஏப்ரல் மாதத்தில் தமது நாற்பத்திரண்டாவது வயதில் காலமானார். இவ்வாறு மராட்டிய அரசியலறிஞர்களுள் மிகச் சிறந்த ஒருவர் மறைந்தார். அவரு டைய சொந்தக் குணவியல்பில் சில குறைகள் காணப்பட்டாலும் அவர் மராட்டிய அரசு உருவாவதற்காகத் தம்மாலானவற்றை யெல்லாம் செய்ய முயன்றார். 'மராட்டியப் பேரரசின் இரண் டாவது தந்தை' என்று அவரைக் கூறிவிடலாம்.

முதலாம் பாஜிராவ் கணிசமான அளவுக்கு மராட்டியர்களின் அதிகாரத்தையும் மதிப்பையும் உயர்த்தியபோதிலும், அவர் தம் தலைவரின் பெயரால் ஆண்ட நாடு ஒற்றுமை இல்லாதிருந்தது. ராஜாராம் காலத்தில் ஜாகீர் முறை புத்துயிர் பெற்றதன்மூலம் சில அரைச் சுதந்திர மராட்டியப் பகுதிகள் அந் நாட்டினுள் வளர்ந்தன. இதன் நேரடி விளைவு மராட்டிய மத்திய அரசாங்கம் பலவீனப்பட்டு அது கடைசியில் அழிவுற்றதேயாகும். அப் பகுதி களுள் மிகு முதலில் தோன்றியவைகளிலும் மிகு முக்கியமானவை களிலும் ஒன்றாயிருந்தது பீரார் என்பது. அப்போது அது திருமணத்தால் ஸாஹுவுக்கு உறவாயிருந்த ரகு ஜீபான்ஸ்லேயின் கீழ் இருந்தது. இவருடைய குடும்பம் பேஷ்வாவின் குடும்பத்தை விடப் பழமை மிக்கது. ராஜாராம் ஆட்சிக் காலத்தில் அது முதன்மை பெற்றது. தாபாடேக்கள் முதலில் குஜராத்தைப் பெற்றிருந்தனர். ஆனால், பரம்பரைச் சேனாதிபதி வீழ்ச்சியுற்ற பிறகு அவருடைய முந்தைய கீழ்அதிகாரிகளான கெயிக்வார்கள் தங்கள் அதிகாரத்தைப் பரோடாவில் நிலைநாட்டினர். குவாலி யரில் சிந்தியா குடும்பத்தை நிறுவிய ரானோஜி சிந்தியா முதலாம் பாஜிராவின் கீழ்ச் சிறப்புறப் பணியாற்றினார். மராட்டிய அரசுடன்

26

மாளவத்தை இணைத்த பிறகு மாகாணத்தின் ஒரு பகுதி அவருடைய பங்குக்குக் கிடைத்தது. இந்தூர்க் குடும்பத்தைச் சேர்ந்த மல்ஹார் ராவ் ஹோல்கரும் முதலாம் பாஜிராவின்கீழ்ச் சிறப்புப் பணியாற்றினர். மாளவத்தின் ஒரு பகுதியைப் பெற்றார். ஒரு சிறு தாலுக்கா பாவார்களுக்குக் (Pawars) கொடையாக அளிக்கப் பட்டது. அவர்கள் 'தார்' என்ற இடத்தைத் தங்கள் தலைமை நிலையமாக ஆக்கிக்கொண்டார்.

சில மராட்டியத் தலைவர்களின் எதிர்ப்பு இருந்தபோதிலும் முதலாம் பாஜிராவுக்குப் பிறகு அவருடைய மூத்த மகனை இரண்டாம் பாலாஜி பேஷ்வாவாக ஆனர். இரண்டாம் பாலாஜியைப் பொதுவாக நானா சாஹெப் என்றும், பாலாஜி பாஜிராவ் என்றும் அழைப்பர். பாலாஜி அப்போது பதினெட்டு வயது காளையாய், சௌகரியம், இன்பம் இவற்றை விரும்புபவராய் இருந்தார். தந்தையின் மேலான சிறப்புச் சக்திகள் அவரிடம் காணப் படவில்லை. ஆனால், அவரிடம் திறமை இல்லாமற் போகவில்லை. தந்தையின் முறையை ஒட்டியே அவரும் பகைமை பாராட்டுவோர்க்குத் தண்டனை கொடுத்தல், ஒரு பெரும் படையை ஒழுங்குற அமைத்துத் தளவாடங்களை அளித்தல், போருக்கு வேண்டிய பொருள்களைத் தயார் செய்து வைத்தல் போன்ற செயல்களில் தீவிரமாக ஈடுபட்டார். அவர் தம் தந்தையின் திறமையும் அனுபவமும் மிக்க அதிகாரிகள் சிலரின் பணியைப் பெற்றார். 1749-ல் ஸாஹூ இறப்பதற்கு முதல்நாள் பேஷ்வாவுக்குச் சில கட்டுப்பாடுகளைத் தெரிவித்ததோடு, நாட்டின் உயர்ந்த அதிகாரம் அளிக்கும் பட்டயத்தை எழுதிவைத்துச் சென்றார். பேஷ்வா ராஜாவின் பெயரை நிலையாகச் செய்யவேண்டும்; தாராபாயின் பேரர் அவருடைய சந்ததியினர் ஆகியோர்மூலம் சிவாஜியின் குடும்பத்தின் பெருமையைப் பாதுகாக்கவேண்டும். அவர் கோல்ஹாபூர் இராச்சியத்தைச் சுதந்திர இராச்சியமாக மதிக்க வேண்டும். அக்காலத்தில் நிலவியிருந்த ஜாகீர்தாரின் உரிமைகளை மறுக்கக்கூடாது. 'இந்துக்களின் அதிகாரத்தைப் பரப்புவதற்கும், கடவுளின் கோயில்களைக் காப்பதற்கும், உழவுத்தொழில் செய்வோரையும் புண்ணியமான அல்லது பயனுள்ளவற்றையெல்லாம் காப்பதற்கும்' ஜாகீர்தார்களுடன் அவர் பயனுள்ள வகையில் ஏற்பாடுகள் செய்துகொண்டார். இந்த ஏற்பாட்டைத் தாராபாய் எதிர்த்தார். தாமாஜி கெயிக்வாருடன் கூட்டுச் சேர்ந்து கொண்டு பேஷ்வாவுக்கு எதிராகப் படைக்கலம் தாங்கினர்; இளம் ராஜாவைச் சிறையிலிட்டார். எனினும், பேஷ்வா தம் எதிரிகளைத் தோற்கடித்தார். 'ராஜாவின் அரண்மனை மேயரின்' கையில் ராஜா உண்மையில் ஒரு சிறைக் கைதியாகவே இருந்தார்.

அப்போதிருந்த பேஷ்வாதான் மராட்டிய இணைப்பு நாடுகளின் உண்மையான தலைவர் ஆனார்.

பாலாஜி பாஜிராவ் மராட்டியப் பேரரசை மேலும் பலப்படுத்துவதென முடிவு செய்தார்; ஆனால், அவர் நல்லறிவின்றித் தந்தையின் கொள்கையிலிருந்து இரண்டு விதங்களில் மாறிச் சென்றார். முதலாவதாக, அவருடைய காலத்தில் படை புரட்சிகரமான மாறுதலை அடைந்தது. சிவாஜியின் காலத்தில் காலாள் படைதான் படையின் தலை ஊற்றாக இருந்தது. முதலாம் பாஜிராவ் பெரும் எண்ணிக்கை கொண்ட குதிரைகளைப் போரில் ஈடுபடுத்தினாலும், பழைய போரியல் சூழ்ச்சித் திறன்களைக் கைவிட்டு விடவில்லை. ஆனால், பாலாஜி மேலை நாட்டு யுத்த முறைகளைப் புகுத்தும் நோக்கத்துடன் எல்லாவகையான மராட்டியரல்லாத ஆள்களையும் படையில் சேர்த்துக்கொண்டார். இவ்வாறு படை தன் தேசியப் பண்பை இழந்தது. சரியான ஒழுங்கு, கட்டுப்பாடு இவற்றின் கீழ்ப் பலவகையான அயல் கூறுகளைக் கண்காணிப்பது எளிதாக இருக்கவில்லை. பழைய போர் முறையும் ஒரு சிறிது கைவிடப்பட்டது. இரண்டாவதாகப் பாலாஜி வேண்டுமென்றே தம் தந்தையின் இலட்சியமான எல்லா இந்துத் தலைவர்களையும் ஒரு கொடியின்கீழ் இணைக்கும் இந்து-பாத்-பாத் ஷாஹி என்ற குறிக்கோளைக் கைவிட்டார். அவருடைய வழியாளர்கள் முற்காலப் போர் முறையின் பழைய திட்டத்தை மேற்கொண்டனர். அவர்கள் இந்துக்கள் முஸ்லிம்கள் என்ற வேறுபாடின்றி எல்லாரையும் கொள்ளையிட்டு வந்தமையால் ராஜபுத்திரர்களும் மற்ற ஹிந்துத் தலைவர்களும் மராட்டியர்களை வெறுக்கத் தொடங்கினர். இவ்வாறு மராட்டியப் பேரரசு அகில இந்திய தேசியத்தைப் போற்றுவதைக் கைவிட்டது; உள் நாட்டு வெளிநாட்டு முஸ்லிம் சக்திகளுக்கு எதிராக ஒரு கொடியின்கீழ் அதனால் இந்துக்களின் சக்தியைத்திரட்டி ஒழுங்குற அமைக்கப் பிறகுமுடியாது போயிற்று.

எனினும், பாலாஜியின் கொள்கையில் காணப்பட்ட இக் குறைகள் மராட்டிய சக்தி தெற்கிலும் வடக்கிலும் விரிவடைவதை உடனடியாகத் தடுக்கவில்லை. 1757 மார்ச்சில் மிகுந்த எண்ணிக்கையுடைய மராட்டியர்கள் சீரங்கப்பட்டணம் சென்று கிருஷ்ணாவின் தெற்கேயிருந்த பெரும்பாலான பகுதிகளில் கட்டாயப் படுத்திக் கப்பம் வசூலித்தனர். ஆர்க்காட்டு நவாப் சௌத் வரிப் பாக்கிக்காக 'உடனே இரண்டு இலட்சம் ரூபாய் கொடுப்பதாகவும், இரண்டரை இலட்சம் ரூபாயைத் தவணைகளில் கொடுப்பதாகவும் வாக்குறுதி அளித்தார். மராட்டியர்கள் பெட்நூரையும் (Bednore) இந்து இராச்சியமான மைசூரையும் படையெடுத்தனர். கப்பல்

தலைவனான ஆங்கிரியாவை அடக்குவதில் கிளைவ், வாட்சன் ஆகியோரின் தலைமையின்கீழ் இருந்த ஆங்கிலேயர்களுக்கு உதவினர். அவர்களுடைய முன்னேற்றம் மைசூரின் எழுச்சியுற்றுவந்த தளபதியான ஹைதராலும், தந்திர அறிவுமிக்க ஃபிரெஞ்சுக்காரரான புஸ்ஸியாலும் (Bussy), ஹைதராபாத்தின் நிஸாம் ஆலியாலும் ஓரளவு தடை செய்யப்பட்டது என்பதில் ஐயமில்லை. ஆனால், பேஷ்வாவின் ஒன்றுவிட்ட சகோதரரான சதாசிவராவ் 1760-ல் உத்கீரியில் நிஸாம் ஆலியைத் தோற்கடித்தார். நிஸாம் படையில் புஸ்ஸியின்கீழ் மேனாட்டு யுத்த முறைகளில் பயிற்சி பெற்ற தைரியமிக்க முஸ்லிம் பீரங்கிப்படைவீரரான இப்ராஹிம் கான் கார்டி மராட்டியர்களுடன் சேர்ந்தார். மராட்டியர்கள் நிஸாம் ஆலியுடன் செய்துகொண்ட ஒப்பந்தத்தின்படி அவர்கள் முழு பீஜப்பூர் மாகாணத்தையும் பெற்றனர்; அனேகமாக ஔரங்கசீப் முழுவதையும், பீடாரின் ஒரு பகுதியையும், புகழ் பெற்ற தௌலதாபாத் கோட்டை உள்படச் சில கோட்டைகளையும் பெற்றனர். தக்கணத்தில் முகலாயர்களின் உரிமைகளிலிருந்து மராட்டியர்கள் இந்த மதிப்பு மிக்க சில பெறுதிகளை அடைந்தனர். இவ்வாறு முகலாயர்களின் உரிமைப் பகுதிகள் 'குறுகிய இடமாகச் சுருங்கிவிட்டன'.

மராட்டியர்கள் வடக்கே தங்கள் அதிகாரத்தை விரிவுபடுத்தியதுதான் இன்னும் சிறப்பானதும் வியப்பானதுமாகும். 1786ஆம் ஆண்டின் முடிவில் மால்ஹார்ராவ் ஹோல்கரும், சில வாரங்கள் கழித்து ரகுநாதராவும் வடக்கே இராஜபுதனத்தில் சுமார் நான்கு மாதங்கள் நிறுத்தி வைக்கப்பட்டபோதிலும், சகாராம் பாபு என்பவரின்கீழ் 20,000 ஆள்களுடன் அவரால் அனுப்பப்பட்ட படை ஜாத்துகளின் நட்பைத் தந்திரமாகப் பெற்று, மீண்டும் ஒருமுறை தோ ஆப்பில் மராட்டிய மேலாண்மையை நிறுவியது. அப்போது மராட்டியர்கள் நாஜிப்-உத்-தௌலாவுக்கு (Najib-ud-Daulah) எதிராக டில்லி அரசவையுடன் ஒப்பந்தம் செய்துகொண்டனர். நாஜிப்-உத்-தௌலா அப்தாலியால் டில்லியில் தம்முடைய 'மேலான முகவராகவும்' பேரரசர்மேல் சர்வாதிகாரம் செலுத்துபவராகவும் விடப்பட்டவராவார். அவர்கள் கி.பி. 1757 ஆகஸ்டில் டில்லியைத் தாக்கி, நாஜிப்-உத்-தௌலாவைச் சரணடையும்படி செய்து செப்டம்பரில் தாங்கள் கூறிய விதிகளின்படியே சமாதானம் செய்துகொள்ளும்படி புரிந்தனர். நட்புறவு கொண்ட வஸீரான இமாத்தின் கையில் டில்லியைக் கொடுத்துவிட்டு ரகுநாதராவும், மல்ஹார்ராவும் பஞ்சாபை அப்தாலியின் புதல்வரான தைமூர் ஷாவிடமிருந்து வெல்வதற்காகத் தங்கள் முயற்சிகளைச் செலுத்தினர். அவர்கள் 1758 மார்ச்சு மாதத்தில் சிர்ஹிண்

டையும், ஏப்ரலில் லாஹூரையும் கைப்பற்றினர்; தங்களுக்கு ஆண்டுதோறும் எழுபத்தைந்து இலட்சம் ரூபாய் கப்பம் கட்டுவ தாக வாக்குறுதியளித்த அப் பிரதேசத்தைச் சேர்ந்த அனுபவமிக்க ஆதீனுபேக் கான் என்பவரை அங்கே தங்கள் அரசப் பிரதிநிதியாக வைத்துவிட்டுப் பஞ்சாபுக்குச் சென்றனர். எனினும், அவர்கள் புதிதாக வென்ற மாகாணத்தைக் காப்பதற்குப் போதுமான படையை விட்டுவிட்டுச் செல்லவில்லை. இவ்வாறு ரகுநாதராவின் அரசியல் கொள்கை 'அட்டாக் வரை இந்து பேராண்மை செல்லும்படி' இருந்தது போலக் காணப்பட்டது. ஆனால், 'அமைதி யாக ஆராய்ந்து நோக்குமிடத்து ரகுநாதரின் படாடோபமான சாதனை அரசியல் அடிப்படையில் பார்க்குமிடத்து வெறும் வெற்று ஆடம்பரமாகவும், பொருளாதாரத்தை வற்றச் செய்வதாகவும் காணப்படுகிறது' என்று சர் ஜே.என். சர்க்கார் கூறுகிறார். அது பூனா கஜானாவுக்கு ஒரு பைசாக்கூடக் கொடுக்கவில்லை. ஆனால், 'துருப்புகளுக்குக் கொடுக்கவேண்டிய பாக்கியில் மேலும் எட்டு இலட்சம் ரூபாய் பாங்கியாளர்க்குக் கடன் கொடுக்க வேண்டிய நிலையை எய்தச் செய்தது.' அரசியல் காரணமாக அது அப்தாலி யுடன் மற்றொரு போர் செய்வதை இன்றியமையாததாக்கியது.

பஞ்சாபின்மீது மராட்டியர்கள் அதிகாரம் செலுத்தியது அம் மாகாணத்திற்கு அமைதியை அளிக்கவில்லை. ஆதீனா பேக் 1758 அக்டோபர் 13-ல் இறந்தார். அதனால், பஞ்சாப் முழுவதும் அராஜகம், குழப்பம் இவற்றில் ஆழ்ந்து மராட்டியர்களின் நலன் களைப் பாதித்தது. இவற்றை நீக்குவதற்காக 1759-ல் பேஷ்வா தத்தாஜி சிந்தியாவின் தலைமையில் வலிமை வாய்ந்த ஒரு படையை அந்த மாகாணத்துக்கு அனுப்பினார். தத்தாஜி சிந்தியா அங்கே சாபாஜி சிந்தியாவை (Sabaji Sindhia) கவர்னராக வைத் தார். ஆனால். 1759 நவம்பர் மாத இறுதியில் அம் மாகாணம் வலிமை வாய்ந்த துர்ரானியப் படையால் படையெடுக்கப்பட்டது; பஞ்சாப் டில்லிப் பேரரசால் கடைசியில் இழக்கப்பட்டது. பிறகு அகமது ஷா அப்தாலி டில்லியை நோக்கிச் சென்றார். அவர் இதற்குள் அவுத்தின் நவாப்பு, ரூஹெலாக்கள் இவர்களின் கூட் டுறவைச் சம்பாதித்துக்கொள்ளும் நன்மை அடைந்தார்; ரூஹெலாக்கள் மராட்டியர்களால் தொல்லைக்கு உள்ளாக்கப் பட்டிருந்தனர். அவுத்தின் நவாப் மராட்டியர்கள்தாம் இந்தி யாவில் முஸ்லிம்களுக்கு மிகு பெரும் எதிரிகள் என்று நம்பிக் கொண்டிருந்தார். மாறாக, பாஜிராவின் அனுதாபமில்லாத அரசியல் கொள்கையால் மன வேறுபாடு கொண்ட ராஜபுத்திரர் கள் நடுவு நிலைமை வகிக்கவே விரும்பியதால் மராட்டியர்கள் அவர் களுடன் சேர்ந்து செயல்பட முடியவில்லை. பஞ்சாபில் எழுச்சி

யுற்று வந்த சீக்கியர்களின் கூட்டுறவையும் அவர்கள் பெறமுடிய வில்லை. உண்மையில் தூர நோக்கில்லாத பாலாஜியின் அரசியல் கொள்கையால் மராட்டியர்கள் வலிமை மிக்க துர்ரானியர்கள், அவர்களுடைய இந்தியக் கூட்டாளிகள் இவர்களின் எதிர்ப்பைச் சமாளிக்க வேண்டிய மிகவும் இக்கட்டான நிலையில் முதன்மையான தனிச் சுதந்திர அரசுகளின் ஆதரவைப் பெறமுடியாது போயிற்று.

1759 டிசம்பரின் முடிவில் அப்தாலி தத்தாஜி சிந்தியாவைத் தானேஸ்வர் (Thaneswar) என்ற இடத்தில் தோற்கடித்து டில்லியை நோக்கி ஓடும்படி வற்புறுத்தப்பட்டார். 1760 ஜனவரி 9ஆம் நாள் டில்லிக்குப் பத்து மைல் வடக்கே இருந்த பராரி காட் (Barari Ghat) என்ற இடத்தில் மராட்டியத் தளபதி ஆப்கானியர் களால் கொல்லப்பட்டார். 'பராரி காட்டின் பேராபத்து மிக்க களத்திலிருந்து மராட்டியப் படை புதிய துர்ரானிக் குதிரை வீரர்கள், அவர்களைப் பின்பற்றி ஓடிவரத் தென்மேற்காகத் தலை தெறிக்க ஓடினர்.' ஜான்கோஜி சிந்தியாவும் மல்ஹார் ராவ் ஹோல்கரும் அப்தாலியின் முன்னேற்றத்தை எதிர்க்கச் செய்த முயற்சிகளும் வீணாயின. அண்மைக் காலத்தில் உத்கீரில் (Udgir) நிஸாமின்மீது வெற்றி பெற்றுப் பெரும் புகழ் கொண்ட சதாசிவ ராவ் பாவோ (Sadashiv Rao Bhao) வடக்கே மராட்டி யரின் அதிகாரத்தை மீண்டும் பெறுவதற்காக ஒரு பெரும் படை யுடன் பேஷ்வாவினால் அனுப்பப்பட்டார். அவருக்குச் சிறிது ஓய்வு கொடுப்பதுபோல அந்தப் படையின் பெயரளவுத் தளபதியாக பேஷ்வாவின் மகனும் பதினேழு வயது வாலிபருமான விஸ்வாஸ் அனுப்பப்பட்டார். முதலில் பாவோவின் தலை 'பெருமிதத்தாலும் கருவத்தாலும் கனத்து விடவில்லை;' உண்மையில் அவர் படைகளையும், போர்த் தளவாடங்களையும் பெருக்குவதன் மூலமும், சில வட இந்தியக் கூட்டாளிகளின் ஆதரவைப் பெறுவதன் மூலமும் தம்முடைய பொருள் வளங் களையும் சக்தியையும் மிகுதிப்படுத்திக் கொள்ளவே விரும்பினார்; 1760 ஆகஸ்டு மூன்றாம் நாள் அவர் டில்லியைக் கைப்பற்றினார். மராட்டியர்களின் துரதிர்ஷ்டவசமாக 'அப்போது வாழ்ந்தவர் களுள் மிகவும் புத்திக்கூர்மையுள்ள இந்து அரசரான' சூராஜ்மால், பாவோவுடன் கருத்து வேறுபாடு கொண்டவராய், அவர்களை விட்டு நீங்கினார். பாவோ மல்ஹார் ராவ் ஹோல்கரையும் பகைவராக்கிக் கொண்டார்; மேலும், எல்லாராலும் பேராசை யுடன் விரும்பப்படும் இந்தியத் தலைநகர் புளிக்கும் திராட்சைப் பழமாகப்' பாவோவுக்கு ஆய்விட்டது. அதிலிருந்து அவர் போதுமான வருவாய் வளங்களைப் பெறமுடியவில்லை; ஆனால், அதை வைத்திருப்பதனால் துன்பங்களை மிகுதிப் பட்டுக்கொண்டு

வந்தன. ஆகஸ்டு மாதத்தின் இடைப்பகுதியில் அவர் டில்லியி லிருந்து வடக்கே சென்று 1760 அக்டோபர் 29ஆம் நாள் பானிப் பட்டை அடைந்தார்.

இதற்கிடையில் அப்தாலி அலிகாரைக் கைப்பற்றி ஜாத்ராஜா விடம் கப்பம் கொடுப்பதாக வாக்குறுதி அளிக்கும்படி வற்புறுத்தி யிருந்தார். அவருடைய மிகுந்த உதவியையும், நிலையான இந்தியக் கூட்டாளியான நாஜிப்-உத்-தௌலாவின் ஆதரவு மூலம் வடக் கேயும் வடகிழக்கிலும், மராட்டியர்கள் பேராசையுடன் படை யெடுத்து வந்ததால் சில நலன்களை இழந்திருந்த ஷுஜா-உத் தௌலாவின் கூட்டுறவையும் அடைந்தார். தோ ஆப்பில் சில தொல்லைகளையும், நஷ்டங்களையும் அனுபவித்த பிறகு அப்தாலி 1760 நவம்பர் முதல் நாள் பானிப்பட்டுக்கு அருகே வந்து சேர்ந் தார். இவ்வாறு முற்காலங்களில் விதியை நிர்ணயிக்கும் சண்டை கள் நடந்த வரலாற்றுச் சிறப்புடைய பானிப்பட்டில் ஆப்கானியர் களும் மராட்டியர்களும் சந்தித்தனர். ஆப்கானியப் படையின் பலம் 60,000. அவற்றில் பாதி அப்தாலியின் சொந்தக் குடிமக் களாவர் (23,000 குதிரைகள், 7,000 காலாள்). மற்றப் பாதி, இந்தியக் கூட்டாளிகளின் படையாகும் (7,000 குதிரை, 23,000 காலாள்). மராட்டியப் படையில் குதிரை, காலாள் படைகளில் 45,000 போர் வீரர்கள் இருந்தனர். சிறந்த குதிரைகளைப் பெற்றிருந்ததுடன், அப்தாலி மராட்டியர்களைக் காட்டிலும் திறன் மிக்க இயங்கும் பீரங்கிப் படையை வைத்திருந்தார். அவருடைய அதிகாரிகளோ கவசம் அணிந்திருந்தனர். ஆனால், மராட்டியர்கள் கவசம் அணியவில்லை. போரிடும் முறை, படை இயக்கம், ஒழுங்கு இவற்றில் ஆப்கானியப் படை மராட்டியரின் விருந்தினர் படை யிலும் மிகச் சிறந்ததாய் இருந்தது. 'பாசறையிலும், போர்க் களத்திலும் கட்டளைகளைக் கண்டிப்பாக வற்புறுத்தல், கீழிருப் போர் சிறிது கீழ்ப்படியாதிருப்பினும் கடுமையாகத் தண்டிக்கப் படல், மேலதிகாரித் தலைவரின் திட்டப்படி ஒவ்வோர் அதிகாரியின் இயக்கங்களும் கட்டுப்படுத்தி வைக்கப்படல், சாதாரணப் படை வீரர் முதல் தளபதிவரை படிப்படியே சங்கிலித்தொடர் போன்று இடைவிடாத உயர்வுப் படிகள், தளபதியின் கட்டளைகளை ஒழுங் காகப் படையினருக்கு அறிவிக்கும் மிகச் சிறந்த பணியாளர்களின் அமைப்பு, எல்லாவற்றிற்கும் மேலாகத் துருப்புகளை நன்றாகக் கட்டுப்படுத்தல்—இவை அகமது ஷாவின் படைக்குள்ள தனிச் சிறப்பு. இவை எல்லாம் அக் காலத்தில் ஆசியாவிலேயே வேறு எந்தப்படையிலும் காணப்படவில்லை. எல்லாவற்றுக்கும் மேலாகப் போரியல் சூழ்ச்சித் திறன் முதலியவற்றில் பரிபூரண மேதைமை யும், வல்லமையும் உடைய தலைவர் ஒருவர் இருந்தார். அவர்




மூன்றும் பானிப்பட்டுப் போரின் திட்டம்
(வி. ஏ. ஸ்மித்தின் 'ஆக்ஸ்ஃபோர்ட் ஹிஸ்டரி ஆப் இந்தியா' என்ற நூலிலிருந்து எடுக்கப்பட்டது)

**A.** பானிப்பட்டு நகரும், மராட்டியப் பாசறையும்.

**B.** துர்ரானிப் பாசறை.

**C.** அகமத் ஷாவின் முன்னேறிய கூடாரம், எண்கள் படைகளின் பல்வேறு பிரிவுகளைக் காட்டும்.

நாதிர் ஷாவைப்போல ஒன்றுமில்லாத நிலையிலிருந்து உயர்ந்து அவரைப் போலவே செல்வச் சிறப்பும், போரில் தகர்க்க முடியாத தறுகண்மையும் எய்தியிருந்தார்.

ஒழுங்கில்லாத சில தோழர்களுக்குப் பின்பு பானிப்பட்டு அருகே இரண்டரை மாதங்களாக நடந்த போர்களினால் மராட்டியப் படை சில நஷ்டங்களை எய்தியது. போதிய உணவுப் பொருள்கள் இன்றிஅப் படை பெரும்பாலும் பட்டினி கிடக்கும் நிலை எய்தியது. 1761 ஜனவரி பதினான்காம் நாள் காலை அது போரைத் தொடங்கியது. அப்தாலி தம்முடைய வஸீரான ஷா வலிகானின் (Shah Wali Khan) பொறுப்பில் போர்க்களத்தின் நடுவில் தம்முடைய 18,000 தேசியப் படைகளை வைத்திருந்தார்; சுமார் 5,000 கொண்ட, பெரும்பாலும் குதிரைகள் அடங்கிய மற்ற இருபடைப் பிரிவுகள் வல இடக் கோடிகளில் நிறுத்தி வைக்கப்பட்டிருந்தன. நாஜிப்பும் ஷுஜாவும் படையின் இடப்பக்கத்தில் கண்காணித்துக் கொண்டிருந்தனர். ரூஹெலாக்கள் அவருடைய நடுப்பகுதியின் வலப் பக்கத்திலிருந்தனர். பாவோ மராட்டியர்களை மூன்று பிரிவுகளாய்ப் பிரித்துவைத்திருந்தார். நடுப்பிரிவு அவருடைய சொந்த ஆணையின்கீழ் இருந்தது. இடப்பக்கம் இப்ராகிம்கான் கார்தியின் ஒழுங்கான பயிற்சி பெற்ற சிப்பாய்களாலும், வலப் பக்கம் மல்ஹார் ராவ் ஹோல்கர், ஜான்கோஜி சிந்தியா ஆகியோரின் படைகளாலும் நிரம்பியிருந்தன. மராட்டியர்கள் பீரங்கிகள்மூலம் தாக்குதலை ஆரம்பித்துத்தீரத்துடன் போரிட்டுத் தொடக்கத்தில் சில வெற்றிகளைப் பெற்றனர். இப்ராஹிம் கான் கார்தி துர்ரானிப்படையின் வலப்பிரிவை உணர்ச்சியூட்டிப் போர் செய்ய உக்கிரமாகத் தூண்டினார். அதனால், ஏறக்குறைய எட்டு அல்லது ஒன்பதாயிரம் ரூஹெலாக்கள் காயமடைந்தோ கொல்லப் பட்டோ இருப்பர். ஷா வலிகானின்கீழ் வந்த துர்ரானிப் படையைச் சதாசிவராவ் பாவே கடுமையாகத் தாக்கினார்; அத் தாக்குதலால் எல்லா வெற்றியும் அவருக்கே கிடைக்கும்போல் இருந்தது. ஆனால், மராட்டியர்கள் களைத்திருந்த சமயம் பார்த்து அப்தாலி தம் படையின் நடுவிலும் வலப் பக்கத்திலுமிருந்த படைகளுக்குப் புதுப்படைகளைக் கொடுத்து எதிரி சோர்ந்திருக்கும் நல்ல தருணத்தில் 13,000 புதுப்படைகளுடன் தாக்கினார். அது போர் நிலையைத் தலைகீழாக மாற்றிவிட்டது. எனினும், வெறித்தனமான வீரத்துடன் பெரும் இழப்புகளையும் பொருட்படுத்தாமல் பாவோ தீரத்துடன் போரிட்டார்; ஆனால், பயன் ஒன்றும் ஏற்படவில்லை. மாலையில் 2-15 மணிக்கு விஸ்-வாஸ் ராவ் சுட்டுக் கொல்லப் பட்டார். இதனால், பாவோ நம்பிக்கை தளர்ந்தார். எனினும் தம் படைவீரர்களின் பழைய வெற்றி நிலையை அடையச் செய்ய மற்றொரு முயற்சிசெய்தார். ஆனால், இதுவும் சுமார் 2-45மணிக்குத்

தோல்வியுற்றது. 'கண்மூடித் திறப்பதற்குள் மராட்டியப் படை கற்பூரம் போலப் போர்க்களத்திலிருந்து மறைந்துவிட்டது.' பாவோவின் விலையுயர்ந்த ஆடைகளின்மீது பேராசை கொண்டிருந்த ஐந்து துர்ரானிப் படைவீரர்கள் அவருடைய தலையை வெட்டி வீழ்த்தினர். இவ்வாறு சதாசிவராவ் தம்நாட்டின் மதிப்பைக் காப்பாற்றுவதற்காகத் தம் உயிரைக் கொடுத்துவீழ்ந்தார். எனினும்,பானிப்பட்டுப்போர்க்களத்தில் மராட்டியர்கள்தோல்வியுற்றதற்குக் காரணம் சதாசிவராவ் மற்றவர்களின் கருத்துகளைப் புறக்கணித்துவிட்டுத் தப்புக் கணக்குப் போட்டிருந்ததுதான் என்பதை ஒப்புக்கொள்ளத்தான் வேண்டும்.தோல்வியுற்ற மராட்டியப் படையின் உயர்ந்த தலைவர்கள்எல்லாம் களத்தில் வீழ்ந்தனர்;ஆயிரக்கணக்கான படைவீரர்களும் மற்ற எல்லாவகையான மக்களும்,ஆண்களும் பெண்களும், குழந்தைகளும் கொலை செய்யப் பட்டனர். சர் ஜே. என். சர்க்கார் கூறுகிறார்: 'சுருங்கக்கூறுமிடத்து ஃபிளாடன் ஃபீல்டு(Flodden Field)சமயத்தில் அது நாடு முழுவதிலும்ஏற்பட்ட பெருங்கேடாயிருந்தது. மகாராட்டிரத்தில் குறைந்தது ஒருவரையாவது இழந்து வருந்தாத குடும்பமேயில்லை; பல வீடுகள் தங்கள் தலைவர்களை இழந்தன. ஒரேயடியில் ஒரு தலைமுறையின் எல்லாத் தலைவர்களும் வெட்டி வீழ்த்தப்பட்டனர்.' வெற்றியாளர்கள் அளவிலாக் கொள்ளைப் பொருளைக் கைப் பற்றினர். மராட்டியர்கள் 50,000 குதிரைகள், 200,000 கால் நடைகள், சில ஆயிரம் ஒட்டகங்கள், 500 யானைகள், மேலும் பொருள்கள், நகைகள், இவற்றை இழந்தனர். இந்தப் பயங்கரமான பெருங்கேட்டின் செய்தி ஒரு வணிகர்மூலம் பேஷ்வாவுக்குத் தெரிவிக்கப்பட்டது; 'இரண்டு முத்துகள், கரைக்கப்பட்டுவிட்டன; இருபத்திரண்டு தங்க மொகராக்கள் இழக்கப்பட்டுவிட்டன; வெள்ளி, செம்பு இவற்றின் இழப்பை மதிப்பிட்டுச் சொல்ல முடியாது.' உடலை உருக்கும் நோயால் ஏற்கெனவே நைந்து கொண்டிருந்த பேஷ்வா இந்தத் தேசியப் பெருங்கேட்டினைக் கேட்டபின் உயிர் பிழைக்க முடியவில்லை. மனம் உடைந்து பூனாவில் 1761 ஜூன் இருபத்து மூன்றாம் நாள் அவர் இறந்தார்.

மூன்றாம் பானிப்பட்டுப்போர் மராட்டியர்களுக்குப் பேராபத்தான விளைவுகளை உண்டாக்கிவிட்டது; மராட்டியப் பேரரசின் போக்கையும் திசை திருப்பிவிட்டது. அளவிலா ஆள்சேதமும் பொருள் சேதமும் ஏற்பட்டதுடன் பானிப்பட்டுத் தோல்வியின் அவமதிப்பு இன்னும் மிகப் பெரியதாயிருந்தது. 'மராட்டிய நட்பை ஆபத்துக் காலத்தில் நம்பியிருப்பது நாணலின்மீது சாய்ந்து நிற்பது போலாகும்' என்று இந்திய அரசுகளுக்கு அது உணர்த்திவிட்டது. பலம்வாய்ந்த மராட்டியக் கூட்டு இராச்சியம் அதிலிருந்து அதன் பிணைப்பை இழந்தது.பேஷ்வாவின் அதிகாரமும்

மிகவும் கேவலமாகச் சிதைந்துவிட்டது. 1761-க்கு முன்பு நிலைநிறுத்தியிருந்த நிலையை மராட்டியர்கள் பின்பு திரும்பப் பெறவே முடியவில்லை. ஆனால், பானிப்பட்டுத் தோல்வியினால் மராட்டியர்களின் சக்தி மீளமுடியாத அளவு சிதறிவிட்டதென்று எண்ணிவிடக் கூடாது. அவர்கள் விரைவில் தங்கள் இழப்புகளில் சிலவற்றைத் திரும்பப் பெற்றனர்; இந்துஸ்தானத்தில் தங்கள் அதிகாரத்தை மீண்டும் நிறுவுவதற்காகப் புது முயற்சிகள் செய்தனர். அவர்களுடைய புத்துயிர்ப்பை எப்போதும் தடுத்து நிறுத்த அப்தாலி இந்தியாவிலேயே தங்கி இருக்க முடியவில்லை: சீக்கியர்கள் மேன்மேலும் வளர்ந்து தொல்லை கொடுப்பவர்களாய் விட்ட பஞ்சாபையும், அவர் நீடித்து வைத்திருக்க முடியவில்லை. மராட்டிய நாட்டு வரலாற்றில் மாவீரராகக் காணப்படும் அடுத்த பேஷ்வாவான முதலாம் மாதவராவ் (Madhava Rao) கி.பி.1772-ல் தாம் இறக்கும் வரை 'முதல் பேஷ்வாவினால் தொடங்கப்பட்ட மராட்டிய அரசியல் கொள்கையின் இலட்சியங்களையும், நோக்கங்களையும் செயல்படுத்தினார்.' முதலாம் மாதவராவின் அரசியல் வாழ்க்கையின் முக்கியத்துவத்தைக் கருத்துள் கொண்ட கிராண்ட் டப், 'இந்த மிகச் சிறந்த இளவரசரின் இளமைக் கால முடிவைக் காட்டிலும் பானிப்பட்டுப் போர் மராட்டியப் பேரரசுக்கு அவ்வளவு பெரிய அழிவுக்குக் காரணமாய் இருக்கவில்லை' என்று கூறுகிறார். மராட்டியர்கள் நாடு கடத்தப்பட்டிருந்த முகலாயப் பேரரசரான இரண்டாம் ஷா ஆலமை 1772-ல் அவருடைய முந்தையோரின் தலைநகருக்கே கொண்டுவந்தனர். 1789-ல் மாகாதாஜி சிந்தியா டில்லியில் ஒரு சர்வாதிகாரியாகத் தம்மை ஆக்கிக் கொண்டார். மராட்டியர்கள் கடைசியாக முழுதும் அழிவுறு முன்பு மூன்று முறை பிரிட்டிஷார் இந்தியாவில் இராச்சியம் நிறுவுவதை எதிர்த்திருக்கின்றனர்.

இருந்தபோதிலும் மூன்றும் பானிப்பட்டுப் போர் 'இந்தியாவின் தலைவிதியை நிர்ணயித்துவிட்டது. 'இந்திய மேலாண்மைக்காக முயன்ற பிரிட்டிஷார் எளிமையாகத் தங்கள் நோக்கங்களை நிறைவேற்றிக் கொள்ளுமளவுக்கு மராட்டியர்களும், முகம்மதியர்களும் ஒருவருக்கொருவர் பலவீனப்படுத்திக் கொண்டனர்.' வளர்ந்து வந்த பிரிட்டிஷ் சக்தி, அதன் மூலம் தன் அதிகாரத்தை இந்தியாவில் ஒருநிலைப்படுத்தவும், பலப்படுத்தவும் தேவையான வாய்ப்பைப் பெற்றது. 'இந்தியாவில் பிரிட்டிஷ் மேலாண்மைக்கு பிளாஸிப் (Plassey) போர் விதை விதைத்தது என்றால் பானிப்பட்டுப்போர் அது வளர்ந்து வேர் விடும்படி செய்தது' எனலாம். இந்தியாவில் ஆங்கிலேயரின் மேலாண்மையை மீண்டும் மராட்டியர்கள் தடை செய்ய முற்படும்போது, அதற்குள் ஆங்கிலேயர்கள் தங்கள் நிலையில் பெரு வளர்ச்சியை அடைந்துவிட்டனர்.

# 6. முகலாய ஆட்சி முறை

## 1. முகலாய அரசாங்கத்தின் தன்மை

டில்லிச் சுல்தான்களின் கருத்துகளுக்கும், கொள்கைகளுக்கும் மாறான கருத்துகளுடனும், கொள்கைகளுடனும் முகலாய ஆட்சியை நிறுவியது, அக்பரின் செயல்களுள் மிகு முக்கியமானதாகும். அவருக்கு முந்திய இருவரில் பாபருக்கு உள்நாட்டு அரசாங்க முறையை விரிவுபடுத்தப் போதிய நேரமோ, வாய்ப்போ இல்லை; ஹுமாயூனுக்கு அதைச் செய்வதற்கு விருப்பமோ, திறமையோ இல்லை. மிக உயர்ந்த அரசியல் மேதைமை வாய்ந்த அக்பர் ஆட்சிமுறை ஒழுங்கமைப்பின் சில கூறுகளில் சூர்களின் எடுத்துக் காட்டுக்குக் கடமைப்பட்டிருக்கிறார். முகலாய அரசாங்கம் 'இந்தியக் கூறுகள், இந்தியக் கூறல்லாத பிற கூறுகள் இவற்றின் இணைப்பே' எனலாம். இன்னும் சரியாகக் கூறப்போனால் அது 'இந்தியப் பின்னணியில் அமைந்த பாரசீக அராபிய முறையாகும்.' படைத்துறைச் சார்புடையதாக இருந்தமை அதனுடைய தலையாய பண்பாகும். முகலாய அரசாங்கத்தின் ஒவ்வோர் அதிகாரியும் படை வீரர் பட்டியலில் தம் பெயரைப் பதிவு செய்து கொள்ள வேண்டும். அது மத்திய அரசிடத்து எல்லா அதிகாரங்களும் குவிக்கப்பட்ட முடியாட்சியாக இருந்தது. அரசரின் அதிகாரம் அளவில்லாதது. அவருடைய வாய்ச்சொல்லே சட்டம்; அவருடைய விருப்பத்தை எவரும் மறுத்துக் கூற முடியாது. அரசாங்கத்தில் அவரே மிகு தலைமையான அதிகாரம் உடையவராயும், அரசாங்கத்தின் தலைவராயும் அரசப் படைகளின் தளபதியாயும், நீதியின் ஊற்றாகவும் தலைமைச் சட்டமியற்றுவோராகவும் விளங்கினார். அவர் கடவுளின் காலிஃபா (Khalifah) ஆவர்; இஸ்லாமிய மரபுகளையும் இஸ்லாமிய வேத நூல்களையும் அனுசரித்து அவற்றின் விதிகளுக்கு அவர் உட்பட்டு நடக்கவேண்டியவராவர். ஆனால், செயல் முறையில் ஒரு வலிமை வாய்ந்த அரசர் மதச் சட்டத்தையும் வேண்டுமானால் மீறி நடக்கமுடியும். இக்காலத்தில் உள்ளதுபோல அமைச்சர்களின் குழு என்னும் ஒன்று அரசாங்கத்தில் அப்போது இல்லை. அமைச்சர்கள் தங்கள் அரசர் கலந்தாலோசிக்க வேண்டும் என்று உரிமையுடன் என்றும் கூற முடியாது; அவர்களுடைய ஆலோசனையை ஏற்பதோ தள்ளுவதோ

எல்லாம் பேரரசரின் விருப்பத்தைப்பொறுத்தே அமைந்திருந்தன. உண்மையில் எல்லாம் பேரரசரின் ஆளுமையையும், அவருடைய மந்திரிகளின் ஆளுமையையும் பொறுத்திருந்தன. ஷாஜஹானைப் போன்ற அறிவு வாய்ந்த ஓர் அரசர் ஒரு சாதுல்லாகானைத் தவறாமல் கலந்தாலோசிக்க விரும்பினார். ஆனால், ஹுஸேன் ஆலி கான் போன்ற அமைச்சர் தங்களால் முடிசூட்டப்பட்ட பொம்மை அரசர்களுக்கு எவ்வித மதிப்பும் தராமல், சில சமயங்களில் வெளிப்படையாக மானக்கேடு உண்டாகுமாறு நடந்து கொண்டனர். எனினும், இந்தியாவின் முதல் ஆறு முகலாய அரசர்கள் நல்ல பொது அறிவு வாய்ந்தவர்களாயிருந்தனர். அதனால், அவர்களுடைய, முடியாட்சி பொறுக்க முடியாத கொடுமையுடன், மக்களின் உரிமைகளையும் வழக்கங்களையும் மிதித்து நாசமாக்குமளவுக்குச் சீர்கேடு அடையவில்லை. 'நாட்டுக்கு நன்மை கருதும் சர்வாதிகாரிகளின் உணர்ச்சியைப் பெற்றிருந்த அந்த அரசர்கள் தங்கள் குடிமக்களின் நலத்துக்காகப் பல விதங்களிலும் கடினமாய் உழைத்தனர். சிறப்பாக மத்திய ஆட்சித் தலைநகரைச் சுற்றிலுமுள்ள பகுதிகளிலும் மாகாணங்களின் அரசப்பிரதிநிதி அரசாங்கங்கள் இருக்குமிடங்களிலும் மக்களுக்கு வேண்டிய நன்மைகளைச் செய்துவந்தனர். ஆனால், அந்தக் காலத்தில் அரசாங்கம் 'எவ்வித சமுதாய வேலையையும் மேற்கொள்ளவில்லை; கிராமப் புறங்களில் கடுமையான குற்றம் அல்லது அரசாணைக்கு எதிர்ப்புச் செய்யப்படும் வரை அரசாங்கம் கிராம மக்களின் வாழ்க்கையில் தலையிடவில்லை. ஒரு கண்ணோட்டத்தில் முகலாயப் பேரரசர்களின் மாபெரும் சக்தி அளவிடப்பட்டதாகவே இருந்தது. அவர்களுடைய கட்டளைகள் பேரரசுக்கு நெடுந்தொலைவிலுள்ள இடங்களில் எளிதாக வற்புறுத்தப்பட முடியாமல் இருந்தன; சோட்டா நாக்பூர் (Chota Nagpur), சந்தால்பர்கானாக்கள் போன்ற சில மலைப் பிரதேசங்களைப்பற்றிச் சொல்லவே வேண்டியதில்லை. அப் பிரதேசங்களில் பேரரசரின் ஆணை பெரும்பாலும் செல்லத் தக்கதாக இல்லை. ஒவ்வொரு பேரரசரும் தங்கள் ஆட்சியின் முதல் வருடத்திலேயே ஒரே வகையான வரிகளையும் தீர்வைகளையும் ஒழிப்பதற்காக ஆணைகள் பிறப்பிப்பதைக் காணும்போது, அவற்றை ஒழிக்க முன்பு செய்த முயற்சிகள் பயனில்லாதனவாய், அல்லது செயல்பாட்டிற்கு ஏலாதனவாய் இருந்திருக்கவேண்டும் என்ற முடிவிற்கு வரவேண்டியிருக்கிறது. ஷாஜஹான் காலத்திலும், ஔரங்கசீப் காலத்திலும் சுபாதார்களும், மாகாணத் திவான்களும், சுங்க அதிகாரிகளும் முக்கியமாகத் தங்கள் தன்னல நோக்கங்களால் அடிக்கடி மத்திய அரசாங்கத்தின் கட்டளைகளுக்கு நேர்மாறாக நடந்துவந்தனர் என்பதற்கு இந்தியாவிலிருந்த ஆங்கிலேயத்

தொழிற்சாலைகளில் உள்ள பல பதிவேடுகளில் ஏராளமான குறிப்புகள் காணப்படுகின்றன. அதனால் ஷாஜஹான், ஔரங்கசீப் இவர்களைக் காட்டிலும் பலம்குறைந்த பிற்பட்ட ஆட்சியாளர்கள் காலத்தைப் பற்றிக் கூறவேண்டியதில்லை.

## 2. பிரபுக்கள்

பல காரணங்களால் முகலாயப் பிரபுக்கள் சபை துருக்கிய தார்த்தாரிய (Tartar) பாரசீக, இந்திய முஸ்லிம், இந்துக் கூறுகள் போன்ற பல வகையான இனக்கூறுகள் நிரம்பியதாய் இருந்தது. சில ஐரோப்பியர்கள் கூடப் பிரபுக்களுக்குரிய பட்டங்களைப் பெற்றனர். கொள்கையளவில் பிரபுத்துவம் பரம்பரையாக வருவதன்று; ஆனால், பண்பில் முழுதும் அதிகாரத் தொடர்புடையதாகவே இருந்தது. ஒரு பிரபுவின் வாழ்க்கை அக்கறை முழுதும் அவருடைய ஜாகீரின் நலத்தைப் பற்றியதாகவே இருந்தது. அவர் இறந்தபிறகு அரசர் அந்த ஜாகீரைப் பறித்துக்கொண்டுவிடுவார்; பட்டங்களும், சம்பளமும் பொதுவாகத் தந்தையிடமிருந்து மகனுக்கு மாற்றப்பட முடியாது. சர் ஜே. என். சர்க்கார் குறிப்பிடுவது போல அந்தப் பறிமுதல் செய்யும் முறையின் விளைவு 'மிகு தீங்கு பயப்பதாய் ,இருந்தது'. பிரபுக்கள் மிகு ஆடம்பரமான வாழ்க்கை வாழ்ந்தனர்; பயனில்லாத படாடோபத்தில் தங்கள் வாழ்க்கைமுழுதும் எல்லாப் பணத்தையும் செலவழித்துவந்தனர். பிரபுக்கள் குழு 'பொது மக்களின் சுதந்திரத்தை மிகு வலிமையுடன் காப்பாற்ற முடியாததாயும், அரசரின் முடியாட்சிக்கு எவ்விதத் தடையும் விதிக்க இயலாததாயும் இருந்தது. அது பரம்பரையாக வந்த சுதந்திரமுடைய பிரபுக்களின் குழுவாக இல்லை; அவர்களுடைய மதிப்பும், செல்வமும் ஒவ்வொரு தலைமுறையிலும் அரசரின் தயவையே நம்பியிருக்கவேண்டியதாய் இருந்தன. அதனால், அவர்கள் அரசரின் தன்னல விருப்பத்திற்கு எதிராகத் துணிந்து ஒன்றும் சொல்ல முடியாதவர்களாயும், அரசரின் கொடுங்கோன்மைக்கு எதிர்ப்பு என்றும் தெரிவிக்க முடியாதவர்களாயும் இருந்தனர்'.

## 3. பொது ஊழியமும் மத்திய அரசும்

பேரரசின் படைத்துறைப் பலத்தைப் போற்றி வைத்துக் கொள்வதற்காக முகலாயர்கள் மிகுந்த எண்ணிக்கையுள்ள அயல் நாட்டுத் துணிகரச் செயல்வீரர்களை அமர்த்திக்கொள்ள வேண்டியது இன்றியமையாததாய் இருந்தது. அக்பர் 'இந்தியா இந்தியர்களுக்கே' என்ற கொள்கையைத் தொடங்கிவைத்து இந்துக்களுக்கும் அதிகாரங்களைக் கொடுத்துவந்தாலும், முகலாயப்

பொதுஊழியத்தில் அயல் நாட்டுக் கூறுகளே அதிகமாக இருந்தன. ஜஹாங்கீர், ஷாஜஹான் காலங்களில் பொதுப்பணிகளின் பொதுப் பண்பு மாறாமல் அப்படியே இருந்தது. ஆனால், அத் துறையின் திறமைக் குறைவு ஜஹாங்கீர் காலத்திலேயே ஆரம்பித்து அவருடைய மகன் காலத்தில் மிகவும் தெளிவாய் அறியக்கூடியதாய் இருந்தது; ஔரங்கசீப் காலத்தில் நிலைமை இன்னும் மோசமடைந்தது. 1681-ல் இளவரசர் அக்பர் ஔரங்கசீப்புக்கு இவ்வாறு எழுதினார்: 'நாட்டின் அதிகாரிகளும் எழுத்தர்களும் வியாபாரிகளின் வழக்கத்தை மேற்கொண்டு வணிகர்களாகி விட்டனர். பொன் கொடுத்துப் பதவிகளை வாங்கியும், வெட்கப் படத் தக்க காரணங்களுக்காக அவற்றை விற்றும் வருகின்றனர். உப்பைத் தின்னும் ஒவ்வொருவரும் உப்புக்களஞ்சியத்தை உடைத்தெறிகின்றனர்'.

அரசாங்கத்தின் ஒவ்வோர் அதிகாரியும் மன்சாப் (Mansab) அல்லது மதிப்புமிக்க பதவியும், ஊதியமும் உள்ள அரசாங்கப் பணியில் அமர்த்தப்பட்டனர். அதனால் அவர்கள் கொள்கையளவில் அரசாங்கத்தின் படைத்துறை ஊழியத்திற்குப் பல படைகளை வழங்கும் கட்டுப்பாடுடையவராய் இருந்தனர். இவ்வாறு மன்சாப்தார்கள் நாட்டின் அதிகாரப் பிரபுக்களாக உருவாயினர். 'படை, பிரபுத்துவம். நாட்டு ஆட்சி இவையெல்லாம் ஒன்றாய்க் கலந்த' முறையாகவே பிரபுக்களின் முறை இருந்தது. 'பத்துப் பேருக்குத் தளபதி' முதல், '10,000 பேருக்குத் தளபதி' வரை முப்பத்து மூன்று அதிகாரப் பதவிப் பிரிவுடைய அதிகாரிகளை அக்பர் நியமித்திருந்தார். அக்பர் ஆட்சியின் நடுப்பகுதிவரை ஒரு சாதாரண அதிகாரியின் உயர்ந்த அந்தஸ்து 5,000 ஆள்களுக்குத் தளபதியாயிருப்பதுதான். 7,000 முதல் 10,000 வரையுள்ள ஆள்களுக்குத் தளபதியாயிருப்பதற்கு அரச குடும்பத்தைச் சேர்ந்தவர்களே தேர்ந்தெடுக்கப்பட்டனர். ஆனால், அவருடைய ஆட்சி முடிவில் இந்தக் கட்டுப்பாடு தளர்த்தப்பட்டது. அவருக்குப்பின் வந்தவர்களின் காலத்தில் அதிகாரிகள் இன்னும் உயர்ந்த பதவிகளுக்கு உயர்த்தப்பட்டனர். மன்சாப்தார்கள் பேரரசர்களால் நேரடியாகத் தேர்ந்தெடுக்கப்பட்டனர்; பதவி உயர்வு அளிக்கப் பட்டனர்; வேலையிலிருந்து நீக்கப்பட்டனர். ஒவ்வோர் அதிகாரப் பிரிவினருக்கும் குறிப்பிட்ட சம்பளவிகிதம் இருந்தது. அதிலிருந்து அவர்கள் குதிரைகள், யானைகள், கழுதைகள், வண்டிகள் இவற்றை வைத்துக்கொள்ளவேண்டும் என்று எதிர்பார்க்கப்பட்டது. ஆனால் மன்சாப்தார்கள் இந்த விதியை அரிதாகவே நிறைவேற்றினர். இர்வின் எழுதுகிறார்: 'பரிசோதனையும் குறியீடுகளும் இருந்த போதிலும், ஒரு சில மன்சாப்தார்களே தாங்கள் பெறும் சம்பளத்

துக்கேற்றவாறு முழுஎண்ணிக்கையுள்ள குதிரைவீரர்களை வைத்துக் கொள்ளும்வழக்கத்தை மேற்கொண்டிருந்தனர் என்று நாம் உறுதியாக நம்பலாம்'. மன்சாப்தாரியின் மதிப்பு பரம்பரையாக வருவதன்று. அரச ஊழியப் பணியாளர்களுக்கு நிறைந்த பயிற்சி தரப்படவில்லை. ஓர் அதிகாரி எந்த நேரத்திலும் முற்றிலும் புதிய பணியை ஏற்றுக்கொள்ளும்படி கூறப்படலாம். 'சரியான வேலைக்குச் சரியான ஆளைத் தேர்ந்தெடுக்கும் அக்பரின் வியக்கத்தக்க திறமையால் இந்த முறையின் தீங்குகள் தவிர்க்கப்பட்டன. ஆனால், அரசர்களின் ஆளுமை மாறும்போது, பிற்காலத்தில் இம் முறையில் சீர்கேடுகள் தோன்றிவரலாயின.

முகலாய அரசாங்கத்தின் அதிகாரிகள் இரண்டு விதங்களில் தங்கள் சம்பளங்களைப் பெற்றுவந்தனர். அரசாங்கத்திலிருந்து பணமாக அவர்களுக்குச் சம்பளம் வருவதும் உண்டு. அல்லது சில சமயங்களில் தாற்காலிகமாக அவர்களுக்கு ஜாகீர்கள் கொடுக்கப்பட்டுவந்தன. எனினும், அவர்கள் தங்களுடைய ஜாகீர்களின் நிலங்களில் உரிமை கொண்டாட முடியாது. ஆனால், அவர்களுடைய சம்பளத்திற்குச் சமமான நில வருவாயைக் குறிப்பிட்ட நிலங்களிலிருந்து வசூலித்து அதை அனுபவிக்கும் அளவுக்கே அவர்கள் அனுமதிக்கப்பட்டனர். 'அதிகமாக வசூலிப்பது நிலத்தை உழுவோர்களுக்கு அநீதி இழைப்பதாகவும், அரசாங்கத்துக்குத் துரோகம் செய்வதாகவும் ஆகிவிடும். ஜாகீர்கள் அடிக்கடி ஒரு மன்சாப்தாரிடமிருந்து இன்னொரு மன்சாப்தாருக்கு மாறி வந்தன. எனினும், ஜாகீர் முறை ஜாகீரைப் பெற்றவர்களுக்கு அளவுக்கு மீறிய சக்தி, சுதந்திரம் இவற்றைக் கொடுத்தது. ஷெர் ஷாவைப் போலவே அக்பரும் தம்முடைய அதிகாரிகளுக்குப் பணமாகச் சம்பளம் கொடுக்க முயன்றதும் முடிந்தவரை ஜாகீர்களைக் கல்சா நிலங்களாக மாற்ற முற்பட்டதும் போற்றத்தக்கனவே. அய்னிஅக்பரியிலிருந்து(Ain-i-Akbari) நாம் அறிவதுபோல, பணமாகவோ ஜாகீர்களாகவோ சம்பளம் கொடுக்கப்பட்டாலும் முகலாயப் பொதுப்பணி ஊழியர்கள் மிகு அதிகமான சம்பளங்களைப்[1] பெற்றுவந்தனர். அதனால் மிகவும் புதிய துணிகரச் செயல் செய்யும் மேலை நாட்டினரும் மத்திய ஆசியாவினரும் அப் பொதுப்பணிக்கு ஈர்க்கப்பட்டனர். ஔரங்கசீப்பின் காலத்துக்கு முன் இல்லாவிடினும், அவர் காலத்திற்குப்பின்பு பலவித ஊழல்களும் தீங்குகளும் முகலாயப் பொதுப்பணி ஊழியத்தில் மலிந்தன.

[1] படைகளை வைத்திருப்பதற்கு வேண்டிய செலவுகளையும் மற்றச் சில்லறைச் செலவுகளையும் மூர்லண்ட் (Moreland) கணக்கிடுகிறார்: 5,000பேருக்குத் தலைவரான மன்சாப்தார் மாதம் குறைந்தது ரூ.18,000 நில வருமானம் பெறுவார். 1,000 பேருக்குத் தலைவர் குறைந்தது ரூ. 5000 பெறுவார். 500 பேருக்குத் தலைவர் குறைந்தது மாதம் ரூ. 1000 பெறுவார். மூர்லண்ட் அக்பரின் மரணத்தின்போது இந்தியா, பக்கம் 66 முதல்.

## 4. அரசாங்கத் துறைகளும் தலைமை அதிகாரிகளும்

முகலாயப் பேரரசர்கள் தனி முழு அதிகாரங்கள் பெற்ற வராய் இருந்தாலும், அவர்கள் அரசாங்கத்தின் பல்வேறு துறை களிலும் அதன் எண்ணில்லாத விஷயங்களைக் கவனிப்பதற்காகப் பல அதிகாரிகளை நியமித்தனர். அரசாங்கத்தின் முக்கியமான துறைகள்: (அ) கானி-சாமானின் (Khan-i-Saman) கீழ்ப் பேரரச அரண்மனைத் துறை, (ஆ) 'திவானின் கீழ்க் கஜானு, (இ) மீர் பக்ஷியின் (Mir Bakshi) கீழ்ப் படைத்துறைச் சம்பளம் வழங்கும் கணக்கு அலுவலகம், (ஈ) தலைமை காஸியின்கீழ் நீதித்துறை, (உ) தலைமைச் சத்ர் (Chief Sadr) அல்லது சத்ர்-உஸ்-சுதூரின் (Sadr-us-Sudur) கீழ் மத அறக் கட்டளைகளும் கொடைகளும், (ஊ) முஹ்தசிப்பின் (Muhtasib) கீழ்ப் பொது ஒழுக்கக் கட்டுப் பாட்டுத்துறை என்பன. வருமானம், நீதி இவற்றின் முழுப் பொறுப்பை ஏற்றுக்கொண்டிருந்த திவான் அல்லது வஸீர்தான் பொதுவாக அரசாங்கத்தின் மிகஉயர்ந்த அதிகாரியாகஇருந்தார். பக்ஷி பல்வேறு தொழில்களைக் கவனித்து வந்தார். அவர் அரசாங்கத்தின் எல்லா அதிகாரிகளுக்கும் சம்பளம் வழங்கும் தலைமைச் சம்பளத் தளபதியாய் இருந்தார். 'கொள்கையில் படைத்துறையைச் சேர்ந்தவராயினும்' அவர் படைக்கு ஆள் திரட்டல், மன்சாப்தார்கள் போன்ற உயர்ந்த அதிகாரிகளின் பெயர்ப் பட்டியல்களைத் தயாரிப்பது போன்ற பணிகளும் அவருக்கு இருந்தன. போருக்கு ஆயத்தமாகும்போது, அவர் பேரரசரின் முன்பு படை வீரர்களின் முழுப் பெயர்ப் பட்டியலையும் சமர்ப்பிக்க வேண்டும். கானி சாமான் என்னும் உயர் அதிகாரி அரசாங்க அரண்மனை வேலைகளை, அவை 'சிறியவையாயினும், பெரியவையாயினும்' எல்லா விஷயங்களையும் கவனித்துக்கொள்ள வேண்டும். முஹ்தசீப்கள் அல்லது பொது ஒழுக்கக் கட்டுப்பாட்டு அதிகாரிகள் முகம்மது நபியின் உத்தரவுகளையும், ஒழுக்க விதி களையும் நாட்டு மக்கள் கைக்கொள்ளுமாறு கவனித்துக் கொண்டனர். மேற்குறிப்பிட்ட அதிகாரிகளினும் சிறிது தாழ்ந்த மற்ற அதிகாரிகள் மீர் ஆதிஷ் (Mir Atish) அல்லது தாரோகா-இ-தோப்கானு (Daroga-i-Topkhana- பீரங்கிப்படைத்தலைவர்),தாக் சௌகியின் தாரோகா (Daroga of Dak Chowki-தபால் போக்கு வரத்துத் துறையின் தலைவர்), நாணயச் சாலையின் தாரோகா, மீர்மால் (Mir Mal) அல்லது லார்ட் பிரிவி சீல் (அரசரின் தனி முத்திரையின் தலைவர்), முஸ்தௌஃபி (Mustaufi) அல்லது தணிக்கைத்துறை அதிகாரி, நாஸிர்-இ-புயுதாத்(Nazir-i-Buyutat) அல்லது அரசாங்கத் தொழிற்சாலையின் கண்காணிப்பாளர், முஷ்ரீஃப் (Mushriff)அல்லது நில வருவாய்த்துறைச் செயலாளர்,

மீர்பஹ்ரி (கப்பல் துறையின் தலைவர்), மீர்பார் (Mir Barr) அல்லது காட்டிலாக்காக் கண்காணிப்பாளர், வாகா-ஐ-நாவிஸ் (Waqa-i-Navis) அல்லது செய்திகொணர்ந்தளிப்போர், மீர் அரஸ்(Mir Arz) அல்லது பேரரசருக்கு அளிக்கப்பட்ட மனுக்களின் பொறுப்பாளர், மீர் மன்ஸில்(Mir Manzil) அல்லது குவார்டர்-மாஸ்டர் ஜெனரல், மீர் டோஸ்க் (Mir Tozak) அல்லது சடங்குகளின் தலைவர் என்போ ராவர்.

## 5. காவல் துறை

நாட்டுப் புறங்களைப் பொறுத்தவரை முகலாயர்கள் குற்றங் களைத் தடுப்பதற்கும், கண்டு பிடிப்பதற்கும் எந்தப் புதிய ஏற்பாடு களையும் செய்யவில்லை. இவை பண்டைக் காலந்தொட்டே கிராமத் தலைவரிடமும், அவருடைய ஆள்களான காவலாளிக ளிடமும் இருந்தன. அமைதிக் குலைவின் காலத்தில் மட்டும் சில சமயங்களில் குழப்பங்கள் ஏற்படும். நாட்டுப் புறங்களில் இந்த முறை ஒரு நல்ல அளவுக்குப் பாதுகாப்பு அளிப்பதாய் இருந்தது; பத்தொன்பதாம் நூற்றாண்டின் தொடக்கம் வரை நீடித்திருந்தது. நகரங்களிலும் பட்டணங்களிலும் பொது மக்களின் ஒழுங்கையும், கட்டுக்கோப்பையும் நிலைநிறுத்துவது உள்பட எல்லாப் போலீசின் கடமைகளும் கொத்தவால்களுக்கு இருந்தன. அய்னி-அக்பரியில் அவர்களுடைய கடமைகள் மிகு பலவாகக் கூறப்படுகின்றன: (1) திருடர்களைக் கண்டுபிடிப்பது. (2) விலைகளை ஒழுங்கு படுத்துவது; எடைகளையும் அளவுகளையும் சரிபார்ப்பது. (3) இரவில் காவல் செய்து நகரை ரோந்து செய்வது, (4) குடிமக்கள், பாதைகள் இவற்றைப் பற்றிய பதிவேடுகளை வைத்திருப்பது. அயலாரின் இயக்கங்களைக் கண்காணிப்பது, (5) நாடோடிகளிலிருந்து ஒற்றர்களைத் தேர்ந்தெடுத்து அமர்த்து வது; அருகிலுள்ள கிராமங்களில் நடக்கும் செய்திகளைச் சேகரிப்பது; பல்வேறு வகைப்பட்ட மக்களின் வருவாயினையும் செலவையும் பற்றிய விவரங்களைத் தொகுப்பது. (6) சந்ததி யில்லாது இறந்து விட்ட அல்லது காணாமற்போன ஆள்களின் சொத்துகளைக் கண்டு பிடித்து அவற்றைக் கண்காணிப்பது. (7) எருதுகள், எருமைக் கடாக்கள், குதிரைகள், ஒட்டகங்கள் இவற்றைக் கொல்வதைத் தடை செய்வது. (8) விதவைகளின் விருப்பத்துக்கு மாருக அவர்களை (இறந்த கணவனுடன்) எரிப் பதைத் தடுப்பது; பன்னிரண்டு வயதுக்கு முன்பு சுன்னத்துச் செய் வதைத் தடுப்பது முதலியனவாகும். அய்னி அக்பரில் கொத்த வால்களுக்குரிய கடமைகளாகக் கூறப்படும் இந்த நீண்ட பட்டி யல் 'கொத்தவால்களின் இலட்சியக் கடமைகளைக் குறிப்பதல்

லாமல் 'உண்மையான செயற்பாட்டு நிலையைக் குறிக்கவில்லை என்று சர் ஜே. என். சர்க்கார் நம்புகிறார். ஆனால், மனுச்சிகூடக் கொத்தவால்களின் கடமைகளை நேரில் பார்த்ததாக நீண்ட தொரு பட்டியல் தருகிறார். எப்படியிருந்தபோதிலும் நகரப் புறங்களில் அமைதியையும் பொது மக்களின் பாதுகாப்பையும் காப்பதே கொத்தவாலின் முக்கியமான வேலை என்பது உறுதி யாய்த் தெரிகிறது. சர்க்கார்கள் அல்லது மாவட்டங்களில் பொது வாகப் பௌஜ்தார்கள் போன்ற அதிகாரிகளால் சட்டமும் ஒழுங் கும் காணப்பட்டன. 'பௌஜ்தார், அவருடைய பெயர் குறிப் பிடுவது போல, நாட்டில் நிலையாக வைக்கப்பட்ட படைகளின் தளபதியாகவே இருந்தார். அவர் சிறு கிளர்ச்சிகளை ஒடுக்குவது, கொள்ளைக் கூட்டங்களைக் கலைப்பது அல்லது கைது செய்வது எல்லாக் கடுங் குற்றங்களையும் கண்டு பிடிப்பது, நிலவரி வசூலிக்கும் அதிகாரிகள், குற்ற நடுவர், ஒழுங்குக் கட்டுப்பாட்டு அதிகாரி ஆகியோருக்கு எதிர்ப்புத் தெரிவிப்போரைப் பலாத் காரத்தின் மூலம் பயங்காட்டுதல் முதலியவற்றைச் செய்யும் கடமை உடையவராயிருந்தார்'. போலீஸ் ஏற்பாடுகள் எல்லாம் சில விஷயங்களில் மிகச் சிறந்தவையாகவே இருந்தன. எனினும் 'பொது மக்களின் பாதுகாப்பு இடத்துக்கு இடம், காலத்துக்குக் காலம் வேறுபட்டுக்கொண்டே இருந்தது'.

## 6. சட்டமும் நீதியும்

இக் காலத்தில் இருப்பது போலச் சட்டமன்றமோ, எழுதி வைக்கப் பட்ட சட்ட முறைகளோ முகலாய காலத்தில் இல்லை. இதற்குக் குறிப்பிடத்தக்க விதிவிலக்காக இருந்தவை ஜஹாங்கீரின் பன்னிரண்டு கட்டளைகளும், ஔரங்கசீப்பின் கண்காணிப்பில் தயார் செய்யப்பட்ட முஸ்லிம் சட்டத்தின் சாரமான ஃபதவா-இ ஆலம்கீரியும்(Fatawa-i- Alamgiri)ஆகும். நீதிபதிகள் முக்கியமாகக் குர்ரானின் கட்டளைகள் அல்லது விதிகள், பதவாக்கள், அல்லது மிகச் சிறந்த ஜுரிகளினால் மதச் சட்டத்திற்கு முன்பு கொடுக்கப் பட்ட விளக்கங்கள், கானூன்கள் (Qanuns) அல்லது பேரரசர் களின் கட்டளைகள் முதலியவற்றையே பெரிதும் பின்பற்றினர். பொதுவாக அவர்கள் வழக்கத்திலிருந்த சட்டங்களைப் புறக்கணிப் பதில்லை. சில சமயங்களில் மனச்சாட்சிக்குப் பொருந்திய கொள் கைகளைமேற்கொண்டனர். எல்லாவற்றுக்கும் மேலாகத் தெய்வீகக் கட்டளைகளுக்கு மாறுபடாதபோது பேரரசரின் சட்ட விளக்கங் கள் அப்படியே ஏற்றுக்கொள்ளப்பட்டன.

முகலாயப் பேரரசர்கள் விரைவாக நீதி வழங்குவதைத் தங்க ளுடைய முக்கியமான கடமைகளுள் ஒன்றாகக் கருதினர். இதில்

ஆட்சி முறைச் சட்டம் போன்ற எவ்வகைப்பாதுகாப்புச் சட்டத்தி ருலும் அவர்களுடைய அதிகாரிகள் எவ்விதச் சிறப்பான பாது காப்பையும் பெறவில்லை.'நான் அநியாயச் செயல் செய்வேனுனல் எனக்கு எதிராக நானே தீர்ப்பு வழங்கிக்கொள்வேன்' என்று அக்பர் கூறினர். மான்சர்ரேட் (Monserrate) என்பவரின் நூலை ஆதாரமாகக் கொண்டு பெருஷி (Peruschi), 'அவர் நீதி வழங்கு வதில் மிகப் பெரிதும் ஆர்வம் உடையவராகவும் கவனம் உடையவ ராகவும் இருந்தார்' என்று கூறுகிருர். ஜஹாங்கீர், ஷாஜஹான், ஔரங்கசீப் போன்ற மற்றப் பேரரசர்கள் நீதியின்மேல் கொண் டிருந்த காதலைப்பற்றி அக் காலத்து ஐரோப்பியப் பயணிகள் எழுதிவைத்துவிட்டுச் சென்றிருக்கின்றனர். பலஅதிகாரிகள் மூலம் எல்லா வகையான தடைகளையும் தாண்டிப் பேரரசரை அணுகு வது என்பது மிகு எளிதாக இல்லாது போயினும், முகலாயப் பேரரசர்களுள் குறைந்தது அக்பர், ஜஹாங்கீர் என்ற இருவரும் நேரடியாகக் குடிமக்கள் வந்து விண்ணப்பிக்கும் உரிமையை அளித்திருந்தனர். (இங்கிலாந்தில் இவ் வுரிமை நீண்ட காலக் கடும் போராட்டத்துக்குப் பின்னரே கிடைத்தது.) ஜஹாங்கீர் தம் அரண்மனைக்கு வெளியே சங்கிலியால் சேர்க்கப்பட்டிருந்த பல ஆராய்ச்சி மணிகளைத் தொங்க விடும்படி செய்து பேரரசரின் கவனத்திற்கு விண்ணப்பம் செய்வோரின் குறைகள் அதன் மூலம் எட்டும்படி செய்தார்.

முகலாய ஆட்சியில் காஜி-உல்-காஸாத் அல்லது தலைமைக் காஸிதான் முதன்மை நீதித்துறை அதிகாரியாய் இருந்தார். அவர் மாகாணத் தலைநகர்களில் காஸிகளை நியமித்தார். ஹிந்துக் கள், முஸ்லிம்கள் ஆகிய இருவரையும் பற்றிய சிவில், குற்ற வழக்குகளைக் காஸிகள் விசாரணை செய்து வந்தனர். முப்திகள் (Muftis) முஸ்லிம் சட்டத்தை விளக்கிக் கூறிவந்தனர். மீர் அதில்கள் (Mir Adls) தீர்ப்புகளை ஆராய்ந்து வழங்கிவந்தனர். 'காஸிகள் நீதியாகவும், நேர்மையாகவும் ஒருதலைச் சார்பின்றி யும் இருக்கவேண்டும் என்றும், நீதிமன்றத்திலும், அரசாங்க மனைகளிலும் வாதிப் பிரதிவாதிகளின் முன்னிலையில் விசாரணைகளை நடத்த வேண்டும் என்றும், கட்சிக்காரர்களிடமிருந்து பணம் வாங்கக்கூடாது என்றும்,பொதுமக்களுள் எவரேனும் கொடுக்கும் விருந்துபசாரம் முதலிய நிகழ்ச்சிகளில் கலந்துகொள்ளக்கூடாது என்றும் எதிர்பார்க்கப்பட்டனர். வறுமையே அவர்களுடைய பெருமையாக இருக்க வேண்டும் என்றும் எதிர்பார்க்கப்பட்டது.' ஆனல்,செயல்முறையில் அவர்கள் தங்கள்அதிகாரத்தைத்தவருன வழிகளிலேயே பயன்படுத்தி வந்தனர். சர் ஜே. என். சர்க்கார் கூறுவதுபோல, 'முகலாயர் காலத்தில் காஸிகளின் இலாக்கா

எல்லாராலும் இகழ்ந்து கூறத்தக்கதாய் இருந்தது'. காஸிகளின் நீதிமன்றங்களைத் தவிர அவற்றின்கீழ்த் தொடக்க நீதிமன்றங்கள் இல்லையாதலின் கிராமத்தினரும்,சிறு நகரங்களில் வாழ்ந்தோரும், தங்கள் ஊர்களில் காஸிகள் இல்லாததால் 'சாதி நீதிமன்றம் அல்லது பஞ்சாயத்துகளிடமோ நடுநிலைமை தவறாத நடுவர்(salis) ஒருவரிடமோ முறையிட்டோ பலாத்காரத்தைப் பயன் படுத்தியோ தங்கள் வழக்குகளைத் தீர்த்துக்கொண்டனர். அடியார் கள், அறிஞர்கள், துறவிகள் முதலியோருக்குப் பேரரசர் அல்லது இளவரசர்கள் நன்கொடையாக அளித்த நிலங்களைச் சத்ர்-உஸ்-சுதூர் (Sadr-us-Sudur) அல்லது தலைமை சத்ர் கண்காணித்து வந்தார். அவருக்குக் கீழ் ஒவ்வொரு மாகாணத்திலும் உள்நாட்டு சத்ர் ஒருவர் இருந்தார்.

நகர, மாகாண நீதிமன்றங்களுக்கும் மேலாகப் பேரரசரே தலைவராய் இருந்தார். 'காலத்தின் காலிஃப்'பாகக் கருதப்பட்ட பேரரசரே நீதியின் ஊற்றாகவும்,கடைசி முறையீட்டு மன்றமாகவும் விளங்கினார். சில சமயங்களில் சில்லறை வழக்குகளைத் தீர்க்கும் நீதிமன்றமாகவும் அவர் இருந்தார். பேரரசரைக் கேட்காமல் தண்டனை விதிக்கப்படலாம். உறுப்புக் குறைத்தல், உறுப்புச் சிதைத்தல், கசையாலடித்தல் முதலிய கடுந்தண்டனைகளும் நீதி மன்றங்களால் தரப்படலாம். ஆனால், தூக்கிலிடுவதற்கு அவரு டைய இசைவு தேவையாக இருந்தது. சிறை அமைப்பு முறை அக் காலத்தில் இல்லை; ஆனால், கைதிகள் கோட்டைகளில் அடைத்து வைக்கப்பட்டிருந்தனர்.

## 7. வருவாய்த்துறை அமைப்பு

முகலாயப் பேரரசின் வருவாயை மத்திய அல்லது பேரரசுக் குரிய வருவாய் என்றும், உள்நாட்டு அல்லது மாகாண வருவாய் என்றும் இரு தலைப்புகளில் பிரிக்கலாம். மத்திய அரசாங்கத்து நிதி அதிகாரிகளைக் கேளாமல் வசூலித்துச் செலவு செய்யப்பட்ட உள்நாட்டு வருவாய், பல்வேறு சிறு சுங்கங்கள், 'உற்பத்தி, அனு போகம், வாணிகம், தொழில்கள், சமுதாய வாழ்க்கையின் பல நிகழ்ச்சிகள்,எல்லாவற்றுக்கும் மேலாகப்போக்குவரத்து இவற்றின் மீது'விதிக்கப்பட்ட வரிகள் ஆகியவற்றின்மூலம் கிடைத்துவந்தது. மத்திய வருமானத்தின் முக்கிய மூலங்கள் நில வருமானம்,சுங்கங் கள், நாணயசாலை,பரம்பரைச்சொத்துரிமை, கொள்ளை,இழப்பீடு கள் நன்கொடைகள், தனியுரிமைகள்; தலைவரி(Poll Tax)இவையே யாகும். இவற்றில் பழங்காலத்தில் போலவே நிலவருமானமே அரசாங்க வருவாயின் மிகு முக்கியமான நிதிமூலமாகஇருந்தது.

ஷெர்ஷா, இஸ்லாம்ஷா ஆகியோரின் ஆட்சியைத் தொடர்ந்து ஏற்பட்ட குழப்பம், அமைதிக் குலைவுகளின் காலத்தில் சூர்களின் முக்கியமான வருவாய்ப் பரிசோதனைகள் எல்லாம் கைவிடப் பட்டன. ஆனால், பண்டைக் காலத்து அரசாங்க அமைப்பு முறையும் தொல்பழங்காலத்து வழக்கங்களும், நடைமுறைகளும் அக்பரால் மரபுரிமையைப்போலக் கைக்கொள்ளப்பட்டிருக்க வேண்டும். அவர் பட்டத்துக்கு வந்தபோது, மூன்று வகையான நிலங்கள் இருப்பதைக் கண்டார். அவை கல்சா (Khalsa) அல்லது முடிமன்னர்க்குரிய நிலங்கள்; சில பிரபுக்களால் அனுபவிக்கப்பட்ட ஜாகீர் நிலங்கள்-இவற்றினின்று பிரபுக்கள் வரி வசூலித்து ஒரு பகுதியை மத்திய அரசாங்கக் கஜானாவுக்கு அனுப்பிவிட்டு மீதியைத் தங்களுக்காக வைத்துக்கொள்வர்; இலவசமாக உழுது கொள்வதற்கு விடப்பட்டவை சயூர்கால் (Sayurghal) நிலங்கள். பைராமினுடைய அதிகாரத்திலிருந்தும், அந்தப்புர மகளிரின் அதிகாரத்திலிருந்தும் விடுதலைபெற்ற பிறகுதான் அக்பர் தம்முடைய வளர்ந்து வரும் பேரரசின் பொருள் வளங்களைச் சீர்திருத்தியமைக்க வேண்டியதன் இன்றியமையாமையை உணர்ந்தார். அப்போது பேரரசின் நிதிநிலைமை மிகவும் மோசமாக இருந்தது. இவ்வாறு 1570-71-ல் ராஜா தோடர்மாலினால் உதவப்பட்டு முஜாபர்கான் நில வருமானத்தின் புதிய மதிப்பீட்டு முறையைத் தயார் செய்தார். அது உள்நாட்டுக் கானுங்கோக்களால் உருவாக்கப்பட்டுத் தலைமையகத்தில் 'பத்து உயர்ந்த கானுங்கோக்களால் சரிபார்க்கப்பட்ட மதிப்பீடுகளின் அடிப்படையில் அமைந்தது. குஜராத் வெல்லப்பட்ட பிறகு தோடர்மால் அங்கே ஒழுங்கான நில அளவை செய்து நிலத்தின் பரப்புக்கும் தன்மைக்கும் ஏற்றவாறு' வரி மதிப்புச் செய்தார். 1575-76-ல் அக்பர் பழைய நிலவருவாய்ப் பரப்புகளை எல்லாம் ஒழித்துவிட்டு, குஜராத், வங்காளம், பீஹார் ஆகிய மாகாணங்களைத் தவிரப் பேரரசு முழுவதையும் ஆண்டுதோறும் கோடி வருமானம் தரக்கூடிய பெரிய பகுதிகளாகப் பிரிக்கும் புதிய, பேராபத்தான பரிசோதனையைப் புகுத்தினார். அப் பெரிய பகுதிகளுக்குத் தலைவராகக் கிரோரி என்ற அதிகாரிகளை நியமித்தார். அவர்களுடைய கடமைகள் வரி வசூலிப்பதும், உழவுக்கு ஊக்கமளிப்பதுமாகும். ஆனால், கிரோரிகள் விரைவில் ஊழல்கள் செய்யத் தலைப்பட்டனர். அவர்களுடைய கொடுமை உழவர்களுக்குப் பெருந் துன்பம் அளித்தது. அதனால் அவர்களுடைய பதவிகள் ஒழிக்கப்பட்டன; பழைய நிலவருவாய்ப் பகுப்புகள் மீண்டும் மேற்கொள்ளப்பட்டன. ஆனால், கிரோரி என்ற பட்டம் குறைந்தது ஷாஜஹான் ஆட்சிக் காலம்வரை நிலைத்திருந்தது.

1582-ல் தோடர்மால் திவானி ஆஷ்ராஃப்பாக (Diwan-i-Ashraf) நியமிக்கப்பட்டபோது முக்கியமான நிலவருவாய்ச் சீர்திருத்தங்கள் புகுத்தப்பட்டன. இதுவரை வரி மதிப்பீடுகள் ஆண்டுதோறும் விளைச்சல், நிலவர விலைகளின் புள்ளி விவரக் கணக்கு, இவற்றின் அடிப்படையில் அறுதி செய்யப்பட்டுவந்தன; அதனால், அரசாங்கத்தின் தேவைகள் வருடத்துக்கு வருடம் மாறிக்கொண்டிருந்தன. தோடர்மால் நிலவரி வசூல் முறையில் 'ஒழுங்கு முறை' அல்லது நிலையளவினை நிலை நிறுத்தினார். அதன் முக்கிய சிறப்பியல்புகள்: (1) நிலத்தை அளத்தல், (2) நிலப்பகுப்பீடு (3) வரி வீதத்தை வரையறுத்தல் என்பவையாம். நிலங்கள் மிகு கவனமாக அளக்கப்பட்டன. நிலத்தை அளப்பதற்கான பழைய அலகுகளின் நீளம் பருவத்துக்குப் பருவம் மாறுபட்டு வந்தன. அதனால் அவற்றை மாற்றிச் சுமார் முப்பத்து மூன்று அங்குல நீளத்திற்குச் சமமான இலாஹீ கஜ் அல்லது கஜம், தனப் (Tanab) அல்லது கூடாரக் கச்சை, இரும்பு வளையங்களால் சேர்க்கப்பட்ட மூங்கில் ஜரிப்பு (Jarib) புகுத்தப்பட்டன. இவை நிலையான அளவையை எப்போதும் அளித்தன. நிலங்கள் 'விளைச்சலின் தொடர்ச்சி அல்லது தொடர்ச்சியின்மைக்கு' ஏற்றவாறு நான்கு வகையாகப் பிரிக்கப்பட்டன. (1) பாலஜ் (Palaj) அல்லது ஆண்டுதோறும் பயிரிடக்கூடிய நிலம் (2) பரௌத்தி (Parauti) அல்லது விளைச்சல் சக்தியை மீண்டும் பெறுவதற்காக உழுது விதைக்காமல் சிறிது காலம் விடப்படும் நிலம் (3) சச்சர் (Chachar) அல்லது மூன்று அல்லது நான்கு ஆண்டுகள்வரை உழுது விதைக்காமல் விடப்படும் நிலம் (4) பஞ்சர் (Banjar) அல்லது ஐந்தாண்டுகள் அல்லது அவற்றிற்கு மேலும் பயிரிடப்படாத நிலம் என்பவையே அவை. உண்மையாகப் பயிரிடப்பட்ட பரப்பே வரிவிதிப்புக்கு மதிப்பிடப்பட்டது. ஒவ்வொரு பிரிவுக்கும் உரிய நிலத்தின் சராசரி விளைச்சலை உறுதியாக அறிவதற்காக மூன்று தரங்களாகப் பிரிக்கப்பட்ட அந் நிலங்களின் விளைச்சல் சராசரி கணக்கில் எடுத்துக் கொள்ளப்படும். அரசாங்கத்துக்கு விளைச்சலில் மூன்றில் ஒரு பங்கினைச் செலுத்தவேண்டும் என்று அறுதி செய்யப்பட்டது. அப் பங்கினை ரயத்துகள் பணமாகவோ, தானியமாகவோ செலுத்தலாம். பயிர்களுக்குத் தகுந்த மாதிரி பணவிகிதங்கள் வேறுபட்டன. வடஇந்தியா, குஜராத் சில மாறுதல்களுடன் தக்கணம் இவ்விடங்களில் மேற்கொள்ளப்பட்ட நிலவருமான முறை ரயத்துவாரி எனப்படும். அதாவது 'நிலத்தை உண்மையாகப் பயிரிடுவோர்களே ஆண்டுதோறும் நிலைத்த வரியைக் கொடுக்கக் கடமைப் பட்டவர்களாவர்.' பேரரசின் வெளிப்புறப் பகுதிகளில் இந்த முறை அமுல் செய்யப்படவில்லை. ஆனால், உள்நாட்டுத் தேவைகளுக்கு ஏற்ப இவற்றுள் ஒவ்வொன்றும் மேற்கொள்ளப்பட்டன.

ஆட்சிமுறைக்காகவும், நில வருவாய் வசூலுக்காகவும் பேரரசு சுபாக்களாகவும், அவை சர்க்கார்களாகவும் பிரிக்கப் பட்டன. சர்க்கார்களில் சில பர்கானுக்கள் (Pargana) இருந்தன. பல கிராமங்கள் சேர்ந்து ஒரு பர்கானுவாகும். அமல் குஜார் (Amalguzar) அல்லது மாவட்ட நில வசூல் அதிகாரிக்குத் துணை அதிகாரிகளின் பெரிய குழு உதவியாக இருந்தது. அரசாங்கத்தின் ஊழியர்களாயன்றிக் கிராமத்தின் ஊழியர்களாயிருந்த கிராம முகத்தம் (Muqaddam–கிராமத்தலைவர்), கிராமப் பட்வாரி (Patwari) இவர்களைத் தவிர அளப்போர்களும், பருவகாலப் பயிர் விளைச்சலைப்பற்றிப் புள்ளி விவரம் தயாரிக்கும் கார்க்குன்களும் (Karkuns) இருந்தனர். மேலும், கானுங்கோ என்பவர் கிராமங் கள் கொடுக்க வேண்டிய நில வருவாய் பற்றிய பதிவேடுகளை வைத்திருந்தார்; பிடிக்சி(Bitikchi) என்பவர் கணக்கர்; போத்தார் (Potdar) என்பவர் மாவட்டக் கஜானுப் பொறுப்பாளர். போது மான கவனத்துடனும் எச்சரிக்கையுடனும் வரி வசூல் செய்ய வேண்டுமென்றும் 'பருவமில்லாக் காலத்தில் அதட்டிக் கேட்கக் கூடாதென்றும்' அவர்கள் அரசரால் அறிவுறுத்தப்பட்டிருந்தனர். 'வரிவசூல் செய்யும்போது பயிரிடுவோரிடம் கொஞ்சம் தாராள மனப்பான்மையும், கண்ணோட்டமும் காட்டவேண்டும் என்றும், எல்லா அப்வாப்களையும் (Abwabs) கைவிட்டுவிட்டு உழவர்களின் துன்பத்தை ஒழிக்க வேண்டும் என்றும் எப்போதும் பேரரசர்கள் தங்கள் அதிகாரிகளுக்கு உத்தரவுகள் அனுப்பிக்கொண்டிருந் தனர்.' ஷாஜஹான், ஔரங்கசீப் ஆட்சிக்காலங்களில் வலியுறுத்தி வசூல் செய்த அதிகாரிகள் இருந்தமைக்கும், குடிமக்களிடமிருந்து மாகாண கவர்னர்கள்மீது வந்த குறை கூறுதலினால் கவர்னர்கள் வேலையிலிருந்து நீக்கப்பட்டமைக்கும் சான்றுகள் இருக்கின்றன. குறிப்பாகப் பேரரசின் வெளிப்புற மாகாணங்களிலும் மாவட்டங் களிலுமிருந்த வருமான வசூல் கீழ்அதிகாரிகள் ஊழல், கையாடல் இவற்றிற்கு அப்பாற்பட்டவராய் இல்லாமல் இருந்தபோதிலும், மொத்தத்தில், உயர்ந்த அதிகாரிகள் நேர்மையாளராயும், நாட்டு நலனில் ஆர்வம் கொண்ட அரசியல்வாதிகளாயும் இருந் தனர். இவ்வாறு வருமான முறையின் தோல்வி அல்லது வெற்றி இராச்சியத்தின் மையத்தில் இருந்த ஆட்சி முறையின் இயல் பையும் தன்மையையும் பொறுத்திருந்தது. ஔரங்கசீப்பின் காலத்தில் இயந்திரம் முறை தவறி நடக்காமலும், தீங்குகள் தோன்றுமலும் இருக்க முடியவில்லை. ஆனால், மொத்தத்தில் அதன் கொள்கைகள் சிறந்தவையாயிருந்ததுடன், 'விரும்பத்தக்க செயல்முறை அறிவுரைகளே அதிகாரிகளுக்குக் கொடுக்கப்பட்டும்' வந்தன. ரயத்துக்கள் ஓரளவு பாதுகாப்புப் பெற்றனர். அர சாங்கத்தின் பொருளாதாரம் அடிக்கடி ஏற்றத்தாழ்வு நேராதபடி

தடுக்கப்பட்டது; அல்லது முடிந்த அளவு அது குறைக்கப் பட்டது. மேலும், ரயத்துகள் வரி கொடுக்காதபோது அவர் களுடைய உடைமைகள் பறிக்கப்படவில்லை. ஓராண்டின் உண்மை யான விளைச்சலின் அடிப்படையில் 'பயிரின் தரத்துக்கேற்ற வரி கொடுக்கும் வழக்கம்' இக் காலத்தில் ஆண்டின் அறுவடையைப் பற்றிக் கவனியாது நிலைத்த ஒரு தொகையைக் கொடுப்பதை விடச் சிறந்தது. இந்துச் சட்டமும், வழக்கமும் ஆறில் ஒரு கடமை வசூலிக்கச் சொன்னதை அல்லது இக் காலத்து நில உடைமை யாளர் பெறுவதை ஒப்பிடும்போது மூன்றில் ஒரு கடமை வற் புறுத்தியது சிறிது உயர்வாகத் தோன்றினும், அரசாங்கம் பல வகையான வரிகள், தீர்வைகள் இவற்றைத் தள்ளுபடி அல்லது குறைபடி செய்தமையால் அது அவர்களுக்கு ஒரு பாரமான பளுவாகக் காணப்படவில்லை.

## 8. மாகாண அரசாங்கம்

*1579—1589*-ல் அக்பர் தம் பேரரசைப் பன்னிரண்டு மாகாணங் களாகப் பிரித்தார். அவருடைய ஆட்சி முடிவில் அந்த எண் ணிக்கை பதினைந்தாக[1] உயர்ந்தது. அது ஜஹாங்கீர் காலத்தில் பதினேழாகவும், ஒளரங்கசீப் காலத்தில் இருபத்தொன்றாகவும் இருந்தது. 'முகலாயப் பேரரசின் மாகாணங்களின் ஆட்சியமைப்பு முறை மத்தியஅரசாங்கத்தின் சரியான மாதிரியாகவே இருந்தது.' சிபா சாலார் (Sipah Salar) என்றும், தலைமைத் தளபதி அல்லது சாஹிப் சுபா, மாகாணப்பிரபு அல்லது வெறுமனே சுபாதார் என்றும், அதிகார முறையில் நாஸிம் என்றும் வழங்கப்பட்ட கவர்னர் ஒவ்வொரு சுபாவின் உள்நாட்டு, படைத்துறை ஆட்சியின் தலைவராக இருந்தார். திவான், பக்ஷி, பௌஜ்தார், கொத்தவால் காஸி, சத்ர், ஆமில், பிடிக்சி, போத்தார், வாகா-இ-நவிஸ் போன்ற கீழதிகாரிகளும் அவர்கீழ் இருந்தனர். திவான் அல்லது மாகா ணத்தின் தலைமை வருமான அதிகாரி அடிக்கடி சுபாதாருக்குப் போட்டியாளராக இருந்தார். அவ் விருவரில் ஒருவரும் அளவுக்கு அதிகமான அதிகாரம் பெற்றுவிடக் கூடாதென்று 'ஒருவரை ஒருவர் கண்காணித்துக்கொள்ள வேண்டும்' என்று இருவரும் கட்டளையிடப்பட்டிருந்தனர்.

## 9. படை

அரசாங்கம் பெரிய நிலைப்படை ஒன்றையும் வைத்திருக்க வில்லை; ஆனால், கொள்கையளவில் 'பேரரசின் எல்லாப் பலம்

[1] ஆக்ரா, அலகாபாத், அவுத்து, டில்லி, லாகூர், மூல்தான், காபூல், அஜ்மீர், வங்காளம், பீஹார், அகமதாபாத், மாளவம், பீரார், காந்தேஷ், அகமத்நகர்.

வாய்ந்த குடிமக்களும் பேரரசப் படையின் சக்திவாய்ந்த போர் வீரர்களேயாவர்.' முகலாயப் படையின் வரலாறு பெரும்பாலும் மன்சாப்தாரி முறையின் வரலாறேயாகும். அதன் சிறப்பியல்புகளை நாம் ஏற்கெனவே பார்த்திருக்கிறோம். மேலும், மன்சாப்தார் களைத் தவிர மன்சாப்தார்களின் ஆணையின்கீழ் வைக்கப்பட்டு, அரசாங்கத்தினரால் சம்பளம் கொடுக்கப்பட்ட துணைத் துருப் புகள் அல்லது தாக்கிலிக்களும் (Dakhilis), 'ஒரு தனிப்பட்ட உயர்ந்த மதிப்புள்ள குதிரைவீரர்களான அஹாதீக்களும்' இருந் தனர். 'அஹாதீக்கள் பொதுவாகப் பேரரசரைச் சுற்றி இருந் தனர்; மற்ற எவருக்கும் கீழ்ப்படிய வேண்டுதல் இல்லாதவராய் இருந்தனர்.' மன்சாப்தாரி முறையில் ஊழல்கள் இல்லாமல் இல்லை. இர்வின் 'முகலாயப் படையில் பொய்ப் படை வீரர்கள் இருந்தனர். அத் தீங்கினுல் அப் படை செறிப்புக் காலத்தில் துன்பமுற நேர்ந்தது. பிரபுக்கள் தங்களுக்கு விதிக்கப்பட்ட அளவு ஆள்களை அனுப்பவேண்டும் என்பதற்காக ஒருவர்க்கொருவர் ஆள்களைக் கடன் கொடுத்துவந்தனர். அல்லது தெருவில் சுற்றும் சோம்பேறிகளைப் பிடித்துப் பொதி சுமக்கும் மட்டக்குதிரைகளின் மேல் ஏற்றிக் கொண்டுவந்து படையில் சேர்த்து அவர்களும் மற்றத் திறமை வாய்ந்த வீரர்களோடு வைத்து எண்ணப்படுவர்' என்று குறிப்பிடுகிறுர். இத் தீய பழக்கங்களை அகற்றுவதற்காக, அக்பரின் அரசாங்கம் பல முயற்சிகளை மேற்கொண்டது. குறிப் பிட்ட காலத்துக்கு ஒரு முறை போர் வீரர்களை அழைப்பதற்கான ஒழுங்கு விதிகள் புகுத்தப்பட்டன. சிஹ்ரா (Chihrah) அல்லது மன்சாப்தாரின் படைவீரர் பெயர்விளக்கப் பட்டியல் தயாரிக்கப் பட்டது. அதில் 'படை வீரரின் பெயர், தந்தையின் பெயர், இனம் அல்லது ஜாதி, பிறப்பிடம், ஆள் தோற்றம் பற்றிய விளக் கங்கள் குறிக்கப்பட்டன'. தாகோமஹல்லி (Dagh-o-mahalli) அல்லது வெறுமனே தாக் என்று வழங்கப்படும் குதிரைகளுக்குக் குறியிடும் வழக்கம் மீண்டும் கொண்டுவரப்பட்டது. ஆனுல், இந் நடவடிக்கைகளும் தீங்குகளைத் திறமையாகக் களையவில்லை.

இக் கால மொழியில் கூறவேண்டுமானுல் முகலாயப்படைகள் 1. குதிரைப்படை 2. காலாள்படை 3. பீரங்கிப் படை 4. கடற் படை ஆகியவற்றைப் பெற்றிருந்தன. இவற்றில் குதிரைப் படைதான் மிகு முக்கியமானது. காலாள்படை பெரும்பாலும் சாதாரண நகரமக்கள், உழவர்கள் இவர்களைக்கொண்டு அமைக்கப் பட்டது; 'படையின் போரிடும் பலத்தின் பகுதியாக அது சிறப் பிடம் வகிக்கவில்லை'. உள் நாட்டில் தயாரிக்கப்பட்ட துப்பாக்கி களும், வெளி நாட்டிலிருந்து இறக்குமதி செய்யப்பட்ட துப்பாக்கி களும் பாபர், ஹுமாயூன், அக்பர் ஆகியோரால் போர்க்காலங்

களில் பயன்படுத்தப்பட்டன. ஆனால், முன்னைவிட 'ஆலம்கீரின் ஆட்சியில் பீரங்கிப்படை மிகவும் நிறைவுற்றதாகவும், எண்ணிக் கையில் மிகுதியானதாகவும் இருந்தது'. பீரங்கிப்படைச் செலவு முழுதும் அரசாங்கமே ஏற்றுக்கொண்டது. இக் காலத்தில் கருதப்படுவதுபோல வலிமையான ஒரு கடற்படை அக் காலத்தில் இருக்கவில்லை. அக் காலத்தில் 'கடற்படைத் துறை' இருந்ததாக அபுல் பாஸல் எழுதுகிறார். அந்தத் துறையின் பணிகள் பின் வருமாறு: (1) ஆற்றில் போக்குவரத்துக்காக எல்லாவகையான படகுகளையும் கட்டுவது. (2) போர் யானைகளை ஏற்றிச் செல் வதற்காக வலிமை வாய்ந்த படகுகளை இணைத்துக் கட்டுவது. (3) திறமைமிக்க கடலோடிகளைத் தேர்ந்தெடுப்பது.(4) ஆறுகளைக் கண்காணிப்பது. (5) ஆற்றுச் சுங்கங்களையும் வரிகளையும் விதிப் பதும் அவற்றை வசூலிப்பதும் என்பவை. மக்குகள் (Mugs), அராக்கானிய கடற்கொள்ளைக்காரர்கள் இவர்களிடமிருந்து வங்காளக் கடற்கரையைக் காப்பதற்காகப் படைக்கலன்தாங்கிய 768 கப்பல்களும் படகுகளும் அடங்கிய படையொன்று, டாக் காவில் நிறுத்திவைக்கப்பட்டிருந்தது. ஆனால், முகலாயர்களின் கடற்படை நிறுவனம் மிகவும் சக்திவாய்ந்த ஒன்றாகக் காணப்பட வில்லை.

சில ஆசிரியர்கள் நம்மை நம்பும்படி சொல்வதுபோல முகலாயப் படை அவ்வளவு திறமைக்குறைவானதாய் இல்லாமல் இருந்தாலும் சில குறைபாடுகளும் அதில் இல்லாமற் போகவில்லை. முதலாவதாக அது ஒரு தேசியப் படையாக இல்லை. ஆனால், பல வகைக் கூறுகளின் கலவையாக இருந்தது. அக் கூறுகள் ஒவ் வொன்றும் தங்களுக்கே உரிய தனிப்பட்ட முறைகளையும், யுத்த தந்திரங்களையும் பின்பற்ற முயன்றன. இவ்வாறு ஆண்டுகள் செல்லச் செல்லப் படை எண்ணிக்கையும் உயர்ந்துவந்தது; படையை நிருவகிப்பதற்கும், கட்டுப்பாட்டுக்குள் வைத்திருப்பதற் கும் முடியாததாய், சிக்கல் மிகுந்ததாயும் ஆகிவிட்டது. இரண் டாவதாகப் படை வீரர்கள் நேரடியாகப் பேரரசுக்குக் கடமைப் பட்டவர்களாய் இல்லாமல் தங்களுக்கு மேலிருந்த அடுத்த அதி காரிகளுடனும், வேலைக்குத் தேர்ந்தெடுப்போருடனுமே அதிகத் தொடர்பு கொண்டிருந்தனர். அவர்களுக்குள் அடிக்கடி மிகுந்த பொறாமையும் கடும் போட்டியும் ஏற்பட்டு வந்தமையின், அவை போர்களில் வெற்றி வாய்ப்பை அழித்துவந்தன. கடைசியாகப் பாசறையிலும், போருக்கு அணி வகுத்துச் செல்லும்போதும் முகலாயப்படை ஆடம்பரமும் படாடோபமும் மிகுந்ததாய்க் காணப்பட்டதால் அது தன் திறமையை அழித்துக்கொள்ள நேரிட்டது. சில சமயங்களில் அக்பர் இந்த வழக்கத்திலிருந்து

மாறுபட்டுச் சென்றூர். ஆனல், பொதுவாக, பேரரசப் படை 'கட்டுக்குள் அடக்கமுடியாத நகரும் நகரமாகவே' தோன்றியது. மேலும், பேரரச அவையின் பகட்டான ஆடை அணி அலங்காரத் துடனும் வந்ததும், அந்தப்புரத்தின் ஒரு பகுதியினர் அவர் களுடைய பணியாள்களுடன் யானைகள் மேலும், ஒட்டகங்கள் மீதும் ஏறி வந்ததும், நடமாடும் நாடகக் கொட்டகை இசை வாணர்களின் கூடாரம், அலுவலகங்கள், தொழிற்சாலைகள், கடை வீதிகள் இவையும் கூடச் சென்றதும் படையின் விரைவு இயக்கத்துத் தடைகளாய் இருந்தன. யானைகளும், ஒட்டகங் களும் பொருளைச் சுமந்து சென்றன; நூற்றுக்கணக்கான கட்டை வண்டிகள் படைக்கு வேண்டிய பொருள்களைச் சுமந்தன. கோவேறு கழுதைகளின் ஒரு படை பேரரசினர்க்கு வேண்டிய ஆடை முதலிய பொருள்களையும், தட்டுமுட்டுச் சாமான்களையும் சுமந்து சென்றது'. அகமத் நகரில் கூடாரமடித்த ஔரங்கசீப்பின் பெரும் பாசறையைப் பற்றிக் குறிப்பிடும்போது கிராண்ட்டப் பின்வருமாறு தம் கருத்தைத் தெரிவிக்கிறூர்; 'அது அவருடைய படையின் இயக்கங்களுக்கு ஒரு பெருந்தடையாய் இருந்தது. அந்த நிறுவனங்கள் விழுங்கிய செலவு அவருடைய பொருளாதார நிலையைப் பாதித்தது. அது விரைவில் மிகு இன்றியமையாததான படைத்துறை, அரசியல் ஏற்பாடுகளையும் முடமாக்கிவிட்டது. இவ் வகையான பாசறை வாழ்க்கை இயல்பாகவே படையில் பெருஞ் செலவையும், ஒழுங்கின்மையினையும் விளைவித்தன. ஜஹாங்கீர், ஷாஜஹான்கீழ்த் தவிர்க்க முடியாத சீர்குலைவு ஏற்படத் தொடங்கியது. அது ஔரங்கசீப் காலத்தில் மிகு தெளிவாக விளங்கியது'. படையும் 'விரைந்து செயலாற்றவோ அற்புதமான சாதனை செய்யவோ' முடியாததாக இருந்தது. இந்த வகையில் குறைந்த எண்ணிக்கையுடைய சிவாஜியின் குதிரைப்படை, அவரால் சிறந்த, கண்டிப்பான ஒழுங்குக்கும் கட்டுப்பாட்டின் கீழும் வைக்கப்பட்டிருந்ததால் முகலாயப் படையைவிட மிகச் சிறந்ததாய் விளங்கலாயிற்று.

# 7. சமுதாய, பொருளாதார வாழ்க்கை

முகலாய இந்தியாவின் உண்மையான மக்கள் வரலாறு அதாவது அவர்களுடைய சமுதாய வாழ்க்கையும், பொருளாதார நிலையும் இக் காலத்திலும் நமக்கு முக்கியம் வாய்ந்ததாகவும் ஆர்வத்தைத் தூண்டுவதாகவும் உள்ளன. அக் காலத்திய அரசியல் நிகழ்ச்சிகள் அல்லது படைப் போர்கள் முதலியவற்றின் வெறும் பட்டியலைக் காட்டிலும் இவை நமக்குச் சிறப்புமிக்க செய்திகள் பலவற்றையும், அன்றைய மக்களின் உண்மையான நிலையையும் தெரிவிக்கின்றன. உண்மையில் இதைப்பற்றி ஆராயக் கிடைக்கும் சான்றுகளும் மூலப்பொருள்களும் மிகு குறைவாகவே உள்ளன. ஆனால், அக் காலத்திய ஐரோப்பியப் பயணிகள் எழுதி வைத்துச் சென்ற குறிப்புகளிலிருந்தும், ஐரோப்பியத் தொழிற்சாலைகளின் பதிவேடுகளிலிருந்தும் அரிய பல செய்திகள் அறியப்படுகின்றன. அக் காலத்துப் பாரசீக மொழியில் எழுதப்பட்ட வரலாற்று நூல்களிலும், நாட்டு மொழிகளில் தோன்றிய இலக்கியங்களிலும் ஆங்காங்கே பல குறிப்புகள் காணப்படுகின்றன.

## 1. சமுதாய நிலைகள்

### அ. சமூகத்தின் அமைப்பு

சமூகம் அரசரைத் தலைமையாகக் கொண்ட ஒரு ஜமீன் அமைப்புப் போலக் காணப்பட்டது. அரசருக்கு அடுத்தபடியாக அதிகாரிகளாயிருந்த பிரபுக்கள் சிறப்புப் பதவிகளும், சிறப்புரிமைகளும் பெற்றின்புற்றனர். அவை ஒரு போதும் பொதுமக்களுக்குக் கிடைக்காத சிறப்புகளாகும். இது இயல்பாகவே அவர்களுடைய வாழ்க்கைத் தரத்தில் ஒரு வேறுபாட்டைத் தோற்றுவித்தது. பிரபுக்கள் செல்வத்திலும், சுகபோகங்களிலும் மூழ்கித் திளைத்தனர். பொதுமக்களோ அவர்களுடன் ஒப்பிடும்போது இரங்கத்தக்க நிலைமையில் இருந்தனர். வளமான செல்வ வருவாய்களைப் பெற்றிருந்த செல்வர்கள் இயல்பாக ஆடம்பரத்திலும், குடித்துக் கும்மாளமிடுவதிலும், ஈடுபட்டிருந்தனர். இறந்த பிறகு தங்கள் செல்வமும் சொத்தும் பறிமுதல் செய்யப்படும் என்று பயந்து பிரபுக்கள் எல்லாம் சிக்கனமாய்ச் சேமித்து வைக்கும் ஆர்வம்

இல்லாதவர்களாய் இருந்தனர். மது, மாது இவற்றில் அளவுக்கு மீறிய ஈடுபாடு பிரபுக்களிடம் பொதுவாகக் காணப்பட்டமை ஒரு தீச் செயலாகும். பேரரசர் 5,000 பெண்களை அந்தப்புரத்தில் வைத்துப் பெண் அதிகாரிகளால் தனியாசக் கண்காணித்து வரும்படி செய்தார் என்று அபுல் பாஸல் கூறுகிறுர். ஜஹாங்கீர் காலத்தில் ஆக்ராவிலிருந்த டச்சுத் தொழிற்சாலை ஒன்றின் தலைவ ராயிருந்த பிரான்சிஸ்கோ பெல்சாயெர்ட், 'செல்வர்களின் மாளிகைகள் உள்ளே காமவெறி மிக்க உடலின்பம், காமக் கூத்தாட்டம், வெறிமிக்க களியாட்டம், அளவுக்கு மீறிய ஆடம்பரம் பெருகிய செருக்கு, அணி அலங்காரமிக்க இன்ப விருப்பம் இவற்ருல் அலங்கரிக்கப்பட்டிருந்தன' என்று கூறியிருக் கிறுர். மேலும், அவர்களுடைய வேசித்தனத்தை வலிமையான சொற்களில் இகழ்ந்துரைத்திருக்கிறுர். செல்வமிக்கோரின் உணவும் ஆடையும் வளமிக்கதாயும், விலையுயர்ந்ததாயும் இருந்தன. அவர்கள் மிகு உயர்வாக அலங்கரிக்கப்பட்ட மாளிகைக் கட்டடங் களில் வாழ்ந்தனர், வீட்டிற்குள் ஆடும் விளையாட்டுகளிலும், வெளியில் ஆடும் விளையாட்டுகளிலும் ஈடுபட்டுக் களிப்புக் கொண்டிருந்தனர்.

நாட்டின் செல்வத்தை வெளிநாட்டினர் எவரும் தங்கள் நாட்டுக்கு எடுத்து செல்ல அனுமதிக்கப்படவில்லை யாதலால், அயல் நாட்டுப் பிரபுக்களின் குழு நாட்டின் செல்வத்தை இறைத்து விடவில்லை என்பது குறிப்பிடத்தக்கது. அரசாங்கம் தன் சக்தியைத் தீவிரப்படுத்தி வைத்திருக்கும் வரை பிரபுக்கள் முதலில் நாட்டிற்குச் சிறந்த வகையில் பயன்படும் தொண்டர்களாயிருந் தனர். ஆனுல், ஷாஜஹான் ஆட்சி முடிவுக் காலத்தில் அவர்கள் தங்கள் பழைய பண்பாட்டு நிலையை இழந்து மிகவும் ஒழுக்கம் தவறியவர்களாயினர். ஔரங்கசீப்பின் ஆட்சியிலும், பதினெட் டாம் நூற்றுண்டிலும் மேலும் சீர்குலைவு ஏற்பட்டது. பிற் காலத்துத் தன்னலமிக்க, ஒழுங்கு கெட்ட பிரபுக்களின் போட்டி களும், சதிகளும் சமுதாய வாழ்க்கையில் தீங்குகளை விளைவித்த துடன், அக் காலத்து அரசியல் குழப்பங்களுக்கும் பெருங் காரணமாக இருந்தன.

பிரபுக்களின் கீழே 'சிறிய சிக்கனமாக' நடுத்தர வகுப்பு இருந்தது. அவ் வகுப்பைச் சார்ந்தவர் 'படாடோபமான செலவு களைச் செய்யாமல் தங்கள் பதவிகளுக்கும், தொழில்களுக்கும் பொருந்தியவாறு வாழ்க்கைத் தரத்தை அமைத்துக்கொண் டனர். பொதுவாக வணிகர்கள் எளிய, மட்டுமீருத வாழ்க்கையை நடத்தினர். சில ஐரோப்பிய ஆசிரியர்களின் கருத்துப்படி

தங்கள் பரந்த வாணிகத்தால் பெரும் பொருள் ஈட்டியிருந்த மேற்குக் கடற்கரை வணிகர்கள் ஆடம்பரங்களில் மூழ்கியவர் களாய்ச் செல்வ வாழ்வு வாழ்ந்தனர். சமுதாயத்தின் கீழ்ப் படியைச் சார்ந்தவர்களின் நிலைமை மற்ற இரு உயர்ந்த வகுப்பு களுடனும் ஒப்பிட்டுப் பார்க்கும்போது கடினம் நிறைந்ததாகவே இருந்தது. அவர்களுக்கு உடுக்க போதுமான உடையில்லை. கம்பளி உடைகளும் காலணிகளும் அவர்களுடைய செலவினத்திற்கு எட்டாதவையாய் இருந்தன. அவர்களுடைய மற்றத் தேவை களெல்லாம் மிகு குறைவாய் இருந்தமையின் அவர்கள் சாதாரண நிலைமையில் சாதாரண உணவுக்காகக் கஷ்டப்படவில்லை. ஆனால், பஞ்சக்காலத்திலும், பொருள்பற்றுக்குறை ஏற்பட்ட காலத்திலும் அவர்களுடைய துன்பங்கள் மிகு பெரியதாய் இருந்திருக்க வேண்டும். தம்முடைய ஏழாண்டு அனுபவத்தில் ஃபிரான்சிஸ்கோ பெல்சாயெர்ட் எழுதும்போது தம் காலத்தில் பெயரளவில் சுதிந்திரமுடையவர்களாய்,ஆனால்,தாமாகவே அடிமைத் தனத்தில் ஈடுபடுத்திக்கொள்ளும் நிலைமையினின்று சிறிதும் வேறுபடாத வர்களாய்க் கூலியாள்கள், பியூன்கள் அல்லது வேலையாள்கள் கடைக்காரர்கள் என்ற மூன்று மக்கள் பிரிவினர் இருந்தனர்' என்று குறிப்பிட்டுள்ளார். அவர்களுடைய வேலை சுதந்திரமுடைய தன்று. அவர்களுக்குக் கிடைக்கும் கூலி மிகு குறைவாயிருந்தது; உணவும் உறையுளும் மோசமாயிருந்தன. மேலும் அவர்கள் பேர ரசின் அதிகாரிகளின் கொடுமைக்கு ஆளாயினர். கடைக்காரர் கள் சில சமயங்களில் செல்வ மிக்கவர்களாயும், மதிக்கப்பட்டவர் களாயும் இருந்தபோதிலும், பொதுவாக அவர்கள் தங்கள் செல்வத்தை மறைத்து வைத்திருந்தனர். பெல்சாயெர்ட் எழுது வது போல, 'அவர்கள் பதுக்கி வைக்கும் குற்றத்திற்கு ஆளாகி விடுவர். அப்போது அவர்களிடம் இருப்பவை எல்லாம் சட்ட முறைப்படி பறிமுதல் செய்யப்பட்டுவிடும்'. ஏனெனில், 'செய்தி அளிப்போர் கவர்னர்களை ஈக்கள்போல் மொய்த்துக்கொண்டு அவர்களுடைய தயவைப் பெறுவதற்காகத் தேவையானால் பொய் சத்தியங்கள் செய்து நண்பர்களாயினும் எதிரிகளாயினும் வேறு பாடின்றிக் காட்டிக் கொடுத்துவிடுவர்'. ஷாஜஹானின் ஆட்சி முடிவின்போது குடியானவர்கள் மாகாண கவர்னர்களால் மிகுதி யாகத் துன்புறுத்தப்பட்டனர். அவர்கள் நிலை மிகவும் மோச மாகிக்கொண்டு வந்தது. வறுமையின் தீங்குகளும் நாட்டில் அதிகரித்து வரலாயின.

## ஆ. சமுதாயப் பழக்கங்களும் நடைமுறைகளும்

மட்டுமீறி ஈடுபடும் தீக்குணம் செல்வமிக்கோரிடம் காணப் பட்டது போலச் சாதாரண மக்களிடம் அவ்வளவு சாதாரணமாகக்

காணப்படவில்லை. டெர்ரி குறிப்பிடுகிறார் : 'அங்கேயுள்ள மக்கள் (குடிப்பதற்குப் போதுமான மது வகைகளைப் பெற முடிந் தாலும்), செல்வர்களால் உண்டு குடித்து மீதமாக்கப்பட்ட இறைச்சி, மது இவற்றைச் சில சமயங்களில் குடிப்பதைத் தவிர வேறு எச் சமயத்திலும் குடியில் மூழ்கியவர்களாய்க் காணப்பட வில்லை'. தங்கள் உணவில் அவர்கள் மிதமானவர்களாயும் அயலார் களிடம் மரியாதை உள்ளவர்களாயும் இருந்தனர்.

இந்துக்களும் முஸ்லிம்களும் சோதிட நூலின் குறிகளிலும், கொள்கைகளிலும் நம்பிக்கை உள்ளவராய் இருந்தனர். அந்தக் காலத்து முதன்மையான சமுதாய நடைமுறைகள் சதி, பாலிய விவாகம் குலினிஸம், வரதட்சணை முறை இவையாகும். இச் சமுதாய வழக்கங்களை ஒழுங்குபடுத்த மணமகன், மணமகள் ஆகிய வர்களுடைய சம்மதமும் திருமண ஒப்பந்தங்களுக்கு வேண்டிய பெற்றோர்களின் அனுமதியும் பெறவேண்டுமென்று அக்பர் விதிக்க முயன்றார். பூப்படைவதற்கு முன்பு திருமணம் செய்துகொள்வ தையும், நெருங்கிய உறவினர்களிடையே திருமணம் செய்விப்ப தையும், உயர்ந்த வரதட்சணைகள் வாங்குவதையும் பலதார மணத்தையும் தடுக்க அவர் முயன்றார். ஆனால், அவருடைய முயற்சிகள் செயல்முறையில் சிறந்த பயனுள்ளவையாய்த் தோன்ற வில்லை. பதினெட்டாம் நூற்றாண்டில் குறிப்பாக வங்காளத்தில் சமுதாயத் தீங்குகள் அதிகரித்துவந்தன. அவற்றைப் பற்றி, போல்ட், கிரௌபர்ட், ஸ்காப்டன் போன்ற அக் காலத்திய ஐரோப்பிய ஆசிரியர்களும், இலக்கியமும் அடிக்கடி குறிப்பிடக் காண்கிறோம். எனினும். அக் காலத்து மராட்டியச் சமுதாயம் வரதட்சணைகள் ஏற்றுக்கொள்வதற்கு ஊக்கம் கொடுக்கவில்லை. பேஷ்வாக்கள் மகாராஷ்டிர சமுதாய மத விஷயங்களில் சிறந்த கட்டுப்பாடுகளை மேற்கொண்டிருந்தனர். டாக்டர் சென் குறிப் பிடுவது போல, அவர்களுடைய திருமண ஒழுங்கு முறைகள் 'இக் காலத்தவராலும் பயன்படும் வகையில் பின்பற்றுதற்கேற்ற முறையில் தாராள மனப்பான்மை மிக்கதாய் இருந்தது'. கட்டா யப்படுத்தித் திருமணம் செய்வதை அவர்கள் எதிர்த்தனர். உடன் படிக்கை செய்து கொள்ளுவோரின் நோக்கம் சரியானதாயின் ஒழுங்கில்லாத முறையில் செய்துகொண்ட திருமணங்களும் ஒரோ வழி அனுமதிக்கப்பட்டன'. பஞ்சாப், யமுனைச் சமவெளியிலிருந்த ஜாத்துகளில் காணப்பட்டது போலவே, விதவைத் திருமணம் மகாராஷ்டிரத்துப் பிராமணரல்லாதவரிடம் காணப்பட்டது. ஒருத்தி பல கணவர்களுக்கு மனைவியாயிருக்கும் வழக்கம் ஜாத்து களிடம் காணப்பட்டது. பதினெட்டாம் நூற்றாண்டின் நடுப் பகுதியில் டாக்காவின் ராஜா ராஜ்வல்லபர் விதவைத் திருமணத்

ஐதைப் புகுத்த வீணை முயற்சியைச் செய்தார். பொதுவாகப் 'பெண்கள் தங்களுடைய தலைவர்கள் விருப்பத்திற்கு இணங்குபவ ராயினும்' அவர்கள் அரசியல் விவகாரங்களில் பெரும்பங்கு எடுத்துக்கொண்டதற்குப் பல சான்றுகள் உள்ளன.

## இ. பதினெட்டாம் நூற்றாண்டில் சீர் குலைவு

இந்திய வரலாற்றில் பல காரணங்களுக்காக மிக இருண்ட ஒரு காலம் என்று கருதப்படுதற்குரிய பதினெட்டாம் நூற்றாண்டில் சமுதாய வாழ்க்கை வருந்தத்தக்க முறையில் சீர்கேடுற்றிருந்தது. தற்கால ஆசிரியர் ஒருவர் அந்த நூற்றாண்டின் முடிவிலும், அடுத்த நூற்றாண்டின் தொடக்கத்திலும் சமுதாயப் பழக்கத்திலும், அரசிய லிலும், மதம், கலை இவற்றிலும், நாம் புதுமையில்லாத பழக்கம், சீர்குலைந்த மரபு இவற்றின் பாதையில் புகுந்திருந்தோம்; நம்முடைய மனிதத் தன்மையின்படி நடக்கும் வழக்கத்தை நிறுத்தி விட்டோம் என்று கூறியிருப்பது சரியென்றே தோன்றுகிறது.

எல்லாவகையிலும் சீர்குலைவு ஏற்பட்டுக்கொண்டிருந்த இந்தக் காலத்தின் மறுமலர்ச்சி இயல்பாகக் காணப்பட்டது. இந்து-முஸ்லிம் ஒற்றுமையின் முறை தொடர்ந்து வந்தமையாகும். பல நூற்றாண்டுகளாகக் கசப்பான அந்த இரு இனங்களுக்கிடையே நட்புறவு தொடர்ந்து இருந்துவந்தது. இந்து-முஸ்லிம் ஒற்றுமை யின் இணக்க வாழ்விற்கு முக்கியமான, அறிவுரை புகட்டத்தக்க எடுத்துக்காட்டாயிருந்தது அக்பர் ஆட்சி. ஔரங்கசீப்பின் ஆட்சிக் காலத்தில்கூட இவ் வொற்றுமைக்கு எடுத்துகாட்டுகள் காணப்படாமல் இல்லை. பதினேழாம் நூற்றாண்டில் இந்திக் கவிதை நூலான **பத்மாவதி** என்ற நூலை வங்காளத்தில் மொழி பெயர்த்த முகம்மதியக் கவிஞரான அலாவல் (Alawal) வைணவ சமயக் கருத்துகளைப் பற்றிப் பல கவிதைகள் இயற்றினர். சய்யிது சகோதரர்களுள் ஒருவரான அப்துல்லாகான் வசந்த உற்சவம், ஹோலிப் பண்டிகை இவற்றைக் கொண்டாடினர். சிராஜ்-உத் தௌலாவும் மீர் ஜாபரும் தங்கள் நண்பர்களுடனும், உறவினர் களுடனும் ஹோலிப்பண்டிகைகளில் கலந்துகொண்டு மகிழ்ந் தனர். மூர்ஷிதாபாத்துக்கு அருகிலுள்ள கிரீத்தேஸ்வரி சிலைக்கு அபிஷேகம் செய்த நீரின் சில துளிகளைச் சாவுப் படுக்கையில் மீர் ஜாபர் குடித்தார் என்று சொல்லப்படுகிறது. தௌலத்ராவ் சிந்தியாவும், அவருடைய அதிகாரிகளும் முகம்மதியர்களைப் போலவே பச்சைஆடைகள் உடுத்திக்கொண்டு முஹரம் ஊர்வலங் களில் கலந்துகொண்டனர். பதினெட்டாம் நூற்றாண்டின் தொடக்கத்தில் வெளிவந்த பாரசீக வார ஏடான **ஜாமி-ஜஹான் நுமா** என்ற பத்திரிகையின் துணை கொண்டு கி.பி. 1825-ல் டில்லி

அரசவையில் துர்க்கை பூசை எப்படிக் கொண்டாடப்பட்டது என்பதைத் தற்கால ஆசிரியர் ஒருவர் விளக்கியுள்ளமை இங்குக் குறிப்பிடத்தக்கதாகும்.

## 2. பொருளாதார நிலைகள்

### அ. அக்பருக்கு முற்பட்ட காலத்திய பொருளாதார நிலை

முதல் இரண்டு தைமூரித்துகளின் ஆட்சிக் காலத்தில் இந்தியாவின் பொருளாதார நிலை எப்படியிருந்தது என்பதைப்பற்றி அறிய நமக்கு மிகச் சிறிதளவே செய்திகள் கிடைக்கின்றன. பாபர் தம்முடைய குறிப்பேடுகளில் இந்துஸ்தானத்தைப்பற்றிக் கொடுத்துள்ள விளக்கங்கள் சரியானவையா என்பதுபற்றிப் பெரும்பாலான வரலாற்றாசிரியர்கள் ஐயங்களைத் தெரிவித்துள்ளனர். குல்பதன் பேகத்தின் ஹூமாயூன் நாமா தற்செயலாக இந்துஸ்தானத்தில் நிலவியிருந்த பொருள்களின் விலைக்குறைவைப் பற்றிப் பேசுகிறது. உதாரணமாக அக்பரின் பிறந்த இடமான அமர்க்கோட்டில் நான்கு வெள்ளாடுகளின் விலை ஒரு ரூபாயாக இருந்தது. ஷெர்ஷாவின் விரிந்த பொருளாதாரச் சீர்த்திருத்தங்கள் அவருடைய இராச்சியத்து மக்களின் பொருளாதார நிலையை வளர்ச்சியடையச் செய்திருக்க வேண்டும். அந் நிலை குறைந்தது சூர் ஆட்சி தன் சக்தியைப் பெற்றிருக்கும்வரை மிகக் குலையாமல் இருந்து வந்தது.

### ஆ. அக்பர் காலத்துக்குப் பின் பொருளாதார நிலை

மாபெரும் முகல் அரசர்களின் ஆட்சிக் காலங்களிலும், பிற்கால முகல்அரசர்களின் ஆட்சிக் காலங்களிலும் நிலவிய பொருளாதார நிலையைப் பொறுத்தவரை அய்னி அக்பரியிலிருந்தும், பாரசீக மொழியில் எழுதப்பட்ட வேறு சில நூல்களில் தற்செயலாகக் காணப்படும் குறிப்புகளிலிருந்தும் நமக்கு ஏராளமான செய்திகள் கிடைக்கின்றன. அக் காலத்து ஐரோப்பிய வணிகர்கள், பயணிகள், ஆசிரியர்கள் இவர்களுடைய எழுத்துக்களிலிருந்தும், இந்தியாவிலிருந்த ஐரோப்பியத் தொழிற்சாலைப் பதிவேடுகளிலிருந்தும், அக் காலத்து இந்திய இலக்கியங்களிலிருந்தும்கூட நமக்குப் பல செய்திகள் கிடைக்கின்றன. முகலாய ஆட்சி நடந்த நூற்றாண்டுகளில் நிலவிய இந்தியாவின் பொருளாதார நிலையின் முக்கியமான கூறுகளைப் பற்றிச் சுருக்கமாக அறியவே நாம் இங்கு முயல்வோம்.

### இ. வளமார்ந்த நகரங்கள்

மாபெரும் முகலாய அரசர்களின் காலத்தில் இந்தியாவின் முக்கிய நகரங்களில் செல்வமும் செழிப்பும் கொழித்திருந்தன.

கி.பி. 1585-ல் ஃபிட்ச் (Fitch) என்பவர் குறிப்பிட்டதாவது: 'ஆக்ராவும், பதேபூரும் இரண்டு மிகப் பெரிய நகரங்களாகும். இரண்டும் இலண்டனைவிடப் பெரியதாயும், ஜனநெருக்கம் மிகுந்த தாயும் உள்ளன. ஆக்ராவுக்கும் பதேபூருக்கும் இடையே பன்னிரண்டு மைல்கள். எனினும், வழிநெடுகிலும் உணவுப் பொருள்கள் முதலிய பல பொருள்கள் நிறைந்த கடைத்தெருவாக இருந்தது. அவ் வழியில் செல்வோர் கடைகள் மலிந்திருப்பதால் ஒரு நகரத்திற்குள் இருப்பது போலவும், மக்கள் நெருங்கியிருப்ப தால் ஒரு கடைத்தெரு அல்லது சந்தைக்குள் இருப்பது போலவும் உணர்ந்தனர்.' டெர்ரி பஞ்சாபைப் பற்றிக் கூறும்போது 'அது ஒரு பரந்த மாகாணம்; மிகச் சிறந்த பயன் விளைக்கும் நகரம்' அதனுடைய தலைமை நகரம் லாகூர். அது மிகப் பெரிதாகக் கட்டப்பட்டது; பொருள் வளத்திலும், மக்கள் தொகையிலும் மிக்கது; இந்தியாவிலேயே வாணிகத்தின் முதன்மையான நகரங் களுள்ஒன்றாக இருந்தது' என்று கூறுகிறார். 1581-ல் மான் செர்ரேட் என்பவர், லாகூர் 'ஐரோப்பா அல்லது ஆசியாவில் எந்த நகரத்திற்கும் இரண்டாவது நகரமன்று' என்று கூறியுள்ளார். காந் தேஷிலிருந்த புர்ஹான்பூர் 'மிகுபெரு நகரமாயும், வளமார்ந்த நகரமாயும், மக்கள் தொகை மிக்கதாயும் இருந்தது'. அபுல் பாஸல் குஜராத்திலிருந்த அகமதாபாத்தைப் பற்றிக் கூறும்போது, அது 'செல்வச் செழிப்புமிக்க சிறந்த ஒரு நகரம்' என்றும், 'தட்ப வெப்ப நிலையின் இனிமையிலும், அகில உலகத்தின் சிறந்த பொருள்கள் எல்லாம் கிடைக்கப்பெறுவதிலும் பெரும்பாலும் ஈடு இணை இல்லாததாய் இருந்தது' என்றும் குறிப்பிட்டுள்ளார். கிழக்கு இந்தியாவின் வாரணாசி, பாட்னா, ராஜ்மஹல், பர்த்வான், ஹூக்ளி, டாக்கா, சிட்டகாங் போன்ற நகரங்களில் செல்வச் செழிப்பு மிகுந்திருந்தது.

## ஈ. செய்திப் போக்குவரத்து

பரந்த வாணிகப் போக்குவரத்துக்காகப் பாதைகள் வழி யாகவும் ஆறுகள் வழியாகவும் செய்திப் போக்குவரத்துகள் நடக்காமல் இல்லை. எனினும், விஞ்ஞான சாதனங்களால் இக் காலத்தில் பெருகியிருக்கும் போக்குவரத்தைப்போல அவை இல்லை. சில பெருஞ்சாலைகளைத் தவிர மற்றப் பாதைகள் எல்லாம் பொதுவாகக் கப்பியிடப்படாதவையாயிருந்தன. ஆனால், 'உள் நாட்டுப் பயணத்தின் முக்கிய வழிகள் தெளிவாக வரையறுக்கப் பட்டிருந்தன. சில சமயங்களில் வரிசையாக வைக்கப்பட்டிருந்த மரங்களாலும், இன்னும் பொதுவாகச் சராய்கள் (Sarais) எனப் படும் நெடுஞ் சுவர்களாலும் பாதைகள் சூழப்பட்டிருந்தன. அவற் றுள் பயணிகளும், வணிகர்களும் இரவில் ஓரளவு பாதுகாப்புடன்

செல்லமுடியும்'. சில ஆறுகளில்ஆண்டு முழுவதும் படகுகள் முதலிய வற்றை ஓட்டிச் செல்ல முடியும். வேறு சிலவற்றில் ஆண்டின் ஒரு பகுதிக் காலத்தில்தான் முடியும். அந்த ஆறுகள் பாரமான பொருள்களை எளிதில் ஏற்றிச் செல்லச் சிறந்த சாதனங்களாய் இருந்தன. உண்மையில் செய்திப் போக்குவரத்துகளின் பாது காப்பு, நாட்டின் ஆட்சிமுறையின் திறமையைப் பெரிதும் பொறுத்தே இருந்தது. ஆனால், பதினெட்டாம் நூற்றாண்டில்கூட டவ் (Dow), ரென்னல், ஸ்டாவொரினஸ் போன்றவர்களால் ஆற்றின்மூலம், செய்திப்போக்குவரத்துச் செய்வதின் வசதிகள் பேசப்பட்டிருக்கின்றன. அந்த ஆசிரியர்கள் மாகாணத்தைப்பற்றிய அறிவை நன்கு பெற்றிருந்தனர். இந்திய வரலாற்றின் முற்பகுதி யிலிருந்தே அரசாங்கம் பாதைபோடும் செயலை மேற்கொண்டு வந்த மரபு இருந்துவந்தது. மாபெரும் சூர்அரசர்களும் மரபைப் பின்பற்றினார்கள். அவர்கள் வழியில் முகலாயர்களும் பின் சென்றனர். அக்பர் ஆட்சியின் தொடக்கத்தில் முனின்கான் என்பவர் ஜான்பூரில் ஒரு பாலத்தைக் கட்டினார், ஷாஜஹான் புர்ஹான்பூரில் நீர்த்தொழில் சம்பந்தமான ஒரு சாலையைக் கட்டினார். ஷாஜஹான் கீழ் இருந்த அலி மர்தான்கான் 1639-ல் ரவிக் கால்வாயைக் கட்டினார் அல்லது சீர்திருத்தம் செய்தார். அதனால், மக்கள் பெருமளவு நன்மையை அடைந்தனர்.

### உ. உழவு

அந்தக்காலத்து உழவுப் பயிர்கள் இக் காலத்துப் பயிர்கள் போன்றவையே. இக் காலத்தில் போல அப்போது குறிப்பிட்ட நிலங்களில் குறிப்பிட்ட பயிர்களை விளைவிக்கும்முறை இல்லை என்று கூறுவது தவறு. ஏனெனில், சர்க்கரை (Sugar) வங்காளத்திலும் பீஹாரிலும் பல இடங்களில் பயிரிடப்பட்டுப் பின்பு இந்தியாவின் மற்றப் பாகங்களுக்கும் கொண்டுசெல்லப்பட்டது. அவுரி வட இந்தியாவின் சில பகுதிகளில் பயிரிடப்பட்டது. யமுனைச் சமவெளி யிலும், மத்திய இந்தியாவிலும் அவுரி பெருமளவில் விளைவிக்கப் பட்டும் உற்பத்தி செய்யப்பட்டும் வந்தது என்று பெல்சாயெர்ட் தெளிவாகக் கூறுகிறார். பருத்தி, பட்டு முதலியவற்றிலிருந்து நாடெங்கிலும் பலவிடங்களில் துணி நெய்யப்பட்டுவந்தமையின், அதன் தேவைகளுக்காக இந்தியாவின் சில பாகங்களில் பருத்தியும் பட்டும் பரந்த அளவில் விளைவிக்கப்பட்டன. 1604-லிலோ அல்லது 1605ஆம் ஆண்டின் தொடக்கத்திலோ புகுத்தப்பட்ட புகையிலை அதற்குப் பின் மக்களால் பயிரிடப்பட்டுவரத் தொடங்கியது. இக் காலத்தில் இருப்பதுபோலவே அக் காலத்திலும் உழவுக் கருவிகள் இருந்தன. ஆனால், அக் காலத்தில் செயற்கை நீர்பாய்ச்சும் முறை

இல்லை. உழவு செய்வோர் உள்நாட்டு அதிகாரிகளால் அடிக்கடி நசுக்கப்பட்டும் துன்புறுத்தப்பட்டும் வந்தனர்.

ஊ. பஞ்சங்கள்

பருவமழை பொய்த்துவிடுவதால் அடிக்கடி ஏற்படும் பஞ்சங்களால் குடியானவர்கள் பட்ட துன்பங்கள் கொஞ்சநஞ்சமல்ல. முக்கியமாக முகலாய அரசாங்கம் பஞ்ச நிவாரணத்திற்காக எவ்விதமான ஒழுங்கான, நீண்டகால முயற்சிகள் ஒன்றும் செய்யாமல் இருந்தமையின் அவர்கள் துன்பங்கள் அளவிடப்படாதனவாய் இருந்தன. முகலாய அரசர்கள், அவர்கள் செலுத்தும் வரியிலும் போதிய குறைப்புச் செய்யாமல் இருந்தனர். அவர்கள் செய்த சிறு நிவாரண உதவி எண்ணிலாத மக்களின் கொடுந் துன்பங்களைக் குறைக்க முடியாதனவாய் இருந்தன. அதனால் அவர்கள் பட்டினியால் உயிர் துறந்தனர். பஞ்சத்தை ஒட்டி ஏற்பட்ட கொள்ளை நோயாலும் உயிர் நீத்தனர். 1556—1557-ல் ஆக்ராவுக்கும், பியானாவுக்கும் அருகே ஒரு பயங்கரமான பஞ்சம் ஏற்பட்டது. பதௌனி 'தம் கண்களாலேயே ஜனங்கள் மற்ற மக்களையே தின்னத் தொடங்கியதைக் கண்டார்'. 'எலும்புந் தோலுமாய் நைந்திருந்த பட்டினியால் வாடியவர்களைக் காணச் சகிக்க முடியாததாய் இருந்தது......நாடு முழுவதும் பாலைவனமாகக் காட்சியளித்தது. நிலத்தை உழுவதற்கு எந்த உழவரும் இல்லை' என்றும் கூறியுள்ளார். இந்தியாவிலேயே செல்வச் செழிப்புமிக்க மாகாணங்களுள் ஒன்றான குஜராத்தும் 1573—1574-ல் பஞ்சத்துக்கும் கொள்ளை நோய்க்கும் உட்பட்டது. அதனால் 'செல்வர்களாயினும், வறியவர்களாயினும் அங்கு வாழ்ந்தோர் எல்லாரும் அந் நாட்டிலிருந்து வெளியேறி வெளி நாடுகளுக்குச் சிதறிச் சென்றனர்'. அந் நாடு 1584 முதல் 1588 வரை மீண்டும் பஞ்சத்தின் கொடுமைகளுக்கு மிகப் பெரிதும் ஆளாகியது. அப்போது 'மனிதர்கள் மனிதர்களையே தின்றனர். வீதிகளிலும், பாதைகளிலும் பிணங்கள் கிடந்து வழியை மறித்தன. அவற்றை நீக்குவதற்கு எந்த உதவியும் கிடைக்க வில்லை'. இயல்பாகவே இரக்க உள்ளம் படைத்த புகாரா நாட்டு ஷேய்க் பரீத்தை நிவாரண வேலைகளின் பொறுப்பாளராக நியமித்து அக்பர் மக்களின் துன்பங்களை நீக்க முயற்சிகள் செய்தார். ஆனால், பேராபத்துகள் மலிந்திருந்தமையின் அம் முயற்சிகளால் மக்களின் பெருந்துயரங்களும், கொடுமைத் துன்பங்களும் நீக்க முடியாதவை ஆய்விட்டன. 1630—1632-ல் அதே போன்ற மிகு பயங்கரமான பஞ்சம் தக்கணத்திலும், குஜராத்திலும் தோன்றியது. அந்தப் பெருங்கேட்டின் பயங்கரங்கள் மிகப் பெரியதாய் இருந்தன. ஷாஜஹான் ஆட்சியில் அரசாங்க வரலாற்று

ஆசிரியராயிருந்த அப்துல் அமீது லாஹூரி, 'மனிதர்கள் ஒருவரை ஒருவர் கொன்றுவிழுங்கத் தொடங்கினர். மகனுடைய அன்பைக் காட்டிலும் அவனுடைய உடலிறைச்சியே பெரிதும் விரும்பப் பட்டது' என்று கூறுகிறார். அப்பேராபத்தைக் கண்ணால் கண்ட ஒரு டச்சு வாணிகர், 'இன்னும் இறந்து போகாமல் வீதியில் கிடந் தவர்களை மற்றவர்கள் துண்டு துண்டாக வெட்டினார்கள். மனிதர்கள் உயிரோடிருக்கும் மற்ற மனிதர்களைக் கொன்று தின்றார்கள். அதனால் வீதிகளில் செல்வதும் அதனினும் மிகுதி யாகப் பாதைகளில் பிரயாணம் செய்வதும் உயிருக்கு ஆபத்தாய் இருந்தன. எந்த நேரத்திலும் பிறரால் கொன்று தின்னப்படும் அபாயம் இருந்தது' என்று கூறுகிறார். ஷாஜகான் 'சில கூப்புச் சமயலறைகளை'த் திறந்தார். $1\frac{1}{2}$ லட்சம் ரூபாய் தானமாக அளித் தார். நில வருவாய் மதிப்பீட்டில் பதினொன்றில் ஒரு பாகத்தை நிவாரணத்திற்காக அளித்தார். ஆனால், இவை பட்டினி கிடந்து சாகும் மக்களின் துன்பத்தைக் குறைக்கப் போதியனவாயில்லை. அதற்குப் பின் ஔரங்கசீப்பின் ஆட்சி முடியும்வரை அடுத்தடுத்துப் பலஆண்டுகளில் பஞ்சங்கள் ஏற்பட்டுக்கொண்டிருந்தன. ஆனால், 1630—1632ஆம் ஆண்டுப் பஞ்சத்தைப்போன்ற மிகக் கொடிய பஞ்சம் என்றும் உண்டாகியதில்லை.

## எ. பெருந்தொழிலும் கைத்தொழிலும்

அக் காலத்து இந்தியப் பொருளாதார வரலாற்றின் மிகு முக்கியமான கூறுகளுள் ஒன்று மக்களின் பலதிறப்பட்ட பரந்த தொழில் முயற்சியே ஆகும். அது உள்நாட்டுப் பிரபுக்கள், வணிகர்கள் இவர்களின் தேவைகளுக்கு ஏற்றவற்றை வழங்கிய துடன் ஐரோப்பாவிலிருந்தும், ஆசியாவின் மற்றப் பாகங்களி லிருந்தும் வந்த வணிகர்களின் தேவைகளையும் பூர்த்தி செய்தது. அதுவரை அந்தக் காலத்தில் இந்தியாவிலேயே மிகு முக்கியமான தொழிலாக இருந்தது பருத்தித்துணி உற்பத்தியேயாகும். முதன் மையான பருத்தி உற்பத்தியிடங்கள் நாடெங்கிலும் பரவலாக இருந்தன. எடுத்துக்காட்டாகப் பாட்னா, குஜராத், காந்தேஷி லிருந்த புர்ஹான்பூர், ஜான்பூர், வாரணாசி (ஐக்கிய மாகாணங் களில்) உத்தரப் பிரதேசத்திலும், பீஹாரிலும் பாட்னாவைப் போன்ற வேறு சில இடங்கள், ஒரிஸ்ஸாவிலும், வங்காளத்திலும் பல நகரங்களும் கிராமங்களும் பருத்தி உற்பத்தி இடங்களாக விளங்கின. ஒரிஸ்ஸாவிலிருந்து கிழக்கு வங்காளம் வரையிலு முள்ள பகுதி முழுதும் ஒரு பெரிய பருத்தித் தொழிற்சாலையாகக் காட்சியளித்தது. சிறப்பாக டாக்கா மாவட்டம் அதனுடைய நுண்மையான மஸ்லின் துணிகளுக்குப் பெயர் பெற்றது. இந்தியா விலேயே டாக்காவில்தான் 'பருத்தியிலிருந்து மிகச் சிறந்த மிகு

நுண்மையான துணி' நெய்யப்பட்டது. கிழக்கு வங்காளத்தி லிருந்த சாபாஸ்பூர், சோனர்காவோன் என்ற இடங்களில் 'எல்லாரும் நெசவுத் தொழிற்சாலையால் வாழ்ந்துவந்தனர். அந்த உற்பத்தி மிகச் சிறந்த தன்மையையும் மிக உயர்ந்த புகழை யும் பெற்றுவிட்டது' என்று பெல்சாயெர்ட் குறிப்பிடுகிறார். பெர்னியர் கூறுகிறார் : 'இந்துஸ்தானம் அல்லது மாபெரும் முக லாயப் பேரரசுக்கு மட்டுமன்றி எல்லா அண்டை நாடுகளுக் கும் ஐரோப்பாவுக்கும்கூடப் பொதுவான பருத்தி பட்டு இவற் றின் அரசாங்கக் கிடங்காகக் கருதுமளவுக்கு மிகுந்த அளவான பருத்தியும் பட்டும் வங்காளத்தில் இருந்தன'. சாயத் தொழிலும் வளர்ந்தோங்கிவரும் நிலையில் இருந்தது. காடாப் பருத்தித் துணிகள் சாயமூட்டப்பட்டன. அல்லது 'பல்வேறு வகையான அழகான வண்ணமும், உருவமும் அமைந்த பூக்கள் அல்லது வடிவங்கள் துணியில் அச்சடிக்கப்பட்டன. அவை எந்த நீராலும் அழிக்கப்பட முடியாதவையாய் இருந்தன' என்று டெர்ரி கூறுகிறார். பருத்தி உற்பத்தியோடு வைத்து ஒப்பிடும்போது குறைந்த அளவான பட்டு நெசவும் மக்களின் ஒரு பகுதியினரின் முக்கியமான தொழிலாக இருந்தது. அக்பரின் ஆட்சியில் பேரரசின் ஆதரவைப் பெற்றதால் பட்டு நெசவு கணிசமான அளவு ஊக்கம் பெற்றது என்று அபுல்பாஸல் கூறுகிறார். பட்டு நெசவு லாகூர், ஆக்ரா, பதேபூர் சிக்ரீ, குஜராத் ஆகிய இடங்களில் நடைபெற்றுவந்தாலும் வங்காளம்தான் பட்டு உற்பத்தி, விளைச்சல் இவற்றிலும், இந்திய வணிகர்கள், இந்தியாவின் மற்றப் பாகங்களிலிருந்து வந்த ஐரோப்பிய வணிகர்கள் இவர்களின் தேவைகளைப் பூர்த்தி செய்வதிலும் முன்னிடமாக இருந்தது. டாவெர்னியரின் சான்றுகொண்டு மூர்லாண்டு பின்வருமாறு எழுதுகிறார் : ஏறத்தாழப் பதினேழாம் நூற்றாண்டின் இடைப் பகுதியில் வங்காளத்தில் பட்டின் மொத்த உற்பத்தி 'சுமார் $2\frac{1}{2}$ மில்லியன் பவுண்டுகளாக இருந்தது. அவற்றுள் ஒரு மில்லியன் பவுண்டுகள் அப் பிரதேசத்திற்காக வைத்துக்கொள்ளப்பட்டன. $\frac{1}{2}$ மில்லியன் பவுண்டுகள் கச்சாவாக டச்சுக்காரரால் ஏற்றுமதி செய்யப்பட்டன. $\frac{3}{4}$ மில்லியன் பவுண்டுகள் இந்தியாவில் வழங்கப் பட்டன. அவற்றுள் பெரும்பாலான பகுதி குஜராத்துக்குச் சென்றது. கொஞ்சம் பகுதி மத்திய ஆசியாவிலிருந்து வந்த வணிகர்களால் எடுத்துச் செல்லப்பட்டது'. சால்வை, கம்பளம் போன்ற நெய்யும் தொழில்கள் அக்பரின் ஆதரவினால் செழிப்புற் றோங்கின. சால்வை பெரும்பாலும் மயிரினால் நெய்யப்பட்டது. அத் தொழில் முதலில் காஷ்மீரில் தோன்றியது. லாகூரிலும் சால்வை உற்பத்தி செய்யப்பட்டது. கம்பளம் லாகூரிலும் ஆக்ராவிலும் நெய்யப்பட்டது, கம்பளச் சரக்குகள், முக்கியமாக

முரட்டுச் சமுக்காளங்களும் நெய்யப்பட்டன. இந்தியா தன்னுடைய பழைய முயற்சிமிக்க கடலோடும் தொழிலைக் கைவிட்டிருந்தாலும், கப்பல் கட்டும் தொழில் அந்தச் சமயத்தில் அடியோடு அழிந்துவிடவில்லை. இதற்கு அக் கால இலக்கங்களிலிருந்து பல குறிப்புகள் நமக்குச் சான்ருகக் கிடைக்கின்றன. இந்தியாவில் முக்கியமாக வெடி மருந்துக்காகப் பயன்படுத்தப்படுவதும், டச்சு ஆங்கிலேயே வணிகர்களால் வெளியே ஏற்றுமதி செய்யப்பட்டதுமான வெடியுப்பு பதினேழாம் நூற்ருண்டில் இந்தியாவின் பல பரவலான பாகங்களிலும் உற்பத்தி செய்யப்பட்டது. குறிப்பாக இந்திய தீபகற்பத்திலும், இந்திய கங்கைப் பகுதியில் பீஹார்ப் பிரிவிலும் உற்பத்தி செய்யப்பட்டது. அதிலிருந்து பத்தொன்பதாம் நூற்ருண்டின் முற்பகுதிவரை பீஹார் அந்தப் பொருளின் உற்பத்திக்குச் சிறப்பான பெயர் பெற்றிருந்தது. ஐரோப்பியர்கள் தங்கள் நாடுகளில் நடக்கும் போர்களில் பயன்படுத்துவதற்காக அதை மிகுதியாக வாங்கிவந்தனர்.

இப் பெருந்தொழில்களைத் தவிர முகலாயர் காலத்தில் பல்வேறு கைத்தொழில்களும் இருந்தன என்பதற்குச் சான்றுகள் உள்ளன. 'பல வியப்பான பெட்டிகள், இரும்புப் பெட்டிகள், பேனு உறைகள், கம்பளங்கள் மற்றச் சிறந்த உற்பத்திப்பொருள்கள் எல்லாம் இந்தியாவில் கிடைக்கும்' என்று எட்வர்ட் டெர்ரி குறிப்பிட்டிருந்தார். பெல்சாயெர்ட்கூடச் சிந்துவில் 'அலங்காரம் மிக்க தட்டங்கள், பலகைகள், எழுதும் பொருள்கள் இன்னும் இவை போன்றவை உள்நாட்டில் பெருமளவில் உற்பத்தி செய்யப்பட்டன. அவை அழகாயும், தந்தம், கருங்காலி இவற்றை வைத்துப் பதிக்கப்பட்டனவாயும், கோவா முதலிய கடற்கரை நகரங்களிலிருந்தும் பேரளவில் ஏற்றுமதி செய்யப்படுவனவாயும் இருந்தன' என்று கூறியுள்ளார். உற்பத்திகளுக்கு அரசாங்கம் ஊக்கம் கொடுத்தாலும், உற்பத்திப் பொருள்களை மிகுதியாகப் பயன்படுத்தும் நடுத்தர வகுப்பினரால் நெசவாளிகள் நேரடியாகப் பொருள்வருவாய் பெற்றனர். மேலும், பெர்னியரும், பெல்சாயெர்ட்டும் கூறுவதுபோலப் பிரபுக்களும் அதிகாரிகளும் அவர்களைக் கடுமையாக நடத்தித் துன்புறுத்தியதுடன், பொருள்களைக் குறைந்த விலைக்கு விற்கும்படி வற்புறுத்தினர். அவர்களிடமிருந்து தடைசெய்யப்பட்ட அப் பொருள்களை வலிந்து வாங்கிக் கொண்டனர். இதனுல், தங்கள் தொழில்களிலிருந்து கிடைக்கும் பொருளாதார நன்மையும் இலாபமும் நெசவாளர்களுக்கும், கைத்தொழிலாளர்களுக்கும் கிட்டாமற் போயின. எனினும் பிரபுக்கள் மிக உயர்ந்த உற்பத்திப் பொருளின்மீது சுவையார்வம் கொண்டிருந்தமையால் அவற்றின் தரம் குறையாத மரபு காக்கப்பட்டு வந்திருப்பதைக் காணுகின்றோம்,

ஏ. விலைகள்

பொருள்களின் விலைகள், சிறப்பாக எல்லாராலும் பயன் படுத்தப்படும் பொதுப்பொருள்களான அரிசி, காய்கறிகள், வாசனைப் பொருள்கள், இறைச்சி, கால்நடை, பால் இவற்றின் விலைகள் மிகு குறைவாய்இருந்தன என்று அபுல்பாஸலிடமிருந்தும் இன்னும் சில ஆசிரியர்களிடமிருந்தும் அறிகிறோம். 'நாடு முழு வதிலும் பொருள்கள் பெருமளவில் குவிந்திருந்தன...ஒவ்வொரு வரும் பற்றுக்குறை இன்றி உணவு உண்ணலாம்' என்று எட்வர்ட் டெர்ரி கூறியுள்ளார். 'அக்பர், ஜஹாங்கீர் காலத்தில் கூலிக்கு அமர்த்தப்பட்ட நிலமில்லாத வேலையாள் ஒருவன் இப்போதைக் காட்டிலும் அப்போது நிறையச் சாப்பிடுவதற்கேற்ற வசதி இருந்தது' என்று ஸ்மித் எழுதுகிறார். 'பொதுவாகக் கூறுமிடத்து மக்கள் இப்போது போலவே அப்போதும் பொருளாதார நிலையில் ஒரேநிலையில் இருந்தனர்' என்று மூர்லண்ட் கருதுகிறார். முகலாயர் காலத்துப் பொதுமக்களுக்குச் செல்வ வளமிக்க பொற்காலம் என்ற ஒன்று என்றும் ஏற்படவில்லை. ஏனெனில், பொருள்களின் விலைகள் மலிவாக இருந்தாலும், அவர்களுடைய வருமானம் விகிதாசாரத்தில் மிகு குறைவாகவே இருந்தது. எனினும் அவர்களுடைய தேவைகள் குறைவாகவும், வாழ்க்கைச் சிக்கல்கள் இக் காலத்திலிருப்பதுபோலக் குழப்பம் நிறைந்தவையாக இல்லாமலும் இருந்ததால்,அவர்கள் துன்பத்தில் உழன்று அதிருப் தியால் மனம் புழுங்கியிருக்கமாட்டார்கள் என்பர்.

ஐ. நாணயங்களும் செலாவணியும்

ஷெர்ஷாவைப்போலவே அக்பரும் அரசாங்கச் செலாவணியை ஒழுங்குப்படுத்த முயன்றார். 1577ஆம் ஆண்டின் இறுதியில் அவர் ஷீராஜ் நகரைச் சேர்ந்த காஜா அப்துஸ் சமத் என்பவரை டில்லியி லிருந்த பேரரசுக்குரிய நாணயச்சாலையின் தலைவராக நியமித்தார். வங்காளம், லாகூர், கான்பூர், அஹமதாபாத், பாட்னு ஆகிய இடங்களிலிருந்த முக்கியமான மாகாண நாணயச் சாலைகள் ஒவ்வொன்றிற்கும் ஒவ்வொரு முக்கியமான அதிகாரி நியமிக்கப் பட்டார். ஷாஜஹான் ஆட்சிக் காலத்தில் மிக முக்கியமான நாணயச் சாலைகளுள் ஒன்று சூரத்தில் இருந்தது. அக்பர் தங்கம், வெள்ளி, செம்பு நாணயங்களை வெளியிட்டார். இவற்றுள் தங்க நாணயங்கள் இருபத்தாறு வகையான எடை வேறுபாடுகளும் மதிப்பு வேறுபாடுகளும் உடையவையாய் இருந்தன. அக்பர் காலத்தில் 175 தானிய எடையுள்ள ஒரு வெள்ளி ரூபாய் மதிப்பில் 2 ஷில்லிங்கு 3 பென்சுக்குச் சமமாய் இருந்தது. அக்பர் ஜலாலி என்று வழங்கப்பட்ட சதுரவெள்ளி ரூபாயையும் வெளியிட்டார்;

ஷெர்ஷாவின் நாணயச்செலாவணியிலிருந்தது போலவே, அக்பர் காலத்தில் முக்கியமான செம்பு நாணயம் தாம் (Dam) என்றும், பைசா அல்லது ஃபுளூஸ் (Fulus) என்றும் வழங்கப்பட்டது. அதன் எடை 323.5 தானியங்கள். அது கணக்கு முறைக்காக ஜீடல்ஸ் என்று வழங்கப்பட்ட இருபத்தைந்து பகுதிகளாகப் பிரிக்கப்பட்டிருந்தது. அது ஏழைகளுக்கும் செல்வர்களுக்கும் சௌகரியமான நாணயமாய் இருந்தது. அக்பர் காலத்திலும் அவருக்குப் பின்னுல் ஆட்சிக்கு வந்தவர்களின் காலத்திலும் பேரரசின் வணிகப் பொருள் செயல்கள் வட்டமான தங்க மொஹுராக்கள், ரூபாய்கள், தாம்கள் இவற்றின்மூலம் செய்யப் பட்டுவந்தன. முகலாய அரசாங்கத்தின் நாணயங்கள், சிறப்பாக அக்பரின் நாணயங்கள், 'உலோகத்தின் தூய்மையைப் பொறுத்த வரை மிகச் சிறந்தனவாயும், எடை நிரம்பியனவாயும், கலைத்திறம் நிறைந்தனவாயும்' இருந்தன. ரூபாயின் மதிப்பு 1616 வரை நாற்பது தாம்களாயும், 1627-லிருந்து ஏறக்குறைய முப்பது தாம்களாயும் இருந்தது. ஆனுல், நாணயச் செலாவணியில் அக்பருக்குப் பிறகு பெரிய மாறுதல் ஒன்றும் ஏற்படவில்லை. ஏனினும், 1659-ல் ஆங்கிலேய வணிகர்கள் இங்கிலாந்தில் இருந்த தங்கள் மேலதிகாரி களுக்குப் 'புதிய அரசரான ஒரான்ஜீப் (ஔரங்கசீப்) அவருடைய நாணயத்தின் (வெள்ளியின்) மதிப்பு முன்னைக் காட்டிலும் $\frac{5}{8}$ சத வீதம் உயர்த்திவிட்டார். அதனுல், அது சூரத் வணிகர்களுக்கும், கவர்னருக்கும் பெரும் தொல்லையையும், மன வேறுபாட்டையும் உண்டாக்கிவிட்டது' என்று தெரிவித்தனர்.

## ๑. அயல் நாட்டு வாணிகம்

முகலாயர் காலத்தின் பெரும்பகுதியில் இந்தியா, ஆசியா, ஐரோப்பாவின் வெவ்வேறு நாடுகளுடன் தீவிரமான, கணிசமான அயல்நாட்டு வாணிகத்தைச் செய்துவந்தது. நாட்டின் முக்கிய மான இறக்குமதிகள் 'தங்கத் தகடுகள், கச்சாப்பட்டு, குதிரைகள், உலோகங்கள், பவழம், ஆம்பர், விலையுயர்ந்த நவரத்தினங்கள், வெல்வெட்டுகள், வண்ண வடிவங்கள் வரையப்பட்ட பட்டுத் துணிகள், அகலத்துணிகள், வாசனைப்பொருள்கள், மருந்துகள், சீனுவின் பீங்கான் பாத்திரங்கள், ஆப்பிரிக்க அடிமைகள் முதலிய வைகளாகும். இந்தியாவின் முக்கியமான ஏற்றுமதிகள் பல்வேறு நெசவுத் துணிகள், மிளகு, அவுரி, அபினி முதலிய பிற மருந்துகள் பல்வகைக் கலப்புச் சரக்குகள் முதலியவனவாகும். வடமேற்கே ஏற்றுமதி வாணிகத்திற்கு இரண்டு முக்கியமான தரைமார்க்கங்கள் இருந்தன. அவை லாகூரிலிருந்து காபூலுக்கும், மூல்தானி லிருந்து காந்தகாருக்கும் செல்லும் வழிகளாகும். ஆனுல், இந்த வழிகளின் போக்குவரத்துக் களவுக்குட்பட்டதாயும்,

பாதுகாப்பில்லாததாயும் இருந்தது. கடலும் ஆறுகளும் வணிக காரணங்களுக்காக மிகு நன்மை பயக்கும் வழிகளாக இருந்தன. இந்தியாவின் முக்கிய துறைமுகங்கள் பின்வருமாறு: சிந்துவில் லாகூரி பந்தர்; சூரத், மரோச், காம்பே போன்ற குஜராத்துத்துறை முகக்குழு; பாஸ்ஸெயின்; செளல்; இரத்தினகிரியிலுள்ள டாபுல் (இக்காலத்து டாபோல்); கோவா, பாட்கல்; மலபார்த் துறை முகங்கள்—இவற்றுள் முக்கியமானவை கள்ளிக்கோட்டையும் கொச்சியும். நாகப்பட்டினம், மசூலிப்பட்டினம், கிழக்குக்கரையில் வேறு சில சிறு துறைமுகங்கள். சாட்காவோன், சிரீபூர், வங்காளத்திலுள்ள சிட்டகாங், சோனுர்காவோன் என்பவையாகும். அரசாங்கத்தால் வரையறுக்கப்பட்ட சுங்கவரிகள் மிக உயர்ந்தவை அல்ல. எடுத்துக்காட்டாக, சூரத்தில் இவை எல்லா ஏற்றுமதிப் பொருள்கள்மீதும் 3½ சதவீதமாக இருந்தன. தங்கம் அல்லது வெள்ளி நாணயத்திற்கு 2 சதவீதமாக இருந்தன. நாட்டிலிருந்து எந்த வணிகரும் 'எந்த அளவு வெள்ளியும் எடுத்துச் செல்ல' அனுமதிக்கப்படவில்லை. அக்பர் காலத்திலிருந்து இந்திய வாணிகத்தின் முக்கியமான பண்பு ஆங்கிலேயர், டச்சுக்காரர்களின் வணிகச் செயற்பாடேயாகும். அவர்கள் படிப்படியே நாட்டில் பல்வேறு இடங்களில் தொழிற்சாலைகளை நிறுவினர். விலை உயர்ந்த ஐரோப்பியப் பொருள்களின் தேவை செல்வமிக்கவர்களுக்கே இருந்தமையால், ஐரோப்பிய வணிகர்கள் இந்தியச் சரக்குகளை விலைக்கு வாங்கத் தங்கள் நாட்டிலிருந்து தங்கத் தகடுகளை இறக்குமதி செய்யவேண்டியிருந்தது. இங்கிலாந்தில் இந்த வழக்கத்திற்குக் கடும்எதிர்ப்பு இருந்த போதிலும் அவ் வணிகர்கள் இதைக் கைவிட முடியவில்லை. முகலாயர் காலத்து இந்தியாவில் ஐரோப்பிய வணிகர்கள் 'தங்கள் விருப்பப்படி நடக்க முடியவில்லை' என்ற மூர்லண்டின் கருத்து அக் காலத்துத் தொழிற்சாலைப் பதிவேடுகளின் எண்ணில்லாத குறிப்புகளினுல் ஆதரிக்கப்படுகிறது. 'பொதுவாகத் தந்திரமும் நுண்ணறிவும்' மிக்க இந்திய வணிகர்கள், தரகர்கள் இவர்களோடும், வணிகப் பொருள்களின் ஏக போக உரிமை பெற்றவர்களோடும், சிறிது தொல்லை அனுபவிக்க நேரிட்ட ஐரோப்பிய வணிகர்களுக்கு முக்கிய தடையாயிருந்தது உள் நாட்டு கவர்னர்கள், மற்ற உயர்ந்த அதிகாரிகள் இவர்களின் இடையீடேயாகும். எடுத்துக் காட்டாக, மீர்ஜும்லா காசீம்பஜாரிலிருந்து ஆங்கிலத்தொழிற்சாலையின் கதவுகளை மூடச் செய்துவிட்டு, ஆங்கிலேயர்கள் தம்மை வந்து முறையே பார்க்கும் வரை யாரும் அவர்களுடன் வியாபாரத் தொடர்பு கொள்ளக் கூடாது என்று விதித்துவிட்டதாக 1659-ல் எழுதப்பட்ட ஆங்கிலக் கடிதத்தின் சான்றினை நாம் எடுத்துக்கொள்ளலாம். ஐரோப்பிய வணிகர்கள் பல வகையிலும் இந்த அதிகாரிகளை

மகிழ்வித்துத் திருப்திப்படுத்த முயற்சிகள் எடுத்துக்கொண்டனர். சில சமயங்களில் அவர்கள் தங்கள் நோக்கங்கள் நிறைவேறப் பெற்றனர்; வேறு சில சமயங்களில் ஏமாற்றமுற்றனர்.

## ஓ. ஔரங்கசீப்பின் ஆட்சிக்குப் பிறகு பொருளாதாரச் சீர்குலைவு

ஔரங்கசீப்பின் ஆட்சியிறுதிக் காலத்தில், அமைதியும் அரசியல் ஒழுங்கும் மறைந்ததன் இயல்பான விளைவாக இந்தியாவின் பொருளாதார வளம் சீர்குலையத் தொடங்கியது. ஆட்சியின் இடைவிடாத போர்களும், ஆட்சியின் திவாலா நிலையும், கஜானு காலியான நிலையும், அமைதியும் ஒழுங்கும் நிலைநிறுத்துவதை முடியாத ஒன்றுகச் செய்துவிட்டன. இதன் விளைவாக உழவு, தொழில்கள், வணிகம் முதலியவை பெரிதும் பாதிக்கப்பட்டன. சிறிது காலம் வியாபாரம் [அப்படியே தடைப்பட்டு நின்றதைக் காணுகின்றேம். 1690—1698ஆம் ஆண்டுகளில் ஆங்கிலேயர்கள் கப்பலில் அனுப்புவதற்குப் போதுமான துணிகளைப் பெற முடியவில்லை. ஔரங்கசீப்பின் வரலாற்றுசிரியர் கூறுகிறுர்; 'இவ்வாறு இந்தியாவில் ஒரு பெரிய பொருளாதார வறுமை நிலை ஏற்பட்டது. 'தேசிய இருப்புக் குறைந்ததுடன், இயந்திரம் இயக்கும் திறமையும் நாகரிகத் தரமும் விரைவாகக் குறைந்து வந்தன. நாட்டின் பரந்த நிலப்பகுதிகளில் எல்லாம் கலையும் பண்பாடும் மறைந்துவந்தன'. மற்ற மாகாணங்களைக் காட்டிலும் போரில் ஈடுபடாத சுபாவாகிய வங்காளம் தன் பொருள் வருவாய்களை எல்லாம் ஔரங்கசீப்பின் தக்கணப் போர்களுக்கு அனுப்பி வந்ததால், பெரிய பொருளாதார நெருக்கடிக்கு உள்ளாகியது. விரைவாகச் சீர்குலைந்து வந்த முகலாயப் பேரரசினுல் மிக நன்றுகச் சுரண்டப்பட்டுவிட்டது.

1757ஆம் ஆண்டுக்கு நெடுங்காலத்திற்கு முன்பே நாட்டின் பொருளாதாரச் சீர்குலைவு தொடங்கிவிட்டது. ஆனுல், பல காரணங்கள் அச் சீர்குலைவை விரைவுபடுத்தின. இந்தியப் பொருளாதார வரலாற்றின் 'மிக இருண்ட காலம் என்று உண்மையில் கூறுவதற்குரிய பதினெட்டாம் நூற்றுண்டில், குறிப்பாக வங்காளத்தில் சீர்குலைவுக்குப் பல காரணங்கள் இருந்தன. மத்திய அரசாங்கத்தின் பலவீனமும், அரசவையில் தோன்றிய கிளர்ச்சிகளும் சதிகளுமாகும். 1738—1739-ல் உண்டான பயங்கரமான பாரசீக இடையீடும், மராட்டியர்களும் இமயமலை மலைமக்களும், மக்குகளும். போர்ச்சுகீசியக் கடற் கொள்ளையர்களும் செய்த சீரழிவுகளும் தஸ்தக்கைத் தவருகப்

பயன்படுத்தலும் ஊழியர்களால் மற்ற வணிக உரிமைகள் தவறாகப் பயன்படுத்தப்பட்டமையும், ஆங்கிலக் கம்பெனியின் குமாஸ்தாக்களும், முகவர்களும் அவர்களுடைய தனிப்பட்ட வணிகத்தில் வணிகச் சிறப்புரிமைகளைத் தவறாகப் பயன்படுத்தியும், உப்பு, வெற்றிலை, புகையிலை போன்ற வாழ்க்கைக்கு இன்றியமையாத தேவையான சில பொருள்களை ஆங்கிலக் கம்பெனி தனி உரிமையாகப் பெற்றிருந்தமையும், கம்பெனியின் முதலீட்டிற்காகப் பெருந்தொகை இலவசமாகக் கிடைக்க வேண்டுமென்று வணிகர்களும், நெசவாளர்களும் செய்த ஒடுக்கமும், 1757-லிருந்து நாட்டின் பெரும்செல்வம் நாட்டைவிட்டு இறைத்துச் செல்லப்பட்டமையுமாகிய இவையெல்லாம் சேர்ந்து நாட்டின் பொருளாதார அழிவை ஏற்படுத்திவிட்டன. இவற்றுடன், கிழக்கிந்தியக் கம்பெனி நவாப்பின் அரசாங்கத்தைப் படிப்படியாக அமுக்கியும் வந்தது. அதன் விளைவாகப் படைகளைக் கலைக்கவும், அரசவைகளையும், உள்ளூர் அரசாங்கச் செயலகங்களையும் கலைக்கவும் நேர்ந்தது. அதனால், பலர் வேலையிழந்து கொள்ளையடித்தலையே தொழிலாகக் கொண்டவர்கள், குற்றம் செய்யும் மலை நாட்டு மக்கள் இவர்களுடன் சேர்ந்துகொண்டு பிளாசிக் காலத்துக்குப் பின்பு நாட்டில் பொதுவான சட்டமின்மையையும், பாதுகாப்பின்மையையும் விளைவித்தனர்.

1765 மே மாதத்தில் பொறுக்குக் குழு (Select Committee) வங்காளத்தை இவ்வாறு குறை கூறியது: ‘பிளவுபட்ட மாகாணம் தலைக்கனம் ஏறி மட்டுமீறி நடந்துகொள்ளும் மாகாணம் நாடி நரம்புகள் இல்லாத ஓர் அரசாங்கம், பணம் இல்லாத கஜானா, கீழ்ப்படிதல், கட்டுப்பாடு, பொதுநல உணர்ச்சி ஆகியவையில்லாத ஊழியம்...பயன் மிக்க பெருந்தொழில், உரிமை கொடுக்கப்பட்ட வாணிகம் இவற்றின் பொதுவான தேக்கநிலை, அவமானப்படுத்தப்பட்ட இளவரசர், ஆதரவற்ற மக்கள், இவர்களிடமிருந்து பலாத்காரமாகப் பிடுங்கிக்கொண்டு தனிப்பட்ட ஆள்கள் பெரும் செல்வங்களைத் திரட்டிக்கொண்டிருந்தமையால் உண்டான அதிருப்தி, வறுமை ஒடுக்கம் முதலியவற்றால் வாடி வருந்திக்கொண்டிருந்தனர்’.[1] கிளைவும் அவருக்குப் பின் வந்த திறமையற்ற வெரெல்ஸ்ட் (Verelst), கார்ட்டியர் என்ற இருவரும் நடத்திய இரட்டையாட்சி முன்பு இருந்த குழப்பத்தை இன்னும் அதிகக் குழப்பமுள்ளதாக்கியது;

[1] வங்காளத்திலிருந்து பொறுக்குக் குழு கோர்ட் ஆஃப் டைரக்டர்களுக்கு அனுப்பிய கடிதம் 1767பிப்ரவரி 19ஆம் தேதியிடப்பட்டது. பார்க்க: வெரெல்ஸ்ட், வ்யூ ஆஃப் பெங்கால் (View of Bengal) பிற்சேர்க்கை, பக்கம் 471.

1770-ல் தோன்றிய பஞ்சம் மக்களின் துன்பங்களாகிய எண்ணம் பொங்கி வழியும்படி செய்துவிட்டது. 1772-க்குப் பிறகு கம்பெனியின் அரசாங்கம் 'திவானாக நிற்பதாகத்' தீர்மானித்து விட்ட பின், இத் தீங்குகளில் சிலவற்றை நீக்க வாரன் ஹேஸ்டிங்ஸும் கார்ன்வாலிசும் முயன்றனர். ஆனால், புதிய ஒழுங்கமைப்பு ஏற்படுவதற்கு மேலும் பல ஆண்டுகள் ஆயின.

# 8. கல்வியும், இலக்கியமும், கலையும்

## 1. கல்வியும் இலக்கியமும்

முகலாய இந்தியாவில் தற்காலக் கல்வி முறையைப் போல அரசாங்கத்தால் நிறுவப்பட்டுக் கண்காணிக்கப்பட்ட கல்வி நிலையம் ஒன்றும் இல்லை. ஆனால், தொடக்கநிலைப் பள்ளி, உயர்நிலைப் பள்ளி போன்ற பள்ளிகள் சில அக் காலத்தில் இருந்தன. அரசர்களும் அவர்களால் கொடை அளிக்கப்பட்டோரும் மசூதிகள், மடங்கள் தனிப்பட்ட முனிவர்கள், அறிஞர்கள் இவர்களுக்கு நிலக் கொடைகள் அல்லது பணம் கொடுப்பதன்மூலம் அவ் வகைக் கல்விக்கு ஊக்கமளித்தனர். இவ்வாறு பெரிதும் ஒவ்வொரு மசூதியும் ஒரு மக்தாப்பைப் (Maktab) பெற்றிருந்தது. அங்கே அருகிலுள்ள வட்டாரத்துச் சிறுவர்களும் சிறுமிகளும் தொடக்கக் கல்வியைப் பெற்றனர். நகரங்களிலும், கிராமப்புறங்களிலும் இருக்கும் மாணவர்களின் நன்மைக்காக இந்து சமஸ்கிருத, இந்திய மொழிப் பள்ளிகள் தோன்றிச் செயல்படத் தொடங்கின.

இந்தியாவின் முகலாய அரசர்கள் கல்வியை ஆதரித்தனர். பாபர் காலத்தில் பொதுப்பணித் துறையின் (Shurat-i-Am) கடமைகளுள் ஒன்று பள்ளிகளையும் கல்லூரிகளையும் கட்டுவதாகும் என்று பாபரின் மந்திரியான சய்யிது மக்பார் ஆலியால் எழுதப்பட்ட தாவாரீக் என்ற நூலின் துணைகொண்டு சொல்லப்படுகிறது. ஹுமாயூன் சோம்பல் மிக்கவராயும் அபினிப் பிரியராயும் இருந்தாலும் படிப்பில் பெரு விருப்பம் உடையவராய் இருந்தார். நிலவியலும், வானவியலும் அவருடைய விருப்பப் பாடங்களாய் இருந்தன. அவர் புத்தகங்கள்மீது கொண்டிருந்த பற்று மிகப் பெரிது; அவர் எப்போதும் 'தம்முடன் தேர்ந்தெடுத்த நூல்களடங்கிய ஒரு நூலகத்தை எடுத்துச் செல்வார்.' அவர் டில்லியில் ஒரு மத்ராசா (Madrasa) நிறுவப்படுமாறு செய்தார்.' புராணகிலாவில் ஷெர்ஷாவினால் கட்டப்பட்ட இன்ப மாளிகையை ஒரு நூலகமாக மாற்றினார். 'பள்ளிகளிலும் கல்லூரிகளிலும் கல்வி கற்பிப்பதற்காகப் புகுத்தப்பட்ட முறையில் அக்பரின் ஆட்சி ஒரு புதிய சகாப்தத்தைத் தொடங்குகிறது'. அவர் பதேபூர் சிக்ரி, ஆக்ரா இவற்றிலும், வேறு சில இடங்களிலும் கல்லூரிகள் கட்டினார். முஸ்லிம் கல்வியின் நிலையை உயர்த்துவதற்காக அவர்

கல்வித் திட்டத்தில் சில மாறுதல்களைச் செய்தார். அது எப் பயனும் விளைவிக்கவில்லை என்று கூறுவது பொருந்தாத கூற்றாகும். உண்மையில் அபுல் பாஸல் அதன் நல்ல பலன்களைப்பற்றிக் குறிப் பிடும்போது 'இளைஞர்களின் கல்விக்காக எல்லா நாடுகளும் பள்ளிகள் வைத்திருக்கின்றன. ஆனால், இந்துஸ்தானம் அதனுடைய உயர்தரக் கல்விமுறைக்குப் புகழ் பெற்றது' என்று எழுதுகிறார். பிற மதங்களைப் பொறுத்துக்கொள்ள வேண்டும் என்ற தம் கொள் கையினால் உந்தப்பட்டு அக்பர் பிற்காலத்தில் மத்ராசாக்களில் இந்துக்கள் கல்வி பெறுவதற்கும் வழி வகைகள் ஏற்படுத்தினார். இலக்கியச் சுவை சிறிது உடையவராயும், பாரசீக, துருக்கிமொழி களை நன்கு கற்றறிந்தவராயுமிருந்த ஜஹாங்கீர், வாரிசு இல்லா மல் பணக்காரனோ, பயணியோ இறந்துவிட்டால் அவனுடைய சொத்துப் பறிமுதல்செய்யப்பட்டு, அரசாங்கப் பணத்துடன் சேர் க்கப்படும் என்றும், அப் பணம் மத்ராசாக்கள் மடங்கள் முதலியவற் றைப் பழுது பார்ப்பதற்குச் செலவிடப்படும் என்றும் ஒரு விதியை பிறப்பித்தார். அவர் பட்டத்துக்கு வந்தவுடனே 'முப்பதாண்டு களாகப் பறவைகள், விலங்குகள் இவற்றின் குடிவாழ்க்கைக்கு இருப்பிடமாயிருந்த பலமத்ராசாக்களைப் பழுதுபார்த்து அவற்றை மாணவர்களையும் பேராசிரியர்களையும் கொண்டு நிறைத்தார்' என்று தரீக்கி ஜான்ஜஹன் என்ற நூலில் குறிக்கப்பட்டுள்ளது. ஷாஜஹான் மற்ற எவற்றைக் காட்டிலும் மாபெரும் கட்டடங் களைக்கட்டுவதில் அதிக அக்கரை உள்ளவராய் இருந்திருப்பினும், அவருடைய இளமையில் துருக்கியில் கல்வி கற்பிக்கப்பட்டார். இரவுகளின் ஒரு பகுதியைச் சொந்தமாகப் படிப்பதற்குச் செல விட்டார். அவர் மாணவர்களுக்கு உதவிச் சம்பளமும், பரிசு களும் கொடுத்துக் கல்விக்கு ஊக்கமளித்தார். அவர் டில்லி யில் ஒரு கல்லூரியை நிறுவினார்; பாழடைந்து கிடந்த தார்-உல்-பகா (கரைகாணாக் காலத்தின் இல்லம்) என்று அழைக்கப்பட்ட கல்லூரியைப் பழுதுபார்த்தார்.

தாராஷுக்கோ முகலாயப் பேரரசக் குடும்பத்தில் இந்தியா இதுவரை பெற்றெடுத்த மிகப்பெரிய அறிஞர்களுள் ஒருவராகத் திகழ்ந்தார். அராபிய மொழி, பாரசீகம் சமஸ்கிருதம் இவற்றில் சிறந்த புலமை பெற்றிருந்த அவர், உபநிஷதங்கள், பகவத்கீதை யோக வாசிஷ்ட ராமாயணம் ஆகியவற்றின் மொழிபெயர்ப்பு களையும், முஸ்லிம் முனிவர்களின் கால அட்டவணைகளையும், சூபி தத்துவம் பற்றிய பல நூல்களையும், இன்னும் பல புகழ்பெற்ற நூல்களையும் இயற்றினார். இந்த துரதிர்ஷ்டம் மிக்கவரின் கல்லறையைப் பார்த்து சர் வில்லியன் ஸ்லீமன், 'அவர் சிம்மா சனத்தைப்பெற்று வாழ்ந்திருந்தால் கல்வியின் நிலையும், அத்துடன்

இந்தியாவின் தலைவிதியும் முற்றிலும் வேறுபட்டனவாய்ப் போயிருக்கும்' என்று எண்ணியது பொருத்தமே. ஔரங்கசீப் உயர்ந்த கல்வியைப் பெற்றவராயிருந்தும், பொதுவாகக் கல்வியின் வளர்ச்சிக்குச் சிறப்பாக எதுவும் செய்யவில்லை. எனினும், அவர் முஸ்லிம் கல்விக்காக எல்லாவகை ஊக்கங்களையும் அளித்தார். கீன்(Keene) என்பாரின் கருத்துப்படி அவர் 'மிகு பல கல்லூரிகளையும், பள்ளிகளையும்' நிறுவினார்.

முகலாயர் காலத்தில் ஒருவகையான பெண்கல்வி நிலவியது; பேரரசஅரண்மனையைச் சேர்ந்தோரின் புதல்விகளும், செல்வமிக்க பிரபுக்களின் புதல்விகளும் அவர்கள் வீடுகளிலேயே கல்வி கற்பிக்கப்பட்டனர். இந்துக்களுள் மத்தியத்தரக் குடும்பத்தினரின் பெண்கள் பள்ளிகளில் பையன்களுடன் சேர்ந்து தொடக்கக்கல்வி பெற்றனர்; அவர்களுள் சிலர் மத இலக்கியத்தில் வல்லவர்களாயும் பிற்காலத்தில் விளங்கினர். இந்தியாவின் ஸ்டாகுடரிக் கமிஷனின் துணைக்குழு 1929 செப்டம்பரில் பின்வருமாறு உரைத்தது மிகவும் பொருத்தமுடையதாகும்: 'பெண்கள் கல்வியை எதிர்க்கக்கூடிய வாறு இந்து மதத்திலும் இஸ்லாம் மதத்திலும் எதுவும் இல்லை. உண்மையில் இந்தியாவில் மிகு பழங்காலத்திலேயே பரந்த அறிவு படைத்த பெண்களும், குறிப்பாகத் தெய்விக, புராண இலக்கியங்களைக் கற்றிருந்தோரும் பலராக இருந்தனர்'. அக்பர் காலத்தில் 'அரச பரம்பரையைச் சார்ந்த பெண்களுக்கு ஒழுங்கான கல்விப் பயிற்சி கொடுக்கப்பட்டது'. அவ்வாறு கல்வி பெற்ற சில மகளிர் பிற்காலத்தில் இலக்கியத்துறையில் புகழ்பெற்று விளங்கினர். இவ்வாறு பாபரின் மகளான குல்பதன் பேகம் ஹுமாயூன் நாமாவின் ஆசிரியை ஆவாள். ஹுமாயூனின் மருமகள் சலீமா சுல்தானா பல பாரசீகக் கவிதைகளை இயற்றினாள். நூர்ஜஹான், மும்தாஜ் மஹால் ஜஹானாரா பேகம், ஜெப்-உன்-நிசா ஆகியோர் உயர்ந்த கல்வி பெற்ற மகளிராவர். அவர்கள் பாரசீக, அரேபிய இலக்கியத்தில் வல்லவராயும் விளங்கினர். நுண்மையான அரேபிய,பாரசீக அறிஞராயிருந்த ஜெப்-உன்-நிசா கையெழுத்துக் கலையிலும் வல்லவளாயிருந்தாள்; வளமான ஒரு நூலகத்தையும் வைத்திருந்தாள்.

நாம் ஏற்கெனவே பார்த்தபடி இந்தியாவின் தைமூரித்து ஆட்சியாளர்கள் இலக்கியத்தின் புரவலர்களாயிருந்தனர். பல துறைகளிலும் அது வளர்ந்தோங்குவதற்குப் பேரளவிற்கு ஆதரவு அளித்தனர். பல அறிஞர்கள் தோன்றி அக்பரின் ஆதரவைப் பெற்றுச் சுவைமிக்க முக்கியமான பல நூல்களை எழுதினர். திரிவேணியைச் சேர்ந்த வங்காளக் கவிஞரும், சந்தீ-மங்கல் என்ற

நூலின் ஆசிரியரும், அக்பர் காலத்தில் வாழ்ந்தவருமான மாதவாச் சாரியார் கல்வியின் புரவலர் என்று பேரரசரை வானளாவப் புகழ்ந்துள்ளார்.

அக்பர் ஆட்சிக் காலத்துப் பாரசீக இலக்கியத்தை மூன்று தலைப்புகளின் கீழ்ப் பிரிக்கலாம். அவை (1) வரலாற்று நூல்கள். (2) மொழிபெயர்ப்புகள். (3) கவிதையும் செய்யுளும் என்பவை யாகும். அந்த ஆட்சிக் காலத்தில் எழுதப்பட்ட புகழ்பெற்ற வரலாற்று நூல்கள் பின் வருமாறு: முல்லா தாவூத் எழுதிய தாரீக்கி அல்பி, அபுல் பாஸல் எழுதிய அய்னி அக்பரியும் அக்பர் நாமாவும், நிஸாம்-உத்தீன் அஹ்மது எழுதிய தபகாத்-இ-அக்பரி பெய்லி சார்ஹிண்ட் எழுதிய அக்பர் நாமா, அப்துல் பாகீ எழுதிய மா ஆசிர் இ-ரஹிமி என்பவை அவை. இவற்றுள் கடைசி யாகக் கூறப்பட்டது அப்துர்ரஹீம் கானி கானனின் ஆதரவு பெற்று எழுதப்பட்டது. அக்பர் ஆட்சியில் பாரசீக மொழியில் மிகச் சிறந்த நூலாசிரியராயிருந்தவர் அபுல் பாஸலே. அவர் இலக்கிய ஆசிரியராயும், கவிஞராயும், கட்டுரையாளராயும், திறனாய்வாளராயும், வரலாற்றாசிரியராயும் இருந்தார். பேரரச ரின் கட்டளைப்படி வடமொழியிலும் பிற மொழிகளிலு மிருந்த நூல்கள் பாரசீகத்தில் மொழிபெயர்க்கப்பட்டன. மஹாபாரதத்தின் வெவ்வேறு பகுதிகள் பல முஸ்லிம் அறிஞர்களால் பாரசீகத்தில் மொழிபெயர்க்கப்பட்டு ரஜ்ம்-நாமா என்ற பெயரில் ஒன்றாய்த் தொகுக்கப்பட்டன. நான்காண்டுகள் உழைத்தபிறகு பதௌனி கி.பி. 1589-ல் இராமாயண மொழிபெயர்ப்பை முற்றுப்பெறச் செய்தார். ஹாஜி இம்ராஹீம் சர்ஹிந்தி அதர்வ வேதத்தைப் பாரசீகத்தில் மொழி பெயர்த்தார். கணக்கு நூலான லீலாவதியைப் பைஸி (Faizi) மொழிபெயர்த்தார். வான இயல் நூலான தஜக் என்பதை முகம்மல் கான் குஜராத்தியில் மொழிபெயர்த்தார். அப்துல் ரஹீம் கானி கானன் வாகியாத்-இ-பாபரி என்ற நூலை மொழி பெயர்த்தார். மௌலானா ஷா முஹம்மது ஷாஹாபாதி காஷ்மீர் வரலாற்றை மொழிபெயர்த்தார். சில கிரேக்க, அராபிய நூல்கள் பாரசீகத்தில் மொழிபெயர்க்கப்பட்டன. அக்பரின் ஆதரவினால் புகழ்பெற்ற சில கவிஞர்களும் செய்யுள் செய்வோரும் தகுதிமிக்க பல நூல்களை இயற்றினர். செய்யுள் செய்வோருள் மிகச் சிறந்த புகழ்பெற்றவர் கிஸலி (Ghizali) ஆவர். அவருக்கு அடுத்து முக்கியமானவர் அபுல் பாஸலின் சகோதரரான பைஸியாவர். மிகவும் மதிப்புமிக்க கஸல்களை (Ghazals) இயற்றிய நிஷாப்பூரைச் சேர்ந்த முஹம்மது ஹூஸேன் நாஸிரியும் அக் காலத்தில் கவிதாக்

களை (Qasidas) எழுதுவதில் மிகச் சிறந்த புகழ்பெற்ற ஆசிரிய ராகிய ஷிராஸ் நகரைச் சேர்ந்த சய்யிது ஜமாலுதீன் உர்பியும் மற்றமுதன்மையான கவிஞர்களாவர்.

மிகச் சிறந்த இலக்கியச் சுவையார்வம் பெற்றிருந்த ஜஹாங்கீரும் கல்வியறிஞர்களை ஆதரித்தார். பொருளிலும் நடையிலும் அவருடைய சுயசரிதை பாபரின் சுயசரிதைக்கு அடுத்தபடியான புகழ் வாய்ந்தது. அவருடைய அரசவையை அலங்கரித்த அறிஞர்களின் விளக்கமான பெயர்ப் பட்டியலை இக்பால் நாமா-இ-ஜஹாங்கிரீ என்ற நூல் தருகிறது. அவர் களுள் கியாஸ்பேக், நகிப் கான், முதமித்கான், நியாமதுல்லா, அப்துல் ஹக் திஹ்லவீ என்போரை இங்கு நாம் குறிப்பிடலாம். சில வரலாற்று நூல்கள் ஜஹாங்கீரின் ஆட்சிக் காலத்தில் எழுதப் பட்டன. அவற்றுள் மஆசிரி ஜஹாங்கீரீ இக்பால் நாமா-இ-ஜஹாங்கீரீ, ஜுப்த்-உத்-தவாரீக் என்பவை மிகு முக்கிய மானவையாகும். கல்வியறிஞர்களைப் புரப்பதில் ஷாஜஹான் தம் முன்னோர்களைப் பின்பற்றினார். பல கவிஞர்கள், சமய நெறி வல்லார்கள் (Theologians) இவர்களுடன் அவருடைய அரசவை யில் சில புகழ்பெற்ற வரலாற்றாசிரியர்களும் இருந்தனர். பாதுஷா நாமாவின் ஆசிரியரான அப்துல் அமீது லாஹூரி, மற்றொரு பாதுஷா நாமாவின் ஆசிரியரான அமீனயீ கஜ்வீனீ, ஷாஜஹான் நாமாவின் ஆசிரியரான இனயத் கான், அமல்சாலியின் ஆசிரிய ரான முகமது சாலி இவர்களெல்லாம் ஷாஜஹான் ஆட்சியில் வரலாற்றாசிரியர்களுள் முக்கியமான நிபுணர்களாவர். நாம் ஏற் கெனவே குறிப்பிட்ட இளவரசர் தாராஷூக்கோவின் அறிவா ராய்ச்சி மிக்க நூல்கள் பாரசீக இலக்கியத்திலேயே தலைசிறந்த நூல்களாக விளங்குகின்றன. ஆர்வ மிக்க ஸுன்னி மதப் பிரிவின ரான ஔரங்கசீப் முஸ்லிம் சமய நெறி, சட்டவியல் இவற்றில் ஒரு திறனாய்வு மிக்க அறிஞராய்த் திகழ்ந்தார். கவிதையில் அவ ருக்குச் சுவை இல்லை. தம்முடைய ஆட்சியின் வரலாறுகளை எழுது வதை அவர் எதிர்த்தார். காபிகானுடைய முந்தக்கப்-உல்-லுபாப் (Muntakhab-ul-Lubab) இரகசியமாகவே எழுதப்பட்டது. அதுபோலவே மீர்ஸா முகம்மது காஸிம் ஆலம்கீரி நாமா என்ற நூலையும், முஹம்மது சாகீ மா ஆசிர்-இ-ஆலம்கீரி என்ற நூலை யும், சுஜன் ரா கத்ரி குலாசத்-உத்-தவாரீக் என்ற நூலையும், பீம்சேன் நுஷ்கா-இ-தில்குஷா என்ற நூலையும், ஈஷ்வர் தாஸ் பதூஹாத்-இ-ஆலம்கிரீ என்ற நூலையும் மறைவாக எழுதினர்.

அக்பரால் உண்டாக்கப்பட்ட அமைதியும் ஒழுங்கும், 'மக்கள் புரிந்துகொள்ளும்' மொழியில் பல முனிவர்களால் பிரச்சாரம்

செய்யப்பட்ட அந்தக் காலத்து மத இயக்கங்களைப் பற்றியபொது மைக் கருத்துகள் பிற்காலத்து அறிஞர்களின் மேதைமையைத் தூண்டிவிட்டன. அது பலவிதங்களில் வெளிப்பட்டது. அதனால் பதினாறு பதினேழாம் நூற்றாண்டுகள்'இந்துஸ்தானி இலக்கியத் தின் சிறந்த காலமாகக் கருதப்படலாயின. 1526-க்குப் பிறகு முதல் சிறந்த ஆசிரியர் மாலிக் முஹமது ஜயசீ என்பவராவார். அவர் 1540-ல்'பத்மாவதி' என்ற பெயர்பெற்ற அழகான தத்துவக் காப்பியத்தை இயற்றினார். அது உட்பொருள் ஒன்று பொதிந்த தாய் மீவார் ராணி பத்மினியின் வரலாற்றைக் கூறுவதாகும்.' இந்திக் கவிதையின்மீது அக்பருக்கு ஆர்வம் இருந்ததாலும்,அதற்கு அவர் ஆதரவு தந்ததாலும் இந்தி இலக்கியம் வளர்ச்சி அடையப் பெரும் வாய்ப்பு ஏற்பட்டது. பேரரசரின் அரசவைப் புலவர் களுள் அவரால்'கவிப்பிரியர்' என்ற பட்டம் கொடுக்கப் பெற்ற பீர்பால் ஒரு புகழ்பெற்ற கவிஞராயிருந்தார். ராஜா மான்சிங்கும் இந்தியில் செய்யுள்கள் இயற்றினார்; கல்வியை ஆதரித்தார். அக்பரின் மந்திரிகளுள் மிகச் சிறந்த நூலாசிரியர் அப்துல் ரஹீம் கானி கானன் என்பவராவார். அவருடைய தோஹாக்கள் இப் பொழுதும் வட இந்தியா முழுவதும் ஆர்வத்துடனும் வியப்புட னும் படிக்கப்படுகின்றன. பேரரசரால் மஹாபாத்திரன் என்ற பட்டப் பெயர் கொடுக்கப் பெற்ற நரஹரி, ஹரிநாத். கஞ்ச் ஆகி யோரும் அவருடைய அரசவையின் சிறப்புப் பெற்ற நூலாசிரியர் களாவர்.

அந்தக் காலத்துக் கவிதை இலக்கியத்தின் பெரும்பகுதி மதத் தொடர்புடையதாய் இருந்தது; கிருஷ்ண வழிபாடு அல்லது இராம வழிபாட்டை விளக்கும் கருத்துகள் நிரம்பியதாய் இருந் தது. கிருஷ்ண வழிபாடு யமுனைச் சமவெளியை ஏறக்குறைய ஒத்த பிரஜ பூமியில் பெருகியிருந்தது; அங்கே சிறப்புற வளர்ந்து வந்தது. வல்லபாச்சாரியார்; அவருடைய மகன் பித்தல் நாத், இவர்களுடைய 'அஷ்டசாப்' என்ற பெயரில் குழுவாகச் சேர்க்கப் பட்ட எட்டு மாணவர்களுள் சூர்தாஸ் என்பவர்கள் மிகு புகழ் பெற்றவர்கள். ஆக்ராவின் குருட்டுக் கவிஞரான அவர் மக்கள் மொழியில் எழுதிய சூர்சாகர் என்ற நூலில் கிருஷ்ணனின் இளமை வாழ்க்கையின் லீலைகளை விளக்கிக் கூறியுள்ளார். கிருஷ்ணனின் அழகைப்பற்றியும்அவனுடைய அன்புக்குரிய இராதாவின் எழிலைப் பற்றியும் பல செய்யுள்களை இயற்றினார். அந்த வழிபாட்டினைச் சார்ந்தமற்ற முக்கியமான கவிஞர்கள், ராஸ்-பஞ்சாத்யாயி என்ற நூலை இயற்றிய நந்த தாஸ், சௌராஸி வைஷ்ணவ கீவார்த்தா என்ற நூலை உரை நடையில் எழுதியவரான விட்டல்நாத், பரமா னந்த தாஸ், கும்பன் தாஸ் 'விட்டல் நாத்தின் முஸ்லிம் சீடரான

வரும், பிரேமவார்த்திகா என்ற நூலை இயற்றியவருமான ராஸ் கான் என்பவரும் ஆவர். இராம வழிபாட்டைப்பற்றிய ஆசிரியர் களுள் மிகச்சிறந்தவர் துளசிதாஸ்(கி.பி. 1531—1623)ஆவர். அவர் வாரணாசியில் 'புகழ் என்ற கோயிலில் தமக்குரிய இடத்தில் எவரா லும் அணுக முடியாது தனியாக' வாழ்ந்தார். அவர் மிக உயர்ந்த ஒரு கவிஞர் மட்டுமல்லாது இந்துஸ்தானத்து மக்களுக்கு ஆன்மீகக் குருவாகவும் இருந்தார். இந்துஸ்தானத்தில் அவருடைய பெயர் ஒவ்வொரு வீட்டிலும் வழங்குவதற்குரியதாயிற்று; அவருடைய நினைவு இலட்சக்கணக்கானவர்களால் போற்றி வணங்கத் தக்கதாயிருந்தது. அவருடைய நூல்களுள் மிகு புகழ் பெற்றதான 'இராமசரிதமானஸ' அல்லது'இராமருடைய வாழ்க் கைத் தடாகம்' சர் ஜ்யார்ஜ் கிரியர்சனுல் 'இந்துஸ்தானத்தின் பத்துக் கோடி மக்களுக்கு ஒரு பைபிள்' என்று பொருத்தமுறப் போற்றப்பட்டமை இங்குக் கருதத்தக்கதாகும். இராமாயணத்தை மொழிபெயர்த்த கிரௌஸ்(Growse)கூடத் தம் மொழிபெயர்ப் பில் 'அவருடைய நூல் அரசவை முதல் குடிசைவரை உள்ள எல்லாருடைய கையிலும் இருக்கிறது; இந்து இனத்தின் எல்லாச் சாதியினரும், உயர்ந்தோராயினும் தாழ்ந்தோராயினும், செல்வ ராயினும் வறியவராயினும், இளைஞராயினும் முதியவராயினும் அதைப் படிக்கின்றனர்; படிக்கக் கேட்கின்றனர்;கேட்டுஅனுபவிக் கின்றனர்' என்று கூறியுள்ளார். அந்தக் காலத்தில்தான் கவிதைக் கலையினை ஒழுங்குபடுத்த முதல் முயற்சி செய்யப்பட்டது'. ஆர்ச் சாவின் சாந்தியா பிராமணரான கேசவ தாஸ் (கி.பி, 1580)' சுந்தர் சேனுதிபதி, திரிபாதி சகோதரர்கள் இவர்களால் அம் முயற்சிகள் மேற்கொள்ளப்பட்டன. இவர்கள் ஷாஜஹான் ஆட்சிக் காலத்தில் புகழ்பெற்று விளங்கியவராவர்.

வங்காளத்தில் இந்தக் காலத்தில் குறிப்பிடத்தக்க அற்புத மான வைணவ இலக்கியங்கள் தோன்றின. கர்ச்சாக்கள் அல்லது வர்ணங்கள், பதங்கள், பாட்டுகள் போன்ற அதன் வெவ்வேறு துறைகளும், சைதன்னிய தேவரின் வரலாறுகளும், வங்காள மக்களின் உள்ளங்களில் பக்தி, பரந்த மனப்பான்மை ஆகிய உணர்ச்சிகளை ஊட்டியதுடன், அவை அந்தக் காலத்தில் அந்த மாகாணத்தில் சமுதாய வாழ்க்கையின் கண்ணுடியாகவும் விளங்கின. வைணவ நூலாசிரியர்களுள் மிகவும் முதன்மை வாய்ந்தவர்கள் பின்வருமாறு: (பர்த்வான் பிரதேசத்தில் ஜமால் பூரில் கி.பி. 1517-ல் வைத்தியக் குடும்பமொன்றில் பிறந்தவரும்) சைதன்னிய சரிதாம்ருத என்ற பெயரைத் தாங்கிய மிகு முக்கிய மான சைதன்னிய வரலாற்றை எழுதியவருமான கிருஷ்ணதாஸ் கவிராஜ், கி.பி. 1507-ல் பிறந்தவரும் சைதன்னிய தேவரின்

வரலாற்றை விளக்கும் தரமான நூலாயும், அவருடைய காலத்து வங்காளச் சமுதாயத்தைப் பற்றிய செய்திகளின் கிடங்காகவும் கருதப்படும் சைதன்னிய பாகவத என்ற நூலின் ஆசிரியருமான பிருந்தாவன் தாஸ், கி.பி. 1513-ல் பிறந்தவரும் சைதன்னிய தேவரின் வாழ்க்கையைப் பற்றிய சில புதிய செய்திகளைக் கொடுக்கும் வரலாற்று நூலான சைதன்னியமங்கள் என்ற நூலின் ஆசிரியருமான ஜயானந்தா, பர்த்வானின் வடக்கே முப்பது மைல் தூரத்தில் இருந்த கிராமமான கௌரா கிராமத்தில் கி.பி.1523-ல் பிறந்தவரும் சைதன்னிய மங்கள் என்ற பெயரையே உடைய சைதன்னிய தேவரின் மிகு புகழ்பெற்ற வரலாற்றின் ஆசிரியருமான திரிலோசன்தாஸ், பக்திரத்னகர் என்றநூலின் ஆசிரியரான நரஹரி சக்ரவர்த்தி முதலியோர் குறிப்பிடத் தக்கவராவர்: பதினைந்து அதிகாரங்களில் சைதன்னிய தேவரின் வரலாற்றை மிகு விரிவாகக் கூறும் வரலாற்று நூலான பக்திரத்னகர் கிருஷ்ணதாஸ் கவிராஜின் நூலுக்கு அடுத்தபடி முக்கியமான நூலாகும். அந்தக் காலத்தில் பெருங்காப்பியங்கள், பாகவதம் முதலியவற்றின் எண்ணிலாத மொழி பெயர்ப்புகளும், சந்திதேவி, மனசா தேவி இவர்களைப் புகழ்ந்து எழுதப்பட்ட நூல்களும் மிகுதியாக இயற்றப்பட்டன. இவற்றுள் மிகு முக்கியமானவை காசிராம் தாஸ் இயற்றிய மகா பாரதமும் முகுந்த ராம் சக்கரவர்த்தி இயற்றிய கவிகங்கன் சந்தியும் ஆகும். மேல் இந்தியாவில் துளசிதாஸின் புகழ்பெற்ற நூல் இன்றும் போற்றப்படுவது போலவே வங்காளத்தில் கவிகங்கன் சந்தி இன்றும் மக்கள் எல்லாராலும் போற்றிப் படிக்கப்பட்டுவருகிறது. முகுந்தராமின் நூல் அவர் காலத்து வங்காள மக்களின் சமுதாயப் பொருளாதார நிலைகளின் விரிவான வரலாற்றைச் சித்தரிக்கிறது. அதனால், அவரைப் பேராசிரியர் கோவெல் 'வங்காளத்தின் நண்டு' (The Darbbe of Bengal) என்று வருணித்துள்ளார். டாக்டர் கிரியர்சன் அவருடைய கவிதை 'இதயத்திலிருந்து பொங்கி வழிந்த கவிதை ; பள்ளியில் படித்து எழுதப் பட்டதன்று' என்றும், 'உண்மையான கவிதைச் சிறப்பும், தெளிவாக விளக்கும் ஆற்றலும் மலிந்த பகுதிகள் நிறைந்தது' என்றும் கூறியுள்ளார்.

பேரரசரின் புத்தக ஆர்வம் நூலகங்களைத் தோற்றுவிக்கச் செய்தது. அங்கே விலைமதிப்பு மிக்க கையெழுத்து நூல்கள் சேர்த்து வைக்கப்பட்டன. அக்பரின் நூலகத்தில் எண்ணில்லாத நூல்கள் இருந்தன. அவை முறையாக வெவ்வேறு பிரிவுகளில் பகுக்கப்பட்டிருந்தன. அக்பரின் அரசவையில் புகழ்பெற்றிருந்த எழுத்தாளர்களின் பட்டியல் ஒன்றை அய்னி அக்பரி தருகிறது, அவர்களுள் மிகவும் சிறப்புற்று விளங்கியவரான காஷ்மீரைச்

சேர்ந்த முஹம்மது ஹுஸேன் ஜர்ரிங்கலம் (தங்கப் பேனு) என்ற பட்டத்தைப் பெற்றிருந்தார்.

ஔரங்கசீப்பின் ஆட்சிக் காலத்தில் அரசவையின் ஆதரவு நின்றுபோனமையால், இந்தி இலக்கிய வளர்ச்சி தடைபட்டுப் போயிற்று. அந்தக் காலத்தில் வட இந்தியாவில் அதிகமான உருதுக் கவிதைகூட எழுதப்படவில்லை. ஆனுல், தக்கணத்தில் உருதுச் செய்யுள் இயற்றிய புகழ்பெற்ற சில எழுத்தாளர்கள் வாழ்ந்துவந்தனர்.

பிற்கால முகலாயர் ஆட்சியின் தொல்லை நிறைந்த காலத்தில் கூட இலக்கியப் பணி முற்றிலும் நின்றுவிடவில்லை. பஹாதூர் ஷா, முகம்மது ஷா போன்ற பேரரசர்களாலும், முர்ஷித் குலி ஜாபர் கான், ஆலிவர்தீ கான் போன்ற சுபாதார்களாலும், நாதியாப் பிரதேசத்து ராஜா கிருஷ்ணசந்திரா, பீர்பூம் பகுதியின் அசதுல்லா போன்ற ஜமீன்தார்களாலும் கல்வியறிஞர்கள் புரக்கப் பட்டனர். இராமப் பிரஸாத்தின் தெய்வப் பாடல்களைத் தவிர அந்தக் காலத்தில் எழுந்த மற்ற இலக்கியங்களெல்லாம் தரக் குறைவுடையனவையாயும், பிறழ்ச்சிச் சுவை பெற்றனவையாயும் இருந்தன. இந்துக்களிடமும் முஸ்லிம்களிடமும் அக் காலத்தில் பெண்கல்வி இருந்துவந்தது. புகழ்பெற்ற கோகீஜியுவின் தந்தையும், இந்துவாக இருந்து மதம் மாறியவருமான ஜான் முகம்மதுவின் இரு புதல்விகள் 'பள்ளிக்கு அனுப்பப்பட்டனர். அவர்கள் எழுதிப் படிப்பதில் சிறிது நல்ல பயிற்சி பெற்றனர்'. கோகீஜியு கையெழுத்திலும், கட்டுரை எழுதுவதிலும் தம்முடைய சகோதரர்களை மிஞ்சினுள்'. வங்காளத்தில் கல்வி கற்ற பல மகளிரை நாம் பார்க்கலாம். எடுத்துக்காட்டாக, கல்கத்தாவில் சோபஜார் என்ற இடத்தில் வாழ்ந்த ராஜா நவகிருஷ்ணுவின் மனைவியர் படிக்கும்' திறமையில் புகழ்பெற்றிருந்தனர். கிழக்கு வங்காளத்தைச் சேர்ந்த பெண்கவிஞரான ஆனந்தமயீ ஓர் உயர்ந்த கவிஞராவர்.

## 2. கலையும் கட்டடக் கலையும்

### அ. கட்டடக்கலை

இலக்கியத் துறையிலும், மதத் துறையிலும் காணப்படு வதைப்போன்றே கலையிலும் கட்டடக்கலையிலும் முகலாயர் காலம் முழுவதும் புதுமையும், மறுமலர்ச்சியும் உண்டான ஒரு காலமாக இராமல் துருக்கியஆப்கானியர் ஆட்சியின் பிற்காலத்தில் தொடங் கப்பட்ட முறைகளைத் தொடர்ந்து முடித்தகாலமாகவே இருந்தது. உண்மையில் 1526-க்குப் பிறகு கலை, கட்டடக்கலை முதலியவை

அதற்குமுன்பு இருந்தது போலவே இருந்து இந்து--முஸ்லிம் கலைக் கூறுகளும், மரபுகளும் இன்பமுற இணைந்த நிலையையே எடுத்துக் காட்டுகின்றன.

ஔரங்கசீப்பின் மதத் தூய்மை கலைகளை ஆதரிக்க இடங் கொடுக்காமையால் அவரைத் தவிர இந்தியாவின் மற்ற எல்லா முற்பட்ட முகலாய அரசர்களும் பெருங்கட்டடம் கட்டுவோராகத் திகழ்ந்தனர். பாபரின் இந்திய ஆட்சி மிகக் குறுகிய காலம்வரை தான் இருந்தது எனினும், அவர் தம்முடைய குறிப்பேடுகளில் இந்துஸ்தானத்துக் கட்டடக்கலை பற்றித் திறனாய்வு செய்து கூறவும், சிறந்த கட்டடங்களை எழுப்ப எண்ணுவதற்கும் நேரம் பெற்றிருந்தார். இந்தியாவில் மசூதிகள், பிற கட்டடங்கள் இவற்றில் வேலை செய்வதற்காகப் புகழ் பெற்ற சீனன் (Sinan) என்ற பெயருடைய அல்பானியக் கட்டடக் கலைஞரின் மாணவர் களைக் கான்ஸ்டாண்டி நோபிலிலிருந்து வரவழைத்தார் என்று சொல்லப்படுகிறது. ஆனால், திரு. பெர்சி பிரௌன், 'எனினும், அது நடந்திருக்க முடியாது; அந்த ஏற்பாடு நடைபெற்றிருந் திருக்காது; ஏனெனில், அந்தப் புகழ்பெற்ற கட்டடக்கலைப் பள்ளி யைச் சார்ந்த ஒருவராவது முகலாயர்களின் கீழ்ப் பணி செய்தி ருப்பின் பைஸாண்டிய நடையின் செல்வாக்குக் காணப்படாமல் போயிருக்க முடியாது; ஆனால், எவரும் வரவில்லை...' என்று கூறு கிறார். பாபர் தம்முடைய கட்டடங்களைக் கட்டுவதற்காக இந்தியக் கல்தச்சர்களையே அமர்த்தினார். அவரே தம்முடைய குறிப்பேடுகளில் இவ்வாறு கூறியுள்ளார்: 'ஆக்ராவிலுள்ள கட்ட டங்களில் நாள்தோறும் 680 ஆள்கள் வேலை செய்தனர். சிக்ரி, பியானா, தோல்பூர், குவாலியர், கியுல் ஆகிய இடங்களில் கட்ட டங்கள் கட்டுவதற்காகச் சுமார் 1,500 பேர் அமர்த்தப்பட்டிருந் தனர்'. பாபர் கட்டிய பெருங் கட்டடங்கள் எல்லாம் முழுதும் மறைந்துவிட்டன. மூன்று சிறு கட்டடங்கள்தாம் இன்று காணப் படுகின்றன. அவற்றுள் ஒன்று பானிப்பட்டில் காபூலிபாக்கிலுள்ள நினைவு மசூதி (1526) ஆகும்; மற்றது ரோஹில்கண்டில் சம்பால் என்ற இடத்திலுள்ள ஜாமி மசூதி (1526) ஆகும். மூன்றாவது ஆக்ராவில் பழைய லோடிக் கோட்டையில் கட்டப்பட்டிருந்த மசூதியாகும். துரதிர்ஷ்டம் மிக்க அரசரான ஹுமாயூனின் ஆட்சி யில் கட்டப்பட்ட இரண்டு கட்டட அமைப்புகள் பாதியளவிற்குப் பாழடைந்த நிலையில் உள்ளன. அவற்றுள் ஒன்று ஆக்ராவிலுள்ள மசூதி; மற்றது பஞ்சாபில் ஹிஸ்ஸார் மாவட்டத்தில் பத்பாட் என்ற இடத்தில் மிகப் பெரியதாகவும், ஒழுங்கு முறையிலும் கட்ட பட்ட மசூதியாகும். சுமார் கி.பி. 1540-ல் கட்டப்பட்ட அது பாரசீக முறையில் எனாமலினால் செய்யப்பட்ட ஓட்டின் அலங்காரம்

உடையதாயிருந்தது. 'பெர்சியன்' அல்லது 'மங்கோலிய முறை முதன்முதலாக ஹுமாயூனால்தான் இந்தியாவுக்குக் கொண்டுவரப் பட்டது' என்ற கருத்து தவறாகும். பதினைந்தாம் நூற்றாண்டின் பிற்பகுதியில் பாமினி இராச்சியத்திலேயே அம் முறை இருந்தது என்பதை இங்கு நாம் கருத்திலிருத்த வேண்டும். இந்திய ஆப்கானிய மறுமலர்ச்சியின் தந்தையான ஷெர்ஷாவின் குறுகிய கால ஆட்சி இந்தியக் கட்டடக்கலை வரலாற்றில் ஒரு திருப்பு மையத்தை உண்டாக்கிய காலமாகும். அவருடைய அகால மரணத்தால் பூர்த்தி செய்யப்பட முடியாது போன அவருடைய சுவர் சூழப்பட்ட டில்லித் தலைநகரில் இப்போதுள்ள இரண்டு வாயில்களும், புராணகிலா எனப்பட்ட நகரக் கோட்டையும் 'சில காலமாக நிலவியிருந்த கட்டட அமைப்பு முறையைக் காட்டிலும் அதிகச் சீர்திருத்தமும் கலைத்திறமையும் அலங்காரமும் நிறைந்த கட்டடப்பாணிக்கு' எடுத்துக்காட்டாக இலங்குகின்றன. சுவர்களுக்குள்ளேயே 1545-ல் கட்டப்பட்ட கிலா-இ-குஹ்னா மஸ்ஜித்



சசாராமிலுள்ள ஷெர்ஷாவின் கல்லறை

என்று வழங்கப்பட்ட மசூதி, அதன் அதியற்புதமான கட்டடக் கலைப் பண்புகளுக்காக வட இந்தியக் கட்டடங்களுள் ஒரு சிறந்த இடத்தைப் பெறத்தக்கதாயுள்ளது. பீஹாரில் ஷாஹாபாத் மாவட்டத்திலுள்ள சசாராம் என்ற இடத்தில் ஓர் ஏரியின் நடுவேயுள்ள உயர்ந்த ஒரு சதுரப் பீடத்தின்மீது கட்டப்பட்ட ஷெர்ஷா

வின் கல்லறை, அதன் அமைப்பு, கம்பீரம் ஆகிய இரண்டு கண்ணோட்டங்களிலும், இந்து-முஸ்லிம் கட்டடக் கலையின் ஓர் அற்புதமாய் விளங்குவதுடன், இந்து-முஸ்லிம் கட்டடக்கலைக் கருத்துகளின் இன்ப இணைப்புக்கு ஓர் எடுத்துக்காட்டாயும் விளங்குகிறது. இவ்வாறு அரசாங்க முறையில் மட்டுமன்றி, பண்பாடு, கலை இவற்றிலும் மாபெரும் ஆப்கானிய அரசரான ஷெர்ஷா, மாபெரும் முகல்அரசரான அக்பருக்கு வழிகாட்டியாய் அமைந்தார்.

அக்பரின் ஆட்சியில் குறிப்பிடத் தக்கவாறு கட்டடக்கலை வளர்ந்தோங்கியிருந்தது. தமக்கே உரிய வழக்கமான முழுமை யுணர்வுடன், அப் பேரரசர் அக் கலையின் ஒவ்வொரு பகுதியையும்



பதேபூர் சிகரியில் உள்ள சுல்தான் இல்லத்துச் செதுக்கப்பட்ட தூண்கள்

நன்கு அறிந்துகொண்டார். தாராள மனப்பான்மையும், இணைப்பு மனமும் பொருந்திய அவர் வெவ்வேறு மூலங்களிலிருந்து பெற்ற கலைத்திறக் கருத்துகளைத் தாமே வழங்க, அவரைச் சூழ்ந்திருந்து

அவற்றைப் பெற்ற திறமை வாய்ந்த தொழில்வினைஞர்கள் அக் கருத்துகளுக்குச் செயல்முறையில் ஒரு வடிவம் கொடுத்தனர். அவருடைய ஆட்சி 'ஒளிமிக்க கட்டடங்களைக் கட்டத் திட்ட மிட்டது; அவருடைய மனத்திலும் இதயத்திலும் உறைந்துகிடந்த கலைத்திற வேலையைக் கல், களிமண் இவற்றின் வடிவில் வெளிப் படுத்திக் காட்டியது' என்று அபுல் பாஸல் பொருத்தமுறக் கூறுகிறார். பெர்கூஸனும் பதேபூர் சிக்ரி'ஒரு மாபெரும் மனிதரின் மனத்தைப் பிரதிபலிக்கிறது'என்று பொருத்தமாகக்கூறியுள்ளார். அக்பருடைய செயல்வினைகள் மாபெரும் கட்டடக் கலைத்திறம்மிக்க கட்டடங்களைக் கட்டுவதோடு மட்டும் நின்றுவிடவில்லை. அவர் பல கோட்டைகளையும்,கிராமப்புற மனைகளையும், கோபுரங்களையும் சராயிகளையும், பள்ளிகளையும், குளங்களையும், கிணறுகளையும் கட்டினார். ஜாம் என்ற இடத்தில் ஒரு பாரசீக ஷேய்க் குடும்பத்தில் பிறந்த அவருடைய அன்னையிடமிருந்து அவர் மரபுரிமையாகப்



லாகூர்க் கோட்டை

பெற்ற பாரசீகக் கருத்துகளைஇன்னும் கொண்டிருந்த அவருடைய இந்துக்களிடத்துக் காட்டிய பொறுமைப் பண்பும்,அவர்களுடைய பண்பாட்டில் கொண்டிருந்த அனுதாபமும், தம் பக்கத்தில் அவர் களை இழுத்துக்கொள்ள எண்ணிய கொள்கையும் அவரைத் தம் முடைய பல கட்டடங்களில் இந்துக் கட்டடக்கலை முறைகளையும் பயன்படுத்தச் செய்தன. அக் கட்டடங்களின் அலங்காரச் சிறப்புக் கூறுகளெல்லாம் இந்து,சமணக் கோயில்களில் காணப்பட்டவற்றின் மாதிரிகளாக இருந்தன. அக்பர் கையாண்ட இந்துப்பாணி ஆக்ராக்

கோட்டையில் உள்ள ஜஹாங்கீரி மஹாலில் மிகு தெளிவாக விளங்குகிறது. அம் மஹாலில் சதுரமான தூண்களும் பிறை வடிவான தலைப்பகுதிகளும், இந்துப் பாணியில் ஆப்பு வடிவமான கல்



ஆக்ராக் கோட்டையிலுள்ள டில்லி வாயில்

இல்லாமல் கட்டப்பட்ட சிறு வளைவு வரிசைகளும் உள்ளன. 1569 முதல் 1584 வரை பேரரசின் தலைநகராயிருந்த பதேபூர் சிக்ரியிலுள்ள பல கட்டடங்களிலும், லாகூர்க் கோட்டையிலும் கூட இந்துப்பாணி காணப்படுகிறது. கி.பி. 1569-ல் கட்டி முடிக்கப்பட்டதும், பாரசீகக் கலையின் செல்வாக்கை மிகுதியாகப்பெற்றதெனப் பொதுவாகக் கருதப்படுவதுமான பழைய டில்லியிலுள்ள புகழ் பெற்ற ஹுமாயூன் கல்லறையின் திட்டம் இந்திய முறையை அடியொட்டியதேயாகும், அக் கட்டடத்தின் வெளித்தோற்றத்தில் மிகுதியாகப் பயன்படுத்தப்பட்ட வெள்ளைச் சலவைக் கற்கள் இந்திய முறையிலேயே அடுக்கப்பட்டிருந்தன. பெர்சியக் கட்டடம் கட்டுவோரால் அவ்வளவு மிகுதியாகப் பயன்படுத்தப் பட்ட வண்ண ஒட்டு அலங்காரம் அதில் காணப்படவில்லை. பதேபூர் சிக்ரியிலுள்ள பேரரசரின் கட்டடங்களுள் மிகு கம்பீரமானவை ஜோத்பாயின் மாளிகையும், அவருடைய இராணிகளுக்

காகக் கட்டப்பட்டதாகச் சொல்லப்படும் மற்ற இரு வாழ்வதற்குரிய கட்டடங்களுமாகும். மேலும், இந்துப் பாணியைக் காட்டும் கட்டடங்களாவன: திவானி-ஆம் அல்லது பேரரசரின் அலுவலகம்: இதில் தூண்வரிசைக்கு மேலே உள்ள கூரை இந்து முறைப்படி அமைக்கப்பட்டுள்ளது. அற்புதமான திவானி காஸ் அல்லது



ஆக்ராக் கோட்டையில் உள்ள ஜஹாங்கீரி மஹால்

தனிப்பட்டோர் வந்து காண்பதற்குரிய அரசிருக்கை: இது திட்டத்திலும், அமைப்பிலும், அலங்காரபாணியிலும் தெளிவாக இந்திய பண்பைப் பெற்றுள்ளது; 'கதை கூறும் கல்' என்று பெர்கூஸனால் வருணிக்கப்பட்ட சலவைக்கல் மசூதியான ஜாமி மசூதி: அக்பரின் குஜராத் வெற்றியின் நினைவுச் சின்னமாகச் சலவைக் கல்லாலும், மணற்கல்லாலும் மசூதியின் தென்புற வாயிலில் கட்டப்பட்ட பிரமாண்டமான புலந்த்தர்வாஜா அல்லது வெற்றிவளைவு; இந்தியாவில் இன்னும் சிலபாகங்களில் காணப்படும் இந்திய புத்த விஹாரங்களின் திட்டத் தொடர்ச்சியைக் காட்டுவதான பஞ்ச் மஹால் என்று அழைக்கப்பட்ட ஐந்து மாடிகள் உள்ள பிரமிடு அமைப்பு இவையாகும். அக் காலத்துக் குறிப்பிடத்தக்க மற்ற இரு கட்டடங்கள் அலகாபாத்திலுள்ள நாற்பது தூண்கள் உள்ள அரண்மனையும், சிகந்தராவில் உள்ள அக்பரின் கல்லறையுமாகும்;

வில்லியம் பின்சின் கருத்துப்படி அலகாபாத்திலுள்ள அரண் மனையைக் கட்டுவதற்கு நாற்பது ஆண்டுகள் பிடித்தன. வெவ் வேறு தரமான 5,000 முதல் 20,000 வரை வேலையாள்கள் அமர்த்தப்பட்டிருந்தனர். அந்த அரண்மனை 'இந்துத் தூண் களின் வரிசைகளால் தாங்கப்பட்ட' இடமகன்ற கூரையுடன் இந்திய முறைக்குத் தெளிவான ஓர் எடுத்துக்காட்டாய் உள்ளது. பேரரசரின் காலத்திலேயே திட்டமிடப்பட்டு ஆனால், கி.பி. 1605



டில்லியில் உள்ள ஹுமாயூனின் கல்லறை

முதல் 1613 வரையிலுள்ள காலத்தில் கட்டப்பட்ட சிகந்தராவி லுள்ள அக்பர் கல்லறையின் மாபெரும் அமைப்பு ஐந்துமொட்டை மாடிகளை உடையது. அவை இறங்குவரிசையில் அளவு குறைந்து கொண்டு வந்துள்ளன. வெள்ளைச் சலவைக்கல்லால் கட்டப்பட்ட மேல் மாடியில் வளைவு உடைய கூரை உள்ளது. சவப்பெட்டி புதைக்கப்பட்ட இடத்தின்மீது மத்தியில் ஒரு தூபி கட்டவேண்டு மென்று முதலில் கருதப்பட்டதாகத் தெரிகிறது. இந்தக் கட்டட அமைப்பில் உள்ள இந்திய அமைப்பு முறை இந்தியாவின் புத்த விஹாரங்களாலும், கொச்சின் சீனாவில் காணப்படும் கெமர் (Khmer) கட்டடக்கலையினாலும் தூண்டப்பட்டது எனலாம்.

ஜஹாங்கீர் ஆட்சிக்காலத்தில் எழுப்பப்பட்ட கட்டடங்களின் எண்ணிக்கை, அவருடைய தந்தையின் கட்டடங்களுடன் ஒப்



பதேபூர் சிக்ரியில் ஜாத்பாயின் மாளிகை



சிகந்தராவில் அக்பரின் கல்லறை

பிட்டுப் பார்க்கும்போது மிகு குறைவாகவே உள்ளது. ஆனால், அவர் காலத்து இரண்டு கட்டட அமைப்புகள் மிகச் சிறந்த ஆர்வம்



உதயப்பூரில் உள்ள ஜக்மந்திர், கோல் மண்டல் அல்லது மஹால்

எழுப்புவனவாயும், தகுதி பெற்றனவாயும் உள்ளன. அவற்றுள் ஒன்று அக்பரின் கல்லறை. இதன் உயர் சிறப்பியல்புகளைப்பற்றி



திவானி காஸ்-டில்லி

நாம் ஏற்கெனவே விவரித்துள்ளோம். மற்றது அக்பரின் மகளும், ஜஹாங்கீரின் காதலியுமான நூர்ஜஹானால் ஆக்ராவில் கட்டப்பட்ட இதிமாத் உத்தௌலாவின் கல்லறையாகும். இது முழுதும் வெள்ளைச் சலவைக்கல்லால் கட்டப்பட்டு, அரை-விலையுயர்ந்த கற்களால் இழைக்கப்பட்ட அலங்கார வேலைப்பாட்டை உடையது. இவ் வகையான கட்டடத்திற்கு எடுத்துக்காட்டாக உதயப்பூரில் முன்பே கட்டப்பட்ட கோல்மண்டல் கோயிலைக் காட்டலாம்.



திவானி-ஆம்-டில்லி

(கி.பி. 1600-லிருந்து.) அதனால் அது ஒரு ராஜபுத்திர பாணியாகும் அல்லது பழைய இந்தியப் பாணியாகும்.

ஷாஜஹான் எண்ணிலாத கட்டடங்களைக் கட்டினார். அவரால் கட்டப்பட்ட பல கட்டடங்கள், அரண்மனைகள், கோட்டைகள், தோட்டங்கள், மசூதிகள் முதலியவை ஆக்ரா, டில்லி, லாஹூர், காபூல், காஷ்மீர், காந்தஹார், ஆஜ்மீர், அஹமதாபாத், முக்லீஸ் பூர் போன்ற பல இடங்களில் காணப்படுகின்றன. இந்தக் கட்டடங்களைக் கட்டுவதற்கான செலவைப்பற்றிச் சரியான மதிப்பீடு ஒன்றைச் செய்வது முடியாது போயினும், பல நூறுகோடி ரூபாய்கள் செலவாயிருக்கும் என்பதில் சிறிதும் ஐயமில்லை. அக்பரின் கட்டட அமைப்புகளுடன் ஷாஜஹானின் கட்டட அமைப்புகளை ஒப்பிடும்போது பின்னவை கம்பீரத்திலும் தனிச்சிறப்பிலும் தாழ்ந்தவையாக, ஆனால், ஆடம்பர வண்ணப் பகட்டிலும்

வளமான திறமையான அலங்கரிப்பிலும் மிக உயர்ந்தவையாய் உள்ளன. அதனால் ஷாஜஹானின் கட்டடக்கலை 'பெரிய அளவில் அமைந்த அலங்கார ஆபரணமாக' ஆகிவிட்டது. இது குறிப்பாகத் திவானி-ஆம், திவானிகாஸ் போன்ற டில்லிக் கட்டடங்களில் விளக்கமாகத் தெரிகிறது. பின்னது விலைமிக்க வெள்ளிக்கூரையும், சலவைக்கல், தங்கம், விலையுயர்ந்த மணிக்கற்கள் இவற்றால் அலங்கரிக்கப்பட்ட கலவை அலங்காரமும், அதன்மேல் எழுதப்பட்ட கல்வெட்டின் பொருளுக்கு ஏற்றவாறு உள்ளன:

'மண்ணுலகில் சுவர்க்கத்தைக் காண முடியுமானால்
அது இதுதான்; அது இதுதான்; அது இதுதான்.'

தூய்மையும் செயல் நுண்மையும் உடைய உண்மைக் கலைக் கண்ணோட்டத்தில் பார்த்தால், ஆக்ராவிலுள்ள அழகு மிக்க மோதி மஸ்ஜித் அல்லது முத்து மசூதி ஓர் உயர்ந்த இடத்தைப் பெற்றி



முத்து மசூதி-ஆக்ரா

ருக்கிறது. அவருடைய ஆட்சியின் மற்றொரு குறிப்பிடத்தக்க கட்டடம் ஆக்ராவிலுள்ள ஜாமி மஸ்ஜித் ஆகும். அதற்கு மஸ்ஜித்-இ-ஜஹான் நாமா என்ற வேறொரு பெயரும் உண்டு. ஐம்பது இலட்சம் ரூபாய் செலவில் தம்முடைய காதல் மனைவியான மும்தாஜ் மஹாலின் கல்லறைமீது ஷாஜஹானால் கட்டப்பட்ட அற்புதமான கல்லறைத் தூபி அதன் அழகுக்காகவும் கம்பீரத்துக்காகவும்

உலகத்தின் அற்புதங்களுள் ஒன்ருகக் கருதப்படுவது மிகவும் பொருத்தமுடையதாகும்.

தாஜ்மஹாலைத் திட்டமிட்டுக் கட்டிய கட்டடக் கலைஞர்கள் எவர் என்று கூறும்போது ஸ்மித் என்பவர், 'அது ஐரோப்பிய, ஆசிய மேதைமைகளின் இணைப்பினுல் விளைந்த விளைவு' என்று கூறுவதை மொய்ன்-உதீன் அஹ்மது மறுத்துக் கூறி, சிறந்த இக் காதல் நினைவுச் சின்னத்தைக் கட்டுவதிலும் திட்டமிட்டுத் தரு வதிலும் இத்தாலிய அல்லது ஃபிரெஞ்சுக் கட்டடக் கலைஞர்கள் பங்கெடுத்துக்கொண்டனர் என்று பலரும் கருதிவந்த கருத்தை ஏற்றுக்கொள்ள முடியாது என்று நேர்மையான பல காரணங் களைச் சொல்கிருர். அதன் அமைப்புத் திட்டத்தை உருவாக்கிய பெருமை உஸ்நாத் ஈசா என்பவருக்குரியது என்று கூறுகிருர். தாஜ்மஹாலைப் பற்றிப் படிக்கும் இந்தியக்கலை மாணவர்கள் சில கருத்துகளைக் குறித்துக்கொள்ள மறந்துவிடக் கூடாது. முதலா வதாக, அதன் திட்டமும் முக்கிய சிறப்பியல்புகளும் முழுதும் புது மையானவை அல்ல; ஏனெனில், 'ஷெர்ஷாவின் கல்லறை, ஹுமா யூனின் கல்லறை, பீஜப்பூர் நினைவுச் சின்னங்கள் இவற்றிலிருந்து அதன் பாணி வெளிப்படுவதை நன்கு அறியலாம்.' 'சலவைக் கல்லிலும் மற்றக் கற்களிலும் இழைக்கப்பட்ட சரிகை வேலையும், சலவைக் கல்லின்மீது விலையுயர்ந்த மணிக்கற்கள் பதிக்கும் வேலையும் வட இந்தியாவிலும், ராஜபுத்திரக் கலையிலும் ஏற்கெனவே இருந்துவந்தன. இரண்டாவதாக, வெள்ளைச் சலவைக் கல்லையும், இந்தியப்பண்பு மிக்க சில அலங்காரங்களையும் அளவுக்கு மீறிப் பயன்படுத்துவதனுல்' ஷாஜஹானின் கட்டடங்களில் பாரசீகச் செல்வாக்கு ஆதிக்கம் பெற்றிருந்தது என்று வழக்கமாகக் கூறு வதை வலிந்து வற்புறுத்திக் கூறுவதற்கு எந்தவிதமான காரணமும் இல்லையென்று நினைக்கத் தோன்றுகிறது. மூன்ருவதாக முகலாயர் காலத்தில் இந்தியா மேற்கு உலகத்துடன், குறிப்பாக மத்தியத் தரைப் பிரதேசத்துடன் உறவு கொண்டிருந்ததைக் கவனிக்கும் போது பதினுறு, பதினேழாம் நூற்ருண்டுகளில், மேற்கு உலகத்துக் கலையின் சில கூறுகள் இந்தியக் கலையின்மீது செல்வாக்கைச் செலுத்தின என்று கருதுவதும், அக் கால இந்தியாவின் வெவ்வேறு பாகங்களில் சில ஐரோப்பியக் கட்டடக் கலைஞர்கள் இருந்தனர் என்று கருதுவதும் வரலாற்று முறைக்கு முரணுகாது.

தாஜ்மஹாலைப் போல அவ்வளவு புகழ்பெற்றதாயில்லாவிட் டாலும், லாகூரிலுள்ள ஷாதராவில் முன்பு ஷாஜஹானுல் கட்டப் பட்ட ஜஹாங்கீரின் கல்லறையும் அழகான கலைக்கு ஒரு மாதிரியாக இருந்தது. அவருடைய ஆட்சிக் காலத்தில் மற்ருெரு புகழ்பெற்ற

கலைப்பொருள் மயில் சிம்மாசனமாகும். 'அச் சிம்மாசனம் தங்கக் கால்களையுடைய ஒரு கட்டிலின் வடிவைப் பெற்றிருந்தது. எனுமலால் செய்யப்பட்ட விரிப்பு பன்னிரண்டு மரகதத் தூண்களால் தாங்கப்பட்டிருந்தது. அத் தூண்கள் ஒவ்வொன்றையும் மணிக் கற்கள் பதிக்கப்பட்ட இரு மயில்கள் தாங்கிக்கொண்டிருந்தன. ஒவ்வொரு ஜதை மயிலின் நடுவிலும் வைரம், மரகதம், நீலம், முத்து இவற்றால் முழுவதும் நிரம்பிய ஒவ்வொரு மரம் இருந்தது.' 1789-ல் நாதிர்ஷா அச் சிம்மாசனத்தைப் பாரசீகத்திற்கு எடுத்துச் சென்றார். ஆனால், துரதிர்ஷ்டவசமாக அது உலகின் எப் பாகத்திலும் காணமுடியாததாகிவிட்டது.

ஔரங்கசீப்பின் ஆட்சியில் கட்டடக் கலையின் பாணி சீர்குலையத் தொடங்கியது. கட்டடக் கலைக்கு வெளிப்படையான எதிரியாகக் காட்டிக்கொள்ளாவிட்டாலும் மதத்தூய்மைப் பற்றுக் கொண்டிருந்த அப் பேரரசர் அக் கலைக்கு ஊக்கம் கொடுக்கவோ, அவருடைய முன்னோர்களைப் போலக் கட்டடங்கள் எழுப்பவோ இல்லை. அவருடைய ஆட்சியில் எழுந்த சில கட்டட அமைப்புகளும் பழைய பாணிகளின் பலவீனமான பிரதியாகவே இருந்தன. அவற்றுள் மிகு முக்கியமான லாகூர் மசூதி கி.பி. 1674-ல் கட்டி முடிக்கப்பட்டது. விரைவில் இந்தியக் கலைஞர்களின் படைக்கும் கலைத்திறன் பெரும்பாலும் மறையலாயிற்று. பதினெட்டாம் நூற்றாண்டிலும், பத்தொன்பதாம் நூற்றாண்டின் முற்பகுதியிலும் அவுத்திலும், ஹைதராபாத்திலும் அம் மேதைமையின் சிறு பகுதியே உயிர் பெற்றிருந்தது.

### ஆ. ஓவியம்

கட்டடக் கலையைப் போலவே, முகலாயர் காலத்தில் ஓவியக் கலையும் இந்தியக் கூறுகளும் அயற்கூறுகளும் இன்பமாகக் கலந்து விளங்கிய கலையாகக் காட்சியளித்தது. இந்தியப் பௌத்த, ஈரானியப் பாக்டிரிய, மங்கோலியச் செல்வாக்குகளின் கலவையாயிருந்த சீனக்கலையின் இடத்துக்கேற்பத் திருத்தப்பட்ட வடிவம் மங்கோலிய வெற்றியாளர்களால் பதின்மூன்றாம் நூற்றாண்டில் பாரசீகத்தில் புகுத்தப்பட்டது. அவர்களுக்குப் பின்வந்த தைமூரித்துகள் காலத்திலும் அக் கலை அங்கே தொடர்ந்திருந்தது. தைமூரித்துகள் மீண்டும் அதை இந்தியாவுக்குக் கொண்டுவந்தனர். இந்த இந்திய-சீன-பாரசீகக் கலையின் சிறப்பியல்புகள் அக் கால இந்திய ஓவியக்கலைப் பள்ளிகளின் பொருள்களுடன் அக்பர் காலத்தில் இணைக்கப்பட்டு, ஒன்றாய்ச் சேர்க்கப்பட்டுக் கிரகிக்கப்பட்டன. அந்த இந்திய ஓவியக்கலை குஜராத், ராஜபுதனம், விஜயநகர், பீஜப்பூர், அகமத்நகர் இன்னும் வேறு

சில இடங்களில் நாட்டின் பல பாகங்களிலும் முற்கால இந்து, பௌத்த, சமணப் பாணிகளில் சிறப்புற்று வளர்ந்துகொண்டிருந்தது. இந்த இணைப்புக்குப் பின்பு மங்கோலியக் கூறுகள் படிப்படியாகக் குறைந்துவந்தன. இந்தியக் கூறுகள் மேலோங்கின. இந்தப் புதிய அமைப்பு காந்தான்-இ-தைமூரியா, பாதுஷா நாமா ஆகிய நூல்களின் பிரதிகளில் உள்ள ஓவியங்களில் தெளிவாகக் காணப்படும். இந் நூல்கள் இரண்டும் பாட்னுவில் உள்ள குதாபக்ஷ் நூலகத்தில் பாதுகாத்து வைக்கப்பட்டுள்ளன.

'இயற்கையின் அழகுகளை எப்போதும் கூர்மையாகக் கவனித்து வந்த' பாபர் தம்முடைய தைமூரிய முன்னோர்களைப் போலத் தம்முடைய குறைந்த வருவாய் வளத்துக்கு ஏற்றவாறு ஓவியக் கலையை ஆதரித்தார். அவருடைய குறிப்பேடுகளின் பாரசீக மொழிபெயர்ப்பைக் கொண்ட ஆள்வார் கையெழுத்துப் பிரதிகளில் காணப்படும் சித்திரங்கள் அவர் காலத்தில் வளர்ந்திருந்த பாணியைக் காட்டுகின்றன. ஹுமாயூன் மற்றத் தைமூரித்துகளைப் போலக் கலையில் சுவையார்வ முடையவராய் இருந்தார். நாடு துறந்து பாரசீகத்தில் வாழும்போது சீன-பாரசீக இசை, கவிதை, ஓவியம் முதலியவற்றைப் படிப்பதில் தம் நேரத்தைக் கழித்தார். ஷா தஹ்மாஸ்ப்பின் தாராளமான ஆதரவின்கீழ்ச் சிறப்புற்று விளங்கிய பாரசீகத்தின் தலைசிறந்த கலைஞர்களோடு தொடர்பு கொண்டார். அவர்களுள் இருவர் 'கீழைநாட்டு ராபேயல்' என்று வழங்கப்படும் புகழ்பெற்றவராவர். ஹீராத் நாட்டைச் சேர்ந்த பிஹ்ஜாத்தின் (Bihzad) மாணவரான மீர்சய்யிது ஆலி, காஜா அப்துஸ் சமத் என்ற இருவரையும் கி.பி. 1550-ல் காபூலில் தம்முடைய அரசவைக்கு வருமாறு அவர் அழைத்தார். ஹுமாயூனும் அவருடைய புதல்வர் அக்பரும் அவர்களிடமிருந்து ஓவியக் கலை பற்றிய பாடங்களைக் கற்றுக்கொண்டனர்; தாஸ்தானி-அமீர் ஹம்ஸாவுக்கு வேண்டிய விளக்கப் படங்களைத் தயார் செய்யும் வேலையில் அவர்களை ஈடுபடுத்தினர். இந்த இரண்டு அயல்நாட்டுக் கலைஞர்கள், அவர்களுடைய இந்தியத் துணைவர்களுடன் சேர்ந்து 'முகலாய ஓவியப் பள்ளியின் கருநிலையாக ஆயினர்.' அப் பள்ளி அக்பர் காலத்தில் மிகச் சிறப்படைந்ததாகக் காணுகிறோம். ஹுமாயூனின் அரசியல் மரபுக்கொடை ஆபத்தானதாய் இருந்தபோதிலும் இந்த ஓவியக்கொடை அக்பருக்கு மதிப்புயர்ந்த ஒரு கொடையாக இருந்தது.

கி.பி. 1550-க்கும், கி.பி. 1560-க்கும் இடையே உள்ள ஆண்டுகளில் சய்யிது ஆலியும், அப்துஸ் சமதும் அமீர் ஹம்ஸாவுக்காகத் தயாரித்த விளக்கப்படங்களில் இன்னும் பாரசீகச்

செல்வாக்கே மிகுதியாய் இருந்தது. ஆனால், 1562-ல் முகலாய அரசவைக்கு வைணவ இசையறிஞரான தான்சேன் வருவதை ஓவியமாக்கும் வேலை முற்றுப்பெற்ற பின், அந்தப் புகழ் பெற்ற ஓவியத்தில் இந்தியப்பாணியும், சீன-பாரசீகப் பாணிகளும் கலந்து விளங்குவதைக் காணலாம். கி.பி. 1569-லிருந்து 1585 வரை அக்பரின் புதிய தலைநகரான ஃபதேபூர் சிக்ரியைச் சுற்றியிருந்த சுவர்கள், இந்துப் பாரசீகப் பள்ளிகளைச் சேர்ந்த கலைஞர்களின் கூட்டு முயற்சியால் ஓவியக் கலையின் தலைசிறந்த கைவண்ணங் களால் அலங்கரிக்கப்பட்டு வந்தன. அந்த இரு வகைப் பள்ளி களும் புதிய கருத்துகளைக் கிரகித்துப் பயன்படுத்திக்கொள்ளத் தயாராயிருந்தன. இவ்வாறு புதிய கலைப்பள்ளி தோன்றி வளர வாய்ப்பு ஏற்பட்டது. அக்பரின் அரசவையில் பாரசீக அல்லது மற்ற அயல்நாட்டுக் கலைஞர்கள் எண்ணிக்கையில் மிகக் குறைவாய் இருந்தனர். அவர்களுள் மிகுபுகழ் பெற்றவர்கள் அப்துஸ் சமத், கால்முக் இனத்தைச் சேர்ந்த ஃபருக்பேக், குர் சாவ்குலி, ஜாம்ஷெட் என்போராவர். இந்துக் கலைஞர்கள் எண்ணிக்கையில் மிகுதியா யிருந்தனர். அக்பர் ஆட்சிக் காலத்துப் பதினேழு தலைசிறந்த கலைஞர்களுள் பதின்மூவர் இந்துக்களாயிருந்தனர். 'அபுல்ஃபாஸல் அவர்களுடைய கலைத் தரத்தைப்பற்றி ஒரு நூறுக்கு மேற்பட்ட ஓவியர்கள் அக் கலையில் வல்லுநர்கள் ஆய் விட்டனர். அக் கலையில் பூரணத்துவம் அடைந்துகொண்டிருப்பவர் அல்லது பூரணத்துவம் அமையும் வழியில் இருப்பவர்களின் எண்ணிக்கை மிகவும் பெரிதா யிருந்தது. சிறப்பாக இது இந்துக்களைப் பொறுத்தவரை உண்மை யாகும். பொருள்களைப்பற்றி நாம் கொண்டிருக்கும் கருத்து களைக் காட்டிலும் அவர்களுடைய படங்கள் சிறந்தவையாகக் காணப்படுகின்றன; உலகிலேயே அவர்களுக்கு இணையானவர்கள் இருக்க முடியாது' என்று கூறுகிறார். அவர்கள் கூட்டாகச் சேர்ந்து உழைத்தனர்; உருவப் படம் வரைதல், புத்தகத்திற்கு விளக்கப்படம் வரைதல், ஒளிதரும் விளக்கங்கள் வரைதல், விலங்குகளை வரைதல் இவற்றில் சிறந்தவர்களாய் விளங்கினர். அவர்களுள் தலைமையானவர்கள் பசவான், லால், கேசு, முகுந்த், ஹரிபான்ஸ், தஸ்வந்த் என்போராவர். கடைசியில் குறிப்பிடப் பட்டவர் காஹார் அல்லது பல்லக்குத் தூக்குவோரின் சாதியைச் சேர்ந்தவர். மற்றவர்கள் காயஸ்தா, சிதேரா சிலாவத், கத்ரி முதலிய சாதிகளைச் சேர்ந்தவர்கள். இவர்கள் எல்லோரும் நாட் டின் பல பாகங்களிலிருந்தும் வந்து சேர்ந்தவர்களாவர்.

அக்பர் தம் இனத்தைச் சேர்ந்த மற்றவர்களுடன் 'உலகின் அதிசயம், பெருமை இவற்றின் ஆழ்ந்த சுவையுணர்வைப்' பகிர்ந்துகொண்டவராய் எல்லா வகையிலும் முடிந்த அளவு

படம் வரையும் கலைக்கு ஊக்கம் கொடுத்தார். வாழும் உருவங்களை வரைந்து காட்டுவதைப்பற்றிய இஸ்லாமிய விதிகள் மாறுபட்டிருந்தபோதிலும் அதற்கு அவர் மதப் பூச்சுக் கொடுத்தார். 'ஓர் ஓவியர் கடவுளை அறியத் தனிப்பட்ட வழிகளைப் பெற்றிருக்கிறார் என்றே எனக்குத் தோன்றுகிறது. ஏனெனில், உயிருள்ள ஒரு பொருளை வரைந்து காட்ட முற்படும் ஓர் ஓவியர், அதன் உறுப்புகளை ஒவ்வொன்றாகச் சித்திரித்து விட்டுத் தம்முடைய வேலைக்குத் தனித்துவம் கொடுக்க முடியாத போது, அவருக்கு எல்லார்க்கும் உயிர் கொடுக்கும் கடவுளை நினைக்க வேண்டிய கட்டாயம் ஏற்படும். இவ்வாறு அவர் தம் முடைய கடவுளைப்பற்றிய அறிவை மிகுதிப்படுத்திக்கொள்வார்' என்று அக்பர் கூறியுள்ளார். இந்த வழியில் அவர் ஓவியக்கலையை எதிர்த்த வைதிக முஸ்லிம்களின் அதிருப்தியைப் போக்க முயன்றார். சட்டத்தின் ஒவ்வோர் எழுத்தின்படியும் நடக்கவேண்டும் என்ற வெறி பிடித்தவர்கள் ஓவியக்கலைக்கு எதிர்ப்பாயிருந்தனர்; ஆனால், அவருடைய கண்கள் இப்போது உண்மையைக் காணு கின்றன.

அக்பர் காலத்தில் வளர்ந்த கலைப்பள்ளி ஜஹாங்கீரின் காலத்தில் அவருடைய ஆர்வம் மிக்க ஆதரவுமூலம் செழித் தோங்கி வளரலாயிற்று. ஜஹாங்கீர் ஒரு சிறந்த கலாரசிகர். அவருடைய கலையுணர்வுச் சுவையைத் திருப்திப்படுத்தும் எந்தப் படங்களுக்கும் உயர்ந்த விலைகளைக் கொடுத்தார். கூட்டாக வரைந்த ஓர் ஓவியத்தில் இன்ன இன்ன ஓவியர்கள் இவ்விதப் பகுதிகளை வரைந்துள்ளனர் என்பதைக் கண்டுபிடிக்கும் கலைத் திறனாய்வாளராயும் அவர் இருந்தார். அவருடைய அரசவையின் புகழ் பெற்ற முஸ்லிம் கலைஞர்கள்: ஆகாரேஜா, ஹீராத்தைச் சேர்ந்த அவருடைய மகன் அபுல் ஹஸன், சாமர்க்கண்டிலிருந்து வந்த முகம்மது நாதிர், முகம்மது முராத் (இவர்கள் தாம் இந்தியா வுக்கு வந்த கடைசி அயல்நாட்டுக் கலைஞர்களாவர்), உஸ்தாத் மன்சூர் என்போராவர். அவர் காலத்து இந்து ஓவியர்களுள் பிஷன் தாஸ், மனோஹர், கோவர்தன் என்போர் மிகு முதன்மை வாய்ந்தவர்கள். சிறு ஓவியங்களின் உயர்ந்த கலைக்கூறுகளைப் பற்றிய அறிவினை ஓரளவு பெற்றிருந்த பேரரசர் அடிக்கடி இந்தி யாவிலும் வெளிநாடுகளிலும் மிகச் சிறந்த ஓவியப் பள்ளிகளின் மாதிரிகளை விலைக்கு வாங்கினார். அவருடைய பேரார்வமும் அவருடைய கலைஞர்களின் திறமையும் ஒன்றாய்ச் சேர்ந்து முகலாயச் சித்திரக்கலை பாரசீக ஆதிக்கத்தின் பாதுகாப்பிலிருந்து விடுதலை பெற்று, சிறப்பாக இந்தியப் பாணியில் வளரும் ஒரு கலை யாக மலர வாய்ப்பு ஏற்பட்டது.

பெர்சி பிரௌனின் கருத்துப்படி, ஜஹாங்கிருடன் உண்மையான முகலாயச் சித்திரக்கலையுணர்ச்சி சீர்குலைந்தது. ஷாஜஹான் ஓவியத்தில் அவருடைய தந்தையைப் போன்ற அதே பேரார்வம் கொண்டிருக்கவில்லை. அவருடைய சுவையார்வங்கள் கட்டடக்கலை, நகையலங்காரம் இவற்றின் பக்கமே இருந்தன. அவர் ஆட்சிக் காலத்தில் அரசவையிலிருந்த உருவப் படங்களும், தர்பார் படங்களும் செறிவான வண்ணங்களாலும், ஜஹாங்கீர் காலத்துக் கலையில் இருந்ததுபோன்று வண்ணங்களின் இணக்கமான சேர்க்கையிருந்ததைக் காட்டிலும், மிகுதியான அளவு பயன்படுத்தப்பட்ட தங்கத்தாலும் தனிச் சிறப்புடையனவாய் இருந்தன. அவர் அரசவை ஓவியர்களின் எண்ணிக்கையைக் குறைத்தார்; விரைவில் ஓவியக்கலையும் பேரரசின் ஆதரவை இழந்தது. பேரரசக் குடும்பத்தில் தாரா ஷுக்கோ மட்டும் கலையின் புரவலராய் இருந்தார். இவ் வுண்மையை இப்போது இந்தியா ஆபீசிலுள்ள அவருடைய படக்கோப்புப் புத்தகம் காட்டுகிறது. அவருடைய அகால மரணம் கலைக்கும் பேரரசுக்கும் ஒரு பெரும் பேரிடியாகப் போயிற்று. கலைஞர்கள் ராஜபுதனம், இமயமலை இராச்சியங்களில் போலப் பிரபுக்களிடம் வேலை தேடும் நிர்ப்பந்தத்துக்கு உள்ளாயினர்; கடைத்தெருக்களில் கலைக்கூடங்களை நிறுவித் தங்கள் வாழ்க்கைப் பிழைப்புக்காகப் பொதுமக்களுக்குத் தங்கள் படங்களை விற்க முற்பட்டனர். அவற்றை வாங்குவோர் மிகக் குறைந்த எண்ணிக்கையினராகவே இருந்தனர். கலைஞர்கள் சிறப்படையும் வாய்ப்பு எதுவும் இல்லை என்றும், அவர்கள் துன்பச் சூழ்நிலைகளில் குறைந்த வருவாய்க்கு வேலை செய்ய நேரிட்டது என்றும் பெர்னியர் குறிப்பிட்டுள்ளார்.

ஔரங்கசீப்பின் ஆட்சி ஓவியக்கலையின் தெளிவான வீழ்ச்சியைக் கண்ணுற்றது. ஏனெனில், அப் பேரரசர் ஓவியக்கலையைப் போற்றுவது தெய்விகச் சட்ட நெறிகளுக்கு முரணானது என்று கருதினர். அவருடைய சம்மதம் பெற்றும் பெறாமலும் அவருடைய உருவப் படங்கள் பல வெவ்வேறு சூழ்நிலைகளில் வரையப்பட்டன. அவருடைய கிளர்ச்சிப் புதல்வரான முகம்மது சுல்தான் சிறையிலிருக்கும்போது அவருடைய நிலையை அறிந்துகொள்வதற்காகத் தம் ஆணையின்படி வரையப்பட்ட உருவப்படங்களை அடிக்கடி பார்த்துவந்தார் என்று சொல்லப்படுகிறது. அவர் பீஜப்பூரிலிருந்த அசார் மஹாலின் ஓவியங்களை அழித்தார் என்றும் கூறப்படுகிறது. அவருடைய ஆணைகளின்படி சிகந்தராவிலிருந்த அக்பரின் கல்லறையிலிருந்த சித்திரங்கள் வெள்ளையடிக்கப்பட்டுவிட்டதாக மனுச்சி எழுதியுள்ளார். ஔரங்கசீப்பின் மரணத்துக்குப் பிறகு முகலாயப் பேரரசு சீர்குலையத் தொடங்கியதும், உயிர்வாழ்ந்த சில ஓவியர்கள்

தலைநகரிலிருந்து அவுத்து, ஹைதராபாத், மைசூர், வங்காளம் முதலிய இராச்சியங்களுக்குச் சென்று குடியேறினர். சிலர் லக்னோவுக்கும் பாட்னாவுக்கும் சென்றனர். இதனால், அவர்கள் செயல் முறையில் சுதந்திரமுடையவர்களாயினர். ஆனால், அதற்குப்பின் அவர்கள் பெற்ற ஆதரவும், செய்த வேலையும் மாபெரும் முகலாய அரசர்கள் காலத்திலிருந்தவற்றைக் காட்டிலும் மிகத் தாழ்வாக இருந்தன.

பதினெட்டாம் நூற்றாண்டில் பேரொளிக்கும் அலங்காரச் சிறப்புக்கும் பெயர் பெற்ற ஓர் ஓவியமுறை ராஜபுதனத்தில், குறிப்பாக ஜெய்ப்பூரில் வளர்ந்தோங்கியது. அந்த நூற்றாண்டின் பிற்பகுதியில் மிக உயர்ந்த அழகும், செப்பமும் வாய்ந்த படங்கள் காங்கிரா ஓவியப் பள்ளியினரால் வரையப்பட்டன. அப் பள்ளியிலிருந்து தேஹ்ரீ-கர்வால் பள்ளி முளைத்தது; பத்தொன்பதாம் நூற்றாண்டின் முற்பகுதியில் இது சீக்கிய உருவப்பட ஓவியக் கலைப் பள்ளியாக வளர்ந்தது. அண்மைக் காலத்தில் இந்தியாவிலும் ஐரோப்பாவிலும் உள்ள கலைஞர்கள் முகலாய, ராஜபுதன ஓவியங்களைக் கண்டின்புறத் தொடங்கியுள்ளனர். அந்த ஓவிய முறைக்குப் புத்துயிர் கொடுக்கவும் முயன்றுவருகின்றனர்.

இ. இசை

பீஜப்பூரின் ஆதில் ஷாஹி சுல்தான்கள், அக்பர் காலத்தில் வாழ்ந்த மாள்வத்தின் பாஸ் பஹதூர் போன்ற இந்திய ஆட்சியாளர்களும், ஔரங்கசீப்பைத் தவிர மற்ற எல்லா முகலாயப் பேரரசர்களும் இசைக் கலையை அனுபவித்து இன்புற்றனர். அக்பர், ஜஹாங்கீர், ஷாஜஹான் முதலியோர் பேரளவிற்கு அக் கலைக்கு ஆதரவு தந்தனர். அதனால், இசையின் தரத்தில் வளர்ச்சி ஏற்பட்டது. இசையும் நாடெங்கிலும் பயிலப்பட்டது. அபுல் ஃபாஸலின் கூற்றுப்படி முப்பத்தாறு பாடகர்கள் அக்பரின் அரசவையின் ஆதரவைப் பெற்றிருந்தனர். அவர்களுள் மிகு புகழ் பெற்றவர் தான்சேன். அவரைப்பற்றி அபுல் ஃபாஸல் 'அவரைப் போன்ற பாடகர் கடந்த ஆயிரம் ஆண்டுகளாக யாருமே இந்தியாவில் தோன்றவில்லை' என்று கூறுகிறார். அக்பரின் ஊழியத்தில் அமர்த்தப்பட்டிருந்த மாள்வத்தின் பாஸ்பஹாதூர் 'இசை, இந்திப்பாட்டு இவற்றின் விஞ்ஞானத்தில் அக் காலத்தில் மிகுந்த பாண்டித்தியம் பெற்றவர்' என்று வருணிக்கப்பட்டிருக்கிறார். ஔரங்கசீப் இசையை எதிர்த்ததிலும், அதற்குத் தடைவிதித்ததிலும் வியப்பொன்றும் இல்லை.

## அரச மரபுமுறை விளக்கம்

அடிமைகள் எனப்படுவோரின் மரபு, 1206—1290

I. குத்புதீன் ஏய்பெக், இறப்பு 1210
(முயிஸ¬தீன் முஹம்மது கோரியின் அடிமை)




டில்லியின் கில்ஜி சுல்தானியர்கள், 1290–1320
குவைம்கான் (குன்துஸின் தூலக்கான்)
மாளவத்தின் கில்ஜிகள்
I. ஜலாலுதீன், ஃபெரோஸ்ஷா
இறப்பு-ஜூலை 21, 1296
மசூத்
(ஹிஹாபுதீன்)
II. ருக்நுதீன், இப்ராஹீம்
அரியணையிலிருந்து விலக்கப்பட்டார்.
நவம்பர், 1296
III. அலாவுதீன் சிக்கந்தர்
சானி, முஹம்மது ஷா
இறப்பு-ஜனவரி, 1316
இளவரசர்
கிஸர்கான்
IV. ஹிஹாபுதீன் உமர்
இறப்பு-ஏப்ரல், 1316
V. குத்புதீன் முபாரக்
இறப்பு ஏறக்குறைய ஏப்ரல்-1320
VI. நாஸிருதீன் குஸ்ராவ்
(உரிமையின்றி அரியணையைக்
கைப்பற்றியவன்)-இறப்பு
ஏ. கு. செப்டம்பர், 1320

## துக்ளக் மரபு, 1320—1413

I. பால்பனின் துருக்கிய அடிமை கியாஸுதீன (காஸிமாலிக்) துக்ளக் ஷா I
இறப்பு—பிப்ரவரி, 1325

II. முஹம்மது, ஜானு (son of I)
இறப்பு-மார்ச்சு 20, 1351

ரஜப் = பட்டி இளவரசி (brother of I)
சிபாஹ் சாலார்

III. ஃபெரோஸ் ஷா—மரணம் (son of ரஜப்)
செப்டம்பர் 20, 1388

Sons of III:

- பாத்கான்
- ஸபர்கான்
- VI. நாஸிருதீன், முகம்மது ஷா
இறப்பு-ஜனவரி 20, 1394

V. அபூபகர் அரியணையிலிருந்து விலக்கப்பட்டார்-டிசம்பர், 1390 (son of ஸபர்கான்)

Sons of பாத்கான்:

- IV. கியாஸுதீன் துக்ளக் (II) அரியணையிலிருந்து விலக்கப்பட்டுக் கொல்லப்பட்டார்-1389
- VIII. நுஸ்ரத் ஷா எதிர்க்கப்பட்ட மரபுத் தொடர்பு அரியணையில் அமர்த்தப்பட்டது. ஜனவரி, 1395
இறப்பு-1398 அல்லது 1399

Sons of VI:

- VII. அலாவுதீன் சிக்கந்தர் (ஹுமாயூன்கான்)
மார்ச்சு 8, 1394
- IX. மஹமூத் ஷா
பிப்ரவரி-1413

## டில்லியின் சையது அரசர்கள், 1414—1451

I. கிஸர்கான்
மே 28, 1414; இறப்பு: மே 20, 1421

- II. மொய்ஸுத்தீன் முபாரக்-கொல்லப்பட்டார், 1434
- ஃபரித்கான்
  - III. முஹம்மது ஷா, இறப்பு: 1445
    - IV. அலாவுதீன் ஆலம் ஷா, இறப்பு: 1453 (பதவியினுக்கு அகற்றப்பட்டார், 1451)

## டில்லியின் லோடி அரசமரபு, 1451—1526

I. புஹ்லூல் லோடி இறப்பு: ஜூலை, 1489

- பார்பக் ஷா (ஜான்பூர்)
- II. நிஸாம்கான், சிக்கந்தர் லோடி, இறப்பு: நவம்பர் 21, 1517
  - III. இப்ராஹீம் லோடி, இறப்பு: ஏப்ரல் 21, 1526
- ஆலம்

## வங்காளத்தின் அரசர்கள்

### (1) கிழக்கு வங்காளம்

| | |
|---|---|
| ஃபக்ருதீன் முபாரக் ஷா | 1336 அல்லது 1338 |
| இக்தியாருதீன் காஸி ஷா | 1346—1352 |

### (2) மேற்கு வங்காளமும் வங்காளம் முழுமையும்

| | |
|---|---|
| அலாவுதீன் அலி ஷா | 1339 |
| ஹாஜி ஷம்ஸுதீன் இலியாஸ் ஷா, பங்காரா | 1345 |
| ஸிகந்தர் ஷா | 1357 |
| கியாஸுதீன் ஆஸம் ஷா | 1393 |
| சைபுதீன் ஹம்ஸா ஷா | 1410 |
| ஷிகாப் உதீன் பாயஸீத் | 1412 |
| பதூரியாவின் கணேஷ் (கான்ஸ் நாராயண்) | 1414 |
| ஜாது, வழங்கப்படும் பெயர் ஜலாலுதீன் முஹம்மது ஷா | 1414 |
| தானுஜா-மர்தனு | 1417 |
| மஹேந்திரா | 1418 |
| ஷம்ஸுதீன் அகமத் ஷா | 1431 |
| நாஸிருதீன் முஹம்மது ஷா | 1442 |
| ருக்நுதீன் பார்பக் ஷா | 1460 |
| ஷம்ஸுதீன் யூசுஃப் ஷா | 1474 |
| ஸிகந்தர் ஷா II | 1481 |
| ஜலாலுதீன் ஃபத்ஷா | 1481 |
| அலியான பார்பக், சுல்தான் ஷஹ்ஸாதா | 1486 |
| மாலிக் இந்தில், ஃபெரோஸ் ஷா | 1486 |
| நாஸிருதீன் மஹ்மூத் ஷா | 1489 |
| சீதீ பத்ர், ஷம்ஸுதீன் முஸப்பர் ஷா | 1490 |
| சையித் அலாவுதீன் ஹுஸேன் ஷா | 1493 |
| நாஸிருதீன் நுஸரத் ஷா | 1518 |
| அலாவுதீன் ஃபெரோஸ் ஷா | 1533 |
| கியாஸுதீன் மஹ்மூத் ஷா | 1533 |
| ஹுமாயூன், டில்லிப் பேரரசர் | 1538 |
| ஷெர்ஷா சூர் | 1539 |
| கிஸர் கான் | 1540 |
| முஹம்மது கான்சூர் | 1545 |
| கிஸர்கான், பஹாதூர் ஷா | 1555 |
| கியாஸுதீன் ஜலால் ஷா | 1561 |
| முந்தினவரின் புதல்வர் | 1564 |
| தாஜ்கான் கரரானி | 1564 |
| சுலைமான் கரரானி | 1572 |
| பாயஸீத் கான் கரரானி | 1572 |
| தாவுத் கான் கரரானி | 1572-1576 |

## இலியாசின் மரபு

ஷாஜி ஷம்ஸுத்தீன் இலியாஸ்

- சிக்கந்தர் ஷா
  - கியாஸுத்தீன் ஆஸம் ஷா
    - ஸைபுதீன் ஹம்ஸா
      - ஷம்ஸுத்தீன்-II
      - ஷஹாபுதீன் பாயஸீத்
        - ஃபெரோஸ்
- நாஸிருதீன் மஹமூத் ஷா-I
  - ருக்நுதீன் பார்பக் ஷா
    - ஷம்ஸுத்தீன் யூசுப்ஷா
      - :
      - சிக்கந்தர் ஷா-II
  - ஜலாலுதீன் ஃபத்ஷா
    - :
    - நாஸிருதீன் மஹ்மூத்-II

## வங்காளத்தின் சையது அரசர்கள்




## கரானி மரபு



**மேவார் ராணுக்கள்**(ஹரி சிம்ஹாவிலிருந்து)



## மேவார் ராணுக்கள் (தொடர்ச்சி)




விஜயநகர யாதவர்கள்
சங்கமா I
ஹரிஹரா I
கம்பனு
புக்கா I
மாரப்பா
முத்தப்பா
மகள் = ? மூன்றுவது பல்லாளாவின் உடன் பிறந்தாள் மகன்
சங்கமா II
மல்லாதேவி = ஹரிஹரா II
குமாரகம்பன
வீர விருப்பனு
பாஸ்கரா
மல்லிநாதா
ஜம்மனு
புக்கா II
விருபாக்ஷா
தேவராய I
வீரவிஜய
? மகள் = ஃபெரோஸ் பஹ்மினி
தேவராய II
பிரதாப் தேவராய I
மல்லிகார்ஜுனு (பிரௌதா இம்மாதி தேவராய ? பினுராவ்)
விருபாக்ஷா II
பிரௌடதேவா

## விஜயநகரத் துளுவ அரவீடு முதலிய அரசர்கள்





தக்கணத்தின் பாமினி அரசர்கள்
(1) அலாவுதீன் பாமின்ஷா
(2) முஹம்மது I
(4) தாவூத்
அஹமத்கான்
மஹமூத்கான்
(3) முஜாஹித்
ஃபத்கான்
முஹம்மது சன்ஜார்
(8) ஃபெரோஸ்
(9) அஹமது
(5) மஹமது II
ஹஸன்
முபாரக்
(10) அலாவுதீன்
அகமது
தாவூத்
மஹ்மூத்
முகமது
மகள் = (11) ஹுமாயூன், ஸாலிம்
ஹஸன்கான்
யாஹ்யாகான்
மகள் இருமணம் ஃபெரோஸ்
மகள் இருமணம் அகமது
(6) கியாஸுதீன்
ஷம்ஸுதீன்
(12) நிஸாம்
(13) முகம்மது III
ஜம்ஷித் (அஸ்லது அகமது)
(14) மஹமது
(15) அகமது
(16) அலாவுதீன்
(17) வலியுல்லா
(18) கலீமுல்லா


சூர் அரசர்கள், 1540—1555
இப்ராஹிம்கான்
ஹஸன்கான்
காஸிகர்ன்
(Ghazi Khan)
(பெயர் தெரியவில்லை)
I ஃபரித்கான் அப்போது ஷேர் கான் (ஷேர்ஷா) கொலையுண்டான் மே, 22, 1545
நிஸாம்கான்
சுலைமான் அகமத் இன்னும் பலர்
IV. இப்ராஹிம்கான், இப்ராஹிம் ஷா, ஆதிலீயின் சகோதரியை மணம் செய்து கொண்டார்; மேல் இந்தியாவிலிருந்து ஓட்டம் பிடித்தார்; ஒரிஸ்ஸாவில் ஜுலை 1567ஆம் ஆண்டுக்கும் ஜுலை 1568ஆம் ஆண்டுக்கும் இடையில் கொலையுண்டார்.
V. அகமத்கான் சிகந்தர் ஷா ஆதிலீயின் சகோதரியை மணம் செய்துகொண்டார்; மலைகளில் ஓய்வு எடுத்துக் கொண்டிருந்தார்; 1557-ல் அக்பரால் விரட்டியடிக்கப்பட்டார்; வங்காளத்துக்கு ஓடி 1558-1559 ஆம் ஆண்டில் இறந்தார்.
I இஸ்லாம் (சலீம்) ஷா = மகள் நவம்பர், 1554-ல் இறந்தார்.
ஃபெரோஸ் ஷா நவம்பர், 1554-ல் கொலையுண்டார்.
III. முபாரிஸ்கான் முஹம்மது ஆதில்ஷா (ஆதிலீ அல்லது அவுதி) மாங்கீரில் 1556-ல் கொல்லப்பட்டார்.
மகள் நான்காம் இப்ராஹீமுக்குத் திருமணம் செய்து கொடுக்கப்பட்டவள்.
மகள் ஐந்தாம் சிகந்தருக்குத் திருமணம் செய்து கொடுக்கப்பட்டவள்.

## பேஷ்வாக்கள்


விஸ்வநாத்
I. பாலாஜி விஸ்வநாத் (1713)
II. பாஜிராவ் I (1720)
சிம்ஞஜி ஆப்பா
III. பாலாஜி பாஜிராவ் (1740)
விஷ்வாஸ்ராவ்
IV. மாதவராவ் பள்ளாள் (1761)
V. நாராயணராவ் (1772)
VI. ரகுநாத ராவ் (ரகோபா) (1773)
VII. மாதவராவ் நாராயண் (1774)
அம்ரித்ராவ் (சுவீகார மெடுக்கப் பட்டவர்)
IX. பாஜிராவ் II (1796-1818)
VIII. சிம்ஞஜி ஆப்பா (1796)
விநாயகராவ்
நாஞசாகிபு (சுவீகாரம் எடுக்கப்பட்டவர்)

## தைமூரித் மரபு—முதல் ஆறு அரசர்கள்

### பர்லாஸ் துருக்கியர் எனப்படுவோர் 'சகாதைகுர்கானி' அல்லது முகலாயப் பேரரசர்கள்

I. ஹிருதீன் பாபர்
இறப்பு—1530

- II. முகம்மது ஹுமாயூன் — இறப்பு-1556
  - III. ஜலாலுதீன் அக்பர் — இறப்பு-1605
    - IV. நூருதீன் முகம்மது, ஜஹாங்கிர் (சலீம்) — இறப்பு- 1627
      - குஸ்ரவ்
      - பார்வேஸ்
      - V. குர்ரம் ஷிஹாபுதீன் முகம்மது, ஷாஜஹான், 1658-ல் அரியணையிலிருந்து அகற்றப்பட்டார் 1666-ல் இறந்தார்
        - தாரா ஷுக்கோ
        - ஷுஜா
        - VI. முஹியுதீன் முஹம்மது அவுரங்கசீப்பு ஆலம்கீர் — இறப்பு-1707
        - முராத்
      - ஷஹ்ரியார்
    - முராத்
    - டானியால்
  - மீர்ஸா ஹகீம்
- காம்ரான்
- ஹிந்தால்
- அஸ்கரீ

## பின்வந்த தைமூரியத்துகள்

VI. முஹியுதீன் முகம்மது அவுரங்கசீப்: ஆலம் கீர் I, இறப்பு - 1707

- முஹம்மது சுல்தான் இறப்பு-1676.
- VII. மு' ஆஸ்ஸம் ஷா ஆலம் I பகதூர் ஷா I (அரியணையேறியது 1707 இறப்பு-1712)
  - VIII. முய்ஸுத்தீன் ஜஹந்தர்ஷா 1713-ல் கொல்லப் பட்டார்.
    - XIV. (அ) அஸிஸுத்தீன் ஆலம் கீர் II (அரியணை ஏயறிது 1754. 1759-ல் கொல்லப்பட்டார்.)
      - XV. (அ) மீர்ஸா அப்துல் அலிகோஹர், ஷாஆலம் II (அரியணையேறியது 1759. குருடாக்கப்பட்டது 1788. இறப்பு-1806)
  - அஸிமுஸ் ஷான்
    - XI. முஹம்மது ஃபர்ருக்ஷியார் (1713-ல் அரியணையேறினர். 1719-ல் கொல்லப்பட்டார்.)
  - ராபியுல் கதர், ரவியுஸ் ஷான்
  - குஜிஸ்டா அக்தர், ஜஹான் ஷா (போரில் கொல்லப்பட்டார்.)
    - XII. (அ) முகம்மது ஷா (1719-ல் அரியணையேறினர். 1748-ல் இறந்தார்.)
      - XIII. அஹமத்ஷா (1748-ல் அரியணை யேறினர். 1754-ல் அரியணையிலிருந்து நீக்கப்பட்டார்.)
        - XV. (ஆ) பீதார் பக்த் (1788)
- முஹம்மது ஆஸம் (ஜாஜௌ என்ற இடத்தில் கொல்லப்பட்டார் 1707.)
  - பீதார் பக்த் (ஜாஜௌ என்ற இடத்தில் கொலையுண்டார்)
- அக்பர் (பாரசீகத்தில் 1704 அல்லது 1706-ல் இறந்தார்.)
  - X. (ஆ) நெபுக்ஸியார் 1719
- காம்பக்ஷ் (1708-ல் ஹைதராபாத்துக்கு அருகில் கொலை யுண்டார்.)
  - முஹிஸ் ஸுன்னத்
    - XIV. (ஆ) ஷாஜஹான் III


XVI. அக்பர் ஷா II
(அரியணேயேறியது 1806.
இறப்பு, 1837.)
XVII. பஹதூர் ஷா I
(அரியணேயேறியது 1837.
சிப்பாய்க் கலகத்தின்போது
1858-ல் அரியணேயிலிருந்து
அகற்றப்பட்டார்.
இறப்பு-1862.)
XII. (ஆ) முஹம்மது
இப்ராஹீம் (1720)
XI. ரவியுத் தௌலா
(ஷாஜஹான் II
அரியணேயேறியதும்
இறப்பு-1719.)
X. (அ) ரபியுத்தரஜாத்
(அரியணேயேறியதும்
இறந்ததும் 1719.)



பான்ஸ்லேக்கள் (சத்ரபதி)
மலோஜி (மேவார் அரச குலத்திலிருந்து வந்ததாகஉரிமை கொள்கிருர்.)
தேவகிரி யாதவர்கள்
லுக்ஜி ஜாதவ்
ஜீஜாபாய் =ஷாஜீ = துகாபாய்
ஏகோஜி (வியாங்கோஜி).
(தஞ்சாவூர்)
ஷாம்பூஜி
(கனககிரியில் இறந்தார்)
ஸாய்பாய் =
ஏசுபாய் =
ஸாஹு I (சிவாஜி II)
ராம் ராஜா
ஸாஹு II
(சுவீகார மெடுக்கப்பட்டவர்)
சிவாஜி I = சொய்ராபாய்
ஷாம்பூஜி I
தாராபாய் =
ராஜாராம் = ராஜஸ்பாய்
சிவாஜி III
ஷாம்பூஜி II (கோல்ஹாபூர்)
ராம் ராஜா
ஸாஹுவால்
சுவீகாரமெடுக்கப்பட்டவர்
சிவாஜி IV

# கலைச்சொற்கள்

## A

Abwabs — வரிகள்
Accession — அரியணை ஏறுதல்
Accounts — குறிப்புகள்
Administration — நிருவாகம்
Alliance — நேச உடன்படிக்கை
Archaeology — தொல் பொருளியல்
Architecture — கட்டடக்கலை
Ashtapradhan — எட்டு அமைச்சர்கள் கொண்ட மந்திரி சபை

## B

Bara Sona Masjid — பெரிய பொன் மசூதி
Baron — பெருமான்
Bureaucracy — பணித்துறை ஆட்சி

## C

Calligraphy — அழகிய கையெழுத்து
Camel Corpse — ஒட்டகப் படை
Causes belli — காரணம்
Chota Sona Masjid — சிறிய பொன் மசூதி
Chronicler — கால வரிசை வரலாறு எழுதுபவன்
Confederacy — நாடுகள் கூட்டு இணைப்பு
Contemporary — சம காலத்தவர்
Coup de main — திடீர்த் தாக்குதல்

## D

Descendant — பின் மரபினன்
Dictatorship — வல்லாட்சி
Din-i-Ilahi — தெய்விக மார்க்கம்
Dominion — ஆட்சி; ஆட்சிப் பகுதி
Dynasty — வமிசம்

## E

Ecclectic — பிறர் நற்பண்பு தொகுத்து மேற்கொள்பவர்
Epic — காப்பியம்
Epoch — திரும்பு கட்டம்
Exchequer — கருவூலம்

## F

Fatwa — இஸ்லாமிய மதப் பிரச்சினை களில் அளிக்கப்படும் தீர்ப்பு
Feudalism — பண்ணை முறை
Firman — அரசக் கட்டளை

## G

Generalissimo — படை முதல் தலைவர்
Geography — தட்பவெப்பநிலை
Guerilla Warfare — குரங்குபோர்வகை(மறைந்து மறைந்து போரிடும் முறை)

## H

Hazar Sutun — ஆயிரம் தூண்களைக்கொண்ட அரண்மனை
Heir-apparent — ஆட்சி புரியும் அரசனுக்குப் பின் அரியணையேறவேண்டிய இளவரசன்
Hereditary — மரபுரிமையான்

## I

Ibadat Khana — தொழும் அறை
Id — திருநாள்
Inam — பரிசு
Inscriptions — கல்வெட்டுகள்

## J

Jagir — ஊழிய மானியம்
Jihad — புனிதப் போர்
Jiziya — முஸ்லிம் அல்லாதார்மேல் விதிக்கப்பட்ட தலைவரி

## K

Karkhanas — தொழிற்சாலைகள்
Khalifa — உலக விஷயங்களில் நபி நாயகத்தின் பிரதிநிதியாய் இருப்பவர்
Khams — கொள்ளையிடப்பட்ட பொருள்களிலிருந்தும் சுரங்கப் பொருள்களிலிருந்தும் ஐந்தில் ஒரு பங்காக அளிக்கவேண்டிய தீர்வை
Kharaj — சாகுபடி நிலவருமானத்தில் ஒரு பங்கு
Khutba — வெள்ளிக்கிழமை முதலிய புனித நாள்களில் நடக்கும் கூட்டுத் தொழுகையில் நடைபெறும் சொற்பொழிவு

## L

Liberal — தாராள எண்ணமுடைய

## M

Madarasas — பள்ளிகள்
Manuscript — கையெழுத்துப்படி
Marble — சலவைக்கல்
Martyrdom — தியாகம்
Mausoleum — சமாதி
Medieval — இடைக்கால
Memoirs — வாழ்க்கைக் குறிப்புகள்
Minar — கோபுரம்
Minister — அமைச்சர்
Mint — நாணயம் அச்சிடும் சாலை
Monasteries — மடங்கள்
Monuments — அடையாளச் சின்னங்கள்
Mosque — மசூதி

## N

Narrative — நிகழ்ச்சியுரை
National War — தேசியப் போர்
Negotiations — உடன்படிக்கைப் பேச்சு வார்த்தைகள்
Neutrality — நடுவு நிலைமை
Nobles — பிரபுக்கள்

## O

Officers — அலுவலாளர்கள்
Ordinance — அவசரச் சட்டம்

## P

Principality — சிற்றரசன் நாடு
Prohibition — தடை உத்தரவு
Public Service — பொதுப்பணித் துறை

## Q

Qadam Rasool — நபிநாயகத்தின் பாதம்
Qanuns — ஆணைகள்
Qazi — நீதிபதி
Qila — கோட்டை
Quran — முஸ்லிம்களின் புனித நூல்

## R

Rai faineant — அரசன்
Ransom — விடுதலைப் பணம்
Rebellion — கிளர்ச்சி
Regime — ஆட்சிக் காலம்

## S

Satis — மத்தியஸ்தர்
Salais — பிரயாணிகள்தங்குமிடங்கள்
Satyapir — உண்மை ஞானி
Shahid — மதத் தியாகி
Sharb — விவசாய வரி
Shariat — இஸ்லாமியச் சமயச் சட்டம்
Sist — நில வரி
Sufis — முஸ்லிம் துறவிகள்
Suzerain — மேலரசன்

## T

Tanka — ஒரு ரூபாய்க்குச் சிறிதளவு அதிகம் மதிப்புப் பெற்ற ஒரு நாணயம்
Treasury — கஜானு
Treaty — உடன்படிக்கை
Theology — இறையியல்

Toleration — சமயச் சமரசம்
Tyranny — கொடுங்கோலாட்சி

U

Ulema — இஸ்லாமிய அறிஞர்

W

Waqf — அறக்கொடை
War of Succession — வாரிசு உரிமைப்போர்
Wazir — மந்திரி

Z

Zackat — ஒருவரிடம் ஓர் ஆண்டுவரை பணம் சேமிக்கப்பட்டிருந்தால் அதில் நூற்றுக்கு 2½ சதவிகிதம் கட்டாயமாகக் கொடுக்க வேண்டிய தானம்

# பெயர் அகராதி

### ஆ

தீ



து



தூ



தெ



தே



தை



தொ



தோ



தௌ



ந

நா



நி



நூ



நெ



நே



ப்





ப

ர



ரா



ரு



ரூ



ரெ



ரோ



ரௌ



ல



லா



லீ



லூ



வ



வா



வி